ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமானுஜாய நம:

திருமங்கைமன்னன் திருவாய்மலர்ந்தருளிய

# பெரிய திருமொழி

**முதல் பாகம் 1,2,3,4 பத்துக்கள்**

பரம காருணிகரான பெரியவாச்சான்பிள்ளை
அருளிச்செய்த வ்யாக்யானத்துடனும்,
அப்பு அரும்பதத்துடனும், உரையுடனும்

ஸ்ரீ வைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபையாரால்
பதிப்பிக்கப்பட்ட வ்யாக்யானத்தின்
மறுபதிப்பு

1999
ப்ரமாதி ஆடி மாதம் 07-08-99 ரோஹிணி

**ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ**
திருச்சி – 620 006.

**விலை. ( 600/- ன்று பாகங்கள் ]**

**[ தபால்செலவு தனி ]**

மறுபதிப்பு - 1992
மறுபதிப்பு - 1999
காப்பிகள் - 1000

விலை 600/- (3 பாகங்களும்)

அச்சிட்டோர்:

ஸ்ரீ ரங்கநாச்சியார் அச்சகம்.
214, கீழக்கு உத்திர வீதி,
ஸ்ரீரங்கம் - 620 006. ✆ : 0431 - 434398

கிடைக்குமிடம்:

ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ.
214, கீழக்கு உத்திர வீதி,
ஸ்ரீரங்கம் - 620 006. ✆ : 0431 - 434398



    



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரிய திருமொழியின்

# தனியன்கள்.

(திருக்கோளூர்நம்பி அருளிச்செய்தது.)

మూలమ్.—కలయామి కలిధ్వంసం కవిం లోకదివాకరమ్।
యస్య గోభిః ప్రకాశాభి రావిద్యం నిహతం తమః॥

மூலம்.—கலயாமிகலித்த்வம்ஸம் கவிம் லோகதிவாகரம்।
யஸ்யகோபிஃப்ரகாசாபி ராவித்யம்நிஹதம்தம:॥

பதவுரை.—யஸ்ய - யாதொருத்தருடைய, ப்ரகாசாபி: - விளங்காநின்றுள்ள, கோபி: - கிரணம் (உக்தி)களினாலே, ஆவித்யம் - அஜ்ஞாநப்ரயுக்தமான.

தமஃ - அந்தகாரமானது, நிஹதம் - போக்கப்பட்டதோ, (தம் - அப்படிப்பட்டவராய்,) கலித்த்வம்ஸம் - கலிதோஷத்தை நசிப்பிக்குமவராய், லோகதிவாகரம் - நாட்டாருக்கு ஸூர்யனான (அர்த்தப்ரகாசகரான), கவிம் - பரகால கவியை, கலயாமி - த்யாநம் செய்கிறேன்.

### பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த வ்யாக்யாநம்.

அவதாரிகை.—(𑌕𑌲𑌯𑌾𑌮𑌿 𑌕𑌲𑌿𑌧𑍍𑌵𑌂𑌸𑌮𑍍 - கலயாமி கலித்த்வம்ஸம்) திருமொழிமுதலான திவ்யப்ரபந்தோபகாரத்துக்குத் திருமங்கையாழ்வாரைத் திருவடிதொழும்படி சொல்லுகிறது.

வ்யாக்யாநம்.—(𑌕𑌲𑌯𑌾𑌮𑌿 𑌕𑌲𑌿𑌧𑍍𑌵𑌂𑌸𑌮𑍍 - கலயாமி கலித்த்வம்ஸம்) "கலிகன்றி" என்று நிரூபகத்தையுடையரான பரகாலகவியை, கலயாமி - "ப்ரணமாமி" என்கிறது. (𑌲𑍋𑌕𑌦𑌿𑌵𑌾𑌕𑌰𑌮𑍍 - லோகதிவாகரம்) ஆதித்யன், பாஹ்யாந்தகாரத்தைப் போக்கும்; இவர் நாட்டார்க்கு பாஹ்யாப்யந்தராந்தகாரங்களிரண்டையும் போக்குவர். (𑌯𑌸𑍍𑌯 𑌗𑍋𑌭𑌿𑌃 - யஸ்யகோபிஃ) யாதொருத்தருடைய, (க) "𑌯𑌦𑍍𑌗𑍋𑌸𑌹𑌸𑍍𑌰𑌮𑍍 - யத்கோஸஹஸ்ரம்" என்கிற மறையாயிரங்களினாலே; அவைதான் (𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌾𑌭𑌿𑌃 - ப்ரகாசாபிஃ) என்று - (உ) * கடைவிளங்கு தமிழ்மாலையாய் (௩) * நெஞ்சுக்கிருள்கடிதீபமாயிருக்கும்; இப்படி ப்ரகாசகங்களான ஸ்ரீஸூக்திகளினாலே, (ச) * அறிவிலா மனிசருடைய ஆவித்யதமஸ்ஸூ நிஹதமாயிற்று என்பது யாதொன்று, அந்தாலே அவரை (கலயாமி) என்கிறது ... ... ... ... *

(எம்பெருமானாருளிச்செய்தது.)

மூ.—வாழிபரகாலன் வாழிகலிகன்றி
வாழிகுறையலூர் வாழ்வேந்தன் - வாழியரோ
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்
தூயோன் சுடர்மானவேல்.

ப - உ.—பரகாலன் - சத்ருக்களுக்கு ம்ருத்யுவானவர், வாழி - வாழ்ந்தருள வேணும்; கலி - கலியினால் வரும்தோஷத்தை, கன்றி - போக்குமவர், வாழி—; குறையலூர் - திருக்குறையலூரில், வாழ் - நித்யவாஸம்பண்ணும், வேந்தன் - ராஜாவானவர், வாழி—; மாயோனை - ஆச்சர்ய குணசேஷ்டிதங்களையுடைய ஸர்வேஸ்வரன்பக்கல், வாள்வலியால் - தன்வாளின்வலியைக் காட்டி, மந்திரம் - பெரியதிருமந்த்ரத்தை, கொள் - உபதேசிக்கப்பெற்றவராய், மங்கையர் - திருமங்கையிலுள்ளார்க்கு, கோன் - நிர்வாஹகராய்,

---

(க) சடகோபாஷ்டகம் - ச. (௩) திருமொழித்தனியன்.
(உ) பெருமாள்திரு - க - கக. (ச) திருமாலை - கங.

தூயோன் - (உள்ளும்புறம்புமொக்க) சுத்தியையுடையானான ஆழ்வாருடைய, சுடர் - ஒளியையுடைத்தாய், மானம் - பெரியதான, வேல் - வேலானது, வாழி - வாழ்ந்திடுக. ... ... ... ... ... ... ... *

அவ.—(வாழிபரகாலன்) எம்பெருமானுக்குத்திருமதிள்போலே அரணாயிருப்பதான ஆறுப்ரபந்தங்கள் செய்தருளின ஆழ்வாருடைய திருநாமங்கள் பலவற்றையும் சொல்லி அவரை வாழ்த்துகிறது-இதில். (க) "ப்ரத்யக்ஷே குரவஸ்ஸ்துத்யா: - ப்ரத்யக்ஷேகுரவஸ்ஸ்துத்யா:" என்னக்கடவதிறே. ஆழ்வார்கள் அர்ச்சாவதாரமாய் எப்போதும் எல்லார்க்கும் ப்ரத்யக்ஷராயிறே யிருப்பது.

வ்யா.—(வாழிபரகாலன்) பகவத்த்விட்டுக்களான ப்ரதிகூலர்க்குக் காலனானவர் வாழி. (வாழிகலிகன்றி) கலிதோஷநிவாரகர் வாழி. (குறையலூர் வாழ்வேந்தன் - வாழி) திருக்குறையலூரை அவதாரஸ்தலமாக வுடையராய், அதுவாழும்படிக்கு அத்தை நோக்குகிற ராஜாவென்னுதல்; அங்கே வாழுகிறவ ரென்னுதல். (மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன், தூயோன் சுடர்மானவேல் - வாழியரோ) என்று - ஆழ்வாரையும், அவர் திருக்கையில் வேலையும் ஒருகாலே ஆசாஸித்தபடி. (மாயோனை) (உ) * அரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும் மாயோனையிறே வாள்வலியால் மந்திரங் கொண்டது. (ங) * தென்னரங்கன் றன்னை வழிபறித்த வாளனிறே. (ச) * கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டாரிடத்திலேயிறே மந்திரப்பொருள்கைக்கொண்டது. § மந்திரத்தைப்பற்றியிறே மந்திரங்கொண்டது. (மங்கையர்கோன்) திருமங்கைமன்னனிறே. (தூயோன்) "தூய்மை" என்னும் பாஹ்யாப்யந்தரசுத்தியையுடையவர். (ரு) "அங்கமலத்தடவயல்சூழாலிநாடன் அருள்மாரியரட்டமுக்கி யடையார்சீயம் கொங்குமலர்க் குழலியர்வேள் மங்கைவேந்தன் கொற்றவேல் பரகாலன் கலியன்" என்று தாமே தந்திருநாமங்களைக் கூறினாரிறே. (சுடர்மானவேல்) தேஜோரூபமான, மானவேல்-பெரியவேல். திருமங்கைமன்னனெடுக்கும்படியான வேல், (வாழியரோ). இத்தால் - ஆழ்வாரோபாதி

(க)
(உ) பெரு - திரு - க - எ.
(ங) இயற்சாத்து.
(ச) நா - தி - கக - சு.

§ மந்திரத்தை - வேதப்ரதிபாத்யனான ஸர்வேஶ்வரனை.
(ரு) திருமொ - ங - ச - ௧0.

ஆயுதமும் ஆசாஸ்யமென்றபடி. (க) "நின்கையில்வேல்போற்றி" என்னக்கடவதிறே. இதுதான் (உ) * கொற்றவேலாகையாலே வெற்றிவேலா யிருக்கும்; அத்தாலே-இதின் விஜயத்தை வேண்டுகிறது.

(கூரத்தாழ்வானருளிச்செய்தது.)

மூ.—நெஞ்சுக்கிருள்கடிதீபம் அடங்கா நெடும் பிறவி
நஞ்சுக்கு நல்லவமுதம் தமிழ்நன்னூல்துறைகள்
அஞ்சுக் கிலக்கியம் ஆரணசாரம் பரசமயப்
பஞ்சுக்கனலின்பொறி பரகாலன் பனுவல்களே.

ப-உ.—பரகாலன் - ப்ரதிபக்ஷத்துக்குக் காலனான ஆழ்வா ரருளிச்செய்த, பனுவல்கள் - பாட்டுக்களானவை, நெஞ்சுக்கு - மநஸ்ஸிலுண்டான, இருள் - அஜ்ஞாநத்தை, கடி - போக்கவல்ல, தீபம் - விளக்காயும், அடங்கா - ஒன்றாலும் அடங்காதே, நெடு - நெடுகிப்போருகிற, பிறவி - பிறப்பாகிற, நஞ்சுக்கு - விஷத்தைமாற்றுகைக்கு, நல்ல - ஶ்லாக்யமான, அமுதம் - அம்ருதமாயும், நல் - விலக்ஷணமான, தமிழ்நூல் துறைகள் - த்ராவிடசாஸ்த்ர மார்க்கமான, அஞ்சுக்கு - (எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்கிற) பஞ்சலக்ஷணங்களுக்கும், இலக்கியம் - லக்ஷ்யமாயும், ஆரணம் - வேதத்தின், சாரம் - ஸாரமாயும், பரசமயம் - இதரமதங்களாகிற, பஞ்சுக்கு - பருத்திக்கு, அனலின் பொறி - நெருப்புப்பொறியாயும் இருக்கும் ... *

அவ.—(நெஞ்சுக்கிருள் கடிதீபம்) இதில், ஆழ்வார்திவ்யப்ரபந்த வைபவம் சொல்லுகிறது.

வ்யா.—(நெஞ்சுக்கிருள்கடிதீபம்) என்று நெஞ்சுக்கிருளாவது- மநோமாலிந்யமான அஜ்ஞாநம். (ங) * மனனகமலமிறே. (ச) * ஞானக்கலையாகையாலே அத்தை நிராகரிக்கும் (ரு) * ஞானச்சுடர்விளக்காயிருக்கும்.

(அடங்காநெடும் பிறவி நஞ்சுக்கு நல்லவமுதம்) ப்ரதிக்ரியையொன்றாலுமடங்காதே நெடுகிப் போருகிற ஜந்மமாகிற நஞ்சுக்கு, நல்லவமுதம் - அந்தவிஷத்தை மாற்றுகைக்கு நிர்விஷமான அம்ருதம். ஸம்ஸாரவிஷத்துக்கு அம்ருதமாயிறே (சு) * திருமால் திருநாமமிருப்பது. திருமங்கையாழ்வார் திவ்யப்ரபந்தம், ஸம்ஸாரநிவர்த்தகமான திருமந்த்ரார்த்தத்தை ப்ரதிபாதிக்குமதாயிறே யிருப்பது.

(தமிழ்நன்னூல்துறைகளஞ்சுக்கிலக்கியம்) த்ராவிடசாஸ்த்ரம், எழுத்து, சொல், பொருள், யாப்பு, அலங்காரம் என்கிற விலக்ஷண

(க) திருப்பா - உச. (உ) திருமொ - ங - ச - க0.
(ங) திருவாய் - க - க - உ. (ச) திருவாய் - க - கூ - அ.
(ரு) உ - தி - க. (சு) திருமொ - சு - க0 - ரு.

மான பஞ்சலக்ஷணத்தோடே கூடியிறே யிருப்பது. அன்றிக்கே, தமிழுக்கு எழுத்து முதலான அஞ்சுலக்ஷணத்தையும் அறுதியிடுவதான நன்னூலென்று - ஒரு சாஸ்த்ரமுண்டு, அத்தைச் சொல்லிற்றுதல்; ஏவம்விதமான த்ராவிட சாஸ்த்ரமார்க்க பஞ்சகத்துக்கு, (இலக்கியம்) "இலக்கணவிலக்கியம்" என்றிறே அவர்கள் சொல்லுவது; அதுக்கு லக்ஷ்யமாய்ப் படிமாவாயிருக்கும். இத்தைப்பார்த்து லக்ஷணங்கட்டலாயிருக்கை.

கேவலம் தமிழுக்கு லக்ஷ்யமாயிருக்கை யன்றிக்கே, ஆரணசாரமுமாயிருக்கும்;-வேதஸாரமுமா யிருக்குமென்றபடி. திருமந்த்ரார்த்தமிறே இதில்ப்ரதிபாதிப்பது. (க) "நாராயணாவென்னும் நாமம்" என்று உபக்ரமித்து, (உ) "பேசுமின் திருநாம மெட்டெழுத்தும்" என்றும், (ங) "நின் திரு வெட்டெழுத்துங் கற்று - நானுற்றது முன்னடியார்க் கடிமை" என்றும், (ச) "இமையோர் தலைவருடைய திருநாமம் நங்கள் வினைகள் தவிர வுரைமின் நமோநாராயணம்" என்றும், (ரு) "நரநாரணனாயுலகத்தற நூல் சிங்காமைவிரித்தவன்" என்றும், (சு) "காட்டினாய் - என்னை - காட்டினாய்" என்றும், (எ) "மந்திரத்தை மந்திரத்தால் மறவாது" என்றும், (அ) "பேராளன் பேரோதும்" என்றும், (கூ) "நாராயணாவோ மணிவண்ணா" என்றும் திருமந்த்ரார்த்த விசாரமேயிறே முடிய நடந்து போருகிறது. ஆகையால், (ஆரணசாரம்) என்கிறது. ஸகலவேத ஸங்க்ரஹதயா தத்ஸாரமாயிறே திருமந்த்ரந்தா னிருப்பது.

(பரசமயப்பஞ்சுக் கனலின்பொறி) பரஸமயமாகிற தூலராசிக்குக் காலாநலகணமாயிருக்கை. (கo) * வெள்ளியார் பிண்டியார் போதியாரென்றிவ ரோதுகின்ற கள்ள நூல்களை (கக) * செம்மைப்பனுவல் நூலாலேயிறே இவர்கழித்துத் தள்ளுவது * பரசமயக் குறும்பறுத்தவரிறே.

இதெல்லாமாவதேதுதானென்ன; (பரகாலன் பனுவல்களே) (கஉ) * மருவலர்த உடல்துணிய வாள்வீசும் பரகாலன் பனுவல்

(க) தி - மொ - க - க - க.
(உ) ,, - க - அ - கூ.
(ங) ,, - அ - கo - ங.
(ச) ,, - சு - கo - கூ.
(ரு) ,, - கo - சு - ச.
(சு) ,, - கo - சு - க.
(எ) தி - நெ - ச.
(அ) தி - மொ - எ - ச - ச.
(கூ) சிறிய திரு -
(கo) தி - மொ - கூ - எ - கூ.
(கக) ,, - கo - ச - கo.
(கஉ) ,, - ங - கூ - கo.

களை இவற்றைச் செய்துமுடிக்கும். அவரும்வேண்டா, அவர் ஸ்ரீ ஸூக்திகளே யமையும் இந்தக்கார்யங்களைச் செய்கைக்கென்கை. இவரதிகரித்த கார்யத்துக்குக் கையும்வாயு மொத்திருக்கிறபடி யிது வாயிற்று.... ... ... ... ... ... ... ...

(எம்பாரருளிச்செய்தது.)

மூ.—எங்கள்கதியே இராமாநுசமுனியே
சங்கைகெடுத்தாண்ட தவராசா - பொங்குபுகழ்
மங்கையர்கோ னீந்த மறையாயிர மனைத்தும்
தங்குமனம் நீ யெனக்குத்தா.

ப - உ.—எங்கள் - எங்களுக்கு, கதியே - அடைக்கலமாயிருக்குமவரே! இராமாநுசமுனியே - இராமாநுசன் என்னும் திருநாமத்தையுடையராய் (ஆத்மாக்களின் ரக்ஷணத்தில்) மநநம் பண்ணுமவரே! சங்கை - வேத சாஸ்த்ரங்களில் ஸம்சயங்களை, கெடுத்து - போக்கி, ஆண்ட - (எல்லாரையும்) அடிமைகொண்டவராய், தவம்-தபஸ்ஸில் மிக்கோரானயதிகளுக்கு, ராசா - ராஜாவாயிருக்கு மவரே!, பொங்கு - மிகுந்த, புகழ்-யசஸ்ஸையுடைய, மங்கையர் - திருமங்கையிலுள்ளார்க்கு, கோன் - ராஜாவான ஆழ்வார், ஈந்த - அருளிச்செய்த, மறை - வேதரூபமான. ஆயிரம் - ஆயிரம் பாட்டாயிருக்கிற பெரியதிருமொழி ப்ரபந்தமும், அனைத்தும் - மற்றுமுள்ள ப்ரபந்தமும், தங்கும் - தரித்திருக்கும்படியான, மனம் - மநஸ்ஸை, எனக்கு - அடியேனுக்கு, நீ - தேவரீர், தா - தந்தருளவேணும். ... ... ... ... *

அவ.—இனி, இவ்வாழ்வாரைப்போலே பாஹ்யகுத்ருஷ்டிகளை நிரஸித்து வைதிகமார்க்கத்தை நடத்தியும், உகந்தருளின நிலங்களை உத்தரித்தும், தத்ப்ரதிபாதகமான இவர் ஸ்ரீஸூக்தியை வர்த்திப்பித்தும் போருமவரிறே உடையவர்; அத்தைப்பற்ற, இவ்வாழ்வார் திவ்யஸூக்தியான திருமொழியாயிரமும் என்ஹ்ருதயத்திலே நிலைநிற்கும்படி உபகரித்தருளவேணுமென்று எம்பெருமானாரை அர்த்திக்கிறது - இதில்.

வ்யா.—(எங்கள்கதியே) அகதிகளானவெங்களுக்குக் கதியாயிருக்கிறவரே! (இராமாநுசமுனியே) (க)* சதுராக்ஷரியாய், மோக்ஷஹேதுவான திருநாமத்தை யுடையருமாய், ஆத்மரக்ஷணத்திலே மநநம்பண்ணுமவரே! (சங்கைகெடுத்தாண்ட) (உ)''த்வதந்யஸ்ஸம்சயஸ்யாஸ்ய ச்சேத்தாநஹ்யுபபத்யதே'' ''...தந்யஸ்ஸம்சயஸ்யாஸ்ய ச்சேத்தாநஹ்யுப

(க) ஆழ்வான்முக்தகம். (உ) கீதை - ௬ - ௩௯.

பத்யபதே'' என்றும், (க) "தத்துவநூல் கூழற்றது" என்னும்படி வேதாந்தசாஸ்த்ரத்தை நிஸ்ஸம்சயமாகப் பண்ணி மநஸ்ஸில் ஸம்சயங்களைப் போக்கி, எல்லாரையும் அடிமையாக ஆண்ட. (தவராசா) யதிராஜா! என்றபடி. அன்றிக்கே, தவம் என்று - சரணாகதி தர்மமாய், அத்தை வ(ர்)த்திப்பிக்கிறராஜா என்றுமாம். (உ)*தவநெறியிறே. (பொங்குபுகழித்யாதி) அதிஸம்ருத்தமானயசஸ்ஸையுடைய திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வாருடைய, வேதரூபமாய் ஆயிரம்பாட்டாயிருக்கிற பெரியதிருமொழி ப்ரபந்தமெல்லாவற்றையும். அன்றிக்கே, (ஆயிரமனைத்தும்) என்று - ஆயிரத்தையும், மற்றும் அவர் அனைத்து ப்ரபந்தத்தையும் என்றுமாம். (தங்கும் மனம் நீ யெனக்குத்தா) (ந) "கண்ணநின்றனக்கும் குறிப்பாகில் கற்கலாம்" என்கிற திவ்யஸூக்தியைத் தரிக்கும்படியான மநஸ்ஸைத் தந்தருளவேணும். (ச) "குறையல் பிரானடிக்கீழ்விள்ளாத வன்ப னிராமாநுசன்" என்றும் (ரு) "நீலன்றனக்குலகிலினியான்" என்றும், (சு) "கலிமிக்கசெந்நெற்கழனிக் குறையல்கலைப்பெருமானொலிமிக்க பாடலையுண்டுதன்னுள்ளந் தடித்து" என்றும், எம்பெருமானாரைச் சொல்லக்கடவதிறே; அத்தாலே அவரை அபேக்ஷிக்கிறது ...... *

மூ.—*மாலைத்தனியே வழிபறிக்கவேணுமென்று
கோலிப்பதிவிருந்த கொற்றவனே - வேலை
அணைத்தருளுங்கையா லடியேன்வினையைத்
துணித்தருளவேணும் துணிந்து.

ப - உ.—மாலை - ஸர்வேஸ்வரனை, தனிவழியே - தனிவழியிலே, பறிக்க வேணுமென்று - கொள்ளைகொள்ள வேணுமென்று, கோலி - முயன்று, (திருவாலினடியிலே) பதிவுஇருந்த - பதுங்கிக்கொண்டிருந்த, கொற்றவனே - ராஜாவான திருமங்கை மன்னனே! வேலை - வேல் என்னும் ஆயுதத்தை, அணைத்தருளும் - அணைக்கும்படியான, கையால் - திருக்கையாலே, அடியேன் - சேஷபூதனான வென்னுடைய, வினையை - பாபங்களை, துணிந்து - துணிவையுற்று, துணித்தருளவேணும் - வெட்டிக் களைந்தருளவேணும்... *

அவ.—(மாலைத்தனியே) இதில், ப்ரபந்தாந்வய ப்ரதிபந்தகங்களை ப்ரபந்த கர்த்தாவே (தீ) சேதிக்கவேணு மென்கிறது.

(க) இரா - நூ - கூரு. (ச) இரா - நூ - உ.
(உ) தி - மொ - உ - ரு - ந.. (ரு) ,, - கஎ.
(ந) தி - மொ - எ - கO - கO. (சு) ,, - அஅ.
* இத்தனியன் ஸோமாசியாண்டானருளிச்செய்ததாகச் சொல்லுவர்.

வ்யா.— (மாலைத்தனியே வழிபறிக்க வேணுமென்றுகோலி) ஸர்வாதிகனைத் தனிவழியிலே வழிபறிக்க வேணுமென்று உத்யோகித்து. ததநுகுணமாகத் திருவரசினடியிலே (பதிவிருந்த) மேலே கோடிவைத்துப் பார்ப்பித்த. (கொற்றவனே) ராஜாவே! பறிகொடுக்குமவன் (க) *தெய்வத்துக்கரசு, பறிக்குமவர் ஆலிநாட்டரசு, பறிக்குமிடம் மரங்களுக்கரசிடம்; இப்படியாயிற்று பறிக்கப் பதிவிருந்தபடி. (வேலையணைத்தருளும் கையால்) * வெட்டிப்பறிக்க வெடுத்தணைத்த வேலாலே. (அடியேன் வினையை) (உ) "அடியேன் நான்" என்று அவனுக்கு அடிமையான உமக்கு அடியேனான அடியேன் வினையை. உமக்கடியோமாகைக்கும் வினைக்கும் என்ன சேர்த்தியுண்டு? (ங) "என்பெய்வினையைக் கிட்டிக்கிழங்கொடு தன்னருளென்னு மொள்வாளுருவி வெட்டிக்களைந்த விராமாநுசன்" என்கிறபடியே. (அடியேன்வினையை - துணிந்து - துணித்தருளவேண்டும்) வழிபறிக்கத் துணிந்தாற்போலே * வினையைத்துணிக்கத் துணியவேணும். என்வினையைப் போக்கவேணும் என்று நீர் துணிந்தாலாயிற்றுப் போவது. (ச) "பண்டைவல்வினை பாற்றியருளினான்" என்னும்படி பண்ணவேணும் ... ... ... ... ... ... *

## தனியன் வ்யாக்யாநம் ஸம்பூர்ணம்.

பிள்ளைலோகம்ஜீயர் திருவடிகளே சரணம்.

---

(க) தி - மொ - எ - எ - க. (ங) இரா - நூ - கூங.
(உ) ,, - கக - அ - ா. (ச) க - தி - எ.



ஸ்ரீமதேராமாநுஜாய நம:.

# பெரியதிருமொழிக்கு
## பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்த வ்யாக்யாநத்தின்
# அரும்பதவிளக்கம்.

## அவதாரிகை.

அபாரகருணாம்ருதஸாகரரான பெரியவாச்சான்பிள்ளை, தம்முடைய பரமக்ருபையாலே, பெரியாழ்வார், தாமருளிச்செய்த திருப்பல்லாண்டில் (௧) *மல்லாண்டதிண்டோளனைப் பல்லாண்டுபாடியும், அவனுடைய திருவவதாரம் தொடக்கமான திவ்யசேஷ்டிதங்களை யநுபவித்தும், அதுக்குமடியான ராமகுணாநுபவம்பண்ணியும், அவை காலாந்தரத்தி லநுபவங்களாகையாலே, (௨) "வடதிசை மதுரை" இத்யாதிப்படியே அர்ச்சாவதாரங்களை பஹுப்ரகாரேண அநுபவித்துக்கொண்டுவந்து, திருவேங்கடமுடையானிடத்தில் திருவுள்ளத்தைகூட்டி யநுபவித்துப் ப்ரபந்தசேஷத்தைத் தலைக்கட்டினபடியையும்; அவர் பெண்பிள்ளையான ஆண்டாள், (௩) *நந்தகோபன் குமரனையே ஆசைப்பட்டு, ஆழ்வார்களையுணர்த்திக்கொண்டு அவர்களை § அடியோத்திப்போய் (௪) *நப்பின்னை கொங்கைமேல்வைத்துக்கிடந்த மலர்மார்பனையுணர்த்தித் தாம்வந்த காரியத்தை ஆராயச்சொல்லி அவனைப்போற்றித் தம்முடைய மநோரதத்தை விண்ணப்பம்செய்துவிட, அது அநுகாரத்தால் பிறந்ததாகையாலே மனப்பாலமுது செய்தவோபாதியாய்க்கலங்கி காமன்காலிலே விழுந்து துவண்டு, (௫) *படாதனபட்டுக், (௬) *கணக்கண்டு, தரித்துத் திருவேங்கடமுடையானைக்குறித்துத் தூதுவிட்டு; பெரியபெருமாளைக் † கிலாய்த்து பாவபந்தம் தலைநிரம்பித் தேற்றுவாரில்லாதபடி கலங்கினவளவிலே, தைவயோகத்தாலே தம்முடைய ஆசார்யபாரதந்த்ரதாஜ்ஞானம் தலையெடுத்துத் தரித்திருக்கச்செய்தேயும் அநுபூதவிஷயமஹிமாவினால் பிறந்ததெளிவும் அகிஞ்சித்கரமாய்க் கண்டல்லது தரிக்கமாட்டாதே, (௭) "இங்கேபோதக்கண்டீரே" என்று தேடிச்சென்று, (௮) "வீதியாரவருவானை விருந்தாவநத்தே கண்டோமே" என்று காட்சியோடே தலைக்கட்டினபடியையும்; குலசேகரப்பெருமாள், இவ்விருவரளவுமன்றியே, முந்துறமுன்னம் (௯) *வெண்ணெயுண்டவாயனை பெரியபெருமாளிடத்தில் (௧௦) "என்றுகொலோ கண்குளிரக்

---

(௧) தி-பல்-௧. (௪) தி-பா-௧௯. (௭) நா-தி-௧௪-௧.
(௨) பெரி-திரு-௪-௭-௯. (௫) தி-வாய்-௭-௫-௨. (௮) நா-தி-௧௪-௫.
(௩) தி-பா-௧. து. (௬) நா-தி-௯- (௯) அமல-௧௦.
§ அடியொத்தி-அநுஸரித். † கிலாய்த்து-வெறுத்து. (௧௦) பெரு-திரு-௧-௧.

காணுமாளோ" என்று §பேரவாகரைபுரண்டு, அவ்வளவன்றியே (க) * அணியரங்கன் திருமுற்றத் தடியாரளவும் மாலேறிய பெரும்பித்தராய், திருமலையில் திர்யக்ஸ்த்தாவரஜந்மங்களை ஆசைப்பட்டு, அநந்தரம் அர்ச்சாவதாரத்துக்கடியான ராமக்ருஷ்ணாவதாரங்களையும் ப்ராஸங்கிகமாக அநுபவித்து, அவ்வநுபவத்தைத் திருச்சித்திரகூடத்திலே யநுபவித்து, அடியிலேபிறந்த பரமபக்தியோடே தலைக்கட்டினபடியையும்; திருமழிசைப்பிரான்; கீழ்ச்சொன்னவர்கள்போலே பா(வ)வநாமாத்ரத்திலே யநுபவித்தபடியன்றியே, அர்ச்சாவதாரங்கள்தான் "பைந்நாகப்பாய்சுருட்டிக்கொள்" என்று நியமிக்கும்படி தமக்குக் கைபுகுந்தபடியாலே (உ) * தெளிந்தசிந்தையராய் அவனுடைய ஸர்வப்ரகாரவைலக்ஷண்யங்களை லோகோஜ்ஜீவநார்த்தமாகத்திருச்சந்தவிருத்தத்தாலே வெளியிட்டருளின க்ரமத்தையும்; இவர் தம்மைப்போலே பல அர்ச்சாஸ்த்தலங்களிலே மண்டியிருக்கையன்றிக்கே (ங) "மற்றொன்றும்வேண்டா" என்று பெரியபெருமாளையே ஶ்ரோதாவாக்கித் தம்முடைய இன்சொற்களைச்சொல்லி உகப்பித்தும் அவரைப் பள்ளியுணர்த்தியும் போந்த தொண்டரடிப்பொடியாழ்வாருடைய பா(வ)வவ்ருத்தியிருந்த வகையையும்; திருப்பாணர்தாம், இவர்களித்தனைபேரிலுங்காட்டில் வைலக்ஷண்யந்தோற்றப் பெரியபெருமாளாலே விஷயீக்ருதராய், பரப்பறப் பத்துப்பாட்டாலே, விஷ்ணுசித்தர் தொடக்கமானோராதி மற்றொருவனையநுகரித்தும், கலங்கி தேவதாந்தரங்கள் காலில்விழுந்தும், தூதுவிட்டும், காணாமல் தடுமாறியும், கண்டுதெளிந்தும், பரோபதேசம் பண்ணப்போந்தவர்களை நிந்தித்துத் தமக்கெம்பெருமானிரங்காமையைச் சொல்லி (ச) "அம்மஓ கொடியவாறே" என்று கிலாய்த்துத், தாமேபோய்ப் பள்ளியுணர்த்தியும் செய்யாதே ஆபாத (த) சூடம் ஸாக்ஷாத்கரித்தநுபவியாநின்றுகொண்டு, ஸ்ரீலோகஸாரங்கமஹாமுநிகள் திருத்தோளிலே எழுந்தருளப்பண்ணிக்கொண்டுபோகப், பெரியபெருமாள் ஸாயுஜ்யத்தை இவ்விபூதியிலே கொடுக்கையாலே அந்தவநுபவத்தைப்பெற்றுத், திருவேங்கடமுடையானையும் பெரியபெருமாளோடு ஒருசேர்த்தியாக அநுபவித்துக்கொண்டு, (ரு) "மற்றொன்றினைக் காணாவே" என்று தலைக்கட்டினதன்மையையும்; இவர்களித்தனைபேரும் ப்ரதமாவதியிலே மண்டினராய், இவர்களித்தனைபேருக்கும் ப்ராப்யசரமாவதி(த)யாக (சு) * அடியார்க்காட்படுமது உத்தேஶ்யமாகையாலே அவ்வர்த்தத்திலே நி... ...ரான ஸ்ரீமதுரகவிகள், (எ) * வாய்த்ததிருமந்திரத்தின் மத்திமமாம் பதம்... வான * கண்ணிநுண்சிறுத்தாம்பாலே ப்ரதிபாதித்த ஆழ்வாருடையப்ராப்யத்வப்ராபகத்வங்களையருளிச்செய்து (அ) * தென்

---

§ பேரவா-பெரியஆசை. (ங) தி-மா-தனி. (சு) திருப்பள்ளி-கo,
(க) பெரு-திரு-க-கo. (ச) தி-மா-ஙஎ. (எ) உப-ரத்-உகூ;
(உ) பெரி-திரு-ச-ச-எ. (ரு) அமல-கo. (அ) க-சி-கக.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



### பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த

# பெரியதிருமொழி வ்யாக்யாநம்.

## ப்ரவேசம்.

†இவ்வாழ்வாராகிறார் - ஆத்மாவை வெய்யிலிலேவைத்து உடம்பை நிழலிலேவைத்துப் போந்தாரொருவ ராயிற்று. ஆத்மாவை வெய்யிலிலே வைக்கையாவது - பகவத்விஷயத்தில் முதலிலே இழியாமை; உடம்பை நிழலிலே வைக்கையாவது-அநாதிகாலம் விஷய ப்ரவணராய் அதுவே யாத்ரையாய்ப் போருகை. நிழலாவது தான் பகவத்விஷயமிறே. (க)[வாஸுதேவதருச்சாயா - வாஸுதேவதருச்சாயா]

குருகூர் நகர்நம்பிக் கன்பரானமையையும் திருவுள்ளம்பற்றி, இந்த திவ்ய ப்ரபந்தங்களுக்கு உத்தரோத்தரமுண்டான அதிசயங்களுக்கு அநுகுணமான ஒரு சேர்த்தியாலே இவையித்தனைக்கும் அடைவே வ்யாக்யாநம் செய்தருளி; இவ்வளவன்றியே, இவை யித்தனையாலும் திருமந்த்ரத்தில் ப்ரணவ நமஸ்ஸுக்களி னர்த்தங்கள் ப்ராதாந்யேந ப்ரதிபாதிக்கப்படுகையாலே, தத்ஸ்தாநீயமான முதலாயிரத்தைத் திருவுள்ளத்தில்வைத்துக்கொண்டு த்ருதீய பதஸ்தாநீயான திருமொழிக்கு வ்யாக்யாநம் செய்தருள நினைத்தருளினார்.

இத்திருமொழிக்கு வக்தாவான திருமங்கைமன்னன், * கண்ணிநுண் சிறுத்தாம்பில் பாகவத நிஷ்டையைக் காயிகபர்யந்தமாகவநுஷ்டித்து (உ) "வாள்வலியால் மந்திரங்கொண்டு, (ங) * நின் திருவெட்டெழுத்தும் கற்று- நான்-உற்றது முன்னடியார்க் கடிமை" என்று வாய்விட்டும் போந்தாரொருவராகையாலே கீழ்ச்சொல்லப்பட்ட வர்களில் விலக்ஷணரிறே என்று இவருடைய வைலக்ஷண்யத்தைத் திருவுள்ளம்பற்றி இதுக்கு வ்யாக்யாநம் செய்தருளக்கோலி; ஸர்வேஶ்வரன், இவ்வாழ்வார் பக்கலுண்டான ஸ்வவிஷயாத்வேஷமும், இவரநுபவித்த விஷயங்களினுடைய அல்பீயஸ்வமுமே இவரை மீட்கைக்குப்பரிகரமாகவும், இவருடைய ரஸிகத்வத்தைத் தம்முடைய வாசியறிகைக்குப்பற்றாசாகவுமெண்ணி இவரை நிர்ஹேதுககடாக்ஷவிஷயமாக்கித் தன் ஸ்வரூபாதிகளை அறிவிப்பித்தானென்னும் வக்த்ரு வைலக்ஷண்யத்தையும், ஸ்வரூபாதிகளை யறிகைக்கு அவன் காட்டிக்கொடுத்த திருமந்த்ரத்தை யநுஸந்தித்தாரென்னும் ப்ரதிபாத்ய வைலக்ஷண்யத்தையும், ததர்த்தப்ரதிபாதகதயாவந்த ப்ரபந்த வைலக்ஷண்யத்தையுமருளிச்செய்வதாகத் தாமிவருடைய பூர்வ வ்ருத்தத்தை யருளிச்செய்கிறார், (இவ்வாழ்வாராகிறார்) இத்யாதியாலே. "ஶ்ரியபதியாய்" என்று துடங்கி "விஜாதீயனை நம்மால்முடியாது, ஸஜாதியரைக்கொண்டே காரியங்கொள்வோம், என்று ஆழ்வாரைத் திருவவதரிப்பித்தான்" என்றிவ்வளவு முபந்யஸித்துப், பின்னை (இவ்வாழ்வாராகிறார்) என்று துடங்கி அநுஸந்திப்பது என்றும் சொல்லுவர்கள். (ச) "ஸர்வத்ராஸௌ - ஸமஸ்தம், ஸர்வத்ராஸௌ - வஸதி" என்கிற நிருக்தியை உட்

(க) (உ) தி-மொ-தனி- (ங) தி-மொ-அ-௩௦-௩. (ச)

†பார்த்த பார்த்த விடமெல்லாம் நிழலாயிருக்கை. †எங்கு மொக்க நிழல்செய்த இந்நிழலிலல்லது புறம்பொதுங்க நிழலின்றிக்கே யிருக்கை. [नातिशीतानचोष्णता-நாதிசீதா நசோஷ்ணதா] அற வவ்வலிடுதல் வேர்த்தல் செய்யாதிருக்கை. [नरकाङ्गारशमनी-நரகாங்காரசமநீ] † தானே யேறிட்டுக்கொண்ட நரகமாகிற பெருநெருப்பையும் அவிக்க வற்று. [साक्षमर्थं न सेव्यते - ஸாக்ஷமர்த்தம்நஸேவ்யதே] ப்ராப்த மன்றென்ன வொண்ணாது, துக்கநிவர்த்தக மன்றென்ன வொண்ணாது; † "வயிறு நோவாநின்றது, சவி" என்பாரைப்போலே † அநிச்சை சொல்லிக் கை வாங்கு மித்தனையிறே யுள்ளது. †அர்த்தத்தில் மாறுட்டமில்லை; ப்ரதிபத்தியில் மாறுட்டமேயுள்ளது. இந்நிழலிலே யிருந்துவைத்து "ஒதுங்கிற்றிலேன்" என்பாரைச் செய்யலாவதில்

கொண்டருளிச்செய்கிறார், (பார்த்த) இத்யாதி. (க) "समस्तं च-अत्र-वसति-ஸமஸ்தஞ்ச - அத்ர - வஸதி" என்றத்தைப்பற்றவருளிச்செய்கிறார், (எங்கு மொக்க) இத்யாதி. (உ) "एते वै निरयास्तात स्थानस्य परमात्मनः- ஏதேவை நிரயாஸ்தாத ஸ்த்தாநஸ்யபரமாத்மநஃ" என்கிறபடியே, ஸம்ஸாரிகலோக மெல்லாம் நரகதுக்க ஸமமென்று திருவுள்ளம்பற்றி, அதுதானும் சேதநகர்மாதீநமாய்வருமதாகையாலே அவ்வர்த்தத்தை யருளிச்செய்கிறார், (தானே) இத்யாதி. கேவலநரகமாகில் அதுக்குப் ப்ராயஸ்சித்தாதிக்ரியை சாமகமாயிருக்குமே; (ங) * வாஸுதேவதருச்சாயையைச் சொல்லவேண்டாவிறே. இனி ஸேவியாதிருக்கைக்கு நிமித்தந்தானென்னென்ன; அருளிச்செய்கிறார், (வயிறு) இத்யாதி. சிறுபிள்ளைகள், விளையாட்டில் பராக்காலே "உண்ண வா" என்றழைத்தால், "எனக்கு வயிறுநோகிறது, வேண்டா" என்று பசியாநிற்கச்செய்தேயும் சொல்லுவர்கள்; அதுக்குமேலே மாதாபிதாக்கள் நிர்ப்பந்தித்தழைக்கப்புக்கால், "நீங்களே சவியுங்கோள் - அதாவது - வையுங்கோள், நான் ஸர்வாத்மநா உண்ண வருகிறதில்லை" என்று அஸௌக்யம் வஹிக்கும்போலே, ஈஸ்வரன் ஸர்வத்ர இருந்து ஹிதம்செய்யவந்தாலும் விஷயப்ராவண்யத்தாலே நிஷேதிப்பர்களென்றுகருத்து. (அநிச்சைசொல்லி) வேண்டாமையைச்சொல்லி என்கை. இந்தஸ்லோகத்துக்கு ருஷியினுடைய ஈடுபாடுதோற்ற ஒரு தாத்பர்யத்தை யருளிச்செய்கிறார், (அர்த்தத்தில்) இத்யாதி வாக்ய த்வயத்தாலே. ஆக, இவ்வாழ்வாரும் பகவத்ப்ரவணரன்றிக்கே விஷயப்ரவணராயிருந்தாரென்று பூர்வவ்ருத்தம்சொல்லிற்றாயிற்று. இப்படியிருக்கு மிவரை ஈஸ்வரன் திருத்தின ப்ரகாரமென்னென்ன; அத்தை

(க) (ங)

(உ)

லேயே. †"இவர் கண்ணால் காண்கிற விஷயங்களுக்கு அவ்வருகறியா திருக்கிறாராகில், நம்மையும் அவ்விஷயங்களோபாதி இவர்கண்ணுக் கிலக்காக்கினால் விரும்பாதொழியாரிறே" என்றுபார்த்து, உகந்தருளின நிலங்களிலேவந்து ஸந்நிதிபண்ணி இவரை விஷயீகரித்துத் தன்படிகளை அடையக் காட்டிக்கொடுத்துத், தன்னாலல்லது செல்லாதபடிபண்ணி இவரை அநுபவிப்பித்து, இங்கேயிருந்தே பரமபதத்திலுள்ளார்படி யாம்படிபண்ணி, அத்தேசப்ராப்தியையுமிவர்க்குப் பண்ணிக்கொடுத்தானென்கிறது - † இப்ப்ரபந்தங்களெல்லாவற்றாலும்.

†இவர்பக்கல் அத்வேஷமும் விஷயங்களினுடைய†லாகவமுமே இவரை மீட்கைக்குப் பரிகரமாகவும், இவருடைய ரஸிகத்வமே தன் வாசியறிகைக்குப் பற்றாசாகவும், "அநாதிகாலம் பண்ணின பாபாம்சத்தை நம்க்ருபைக்கு விஷயமாக்குவோம்" என்றுபார்த்து, இவர் விஷயங்களின் வாசியறிந்து தன்னை யறிகைக்குக், †கிழிச்சீரையோடே தநத்தைக் கொடுப்பாரைப் போலே தனக்கு வாசகமான திருமந்த்ரம் முன்னாகத் தன் ஸ்வரூபரூப குணவிபூதிகளை அடங்கக்காட்டிக் கொடுக்கக், கண்டநுபவித்து, "அயோக்யனான வென்னை அதுதானே ஹேதுவாக விஷயீகரித்தான்" என்று க்ருதஜ்ஞராகையாலே ஒருகால் சொன்னதை ஒன்பதின்கால் சொல்லிக் கூப்பிடுகிறார். †பகவத்விஷயத்தில் நேர்கொடு நேர் செய்யலாவதொன்றில்லை, செய்யவேண்டுவது மொன்றில்லை; பண்ணின உபகாரத்துக்குக் க்ருதஜ்ஞராமித்தனையே வேண்டுவது, அசித்வ்யாவ்ருத்தி தோற்ற. ... ... ... ... ... ... ... *

---

அருளிச்செய்யாநின்றுகொண்டு ப்ரமாணமும்காட்டுகிறார், (இவர்கண்ணால்) இத்யாதி. (இப்ப்ரபந்தங்களெல்லாவற்றாலும்) என்றது - ஆறுப்ரபந்தங்களாலு மென்றபடி. அர்ச்சாவதார ப்ராவண்யாதிகள் இப்ப்ரபந்தங்களிலே யுண்டாகையால் ஈஶ்வரன் இவற்றைக்காட்டித் திருத்தினது அர்த்தஸித்தம்.

இவரைத்திருத்துகைக்கு நிமித்தத்தையும், முதல் திருமொழியின் தாத்பர்யத்தையு மருளிச்செய்கிறார், (இவர்பக்கல்) இத்யாதி. (லாகவம்) என்றது- அல்பாஸ்த்திரத்வாதிகள். (கிழிச்சீரை) த்ரவ்யமிருந்த புடைவை. க்ருதஜ்ஞனால் ப்ரத்யுபகாரம் பண்ணாதே கூப்பிடுவானென்னென்ன; அருளிச்செய்கிறார். (பகவத்) இத்யாதி.... ... ... ... ... ... *

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

திருமங்கையாழ்வாரருளிச்செய்த

# பெரிய திருமொழி.



வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துயரிடும்பையில் பிறந்து
கூடினேன் கூடி இளையவர் தம்மோ
டவர்தரும் கலவியே கருதி
ஓடினே னோடி உய்வதோர் பொருளா
லுணர்வெனும் பெரும்பதம் தெரிந்து
நாடினேன்நாடி நான்கண்டு கொண்டேன்
நாராயணா வென்னும் நாமம். (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பெருந்துயர் | மிகுந்த துன்பத்துக்குக்கொள்கலமாய் | வருந்தினேன் | துக்கத்தை அநுபவித்தேன் ; பின்பு, |
| இடும்பையில் | துன்பங்களுக்கெல்லாம் ஹேதுவான சரீரத்திலே | வாடினேன் | (கொள் கொம்பில்லாக் கொடிபோலே) வாடிப்போந்தேன்; |
| பிறந்து | உண்டாய் | வாடி | வாட்டத்தையுடையனாயிருந்து |
| கூடினேன் | சரீரமென்றும் ஆத்மாவென்றும் பகுத்தறியக் கூடாதபடி ஒன்றாய்ப்பொருந்தினேன்; | உய்வது | உஜ்ஜீவநத்துக்கு உடலான |
| | | ஓர்பொருளால் | ஒரு நல்ல அர்த்தத்தாலே-(ஸர்வேஶ்வரன் க்ருபையாலே) |
| கூடி | இப்படி நெடுங்காலம் பொருந்தியிருந்து | உணர்வு எனும் | ஜ்ஞாநமாகிற |
| இளையவர் | யுவதிகளான ஸ்த்ரீகள், | பெரும் | பெரிய |
| | | பதம் | ஸ்த்தாநத்தை [து |
| தரும் | கொடுக்கிற, [யே | தெரிந்து | இருந்தபடியே அறிந் |
| கலவியே | ஸம்ஶ்லேஷத்தை | நாடினேன் | "பகவத்விஷயம் நன்று, ஸம்ஸாரம் தீது" என்று ஆராய்ந்தேன் ; |
| கருதி | நினைத்து | | |
| அவர் தம்மோடு | அவர்கள்போன அடிவழியே | | |
| ஓடினேன் | பின்தொடர்ந்து ஓடினேன் ; | நாடி | ஆராய்ந்து |
| ஓடி | இப்படி ஓரிடத்திலும் கால்தாழாதே விஷயங்கள்தோறும் விசேஷம் தேடிக் கொண்டோடி. | நான் | திருநாமம் சொல்லுகைக்கு யோக்யதையில்லாத நான் |
| | | நாராயணா என்னும் | நாராயணா என்கிற |
| | | நாமம் | திருநாமத்தை |
| மனத்தால் | விஷயங்களிலே சென்ற சிந்தையாலே | கண்டு கொண்டேன் | காணப்பெற்றேன். () |

வ்யா. —†முதற்பாட்டு.—நம்மாழ்வார், ஸர்வேச்வரனை ஸாக்ஷாத்கரித்தவநந்தரம் தாம்பெற்ற பேறறியாதே (க) "இங்கின்றநீர்மை இனியாமுறாமை" என்று கீழ்நின்ற நிலையை அநுஸந்தித்தாற்போலே, இவரும், பகவத்விஷயீகாரம் பிறந்தபின்பு தாம்கீழ்நின்ற நிலையையெல்லாம் அநுஸந்தித்து †(வாடினேன்) என்கிறார்.

(வாடினேன்) † கொம்பை இழந்தகளிர்போலே; † ஆச்ரயத்துக்கு அழிவில்லாமையாலே. இன்னும் நோக்குவோம் என்னில்; நோக்குகைக்கு யோக்யதை யுண்டென்லக. (உ)†"अनन्यराघवेणाऽहम् - அநந்யாராகவேணாஹம்" என்கிற பிராட்டியோடொத்த ப்ராப்தி ஸகலாத்மாக்களுக்கு முண்டானபின்பு இப்ப்ராப்தியை யுணர்ந்தால் அநாதிகால மிழந்தவர்க்கு "வாடினேன்" என்னத் தட்டில்லை யிறே. (ங)†[यश्च रामं न पश्येत्तु-யச்ச ராமம் நபச்யேத்து.] "रामम् - ராமம்" என்றது - கண்ணுக்குவகுத்த விஷயத்தை; காணாதிருக்கிறான் யாவனொருவன். †[यः-யஃ] †எத்தனையேனு முயர்ந்தவனாகவுமாம். [तु - து.] †இது தப்பினாலும். †தப்பாதது தப்பினால் வருமது இவ்வளவன்று என்கைக்காக விசேஷிக்கிறது.

அரு.—முதற்பாட்டு—(வாடினேன்) இத்யாதி. தம்மை அவன் கடாக்ஷித்தால் அவனை யநுபவிக்கு மத்தனைபோக்கிப், பூர்வ வ்ருத்தத்தைத் தாம் சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார், (நம்மாழ்வார்) இத்யாதி. (வாடினேனென்கிறார்)என்றது - பூர்வவ்ருத்தத்துக்கெல்லாமுபலக்ஷணம்.

உலர்ந்தேனென்னாதே, "வாடினேன்" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார், (கொம்பை) இத்யாதி. (ஆச்ரயத்துக்கு)-ஆத்ம ஸ்வரூபத்துக்கென்றபடி. (ச) "வாடிவாடுமிவ்வாணுதல்" என்கிறபடியே, பிராட்டி விஷயத்தில் சொல்லத்தக்க வார்த்தையைத் தாமிப்போது சொல்லக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார், (அநந்யா) இத்யாதி. தாய்மார் "வாடிவாடும்" என்று சொன்னார்களேயாகிலும், இவர்தாம் அவ்விஷயத்தில் இவ்வார்த்தையைச் சொல்லித் தம்மைத்தாமே நிந்தித்துக்கொள்ளக் கூடுமோவென்ன; த்ருஷ்டாந்தமுகேந வருளிச்செய்கிறார், (யச்சராமம்) என்றுதொடங்கி, (வாடினேனென்றல்லது வார்த்தையில்லையிறே) என்னுமளவும். "யஃ" என்று மேலெடுத்த ப்ரதீகத்தை, (விஷயத்தை) என்ற வநந்தரம் அநுஸந்தித்துக்கொள்வது. ப்ராதாந்யே ச (ச)்காரமென்றருளிச்செய்கிறார், (எத்தனையேனு முயர்ந்தவன்) இத்யாதி. (இது) என்றது-தன்னுடைய ஸேவையென்கை. (தப்பாதது) - பெருமாளுடைய கடாக்ஷம். "ராமஞ்ச" என்றந்வயித்து, அதிநிக்ரு

(க) தி - வி - க.    (ங) ரா - அ - கள - உச.
(உ) ரா - ஸு - உக - கரு.    (ச) தி - வாய் - உ - ச - க.

[யஞ்ச ராமோ நபஶ்யதி - யஞ்ச ராமோ நபஶ்யதி] †எத்தனையேனும் சிறியாரும் இவர் கண்பார்வைக் கிலக்காகாதாரில்லை. [யம் - யம்] எத்தனையேனும் சிறியவனென்கிறது. †எத்தனையேனும் சிறியாரிறே இவர் கண்ணிற்பார்வைக் கிலக்காவார். (க) †"யாருமோர் நிலைமைய னென வறிவரிய வெம்பெருமான் யாருமோர் நிலைமையனென வறிவெளிய வெம்பெருமான்" ப்ரஹ்மாதிகளுடைய ஜ்ஞாநத்துக்கும் அவிஷயமாயிருக்கும். ஓரிடைச்சிக்கும் வேடனுக்கும் கைபுகுந்திருக்கும். †எத்தனையேனு முயர்ந்தவனாகிலும் பெருமாளுடைய ஒருநாளைப் புறப்பாடு காணாகில் அவன் பெரியனல்லன்; எத்தனையேனும் சிறியனானவன் பக்கலிலும் தப்பாது அவருடைய பார்வை; தப்புகிறான் யாவனொருவன், அவன் அவஸ்துக்களோடு மெண்ணப்படான்; எண்ணப்படாமையிலே எண்ணப்படும் - எல்லாரும் நிந்தித்து "சீ சீ" என்னப்படும். இவனை நிந்திப்பார் வஸிஷ்டாதிகள் தொடக்கமானார் நால்வரிருவரோ வென்னில்; [நிந்திதஸ்ஸ்வவஸேல்லோகே - நிந்திதஸ்ஸவஸேல்லோகே] [லோகே-நிந்திதः - லோகே - நிந்திதः] இவனை நிந்திக்கைக்குரிய ரல்லாதாரில்லை. †விஷயப்ரவணனானவன், இப்போது பழியாய் மேல் நரகமா யிருக்கச்செய்தே, தான் "நல்லது செய்கிறோம்" என்றிருக்குமிறே; அப்படி தான் "நல்லது செய்கிறோம்" என்றிருக்குமோ வென்னில்; [ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே - ஸ்வாத்மாப்யேநம்விகர்ஹதே] தானும் தன்னை நிந்தித்துக் கொள்ளும். † திருக்கைத்தல மிழந்தவன் "இற்றைப் புறப்பாடு காணப்பெறாத நாம் கர்ப்பூரமும் எலுமிச்சங்காயும் பெற்றோமாகில் முடிந்து பிழைக்கலாயிற்று" என்றிருக்குமிறே; ஒருநாளைப் புறப்பாடிழந்தார் வார்த்தை யிதுவானால், அநாதிகால மிழந்தவர்க்கு "வாடினேன்" என்றல்லது வார்த்தை யில்லையிறே. (வாடினேன்) என்றவிது தான் எவ்வவஸ்த்தையைப் பற்றச்சொல்லுகிறவார்த்தை? விஷய ப்ரவணராய்ப் போந்தபோது அவற்றை யநுபவித்துக்களி

---

ஷ்டனையும் கடாக்ஷிக்குமவரென்கிற ப்ராதாந்யத்தை விவக்ஷித் தருளிச்செய்கிறார், (எத்தனையேனும் சிறியாரும்) இத்யாதி. "யம்" என்றது நிக்ருஷ்டவிஷயமாவானென்னென்ன; அருளிச்செய்கிறார், (எத்தனையேனும்) இத்யாதி. உத்க்ருஷ்டனைக் கடாக்ஷியாமல் நிக்ருஷ்டனைக் கடாக்ஷிப்பரென்னுமதுக்கு ஸம்வாதம், (யாரும்) இத்யாதி. பூர்வார்த்தத்தில் தாத்பர்யத்தை யருளிச்செய்யா நின்றுகொண்டு, "நிந்திதः" இத்யாதிக்கவதாரிகை யருளிச்செய்கிறார், (எத்தனையேனும்) இத்யாதி வாக்யஷட்கத்தாலே. மேலுக்கவதாரிகை, (விஷய) இத்யாதி. ஆழ்வார்தம்மை நிந்தித்தமைக்குப் பின்னையபொரு த்ருஷ்டாந்தம், (திருக்கைத்தலம்) இத்யாதி.

---

(க) தி - வாய் - க - ... - ௪.

த்துப் போருகையாலே வாட்டமில்லை; பகவத்விஷயத்தில் † கை வைத்தபின்பு தானே வாட்டமில்லை; ஸ்வரூப ஜ்ஞாநம்பிறந்து பூர்வ வ்ருத்தத்தை யநுஸந்தித்தபோதைவார்த்தை. † ப்ராப்திஸமயத்திலிறே பூர்வவ்ருத்தத்தை ஸ்மரியாதொழிவது, (க) "நோபஜநம் ஸ்மரந்-நோபஜநம்ஸ்மரந்" என்னு‡மளவில் வந்ததில்லையிறே; † ஜ்ஞாநலாபவேளையாகையாலே பூர்வவ்ருத்தந்தானிவர்க்கு ப்ரத்யக்ஷம் போலேயிறே தோற்றுகிறது.

†(வாடி) என்கிற இவ்வநுபாஷணம், இரண்டிடத்திலும் †பொருளபெற்றுக் கிடக்கிறது;-†அநாதிகாலம் இவ்விழவு ப்ரவ்ருத்தமாய்ப் போந்ததென்றும், மேலே ஓரநர்த்தத்தை விளைத்ததென்றும் தோற்றுகிறது;-†விஷயப்ராவண்யம் காதாசித்கமாய் அநுதாபம் பிறந்து மீளுகையன்றிக்கே அநாதிகாலமிதுவே யாத்ரையாய்ப் போந்ததென்றும், இவ்வளவன்றிக்கே இதுக்குமேலே விளைந்த தோரநர்த்தத்தைச்சொல்ல வொருப்பட்டமையும் தோற்றுகிறது. மேல்விளைந்த அநர்த்தந்தானேதென்னில்; (வருந்தினேன் மனத்தால்) மாநஸமான க்லேசத்தை யநுபவித்துப் போந்தேன்.†இந்த்ரியங்கள் விஷயங்களிலே ப்ரவணமாய், அவற்றை யநுபவிக்கக்கோலி அவற்றை

(கைவைத்த) - இஸ்ஸரீரத்தோடே பகவதநுபவம் பண்ணின. (வாட்டமில்லை) என்றவகக்ரம், எங்கே என்னில் என்றுசேஷம். ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தால் பூர்வவ்ருத்தஸ்மரணம் வருவானென்னென்ன; அருளிச்செய்கிறார், (ப்ராப்தி) இத்யாதி வாக்யத்வயத்தாலே. வாடினேன் - விஷயப்ரவணனாய்க் கெட்டேனென்னுமது இவ்வாழ்வார்க்குச்சேராது, விஷயபரராயிருந்தபோது களிப்புண்டாகையாலே கெட்டேனென்னைக்கூடாமையாலே; இப்போது விஷயபரதை யில்லாமையால் ஸுதராம் கெட்டேனென்னக் கூடாது என்னும் சங்கையிலே யருளிச்செய்கிறார், (ஜ்ஞாந) இத்யாதி. முன்புற்றவிஷயஸங்கம் இப்போது ப்ரத்யக்ஷம்போலே விசதமாகத் தோற்றுகையாலே இப்போது க்லேசம் பிறக்கையாலே சொல்லுகிறாரென்று கருத்து.

"வாடினேன், "வருந்தினேன்" என்னுமளவும் பௌர்வாபர்யம் தோற்றியிருக்கவும் "வாடி" என்ற ல்யபந்தமான புநருக்திக்கு ப்ரயோஜநம் காட்டுகிறார், (வாடி) இத்யாதி. இத்தால் - கீழ் "வாடினேன்" என்றதுக்குச் சிரகாலஸம்பந்தமும், மேலேவருகிறதுக்கு அத்யந்தஸந்நிஹிதத்வமும் தோற்றுவிக்கையாலே, அதுக்கு ப்ரயோஜந முண்டென்றதாயிற்று. (பொருள்) - ப்ரயோஜநம். சிரகாலஸம்பந்தத்தையும் மேலே ஸந்நிஹிதமாக ஓரநர்த்த முண்டென்னு மத்தையு முபபாதிக்கிறார், (அநாதி) இத்யாதி. கீழ்வாக்ய விவரணம், (விஷய) இத்யாதி. சப்தார்த்தமருளிச்செய்து, மாநஸமான க்லேசத்துக்கு மூன்றுஹேதுக்களைக்காட்டா நின்றுகொண்டு, தாத்பர்ய மருளிச்செய்கிறார், (இந்த்ரியங்கள்) இத்யாதி வாக்யத்வயத்தாலே.

(க) சாந்தோ - அ - கஉ - ௩. ‡ (பா) மளவும்.

லபியாமையாலும், லபித்தாலும் அவற்றி லநுபவிக்கலாவதொ ன்றில்லாமையாலும், மாநஸமான க்லேசத்தை யநுபவித்துப் போ ந்தேன்; ஸர்வேந்த்ரியங்களுக்கும் கந்தமான மநஸ்ஸை † ப்ரத் யகர்த்த ப்ரவணமாக்க மாட்டாமையாலே, மாநஸமான க்லேசத் தை யநுபவித்தேன். இத்தால் சொல்லிற்றாயிற்று - சப்தாதி விஷ யங்களிலே ப்ரவணனாய்த் திருவடிகளை யொருநாளும் நினைக்கப் பெ ற்றிலேனென்றபடி. (பெருந்துயரிடும்பையிற் பிறந்து) †விஷயங்களி லே ருசியைப்பிறப்பித்து வாஸனையை யுண்டாக்கி, ராகத்வேஷங்க ளைமிகுத்து, † இதிலுண்டான அவித்யாகர்மங்களும் சரீராரம்பஹே துவாகவந்து பிறந்தேன். துயரொன்று - துக்கம்; இடும்பை யென் றும் - துக்கம்; இத்தால் - சரீரந்தான் துக்காயதநமுமாய் துக்க ஹேதுவுமா யிருக்குமென்கை. துக்காயதநமுமாய் மேலே அநேக துக்கங்களை விளைக்கவும் வற்றாயிருக்கை.

†"பெருந்துய ரிடும்பையிற் பிறந்து கூடி, வாடினேன்" என் னாதே, முதலிலே, "வாடினேன்" என்பானென் னென்னில்; †கர்ம ஸம்பந்தம் அநாதியாய், அசித்ஸம்ஸர்க்கமும் ப்ரவாஹரூபேண நித் யுமா யிருக்கையாலே, நடுவே யொன்றைப் பிடித்துச் சொல்லுகி றார். (பிறந்து) ஜந்ம மரணங்களில்லாத ஆத்மா "செத்தான், பிறந் தான்" என்று வ்யவஹாராஸ்பதமாகையாலே. (கூடினேன்) நித்ய மாய் ஏகரூபமாய் ஜ்ஞாநாநந்த லக்ஷணமாய் பகவச்சேஷமான ஆத் மாவை "ஜீவோஹம், மநுஷ்யோஹம்-தேவோஹம், மநுஷ்யோஹம்" என்ன

---

ப்ரத்யகர்த்தமென்றது - ஜீவேஸ்வரதத்வங்களை. சரீரத்தை "பெரிதான து யர்" என்றும் "இடும்பை" என்றும் இப்படி லக்ஷணயாவருளிச் செய்ததுக்கு த்தார்த்பர்ய மருளிச்செய்கிறார், (விஷயங்களிலே) இத்யாதி. இதில்-சரீரத்தில்.

அர்த்தஸ்வபாவத்தாலே, முந்துற "பெருந்துயர் இடும்பையில்பிறந்து கூடினேன், கூடி இளையவர்தம்மோடு அவர் தருங்கலவியேகருதியோடி னேன், ஓடி மனத்தால் - வருந்தினேன், வருந்தி வாடினேன், வாடி உய்வ தோர் பொருளால் - நாடினேன், நாடி நான் நாராயணாவென்னும் நாமம் - கண்டுகொண்டேன்" என்றந்வயித்தர்த்தம் சொல்லலாயிருக்க, இருந்த படியே அந்வயித்து அர்த்தம் சொல்லுகை சேருமோ வென்னும் சங்கையை யநுவதிக்கிறார், (பெருந்துயர்) இத்யாதி. "கூடி" என்றது - கீழ்ப்பதங்களை யும் மேல்பதங்களையும் அர்த்த ஸ்வபாவத்துக் கநுகுணமாக எடுக்கவேண் டும் பதங்களுக்கும் உபலக்ஷணம். இத்தைப் பரிஹரிக்கிறார், (கர்ம) இத்யாதி. இப்போது ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்து கீழ்ப்பட்டப்ரமாதங்களை அநுஸந்திக்கு மவர்க்கு சரீரஸம்பந்தாதிகள் ப்ரவாஹதோ நித்யங்களாகையாலே, ஒன்றை யிட்டுக் க்ரமேண வருளிச்செய்கிறாரென்று கருத்து. "கூடினேன்" என்ற துக்கு ஒருகாலாவதி சொல்லாமையாலே பலித்த வர்த்தமருளிச்செய்கிறார்,

லாம் படியானபடி. (கூடினேன்) †அசித்ஸம்ஸர்க்கந்தான் ஸத்தா ப்ரயுக்த மென்னலாம்படி பொருந்தினபடி. (கூடினேன்) என்கையாலே - †இதுதான் ஆத்மாவுக்கு ஸ்வரூபமன்று, ஔபாதிகம், - வந்தேறி என்னுமிடம் தோற்றுகிறது. †ராஜபுத்ரன் வழிபோகாநிற்க வேடர்கையிலே யகப்பட்டாற்போலேயிறே ஆத்மாவுக்கு அசித் ஸம்ஸர்க்கந்தான் வந்தபடி. †அயஃபிண்டத்தை அக்நியினருகே வைத்தால் அக்நி பரமாணுக்கள் ஸூக்ஷ்மரூபேண அதிலே ஸங்க்ரமித்தாதல் வாஸனையாலே யாதல் அதினுடைய ஔஷ்ண்யஸ்வபாவத்தையும் நிறத்தையும் பஜித்து அதுதா னென்னலாமாபோலே, இவ்வாத்மாவும்அசித்ஸம்ஸர்க்கத்தாலே அதுதானென்னலாம்படி அசித்கல்பமானபடி. †பரமாணுப்பற்று சிவப்பு மாறினாலும் வாஸனையாலே சுடும்.

(கூடி) †சரீரவிஶ்லேஷம் அஸஹ்யமாம்படி பொருந்தினபடி. †ஜ்ஞாநம்பிறந்தால் சரீர விஶ்லேஷந்தான் ப்ரார்த்தித்துப் பெறவேண்டும்படியானபடி. †கூடிஎன்கையாலே-அநாதிகாலம் இத்தோடே

---

(அசித்ஸம்ஸர்க்கந்தான்) இத்யாதி. சிலநாள் பிரிந்தவற்றுக் கன்றோ கூடுகை யென்னலாவது, ஸத்தாப்ரயுக்தம் என்னுமாபோலே யிருந்தால் இஸ்ஸப்தம் ப்ரயோகிக்கப்போமோவென்ன; அருளிச்செய்கிறார், (இதுதான்) இத்யாதி. பின்பொருநாள்வுரையிலே கழியக்காண்கையாலே ஜ்ஞாநம் பிறந்த விவர் "கூடினேன்" என்னலாமே என்று கருத்து. "வந்தேறி" என்னுமத்தை த்ருஷ்டாந்தமுகேந விவரிக்கிறார், (ராஜபுத்ரன்) இத்யாதி. இப்படி ஔபாதிகமானால் "தேவோஹம்" என்று தத்ஸ்வரூபமாக ப்ரமிக்கக் கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறார், (அயஃ பிண்ட) இத்யாதி. வாஸனையாலேயாதல் சிரகால ஸம்பந்தத்தாலே யாதலென்றபடி. வாஸனையாலே "அதுதான்", என்னலாம்படி யென்னுமதெங்கே யென்ன; அருளிச்செய்கிறார், (பரமாணு) இத்யாதி.

"கூடினேன்" என்றதுக்கு "[illegible] - தேவோஹம்" என்று தாதாத்ம்ய ப்ரமம் வரும்படி கூடினேனென்று தாத்பர்ய மருளிச்செய்து, அதுக்குச் சரீரவிஶ்லேஷமஸஹ்யமாம்படி கூடினேனென்று தாத்பர்யாந்தரம் விவக்ஷித்து, அநுபாஷணத்துக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார், (சரீர) இத்யாதி. சரீரவிஶ்லேஷ மஸஹ்யமாவதெப்போதென்ன; அருளிச்செய்கிறார், (ஜ்ஞாநம்) இத்யாதி. முந்தின தாத்பர்யத்திலே அநுபாஷணத்துக்கு ப்ரயோஜநத்தை யருளிச்செய்கிறார், (கூடியென்கையாலே) இத்யாதி. இரண்டாம் தாத்பர்யத்திலே ப்ரயோஜநம் - சரீரவிஶ்லேஷ மஸஹ்யமான மாத்ரமன்றிக்கே ஸ்த்திதிஹேதுவானவன் ஏகயத்நம் பண்ணும்படிகூடி மேலுமநர்த்தம் விளைத்துக்கொண்டமையை ஸூசிப்பிக்கைகயென்று கண்டுகொள்வது.

பொருந்திப்போந்தமையும் இதுக்குமேலே ஓரநர்த்தம் விளைந்ததென்றும் தோற்றுகிறது.

மேல்விளைந்த அநர்த்தந்தானென்னென்னில்; (இளையவர் தம்மோடவர்தரும் கலவியே கருதியோடினேன்) (இளையவர்) "சப்தாதி விஷய ப்ராவண்யம் அநர்த்தம்" என்று ஆராயவுமொட்டாதே, பகவத்விஷயத்தில் நன்மையையறிந்து அதிலே § மூளவுமொட்டாதே பருவத்தையிட்டுப் † பகட்டித்துவக்குவர்கள். (தம்மோடு) (க) †"𑌛𑌾𑌯𑌾 𑌵𑌾 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌨𑍁𑌗𑌚𑍍𑌛𑍇𑌤𑍍-சாயாவாஸத்வமநுகச்சேத்" என்கிறதுவுமெல்லாமிங்கே;-†நல்லதொரு பூமாலைகண்டால் தன் தலையிலே வைத்தல் தன்னையொருவனுகை நினைத்திருத்தல் செய்யாதே அவர்கள் போன அடிவழியேபோமித்தனை. (உ)†"𑌯𑍇𑌨𑌯𑍇𑌨 𑌧𑌾𑌤𑌾 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌤𑍇𑌨𑌤𑍇𑌨 𑌸𑌹 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿-யேநயேந தாதா கச்சதி தேநதேநஸஹகச்சதி" என்கிறதுவுமெல்லாமிங்கே. (அவர்தரும்கலவி)†கிட்டினபோது சிரித்து வார்த்தைசொல்லியிருந்து, "இனி யிவன்கைப்பட்டான்" என்றறிந்தால் தங்களைக்கொண்டு எழுவாங்கியிருப்பர்கள். (கலவியேகருதி) அநுபவித்து என்பது அநுபாவ்யந்தானுண்டாகிலிறே, இவனுடைய மநோரதமேயாகையாலே (கருதி) என்கிறது. †மநோரதந்தான் மாறுகிறே, அதுக்கடியானபாபம் கிடக்கையாலே. †அநுபவிக்கலாவதொன்றில்லாவிட்டால் மீளவிறே யடுப்பது, அவர்கள் இருய்க்கவிருய்க்க "நன்மையுண்டு" என்று மேன்மேலென மநோரதம் செல்லாநிற்குமாயிற்று, †அதுக்கடியானபாபம் கிடக்கையாலே. †ஒருவிஷயத்திலநுபவிக்கலாவதொன்றில்லாவிட்டால் மீளலாமிறே; அத்தைவிட்டு மற்றொன்றறியப்போய் அதிலுமொன்றும் காணுவிட்டால் பின்னையுமவ்வருகே போகாநிற்குமத்தனையிறே. (ஓடினேன்) †விஷயங்கள் தன்னில் அரைக்ஷணம் கால்தாழப்பண்ணவல்லதொரு

---

(பகட்டி) - அஜ்ஞானத்தை விளைத்து. "தம்" என்றத்தாலே தோற்றின ப்ராதாந்யத்தை விவக்ஷித்தருளிச் செய்கிறார், (சாயா) இத்யாதி. விவரணம், (நல்லது) இத்யாதி. ப்ரமாணாந்தரகதநமுகேந பரிஹரிக்கிறார், (யேந) இத்யாதி. "கலவியே கருதி" என்னலாயிருக்க, "அவர்தரும்" என்று விசேஷித்தவருடைய ஹார்த்தபாவம், (கிட்டின) இத்யாதி. சௌர்லப்யம் தோற்ற விசேஷித்தாரென்று கருத்து. "கலவியே கருதி" என்ற ஏவகாரத்தாலே - வேறொன்றைக்கருதுகை தோற்றுமையாலே யருளிச்செய்கிறார், (மநோரதம்) இத்யாதி. ஹேத்வந்தரம், (அநுபவிக்க) இத்யாதி. இருய்க்கைக்கு ஹேது, (அதுக்கடியான) இத்யாதி. மேலுக்கவதாரிகை, (ஒருவிஷயத்தில்) இத்யாதி. போனேன் என்னுதே "ஓடினேன்" என்றதுக்குக் கருத்தருளிச் செய்கிறார், (விஷயங்கள்) இத்யாதி வாக்யத்வயத்தாலே. ஒருவிஷயத்தை

---

§ (ப) பொருந்தவுமொட்டாதே.

(க) மூலஸம்ஹிதை. (உ) ப்ர்மஸம்ஹிதை.

விஷயந்தானில்லையிறே; போகோபகரணம் கொண்டுபுக்கு ஸ்நாநத்துக்கீடாகப் புறப்படும் விஷயமிறே. †இவற்றின் தோஷத்தைத் தானுமறிந்து, அத்தை மறைக்கைக்கீடான போகோபகரணங்கள் கூட்டிக்கொடுத்திறே தானுமநுபவிக்கப்புகுவது. ப்ரத்யக்ஷ மகிஞ்சித்கரமாகிறவிஷயமிறே. †இவற்றினுடைய தோஷந்தான் சாஸ்த்ரங்கொண்டறியவேண்டாதே கண்ணாலே காணலாம்படி யிருக்கச்செய்தே, கண்டு மீளவொண்ணாதபடி யிருக்கிறதிறே! § †விஷயப்ராவண்யமாவது-பாம்புபடத்தை விரித்துக்கொண்டுநின்றால் அது அள்ளிக்கொள்ளப்புகுகிறதறியாதே அதின்நிழலிலே யொதுங்கத்தேடுமாபோலே யிருப்பதொன்றிறே. † உயிர்க்கழுவிலேயிருந்தவன் பிபாஸையும் வர்த்தித்துத் தண்ணீரும் குடித்துப்பிறக்கும் ஸுகம்போலேயிறே விஷயாநுபவத்தால் பிறக்கும் ஸுகமாகிறது. துக்கங்களிலே ஒன்றை ஸுகம் என்று நிர்வசித்துக்கொள்ளுகிறானித்தனையிறே. (க) "ஸுகது:கைகலக்ஷணா-ஸுகபாவைகலக்ஷணா" என்கிறவதுவேயிறே ஸுகம். (ஓடி) †முன்பெல்லாமிப்படியேயாய்ப் போரச்செய்தே ஒரு நன்மையுண்டாயிற்றென்று தோற்றுகிறது. ஸர்வசக்தி "ரக்ஷிப்போம்" என்று கைநீட்டி யெடுக்கப்பார்த்தாலும், எட்டாதபடி கைகழியப்போனேன்.

(உய்வதோர்பொருளால்) †விஷயங்களிலே கைகழியப்போய் ஓடி இளைத்துவிழுந்தவிடத்திலே, "இனி இவன்தானாக மீளமாட்டான்"என்று அதுதானே ஹேதுவாக ரக்ஷிக்க ஒருப்பட்ட ஸர்வேச்வரன் க்ருபையாலே. †உஜ்ஜீவநோபாயமாயிருப்பதொரு நல்ல அர்

---

யநுபவித்து ஸ்நாநத்துக்குப் புறப்படும்படி கண்டால் ஓடக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார், (இவற்றின்) இத்யாதி. வ்யாக்யாதாவினீடுபாடு, (இவற்றினுடைய) இத்யாதி. த்ருஷ்டதோஷமன்றிக்கே மேலுமநர்த்தகரமென்கிறார், (விஷய) இத்யாதி. இப்படி தோஷ பூயிஷ்டமானதிலே இவன் ப்ரமிப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார், (உயிர்க்கழு) இத்யாதி வாக்யத்ரயத்தாலே. "ஓடி" என்கிற அநுவாதத்தாலே - கீழே "ஓடினேன்" என்றவிடத்தில் யாத்ருச்சிகஸுக்ருதாதிகள் ப்ரஸங்கிக்க ஒண்ணாதபடியோடுகையை ஸூசிப்பிக்கை அதுக்கு ப்ரயோஜநமென்றும், ல்யப்பாலே - ஓரிடத்தில் இளைப்பாய்விழுந்தமை தோற்றுகையால் அதுவே மேல் அவன் க்ருபைக்கு ஹேதுவாகிறதென்றும் விவக்ஷித்தருளிச்செய்கிறார், (முன்பெல்லாம்) இத்யாதி வாக்யத்வயத்தாலே.

"ஓடி" என்றது ஹேதுவானமையைக் காட்டா நின்றுகொண்டு தாத்பர்யமருளிச்செய்கிறார் (விஷயங்களிலே) இத்யாதி. சப்தார்த்தம், (உஜ்ஜீவந)

---

§ (பா) விஷயப்ராவண்யந்தான் ஆடுகிற பாம்பின்நிழலிலே யொதுங்கி விடாய்தீர நினைக்குமோபாதியிறே. (க) வி - பு -

த்தத்தாலே. நல்ல அர்த்தமென்கிறது - பகவத்க்ருபையை, கௌரவத்தாலே "உய்வதோர்பொருள்" என்று மறைத்துச்சொல்லுகிறார்; நாலாம்பாட்டிலே, "ஆழியானருளே" என்று, அதுதன்னைத் தெரியவருளிச்செய்வர். †நம்மாழ்வார், அவ்வளவு போகப்பொறாமை நடுவே "மயர்வறமதிநலமருளினன்" என்றாரிறே. (க) "நானே நானாவிதநரகம் புகும் பாவம் செய்தேன்" என்றும், (உ) †"பாவியேனைப் பலநீகாட்டிப் படுப்பாயோ" என்றும் நானே விநாசத்துக்கீடான பரிகரம்தேடிக்கொள்ள, எனக்கு உஜ்ஜீவிக்கலாவதொரு உபாயமுண்டாயிற்று, (௩)† *அஸங்கேவவானவென்னை (௩) "ஸ்தேமேநஸ்-ஸந்தமேநம்" என்னப்பண்ணிற்றொரு நல்ல அர்த்தமுண்டாயிற்று. (உணர்வெனும் பெரும்பதம்) (ச) †[విజ్ఞానంయదిదం ప్రాప్తమ్-விஜ்ஞாநம் யதிதம்ப்ராப்தம்]†கிடக்கைப்பாயிலே வெள்ளம் கோத்தாற்போலே. (பெரும்பதம்) "அவன்றான் வேண்டா, தத்விஷய ஜ்ஞாநமேயமையும்" என்னும்படி இதினுடைய பெருமை, (திரிந்து) †விஷயங்கள்

இத்யாதி. நாலாம்பாட்டிலே அருளைச்சொன்னால் முதற்பாட்டிலும் அதுவேயாகவேணுமோவென்ன; அருளிச்செய்கிறார், (நம்மாழ்வார்) இத்யாதி. இத்தால் - ஏககண்டராகையாலே இதுவே விவக்ஷிதமென்று கருத்து. "பலநீகாட்டி" என்னுமதில் த்ருஷ்டியின்றிக்கே, "பாவியேனை" என்றதிலே நோக்காக வருளிச்செய்கிறார், (பாவியேனை) இத்யாதி. இத்தால் - "உய்வது" என்னும் அம்சத்துக்குக் கருத்து சொல்லிற்றாயிற்று. "ஓர்" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார், (அஸங்கேவ) இத்யாதி. உணர்வாகிற பெரியபதம் - ஸ்த்தாநம் என்று சப்தார்த்தமாய், இத்தைப் பதமாகச்சொன்னதுண்டோவென்ன; அருளிச்செய்கிறார், (விஜ்ஞாநம்) இத்யாதி. "స్థానమార్జితమ్ - ஸ்த்தாநமார்ஜிதம்" என்றதிலேநோக்கு. "విజ్ఞానంయదిదం ప్రాప్తం యదిదం స్థానమార్జితమ్ । జన్మాన్తరేపి మేదేవ మాభూత్తస్యపరిక్షయః-விஜ்ஞாநம்யதிதம்ப்ராப்தம் யதிதம்ஸ்த்தாநமார்ஜிதம் । ஜந்மாந்தரேபிமேதேவ மாபூத்தஸ்யபரிக்ஷய:" అస్యార్థః- యత్ - వేదాన్తప్రసిద్ధమ్, విజ్ఞానమ్, ప్రాప్తమ్- అయత్నలబ్ధమ్, ఇదమేవార్జితమ్-సంపాదయితుమాశాసితమ్, స్థానంయత్, తస్యజన్మాన్తరేపి పరిక్షయోమాభూదితి. அஸ்யார்த்த: - யத் - வேதாந்தப்ரஸித்தம், விஜ்ஞாநம், ப்ராப்தம் - அயத்நலப்தம், இதமேவார்ஜிதம்-ஸம்பாதயிதுமாசாஸிதம், ஸ்த்தாநம்யத், தஸ்யஜந்மாந்தரேபி பரிக்ஷயோமாபூதிதி. ப்ராப்தம் - தானேவந்ததென்று அர்த்தம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார், (கிடக்கை) இத்யாதி. "திரிந்து" என்றதுக்கு - மீண்டு என்று அர்த்தமாய், ஹேதுபூர்வகமருளிச்செய்கிறார், (விஷயங்கள்) இத்யாதி. இந்தபாடத்திலே "ஓடி - திரிந்து" என்றந்வயிப்பது.

(க) க - கூ - உ. (௩) தை - ஆந - சு.
(உ) தி - வாய் - ரு - கூ - கூ. (ச) ஜி - ஸ்தோ - கக.

தான் ஸாவதியாகையாலே அவற்றிலநுபவிக்கலாவதொன்றில்லாமை முட்டிமீண்டேன். (தெரிந்து) என்று பாடமாகில், ஜ்ஞாநம் பிறந்தவாறே எல்லாம் இருந்தபடியேதெரிந்தது. ஆகையாலே, முன்பெல்லா மிருட்சியாய்ப் போந்தமை தோற்றுகிறது. (நாடினேன்) ஜ்ஞாநம்பிறந்தவாறே, "நாம் கீழ் பட்டதென்? மேல் படப்புகுகிறதென்?" என்னுமாராய்ச்சி பிறந்தது.

(நாடி) †இதரவிஷயங்களைப் பெறவேணும் என்று புத்திபூர்வமே ப்ரவர்த்தித்தாலும் அநர்த்தாவஹமாமத்தனைபோக்கிப் பலிப்பதொன்றில்லை; பகவத்விஷயத்தில் ஆராய என்றிழிந்தமாத்ரத்திலே பல (ஃல) வ்யாப்தியுண்டு. (நான்) †"ஓடினேன்" என்றநான். ராவணபவநத்திலே நெடுநாள் அவனெச்சில்தின்று வளர்ந்தவன் ஒருமுழுக்கிடாதே ராமகோஷ்டிக்கு ஆளானாற்போலே. † வேல்வெட்டிநம்பியார், பிள்ளைகிழக்கே§முக்காதமாற்றிலே யெழுந்தருளியிருக்கச்செய்தே, ஒரு † திருக்கார்த்திகையிலே "புறம்பே சிலரைக்கேட்டால் † 'எளியன்' என்றிருப்பர்கள், இதுபரிஹரிக்க வல்லாருமில்லை; இத்தைச் சொல்லிவரக் காட்டவேணும்" என்று ஓராள்கொடுத்துவரக்காட்டினார்; அது என்னென்புதென்னில்; "பெருமாள் கடலைச் சரணம்புகுகிறவிடத்தில் ப்ராங்முகத்வாதி நியமோபேதராய்க்கொண்டு சரணம்புக்கார், இதரோபாயங்களோபாதி ப்ரபத்தியும் ஸஹாயாந்தரஸாபேக்ஷமோ?" என்றுவரக்காட்ட; "அந்த உபாயத்துக்கு உடன்வந்தியாயிருப்பதொன்றன்று, உபாயபரிக்ரஹம்பண்ணினவருடைய ஸ்வபாவத்தாலேவந்தது, ராக்ஷஸஜாதீயராவார் தண்ணியராய் அநதிகாரிகளாயிருக்க, அவர்களிலே யொருவனான் ஸ்ரீவிபீ

(அவன்றான் மீளமாட்டான்) என்று கீழேயருளிச்செய்தது - "தெரிந்து" என்றபாடத்தைப் பற்றவென்று கண்டுகொள்வது.

"நாடி" என்ற அநுபாஷணத்துக்கும் - கீழே "நாடினேன்" என்றதுக்கும் கீழ்ப்பட்டதிலே அபுத்திபூர்வகப்ரவ்ருத்தியான வளவன்றிக்கே புத்திபூர்வகமாக ப்ரவர்த்தித்தாலும் ப்ரயோஜநமில்லாமையை நன்றாக விசாரித்தமைதோற்றவும், "கண்டுகொண்டேன்" என்னு மதுக்குஹேதுவாகவும் தாத்பர்ய மருளிச்செய்கிறார், (இதர) இத்யாதி வாக்யத்வயத்தாலே. "கண்டுகொண்டேன்" என்ற உத்தமனாலே தோற்றுகிறதவும், "நான்" என்றதுக்கு பாவமருளிச்செய்கிறார், (ஓடினேன்) இத்யாதி. இத்தால் - பகவத்விஷயத்திலிழிவார்க்கு அதிகாரஸம்பத்திதேடவேண்டா என்று பலிக்கையால், இதுக்கு ஸம்வாதமருளிச்செய்கிறார், (வேல்வெட்டி) இத்யாதி. (திருக்கார்த்திகை) - ஸ்வாமி உத்ஸவகாலம். (எளியனென்றிருப்பர்கள்)-லகு (லகு) கரிப்பர்கள்.

§ முக்காதமாறு - முக்காதவழி.

மூ.—ஆவியே யமுதே யெனநினைந் துருகி,
யவரவர் பணைமுலை துணையாப்
பாவியே னுணரா தெத்தனை பகலும்
பழுதுபோ யொழிந்தன நாள்கள்
தூவிசே ரன்னம் துணையொடும் புணரும்
சூழ்புனற் குடந்தையே தொழுது, என்
நாவினா லுய்ய நான் கண்டு கொண்டேன்
நாராயணாவென்னும் நாமம். (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆவியே | என்ப்ராணனே! | என | என்று இப்படி அநேகங்களைச்சொல்லி |
| அமுதே | எனக்கு அம்ருதம் போலே போக்யமானவளே! | நினைந்து | அவர்கள்தரும் சிற்றின்பத்தைநினைத்து |

ஷணாழ்வானிறே, (க) "సముద్రం రాఘవో రాజా శరణం గన్తుమర్హతి-ஸமுத்ரம் ராகவோராஜாசரணம்கந்துமர்ஹதி" என்று இவர்க்கு உபதேசித்தான், அவன்பக்கல் நியதிகண்டிலோம், இவர்பக்கலிலே நியதி கண்டோம்". இத்தால் சொல்லிற்றாயிற்றென்னென்றால்; அநதிகாரியானவனுக்கு அதிகாரம் ஸம்பாதிக்கவேண்டா, அதிகாரியானவனுக்கு அநதிகாரம் ஸம்பாதிக்கவேண்டா, நின்றநிலையிலே அதிகாரிகளாமித்தனை; ஸர்வாதிகாரமென்றபடி. (கண்டுகொண்டேன்) தநமிழந்தவனுக்கு தநலாபம்போலேயிருக்கையாலும் தாய(దాయ)ப்ராப்தமாயிருக்கையாலும். (நான்கண்டுகொண்டேன்) கெடுத்தவன்தானே கண்டாற்போலேயிருக்கை. (நாராயணா) ப்ரணவமாதல் நமஸ்ஸாதல் சதுர்த்தியாதல் கூட்டாமையாலே, † திருவிடையாட்டத்திலே யிழியவமையும், பல (ఫల) பர்யந்தமாகைக்கு ஸாங்கமாகவும் வேண்டாவென்கிறது. (என்னும்நாமம்) "என்னும்" என்கிறது, பலகால் ஆதரித்துச்சொல்லுகிற அநந்யபரமான நாராயணாநுவாகப்ரஸித்தி. நாமம் என்கையாலே இருந்தபடியே உத்தேஶ்யம், இச்சை பிறந்தபோதே காலம், சொல்லுவோமென்றவன் அதிகாரி என்கிறது. "திருமந்த்ரம் சொல்லும்போது ப்ரயதராய்க்கொண்டு சொல்லவேணுமோ வேண்டாவோ?" என்று ஜீயர் பட்டரைக்கேட்க, "வேண்டா" என்றருளிச்செய்தார். "கங்கையாடப்போமவனுக்கு நடுவேயொரு உவர்க்குழியிலே முழுகிப்போகவேணுமோ? இந்நன்மையெல்லாமுண்டாக்கப்புகுகிறது, இப்போக்யதை யித்தனையும் போக்கமாட்டாதோ?" என்றருளிச்செய்தார். ... ... ... (க)

(திருவிடையாட்டம்)-ஐஶ்வர்யம்; நாராயணசப்தார்த்தமான உபயவிபூத்யைஶ்வர்யத்திலே நானுமொருவனென்றறியவமையுமென்றபடி. (ச)

(க) ரா - யு - கக - ௩௦.

| | | | |
|---|---|---|---|
| உருகி | நீர்ப்பண்டம் போலே கரைந்து [ய | துணையொடும் | தன்பேடையோடு |
| அவரவர் | அவ்வவஸ்த்ரீகளுடை | புணரும் | ஸம்ஸ்லேஷித்து வர்த்திக்கு மதுவாய் |
| பணை | பெருத்த | புனல் | ஜலத்தால் |
| முலை | ஸ்தநங்களை [டு | சூழ் | சூழப்பட்டிருப்பதான |
| துணையா | ரக்ஷகமாகக்கொண் | | |
| பாவியேன் | பாபியானநான் | குடந்தை | திருக்குடந்தையில் ஆராவமுதாழ்வாரை |
| உணராது | "ஸர்வேஸ்வரனே நமக்கு ரக்ஷகன்" என்றுஅறியமாட்டா | தொழுது | ஸேவித்து |
| | | நான் | விஷயப்ரவணனுயிருந்த நான் [க |
| எத்தனைபகலும் | காலமெல்லாம் [தே | | |
| நாள்களும் | திநங்களெல்லாம் | உய்ய | உஜ்ஜீவிக்கும்படியா |
| பழுதுபோய் ஒழிந்தன | வ்யர்த்தமாய்க் கழிந்துபோயின; | நாராயணா என்னும் நாமம் | நாராயணா என்னும் திருநாமத்தை |
| தூவி | சிறகினால் | என்நாவினால் | என்னுடையநாவாலே |
| சேர் | அநுரூபமான | கண்டுகொண்டேன் | புகழ்ந்து காணப்பெற்றேன். (உ) |
| அன்னம் | ஹம்ஸமானது | | |

வ்யா.—இரண்டாம்பாட்டு.—அநாதிகாலம் "பகவத்தத்வமென்றொன்றுண்டு" என்றுமறியாதே விஷயப்ரவணராய்ப்போருகையாலே, "வாடினேன்" என்றும் "இளையவர் கலவியேகருதி யோடினேன்" என்றுமிறே, கீழ்ச்சொல்லி நின்றது, அதிலநுபவித்த வகைகளையும், காலமடங்க வ்யர்த்தமே போயிற்றென்றும் சொல்லி, இப்படி †போனகாலமும் வ்யர்த்த மாகாதபடியான திருநாமத்தைக் காணப்பெற்றேனென்கிறார்.

(ஆவியேயமுதே) (க) †"ஆவியேயமுதே யலைகடல் கடைந்தவப்பனே" என்றும், (உ) "ஆவியேயமுதே யென்னையாளுடைத் தூவியம் புள்ளுடையாய்" என்றும் பகவத்விஷயத்திலே சொல்லக்கடவ வார்த்தையையாயிற்று இங்கேசொல்லிற்று, வகுத்தவிஷயத்திலே சொல்லக்கடவவார்த்தையை அப்ராப்த விஷயத்திலே சொன்னேன். † தா(ர)ரகத்வமும் கண்ணழிவற்று போக்யதையும் கண்ணழிவற்றிருப்பது பகவத்விஷயமேயிறே; தாரகமன்றிக்கே பாதகமுமாய், போக்யதை யின்றிக்கே† பீபத்ஸ்யமுமாயிருக்கிற விஷயங்களிலே

அரு.—இரண்டாம்பாட்டு.—(ஆவியே) இத்யாதி. (போனகாலமும் வ்யர்த்தமாகாதபடி) என்றதுக்கு (ங) "சென்றநாள் செல்லாத செங்கண்மாலெங்கள்மாலென்றநாளெந்நாளும் நாளாகும்" என்கிறபடியே போனகாலத்தையும் நல்லநாளாக்கும்; பாட்டின் துனியிலே தாத்பர்யத்தை வ்யக்தமாக வருளிச்செய்கிறாரென்று கண்டுகொள்வது.

விஷயாநுபவத்தின் வகைகளைச்சொல்லுகிறவர் "ஆவியேயமுதே" என்று இவ்வகைசொன்னதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார், (ஆவியே) இத்யாதி. தாத்பர்யாந்தரம், (தாரகத்வம்) இத்யாதி. (பீபத்ஸ்யமுமாய்) என்றது-ஹேய

(க) தி - வாய் - அ - க - க. (ங) ங - திருவ - கஎ.
(உ) தி - வாய் - ங - அ - எ.

யாயிற்று வார்த்தைசொல்லிப்போந்தது. (க) †“[illegible]-த்வம் ஜீவிதம்த்வமஸிமேஹ்ருதயம் மதீயம்” என்றிறே சொல்லிப்போந்தது. (எனநினைந்து) † “இப்புடைகளில் நினைப்பது அநேகத்தையிறே” என்றாயிற்று ஜீயர் அருளிச்செய்வது. †பிள்ளை “இங்ஙன் நினைந்து வாய்விடமாட்டாதே (உ) ‘நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்’ என்று இங்ஙனே சொல்லலாமோ” என்று ஜீயர்க்கு விண்ணப்பஞ்செய்ய, † “நீர் இவரிலும் பக்தராயிருந்தீர்” என்றருளிச்செய்தார்.

(எனநினைந்துருகி) இங்ஙனே அநுஸந்தித்து நீர்ப்பண்டம்போலே மயங்கிக்கிடப்பர். எத்தனை விஷயங்களிலே இப்படி கால்தாழ்ந்து போந்ததென்னில்; (அவரவர்) காலம் அநாதி, ஆத்மா நித்யன், பரிக்ரஹித்த சரீரங்களுக்கு எல்லையில்லை, அவ்வோ சரீரங்கள்தோறும் விஷயங்களுக்கும் எண்ணில்லை; அவ்விஷயங்கள் தோறும் கால்தாழ்ந்திறேபோந்தது; ஆகையாலே (அவரவர்) என்னுமித்தனை. (பணைமுலை) ஒருத்தன் நோவுபட்டான் என்றால், “பிற்பாடராளோம், உதவப்பெற்றிலோம்” (ந) “[illegible]-ஹ்ரீமோஷாஹிமமாதுலா” (ச) “[illegible]”-நத்யஜேயம்” என்னுமவனன்றே; “இளிம்பனாயிருந்தானகப்பட்டான், இனி இவன்கையிலுள்ள தடங்க நம்மது” என்று அதுவே எருவாகப் †பணைக்குமாயிற்று; †“நம்மைப் பெறவேணுமென்று உருகினான்” என்றால் இரங்கி உடம்புகொடுக்குமத்தனை நீர்மையில்லையே! (பணைமுலைதுணையா) த்வங்மாம்ஸ மேதோஸ்த்தி மயமான க்ரந்தியைப்பற்றி (ரு) “தயரதற்கு மகன்றன்னையன்றிமற்றிலேன் தஞ்சமாகவே” என்றிருக்குமாபோலே யிறேயிருப்பது. † “இப்போது சாபலத்தாலே விரும்புகிறோம்”

---

மமாய் என்றபடி. ஒருநாயிகாவிஷயத்திலே ஒருவன் சொல்லுமத்தை ஸம்வாதமாகக்காட்டுகிறார் (த்வம்) இத்யாதி. ஜீவிதமென்றது - ஆவியே என்றதுக்கு ஸத்ருசம். ஹ்ருதயமென்றது - ஹ்ருதயாபிமதை என்றபடி. “என” என்றது - அநேகங்களை யென்றதாய், அருளிச்செய்கிறார், (இப்புடைகளில்) இத்யாதி. “என” என்றது - என்று என்றாய், அநுதாநும் - சொல்லவென்றதாய், அருளிச்செய்கிறார், (பிள்ளை) இத்யாதி. (நீர் இவரிலும் பக்தராயிருந்தீர்) என்றது - ஆழ்வார் பகவத்விஷயரஸ்யதையாலே இப்படி யருளிச்செய்தார், நீரவரைக்காட்டிலும் ரஸிகராயிருந்தீரென்றபடி.

(பணைக்குமாயிற்று) பெருக்குமாயிற்றென்றபடி. தங்களிலே யொதுங்கியிருந்தவனுக்கு ஹாநிவந்தால் இதுவே ஹேதுவாகப்பணைக்கைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் (நம்மை) இத்யாதி. ஈஶ்வரனைப்போலே த்ருஷ்டாத்ருஷ்ட பலஸாதநமென்னுமத்தை விவரிக்கிறார் (இப்போது) இத்யாதி.

---

(க)
(உ) ரா - ஆ - கo - க.
(ந) ரா - யு - கஅ - ந.
(ச) தி வாய் - ந - ௬ - அ.

என்றிருக்கையன்றிக்கே† அத்ருஷ்டத்தையும் இதுதானே தருவது போலே யாயிற்று ஆதரிப்பது. அத்ருஷ்டத்தை மறந்தபடி. (க) † "துன்னுகுழல் கருநிறத்தென் துணையே" என்றிருக்கு மத்தை யிறே இங்கே நினைப்பது.

(பாவியேன்)†நித்யமாய் ஏகரூபமாய் ஜ்ஞாநாநந்த லக்ஷணமாய் ஈஶ்வரனுக்கு ஸ்ரீகௌஸ்துபத்தோபாதியா யிருக்கிற ஆத்மவஸ்து படும் எளிவரவேயிது. (உணராது)† இவ்விஷயத்துக்கு நம்மை வகுத்தது என்று உணரமாட்டாதே. (எத்தனைபகலும் பழுதுபோயொழிந்தன நாள்கள்) எத்தனைகாலமுண்டு இப்படி வ்யர்த்தமே போகிறது. †காலமடங்க வ்யர்த்தமே போயிற்று; †அணைக்கு அவ்வருகு பட்ட நீரோபாதியிறே.(உ) †"வயோஸ்யாஹ்யதிவர்த்ததே - வயோஸ்யாஹ்யதிவர்த்ததே". (பழுதுபோயொழிந்தன நாள்கள்) † இளையபெருமாளைப்போலே கண்ணுறங்கவும் அவஸரமின்றிக்கே போகக்கடவ காலம் அநர்த்தத்தோடேபோயிற்றது. †கைங்கர்யத்தோடே அடிக்கழஞ்சு பெற்றுச் செல்லக்கடவகாலம் பழுதே போயிற்றது.

(தூவிசேரித்யாதி) இப்படி கைகழிந்தது, உகந்தருளின நிலங்களிங்கே யாகையாலே ஸ்வரூபம் பெற்றுமீண்டது. தூவி - சிறகு †சிறகால்வந்த அழகையுடைத்தாய் அன்னம் ஸஹசரத்தோடேபுணர்ந்து வர்த்திக்கிறதேசம். ஸர்வபூதசரண்யமானதேசம்;-† அன்னத்தோடு ஸர்வதாஸாம்யம் சொல்லலா யிருக்கையாலே, பெரிய பிராட்டியாரோடே ஆராவமுதாழ்வார் ரமித்து வர்த்திக்கிறதேசம்.

---

(அத்ருஷ்டத்தையும்)என்றது-அத்ருஷ்டஸாதகத்தையுமென்றபடி. ரம்பாஸம்போகாதிகளும் இதுவே என்று எண்ணி, வேறே அத்ருஷ்டஸாதகத்தையும் மறந்திருக்குமென்று கருத்து. அவாவர்துணையா என்னுதே "பணைமுலைதுணையா". என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார், (துன்னுகுழல்) இத்யாதி.

ஸ்வரூபஜ்ஞாநம்பிறந்து அநுதபிக்கும்தசையிலே "பாவியேன்" என்கைக்கூட்டாமையால், இதுக்லேசஸூசகமான பாசுரமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார், (நித்யமாய்) இத்யாதி. (இவ்விஷயத்துக்கு)-பகவத் விஷயத்துக்கு. "எத்தனைபகலும் - நாள்களும் - பழுதுபோயொழிந்தன" என்று அந்வயமாய் பலித்த அர்த்தம், (காலமடங்க) இத்யாதி. "போய்" என்றதுக்கு பாவம், (அணைக்கு) இத்யாதி. போனகாலத்துக்கு க்லேசித்தாருண்டோவென்ன; அருளிச்செய்கிறார், (வயோஸ்யா8) இத்யாதி. "பழுது" என்ற ப்ரயோகத்துக்குக் கருத்தருளிச்செய்கிறார், (இளைய) இத்யாதி. கீழ்வாக்யவிவரணம், (கைங்கர்ய) இத்யாதி.

"சேர்" என்றது - அநுரூபமென்றாய் அருளிச்செய்கிறார் (சிற இத்யாதி. சரண்யமான தேசமானமையை உபபாதிக்கிறார், (அன்ன டு) இத்யாதி.

---

(க) தி - நெ கக. (உ) ரா - யு - ரு - ரு.

சரண்யவஸ்து குறைவற வர்த்திக்கிறதேசம். பொறுப்பாருமுண்டாய்ப் பொறுப்பிப்பாரு முண்டாகையாலே குறைவற்றதேசம். (சூழ்புனல்) அசேதநமான ஜலமும் அங்கேவந்தால் ஒருகால் சூழவாயிற்றுப் போவது. தாபார்த்தர்க்கு ஶ்ரமஹரமானதேசம். (குடந்தையேதொழுது) (க) "ஶவஶாஃப்ரதி°ஷேரே - அவசாஃ ப்ரதிபேதிரே" என்கிறபடியே தம்பக்கல் ஒருநினைவின்றிக்கே யிருக்க, தொழுது கொடு நிற்கக்கண்டார். (என்நாவினால்) † "ஆவியேயமுதே" என்ற என்நாவினால். † "இப்ப்ரஜையைப் பெற்றுவாழ்ந்தேன்" என்பாரைப்போலே. †கரணம் இன்றுபெற்ற பேற்றுக்குப் பாங்காயிருக்கையாலே, வேறொரு சரீரபரிக்ரஹம் பண்ணினாலும், என்நா என்னலாயிறே, †இதரரை ஸ்தோத்ரம் பண்ணித்திரிந்த இவ்வுடம்போடே. (உய்ய நான் கண்டுகொண்டேன்) (உ) †"மறந்தமதியின் மனத்தால் இறந்தேனெத்தனையும்" என்றநான், உஜ்ஜீவிக்கும்படி கண்டுகொண்டேன். (கண்டுகொண்டேன்) †திருமந்த்ரத்தினுடைய அர்த்தத்தை அநுஸந்தித்தால் அது ஸ்வரூபமா யிருக்குமாபோலே, சப்தத்தைச் சொல்லுகையும் ஸ்வரூபமாயிருக்குமிறே. இப்படி ப்ராப்தமா யிழந்ததைக் காணப்பெற்றே னென்கை. (நாராயணாவென்னும்நாமம்.) (ங) †"நாவாயிலுண்டே" †என்னுமத்தை. நாவாயிலுண்டானால் (ங) * ஓவாதது †உரைக்குமுரையிறே.

[நாவாயிலுண்டே] இது முந்துறமுன்னம் தேடிப்போக வேண்டாவே. [நமோநாரணாவென் றோவாதுரைக்கு முரையுண்டே] ஓவாதுரைக்கும் உரையாகிறது - உச்சிவீடு விடாதே சொல்லவேணுமென்கிறதன்று; எட்டு அக்ஷரமாகையாலே நடுவே இளைக்கவேண்டாதே சொல்லி யிளைப்பாறலாமென்கை. ஸஹஸ்ராக்ஷரீமாலா மந்த்ரமாய் "இதுகற்பதில் நரகத்தைப் புக்குப்போகவமையும்" என்னும்படி யிராதொழிகை. (என்னும் நாமம்) †முன்பு இழந்தகாலமும்

"என்" என்றது நைச்யத்திலேயாக்கியருளிச்செய்கிறார், (ஆவியே) இத்யாதி. கொண்டாட்டமாகத் தாத்பர்யாந்தரம், (இப்ப்ரஜையை) இத்யாதி. ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தபின்பு பூர்வவ்ருத்தமுடையனுகையைக் கொண்டாடலாமோவென்ன; (கரணம்) இத்யாதி. நா சரீரைகதேசமாகையாலே, (இதரரை ஸ்தோத்ரம்பண்ணித் திரிந்தவிவ்வுடம்போடே) என்றது. மதிப்ரஷ்டனான நான் என்றர்த்தாந்தரம், (மறந்த) இத்யாதி. ஸ்வரூபஜ்ஞானால் அர்த்தாநுஸந்தாநமொழிய சப்தாநுஸந்தாநம் கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (திருமந்த்ரத்தினுடைய) இத்யாதி. திருநாமம் சொல்லுகை உஜ்ஜீவநஹேதுவென்னுமதுக்குப்ரமாணம்காட்டுகிறார், (நாவாயில்) இத்யாதி. (என்னுமத்தை) என்றது - என்கிற பாட்டைஎன்கை. அநந்தரம், "கண்டு கொள்வது," என்று பூரிப்பது. உரைக்குமுரையிறே திருமந்த்ரமென்றபடி.

"என்னும்நாமம்" என்று பாவநத்வப்ரஸித்தியைப்பற்ற வருளிச்செய்கிறார், (முன்பிழந்தகாலமும்) இத்யாதி. கதகாலம் நல்லநாளாகுமோவென்ன;

(க) (உ) சு - உ - உ. (ங.) க - திரு - கூ.

மூ.— சேமமே வேண்டித் தீவினை பெருக்கித்
தெரிவைமா ருருவமே மருவி
ஊமனார் கண்ட கனவிலும் பழுதா
யொழிந்தன கழிந்த வந் நாள்கள்
காமனார் தாதை நம்முடை யடிகள்
தம்மடைந் தார் மனத் திருப்பார்
நாமம் நா னுய்ய நான் கண்டு கொண்டேன்
நாராயணாவென்னும் நாமம். (ங.)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| சேமமே | க்ஷேமத்தையே | அடிகள் | ஸ்வாமியாய் |
| வேண்டி | விரும்பி, (அதற்குவேண்டும் ஸத்கர்மங்களைச் செய்யாதே) | தம் | தம்மையே |
| தீவினை | பாபங்களை | அடைந்தார் | சரணாகப்பற்றினவர்களுடைய |
| பெருக்கி | அதிகரிக்கச்செய்து | மனத்து | நெஞ்சில் |
| தெரிவைமார் | ஸ்த்ரீகளுடைய | இருப்பார் | நீங்காதிருப்பவரான ஸர்வேஶ்வரனுக்கு |
| உருவமே | வடிவழகையே | நாமம் | வாசகமான |
| மருவி | நினைத்து | நாராயணாவென்னும் | நாராயணா என்கிற |
| கழிந்த | வீணாயொழிந்த | நாமம் | திருநாமத்தை |
| அந்நாள்கள் | அந்தக்காலமெல்லாம் | நான் | விஷயசபலனாய்த்திரிந்தநான் |
| ஊமனார் | ஊமைகள் | உய்ய | உஜ்ஜீவிக்கும்படி |
| கண்ட | பார்த்த | நான் | உஜ்ஜீவநத்தில் கைகழிந்தநான் |
| கனவிலும் | கனவிலுங்காட்டில் | கண்டுகொண்டேன் | காணப்பெற்றேன். |
| பழுதாய் | வ்யர்த்தமாய் | | |
| ஒழிந்தன | போயின; ஆதலால் | | |
| காமனார் | மந்மதனுக்கு | | |
| தாதை | தமப்பனாய் [ர்க்கும் | | |
| நம்முடை | நம்போல்வாரெல்லா | | |

வ்யர்த்தமாகாதபடியான திருநாமத்தைக் காணப்பெற்றேன். (க) [சென்றநாள்செல்லாத செங்கண்மாலெங்கள்மாலென்றநாளெந்நாளும் நாளாகும்] செங்கண்மாலெங்கள்மாலென்பது ஒருநாளுண்டாகில்; [சென்றநாள் செல்லாத - எந்நாளும் நாளாகும்] †திருமந்த்ரத்தைச் சொல்லுகைக் குறுப்பாகையாலே போனகாலமும் நல்லகாலமாய், செல்லுகிற காலமுந்தானே நல்லகாலம். திருமந்த்ரம் சொன்னால் மேல்தானே ஓரநர்த்தம் விளையாதிறே. ... (உ)

அருளிச்செய்கிறார். (திருமந்த்ரத்தை) இத்யாதி. (திருமந்த்ரத்தை) என்றவாக்யம், ''ஒருநாள்'' என்று சேஷம். ஆக, ஒருநாள் திருமந்த்ரத்தை அநுஸந்தித்தால் அநாதிகாலமுண்டான ப்ராதிகூல்யங்களெல்லாம், உருமாய்ந்து போகையாலும் மேல் ஆநுகூல்யங்களை விளைக்கையாலும், வர்த்தமாநகாலத்தில் ரஸ்யதாதி சயத்தால் வந்த ஏற்றத்தாலும், ஸர்வகாலமும் ஸார்த்தகமாயிற்றென்று கருத்து. ''செல்லாத'' என்று பவிஷ்யத்காலத்தைச்சொல்லுகிறது. ... ... ... ... ... ... ... ... (உ)

வ்யா—மூன்றாம்பாட்டு.—(சேமமேவேண்டி) † "சத்ருக்களால் ராஜாக்களுள்ளிட்டாரால் நமக்கொரு நலிவு வாராதொழியவேணும், † எல்லாராலும் † ரக்ஷைபெற்றுச்செல்லவேணும்" என்றாயிற்று நெஞ்சால் நினைத்திருப்பது. (தீவினைபெருக்கி) † ரக்ஷையே பெற்றுச் செல்லவேணுமென்றிருந்தால், அது ஸபலமாம்படியான ஸத்க்ரியையைப் பண்ணாதே பாபத்தையாயிற்றுக் கூடுபூரிப்பது. (தெரிவைமாருருவமே மருவி) † நல்லத்தை வேண்டியிருக்கும் காட்டில் அதுவாராதே செய்ததின்பலமிறே வருவது; பண்ணிவைத்த பாபங்கள் கொடுபோய் விஷயங்களிலே மூட்டும். (உருவமே மருவி) அகவாயிலிழியில் த்யஜிக்கலாமிறே. அகவாய் நஞ்சாய் ஸ்வகார்ய பரராயிறே யிருப்பது; அகவாயிலே யிழியில் அநாத்மகுணம் கண்டுமீளலாயிருக்குமிறே; † வடிவில் தோஷங்களை மறைத்திறே வைப்பது. (மருவி) அத்தையே சுபாஶ்ரயமாக மநநம் பண்ணியாயிற்றிருப்பது.

(ஊமனார்கண்டகனவிலும் பழுதாய்) ஊமனார் - ஊமைகள். §(ஊமைகண்ட கனவிலும் பழுதாய்;) ஊமை கண்ட கனா வாய்விடமாட்டானித்தனை, நினைத்திருக்கும்; அங்ஙனுமன்றியே, நெடுநாள் அநுபவித்துப் போந்த விஷயங்களில் போயிருந்து, அநந்தரம் நினைத்திருக்கைக்கு மொன்று மின்றிக்கே யிருக்கை. அங்ஙனன்றியே, ஊமைகண்டகனா வாய்விடமாட்டிற்றிலனாகிலும் நினைத்திருக்கலாம், இவைநினைக்கில் பயாவஹமாகையாலே நினைக்கவு மொண்ணாதென்கை. † ஸ்ம்ருதி விஷயமாவதொன்றில்லை, ஸ்ம்ருதி விஷயமாயி

மூன்றாம்பாட்டு.—(சேமமே) இத்யாதி. கீழ்ப்பாட்டிலே "பழுதுபோயொழிந்தன" என்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக உபபாதித்துக்கொண்டு பின்னையும் சிறிதுகளை அநுஸந்தித்து அநுதபிக்கிறாரென்று ஸங்கதியை உட்கொண்டு வாக்யார்த்தமருளிச்செய்கிறார் (சத்ருக்களால்) இத்யாதி. சேமம் என்றது-க்ஷேமமென்றாய்; அதுதானும் ஸத்திதபரிபாலநமாய், இத்தைச்சொன்னது அபூர்வார்த்த ப்ராப்திரூபமான யோகத்துக்கு முபலக்ஷணமென்று திருவுள்ளம்பற்றி இவ்விரண்டும் ப்ரார்த்யமாகையாலே சேமபதார்த்தம ஙிழருளிச்செய்து, யோகபதார்த்தமருளிச்செய்கிறார், (எல்லாராலும்) இத்யாதி. (ரக்ஷைபெற்று) என்றது-இஷ்டத்தையடைந்தென்றபடி. இப்படி சரீரரக்ஷணம் சொன்னது ஆத்மரக்ஷணத்துக்கு முபலக்ஷணமாக்கி யருளிச்செய்கிறார், (நல்லத்தை) இத்யாதி. அகவாய்போலே வடிவிலும் தோஷமில்லையோவென்ன; அருளிச்செய்கிறார், (வடிவில்) இத்யாதி.

நிஸ்ஸாரத்வமும் பயாவஹத்வமுமான பழுதாகையை நிகமிக்கிறார் (ஸ்ம்ருதி) இத்யாதி.

§ குண்டலிதம் க்வாசித்கம்.

ப்ரபத்துண்டாகில் பயாவஹமாயிருக்கும். (ஒழிந்தன் கழிந்தஅந்நாள் கள்)(க)[[illegible]-நமே துஃக்கம்ப்ரியா தூரே நமே துஃக்கம் ஹ்ருதேதிவா। ஏததேவாநுசோசாமி வயோ ஸ்யாஹ்யதி வர்த்ததே] ப்ரியையானவள் தூரவிருந்தாளென்று வெறுத்திருக்கிறோமல்லோம், அது நாலு பாணைமெடுத்துவிடத் தீரும்; வலியரக்ஷஸ்ஸாலே அபஹ்ருதையென் று வெறுத்திருக்கிறோமல்லோம்,அது அவன் றலையையறுக்கத்தீரும்; சோகநிமித்தமிதுவே- [[illegible]-வயோஸ்யாஹ்யதி வர்த்ததே'] போனகாலத்தை அம்பாலே மீட்க ஒண்ணாதே!

†நீர் பற்றிச்சொல்லுகிற விஷயத்துக்கு இந்த தோஷங்களில்லை யோவென்ன, (காமனார்தாதை) உருவமே மருவிலும் †பகைபோரும், உடம்பைப்பற்றிலும் †வூதியம் போரும். §தன்வடிவாலே†நாட்டைய டையப் பகட்டித்திரியு மவனுக்கும் உத்பத்தி ஸ்த்தாநம். †தன்கை யில் காட்டார் படுவதடங்க அவன்றான் இவன்கையிலே படும். (உ) "[illegible] - ஸாக்ஷாந்மந்மதமந்மத:". (நம்முடையடிகள்) கீழில் விஷயங்களுக்குச் சொன்ன குற்றமில்லாததுவேயன்று இது க்குவாசி, அவை அப்ராப்தவிஷயம், இது ப்ராப்தவிஷயம். (நம்மு டையடிகள்) ஸர்வஸ்வாமி.

(தம்மடைந்தார் மனத்திருப்பார்) வடிவைக்காட்டித் துவக்கிக் கையிலுள்ளதடங்க அபஹரித்து உடம்புகொடாதே எழுவாங்கியி ருக்கையன்றிக்கே, ஆசாலேசமுடையார் நெஞ்சுவிட்டுப் போயிரு க்கமாட்டாதவன். †கலவிருக்கையான பரமபதத்தையும் விட்டு நெ ஞ்சே கலவிருக்கையாகக் கொள்ளும். (தம்மடைந்தார் மனத்திரு ப்பார் நாமம்)†இவ்வர்த்த மித்தனைக்கும் வாசகமான திருநாமம். தே ஹமூனமும், ஸர்வஸ்வாமித்வமும், ஸௌலப்யமும், வாத்ஸல்யமு மிறே இதுக்கு அர்த்தமாயிற்றது. (நாணுய்ய நான் கண்டுகொண் டேன்) (ரு) "[illegible] - அஸந்நேவ" என்று முடியும்படியான

மேலுக்கவதாரிகை (நீர்பற்றி) இத்யாதி. (பகை)-ஸாரம். (வூதியம்போ ரும்)-வ்ருத்தியுமுண்டாமென்றபடி. "[illegible]-காமயதீதிகாம:" என்ற வ்யுத்பத்தியை யுட்கொண்டு அருளிச்செய்கிறார், (காட்டை) இத்யாதி. காம னுக்குத் தாதை என்றத்தாலே - காமன் அழகுக்குத் தோற்றுப் பிள்ளையானு னென்று தோற்றுகையாலே அருளிச்செய்கிறார், (தன்கையில்) இத்யாதி.

"மனத்தேயிருப்பார்" என்று ஸாவதாரணமாக்கி, பரமபதத்திலிருப்பு இல்லையோவென்ன; அருளிச்செய்கிறார், (கலவிருக்கையான) இத்யாதி. (இவ்வர்த்தமித்தனைக்கும்) என்றது-"காமனார்" இத்யாதி பதத்ரயார்த்தமித்த

(க) ரா-யு-இ-இ. (உ) பாகவதம்-கo-ருஉ-உ. (ரு) தைத்தி-ஆந-

§ "காட்டைபடையத் தன்வடிவாலே" என்று அரும்பதத்துக்குப்பாடம்.

மூ —வென்றியே வேண்டி வீழ்பொருட் கிரங்கி
வேற்கணார் கலவியே கருதி
நின்றவா நில்லா நெஞ்சினையுடையே
னென்செய்கேன் நெடுவிசும்பணவும்
பன்றியா யன்று பாரகம் கீண்ட
பாழியா னாழியா னருளே
நன்று நானுய்ய நான் கண்டு கொண்டேன்
நாராயணாவென்னும் நாமம். (ச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வென்றியே | ஜயத்தையே | | களது |
| வேண்டி | அபேக்ஷித்து [ள | கலவியே | ஸம்ஶ்லேஷத்தையே |
| வீழ் | நசிக்குந்தன்மையுள் | கருதி | நினைத்து |
| பொருட்கு | தநத்துக்கு | நின்றவாநில்லா | ஒன்றிலும் நிலைபெற் |
| இரங்கி | துக்கித்து | | றிராத |
| வேல்கணார் | வேல்போன்ற கண் | நெஞ்சினை | நெஞ்சை |
| | ணையுடைய ஸ்த்ரீ | உடையேன் | உடையநான் |

நான் உஜ்ஜீவிக்கும்படி கண்டுகொண்டேன். (நான் கண்டுகொண்டேன்) †இனிக்காட்.சி†யில்லையோ! என்னும்படி கை கழிந்தநான், உத்தேஶ்யஸித்தி உண்டாகப்பெற்றேன். †"இனிஸத்தை உண்டாகமாட்டாது, காட்சியுண்டாகமாட்டாது" என்னும்படியான நான் உஜ்ஜீவிக்கவும்பெற்று, காணவும் பெற்றேனென்கிறார். †(நானுய்யநான்) என்று இருகால் சொல்லுகிறது - லாபத்தால் வந்த ப்ரீதிக்குப் போக்குவிட்டுச் சொல்லுகிறார். (நாராயணாவென்னும் நாமம்) (க)†"[illegible] -சாந்தோதாந்த உபரதஸ்திதிக்ஷுஸ்ஸமாஹிதோ பூத்வாத்மந்யேவாத்மாநம் பஶ்யேத்" என்று சமதமாத்யுபேதர் சொல்லக்கடவ திருநாமத்தைச் சொல்லப்பெற்றேன். †"சேமமே வேண்டித் தீவினைபெருக்கித் தெரிவைமாருருவமே மருவி" என்று அநாத்மகுணோபேதனாய்ப் போந்த நான் ஆத்மகுணோபேதர் பெறும் பேற்றைப்பெற்றேன். (ரு)

னைக்குமென்றபடி. இரண்டாம் நானுக்கர்த்தம், (இனி) இத்யாதி. (இல்லையோ) என்றது - இல்லையே என்றபடி. கீழிரண்டு வாக்யத்தில்சொன்ன தாத்பர்யத்தையும் கூட்டி ஒரு நானுக்கே கருத்தாக வருளிச்செய்கிறார், (இனிஸத்தை) இத்யாதி. ஆனால் இருகால் சொல்லுவானென்னென்னும் சங்காநுவாதபூர்வகம் பரிஹரிக்கிறார், (நானுய்ய) இத்யாதி. "மனத்திருப்பார் நாமம் நான்கண்டுகொண்டேன்" என்று அந்வயித்திருக்கவும், "நாராயணாவென்னும் நாமம்" என்றத்துக்குக் கருத்தருளிச்செய்கிறார், (சாந்த:) இத்யாதி. "நான் கண்டுகொண்டேன்" என்று அநுஷங்கித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார், (சேமமே) இத்யாதி. ... ... ... ... ... ... (ரு)

(க) ப்ருஹதா - ௬ - ௪.

| | | | |
|---|---|---|---|
| என்செய்கேன் என்ன செய்வேன்; | (உன்னைப் பெறுகைக்கு ஈடான ஓர்உபாயமும் செய்யவல்லேனல்லேன்) | கீண்ட | உத்தரித்த |
| | | பாழியான் | மிடுக்கையுடையனான |
| | | ஆழியான் | ஸர்வேஸ்வரனது |
| | | அருளே | க்ருபையாலே |
| | | நான் | விஷயப்ரவணனாய்ப் போந்த நான் |
| அன்று | பூமியைப்ரளயம் கொண்ட அந்நாளிலே | நன்று | செவ்வையாக |
| | | உய்ய | உஜ்ஜீவிக்கும்படி |
| | | நாராயணா என்னும்நாமம் | நாராயணா என்ற திருநாமத்தை |
| நெடு | உயர்ந்த | | |
| விசும்பு | ஆகாசத்தை | நான் | அபிமானியாயிருந்த நான் |
| அணவும் | தழுவும்படிவளர்ந்த | | |
| பன்றியாய் | வராஹரூபங்கொண்[டு] | கண்டுகொண்டேன் | அறியப்பெற்றேன். () |
| பாரகம் | பூமியை | | |

வ்யா.—நாலாம்பாட்டு.—(வென்றியேவேண்டி) † பிதாவாகவுமாம், ஆசார்யனாகவுமாம், வென்றியேயாயிற்று இவன் வேண்டியிருப்பது. † தன்னை யொழிந்தாரைக் கீழ்ப்படுத்தித்தான் மேலாகவாயிற்று வேண்டியிருப்பது. † தோல்வி குணமாம் விஷயத்திலே யாயிற்று வெல்ல நினைத்திருப்பது. (வீழ்பொருட்கிரங்கி) † கையில் பொருது அர்த்தமுண்டாய் அத்தாலேயிறே இவனொருவனையும் மதியாதிருப்பது. அது அஸ்திரமானபடியாலே அபஹ்ருதமாயிருக்கு

அரு —நாலாம்பாட்டு.—(வென்றியே) இத்யாதி. கீழ்ப்பாட்டிலே * சேமமேவேண்டித் தீவினைபெருக்குகைக்கு ஹேது அர்த்தேஷணையாதல் தேஹாத்மாபிமானமாதலென்று காட்டாநின்றுகொண்டு, திருமந்த்ரத்தைக் கண்டுகொண்டதுக்கு ஹேதுவையும் முக்தகண்டமாக வருளிச்செய்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

(க) "அர்த்தாதுராணாம் நகுருர் நபந்து:" என்கிறபடியே இவனுடைய அர்த்தாபிமானத்தால்வந்த மேனாணிப்பைச்சொல்லுகிறதென்று தாத்பர்யம் திருவுள்ளம்பற்றி, வென்றி-ஜயமாய், ஸ்வோத்கர்ஷம் மேலிட்டதென்று அர்த்தமாய், இது அநுதாபஹேதுவானபடியை அருளிச்செய்கிறார், (பிதா) இத்யாதி. இவ்வர்த்தம், "வென்றியே" என்கிற ஸாமாந்யநிர்த்தேசத்தாலே ஸூசிதமாகிறதென்னுமத்தைக் காட்டுகிறார், (தன்னை) இத்யாதி. இது அதிக்ரூரதோஷமானமையை உபபாதிக்கிறார், (தோல்வி) இத்யாதி. வீழ்கையே - போகையே ஸ்வபாவமான, பொருட்கு-தநத்துக்காக, இரங்கி-க்லேசித்து, என்று சப்தார்த்தமாய், ஹேதுபூர்வகம் தாத்பர்யமருளிச்செய்கிறார், (கையில்) இத்யாதி வாக்யத்ரயத்தாலே. இரண்டு



௫

மிறே, அத்தையிழந்து கூப்பிடாநிற்கும். † கௌரவ்யரா யிருப்பார் பக்கல் அபிமாநம் பண்ணக்கடவதன்றிக்கேயிருக்க அபிமாநம் பண்ணிவர்த்தித்ததுக்குமேலே இரங்கக்கடவதல்லாததுக்கு இருந்து கண்ணீர்பாய நிற்கும். † அங்ஙனன்றிக்கே, தேஹாத்மாபிமாநத்தை பண்ணித் தன்னையெல்லார்க்கும் மேலாகநினைத்துப் போந்ததுவே யன்றியே, அஸ்த்திரமான உடம்பை "நித்யமாகவேணும்" என்று சோகியாநிற்குமென்னவுமாம். (வேற்கணார் கலவியேகருதி) † கையில் அர்த்தமுண்டானகாலம் பார்யையைச் † செங்கற்சீரைகட்டிக் கூப்பிட்டுத்திரியவிடுமவன், அர்த்தமிழந்து கூப்பிடாநின்றால், அல்லாதாரோடொக்க இவனும் வினவப்புகுருமே; இவனைக்கண்டவாறே "அவ்வர்த்தத்தையெல்லாம் இட்டு ஒருபணியாகப்பூட்டிக் காணப்பெற்றிலோம்" என்று மநோரதியாநிற்கும். கெடுத்தபொன்னை இப்போது பூட்டத்தேடும். (நின்றவாநில்லா நெஞ்சினையுடையேன் என் செய்கேன்) ‡ ஊர்வசீ ஸாலோக்யத்துக்கு நாட்டங்க ஸாதநாநுஷ்டாநம் பண்ணாநிற்க, நேர்கொடுநேர் அவள்தான்வந்து உபஸ்த்தாநம்பண்ணி முன்னேநிற்க அர்ஜுநன் நமஸ்கரித்துக்கடக்க நின்றானிறே விரக்தியாலே; இப்படிப்பட்டவன், (க) "𑌚𑌞𑍍𑌚𑌲𑌂𑌹𑌿 𑌮𑌨𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌪𑍍𑌰𑌮𑌾𑌥𑌿 𑌬𑌲𑌵𑌦𑍍𑌦𑍃𑌢𑌮𑍍- தஸ்யாஹம் நிக்ரஹம்மந்யே வாயோரிவஸு துஷ்கரம்" என்று ப்ரதிகூலவாயுவைப்பிடித்துக் கூடுகட்டிலும் என் நெஞ்சைப்பிடிக்கப்போகாது என்றானிறே. † § ஒருவிஷயங்களிலே அரைக்ஷணம் கால்தாழாத நெஞ்சையுடையேனான நான், இந்நெஞ்சைப் பரிகரமாகக்கொண்டு உன்னைப் பெறுகைக்கீடான உபாயாநுஷ்டாநம் பண்ணவென்பதொன்றுண்டோ? உன்னை இழக்

---

பதங்களாலும் பலித்த அர்த்தத்தைத் தொகுத்தருளிச்செய்கிறார், (கௌரவ்யராய்) இத்யாதி. அபிமாநம் அர்த்தாபிமாந கார்யமென்றபடி. வெற்றிக்கு ஹேது-தேஹாத்மாபிமாநமென்றும், பொருள் - தேஹாத்மாபிமாநம் என்றும், பதத்வயத்துக்கு அர்த்தாந்தரமருளிச்செய்கிறார், (அங்ஙனன்றிக்கே) இத்யாதி. கலவிசெய்தென்னாதே "கருதி" என்கையாலே-அம்மநோரதமாத்ரந்தான் அர்த்தமிழந்தபோது மற்றவிஷயத்தில் நிஷ்பலமாகையாலே, பார்யாவிஷயமாக்கித் தாத்பர்யமருளிச்செய்கிறார், (கையிலர்த்தம்) இத்யாதி. இது முந்தின தாத்பர்யத்துக்குச்சேரும், பொருள் - சரீரமென்றபக்ஷத்தில், "வேற்கணார்" என்றது-ஸர்வவிஷயமாகக் கண்டுகொள்வது. (செங்கற்சீரைகட்டி)-காவிப்புடைவையுடுத்து. "நெஞ்சைப்பிடிக்க ஒண்ணாது" என்ற அர்ஜுநனுடைய உட்கருத்தை யருளிச்செய்கிறார், (ஒருவிஷயங்களிலே) இத்

---

§ ஒருவிஷயத்திலே என்றால்ஸ்வரஸம். (க) கீதை - சு - ருச.

‡ இக்கதை - பாகவதத்தில் கூ-ஸ்க-கச-அத்யாயத்தில் காண்க.

...க்குறுப்பாமித்தனே. (என்செய்கேன்) † அர்ஜுநனுக்குப் பதி லொட்டு ‡ ஓத்திலும், சோகத்தை உத்பாதித்தாற்போலே, † கண்ட தெல்லாம் இவர்க்கு பயாவஹமாயிருக்கிறபடி.

நீரிப்படியிருந்தீராகில் உமக்குப் பேற்றுக்கு † அடி எத்தாலே யென்றிருந்தீரென்ன; † ப்ரளயங்கொண்ட பூமி தன்னுடைய ரக்ஷ ணத்தில் அஸமர்த்தமாய் அத்தைரக்ஷித்தான் யாவனொருவன், அவ னாலேயென்கிறார். (நெடுவிசும்பணவும் பன்றியாயன்று பாரகங் கீண்டபாழியான் ஆழியானருளே) ப்ரளயங்கொண்டபூமிக்கு ஸ்வ ரக்ஷணத்தி லன்வய முண்டாமன்றிறே விஷயங்கொண்ட நெஞ்சையு டையேனுன நான் எனக்கு ஹிதசிந்தைபண்ணுவது. ஆகாசாவகா சம் வெளியடையும்படி விம்மவளர்ந்தவன், ரக்ஷ்யத்தினளவில்லாத படியாயிற்று ரக்ஷகனுனவன் வடிவைப்பாரித்தபடி. பூமி ப்ரளயத் திலே புக்கு முடிந்துபோகப் புக்கவாறே, நீருக்கும் சேற்றுக்கும் இறாயாத மஹாவராகமானுன். ஜலஸம்ருத்தி காணப் பணைக்கும் வடிவைக்கொண்டான் (க) [மாசுடம்பில் நீர்வாராமானமிலாப் பன் றியாம்] "மஹிஷியுடம்புபேணுதே (க) * பாசிதூர்த்தது" என்ற வாறே, காத்தனுனதானும் உடம்புபேணுதே, மாசேறின உடம்பை யுடையனுனன். (மானமிலா) ஈஶ்வரத்வாபிமாநம் § பின்னுட்டாத படியிருக்கை. மாயாம்ருகத்தைக் கண்டபோது இனத்தில்... ...வந்து மோந்துபார்த்து "விஸஜாதீயம்" என்று கடக்கப்போ... ...கிறே. அங்ஙனன்றியே (உ) "...ஆத்மாநம் மாநுஷம்மந்யே" என்கிறது † இங்குமநுவர்த்தித்தபடி. (பாரகங் கீண்ட) பூமிப்பரப்படங்க அண்டபித்தியோடே புக்குச்சேர்ந்தத் ...ஒட்டுவிடுவித்து எடுத்த. (பாழியான்) மிடுக்கையுடையவன். (ஆழியான்) † ரக்ஷிக்குமிடத்து ஒருபரிகராபேக்ஷையில்லை; ஒருபரி

---

...தி. த்ருஷ்டாந்த பூர்வகம் தாத்பர்யமருளிச்செய்கிறார், (அர்ஜுநனுக்கு) இத்யாதி. (கண்டதெல்லாம்) விஷயங்களெல்லாமென்றபடி.

(அடி) என்றவநந்தரம், எது என்றும்; உமக்குப் பேறு என்றும், அத்யா ஹாரியாது. இப்படி ப்ரஶ்நத்வயம் கண்டுகொள்வது. பூர்வார்த்தத்தை யெல் லாமுட்கொண்டு இப்பதத்துக்கு உட்கருத்தை யருளிச்செய்கிறார், (ப்ரளயங் கொண்ட) இத்யாதி. (இங்குமநுவர்த்தித்தபடி) என்றது - "ஆத்மாநம் வரா ஹம் மந்யே" என்று அநுவர்த்தித்தபடி. "பாழியான் - ஆழியான்" என்ற பதங்களுக்கும் க்ரமேண பாவமருளிச்செய்கிறார், (ரக்ஷிக்கும்) இத்யாதி ...ஆத்தாலே. அடியேது என்ற ப்ரஶ்நத்துக்கு உத்தரமானபடியை

---

‡ ஓத்து - அத்யாயம். (க) நா-தி-கக-அ.

§ பின்னுட்டுகை - அநுஸரிக்கை. (உ) ரா-யு-க௨0-க௨.

மூ.—கள்வனே னானேன் படிறு செய் திருப்பேன்
கண்டவா திரிதந்தே னேலும்
தெள்ளியே னானேன் செல் கதிக் கமைந்தேன்
சிக்கெனத் திருவருள் பெற்றேன்
உள்ளெலா முருகிக் குரல் தழுத் தொழிந்தேன்
உடம்பெலாம் கண்ணநீர் சோர
நள்ளிரு ளளவும் பகலும் நா னழைப்பன்
நாராயணா வென்னும் நாமம். (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கள்வனேன் னேன் | ஆ (இதற்குமுன், அவனுடைமையான ஆத்மாவைக்) களவுகண்டேன்; | திரிதந்தேனேலும் | சால்தாழ்ந்து போந்தேனாகிலும் ]தை |
| படிறு | மிக்கதீம்பை | திருஅருள் | (அவன்) கடாக்ஷத் |
| செய்து இருப்பேன் | எப்போதும் செய்துகொண்டிருப்பேன்; | சிக்கென | த்ருடமாக [லே) |
| கண்டஆ | கண்டவிஷயங்கள் தோறும் | பெற்றேன் | அடைந்தேன்;(அத்தா |
| | | தெள்ளியேன் ஆனேன் | (அவன்சேஷி, நாம் சேஷபூதர் என்னும்) விவேகமுடையேனானேன்; |

கரங்கொண்டு ரக்ஷிக்கப் பார்த்தானாகில் அதுக்கீடான பரிகாரமுடையவன். † (அருளே) அபிமாநம் பண்ணக்கடவதல்லாத விஷயங்களிலே அபிமாநம் பண்ணியும், சோகிக்கக்கடவதல்லாததுக்கு சோகித்தும், நரகாவஹமான விஷயங்களை அநுபவிக்க மநோரதித்தும், "நின்றவா நில்லா நெஞ்சினையுடையேன்" என்று இப்படி கைகழிந்த வென்னை, "இனி இவன் தானாகமீளமாட்டான்" என்று அதுவே ஹேதுவாக எடுக்க ஒருப்பட்ட ஸர்வேஶ்வரன் க்ருபையாலே. அருளையென்னவுமாம், அருளாலே யென்னவுமாம். (நன்றுநானுய்ய) "வென்றியேவேண்டி வீழ்பொருட்கிரங்கி வேற்கணார்கலவியே கருதி" என்றுபோந்தவன் சுத்தனானேன் என்று தெரியாதபடி, அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தனும்படியானேன். (நான் கண்டுகொண்டேன் நாராயணாவென்னும் நாமம்) "வென்றியேவேண்டி வீழ்பொருட்கிரங்கி" என்று அபிமாநமும் லோபமுமிறே சொல்லிற்று; இப்படி போந்தநான், அமாநித்வாத்யாத்ம குணோபேதர்பெறும் பேற்றைப் பெற்றேன். (ச)

யருளிச்செய்கிறார், (அருளே) இத்யாதி. சப்தநிர்வாஹபேதமொழிய அர்த்த பேதமில்லை. முந்தினபக்ஷத்தில் மூலத்தில் "அருளே" என்ற வசநதரம், அடியாக என்று அத்யாஹரித்து அந்வயம் கண்டுகொள்வது. ... ... (ச)

| | | | |
|---|---|---|---|
| செல் | (அர்ச்சிராதிமார்க்கத்தாலே) செல்லக்க | கண்ணநீர் சோர | ஆநந்தபாஷ்பம் பெருகும்படியாக |
| கதிக்கு | பரமபதத்துக்கு [டவ | நள் | செறிந்த |
| அமைந்தேன் | ஆளாம்படி பூர்ணனானேன்; (பின்பு) | இருளளவும் | ராத்ரிமுழுதும் |
| | | பகலளவும் | பகல்முழுதும் |
| உள் எலாம் | உள்ளேயுண்டான (எலும்பும் நரம்புமான) எல்லாம் | நாராயணாவென்னும்நாமம் | நாராயணனென்கிற திருநாமத்தை |
| | | நான் | அடியேன் ட்[ன். |
| உருகி | நீராய்க்கரைந்து | அழைப்பன் | அழைக்கப்பெற்றேற |
| குரல் | த்வநி | | கண்டஆறு என்பது கண்டஆளனவும் |
| தழுத்து ஒழிந்தேன் | தழுதழுக்கும்படியானேன்; | | எல்லாம்என்பது எலாம் எனவும்கிடக்கிறது. (ரு) |
| உடம்புஎலாம் | சரீரமெங்கும் | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (கள்வனேனானேன்) † பிறகு களவு கண்டவனிற்காட்டில் ரத்நாபஹாரம் பண்ணினவனுக்குப் பாபம் ப்ரசுரமாயிருக்கும்; சூத்ரதநத்தை அபஹரித்தவனிற்காட்டில் ப்ராஹ்மணதநத்தை அபஹரித்தவனுக்குப்பாபம் † விஞ்சியிருக்கும்; த்ரவ்யங்களில்தலையான ஆத்மவஸ்துவையாயிற்று அபஹரித்தது, ஸர்வேஶ்வரனுடைமையையாயிற்று "என்னது" என்றுபோந்தது.- (படிறுசெய்திருப்பேன்) † மிடறுநின்றால் † சொறியவொண்ணாதாற்போலே, §பஶ்யதோஹரனானேன்.. † நான் தேஹாத்மாபிமாநம் பண்ணிப்போந்ததுவேயன்றிக்கே, "ஈஶ்வரசேஷம் இவ்வாத்மவஸ்து" என்றிருப்பானொராஸ்திகனுண்டாகில், "தேஹாதிரிக்தமாயிருப்பதொருவஸ்துவாவதென்? ஈஶ்வரனுவதென்?" என்று காணக்காண

அரு.—அஞ்சாம்பாட்டு. — (கள்வனேன்) இத்யாதி. கீழ்ப்பாட்டிலே "வென்றியேவேண்டி" இத்யாதிகளுக்கெல்லாம் மூலம் தேஹாத்மாபிமாநமேயென்று திருவுள்ளம்பற்றி அத்தை இப்பாட்டிலே யருளிச்செய்கிறாரென்றும், ஆழியானருளாலே தாமுஜ்ஜீவித்த ப்ரகாரங்களை அருளிச்செய்கிறாரென்றும் ஸங்கதியையுட்கொண்டு "கள்வனேனானேன்" என்று பரிதபிக்கைக்குக் களவு க்ரூரதமமாகவேண்டுகையாலே, அத்தை நிரூபிக்கிறார், (பிறகு) இத்யாதி. (விஞ்சியிருக்கும்) என்றவநந்தரம், ஆகையாலே என்றுசேஷம். படிறு - திம்பாய், அத்தை, செய்வேனென்னாதே, "செய்திருப்பேன்" என்கையாலே, தடையறச்செய்துகொண்டிருப்பேனென்று, அதுக்கு ஸத்ருஷ்டாந்த தாத்பர்யமருளிச்செய்கிறார், (மிடறு) இத்யாதி. (சொறியவொண்ணாதாற்போலே) என்றது - சொறிந்து போக்கவொண்ணாதாற்போலேயென்கை. பஶ்யதோஹரத்வத்தை விவரிக்கிறார், (நான்) இத்யாதி. "கண்டவா" என்ற

§ பஶ்யதோஹரன் - பார்த்துக்கொண்டிருக்கும்போதே களவுசெய்பவன்,

ப்பறித்தேன். (கண்டவாதிரிதந்தேனேலும்) †முன்னடிதோற்றமையாலே கைவந்தபடி பரிமாறினேனித்தனைபோக்கி, சாஸ்த்ரங்கள் "ஆகாது"என்றத்தை அறிந்தும் மீண்டிலேன். (க) [ந்ருபஸ்ர:-ந்ருபசு:] அல்லாதவற்றோடு பரிமாறுமத்தை ஜநகிபக்கலிலேயும் பரிமாறத் தேடும்.

(தெள்ளியேனானேன்) இப்படியிருக்கச்செய்தே, ஸாராஸாரவிவேகம்பண்ணிச் செய்யக்கடவது செய்து அல்லாதது தவிர்ந்து போருவாரைப்போலே, விவேகமுடையேனானேன். (செல்கதிக்கமைந்தேன்) நித்ய ஸம்ஸாரியாகைக் குறுப்பானவற்றைச்செய்து போந்தநான், "இனியவன் ஸம்ஸாரத்துக்கு ஆளாகமாட்டான், பரமபதத்துக்காளாமத்தனை" என்னும்படி சமைந்தேன். †செல்லக்கடவ கதியுண்டு - பரமபதம், அங்குத்தைக்கு ஆளாம்படி பூர்ணனானேன். † "கண்டவாதிரிதந்தேன்" என்றீர், "தெள்ளியேனானேன்," என்றீர், வ்யாஹதபாஷணமாயிருந்தது! என்ன; (சிக்கெனத் திருவருள்பெற்றேன்) இனிமீளாதபடி அருளைப்பெற்றேன்.

நீர் †பெற்றபேறுதானென்னென்ன; (உள்ளெலாமுருகிக்குரல் தழுத்தொழிந்தேன்) உள்ளெலும்பும் நரம்புமற உருகி, அதுதான் த்வநியில் † தழுதழுப்பிலேதெரியும்படியானேன். (உடம்பெலாம் கண்ணநீர்சோர) (உ) "ஆஹ்லாதசீதநேத்ராம்பு: புலகீக்ருதகாத்ரவாந் - ஆஹ்லாதசீதநேத்ராம்பு: புலகீக்ருதகாத்ரவாந்". உடம்படங்க †பஞ்சஸரமும் த்ரிஸரமுமிட்டாற்போலே கண்ணநீர் வெள்ளமிட்டபடி. (நள்ளிருளளவும் பகலும் நானழைப்பன் நாராயணாவென்னும் நாமம்) † விஷயாநுபவம்பண்ணிக் களித்திருக்கும்போதோடு, விஷயாநுபவம் பண்ணுகைக்கு அர்த்தார்ஜநம்பண்ணும்போதோடுவாசியற எனக்குத்திருநாமம் சொல்லுகையே யாத்ரையாகப்பெற்றேன். (ரு)

---

துக்குக்கேட்பார் வ்யாவர்த்யராகையாலே, அத்தையருளிச்செய்கிறார், (முன்னடி) இத்யாதி.

சப்தார்த்தம், (செல்லக்கடவ) இத்யாதி. மேலுக்கவதாரிகை, (கண்டவா) இத்யாதி.

* திருவருள்பெற்றத்தாலே நீர்பெற்றதான * தெள்ளியேனாகையும் * செல்கதிக்கமைகையுமாகிற பேறு எங்ஙனே? என்னும் ப்ரஶ்நத்தை அநுவதிக்கிறார், (நீர்) இத்யாதி. (தழுதழுப்பிலே) - கத்கதஸ்வரத்திலே. அஞ்சுமுத்துத் தாவடமொன்றாயிருக்குமது-(பஞ்சஸரம்) என்றது. விழ என்னாதே, "சோர" என்றத்தாலே பலித்த அர்த்தமிதுவென்று கொள்வது. "நள்ளிருளளவும்" என்றதுக்கு, "நள்" என்று சப்தவிசேஷமாய், அது எழுந்த மத்யராத்ரத்திலுமென்று சப்தார்த்தமாய், காலத்தை இப்படி அருளிச்செய்தவருக்கு உட்கருத்தருளிச்செய்கிறார், (விஷய) இத்யாதி. (ரு)

---

(க) ஸ்தோ - ர - ௩௮. (உ) விஷ்ணுதத்வம்.

மூ.—எம்பிரா னெந்தை யென்னுடைச் சுற்ற
மெனக்கர செனனுடை வாணுள்
அம்பினு லரக்கர் வெருக்கொள நெருக்கி
யவருயிர் செகுத்த வெம் மண்ணல்
வம்புலாஞ் சோலை மாமதிள் தஞ்சை
மாமணிக் கோயிலே வணங்கி
நம்பிகா ளுய்ய நான்கண்டு கொண்டேன்
நாராயணு வென்னும் நாமம். (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நம்பிகாள்! | (பகவத்குணநுபவத்தாலே) பூர்ணராயிருப்பவர்களே! [ய் | | வேஸ்வரன் நித்ய வாஸம்பண்ணும |
| எம்பிரான் | எனக்கு உபகாரகனு | வம்பு | பரிமளம் [தாய் |
| எந்தை | எனக்குத்தமப்பனுய் | உலாம் | வீசாநின்றுள்ள |
| என்னுடைச்சுற்றம் | எனக்கு எல்லாஉறவுமுறையுமாய் | சோலை | பொழிலையும் |
| எனக்குஅரசு | என்னை ஆண்டவனுய் | மா | நீண்ட |
| என்னுடைவாழ்நாள் | என்னுடைய ஆயுஸ்ஸாய் | மதிள் | மதிளையுமுடைய |
| அரக்கர் | ராக்ஷஸர்கள் | தஞ்சைமாமணிக்கோயிலே | தஞ்சைமாமணிக்கோயிலேயே |
| வெருக்கொள | அஞ்சும்படியாக | வணங்கி | ஸேவித்து |
| அம்பினுல் | பாணங்களினுலே | நான்உய்ய | (உங்களைப்போலே) நானும் உஜ்ஜீவிக்கும்படி |
| நெருக்கி | நெருங்கப்பண்ணி | | |
| அவர் உயிர் | அவர்கள் ப்ராணனை | நாராயணு என்னும்நாமம் | நாராயணுவென்கிற நாமத்தை |
| செகுத்த | முடித்த | கண்டு கொண்டேன் | அறியப்பெற்றேன். () |
| எம் அண்ணல் | எம்ஸ்வாமியான ஸர் | | |

வ்யா.—ஆரும்பாட்டு.-இத்தை நீர்போர ஆதரியாநின்றீர், இது உனக்கு அர்த்தமென்னென்னச் சொல்லுகிருர். † இதினுடைய பாடத்தைஜபித்து அத்தாலே பலம்பெறவிருத்தல், இத்தாலே பாபத்தைப்போக்கிக் கர்மயோகத்துக் குடலாக்குதல் செய்கையன்றிக்கே

அரு.—ஆரும்பாட்டு.—(எம்பிரான்) இத்யாதி. "நம்பிகாள்" என்றபதம் விஷயாந்தரபரரைச் சொல்லுமளவில், இதுக்கு-அர்த்தஜிஜ்ஞாஸையாலே கேட்டார்களென்றும், பகவத்பரரானபோது, இவருடைய அதிகாரசோதநார்த்தம் ப்ரயத்நம்பண்ணினார்களென்றும் கண்டுகொள்வது. இவ்வர்த்தத்தை யருளிச்செய்கைக்குத் தானுட்கருத்தை யருளிச்செய்கிருர், (இதினுடைய) இத் [illegible].

ஆர்த்தாநுஸந்தாநத்தாலே பேறு என்றுதமக்குப் பக்ஷமாகையாலே அர்த்தத்தைச்சொல்லுகிறார். நம்மாழ்வாரும், திருமந்த்ரம் ஓரிடத்திலேப்ரஸ்துதமானால் முன்னேயாதல் பின்னேயாதல் அர்த்தத்தைச் சொல்லிப்போருவர் அர்த்த ப்ராதாந்யம்தோற்ற, ஜ்ஞாநம் மோக்ஷமாகவேண்டுகையாலே.

(எம்பிரான்) எனக்கு உபகாரகன். (எந்தை) எனக்கு ஜநகன். (என்னுடைச்சுற்றம்) என்குடற்றுடக்கான எல்லா வுறவுமுறையுமானவன். (எனக்கரசு) என்னை † வன்னியமறுத்து ஆண்டவன். (என்னுடைவாணாள்) என்னுடைய ஆயுஸ்ஸு. (அம்பினாலரக்கர் வெருக்கொளநெருக்கி அவருயிர் செகுத்தவெம்மண்ணல்) ஸங்கல்பத்தாலன்றிக்கே அம்பாலே ராக்ஷஸரஞ்சும்படி நெருக்கி அவர்களுயிரைமுடித்த என் ஸ்வாமி, ஸ்வாமித்வத்தோடே தலைக்கட்டிற்றாய்நின்றது. †இத்தால் சொல்லிற்றாயிற்று (க) "మాతా పితా భ్రాతా నివాస శ్శరణం సుహృద్గతిర్నారాయణః - மாதாபிதா ப்ராதாநிவாஸஶ்ஶரணம்ஸுஹ்ருத்கதிர்நாராயண:" என்கிறபடியே.

இதுதான் உமக்குவந்தபடி என்னென்ன; (வம்புலாம்சோலை மாமதிள் தஞ்சை மாமணிக்கோயிலே வணங்கி) † நித்யவஸந்தமான சோலையையும் மாமதிளையுமுடைத்தான தஞ்சைமாமணிக்கோயிலே வணங்கிவந்தது, "எல்லாவுறவுமுறையும் தானே" என்றுதோற்றும்படி அவன்வந்துநிற்கிற ஸௌலப்யத்தை அநுஸந்திக்கையாலே வந்தது. (நம்பிகாள்) பகவத்வ்யதிரிக்த விஷயங்களைப்பற்றி தேஹபோஷணபரராயிருக்கிற வவர்களைச்சொல்லிற்றாதல்; பகவத்குணாநுபவம்பண்ணி அத்தாலே பூர்ணராயிருக்கிற வவர்களைச்சொல்லிற்றாதல். (உய்ய நான் கண்டுகொண்டேன்) நீங்களெல்லாம் புறம்பே போய் க்லேசப்படாநிற்க நானுஜ்ஜீவிக்கும்படி காணப்பெற்றேனென்னுதல்; நீங்களுஜ்ஜீவிக்கும் விரகறிந்து கரையேறினாற்போலே நானும் கரையேறப்பெற்றேனென்னுதல். (நாராயணாவென்னும் நாமம்) ஸர்வவிதபந்துவுமவனே என்கிற அர்த்தத்துக்கு வாசகமான திருநாமத்தைக்காணப்பெற்றேன். (சு)

---

(வன்னியம்) - குறும்பு. (இத்தால்-நாராயண: என்கிறபடியே - சொல்லிற்றாயிற்று) என்று வாக்யத்தை அந்வயித்துக்கொள்வது.

ததீயமானகோயிலையே வணங்கி என்றும் கோயிலிலே யிருக்கிறவனை யென்று லக்ஷணையாக்கியும் இரண்டர்த்தமருளிச்செய்கிறார், (நித்ய) இத்யாதி வாக்யத்வயத்தாலே ... ... ... ... ... ... (சு)

---

(க) ஸுபாலோபநிஷத்

மூ.—இற்பிறப் பறியீ ரிவரவ ரென்னீ
ரின்னதோர் தன்மையென் றுணரீர்
கற்பகம் புலவர் களைகணென் றுலகில்
கண்டவா தொண்டரைப் பாடும்
சொற்பொரு ளாளீர் சொல்லுகேன் வம்மின்
சூழ்புனற் குடந்தையே தொழுமின்
நற்பொருள் காண்மின் பாடிநீ ருய்மின்
நாராயணா வென்னும் நாமம். (எ)

| பதம். | உரை. |
|---|---|
| உலகில் | இப்பூமியிலுள்ளார்க்கு |
| தொண்டரை | இழிதொழில்செய்து திரியுமவர்களை |
| இல் | (அவர்களுடைய) க்ருஹவைலக்ஷண்யத்தையும் |
| பிறப்பு | ஜந்மவைலக்ஷண்யத்தையும் |
| அறியீர் | அறியாதவராய் |
| இவர் | இப்போது ஸம்பந்நரான இவர்கள் |
| அவர் | முன்பு தரித்ரராயிருந்த அவர்கள் |
| என்னீர் | என்று அறியமாட்டாதவராய் |
| தன்மை | இவர்கள் ஸ்வபாவம் |
| இன்னதுஎன்று | இப்படிப்பட்டதொன்றுஎன்று |
| உணரீர் | அறியமாட்டாதவராய்க்கொண்டு |
| கற்பகம்! | வேண்டிற்றெல்லாம் தரும் கல்பவ்ருக்ஷம்போலே உதாரரானவர்களே! |
| புலவர் | கற்றோர்க்கு |
| களைகண்! | ரக்ஷகரே! |
| என்று | என்றுசொல்லி |
| கண்டவா | நெஞ்சில்தோற்றினபடியே |
| பாடும் | கவிபோற்றிசெய்யுமவராய் |
| சொல் | சப்தத்துக்கும் |
| பொருள் | அர்த்தத்துக்கும் |
| ஆளீர் | நிலவரான நீங்கள் |
| வம்மின் | வாருங்கள்; |
| சொல்லுகேன் | (ப்ராப்தவிஷயத்தை நீங்களுமிழக்கவொண்ணாதபடி) சொல்லுகிறேன்; |
| நீர் | என்னோடொத்த நீங்கள் |
| புனல் | ஜலத்தாலே |
| சூழ் | சூழப்பட்ட |
| குடந்தை | திருக்குடந்தையிலெழுந்தருளியிருக்கும் ஆராவமுதனை |
| தொழுமின் | ஸேவியுங்கள்; |
| நாராயணா என்னும் | "எல்லாவுறவுமுறையுமவனே" என்கிற அர்த்தத்துக்கு வாசகமான |
| நாமம் | திருநாமத்தை |
| பாடி | வாயாரச்சொல்லி |
| உய்மின் | உஜ்ஜீவியுங்கள்; |
| நல்பொருள் காண்மின் | இது பரமார்த்தங்கிடீர். (எ) |

அநு.—ஏழாம்பாட்டு.—(இற்பிறப்பு) இத்யாதி. கீழிற் பாட்டிலே "நம்பிகாள்" என்று தோஷபூர்ணரைச்சொன்னபக்ஷத்துக்கு அநுகுணமாக, இப்பாட்டிலே விசேஷஜ்ஞரைவிட்டு, "சொற்பொருளாளீர்" என்று விசேஷிக்

வ்யா.—ஏழாம்பாட்டு.--†அல்லாதார் தானிழக்கிறார் அவிசேஷஜ்ஞராகையாலே, விசேஷஜ்ஞராய் என்னோடு†ஸஜாதீயராய்க் கவிபாடித்திரிகிற நீங்களிழக்கிற தென்னென்கிறார்.

(இற்பிறப்பறியீர்) †அவர்கள் கார்ஹஸ்த்யத்தில் நின்றநிலை அறியீகோள், அவர்கள் ஜந்மமறியீகோள். (இவரவரென்னீர்)†பண்டு தரித்ரனாய் க்லேசப்பட்டுப் போந்தானொருத்தன் இப்போது ஜீவிக்கப்புக்கால் "இது இவனளவன்றிக்கே யிருந்தது; இது வேறே யொருவனடியாகவேணும்" என்று அறியமாட்டாதே, ஸ்ரிய:பதியைப்போலே பிறப்பேபிடித்து ஸ்ரீமானாய்ப்போந்தானாக நினைத்திருப்புதிகோள். அன்றிக்கே, (இவரவரென்னீர்) என்று ஒருசொல்லாய், ஒருவர்வாசியு மறியீரென்னருமாம். (இன்னதோர் தன்மையென்றுணரீர்) இவனுக்குள்ளவளவு இது என்றறியமாட்டீர்.

(கற்பகம்) †"நினையாதே கொடுக்கும்" என்புதிகோள். (புலவர் களைகணென்று) விசேஷஜ்ஞரா யிருப்பார்சிலர் அர்த்தித்துவந்தால் ஒளித்துப்போமவனை, "எங்களுக்கு நிர்வாஹகன்" என்பர்கள். (உலகில் கண்டவா தொண்டரைப்பாடும்) †லோகத்தில் நீசவர்த்திகளாய்த்திரிவாரைக் கண்டவா பாடும் - ப்ரதிபந்நங்களைச் சொல்லித் திரிகிற. (சொற்பொருளாளீர்) சப்தத்துக்கும் அர்த்தத்துக்கும்

---

கையாலே பலித்தஸங்கதியையருளிச்செய்கிறார், (அல்லாதார்) இத்யாதி. (ஸஜாதீயராய்) என்றது - ஸத்ருசராயென்றபடி. கீழே "நம்பிகாள்" என்று - பகவத்ப்ரவணரானபோது, அவர்களைப்பார்த்து வார்த்தைசொன்னவர், க்ருபையாலே லோகத்திலே கண்வைத்து உபதேசிக்கப்பார்த்தாராய், அதிலே "சொற்பொருளாளீர்" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார், (அல்லாதார்) இத்யாதி என்று கண்டுகொள்வது.

"இல் - அறியீர், பிறப்பு அறியீர்" என்று சப்தார்த்தமாய், அத்தையருளிச்செய்கிறார், (அவர்கள்) இத்யாதி வாக்யத்வயத்தாலே. இவர் - இப்போது ஸம்பந்நரானவர்கள், அவர்-முன்பு தரித்ரராயிருந்தார் என்னீரென்று சப்தார்த்தமாய், ப்லிதார்த்த மருளிச்செய்கிறார், (பண்டு) இத்யாதி வாக்யத்வயத்தாலே.

(நினையாதே) என்றது-தேயவஸ்துவின் உத்கர்ஷத்தைநினையாதே என்றபடி; ஸ்வப்ரயோஜநத்தை நினையாதே என்றுமாம்; யாசகனுடைய குறைகளை நினையாதே என்றுமாம். உலகில் தொண்டரை - ப்ருத்யக்ருத்யம் பண்ணுமவரை, கண்டவாபாடுமென்றர்த்தமாயருளிச்செய்கிறார், (லோகத்தில்) இத்யாதி.

அ. கற்றிலேன் கலைகளைம்புலன் கருதும்
கருத்துளே திருத்தினேன் மனத்தைப்
பெற்றிலே னதனால் பேதையேன் நன்மை
பெருநிலத்தா ருயிர்க் கெல்லாம்
செற்றமே வேண்டித் திரிதருவேன் தவிர்ந்தேன்
செல்கதிக் குய்யுமா றெண்ணி
நற்றுணையாகப் பற்றினே னடியேன்
நாராயணா வென்னும் நாமம். (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கலைகள் | சாஸ்த்ரங்களை | கருத்துள் | விஷயங்களிலே |
| கற்றிலேன் | (ஒராசார்யனிடத்தில்) அப்யஸித்தேனல்லேன்; | மனத்தை | மாஸ்ஸை [தேன்; |
| | | திருத்தினேன் | வலியமூட்டிப்போக் |
| | | அதனால் | இப்படி ருகையா மல |
| ஐம்புலன் | ஐந்து இந்த்ரியங்கள் | | |
| கருதும் | நினைக்கிற | பேதையேன் | அறிவிலியானநான் |

லைவரானநீங்கள். †சொல்லுடைமைக்கு உங்களிற் காட்டிவில்லை, ப்ரமேயஜ்ஞாநமுடையார் உங்களத்தனையில்லை.

(சொல்லுகேன்வம்மின்) உங்கள் ப்ரமேய ஜ்ஞாநத்துக்கும் சொல்லுடைமைக்கும் பாத்தம் போரும்படியான விஷயத்தை நான் காட்டித்தரவாருங்கோள். (சூழ்புனல் குடந்தையே தொழுமின்) ஒராறும் படைவீடும் வேணுமே உங்களுக்குக் கவிபாடும் போது. ஆறும் மலையும் படைவீடும் உள்ளிட்ட பரிகரங்களும்வேணுமே. (நற்பொருள் காண்மின்) நன்றான அர்த்தத்தைக் கண்டு கொள்ளுங்கோள். † பேறும் தானேயாய் தன்னைத்தருவதும் தானேயாயிருக்கை. (பாடிநீருய்மின் நாராயணாவென்னும் நாமம்) வாச்யங்களில் தலையானத்தைக் காட்டித்தந்தேன், அதுக்கு வாசகமான திருநாமத்தைப்பாடி உஜ்ஜீவியுங்கோ ளென்கிறார் (க)†“ ஸ:ப்ரஹ்ம ஸ ஶிவ: ஸேந்த்ர: - ஸோக்ஷர: பரம: ஸ்வராட்” என்றதிறே † இதினுடைய † ஸங்க்ரஹத்தை. வாசகங்களில் தலை அகாரம், வாச்யங்களில் தலை † கீழ் நான்சொன்னது.

தாத்பர்யார்த்தம், (சொல்லுடைமைக்கு) இத்யாதி.

நன்மையை விவரிக்கிறார், (பேறும்) இத்யாதி. நாராயணபதம் நற்பொருளுக்கு வாசகமென்னுமதக்கு ப்ரமாணத்தை யருளிச்செய்கிறார், (ய:) இத்யாதி. (இதினுடைய) என்றது - நாராயணபதத்தினுடைய வென்றபடி. (ஸங்க்ரஹத்தை) - அகாரத்தை. (கீழ்நான்சொன்னது) என்றது “நற்பொருள்” என்றதென்றபடி ... ... ... ... ... (எ)

(க) தைத்தி - நாரா - உ௮.

| | | | |
|---|---|---|---|
| நன்மை | நல்லநினைவை | தவிர்ந்தேன் | இவையெல்லாம் போகப்பெற்றேன்; |
| பெற்றிலேன் | பெறாதவனானேன்; | செல்கதிக்கு | (அர்ச்சிராதி மார்க்கத்தாலே) செல்லக்கடவ பரமபதத்துக்குப்போய் |
| பெரு | பெரிய | | |
| நிலத்து | பூமியில் | | |
| ஆர் | நிரம்பியிருக்கிற [கும் | | |
| உயிர்க்குஎல்லாம் | எல்லாப்ராணிகளுக் | | |
| செற்றமே | ஹிம்ஸைபண்ணும் உபாயத்தையே | உய்யும்ஆறு | உஜ்ஜீவிக்கும் வகையை |
| வேண்டி | நினைத்து | எண்ணி | நினைத்து |
| திரிதருவேன் | திரிந்துக்கொடுபோந்தேன்; (இப்படிநெடுங்காலம் திரிந்தேனாகிலும், அவன்கடாக்ஷத்தாலே) | அடியேன் | சேஷபூதனானநான் |
| | | நாராயணாஎன்னும்நாமம் | நாராயணா என்கிற திருநாமத்தை |
| | | நல்துணையாக | நல்லஸஹாயமாக |
| | | பற்றினேன் | அவலம்பித்தேன். () |

வ்யா.—எட்டாம் பாட்டு--† எங்கள் பூர்வவ்ருத்தத்தைப் பார்த்தால், நீர் சொல்லுகிற அர்த்தத்துக்கு நாங்கள் தேசிகராகவல்லோமோவென்ன; கெடுவிகாள்! நானன்றோ இவ்விஷயத்துக்கு யோக்யனாய் உங்களுக்கு உபதேசிக்கும்படியானேன், ஆனபின்பு இவ்விஷயத்துக்கு ஆளாகாதாருண்டோ? என்கிறார்.

(கற்றிலேன் கலைகள்) ஓராசார்யனைப் பின்சென்று அவனுச்சரிக்க அநூச்சாரணம் பண்ணிப்போராமையாலே, சாஸ்த்ரீய ஜ்ஞாநமுண்டாயிற்றதில்லை. (ஐம்புலன் கருதும் கருத்துளே-திருத்தினேன் மனத்தை) மநஸ்ஸைப் பரவிஷயமாக்கி, விஷயங்களிலே ப்ரவணமாகிற பாஹ்யேந்த்ரியங்களைக்காதாசித்கமாயாகிலும்விஷயங்களில்நின்றும்மாற்றி ப்ரத்யக் விஷயமாக்கினால் நல்வழி போகைக்குறுப்பாமிறே; ஸ்ரோத்ராதீந்த்ரியங்கள் விஷயங்களிலே யிழிந்து தான் நினைத்தவழியே கொடுபோக, மநஸ்ஸையும் அதுக்கு உறுப்பாக்கிப் போந்

அநு.—எட்டாம்பாட்டு.—(கற்றிலேன்) இத்யாதி. "வாடினேன்" என்று தொடங்கி பூர்வ வ்ருத்தத்தை அநுஸந்தித்துச்சென்று, கீழ் இரண்டுபாட்டிலே அத்தை விட்டவர், மீளவும் பூர்வ வ்ருத்தத்தை யருளிச்செய்கைக்கு ஸங்கதி யருளிச்செய்கிறார், (எங்கள்) இத்யாதி. "பாழியானாழியானருளே" என்று ஆழ்வார் * மயர்வற மதிநல மருளப் பெற்றவராகையாலே அவருடைய பூர்வ வ்ருத்தமெல்லாம் அகிஞ்சித்கரமாயிற்றென்று கருதி, ப்ரஶ்நம்பண்ணினார்களென்று கருத்து. அநுதாபசூந்யனாயிருந்த என்னிடத்திலே யருளினவன், நாங்கள் தேசிகராக வல்லோமோ" என்னும் உங்களிடத்தில் அருளக்குறையில்லை என்று உத்தரத்துக்குக் கருத்து.

தேன். (திருத்தினேன் மனத்தை) விஷய ப்ரவணரானவர்கள் "**விஷய** ப்ராவண்யம் போராது" என்று ஔஷதஸேவை பண்ணியிருப்பார்களிறே, அப்படியே, விஷயங்களிலே மநஸ்ஸை வலிய மூட்டிப் போந்தேன். (பெற்றிலேனதனால் பேதையேன் நன்மை) † சாஸ்த்ரீய ஜ்ஞாநமுமின்றிக்கே விஷய ப்ரவணனாய்ப் போருகையாலே அறிவு கேடனாய் ஹிதசிந்தை பண்ணப்பெற்றிலேன். (பெருநிலத் தாருயிர்க்கெல்லாம் செற்றமே வேண்டித் திரிதருவேன்)† எனக்கொரு நன்மை ஸம்பாதியாமையே யன்றிக்கே, பரஹிம்ஸை பண்ணும் விரகே சிந்தித்துப் போந்தேன். † எல்லாரையும் ஹிம்ஸித்து நான் ஜீவிக்கும் விரகேபார்த்துப்போந்தேன். † "ஒருவனுக்கு பகவத் ஸம்பந்தமுண்டு இல்லை என்று தனக்கே அறியலாம்" என்று பலகாலும் அருளிச்செய்வர் ஜீயர். ஒருவன் நோவுபடக்கண்டால் "ஐயோ!" என்று இரக்கம்பிறந்திருக்கில், "நமக்கு பகவத் ஸம்பந்தமுண்டு" என்றறியலாம்; "அத்தனையும் வேணும்" என்றிருந்தானாகில், "நமக்கு பகவத் ஸம்பந்தமில்லை" என்றிருக்கலாம். † பெருநிலத்து ஆருயிர்க்கெல்லாமென்னுதல்; பெருநிலத்தாருயிர்க்கெல்லாமென்னுதல். (தவிர்ந்தேன்) † ஹேது வறிந்திலேன், தவிர்ந்துகொடு நிற்கக்கண்டேன். (க) "உய்வதோர் பொருள்" என்றும், (உ) "ஆழியானருள்" என்றும், (௩) "சிக்கெனத்திருவருள் பெற்றேன்" என்றும் கீழ்ச்சொன்னாரிறே. (செல்கதிக் குய்யுமாறெண்ணி) † செல்லக்கடவ கதியுண்டு - பரமபதம், அங்கே புக்கு உஜ்ஜீவிக்கும்படியை மநோரதித்து. (நற்றுணையாகப் பற்றினேனடியேன்) அம்பியைக்கட்டிக்கொண்டு ஆற்றி விழிவாரைப்போலே யன்றிக்கே (௪) "𑌪𑌾𑌥𑍇𑌯𑌂 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌾𑌕𑍍𑌷𑌨𑌾𑌮𑌸𑌙𑍍𑌕𑍀𑌰𑍍𑌤𑌨𑌾𑌮𑍃𑌤𑌮𑍍-பாதேயம் புண்டரீகாக்ஷ நாமஸங்கீர்த்தநாம்

---

"அதனால் - பேதையேன் நன்மை - பெற்றிலேன்" என்று அந்வயித்தருளிச் செய்கிறார், (சாஸ்த்ரீய) இத்யாதி. "செற்றமே" என்ற ஏவகாரத்தாலே ஸ்வஜீவநம் வ்யாவர்த்திக்கிறதென்றருளிச்செய்கிறார், (எனக்கு) இத்யாதி. பரஜீவநம் வ்யாவர்த்யமென்று தாத்பர்யாந்தரம், (எல்லாரையும்) இத்யாதி. பரஹிம்ஸை அநர்த்தகரமென்னுமத்தை ஐதிஹ்யமுகேந உபபாதிக்கிறார், (ஒருவனுக்கு) இத்யாதி. பெருநிலத்து - மஹாப்ருதிவியில், ஆர் - நிரம்பியிருக்கிறவென்றும், பெருநிலத்தாரான உயிர்க்கெல்லாமென்றும் சப்த நிர்வாஹம் காட்டுகிறார், (பெரு) இத்யாதி வாக்யத்வயத்தாலே. (ஹேதுவறிந்திலேன்) என்றது - என்னிடத்திலொரு ஹேதுவறிந்திலேனென்றபடி. "செல்கதிக்கு" என்றவநந்தரம், போய் என்று சேஷபூரணம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார், (செல்ல) இத்யாதி. (அ)

---

(க) ஏ - க - க -
(௩) க - க - கு.
(உ) க - ச - ரு -
(௪)

மூ.—குலந்தரும் செல்வம் தந்திடும்
அடியார் படுதுயராயின வெல்லாம்
நிலந்தரம் செய்யும் நீள்விசும் பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றும் தந்திடும்
பெற்றதாயினு மாயின செய்யும்
நலந்தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணா வென்னும் நாமம். (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நாராயணா என்னும்நாமம் | நாராயணா என்கிற திருநாமமானது | வலம் | (தன்னை அநுபவிக்கைக்கீடான) சக்தியையும் |
| குலம் | (தன்னை அநுஸந்தித்தவர்களுக்கு) உயர்ந்தகுலத்தை | தரும் | கொடுக்கும்; |
| தரும் | கொடுக்கும்; | மற்றும் | இன்னுமுள்ள எல்லா ஹிதங்களையும் |
| செல்வம் | ஐஶ்வர்யத்தை | தந்திடும் | செய்துகொடுக்கும்; |
| தந்திடும் | தரும்; | பெற்றதாயினும் | சரீரத்தையுண்டாக்கின தாயாரைக் காட்டிலும் |
| அடியார் | சேஷபூதரானவர்கள் | ஆயின | ஹிதமாயுள்ள ஸ்வரூபஜ்ஞானவிகாஸத்தை |
| படு | அநுபவித்தேகழிக்க வேண்டிய | செய்யும் | பிறப்பிக்கும்; |
| துயராயின எல்லாம் | துக்கம்என்று பேர்பெற்ற எல்லாவற்றையும் | நலம்தரும் | கைங்கர்யஶ்ரீயைத்தருவதான |
| நிலந்தரம்செய்யும் | தரைமட்டமாக்கிவிடும்; | சொல்லை | திருநாமத்தை |
| நீள்விசும்பு | பரமபதத்தை | நான் | இப்படியிருப்பதொன்றுண்டு என்றறியாதநான் |
| அருளும் | கொடுக்கும் | கண்டுகொண்டேன் | காணப்பெற்றேன். () |
| அருளொடு | க்ருபையோடுகூட | | |
| பெருநிலம் | கைங்கர்யமாகிறபெரியஸ்த்தாநத்தையும் | | |
| அளிக்கும் | தரும்; | | |

ருதம்" என்னுமத்தைப் பற்றினேன். அக்கரைப்படுத்திவிடுமத்தைப் பற்றினேன். (நாராயணாவென்னும் நாமம்) அக்கரைப்படுத்தும் வஸ்துவுக்கு வாசகமான திருநாமம். (க) "[illegible]-கயாமி பரமாம் கதிம்" என்னக்கடவதிறே. (அ)

(க) வராஹசரமம் -

வ்யா.—ஒன்பதாம் பாட்டு.-†அநாதிகாலம் விஷய ப்ரவணனாய் பகவத் விஷயத்தில் விமுகனாய்ப்போந்த நான், விஷயங்கள்தான் †ஸாவதியாய் † மீண்டவளவிலே, ஸர்வேஶ்வரன் தன் க்ருபையாலே கைக்கொண்டானென்கிற அர்த்தத்தை "உய்வதோர் பொருளால்" என்கிறத்தாலே சொன்னார் †முதற்பாட்டில்; காலமடங்க வ்யர்த்தமே புறம்பே போக்கினேன் என்றார் இரண்டாம்பாட்டில்; †ரக்ஷையேவேண்டி அதுக்கு விருத்த(ஷ்ட)மான துஷ்கர்மங்களைப் பண்ணி விஷய ப்ரவணனாய் காலத்தை யடங்க நிஷ்ப்ரயோஜநமாகப் போக்கின நான் போக்யனுமாய் ப்ராப்தனுமான ஸர்வேஶ்வரனையும் அவனுக்கு வாசகமான திருநாமத்தையும் காணப்பெற்றேனென்றார் மூன்றாம்பாட்டில்; தார்மிகியாய் சோகிக்கக்கடவதல்லாத விஷயங்களுக்குச் சோகித்து விஷய ப்ரவணனாய் அநாத்ம குணங்களால் குறைவற்ற நான், அமாநித்வாத்யாத்மகுணோபேதர் பெறும் பேற்றைப்பெற்றேனென்றார் நாலாம்பாட்டில்; ஆத்மாபஹாரத்தைப் பண்ணி பஶ்யதோஹரனாய், ஸர்வேஶ்வரனொருவனுளன் என்றிருப்பாருண்டாகில் §உக்த்யாபாஸங்களாலே இல்லை செய்து போந்த நான், ஆத்ம ஸமர்ப்பணம்பண்ணி என்றுமிதுவே யாத்ரையாய்ப் போருவார் பெறும்பேற்றைப் பெற்றேனென்றார் அஞ்சாம் பாட்டில்; "இதுக் கர்த்தமென்? இதுவந்தபடி யென்?" என்ன, அர்த்தத்தையும் சொல்லி, ஸம்ஸாரிகளெல்லா மிங்ஙனே க்லேசப்படாநிற்க † நானிப் பேற்றைப் பெற்றேனென்றார் ஆறாம்பாட்டில்; அல்லாதாரிழக்கிறார்கள் ‡ (அவிசேஷஜ்ஞராகையாலே); என்னோடு ஸஜாதீயராய் விஶேஷஜ்ஞராய்க் கவிபாடித் திரிகிற நீங்களிழ

அரு.—ஒன்பதாம்பாட்டு.—(குலந்தரும்) இத்யாதி. நிகமம் அணித்தானவாறே இத்திருமொழியில் பாட்டுத்தோறும் சொன்ன ப்ரமேயங்களை புத்தி ஸௌகர்யார்த்தம் அநுவதியாநின்றுகொண்டு ஸங்கதி யருளிச்செய்கிறார், (அநாதி) இத்யாதி. (ஸாவதியாய்) என்றது-அல்பமாயென்றபடி. இது-"விஷயங்கள் தன்னில் அரைக்ஷணம் கால்தாழப்பண்ண வல்லதொரு விஷயந்தானில்லையிறே" என்றருளிச் செய்ததைப்பற்ற. (மீண்டவளவிலே) என்றது - ஒரு விஷயத்தில் நின்றும் மீண்டு விஷயாந்தரத்தில் போகாதே ஓடி இளைத்தவளவிலே என்கை. (முதற்பாட்டில்) என்ற வநந்தரம், அருளப்பெற்றவராகையாலே என்றுகூட்டுவது. இரண்டாம்பாட்டில் காலம் வ்யர்த்தமே போக்கினத்தை யெல்லாம் மூன்றாம் பாட்டில் அநுவதித்துக்கொண்டு, தாம்பெற்ற பேற்றை அருளிச்செய்தா ரென்கிறார், (ரக்ஷையே) இத்யாதி. (நானிப்பேற்றை) என்ற வநந்தரம், "தஞ்சைமாமணிக் கோயிலே வணங்கி" என்று கூட்டுவது.

§ (பா) யுக்த்யாபாஸங்களாலே. ‡ குண்டலிதம் க்வாசித்கம்.

வாதே கொள்ளுங்கோளென்றார் ஏழாம்பாட்டில்; "நீர் சொல்லு கிற அர்த்தத்துக்கு நாங்கள் தேசிகராக வல்லோமோ" என்ன, கெடுவிகாள்! நானன்றோ இவ்விஷயத்துக்கு நில்வனாய் உங்களுக்கு ங்கூட உபதேசிக்கிறேன், ஆனபின்பு பகவத் விஷயத்துக் காளாகா தாரில்லை என்றார் எட்டாம்பாட்டில்; "நீர் திருநாமத்தைப்போர ஆதரியா நின்றீர், இதென்ன பலத்தைத் தரவற்று" என்ன, திரு நாம பலத்தைச்சொல்லுகிறார் இப்பாட்டில்.

(குலந்தரும்) †ஜந்மவ்ருத்தங்களால் குறைய நின்றானொருத்த னுக்கு பகவத் ஸம்பந்தமுண்டானால், இவற்றாலுயர்ந்தானொருத் தன், இவை யிரண்டிலு மிவனுக்குத் தாழ்வுண்டாகவும், தானுயர்ந் தானாகவும் † நினைத்திருக்கவுங்கூடக் கூசவேண்டும்படியாயிற்று பக வத் ப்ரபாவமிருப்பது. † ஆகிலும், பெண்கொடுத்தல் கொள்ளுதல் செய்கிறாரில்லை; அதுக்கடி †ஜாதி நிபந்தநமாகை. †ஶ்லாகை †குண நிபந்தநம்; (க) "ஶ்லாக்யஸ்ஸகுணீதந்யஸ்ஸகுலீநः - ஸஶ்லாக்யஸ்ஸகுணீதந் யஸ்ஸகுலீநஃ" என்னக்கடவதிறே. § †கண்டதெல்லாம் தர்மஸந்தே ஹம் பண்ணக்கடவ தர்மபுத்ரன், பகவத் ப்ரத்யாஸத்தியாலும் அச ரீரி வாக்யத்தாலும் விதுரரை ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்காரம் பண்ணினானிறே; ருஷிகள், தர்மவ்யாதன் மாம்ஸவிக்ரயம் பண் ணிக்கை யொழியுந்தனையும் பார்த்துநின்று தர்மஸங்கடங்கள் கேட் டுப்போனார்களிறே. இங்ஙனன்றாகில் பஞ்சமவேதமான மஹா பார தத்திலே யெழுதக்கூடாதிறே. †கைசிக கதையிலே வந்தவாறே, வில க்ஷணனாயிருப்பானொரு ப்ராஹ்மணனாசார வைகல்யத்துக்கு பகவத் ஜ்ஞாநமுடையானொரு பாடுவானுமேலே பரிஹாரம் † இருந்ததிறே.

---

குலத்தையும் அதுக்கீடான வ்ருத்தத்தையும் தருமென்று சப்தார்த்தம் விவக்ஷித்து ஹேதுவருளிச் செய்கிறார், (ஜந்ம) இத்யாதி. (நினைத்திருக்கவும் கூட) என்றது - தாழ்ந்த சொலவும் தாழ்வுக்கு ஸூசகமான செயலும் செய் யக்கூடாதென்றபடி. இப்படி உத்க்ருஷ்டரானால் கொடுத்துக்கொள்ள வேண் டாவோவென்ன; அருளிச்செய்கிறார், (ஆகிலும்) இத்யாதி. (ஜாதிநிபந்தநம்) என்றது - ப்ராஹ்மணஜாதியிலே பிறந்தவன் அதிலே கொடுத்துக்கொள்ளக் கடவனென்று சரீர ஸம்பந்தத்துக்குச் சொன்ன சாஸ்த்ர நிபந்தநமென்றபடி. கொள்வினை கொடுப்பினை யில்லாவிட்டால் ஶ்லாக்யதை எங்ஙனே யென்ன; அருளிச்செய்கிறார், (ஶ்லாகை) இத்யாதி. (குண நிபந்தநம்) என்றது - பக வத் ப்ரஸாதத்தாலே வந்த சேஷத்வ ஜ்ஞாந நிபந்தந மென்றபடி. சரீர ஸம்பந் தம் தவிர த்ரிவித கரணத்தாலும் பகவத் ப்ரத்யாஸந்நரை ஆதரிக்கைக்கு ப்ர மாணம் காட்டுகிறார், (கண்டதெல்லாம்) இத்யாதி வாக்யத்ரயத்தாலே. ப்ரமா ணாந்தரம், (கைசிக) இத்யாதி. (இருந்ததிறே) வராஹபுராணத்திலே என்று

---

(க) [யாநத்தில்காண்க.

§ இக்கதையை ஸ்ரீவசநபூஷணம் - உ௫0 - உங்க - வது வாக்ய வ்யாக்

†ஸ்ரீவிபீஷணாழ்வான், ராவணனைப்பார்த்து, "பெருமாளைச் சரணம் புகு" என்று சொல்ல, (க) " [illegible] - த்வாந்துதிக் குலபாம்ஸநம்" என்று நீ இக்குடிக்கு உடலல்ல என்றானிறே. ராவணனுக்கு வார்த்தைசொல்லுகிற விடத்தில், (உ) "[illegible] - நிசாசர" என்று அவனை ராக்ஷஸனாகவும், தான் அல்லனாகவும் சொன்னான். இவனையன்றிக்கே, (ங) " [illegible] - ராக்ஷஸாநாம்பலாபலம்." என்று பெருமாள்தாமு மருளிச் செய்தார். ஆகையாலே, பகவத் ஸம்பந்தம் ஸ்பர்சவேதியா யிருந்தது.

(செல்வம் தந்திடும்) ராவண ஸம்பந்தமற்றவாறே, (ச) "[illegible] - அந்தரிக்ஷகதஶ்ஶ்ரீமான்" என்று ராமஸம்பந்தத்தாலே வந்த ஸ்ரீ குடிபுகுந்தது. அன்றிக்கே, † அதுதன்னையே சொல்லிற்றாகவுமாம், (ரு) "[illegible] - பரித்யக்தா மயா லங்கா" என்று இவன்றானே கைவிடச்செய்தே, ராவண ஸம்பந்தமற்றவாறே, ராமஸம்பந்தத்தாலே லங்கைஶ்வர்யமும் முடியும் அவன் றலையிலே வந்திருந்ததிறே. (சூ) "நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான் றன்னையே தான்வேண்டும் செல்வம்" என்னக்கடவதிறே. உன்னையே யுகந்து நிலைநில்லாத ஸம்பத்தை வேண்டேன் என்றிருப்பாரை அது கைவிடாதாப்போலே என்கிறார், † தாம்விடச் செய்தே தம்மை அது கைவிடாதபடியாலே. † அங்ஙனன்றியே, உன்னையுகந்து நிலைநின்ற ஐஶ்வர்யத்தைக் காற்கடைகொண்டு நீயே யமையுமென்றிருக்குமவனை மோக்ஷஶ்ரீ கைவிடாதாப்போலே யென்றுமாம்.

(அடியார் படுதுயராயின வெல்லாம் நிலந்தரம் செய்யும்) அடியாருண்டு - தனக்கு அஸாதாரணரானவர்கள்; படுதுயருண்டு - (எ) "[illegible] - அவஶ்ய மநுபோக்தவ்யம்" என்று அநுபவ விநாஶ்யமான கர்மங்கள்; அவற்றையெல்லாம், (நிலந்தரம் செய்யும்) நிலத்தோ டொக்கப்பண்ணும் - வெறுந்தரையாக்கும்-சே

---

சேஷம். இதிஹாஸ ஶ்ரேஷ்டத்தில் ப்ரமாணங்களை யருளிச்செய்கிறார், (ஸ்ரீவிபீஷணாழ்வான்) இத்யாதி.

(அது தன்னையே) என்றது-லங்கைஶ்வர்யந்தன்னையே என்றபடி. (தாம்) என்றது - குலசேகராழ்வாரை, "நீள் செல்வம்". என்றது - விபரீத லக்ஷணையாலே அஸ்த்திரைஶ்வர்யத்தைச் சொல்லுகிறதென்று கீழ் அருளிச்செய்து, "நீள்" என்றத்தாலே நித்யைஶ்வர்யமென்று யோஜநாந்தர மருளிச் செய்கிறார், (அங்ஙனன்றியே) இத்யாதி.

---

(க) ரா-யு-கசு-கஞ.
(உ) ரா-யு-கசு-உஅ.
(ங) ரா-யு-கசு-எ.
(ச) ரா-யு-கசு-கஎ.
(ரு) ரா-யு-கசு-ரு.
(சூ) பெரு-தி-ரு-சு.
(எ)

வலபூதலமாக்கும். அங்ஙனன்றியே, நிலமென்று - அவன் வர்த்திக்கிற இடமாய், தரமென்று - தரணமாய், இடைக்குறைத்தலாய், இவன் பக்கல் நின்றும் கர்டங்கள்தானே நமக்கிருப்பிட மன்றென்று போம்படி பண்ணுமென்றுமாம். (க) "யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே। ந தத்ர ஸஞ்சரிஷ்யந்தி வ்யாதி துர்ப்பிக்ஷ தஸ்கரா:" - யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தோ மஹாபாகோமஹீயதே । நதத்ரஸஞ்சரிஷ்யந்தி வ்யாதிதுர்ப்பிக்ஷதஸ்கரா:" (உ) "சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே" (ங) "† கோலாடி † குறுகப்பெறா." அங்ஙனன்றியே, நிலமென்று - ப்ருதிவ்யாதி பூதங்களாலே ஆரப்தமான சரீரமாய், இவன் பண்ணின கர்மங்களைச் சரீரத்தளவாக்கும், பக்திமானுக்கு ப்ராரப்த கர்மாவதியா யிருக்கும்; இவ்வர்த்தாநுஸந்தானத்தைப் பண்ணி ப்ரபந்நனானவனுக்கு இஶ்ஶரீராவதியா யிருக்கும். (நீள்விசும்பருளும்) விரோதி நிவ்ருத்தியாகிறது - சரீராவதியிறே; அவ்வளவன்றியே, பரமபதத்தையும் கொடுக்கும். (அருளொடு பெருநிலமளிக்கும்) அருளோடேகூட பெரிய நிலமுண்டு - பெரிய ஸ்தானம் - கைங்கர்யமாகிற பெரியபதம்; அத்தைத்தரும். (வரந்தரும்) (ச) "ஒழிவில்காலம்" என்று இவனுக்கு ப்ரார்த்தநீயமான கைங்கர்யத்தைக்கொடுக்கும். (வலந்தரும்) என்றாலும், அது தன்னையே காட்டும். அங்ஙனன்றிக்கே, (வலந்தரும்)என்று (ரு) "ய ஆத்மதா பலதா" என்று தன்னையும் கொடுத்துத் தன்னை யநுபவிக்கைக்கீடான சக்தியையும் கொடுக்கும். நித்ய ஸம்ஸாரியாய் இன்று சென்றவனுக்கும், நித்யாநுபவம்பண்ணுகிற நித்யஸூரிகளோடொக்க அநுபவிக்கைக்கீடான சக்தியையும் கொடுக்கும்.

அங்ஙனன்றிக்கே, (அருளொடு பெருநிலமளிக்கும் வலந்தரும்) தன்னை ஆஶ்ரயித்தவர் தங்களளவன்றிக்கே, தங்களோடு ஸம்பந்தித்தார்க்கும், தங்களருளோடேகூட, பெரிய நிலமுண்டு - பரமபதம், அத்தைக்கொடுக்க வல்லராம்படியான ப்ரஸாதத்தைப்பண்ணும்.

(மற்றும் தந்திடும்) இவனுக்கு ஹிதமாய் இவனறியாத வற்றையும் தானே கொடுக்கும்; "இவன் கார்யம் தானறிந்தானே, நாம

---

(கோலாடி) என்றது - கோல் நடமாடும் தேசமாய், அத்தால் - ஆஜ்ஞை நடக்குமிடத்தி லென்றபடி. (குறுகப்பெறா) - கிட்டப்பெறாது. "பெருநிலம்" என்ற பதத்துக்கர்த்தமான கைங்கர்யத்துக்குப் ப்ரார்த்தநீயதை, "வரம்" என்றத்தாலே சொல்லுகிறதென் றருளிச்செய்கிறார், (ஒழிவில்) இத்யாதி.

---

(க)
(உ) பெரி-திரு-ரு-ச-ங.
(ங) பெரி-திரு-ரு-ச-ச.
(ச) தி-வாய்-ங-ங-க.
(ரு)

ன்றோ கடவோம்'' என்று தானே கொடுக்கும். § கோவிந்தஸ்வாமி, தன்னைக் கண்டவநந்தரம் "நான்கூடப் போருவேன்" என்ன; அவனுடைய முன்புத்தை நினைவயருக்கு, "நீ யிங்கேயிருந்து சிறிதுநாளநுபவித்து வா'' என்று போனவிறே. (பெற்றதாயினுமாயினசெய்யும்) மாதாவானவள், சரீரத்துக்கு உத்பாதகையாமளவிறே; ஆத்மாவுக்கு ஸ்வரூபமான ஜ்ஞாநவிகாஸத்தைப் பிறப்பிப்பான் † அவனேயிறே. (க) "शरीरमेव मातापितरौ जनयतः - சரீரமேவ மாதாபிதரௌஜநயதஃ'' என்று, விரோதியான சரீரத்தை உத்பாதித்து விடுமளவிறே அவர்கள் செய்வது; (உ)"स हि विद्यातस्तं जनयति तच्छ्रेष्ठं जन्म - ஸஹிவித்யாதஸ்தம் ஜநயதி தச்ச்ரேஷ்ட்டம் ஜந்ம'' என்று ஜ்ஞாநப்ரதனுவான் அவனேயிறே.

(நலந்தரும் சொல்லை) அர்த்தாநுஸந்தாந மொழியவே பாடத்தைச்சொன்ன மாத்ரத்திலே பக்தியைப் பிறப்பிக்குமென்னுதல்; †நலமென்று வ்ருத்தமாய், கைங்கர்யத்தைத் தருமென்னுதல். †ஆகையாலே கைங்கர்யத்துக்கடியான ருசியைப் பிறப்பிக்குமென்னுதல்; கைங்கர்யம் தருமென்னுதல். (நான் கண்டுகொண்டேன்) இப்படியிருப்பதொன்றுண்டு என்றறியாத நான் காணப்பெற்றேன். (நாராயணா வென்னும் நாமம்) (ங)† "नमो नारायणायेति मन्त्रः सर्वार्थसाधकः - நமோநாராயணாயேதி மந்த்ரஸ் ஸர்வார்த்தஸாதகஃ'' என்னுமத்தை. (கூ)

ம. மஞ்சுலாம் சோலை வண்டறை மாநீர்
மங்கையார் வாள் கலிகன்றி
செஞ்சொலா லெடுத்த தெய்வ நன்மாலை
யிவைகொண்டு சிக்கெனத் தொண்டீர்

---

(அவனேயிறே) என்றது - மந்த்ரப்ரதனான ஆசார்யனிறே என்கை. இத்தால், மந்த்ர ஸ்வரூபஜ்ஞாநத்தை யுண்டாக்குமென்றதாயிற்று.

"அருளொடு பெருநில மளிக்கும் வலந்தரும்" என்றதுக்கு மோக்ஷப்ரதத்வரூப சக்திப்ரதாநம் அர்த்தமான பக்ஷத்திலே, "நலம்" என்றதுக்கு அர்த்தமருளிச் செய்கிறார், (நலமென்று) இத்யாதி. (ஆகையாலே) என்றது-ஸ்வரூபஜ்ஞாந ஜநகமாகையாலே என்றபடி. இவ்வாக்யத்வயமும் கீழ்ச்சொன்ன அர்த்தத்துக்கு விவரணமென்று கொள்வது. "என்னும்" என்கிற ப்ரஸித்தியை இப்பாட்டு ப்ரமேயத்துக்குச்சேர வருளிச்செய்கிறார், (நம) இத்யாதி. (கூ)

---

§ இக்கதையை ஐ-ப, அ-தி, ஐ-பா, "மாகமாநிலனும்" என்கிறபாட்டின் வ்யாக்யாநத்தில்காண்க.

(க) (உ) (ங)

துஞ்சும் போதழைமின் துயர்வரில் நினைமின்
 துயரிலீர் சொல்லிலும் நன்றாம்
நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு
 நாராயணா வென்னும் நாமம். (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மஞ்சு | மேகங்கள் | நல் | விலக்ஷணமான |
| உலாம் | ஸஞ்சரியாநின்றுள்ள | மாலை | சொன்மாலையான |
| சோலை | சோலையையும் | இவைகொண்டு | இத்திருமொழியாலே |
| வண்டு | வண்டுகள் | துஞ்சும்போது | சரீராவஸாநத்திலே |
| அறை | சப்தியாநின்றுள்ள | அழைமின் | கூப்பிடுங்கள்; |
| மாநீர் | மிக்கஜலத்தையுமுடைய | துயர்வரில் | வ்யஸநங்கள் நேரிடும்காலத்திலும் |
| மங்கையார் | திருமங்கையிலுள்ளார்க்கு ரக்ஷகமான | நினைமின் | இத்தையே மநநம்பண்ணுங்கள்; |
| வாள் | வாளையுடையராய் | துயரிலீர் | வ்யஸநமற்றநீங்கள் |
| கலிகன்றி | கலிதோஷத்தைப் போக்கினஆழ்வார் | சொல்லிலும் | சொன்னாலும் |
| | | நன்றாம் | நன்மையைத்தரும்; |
| செம்சொலால் | செவ்வியசொல்லாலே | நாராயணா என்னும்நாமம் | நாராயணாஎன்கிற திருநாமமானது |
| எடுத்த | எல்லார்க்கும் தெரியும்படி அருளிச்செய்ததாய் | நம்முடை | நம்முடைய |
| | | வினைக்கு | பாபங்களுக்கு |
| | | நஞ்சுதான்கண்டீர் | விஷமாயிராநின்றது கிடீர்! (கo) |
| தெய்வம் | அப்ராக்ருதமாய் | | |

வ்யா —பத்தாம்பாட்டு—(மஞ்சுலாஞ் சோலை) மேகங்கள் உலாவும்படியான ஒக்கத்தை யுடைத்தான சோலை. † (வண்டறை) என்கிறது - சோலைக்கு விசேஷணமாகவுமாம்; மாநீர்க்கு விசேஷணமாகவுமாம் ஜலத்தினுடைய ரஸ்யதையாலே "ஈக்கள் வண்டொடு மொய்ப்ப" என்று ஆற்றுவரவுகளிலே சொல்லுவர்களாயிற்றுத்தமிழர். (மங்கையார் வாள் கலிகன்றி) பகவத் ஸம்பந்தத்தை யுணர்ந்தவர்

---

அரு.—பத்தாம் பாட்டு.—(மஞ்சுலாம்) இத்யாதி. "வண்டறை" என்றது, வண்டுகள் சப்தியாநிற்கிற என்றாய், அது சோலைக்குச் சொல்லுகை லோகஸித்தமென்றும், நீருக்குச் சொல்லுகை கவிஸமயஸித்தமென்றும் விவக்ஷித்தருளிச்செய்கிறார், (வண்டறை) இத்யாதிவாக்யத்வயத்தாலே.

கள் பகவத் ‡ பலமே பலமாயிருக்குமாபோலே, திருமங்கையிலுள்ளார் இவர் கையில் †வாளே தங்களுக்கு பலமாகவாயிற்று நினைத் திருப்பது.

(செஞ்சொலாலெடுத்த) அதிக்ருதாதிகாரமாய், ஸம்ஸ்க்ருதமாய், தெரியாத சப்தங்களாலே சொன்ன அர்த்தங்களை வ்யக்தமாக எல்லார்க்கும் தெரியும்படி செவ்விய சொல்லாலே சொன்ன. (தெய்வ நன்மாலை) அப்ராக்ருதமாய், (க) "கேட்டாரார் வானவர்கள்" என்று நித்யஸூரிகள் கேட்டு அநுபவிக்கலாம்படி யிருக்கிற, மாலை - தொடை. (இவைகொண்டு சிக்கெனத் தொண்டீர் துஞ்சும்போதழைமின்) சரீராவஸாநத்தில் யமவஶ்யதைக்கு அஞ்சாதே இத்திருநாமங்களைச் சொல்லுங்கோள். (துயர்வரில் நினைமின்) இவ்வருகுண்டான வ்யஸநங்கள் வந்தபோதும், இத்தையே சொல்லுங்கோள். (துயரிலீர் சொல்லிலும் நன்றாம்) "சரீரத்தோடேயிருந்தால் இவையெல்லாம் வருகை ப்ராப்தமன்றோ" என்று இத்தை மதியாதே அநந்யப்ரயோஜநரா யிருப்பார்க்கு ஸ்வயம் ப்ரயோஜநம். (நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு) நம்முடைய பாபங்களுக்கு †§ ஆற்றவொண்ணாத நஞ்சு. (நாராயணா வென்னும் நாமம்) (உ) † "என்க்கென்றும் தேனும் பாலு மமுதுமாய திருமால் திருநாமம் நானும் சொன்னேன் நமருமுரைமின் நமோ நாராயணம்" என்று நமக்கு இனிய திருநாமமே பாபத்துக்கு நஞ்சு; † அல்லாதன வெல்லாம் ஸம்ஸாரத்திலே வேர்பற்றுகைக்குறுப்பாயிருக்கும். இதினுடைய அர்த்தாநுஸந்தாநமே ஸம்ஸாரத்தை வேரறுப்பது என்னுமிவ்வர்த்தத்தை யெல்லாரும் புத்திபண்ணி யிருக்கலாகாதோ? (கo)

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.

---

(வாளே தங்களுக்கு பலமாக) என்றதுக்கு - வாள்வலியால் மந்திரங்கொண்டு உபதேசித்து ரக்ஷிக்கையாலும் நிர்வாஹகராகையாலுமென்று கருத்து.

(ஆற்றவொண்ணாத) - ஸஹிக்கக்கூடாத. "என்னும்" என்றது - போக்யதாதிசயத்தாலே யென்றருளிச்செய்கிறார், (எனக்கு) இத்யாதி. "கண்டீர்" என்றதுக்கு உட்கருத்தருளிச்செய்கிறார், (அல்லாதன) இத்யாதி. ... (கo)

ஜீயர் திருவடிகளேசரணம்.

---

(க) தி - வாய் -கo-ு-கக. (உ) சு - கo-சு.

‡ (பா) ஸம்பந்தமே. § (பா) காற்றவொண்ணாத-அப்ரதிக்ரியமான.

முதற்பத்து-முதல்திருமொழி முடிந்தது.

ஆழ்வார்திருவடிகளே சரணம்.

## முதற்பத்து - இரண்டாந்திருமொழி - வாலி

மூ.—வாலிமாவலத்தொருவனதுடல்கெட
வரிசிலைவளைவித்தன்று
ஏலநாறுதண்டடம்பொழிலிடம்பெற
விருந்தநல்லிமயத்துள்
ஆலிமாமுகிலதிர்தரவருவரை
யகடுறமுகடேறிப்
பீலிமாமயில்நடஞ்செயும்தடஞ்சுனைப்
பிரிதிசென்றடைநெஞ்சே.

| பதம். | உரை. |
|---|---|
| நெஞ்சே | மநஸ்ஸே! |
| அன்று | ஸுக்ரீவன் சரணம்புகுந்தவன்று |
| வாலி | வாலிஎன்னும் பேரையுடையனாய் |
| மா | மிக்க |
| வலம் | பலம்பொருந்திய |
| ஒருவனது | ஒப்பற்றவனுடைய |
| உடல் | சரீரம் |
| கெட | சிதறும்படி |
| வரி | அழகிய |
| சிலை | வில்லை |
| வளைவித்து | சரங்கள்பாயும்படிவளைத்து; (இன்று) |
| ஏலம் | பரிமளம் |
| நாறு | வீசாநிற்பதாய் |
| தண் | குளிர்ந்து |
| தடம் | பரந்த |
| பொழில் | உத்யாநவநங்களிலே |
| இடம்பெற | விசாலமாக (ஸர்வேஶ்வரன்) |
| இருந்த | ஓலக்கம்கொடுத்துக்கொண்டிருக்கிற |
| நல் | விலக்ஷணமான |
| இமயத்துள் | ஹிமவானில் |
| ஆலி | சிறுதுளியையுடைய |
| மாமுகில் | மஹாமேகங்கள் |
| அதிர்தர | முழங்காநிற்பதுமாய் |
| பீலி | தோகையையுடைய |
| மா | பெரிய |
| மயில் | மயில்களானவை |
| அரு | தாவியேறவரிதான |
| வரை | மலைகளிலே |
| அகடு | கீழ்வயிறு |
| உற | தழுவும்படியாக [ல் |
| முகடு | அவற்றின் சிகரங்களி |
| ஏறி | போய்ஏறி |
| நடம்செயும் | ஆடாநிற்பதுமாய் |
| தடம் | பரந்த |
| சுனை | சுனைகளையுடைய |
| பிரிதி | திருப்பிரிதிஎன்கிறதிவ்யதேசத்தை |
| சென்று அடை | போய்கிட்டப்பாராய். |

அநு.—வாலிப்ரவேசம். கீழ்த்திருமொழியிலே, (க) "குடந்தையேதொழுது" என்றும், (உ) "தஞ்சைமாமணிக்கோயிலேவணங்கி" என்றும் தமக்குத் திருமந்த்ரலாபம் உகந்தருளின நிலத்திலெம்பெருமானாலே வந்ததாக அநுஸந்தித்துத் திருமந்த்ரம் பெற்றமையை அருளிச்செய்தவர், இனி, மேல் திருமொழிகளிலே அர்ச்சாவதாரமே தமக்குப் ப்ராப்யமாக வநுஸந்திக்கைக்குக் கருத்து - திருமந்த்ரார்த்தமான ஸ்வாமித்வ ஸௌலப்யங்களை உகந்தருளின நிலங்களிலே கண்டநுபவிக்கவேணுமென்கை யென்று விவக்ஷித்து,

(க) க-ந-எ-
(உ) க-க-கூ-

வ்யா.—†ஸம்ஸாரஸ்வபாவத்தையும், தம்முடைய இதரவிஷய ப்ராவண்யத்தையும் அநுஸந்தித்தருளினவிவர், அந்நோவுபாடே ஹேதுவாகத் தன் நிர்ஹேதுக க்ருபையாலே என்னை விஷயீகரித்துத்தன்†ஸ்வாமித்வத்தையும் எனக்குக் காட்டித் தந்தானென்கிறார் ஏழில் திருமொழியில்; (௧) †“அம்பினாலரக்கர் வெருக்கொள நெருக்கி” என்று ராமாவதாரம் ப்ரஸ்துதமாயிற்று, திருமந்த்ரமும் ப்ரஸ்துதமாயிற்று. ∵ இத்திருமந்த்ரத்துக்கு அர்த்தமாகிறதுதான் ஸ்வாமித்வஸௌலப்யமிறே. கர்ஷகனானவன் பயிர்த்தலையிலே குடில் கட்டிநோக்குமாபோலே, ரக்ஷ்யமிருந்தவிடத்தே வந்து ரக்ஷிக்கையிறே ஸௌலப்யம். உகந்தருளின நிலங்களிலேவந்து ஸந்நிதிபண்ணி இத்தைநோக்குகையாலே உடையவனென்று ஸ்வாமித்வப்ரகாசகமுமாயிருக்கிறது. † எதிர்த்தலை பாராதேவந்து அவஸரப்ரதீக்ஷனாய் அந்தர்யாமிரூபத்தாலே யிருக்கிற விருப்பு, ஸ்வாமித்வகார்யமிறே. அவ்வளவன்றிக்கே, கண்ணாலே கண்டநுபவிக்கவேணும் என்று அபேக்ஷைபிறந்தவன்று அப்போதே அநுபவிக்கலாம்படி கோயில்களிலேவந்து நிற்கிற விதுக்கு மேற்படவில்லையிறே ஸௌலப்யத்துக்கு. ஸம்பந்தஜ்ஞானம் பிறந்தவனந்தரம் அநுபவாபேக்ஷை பிறந்தால், அப்போதே இவ்வுடம்போடே யடிமைசெய்யலாம்படி யிராதிறே பரமபதத்தில்; “அநுபவிக்கவேணும்” என்று அபேக்ஷை பிறந்தபோதே அவ்வுடம்போடே அநுபவிக்கலாம்படி யிருக்குமிறே உகந்தருளினநிலங்களிலே. † இப்படி ஸௌலப்யத்துக்கே

---

வ்ருத்தவர்த்திஷ்யமாண க்ரமமுகேந ஸங்கதி யருளிச்செய்கிறார், (ஸம்ஸார) இத்யாதி. (ஸ்வாமித்வத்தையும்) என்றசகாரம் ஸௌலப்யத்தை ஸமுச்சயிக்கிறது. (௧) “எம்பிரானெந்தை” என்கிறபாட்டு திருமந்த்ரார்த்த ப்ரதிபாதகமாகையாலே அது உயிர்ப்பாட்டாய், அதிலே “எம்பிரான்” இத்யாதியால் ஸௌலப்யமும், “அண்ணல்” என்றத்தால் அதுக்கு ஹேதுவான ஸ்வாமித்வமும் ப்ரஸ்துதமான வளவன்றிக்கே, ராமாவதாரமும் திருமந்த்ரமும் ப்ரஸ்துதமாயிற்றென்று அவற்றையும் அநுவதிக்கிறார், (அம்பினால்) இத்யாதி. காட்டித்தந்த ஸ்வாமித்வ ஸௌலப்யங்களை அர்ச்சாவதாரத்தில் கண்டநுபவிக்கிறாரென்னுமத்தை உபபாதிக்கிறார், (இத்திருமந்த்ரத்துக்கு) இத்யாதி. உடைமையைநோக்கும் ஸ்வாமித்வ ப்ரகாசமெங்ஙனேயென்ன; அருளிச்செய்கிறார், (எதிர்த்தலை) இத்யாதி. மேல்திருமொழிகள் அநேகத்தோடும் ஸங்கதியை யருளிச்செய்து, அவ்யவஹிதமானத்தோடு அருளிச்செய்கிறார், (இப்படி) இத்யாதி. “ராமாவதாரம் ப்ரஸ்துதமாயிற்று” என்று வ்ரு

---

(௧) ௧-௧-௬-

ல்லையான உகந்தருளின நிலங்களெங்கும் புக்கநுபவிக்கக்கோலி; அதில் இப்பாஷை நடையாடுமிடத்துக் கெல்லையாயிருக்குமிறே திருமலை, அவ்வளவிலே நில்லாதிறே இவருடைய ஆசையானது, ஆகையாலே உகந்தருளின நிலங்களுக்கு எல்லையான ஹிமவானில் திருப்பிரிதியளவுஞ்சென்று அவ்விடத்தையநுபவிப்பதாகத் § திருவுள்ளத்தோடே கூட்டுகிறார். †கீழ்த்திருமொழியிலே, "அம்பினு லரக்கர் வெருக்கொள நெருக்கி" என்று ராமாவதாரமுகத்தாலே விரோதிநிரஸநம் ப்ரஸ்துதமிறே; அவ்வழியாலே, மஹாராஜர் †வெறுவியருமாய், தனியருமாய் ஜ்யேஷ்ட்டனாலே நெருக்குண்டு நோவுபட்டிருக்க, அவர் அபேக்ஷியாதிருக்கச்செய்தேயும் (க) "𑌸 𑌰𑌾𑌮𑍋 𑌵𑌾𑌨𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌯-ஸராமோவாநரேந்த்ரஸ்ய" என்கிறபடியே - தாமே அவரிருந்த விடத்தேசென்று அவர் விரோதியைப்போக்கி யுபகரித்தாற்போலே, அவன்றானே நம்முடைய குறைகளையுமெல்லாம் தீர்த்து உபகரிக்கைக்காக இங்கே திருப்பிரிதியிலேவந்து எழுந்தருளியிருந்தான், நெஞ்சே! அங்கேசென்று கிட்டப்பாராய் என்று திருவுள்ளத்தோடே கூட்டுகிறார். †முன்பெல்லாம் கண்ணுக்கிலக்கான விஷயங்களிலே ப்ரவணராய்ப்போந்தார்; பகவத்ஜ்ஞாநம் பிறந்தபின்பும் அவ்வாஸநை அநுவர்த்தித்து, கண்ணுக்குவிஷயமான உகந்தருளின நிலங்களிலே புக்கநுபவிக்கிறார்; (உ) "தானுகந்த ஊரெல்லாம்" என்னக்கடவதிறே.

முதற்பாட்டு.—(வாலி) இத்யாதி. வாலியென்று பேராய், மஹாபலத்தில் வந்தால் தன்னை எண்ணினால் இரண்டாம்விரலுக்கு ஆளில்லாதபடி அத்விதீயனாயிருக்கிறவனுடைய உடலானது சிந்தும்படியாக தர்சநீயமான வில்லைவளைத்து. †வாலியு மழிகையும் கிடக்கச்செய்தே, கைக்கையும் வில்லும் சேர்ந்த சேர்த்தியும் தர்சநீயதையும்

---

த்தகீர்த்தநத்துக்கு ஸங்கதிதன்னை முதற்பாட்டைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார், (கீழ்த்திருமொழியிலே) இத்யாதி. (வெறுவியர்) தரித்ரர். "திருமந்த்ரமும் ப்ரஸ்துதமாயிற்று" என்றத்தாலே திருமந்த்ரத்துக்கு பரத்வாதிகளெல்லாம் அர்த்தமாயிருக்க, ஏகதேச அர்ச்சாவதாரங்களிலேதானே போவானென்னென்ன; ரஸோக்திமுகேந வருளிச்செய்கிறார், (முன்பெல்லாம்) இத்யாதி.... ... ... ... ... ... ... ... ... ...

முதற்பாட்டு, — (வாலி) இத்யாதி. தம்முடைய விரோதிகளைப் போக்குகைக்கு உறுப்பாக வாலிவதம்சொல்லவேண்டினால், உடல்கெடுத்து என்னலாமே, "வரிசிலைவளைவித்து" என்னுமதுக்குக் கருத்தென்னென்ன; அருளிச்செய்கிறார், (வாலியும்) இத்யாதி. "𑌚𑌾𑌪𑍇 𑌗𑍃𑌹𑍀𑌤𑍍 - சாபே க்ருஹீத்

---

§ திருவுள்ளத்தோடேகூட்டுகை-திவ்யதேசத்தைத் திருவுள்ளத்துக்கு விஷயமாக்குகை.

(க) ரா-கி. (உ) தி-நெ-ரு.

அநுபவிக்கிறாராயிற்று இவர். (க) ''शत्रुनाशने - சத்ருநாசநே'' என்கிறது கிடக்க, (க) ''शक्रचापनिभे - சக்ரசாபநிபே'' என்கிறத்தை அநுபவிக்கிறார். †உகப்பாரோடு உகவாதாரோடு வாசியற இரண்டுதிறத்தாரையும் அழிக்குமாயிற்று. [शक्रचापनिभे-சக்ரசாபநிபே] இத்யாதி. இந்த்ரதநுஸ்ஸுபோலே அநுகூலர்க்கு வைத்த கண்மாறாதே கண்டுகொண்டிருக்கவேண்டும்படி தர்சநீயமாயிருக்கும். [गृहीत्वा - க்ருஹீத்வா] † விற்பிடித்தபிடியிலே ப்ரதிகூலர் முடிந்துபோம்படியுமாயிருக்கும். † அநுகூலரை அழகாலே யழியச்செய்யும். ப்ரதிகூலரை அம்பாலே யழியச்செய்யும்.

(உ) † [எரிசிதறும்சரத்தால்] (ங) ''दीप्तपावकसंकाशैः-தீப்தபாவகஸங்காசை:'' என்கிறபடியே தொடுத்துவிடும்போதாயிற்று அம்பென்று அறியலாவது: தைக்கும்போது உடம்பிலே நெருப்பைச் சொரிந்து கொண்டாயிற்று தைப்பது. [இலங்கையினை] § அந்தகனுங் கூடப்ரவேசிக்க அஞ்சும்படியான ஊரை. [தன்னுடை வரிசிலைவாயிற்பெய்து]ஸர்ப்பம் நாவாலே விழுங்குமாபோலே யாயிற்று அது அம்பாலே க்ரஸிக்கும்படி. வில்லுக்கு வாய் அம்பிறே. வாயான அம்பிலே புகும்படி ப்ரவேசிப்பித்து. [வாய்க்கோட்டம் தவிர்த்து] வாயில், கோடுதலுண்டு - விலங்குதல், அத்தைத்தவிர்த்தானாயிற்று. (ச) ''नगमेयम् - நகமேயம்'' என்றிருந்த இருப்பைத் தவிர்த்தானாயிற்று. (ச)† [कस्यचित् - கஸ்யசித்] இவர் தம்மை இதர ஸஜாதீயராக்கிவைக்கையாலே மநுஷ்யரென்றேயிருந்தான், இவரேயன்றிக்கே ஈஶ்வரன் என்று சொல்லுகிற அவன்றான் வந்தால்தான் வணங்ுவனோ? ஸ்வரூபம் கைபுகுந்தால் (ரு) ''[illegible]

வா'' - என்றது - ஆயுதமாகையாலே விரோதிநிரஸநம் அர்த்தலப்யமாயிருக்கவும், शत्रुनाशने-சத்ருநாசநே'' என்று விசேஷித்ததுக்கும், ''शक्रचापनिभे-சக்ரசாபநிபே'' என்று வர்ணிக்கைக்கும் ருஷிகொண்டாடுகிறானென்று தாத்பர்யமருளிச்செய்கிறார், (உகப்பாரோடு) இத்யாதி. சக்ரசாபநிபங்களான சாபங்களை சத்ருநாசகமாம்படி க்ருஹீத்வா என்று அர்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளிச்செய்கிறார், (விற்பிடித்த) இத்யாதி. வில்லானது சத்ருநாசநமான வழியை யுபபாதிக்கிறார், (அநுகூலரை) இத்யாதி. இங்கு (அநுகூலரை) இத்யாதி த்ருஷ்டாந்தார்த்தம்.

ப்ரதிகூலரை அம்பாலே யழித்தாரோவென்ன; அருளிச்செய்கிறார், (எரி) இத்யாதி. எடுத்தபாசுரத்துக்குப் ப்ரமாணபூர்வகமர்த்த மருளிச்செய்கிறார், (தீப்த) இத்யாதி. ''नगमेयम्-நகமேயம்'' என்றது அதிக்ரூரமானபடியை யருளிச்செய்கிறார், (*ஸ்ய) இத்யாதி. ''வாயில்கோடுதல்'' என்றவாக்

(க) ரா-கி-ங-கூ. (ங) ரா-யு-கரு-உஉ. (ரு)
(உ) பெரி-திரு-சு-ங-அ. (ச) ரா-யு-நகூ-கக. § அந்தகன்-யமன்.

அ

நம இத்யேவ வாதிந:” என்றாயிற்று இருப்பது; “மம” என்றிருக்கையாயிற்று ஸ்வரூபவிரோதி. †அநுகூலபாஷணம் பண்ணுகைப்ராப்தமாயிருக்க “எனக்கு” என்றபேச்சில் விலங்குதலைத்தவிர்த்தாளாயிற்று. (உகந்தவரையன்) ஈரரசுதவிர்த்தபின்பு உகந்தபடி. இவன்றான் “எனக்கு” என்றிருக்குமத்தைத் தவிர்த்தோமாகில் இனி நம்மதேயன்றோ! என்று இனியனானான். இவன் “என்னது” என்றிருக்குமதுதவிர்ந்தால், பின்புள்ளதடையத் திருவிடையாட்டமாயிருக்குமிறே. (அரையன்) இவன்பக்கல் ஆல்பாநுகூல்யமமைகிறது உடையவனாகையிறே; இவன் ப்ராதிகூல்யத்தில்நின்றும் நிவ்ருத்தனானவளவுகொண்டு உகக்கும்படியாயிற்று ஸ்வாபாவிகஸம்பந்தமிருப்பது. (அன்று) அன்று † அங்ஙனே செய்தான், இன்று இங்கே வந்திருந்தான்.

(ஏலம்) இத்யாதி. † வினையுள்ளபோதாயிற்றுத் தன்னைப்பேணாதே மேல்விழுந்து வ்யாபரிப்பது, அதுபோனவாறே ராஜபுத்ரனாய்ச் செல்வப்பிள்ளையாய் வளர்ந்த ஸௌகுமார்யம் வந்து முகங்காட்டுமிறே; அதுக்கிடாகவிருக்கிற விடமாயிற்று. † அன்றிக்கே, “அம்புக்குச்செல்லாதவிடத்தை ஆஸநத்தாலே திருத்துவோம்” என்று பார்த்து வந்திருந்தபடியாகவுமாம்; சத்ருக்களை அழிக்கவொண்ணாவிட்டால் “அவர்களோடே எதிரிட்டுக்கொள்வோமல்லோம்” என்று பார்த்து, எடுத்துவிட்டு ஆஸநத்தாலே பக்நாபிமாநராக்குமாபோலே. (ஏலம்நாறு) † விட்டுப்போந்தவிடத்தை விஸ்மரிக்கும்படி பண்ணும் தேசமாயிற்று. (க) “அதிகம் புரவாஸாச்ச - அதிகம் புரவாஸாச்ச”(உ)“ஜநநீம் ச ஸுக்ஷுதம் புரவிப்ரவாஸாத் - ஜநநீ சதுஃக்கம் புரவிப்ரவாஸாத்” † படைவீட்டில் விசேஷேண உண்டான ப்ரக்ருஷ்டயத்தை விவரிக்கிறார், (அநுகூல) இத்யாதி. (அங்ஙனேசெய்தான்) - வாலியைக்கொன்றானென்றபடி.

(வினை)-யுத்தம். அத்யந்தப்ராதிகூல்யமில்லாதவர்களை வசீகரிக்கைக்கு போக்யமான தேசத்திலே ஸ்த்தாயியாயிருப்போமென்று வந்தானைத் தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார், (அன்றிக்கே) இத்யாதி. எடுத்துவிடும் ராஜாக்கள் நீரும்நிழலும் பார்த்திருக்குமாபோலே யிருந்தானென்று கருத்து. நீரும் நிழலும் பார்த்திருக்குமிடத்திலே பரிமளத்தைச் சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார், (விட்டு) இத்யாதி. விட்டுப்போந்தவிடம் திருவயோத்யை. “அதிகம் புரவாஸாத் - அதிகம் புரவாஸாத்” என்ற பெருமாளுக்கு விப்ரவாஸமானது, புரத்தில்நின்றும் புறம்பேவந்ததுஃக்கம்போலே அதிசயமாகச் சொல்லவொண்ணாதென்று அதுக்கு அர்த்தமருளிச்செய்கிறார், (படைவீட்டில்)

(க) ரா-அயோ-கூ-கஉ. (உ) ரா-அயோ-நிகூ-ரு-அ.

வாஸத்தால் வந்த து:க்கடடையப்போம்படியாயிற்று இங்குத்தை வாஸம். † பரிமளத்தையுடைத்தாய் ஶ்ரமஹரமாய் பரப்பையுடைத்தாயிருந்துள்ள பொழில். (இடம்பெற) இடம்பெறவிருக்கையாவது - எல்லார்க்கும் காட்சிகொடுக்கைக்கிடாக ஓலக்கமிருக்கை. நித்யஸூரிகளுக்கு ஓலக்கம் கொடுக்கையன்றிக்கே நித்யஸம்ஸாரிகளுக்கும் ஓலக்கம் கொடுத்துக்கொண்டிருக்கை. அவதாரகாலத்தில் காணப்பெறாதாரெல்லார்க்கும் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கிற விடமாயிற்று. (நல் இமயத்துள்) ஒருகாரியப்பாடொழியவேயும் வர்த்திக்கவேண்டும்படியான தேசமாயிற்று. † தன்னநுக்ரஹத்தாலே வர்த்தித்தானாகவேண்டாதே, தேசவாஸந்தானே உத்தேஶ்யமாகப் போரும்படியிருக்கை.

(ஆலி) இத்யாதி. ஶ்ரீவைகுண்டத்தில் வாத்யகோஷங்களோடும் நித்யஸூரிகள் (க) "அஹமந்நமஹமந்நம் - அஹமந்நமஹமந்நம்" என்று களிக்குமத்தோடும் போதுபோக்கியிருக்குமவன், அவ்விழவு தீர, அவை தன்னையுங்கூட மறக்கும்படி, மேகங்கள் கோஷிக்க, மயில்கள் ஆட, அதுகண்டு போதுபோக்கிக்கொண்டிருக்கிற விடமாயிற்று † வினையற்றுப் பிராட்டியோடேகூட எழுந்தருளியிருக்கையாலே மேகத்வநிதான் அநுகூலமாயிருக்குமிறே. (ஆலி) இத்யாதி. † சிறுதுளியையுடைத்தான மஹாமேகங்களானவை நீர்க்கநத்தாலே முழங்க. † ஆலிமாமுகிலதிர்தர பீலிமாமயில் நடஞ்செய்யுமாயிற்று; வாத்யங்கள் வாய்த்தால் கூத்தாடுவாருடம்பு பேசாதிராதிறே; காலுக்கீடாகவாய்த்தவாறே ஆடுவாரைப்போலே, அவைமுழங்க இவை ஆடாநிற்குமாயிற்று. (அருவரை) இத்யாதி. ஒருவரால் தாங்கவொண்ணாதபடியான மலைகளிலே. ப்ரீதியாலே ஏறில் ஏறுமத்தனையாயிற்று; அவற்றின்மேல் கீழ்வயிறுணர்ந்து தழுவும்படியாக சிகரத்திலே

இத்யாதி. இத்தால் - மிகவுமதிகமாகப் புரத்திலேயிருக்கையாலே யதேஷ்டமாகப் பிராட்டியோடே ஸஞ்சரிக்கவொண்ணாதே மாதாபிதாக்களுக்கு அஞ்சிக்கிடந்த து:க்கம் தீர்ந்தது திருச்சித்ரகூடத்திலேயானாற்போலே, இருப்பிரிதியிலேயிருந்தானென்றதாயிற்று. சப்தார்த்தம், (பரிமளத்தை) இத்யாதி. சப்தார்த்தம், (தன்னநுக்ரஹத்தாலே) இத்யாதி.

வாலிவதம்பண்ணினவர் வந்துவர்த்திக்கிறாரகில் மால்யவானிற்போலே மேகத்வநி பாதகமாகாதோவென்ன; அருளிச்செய்கிறார், (வினையற்று) இத்யாதி. வாலிவதம் ராவணவதத்துக்கு உபலக்ஷணமென்று திருவுள்ளம். சப்தார்த்தம், (சிறுதுளி) இத்யாதி. மயில்நடம்செய்கைக்கு அதிர்தருகை ஹேதுவானமையைக்காட்டுகிறார், (ஆலிமாமுகில்) இத்யாதிவாக்யத்தாலே.

(க) தை - ப்ருகு - ௰ - ௬.

மூ — கலங்கமாக்கடலரிகுலம்பணிசெய்ய
அருவரையணைகட்டி
இலங்கைமாநகர்பொடிசெய்தவடிகள்தா
மிருந்தநல்லிமயத்து
விலங்கல்போல்வன விறலிருஞ்சினத்தன
வேழங்கள்துயர்கூரப்
பிலங்கொள்வாளெயிற்றரியவைதிரிதரு
பிரிதிசென்றடைநெஞ்சே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நெஞ்சே | ஓமநஸ்ஸே! | விலங்கல்போல்வன | மலைபோன்றனவாய் |
| மாக்கடல் | மஹாஸமுத்ரம் | | |
| கலங்க | கலங்கும்படி | விறல் | மிடுக்கையுடையன |
| அரிகுலம் | குரங்குக்கூட்டம் | இரும் | மிக்க [வான |
| பணி | அடிமையை [லே) | சினத்தன | கோபத்தையுடைய |
| செய்ய | பண்ணவும், (அத்தா | வேழங்கள் | யானைகளானவை |
| அரு | சலிப்பிக்கவொண்ணாத | துயர்கூர | மிக பயப்படும்படி |
| வரை | மலைகளைக்கொண்டு | பிலம் | குஹைகளை |
| அணைகட்டி | ஸேதுபந்தநம்பண்ணி | கொள் | இருப்பிடமாகவுடையனவாய் |
| மா | பெரிய | | |
| இலங்கைநகர் | லங்காபுரியை | வாள் | வாள்போன்ற |
| பொடிசெய்த | சூர்ணமாக்கின | எயிறு | பற்களையுடைய |
| அடிகள்தாம் | ஸர்வஸ்வாமி [இற | அரிஅவை | ஸிம்ஹங்களானவை |
| இருந்த | நித்யவாஸம் பண்ணு | திரிதரு | ஸஞ்சரியாநிற்கிற |
| நல்இமயத்து | விலக்ஷணமான ஹிமவானிலே; | பிரிதி | திருப்பிரிதியை |
| | | சென்றுஅடை | போய்சேரப்பாராய். |

போயேறி, சிகரத்திற் பரப்படங்கலும் தன் தோகையாலே பரப்பி மயிலானது ஆடாநிற்குமாயிற்று. ராமாவதாரத்தில் விஜயங்கண்டு வாநரஜாதியாக ஆடினத்தை இவ்விருப்பைக்கண்டு மயில்கள் ஆடாநிற்குமாயிற்று. (பிரிதிசென்றடைநெஞ்சே) கைங்கர்யத்தில் குறையநின்றாரும் அத்தேசத்தைப்ராபித்து ப்ரீதிக்குப் போக்குவிட்டுச் சில வ்யாபாரங்களைப்பண்ணுகிற தேசமானபின்பு, சதுர்யத்தில் குறையற்றிருந்த நீ அத்தேசத்தைச்சென்று ப்ராபிக்கப்பாராயென்கிறார். கைங்கர்யத்தில் குறையநின்றாரோடு குறைவற்றாரோடு வாசியற நிலவராய் அடிமைசெய்யும்படியாயிற்று விஷயஸ்வபாவம் - துரும்பெழுந்தாடுமாயிற்று.

அகடு - கீழ்வயிறு. தோகையின்கநத்தாலே பறக்கக்கூடாமல் அகடுறவென்றுகருத்து. ... ... ... ... ... (க)

வ்யா.—இரண்டாம்பாட்டு-† தம்மிழவைப் பரிஹரித்த ப்ரஸங்கத்தாலே மஹாராஜரிழவைப் பரிஹரித்தபடியைப்பேசினர் முதற்பாட்டில்; மஹாராஜரிழவைப் பரிஹரித்தபின்பிறே பெருமாள் தம்மிழவைப் பரிஹரித்துக்கொண்டது; அந்த க்ரமத்திலே ராவணவதம்பண்ணினபடியைப்பேசுகிருர்.

(கலங்கவித்யாதி) † ஈஶ்வரன் தன் ஸங்கல்பத்தை நெகிழுகின்ருல் பதார்த்த ஸ்வபாவங்கள் மாருடுமாபோலேயாயிற்று, சக்ரவர்த்தித்திருமகன் முனிந்தாலிருக்கும்படியும். † ஒருவரால் கலக்கவொண்ணுத கடல் கலங்கும்படியாகவும், நித்யஸூரிகள் செய்யும் அடிமையை இடக்கை வலக்கை வாசியறியாத குரங்குகள் செய்யும்படியாகவும், நீரிலாழக்கடவ மலைகள் மிதந்து அணையாய் நிற்கும்படியாகவும் பண்ணிஞரயிற்று. (மாக்கடல்கலங்க) (க) "அப்ரமேயோ மஹோததிঃ - அப்ரமேயோ மஹோததிঃ" என்கிற கடல்கலங்கிக் கீழ்மண் கொண்டு மேல்மண்ணெறியும்படியாக. (அரிகுலம்பணிசெய்ய) †அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான திருவடி, திருவநந்தாழ்வான், ஸ்ரீஸேநாபதியாழ்வான் தொடக்கமானர் செய்யக்கடவ கைங்கர்யத்தை †ஸம்ஸாரிகளுக்கும் பின்னே எண்ணவேண்டும்படி இடக்கை வலக்கை வாசியறியாத வாநரஜாதிசெய்யும்படியாக.†சரீரஸம்பந்தமற்று ஒரு தேசவிசேஷத்திலேபோனல் செய்யும் அடிமையைத், தாழ்ந்த ஜந்மத்திலே பிறந்து இந்த சரீரத்தோடே செய்யும்படியாக. (அருவரையணைகட்டி) ஒருவரால் எல்லைகாணவொண்ணுத மலைகளைக் கொண்டு அணைகட்டி. (இலங்கை) † ப்ரஹ்மாதிகளும் ‡நெஞ்சுளுக்கி

அரு.—இரண்டாம்பாட்டு. — (கலங்கமாக்கடல்) இத்யாதி. (தம்மிழவைப் பரிஹரித்த) என்றது, (உ) "பன்றியாயன்று பாரகங்கீண்டபாழியாளுழியானருளே - நானுய்ய" என்னுமத்தைப்பற்ற.

கடல்முதலான பதார்த்தங்கள் ஸ்வபாவங்களை மாருடிக்கலங்கவும் கைங்கர்யம்பண்ணவும் மிதக்கவும்கூடுமோவென்ன; அருளிச்செய்கிருர், (ஈஶ்வரன்) இத்யாதி. முனிவால்மாருடினபடியேதென்ன; அருளிச்செய்கிருர், (ஒருவரால்) இத்யாதி. "பணி" என்ற பதவாஸநையாலே பலித்த அர்த்தத்தை யருளிச்செய்கிருர், (அஸ்ப்ருஷ்ட) இத்யாதி. (ஸம்ஸாரிகளுக்கும்) என்றது - தேஹபோஷணபரரான மநுஷ்யர்க்குமென்றபடி. நித்யஸூரிகளேயொழிய இங்குள்ளார் செய்யக்கூடாதோவென்ன; அருளிச்செய்கிருர், (சரீர) இத்யாதி. (ரு) "ஆத்மாநம் மாநுஷம் மந்யே-ஆத்மாநம்மாநுஷம்மந்யே" என்றுகொண்டேயிருக்குமவர் கட்டளைப்பட்ட லங்காநகரத்தைப் பொடிசெய்தமையைப்பற்ற ஈடுபாடாகத் தாத்பர்யமருளிச்செய்கிருர், (ப்ரஹ்மாதிகளும்) இத்

(க) ரா-யு.ககூ-ருக. (உ) க-க-ச- (ரு) ரா-யு-கஉ0-கஉ.
‡ நெஞ்சுளுக்கி-பயப்பட்டு.

யிருக்கும் ஊரை § மனிச்சுக்குலையாதபடி நின்று துகளாம்படிபண்ணின ஸ்வாமிகள். †ராவணன் பட்டுக்கிடக்க அவன்பார்வை "ஆதித்ய கிரணங்க ளிங்குப்புகுந்து ஸஞ்சரியாநின்றன கிடாய்" என்றுளிறே, அப்பரிபவம் பொறுமை பிணமெழுந்திருக்கும் என்று. (க)[ப்ரவிஷ்ய ... ப்ராப்தே பரிபவே நவே | அத்யவை நிர்ப்பயா லங்காம்] † இதுக்கு முன்பில்லாததொன்று இப்போது உண்டாயிற்றுகிடாய். முன்பு நெல்லுலர்த்தவேண்டிவது ஸஞ்சரித்துப் போமித்தனையாயிற்று † ராவணபயத்தாலே; இப்போது நிர்ப்பயமாய்க்கொண்டு உலாவா நின்றன. (இலங்கைமாநகர்) (உ) †"... லங்காம் ராவணபாலிதாம்" பெண்பெண்டுகளுக்கும் நோக்கலாம்படியாயிற்று ஊரரண். வெளிநிலத்திலும் சிலர் புகுராதபடி பண்ணவல்லனாயிற்று உணர்ந்து நோக்குகிறான். †விரோதி நிரஸநஸ்வபாவனை தான் வந்திருக்கப்பெற்றபடியாலே ஸர்வஸ்வாமி யென்னுமிடம் தோற்றியிருக்குமாயிற்று. (இருந்த) என்று - வேறோரிடத்திலே இருப்பாய் இங்கே வருவது போவதாகையன்றிக்கேயாயிற்று இருப்பது. † இப்படி கொள்கொம்பூமுடிற்றென்றால் ஆஸநத்தாலே வெல்வதாகப்பார்த்து இவ்விடந்தன்னையே இருப்பாக்கினானாயிற்று. † விரோதி நிரஸநம்பண்ணின ஶ்ரம

யாதி. "நெஞ்சுளுக்குமூர்" என்னுமத்தை உபபாதிக்கிறார், (ராவணன்) இத்யாதி. ஸூர்யனஞ்சினது ப்ரஹ்மாதிகளுக்கு முபலக்ஷணமென்று கருத்து. உக்தார்த்தே ப்ரமாணம் - (க) "... ப்ரவிஷ்ய ... ப்ராப்தே பரிபவேநவே | அத்யவை நிர்ப்பயாலங்காம் ப்ரவிஷ்டாஸ்ஸூர்யரஶ்மய:|" என்ற ஶ்லோகம். இஶ்லோகத்துக்கர்த்தம், (இதுக்கு) இத்யாதி. (ராவணபயத்தாலே) என்றதுக்கு-ராவணனென்று பேர்பெற்ற உன்னுடையபயத்தாலேஎன்று மந்தோதரீ வாக்யத்துக்கு பாவம் கண்டுகொள்வது. "ப்ரஹ்மாதிகள் நெஞ்சுளுக்கும்படியாயிருக்குமூர்" என்னுமதுக்கு புநப்ரதீகக்ரஹண பூர்வகம் ப்ரமாணம்காட்டுகிறார், (லங்காம்) இத்யாதி. மனிச்சுக்குலையாதபடி பொடிசெய்தால், "அடிகள்" என்று ஸ்வாமித்வம் சொல்லும்படி எங்ஙனே யென்ன; தாத்பர்யமருளிச்செய்கிறார், (விரோதி) இத்யாதி. போவதுவருவதாகவன்றிக்கே இருக்கைக்கு ப்ரயோஜநந்தன்னை யருளிச்செய்கிறார், (இப்படி) இத்யாதி. கொள்கொம்பானது நட்டுக்கொண்டிருக்குமாபோலே, வணங்காதருக்கையாய், (ந) "நகமேயம்" என்றிருக்கையைச்சொல்லுகிறது. * ஏலநாறுதண்டடம்பொழிலான ஹிமவானில்லே ஶ்ரமமாறவென்றுசொல்லிவைத்து, இங்கே திருக்கைக்காக என்கிறதெப்படி யென்ன ; அருளிச்செய்கிறார், (விரோதி) இத்யாதி.

§ மனிச்சுக்குலையாதபடி-மநுஷ்யபாவம்-பௌருஷம் குலையாதபடி.
(க) ரா-யு-கக௪-அ௨. (உ) ரா. (ந) ரா-யு-ந௬ கக.

...றுகைக்கு இருந்தவிடந்தானே நங்கார்யம் செய்கைக் குடலாய் விட்டது.

(விலங்கலித்யாதி) † அங்குத்தையானைகளிருக்கும்படி. † மலைகளைக்கொண்டு நடந்தாற்போலே வடிவைக்காணவே பயாவஹமா† யிருப்பனவாய். † அப்பரப்பில் † அச்சமொன்றுமில்லையாயிற்று. † ஒருவரால் தகையவொண்ணாத மிடுக்கையும் மிக்க சினத்தையுமுடைய ஆனைகளானவை. (துயர்கூர) † நித்யதுக்கிகளாய்க்கொண்டு பயத்தை † வ்யுத்பத்தி பண்ணும்படியாக. கூர - மிக. † பயமில்லாமை ...விஸஜாதியமாயிருக்குமாபோலே, பயமுண்டானாலும் இதர ...ஜாதியமாயிருக்கும்படி. † இவைதுயர்கூர, இவற்றுக்கெதிரிகளானவை பண்ணும் வ்யாபாரமென்னென்னில்; (பிலங்கொள் ...யாதி.) பிலங்களிலே வர்த்திப்பனவாய், வாள்போலேயிருக்கிற ...யுடைய ஸிம்ஹங்களானவை ஸஞ்சரியாநிற்குமாயிற்று. † ...சத்ரு, இந்த்ரசத்ரு, ப்ரஹ்ம சத்ரு என்றாற்போலே சொல்லு... பெயல்களைப்போலே யிருந்துள்ள மிடுக்கையுடையவை மிக்க ...த்தையுடையவாம்படி அவை ஸ்வைரஸஞ்சாரம் பண்ணுகிற்கு ...யிற்று. † பெருமாள் கடலை யணைசெய்து அவ்வணையின்மேலே ...யும் வில்லுமாய்க்கொண்டு தெற்கு வடக்காக உலாவ லங்கை

"(வேழங்கள்" என்னுமளவுக்கும் தொகுத்தபாவம், (அங்குத்தை) இத்யாதி. ... க்கிறனவென்கை. "விலங்கல் போல்வன" என்றதுக்கு சப்தார்த்தம், (மலை) இத்யாதி. (இருப்பனவாய்) என்று ஸமாப்தமாக நிறுத்தினது, ...க்கு விசேஷணமென்று தோற்றுகைக்காக. ஆனைகள் மலைகள் ...ர்த்து மதித்திருக்கைக்கு ஹேதுவென்னென்ன; அருளிச்செய்கிறார் (அப்பரப்பில்) இத்யாதி. (அச்சமில்லை) - பயாவஹமான ம்ருகம் இல்லை. "..." இத்யாதிக்கு சப்தார்த்தம், (ஒருவரால்) இத்யாதி. இப்பாட்டில் ...முதலானோர் நிர்ப்பயராயிருக்க (க) "ஸஹஸ்ரஸ்தூணமயம்..." - ...மே வ்யோமம்" என்ற பரமபதத்தில்நின்றும்வந்து சக்ரவர்த்தி ... நடையாடின பின்பு பயஸ்வரூபத்தை அவர்களறிந்தார்களே ...ர்யம் விவக்ஷித்து, அதுக்கு த்ருஷ்டாந்ததயா ப்ரஸக்தமான வேழ ...முன்பு ஸிம்ஹஸஞ்சாரமற்று மதித்துத்திரிந்தன, பின்புவேழஹில் ... ஸிம்ஹங்கள் நடையாட, அந்த துக்கத்தை ப்ராபித்தன என்று ...ருளிச்செய்கிறார், (நித்ய) இத்யாதி, (வ்யுத்பத்திபண்ணும்படியாக) ...ன்மை அறியும்படியாக. அடைய என்றபடி. "மிக" என்றதுக்கு, "... தனைத்த தக்கவாதம்" என்னுமாபோலே, அதிக்யே தாத்பர்ய ...ருளிச்செய்கிறார், (பயம்) இத்யாதி. மேலுக்கவதாரிகை, (இவை) இத்யாதி. "கலங்க" இத்யாதியைக் கடாக்ஷித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார், (... ) இத்யாதி. கீழ்வாக்யவிவரணம், (பெருமாள்) இத்யாதி. (முழுக்

(க) ... - ஆநந்த - க - க.

மூ.—துடிகொள் நுண்ணிடைச் சுரிகுழல் துளங்கெயிற்
றிளங்கொடி திறந்து ஆய
ரிடிகொள் வெங்குர லினவிடை யடர்த்தவ
னிருந்த நல்லி மயத்து
கடிகொள் வேங்கையின் நறுமல ரமளியின்
மணியறை மிசை வேழம்
பிடியி னோடு வண் டிசைசொலத் துயில்கொளும்
பிரிதிசென் றடை நெஞ்சே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| துடிகொள் | உடுக்கைபோன்ற | வெம் | க்ரூரமான ]தாய் |
| நுண் | ஸூக்ஷ்மமான | குரல் | த்வநியையுடைத் |
| இடை | இடையையும் | இனம்விடை | கூட்டமாய்வந்த ஏழுருஷபங்களையும் |
| சுரி | சுருண்ட | | |
| குழல் | மயிர்முடியையும் | அடர்த்தவன் | நிரஸித்தஸர்வேஶ்வரன் |
| துளங்கு | விளங்காநின்றுள்ள | | |
| எயிறு | பற்களையுமுடைய | இருந்த | நித்யவாஸம்செய்கிற |
| இளங்கொடி திறத்து | பாலலதைபோன்ற நப்பின்னைப் பிராட்டிக்காக | நல் | நன்றான |
| | | இமயத்து | ஹிமவானிலே, |
| | | வண்டு | வண்டுகளானவை |
| ஆயர் | இடையரதாய் | இசைசொல | பாடவும் |
| இடிகொள் | இடிபோன்ற | கடிகொள் | பரிமளத்தையுடைய |

---

† முழுக்காயாகச் செத்துக்கிடந்தாற்போலே யாயிற்று, ஸிம்ஹங்கள் ஸ்வைர ஸஞ்சாரம்பண்ண ஆனைகள் முழுக்காயாக அவிந்துகிடக்கும்படி. † ஜ்ஞாநாஜ்ஞாநங்கள்கொண்டு கார்யமில்லை, அங்கு வர்த்திக்குமவையடைய வீரரஸோத்தரயாயாயிற்றிருப்பது. (உ)

---

காயாக) - முழுக்காக. அதாவது - எல்லாருமாக வென்றபடி. குஹையில்நின்றும் புறப்பட்ட ஸிம்ஹங்கள் ஆனைகளின்மேலே பாய்கை ஸ்வதப்ராப்தமாயிருக்க, அச்சமுறுத்தித் திரியாநிற்குமென்னக் கூடுமோவென்ன; சக்ரவர்த்தித்திருமகன் வீரரஸம்தோற்ற ஸஞ்சரிக்குமது, அவர்கள் பயப்பட்டு சரணமடையவேணுமென்னும் நினைவாலேயானாற்போலே இவையும் ஸஞ்சரிக்கிறனவென்று விவக்ஷித்து, திர்யக்குக்களுக்கு இந்நினைவு கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார், (ஜ்ஞாந) இத்யாதி. கர்மக்ருதஜ்ஞாநாதிகள் அப்ரயோஜகம், சக்ரவர்த்தித்திருமகனோட்டை ஸஹவாஸத்தாலே இவையும் வீரரஸம்தோற்ற ஸஞ்சரிக்குமென்று கருத்து. (உ)

| | | | |
|---|---|---|---|
| வெங்கையின் | வேங்கைமரத்தினது | வேழம் | மதயானையானது |
| கறும் | அழகிய | பிடியினோடு | தன்பேடையோடே |
| மலர் | புஷ்பம்நிறைந்த | துயில்கொளும் | உறங்குகிற |
| அமளியில் | படுக்கையில் | பிரிதி | திருப்பிரிதியை |
| மணி | இந்த்ரநீலமணி மயமான | சென்று | கிட்டி |
| | | நெஞ்சே | ஓமநஸ்ஸே! |
| அறைமிசை | பாறைகளின்மேலே | அடை | ஆஶ்ரயிக்கப்பாராய். |

வ்யா.—மூன்றாம்பாட்டு. † கீழ்ப்பாட்டில்-பிராட்டிக்காக லங்கையை யழியச்செய்தபடி சொல்லிற்று, நப்பின்னைப் பிராட்டிக்காக ருஷபங்களை யடர்த்தபடி சொல்லுகிறது - இதில்.

(துடிஇத்யாதி) † ருஷபங்களினுடைய க்ரௌர்யம்பார்த்து மீளவொண்ணாதபடியான நப்பின்னைப்பிராட்டியுடைய அவயவசோபையையும் பருவத்தையும் சொல்லுகிறது. †விஷயமிதுவானால் †கருமாரிபாயவேண்டாவோ; இவற்றுக் கநந்தரம் லபிக்கப்புகுகிறது இவளையாகையாலே, இவற்றினுடைய வெம்மை பார்க்கவொண்ணாதாயிற்று. † துடிபோலேயிருக்கிற § நேரிய இடையையுடையளாவது; †இவளிடையை யாசைப்பட்டாயிற்று (க) *†கோட்டிடையாடிற்று. † ஒருகொம்புக்காக இரண்டு கொம்பின்நடுவே விழுந்தான். கருண்ட குழலையுடையளாவது; இருளிலே சந்த்ரனுதித்தாற்போலே விளங்காநின்றுள்ள, எயிறுண்டு - தந்தபங்க்தி, அத்தையுடைய

---

அரு.—மூன்றாம்பாட்டு.—(துடிகொள்) இத்யாதி. கீழ்ப்பாட்டில் "பெருமான் தம்மிழவைப் பரிஹரித்துக்கொண்டது" என்றதுதான், பிராட்டியைப் பெறுகையாலே; இப்பாட்டில் நப்பின்னைப்பிராட்டியைப் பெற்றபடியை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதியருளிச்செய்கிறார், (கீழ்த்யாதி.)

நப்பின்னையை இப்படிவர்ணித்தது விடைகளை யடர்க்கையிலே ஹேதுவென்றது தோற்றத் தாத்பர்யமருளிச்செய்கிறார், (ருஷபங்களினுடைய வித்யாதி). உபபத்தியருளிச்செய்கிறார், (விஷயமித்யாதி வாக்யத்வயத்தாலே). (கருமாரிபாய்கை) - பஶ்சிம காஞ்சீநகரமத்யே குளத்திலே நட்டிருக்குமிரண்டு யயிரக்கூச்சு நடுவே உயரவிருந்து குதிக்கை. ஆக வ்ருஷபங்களினுடைய கொம்புகளின் நடுவே விழுந்தானென்றதாயிற்று. துடி-த்ருடி-த்ர்யணுகமாய், அத்தை உபமாநமாகக் கொள்ளாநிற்பதாய், அதஏவ, நுண்-ஸூக்ஷ்மமான இடையையுடையளாய் என்று சப்தார்த்தந் தன்னையருளிச்செய்கிறார், (துடிபோலே யித்யாதி). துடி - வாத்யவிசேஷமாகவுமாம். (உடையளாவது) என்று உடைத்தாயிருக்கிறாளென்றபடி. சாமுகேந இவ்விசேஷணத்துக்கு ப்ரக்ருதோபயோகம் காட்டுகிறார், (இவளித்யாதி). (கோடுகளுடைய) கொம்புகளுடைய, இடையிலே, (ஆடுகை) - விழுகை. இங்கே தோன்றின பாசுரத்துக்கு அர்த்தமருளிச்செய்கிறார், (ஒருகொம்புக்காகவித்யாதி). "ஆயர்

---

§ நேரிய - ஸூக்ஷ்மமான. (க) தி - வி - ௨.௬.

ளாவது. (இளங்கொடிதிறத்து) (க) "[Grantha text]-பதிஸம் யோகஸ-லபம்வய:" என்கிறபடியே ஒரு கொள்கொம்பு தேட்டமான பருவத்தையுடையளாவது; இப்படியிருக்கிற நப்பின்னைப்பிராட்டி யிடையாட்டமாக - அவளுக்காக. (ஆயரித்யாதி) இடையருடைய, இடியோடொத்திருப்பதாய் வெவ்விதான த்வநியையுடைய ருஷபங்கள் † ஒன்றிரண்டன்றிக்கே ஏழையும் நிரஸித்த. † லங்கையில் விரோதியைப்போக்கின க்ரமம் போராதாயிற்று இங்கு. அவளோடணைகைக்கு † அவதியாகையாலே † ஊட்டியாக நெரித்தானாயிற்று. (இருந்தநல்லிமயத்து) ருஷபங்களை நிரஸித்து நப்பின்னைப் பிராட்டியை லபித்து அவளும்தானுமாக வர்த்திக்கிற தேசமாயிற்று. பரமப்ரணயியானவன்வந்து வர்த்திக்கிற தேசமாயிற்று. † நப்பின்னைப்பிராட்டிக்கு உதவினாற்போலே ஆஶ்ரிதர்க்கெல்லா முதவுகைக்காக வந்திருக்கிற தேசமாயிற்று.

(கடியித்யாதி) பரிமளத்தையுடைத்தான வேங்கையினுடைய நறுமலரமளியுண்டு - செவ்வியிலேயுதிர்ந்த பூக்களாலுண்டான படுக்கை; அதிலே, மணியறைமிசை - † ஸம்போகத்துக்கு ஏகாந்தமான இருண்ட நீலப்பாறைகளையுடைத்தான †முழைஞ்சுகளிலே, †களிற்றானையானது, பிடியோடேகூட. மணியறை - மாணிக்கப்பாறை.

---

தம் கொம்பினுக்கே" என்றதிலேநோக்கு. கொம்பு - ஸ்த்ரீயென்று ஸ்வபாவார்த்தம். "இனம்" என்று கூட்டமாகச்சொன்னதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார், (ஒன்றிரண்டித்யாதி). "இனம்" என்று, விசேஷிக்கையாலே ஒருகாலே நிரஸித்தமை தோற்றுகையாலே பலிதார்த்தமருளிச்செய்கிறார், (லங்கையிலித்யாதி). (அவதியாகையாலே) - எல்லைநிலமாகையாலே என்கை. அத்தால் - காரணமாகையாலே என்கை. (ஊட்டியாக நெரித்தான்) என்றது - கழுத்தையெல்லாம் பிடித்து நெரித்தானென்றபடி. தாத்பர்யார்த்தம், (நப்பின்னையித்யாதி). ஆக, அவளோடேகூடி க்ரீடிக்கவந்த தேசமென்றதல், அவளுக்கு உதவினாற்போலே தமக்கு உதவவந்த தேசமென்றதல், இரண்டு தாத்பர்யம் சொல்லிற்றாயிற்று.

மணி - இந்த்ரநீலங்களாகிற, அறை - பாறை, மிசை - அதிலேயென்று சப்தார்த்தமருளிச்செய்கிறார், (ஸம்போகேத்யாதி). (முழைஞ்சுகளிலே) என்றது - "யோகிகளுக்கு உள்ளுச்செல்லவேணும்" என்றத்தைப்பற்ற. புஷ்பங்கள் நிறைய உதிரவேண்டுகையாலே வேங்கைகளொன்றுக்கொன்று கூடிக்கொண்டு க்ருஹம்போலேயிருக்குமென்று கருத்து. (களிற்றானை) - புருஷகஜம். "அறை" என்றவிடத்தில், ஐகாரம் சாரியையாய், அற - மிக்க, என்றர்த்தமாய். "அற - மாணிமிசை" என்று அந்வயித்து அர்த்தாந்தரமருளிச்

---

(க) ரா - அயோ - ககஅ - ருஅ.

மூ.—மறங்கொ ளாளரி யுருவென வெருவர
ஒருவன தகல் மார்வம்
திறந்து வானவர் மணிமுடி பணிதர
இருந்த நல்லிமயத்துள்
இறங்கி ஏனங்கள் வளைமருப் பிடந்திடக்
கிடந்தரு கெரிவீசும்
பிறங்கு மாமணி யருவியொ டிழிதரு
பிரிதி சென்றடை நெஞ்சே. (ச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மறம் | கோபத்தை | இருந்த | ஸர்வேஶ்வரன் நித்ய வாஸம்பண்ணுகிற |
| கொள் | ஏறிட்டுக்கொண்ட | | |
| ஆள் அரி | நரஸிம்ஹத்தினுடைய | நல் | நன்றான |
| உருஎன | வடிவைச்சொல்லவே | இமயத்துள் | ஹிமவானில் |
| வெருவர | பயப்படும்படியாக | ஏனங்கள் | பன்றிகளானவை |
| ஒருவனது | அஸத்ருசனான ஹிரண்யனுடைய | இறங்கி | குனிந்து |
| | | வளை | வளைந்த |
| அகல் | அகன்ற | மருப்பு | கொம்புகளாலே |
| மார்வம் | மார்வை | இடந்திட | (ரத்நபர்வதங்களை) பிளந்துபோகட |
| திறந்து | பிளந்து, | | (அவை) |
| வானவர் | தேவர்களுடைய | | |
| மணி | மாணிக்கமயமான | அருகு | ஸமீபத்திலே |
| முடி | கிரீடங்கள் | கிடந்து | இருந்து |
| பணிதர | (திருவடிகளிலே) வணங்கும்படி | எரிவீசும் | ஒளிவீசாநிற்பனவாய் |
| | | மா | பெருத்து |

அறை - பாறை. †அறவிலக்ஷணமான † பாறையென்றுமாம். (வண்டித்யாதி) சிலராஜபுத்ரர் துடைகுத்தவிட்டு உறங்குமாபோலே. †விரோதியான ருஷபங்களைப்போக்கி நப்பின்னைப்பிராட்டியோடே பரமரஸிகன் வர்த்திக்கிற தேசமாகையாலே அங்குத்தை திர்யக்குக்களும் ஶ்ருங்காரரஸ ப்ரதாநமாயிருக்கும். †இவை போகத்திலே அந்வயித்து பலாநுபவம்பண்ணி வர்த்தியாநிற்குமாயிற்று. (ரு)

செய்கிறார், (அறவித்யாதி). (பாறை) என்றது, அர்த்தாத்ஸித்தம். வண்டிசை பாட என்னாதே, "சொல" என்று கவிசொல்லுகையைச்சொல்லுகையாலே அப்படி கவிசொல்லுகைக்கீடான ஶ்ருங்காரரஸம் இவற்றுக்குண்டோவென்ன; அருளிச்செய்கிறார், (விரோதியானவித்யாதி). பரமரஸிகன் வர்த்திக்கையாலே யானைகளும் அவனைப்போலே போகத்திலே அந்வயித்து,காநப(ர்)லாநுபவம் பண்ணிக்கொண்டு (க) * கள்ளநித்திரை கொள்ளாநிற்குமென்று தாத்பர்யமருளிச்செய்கிறார், (இவையித்யாதி). ... ... ... (ரு)

(க) பெரி - திரு - ௯ - க - ௭.

| | | | |
|---|---|---|---|
| பிறங்கு | விளங்காநின்ற | பிரிதி | திருப்பிரிதியிலே |
| மணி | மாணிக்கங்கள் | சென்று | போய் |
| அருவியொடு | மலைவெள்ளத்துடன் | நெஞ்சே | ஓமநஸ்ஸே! |
| இழிதரு | உருண்டுவிழுகிற | அடை | கிட்டப்பாராய். (ச) |

வ்யா.—நாலாம்பாட்டு. — † அப்பருவத்தில் பாலனுக்கு உதவினபடி சொல்லுகிறது. †ப்ரணயிநிக்கு உதவின க்ரமம் பற்றாதாயிற்று ஆஶ்ரித விரோதிகளைப்போக்குமிடத்தில்.

(மறங்கொளாளரி) †நீர்மையேயாயிருக்கக்கடவ தான் மறமேயா ப்ரக்ருதி என்னும்படி, † நரஸிம்ஹத்தினுடைய மறந்தானொரு வடிவுகொண்டாற்போலே யிருக்கை. †(க) "பீஷணம்-பீஷணம்" என்றும், (க) "ம்ருத்யும்ருத்யும்-ம்ருத்யும்ருத்யும்" என்றும் சொல்லுகிறபடியே வடிவுதானே பயாவஹமாயிருக்கை. (உருவெனவெருவர) கைதொட்டுப் பிளக்கவேண்டாதே நரஸிம்ஹத்தினுடைய பேரைச்சொல்லவே ஆஸுரவர்க்கம் அஞ்சும்படியாயிற்று இருப்பது. †ஒரு வ்யாபாரம்பண்ணவேண்டாதே தோற்றரவிலே பிணமாம்படி

அரு.—நாலாம்பாட்டு.—(மறங்கொளித்யாதி). நப்பின்னைப்பிராட்டிக்கு உதவினாற்போலே ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு உதவினபடியைச் சொல்லுகிறதென்று ஸங்கதியருளிச்செய்கிறார், (அப்பருவத்திலித்யாதி). அப்பருவமென்று - கீழ் - "இளங்கொடி" என்றத்தைப் பராமர்சிக்கிறது. (உ) "பதிஸம்யோகஸுலபம் - பதிஸம்யோகஸுலபம்" என்னும்படியான பருவத்திலே விரோதிகளைப்போக்கி உதவினாற்போலே தன்னைக்காணவிடில் முடியும்படியான தசையிலேவந்து தோற்றி விரோதியைப்போக்கி உதவினானென்று கருத்து. சில ஸ்ரீகோசங்களிலே (ஆபத்திலே) என்று பாடமுண்டு. நப்பின்னைப்பிராட்டிக்கு உதவினாற்போலே உதவினபடியைச் சொல்லுகைக்கு ப்ரயோஜநமென்னென்ன; அருளிச்செய்கிறார், (ப்ரணயிநிக்கித்யாதி). கீழ்ப்பாட்டில் "இனவிடையடர்த்தவன்" என்று காயிகவ்யாபாரத்தைச்சொல்லி, இங்கே "உருவென வெருவர" என்று பேர்சொல்லவே பிணமாம்படி பயாவஹத்வம் சொல்லுகையாலே, ப்ரணயிநியிடத்தில் ஸ்நேஹத்திலும் ஆஶ்ரிதரிடத்தில் ஸ்நேஹம் விஞ்சியிருக்குமென்னும் அதிசயந்தோற்ற வருளிச்செய்தாரென்று கருத்து.

மறத்தையேறிட்டுக்கொண்ட ஆளரியென்று சப்தார்த்தமாய் தாத்பர்யமருளிச்செய்கிறார், (நீர்மையேயித்யாதி). மறந்தானே வடிவுகொண்ட ஆளரி என்று அர்த்தாந்தரமருளிச்செய்கிறார், (நரஸிம்ஹத்தினுடைய வித்யாதி). இதுக்கு நரஸிம்ஹாநுஷ்டுப்பிலே ப்ரமாணம் காட்டுகிறார், (பீஷணமித்யாதி). "உருவென" என்று - முழுச்சொல்லாய், தோற்றரவிலே என்றர்த்தமாய், இரண்டாமர்த்தமருளிச்செய்கிறார், (ஒருவ்யாபாரமித்யாதி). பேர்

(க) ந்ருஸிம்ஹாநுஷ்டுப். (உ) ரா - அயோ - ககக.ரு.ச.

யாயிற்று இருப்பது. (உருவெனவெருவர) வடிவென்கிற உக்தியிலே அஞ்ச. † (க) [எங்ஙனேயுய்வர் தானவர்நினைந்தால்] † ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானைப்போலே அநுகூலராய் "இது நமக்காகக் கொண்ட வடிவு" என்றிருப்பார் பிழைக்குமத்தனைபோக்கி, எதிரிகளாயிருப்பார் சிந்தித்தால் முழுக்காயாய் அவிந்துபோமத்தனை போக்கி உஜ்ஜீவிக்க விரகுண்டோ? †(உ) "கொண்ட சீற்றமொன்றுண்டு" என்கிறபடியே அச்சீற்றத்தைத் தஞ்சமாக நினைத்திருப்பார்க்கிறே பிழைத்துப்போகலாவது. (ஒருவனது) அம்மறத்தில்வந்தால் நரஸிம்ஹத்தினளவன்றிக்கே, தன்னை எண்ணினால் பின்னை இரண்டாம் விரலுக்கு ஆளில்லாதபடி அத்விதீயனானவனுடைய. † நரஸிம்ஹத்தையெண்ணி அநந்தரம் தன்னையெண்ணலாம்படியாயிற்றிறே; அப்படி தன்னை எண்ணினால் அநந்தரம் எண்ணலாவாரில்லாதபடியிருக்கை. (அகல்மார்வம் திறந்து) "ஈஶ்வரனொருவனுளன்" என்று அவனுடைய ஸத்பாவத்தை யிசையாதொழிகைக்கு ஹேது-உடம்பு தடித்து ருதிரக்களிப்பாலே யாயிற்று. †காவற்காட்டில் துஷ்டம்ருகங்களுக்கு †ஊட்டியிட்டு வளர்க்குமாபோலே, திருவுகிருக்கு இரைபோரும்படி தேவதைகளுடைய வரங்களாலே அகலப்பண்ணின மார்வை. (திறந்து) † களிப்பாலே போக்குக்காணாமை சுழிக்கிற ரக்தவெள்ளத்துக்கு ஒருவழிகண்டு திறந்துவிட்டாற்போலே, திருவுகிரையிட்டுத் திறந்துவிட்டானாயிற்று; வரபலத்தாலே மூலையடியே திரிகையாலே, ருதிரமானது, கடல்கிளரச்செய்தே கரையை அதிக்ரமிக்கமாட்டாதாற்போலே யிருக்கிறவதுக்கு ஒருவழி கண்டுவிட்டானாயிற்று; வெள்ளத்துக்கு ஒருபள்ளங்கண்டு விடுவாரைப்போலே. †ஒருசிறுக்கனுக்குத் தமப்பன் பகையாக உதவின அவதாரமிறே. இத்தால் சொல்லிற்றாயிற்று - விரோதி அணித்தாந்தனையும் தான் அண்ணியனாயுதவுமவனென்கை. தமப்பன் பகையாக உதவுமவன்

---

சொன்னமாத்ரத்திலே அஞ்சக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார், (எங்ஙனேயித்யாதி). பாசுரார்த்தம், (ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானை யித்யாதி). அநுகூலர் நினைத்துப் பிழைக்கைக்கு ஸம்வாதம், (கொண்டசீற்றமித்யாதி). பூர்வவாக்ய விவரணம், (நரஸிம்ஹத்தையித்யாதி). ருதிரக்களிப்புவருகைக்கு ஹேதுகதந பூர்வகம் "திறந்து" என்று அநாயாஸக்ருத்யம் தோற்றச்சொன்னதுக்குக் கருத்தருளிச்செய்கிறார், (காவற்காட்டிலித்யாதி). (ஊட்டி).- தீண்டி - (களிப்பாலே) - ரக்தத்தின் மிகுதியாலே. நரஸிம்ஹாபதாநத்தை யநுஸந்தித்த ஆழ்வார்க்குக் கருத்தை யருளிச்செய்கிறார், (ஒருசிறுக்கனுக்கித்யாதி [illegible]ஷ்யத்ர

---

(க) கு - எ - கு. (உ) கு - அ - ந.

அவனிலண்ணியனானதான் தனக்குப்பகையானல் உதவச்சொல்ல வேண்டாவிறே.

(வானவரித்யாதி) †முன்பு சத்ருவான ஹிரண்யனுக்கு அஞ்சி முடியும் வாங்கிப்பொகட்டு †மநுஷ்யராய் வேற்றுருக்கொண்டு திரிந்தவர்கள், இப்போது தந்தாம் ஸ்வரூபங்களும் பதங்களும் பெறுகையாலே "எங்களுக்குக் குடியிருப்புப் பண்ணித்தந்தது" என்று, அந்த உபகாரஸ்ம்ருதியாலே, † "ஒருவர்காலில் வணங்கோம்" என்று இறுமாந்திருக்கக்கடவவர்கள், தங்கள் முடிகளானவை திருவடிகளிலே தட்டும்படி விழுந்து எழுதிக்கொடுக்கும்படி யிருந்த. (நல்லிமயத்துள்) நன்றான ஹிமவானில். †"பூமியில் கால்பாவோம்" என்றிருக்கக்கடவதேவஜாதி, அம்மேன்மையையடையப்பொகட்டு பக்நாபிமாநமாய் வந்து ஆஸ்ரயிக்கும்படி யிருக்கிற விலக்ஷணமான ஹிமவானில்.

(இறங்கிஏனங்கள்) †அங்குத்தை வராஹங்கள் நரஸிம்ஹத்தின் போலியாயாயிற்றுச் செருக்கியிருப்பது; மலைகுனிந்தாற்போலே தலைசாய்க்கையரிதாம்படியாயிற்று வராஹங்களினுடைய இறுமாப்பு இருப்பது; அப்படியிருக்கிறஇவை இறங்கி, வளைந்த கொம்புகளாலே தம்செருக்குக்குப்போக்குவீடாக மாணிக்கப்பாறைகளை யிடந்து பொகட்டுத் தான் போகாநிற்குமே, அவையங்கேகிடந்து †ஜ்வலியாநிற்குமாயிற்று. (பிறங்குமாமணி) அவைதான் ஒருபாறைமாத்ரமாயிருக்கையன்றிக்கே ஒருமலைபோலேயாயிற்றுக்கிடப்பது. †பெருத்து ஶ்லாக்யமாயிருந்துள்ள மாணிக்கங்களானவை. (அருவியத்தாலே).

(தான் தனக்குப்பகையானல்) என்றது - "[illegible] - ஈஶ்வரோஹம்" என்று ஸ்வரூபநாசத்தை விளைத்துக்கொண்டானென்றபடி.

கீழ்ப்பதங்களைக் கடாக்ஷித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார், (முன்பித்யாதி). (மநுஷ்யராய்) என்றது - இப்போது "வானவர்" என்கையாலே பலிதம், "மணிமுடி" என்கையாலே பலிதம், (ஒருவரித்யாதி). நன்மையை உபபாதிக்கிறார், (பூமியிலித்யாதி).

நரஸிம்ஹம் தன்னுடையமறத்தாலே பர்வதம்போன்ற ஹிரண்யனுடைய மார்வையிடந்து ரக்தவெள்ளம் ப்ரவஹிக்கப்பண்ணுமாபோலே, வராஹங்கள் ரத்நபர்வதங்களைப்பிளந்து பொகட அத்தால்வந்த ரக்திமை அருவியிலே கலக்கையாலே ரக்தவெள்ளம்போலேயாயிற்று என்று தாத்பர்யம் விவக்ஷித்தருளிச்செய்கிறார், (அங்குத்தையித்யாதி). "பிறங்கு" என்றதினர்த்தம், (ஜ்வலியாநிற்கும்) என்றது. "மா" என்றது - பெருமையாதல், ஶ்லாக்யதையாதலென்று விவக்ஷித்து, ஏகப்ரகாரேண வருளிச்செய்கிறார், (பெருத்தித்யாதி). மணிப்பாறைஸ்த்தாநம் - மாம்ஸகண்டங்கள். ... ... ... (ச)

மூ.—கரைசெய் மாக்கடல்கிடந்தவன் கனைகழ
லமரர்கள் தொழுதேத்த
அரைசெய் மேகலை யலர்மகளவளொடு
மமர்ந்த நல்லிமயத்து,
வரைசெய் மாக்களிறிளவெதிர் வளர் முளை
யளை மிகு தேன் தோய்த்துப்
பிரசவாரி தன்னிளம்பிடிக்கருள் செயும்
பிரிதி சென்றடைநெஞ்சே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கனை | (ஆபரணங்கள்) சப்தியாநின்றுள்ள | அலர்மகளவளொடும் | தாமரைப்பூவிற்பிறந்த பெரியபிராட்டியோடே [ந |
| கழல் | திருவடிகளை | அமர்ந்த | பொருந்தி வர்த்திக்கி |
| அமரர்கள் | ப்ரஹ்மாதிகள் | நல் | விலக்ஷணமான |
| தொழுது | ஸேவித்து | இமயத்து | ஹிமவானில், |
| ஏத்த | ஸ்துதிக்கும்படியாக, | வரைசெய் | மலைபோலேயிருக்கிற |
| கரைசெய் | தானே கரைசெய்துகொண்டிருக்கிற | மா | பெரியவடிவையுடை |
| மா | பெரிய | களிறு | யானைகளானவை [ய |
| கடல் | திருப்பாற்கடலிலே | இளம் | இளையதான |
| கிடந்தவன் | சாய்ந்தருளின ஸர்வேஶ்வரன், | வெதிர் | மூங்கிலின் [ள |
| அரை | திருவரையிலே | வளர் | ஓங்கிவளராநின்றுள் |
| செய் | சாத்தப்பட்ட | முளை | முளைகளை (ட்பிடுங்கி) |
| மேகலை | திருப்பரியட்டத்தையுடையளான | அளை | முழைஞ்சுகளில் |
| | | மிகு | நிறைந்திருக்கிற |
| | | தேன் | தேனிலே |
| | | தோய்த்து | தோய்த்து |
| | | பிரசம் | தேன்கூண்டோடே |

யித்யாதி) அங்கேவர்ஷித்து வெள்ளங்கோக்குமே, பின்னையவ்வெள்ளந்தான் மலைகளைப்பேர்த்தாற்போலே அவற்றையு முருட்டிக்கொண்டுவந்து இழியுமாயிற்று.

ஆக, இத்தால்-நரஸிம்ஹமானது ஹிரண்யனுடைய மார்வைப் பிளந்து குடல்மாலையை ‡ ஒப்பித்தவநந்தரம் ருதிரவெள்ளமானது கொழித்துக் கொடுபுறப்பட்டாற்போலே யாயிற்று, நாநாவான தாதுக்களையுடைத்தான ஸ்தலங்களிலே வர்ஷித்த வர்ஷஜலமானது அவ்வவ தாதுவிசேஷங்களாலே கலங்கி ஒருவரால் சலிப்பிக்கப் போகாத ரத்நபாறைகளை யுருட்டிக்கொடு வந்திழிகிறபோதிருக்கபடி ... ... ... ... ... ... (௪)

‡ ஒப்பிக்கை - அலங்கரிக்கை.

| | | | |
|---|---|---|---|
| வார் | (அத்)தேனை | பிரிதி | திருப்பிரிதியிலே |
| ன் இளம்பிடி | தன்னுடைய சிறகுட் | சென்று | போய் |
| க்கு | டிகளுக்கு | நெஞ்சே! | ஓமநஸ்ஸே! |
| அருள்செயும் | கொடுக்கிற | அடை | கிட்டப்பாராய். (ரு) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு.—†அவ்வவதாரங்களுக்கடியாகத்திருப்பாற்கடலிலே வந்து கண்வளர்ந்தருளினபடியை யநுஸந்திக்கிறார்.

(கரைசெயித்யாதி) †ஆபரணங்களாலே அலங்க்ருதமான திருவடிகளை, "இவ்வழகைக் காணவேணும்" என்று ஆசைப்பட்டுப் பெறாதே யிருக்கிற ப்ரஹ்மாதிகள், ஸ்ரீ வைகுண்டத்திலே சென்று தங்களுக்குக்கிட்டவொண்ணாமையாலே காணப்பெறார்களிறே; அவர்கள் அவ்விழவுதீரக் கண்டநுபவிக்கும்படியாகத் திருப்பாற்கடலிலே வந்து சாய்ந்தானாயிற்று. தானே தனக்குக்கரையைச்செய்துகொடுநிற்கிற கடலென்னுதல்; அதாகிறது - கரையையதிக்ரமிக்க மாட்டாதிறே ஈஶ்வராஜ்ஞையாலே; அன்றிக்கே, †ஒருகாலத்திலே §கரைகட்டப்பட்ட கடலென்னுதல், † ஸாம்யத்தைப்பற்றச்சொல்லலாமிறே; † கரைசெய்கைக்காக-கரையேற்றுகைக்காக, மாக்கடல் கிடந்தவன் - பெரியகடலிலே கிடந்தவன். (கழலகழல்) ஆபரணத்வநியையுடைத்தானவென்னுதல்; †செறியப்பட்டவென்னுதல். (அரைசெயித்யாதி) ஓரிடத்திலே படுக்கையாயிருக்க வேறோரிடத்தை போகத்துக்கு ஏகாந்தஸ்த்தலமாகக்கொண்டு விரும்பியிருப்பாரைப்போலே, திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறவன் இங்கே வந்திருந்தானாயிற்று. †மாதாபிதாக்கள் கூடவிருந்து ப்ரஜையினுடைய ஹிதசிந்தை பண்ணுமாபோலே, பிராட்டியுந்தானுமாய் வந்திருந்தானாயிற்று. திருவரையிலே செய்யப்பட்ட மேகலை யுண்டு, திருப்பரியட்டம், அத்தையுடையளாய் போக்யதைகவேஷையான பெரியபிராட்டியா

அரு.—அஞ்சாம்பாட்டு.—(கரைசெயித்யாதி). கீழே ராமக்ருஷ்ணாவதாரங்களை அநுஸந்தித்து, இப்பாட்டில் க்ஷீராப்திசாயியை அநுஸந்திக்கைக்கு ஸங்கதியருளிச்செய்கிறார், (அவ்வவதாரங்களுக்கித்யாதி).

"கழலகழலமரர்கள் தொழுதேத்த கரைசெய்மாக்கடல் கிடந்தவன்" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி, ஹேது பூர்வகம் தாத்பர்யமருளிச்செய்கிறார், (ஆபரணங்களாலே யித்யாதி வாக்யத்வயத்தாலே). (ஒருகாலத்திலே)-ராமாவதாரத்திலே. க்ஷீராப்தியிலே ஸேதுபந்தநம் செய்ததில்லையேயென்ன; அருளிச்செய்கிறார், (ஸாம்யேத்யாதி). இவ்விரண்டுயோஜனையிலும் தனக்கு விதேயமான கடலென்று பலிதார்த்தம் கண்டுகொள்வது. ப்ரஹ்மாதிகளை ஸம்ஸாரத்தில்நின்றும் கரையேற்றுகைக்காகவென்று மூன்றாம் தாத்பர்யமருளிச்செய்கிறார், (கரைசெய்கை யித்யாதி). (செறியப்பட்ட)என்றது-ஆபரணங்களாலே நெருங்கப்பட்டவென்றபடி. இமயத்தில் வருகைக்கு ஹேத்வந்தரமருளிச்செய்கிறார், (மாதேத்யாதி). திருப்பரியட்டத்தை வர்ணிப்பானென்

§ கரைகட்டுகை - திருவணைகட்டுகை.

ரோடே பொருந்தி வர்த்திக்கிற விலக்ஷணமான ஒழிமவானில். ‡ பரி யட்ட வாய்ப்பை யநுபவிக்கு மிதுக்கு மேற்பட மற்றொன்றில் போ கவொட்டா தாயிற்று இதிலழகு. [கணைகழலமரர்கள் தொழுதேத்த கரைசெய் மாக்கடல் கிடந்தவன் - அரைசெய் மேகலையலர் மகள வளொடுமமர்ந்த நல்விமயத்து.]

(வரைசெய்மாக்களிறு) மலையை †வகுத்தாற்போலே யிருக்கிற பெரிய வடிவையுடைய ஆனைகளானவை, இளவெதிருண்டு-இளைய தான மூங்கில்; †அது, தன்னுடைய பருவத்தினளவன்றிக்கே முளை த்தபோதே அண்டபித்தியிலே சென்று தட்டும்படி வளர்ந்திருக்கு மாயிற்று; †அத்தைத்தன் செருக்காலே அநாயாஸேந வாங்கி, (அளை மிகுதேன் தோய்த்து) †வங்குகளிலே நிறைந்திருந்துள்ள தேனிலே தோய்த்து. ராஜாக்களுக்கு போக்யத்ரவ்யங்கள் குறைவற்றிருக்கு மாபோலே, தேன்குறை வற்றிருக்குமாயிற்று. † பிரசமென்று-தேன் கூட்டுக்கும், மதுகரங்களுக்கும் பேர். வாரியென்று - அவற்றினு டையதேன், அதிலே வளர்ந்த மூங்கில்முளைகளைக்கொடுபுக்குத்தோ ய்த்து, அதில் § பருக்கைதட்டாதபடி † அதின்வாயிலே பிழியுமாயி ற்று. பருக்கைதட்டு மாகில் மிடற்றுக்குக்கீழிழிச்சமாட்டாதாயிற்று; அதுக்கடி-இளம்பிடியாகை. †தேனில் ரஸம் பெறுகைக்காக அதிலே தோய்த்துப், பின்னை அதில்கந்தலுண்டு - கோது, அதுதட்டாதபடி

னென்ன; (பரியட்டேத்யாதி).

(வகுத்தாற்போலே) - ஆனையாகப்பண்ணினாற்போலே. இளையதானமூங் கில் என்றபோதே வளர்முளையாகை அர்த்தஸித்தமாயிருக்க, விசேஷித்ததுக் குக் கருத்தருளிச்செய்கிறார், (அதுவித்யாதி). அண்டபித்தியிலே தட்டும்படி யானத்தைப் பிடுங்கித் தேனிலேதோய்க்கும்படி யெங்ஙனேயென்ன; "வரை செய்மா" என்கிற பதங்களையுட்கொண்டருளிச்செய்கிறார், (அத்தையித் யாதி). அளை-முழைஞ்சுகளிலே, மிகுத்ததேனென்று சப்தார்த்தமருளிச்செய் கிறார், (வங்கித்யாதி). (வங்கு) - முழைஞ்சு. பிரசங்களினுடைய - வண்டுகளி னுடைய, வாரி - உண்ணத்தக்கதேனை, அருள்செய்யுமென்றுதல்; பிரசத்தோ டே - தேன்கூண்டோடே, வாரியை அருள்செய்வாரைப்போலே அருள்செய் யுமென்றுதல் தாத்பர்யம் விவக்ஷித்து, சப்தநிர்வாஹம் காட்டுகிறார், (பிரச மித்யாதி). த்ருஷ்டாந்தமாகச் சொன்னபக்ஷத்திலே, (அதின்வாயிலே) என் றவாநந்தரம், பிரசத்தோடே பிழியுமாபோலே என்று கூட்டுவது. தேனோடே இளமுளையைக் கொடுத்தால் - அதில் படுக்கையாம்படி அதிஸுகுமாரமான பிடி யென்று கருத்து. ஆனால் வெறுமனே தேனைக்கொடுப்பித்தாலாகாதோ? முளையைத் தோய்ப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார், (தேனிலித்யாதி).

§ பருக்கை - கோது.

மூ.—பணங்களாயிரமுடைய நல்லரவணைப்
 பள்ளிகொள் பரமாவென்று
இணங்கி வானவர் மணிமுடி பணிதர
 விருந்த நல்லிமயத்து
மணங்கொள் மாதவி நெடுங்கொடி விசும்புற
 நிமிர்ந்தவை முகில் பற்றிப்
பிணங்குபூம்பொழில் நுழைந்து வண்டிசை சொலும்
 பிரிதிசென்றடைநெஞ்சே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வானவர் | தேவர்கள் | முடி | (தங்கள்)தலைகளாலே |
| இணங்கி | திரளவிருந்து | பணிதர | ஸேவிக்கும்படியாக |
| ஆயிரம்பணங்கள் உடைய | ஆயிரம்படங்களையுடையனாய் | இருந்த | எழுந்தருளியிருக்கிற |
| நல் | (சேஷத்வமாகிற)நன்மையையுடைய | நல் | நன்றான |
| அரவு | திருவநந்தாழ்வானு | இமயத்து | ஹிமவானிலே; |
| அணை | திருப்பள்ளியிலே[கிற | மணம்கொள் | பரிமளத்தையுடைய |
| பள்ளிகொள் | கண்வளர்ந்தருளுகிற | மாதவி | குறுக்கத்தியினுடைய |
| பரமா | ஸர்வாதிகனே! | நெடு | நீண்ட |
| என்று | என்று ஸ்துதித்து | கொடி அவை | கொடிகளானவை |
| மணி | நவரத்நங்களிழைத்த கிரீடம்தரித்த | விசும்பு உற | ஆகாசத்தை அளாவும்படி |
| | | நிமிர்ந்து | வளர்ந்து [ம்படி |
| | | முகில் | மேகங்களை |
| | | பற்றி | தாவி |

பிழியும்; அதிலுண்டான பருக்கையுங் கூடப்பொறுதபடியாயிற்று இதினுடைய ப்ரக்ருதிமார்த்தவமிருக்கும்படி, † திர்யக்குக்களுக்கும் தன்னுடைய ரக்ஷ்யத்தினுடைய ரக்ஷணமே யாத்ரையாயிருக்குமாயிற்று.

† ப்ரஹ்மாதிகளுடைய ரக்ஷணத்துக்காகத் திருப்பாற்கடலிலேசாய்ந்து அவர்களை ரக்ஷிக்குமாபோலே யாயிற்று, திர்யக்குக்களுக்கும் ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணமே யாத்ரையாயிருக்கும்படி; பெரிய பிராட்டியாரும் தானுமாய் ஸம்ஶ்லேஷித்து வர்த்தியாநிற்குமவன், அந்த ஸம்ஶ்லேஷாநந்தரமாக மதுபாநகோஷ்டியாய்ச் செல்லாநிற்கு மிறே; அதுக்கு உபலக்ஷணம். ... ... (ரு)

---

இப்படி வர்ணித்ததுக்கு உட்கருத்தையருளிச்செய்கிறார், (திர்யக்குக்களுக்கு மித்யாதி).

பாட்டுக்கெல்லாம் தொகுத்து பாவமிரண்டுவிதமாக வருளிச்செய்கிறார், (ப்ரஹ்மாதிகளுடைய வித்யாதி). இதில் முந்தினபாவத்துக்கு "கரைசெய் மாக்கடல்" முதலடியிலே நோக்கு; இரண்டாவதுக்கு "அரைசெய்மேகலை" இத்யாதி இரண்டாமடியிலே நோக்கு. ... ... ... ... (௬)

| | | | |
|---|---|---|---|
| பிணங்கு | சுற்றிவலிக்கையிலே | இசைசொலும் | ஆலாபித்துப் பாடாநின்றுள்ள |
| பூ | பூக்கள் அலராநின்ற | பிரிதி | திருப்பிரிதியிலே |
| பொழில் | சோலைகளிலே | சென்று | போய் |
| வண்டு | வண்டுகளானவை | நெஞ்சே | ஓநெஞ்சமே! |
| நுழைந்து | ப்ரவேசித்து | அடை | கிட்டப்பாராய். (௬) |

வ்யா.—ஆறும்பாட்டு.—† அப்படி திருப்பாற்கடலிலே சாய்ந்தருளினவன் இங்கேவந்தெழுந்தருளியிருக்கிறபடியையநுஸந்திக்கிறார். † ஸ்ரீவைகுண்டம் கலவிருக்கையாயிருக்க அங்குநின்றும்எங்களுடைய கூக்குரல் கேட்கைக்காகத்திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினதேவரீர் எல்லார்க்கு மொக்க அநுபவிக்கலாம்படி இங்ஙனே யெழுந்தருளி யிருப்பதே! என்பர்களாயிற்று.

(பணங்களாயிர முடைய நல்லரவணைப்பள்ளிகொள்பரமா வென்று) † ஆறுகள் குளங்கள் நிரம்பினால் அதிகஜலத்துக்குப் போக்கு விடுகைக்குப் பல வாய்த்தலைகளுண்டாமாபோலே பகவதநுபவஜநித ஹர்ஷத்துக்குப் போக்குவிடுகைக்குப் பலதலைகளையு முடையனாயிருக்கிற திருவநந்தாழ்வானோட்டை ஸ்பர்சத்தாலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வாதிகனே! என்பர்களாயிற்று. பிராட்டியை எனக்கென்னுதல், திருவநந்தாழ்வானைப் படுக்கையாகப் பெறுதல் செய்யும் தத்வமாயிற்று ஸர்வாதிகமாவது. † உச்வாஸ நிச்வாஸங்களாலே ஸர்வேச்வரனுக்குத் தூங்குமெத்தைபோலே அசைந்து வாராநிற்குமாயிற்று. †யசோதைப்பிராட்டி க்ருஷ்ணனைத்தன் மடி

அரு.—ஆறும்பாட்டு.—(பணங்களித்யாதி). இமயத்திலிருக்கிறவனை ப்ரஹ்மாதிகள் அநந்தசாயித்வேந ஸ்துதித்தத்தாலே பலித்தவர்த்தத்தைச் சொல்லாநின்றுகொண்டு ஸங்கதியருளிச்செய்கிறார், (அப்படியித்யாதி). இமயத்திலிருக்கு மர்ச்சாவதாரத்தை க்ஷீராப்திசாயித்வேந அநுஸந்தித்தால் ஏற்றம் சொல்லிற்றாயிற்றோவென்ன; அருளிச்செய்கிறார், (ஸ்ரீவைகுண்டமித்யாதி). இத்தால் - தேவதிர்யங் மநுஷ்யர்களெல்லார்க்கும் முகங்கொடுக்கையாலே ஸௌலப்யாதிசயம் சொல்லிற்றென்றபடி.

"நல்லரவணை" இத்யாதியைச்சொல்லவே அநந்தசாயித்வத்தால் வந்த ஏற்றம்தோற்றுமே, "பணங்களாயிரமுடைய" என்று விசேஷிப்பானென்னென்ன; அதுக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார், (ஆறுகளித்யாதி). தாங்கள் ஸ்துதிக்க இழிந்தவர்களாகையாலே தங்களைப்போலே சதுர்முக பஞ்சமுகராகையன்றிக்கே ஸஹஸ்ரமுகனைப்பெற்றதே! என்றீடுபடுகிறார்களென்று கருத்து. நல்லதான அரவணை என்று விவக்ஷித்து நன்மையை யருளிச்செய்கிறார், (உச்வாஸேத்யாதி). எம்பெருமானை யேத்துகைக்கு ஸஹஸ்ரமுகமுண்டாகப்பெற்றோமென்றீடுபட்டதை ஸநிதர்சநமாக உபபாதிக்கிறார், (யசோதையித்யாதி).

யிலே கொண்டிருந்து தாலாட்டுமாபோலே, ஸர்வேஶ்வரனைத்தன் மடியிலே சாயவிட்டுக் கொண்டிருந்து ஏத்தாநிற்குமாயிற்று. †“திருவநந்தாழ்வான் மடியிலும், திருவடி சிறகின் கீழும், †ஸ்ரீஸேநாபதியாழ்வான் பிரம்பினுள்ளுங்காண் இத்தத்வம் வளருவது” என்று பட்டரருளிச் செய்யும்வார்த்தை †வ்ருத்த மந்த்ரிகள் ராஜபுத்ரர்களை வைத்து நடத்துமாபோலேயாயிற்று அவர்கள் நடத்தும்படி. அவர்களாலே நியாம்யனாயிற்று இருப்பது; (க) * வானிளவரசேறே; (உ) †[ ప్రకృష్ట విజ్ఞానబలైకధామని-ப்ரக்ருஷ்ட விஜ்ஞாந பலைகதாமநி] ஸர்வேஶ்வரனும் பிராட்டியுமாய்ச் சாய்ந்தால்அவர்கள் நினைவுக்குப் பாங்காகக் குழைந்து கொடுக்கைக்கீடானஜ்ஞாநாதிக்யத்தையும், இருவருமாய்த் துகையாநின்றால், “ஒருசேதநன்” என்று கூசாதே படுக்கை என்று துகைக்கலாம் படியானதா(ధా)ரண ஸாமர்த்யத்தையுமுடையனாயிருக்கை. †சேஷியானவன் ஸர்வாதிகனாயிருக்கச்செய்தே தன்னை ஆஶ்ரிதபாரதந்த்ரனாக்கி வைக்குமாபோலே, சேஷபூதனும் தன்னுடைய ஸர்வவ்யாபாரங்களையும் சேஷிக்கு உறுப்பாக்கி வைக்கக்கடவனிறே இளையபெருமாளைப்போலே. (நல்லரவணை) † அத்தலைக்கே உறுப்பாயிருக்கை. சேஷபூதனுக்கு நன்மையாவது-எனக்கென்னு மதன்றிக்கே சேஷிக்கே யுறுப்பாயிருக்கையிறே.

(௩) †[ భావజ్ఞేన కృతజ్ఞేన ధర్మజ్ఞేన చలక్ష్మణ । త్వయా పుత్రేణ ధర్మాత్మా నసంవృత్తః పితామహ-பாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந தர்மஜ்ஞேநச லக்ஷ்மண। த்வயாபுத்ரேண தர்மாத்மா நஸம்வ்ருத்தஃ பிதாமஹ.] [భావజ్ఞేన-பாவஜ்

ஸ்தோத்ரம்பண்ணுகையாலும், ஸ்பர்சமுகத்தாலும் திருவநந்தாழ்வானுக்கு யசோதைப் பிராட்டியோடு ஸம்பந்தம் கண்டுகொள்வது. சேஷசாயித்வம் பரத்வஸூசகமென்னுமதுக்கு ஸம்வாதம்காட்டுகிறார், (திருவநந்தாழ்வானித்யாதி). (சிறகின் கீழும்) என்றது - (ச) “యస్త్వైవతానంవ్యజనం త్రయీమయః-யஸ்தேவிதாநம் வ்யஜநம்த்ரயீமயஃ” என்றத்தைப்பற்ற. பிரம்பின்கீழே வர்த்தித்தால் நியந்த்ருத்வம் போகாதோவென்ன; (வ்ருத்தமந்த்ரிகளித்யாதி). இவன் படுக்கையாயிருக்கைக்கு அவர்கள் நினைவறிந்து பரிமாறுகைக்கீடான ஜ்ஞாநசக்திகளுண்டோவென்ன; அருளிச்செய்கிறார், (ப்ரக்ருஷ்டேத்யாதி). ஜ்ஞாநசக்திகளுண்டாயிருக்க அசேதநமான படுக்கையாகக்கூடுமோவென்ன; (சேஷியானவனித்யாதி). நன்றான அரவு என்றர்த்தாந்தரம், (அத்தலைக்கே யித்யாதி).

இளையபெருமாள் தான் சேஷிக்கே யுறுப்பாயிருந்தாரோ வென்ன; அருளிச்செய்கிறார், (பாவஜ்ஞேநேத்யாதி),

(க) பெரி - திரு - ௩-கூ-௩.
(உ) ஸ்தோ - ர - ௩க.
(௩) ரா - ஆர - கஙி - உக.
(ச) ஸ்தோ - ர - சக.

ஞேந] (க) "𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑌾𑌮𑍍-க்ரியதாம்" என்று †சொல்லுகிறவரிறே இளையபெருமாள். இப்படிசெய்யவல்ல நீர் நம்மைக் கேட்டதென்னென்கிறார். † பர்ணசாலையைச் சமைத்த வநந்தரம் சொல்லுகிறவார்த்தையிறே. [𑌭𑌾𑌵𑌜𑍍𑌞𑍇𑌨-பாவஜ்ஞேந]† அல்லாதவை சொன்னாலும், தாமும் பிராட்டியுமாய் ஏகாந்தமாயிருக்கு மிடங்கள் சமைக்கும்படி இளைய பெருமாளுக்குப் பெருமாளருளிச் செய்யாரிறே; நெஞ்சாலே நினைக்குமித்தனையிறே; இந்நினைவறிந்து செய்தார். [𑌕𑍃𑌤𑌜𑍍𑌞𑍇𑌨-க்ருதஜ்ஞேந] †அதுவேயன்றிக்கே செய்து போரும்படி யறிந்துசெய்தார். †அறுபதினாயிரமாண்டு ஜீவித்தசக்ரவர்த்தி நெடுநாள் மலடுநின்று பிள்ளை பெற்றவனாகையாலே "இவர் என் நினைந்திருக்கிறரோ" என்று நினைவை ஆராய்ந்தும், "இவர்க்கு எத்தாலே என்ன குறை வருகிறதோ" என்று பொருந்து மிடங்கள் பார்த்தும் அவன் செய்து போருமடைவு அறிவராயிற்று. [𑌧𑌰𑍍𑌮𑌜𑍍𑌞𑍇𑌨-தர்மஜ்ஞேந] நினைவறிந்தாலும், செய்து போருமடைவு அறிந்தாலும், தானும் ராஜபுத்ரனான பின்பு "எனக்கும் ஓரிருப்பிடம் வேண்டாவோ" என்றிருக்கு மவனுக்கு இது செய்யவொண்ணாதிறே; அங்ஙனன்றிக்கே "அத்தலையில் தாதர்த்யமே நமக்கு ஸ்வரூபமான பின்பு பின்னை அத்தலைக்குறுப்பாகச்செய்து போருமதே நமக்கு வகுத்தது" என்று அத்தலைக்காகச்செய்யுமத்தையே தமக்குக்கர்த்தவ்யமென்றிருப்பர். [𑌤𑍍𑌵𑌯𑍇-த்வயேத்யாதி]- தாமுள்ளவன்று தாமுளராய், தாம்போனவன்றைக்கும் உம்மை வைத்துப்போனாரே என்கிறார். [𑌪𑍁𑌤𑍍𑌰𑍇𑌣- புத்ரேண] "புத்" என்று ஒரு நரகவிசேஷமாய், அதில் புகாதபடி நோக்கும் என்றாயிற்றுப் புத்ரனென்றுபேராகிறது; ஐயர்க்கு, நம்முடைய அபிமதஸித்தியின்றிக்கே யொழிகைதனக்கு மேற்பட நிரயமில்லையிறே; அவர்க்கு அதுவராதபடி நோக்குகிறீர் நீரிறே. [𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌾-தர்மாத்மா] சக்ரவர்த்தி ப்ரஸ்துதனானவாறே "நம் அய்யரை யொப்பாருண்டோ? அவரு மொருவரே! தாமிருந்தநாள் தாம் வேண்டுவன

(சொல்லுகிறவரிறே) என்றது - சொல்லப்படுகிறவரிறே என்றபடி. இப்படிபாவஜ்ஞரென்று கொண்டாடினது எந்தகார்யத்தைக்கொண்டென்ன; அருளிச்செய்கிறார், (பர்ணசாலையை யித்யாதி). ஆனால் (க) "க்ரியதாம்" என்று நியமிக்கவன்றோ செய்தார், "பாவஜ்ஞேந" என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார், (அல்லாதவையித்யாதி). க்ருதம்-க்ருதியை, ஜ்ஞாநாதி-ஸாங்கமாக அறிவனென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்ய மருளிச்செய்கிறார், (அதுவேயித்யாதி). த்ருஷ்டாந்தபூர்வகம் விவரிக்கிறார், (அறுபதினாயிரமித்யாதி).

(க) ரா - ஆர - கரு - எ.

எனக்குச்செய்து தாம்போன வன்று நமக்கு வேண்டுவன செய்கைக்கு உம்மைப் பெற்றுத் தண்ணீர்ப்பந்தல் வைத்துப் போவதே! [𑌮𑌮-மம] இருவர்க்கும் பிதாவானமை ஒத்திருக்கச்செய்தே, "மம" என்கிறாராயிற்று, அவர் நமக்குச் செய்யுமவை நீரிருந்துசெய்கையாலே நாமவரை யிழந்திலோம், நீரிழந்தீராகிலித்தனையிறே. (க) †"𑌅𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 - அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்கிறவிடத்திலே, சேஷியுடைய வ்யாபாரமும் புகாதாகில் "𑌸𑌰𑍍𑌵𑌮𑍍 - ஸர்வம்" என்னவொண்ணாதிறே.

(அரவணை) நாற்றம் குளிர்த்தி தொடக்கமானவை ஜாதிப்ரயுக்தமாகவே யுண்டாயிருக்குமிறே. (பரமா) இப்படுக்கையிலே சாய்ந்தவனாயிற்று தனக்கு அவ்வருகொருவரையுடையனல்லாதவனாகிறான். (இணங்கி) க்ராமணிகளைப்போலேயாயிற்று தேவர்களும்; †ப்ரஹ்மஹத்யை சொல்லிப்பழியிடுவாரும், தலையை யறுப்பாரும், தலையை யறுப்புண்பாருமாயிறே யிருப்பது; இப்படியிருக்கிறவர்கள், கிண்ணகத்தி லிழிவாரைப்போலே ஒருமிடறாய் யாஶ்ரயிப்பர்களாயிற்று. †தேவர்களடங்கலும் திரண்டு இறுமாப்பாலே "வணங்கோம்" என்றிருக்குமது தவிர்ந்து பக்நாபிமாநராய்த் திருவடிகளிலே தலைகள்பட வணங்கும்படி யாயிற்று அங்கெழுந்தருளி யிருக்கிறது. †பரத்வத்தில் வணங்காதாருமெல்லாம் சீலம்கண்டு வணங்கும்படியாகவிருக்கிற தேசமாயிற்று.

(மணங்கொளித்யாதி) பரிமளப்ரசுரமாய் அதுக்கோ ராஶ்ரயம் வேணுமென்று கல்பிக்கவேண்டும்படியாயிற்றுத் தானிருப்பது. †மணத்தை யுடைத்தான மாதவியுண்டு-குருக்கத்தி, அதினுடைய, நெடுங்கொடியானது - ஶ்ரத்தையாலே வளர்ந்த கொடியானது; (விசும்புறநிமிர்ந்து) ஆகாசாவகாசத்தை வெளியடைத்துக்கொண்டு மேகபதத்தளவும் சென்று அத்தை மூடப்படருமாயிற்று. (அவையித்யாதி); ஆகாசத்திலே †முகடுருவ வளர்ந்தால் ஒரு கொள்

---

சேஷியன்ன பிதாசெய்யுமத்தை சேஷபூதர் செய்யக்கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறார், (அஹம்ஸர்வமித்யாதி).

வ்ருத்ராஸுரனை இந்த்ரன் கொல்லுகையாலே ப்ரஹ்மஹத்யை பண்ணினானென்று சொல்லுவரென்றருளிச் செய்கிறார், (ப்ரஹ்மஹத்யையித்யாதி). கீழ்வாக்யவிவரணம், (தேவர்களித்யாதி). "நல்லிமயத்து" என்ற நன்மைக்குத்தாத்பர்யம், (பரத்வத்திலித்யாதி).

மணந்தானே மாதவியை வ்யாபித்துக்கொண்டதென்று ஒருதாத்பர்யமருளிச்செய்து, மணத்தைக்கொண்டிருக்கிற என்றர்த்தாந்தரமருளிச்செய்கிறார், (மணத்தையித்யாதி). (முகடுருவ)-ஸாந்த்ரமாகவென்றபடி. பிணங்கு

---

(க) ரா - அயோ - ௩௧ - ௨௭.

மூ.— கார் கொள் வேங்கைகள் கனவரை தழுவிய
கறிவளர் கொடிதுன்னிப்
போர் கொள் வேங்கைகள் புனவரை தழுவிய
பூம் பொழிலிமயத்துள்
ஏர்கொள் பூஞ்சுனைத்தடம் படிந்தின மல
ரெட்டு மிட்டிமையோர்கள்
பேர்களாயிரம் பரவி நின்றடிதொழும்
பிரிதி சென்றடை நெஞ்சே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நெஞ்சே | ஓமநஸ்ஸே! | தழுவிய | வர்த்திக்கிற |
| கார்கொள் | மேகத்தைஆக்ரமித்த | போர்கொள் | யுத்தோந்முகமான |
| வேங்கைகள் | வேங்கைமரங்களை | வேங்கைகள் | வேங்கைப் புலிகளையு |
| தழுவிய | அணவியிருப்பதாய் | | டைத்தாய் |
| கனம் | பரந்த [ண்டான | பூ | (எப்போதும்) அலரா |
| வரை | தாழ்வரைகளிலே யு | | நின்றுள்ள |
| கறி | மிளகினுடைய | பொழில் | சோலையையுடைய |
| வளர் | வளர்ந்த | இமயத்துள் | இமயமலையிலே |
| கொடி | கொடிகளானவை [ய் | இமையோர்கள் | ப்ரஹ்மாதிதேவர்கள் |
| துன்னி | நெருங்கியிருப்பதுமா | ஏர்கொள் | அழகையுடைத்தாய் |
| புனம் | கொல்லைநிலங்க ளிலு | பூ | பூத்திருந்துள்ள |
| வரை | சிறுமலைகளிலே [ள்ள | சுனை | தடாகங்களின் |

---

கொம்பு அபேக்ஷிதமாயிருக்குமே, அப்போதாகக் கொள்கொம்பு கொடுப்பாரில்லையே, அவ்வளவிலே மேகங்கள் வந்து கிட்டுமே, அவற்றைச்சென்று பற்றும்; அவை வாயுப்ரேரிதமாய்ப் போகத்து டங்கும்; கொடியானது இங்கேயிசிக்கும், இவ்வாயாஸத்தால் வந்த அலசுதலிலே பூக்களலரா நிற்கும், அப்பூவிலே மதுபாநம் பண்ண நினைத்த வண்டுகளானவை அம்மேகத்துக்கும் கொடிக்கும் நடுவே நுழைந்து புக்கு மதுபாநத்தைப் பண்ணிக்களித்து அச்செருக்குக் குப்போக்குவிட்டு ஆளத்திவைத்து இசைசொல்லாநிற்கும்; அச் சோலையடைய மதுபாநம் பண்ணிக்களித்துப் பாடுகிற வண்டுகளி னுடைய இசை ஆரவாரமாயிருக்கும். † பெரியபிராட்டியாராகிற கொடி "ப்ரஜைகளை ரக்ஷிக்கவேணும்" என்றிசிக்க, "செய்கிறோ மிறே" என்று அவனிசிக்க, உள்ளடைய தேவர்கள் ஸ்தோத்ரம் பண்ணுகிற ஆரவாரமாயிருக்கும். (சு)

---

நலுக்கு அங்கேயிசிக்க, இங்கேயிசிக்க என்று பொருளாய், அலர்மகளைக்கொ டியாகவும் எம்பெருமானை முகிலாகவும் புஷ்பங்கள் ப்ரஸாத விசேஷங்களா கவும் வண்டுகள் தேவகணங்களாகவும், ஒருரூபகம் திருவுள்ளம் பற்றி, இப் படி வர்ணித்ததுக்குக் கருத்தருளிச்செய்கிறார், (பெரியவித்யாதி). ... (சு)

| | | | |
|---|---|---|---|
| தடம் | துறைகளிலே | பேர்களாயிரம் | ஆயிரம் திருநாமங்களையும் |
| படிந்து | தீர்த்தமாடி | பரவிநின்று | வாயில்வந்தபடிசொல்லி |
| இனம் | ஒரினமான | அடிதொழும் | ஸேவியாநின்றுள்ள |
| மலரெட்டும் | (செங்கழுநீர்முதலிய) எட்டுமலர்களையும் | பிரிதி | திருப்பிரிதியில் |
| இட்டு | ஸமர்ப்பித்து | சென்று அடை | போய் ஆஸ்ரயி. (எ) |

வ்யா.— ஏழாம்பாட்டு.—†புஷ்பாஞ்சலி பண்ணித்தேவர்கள் தொழாநிற்பர்க†ளாயிற்று.

(கார்கொள்வேங்கைகள்)†காரென்று-மேகமாய், கார்கொள்வேங்கைகளென்று-மேகபதத்தளவும் செல்லவளர்ந்த வேங்கைகளென்னுதல்; அன்றிக்கே நாநாவர்ணமாயாயிற்று வேங்கைகள் தானிருப்பது, அத்தாலே நீலவேங்கை என்னுதல். (கனவரைதழுவிய) சுற்றிலுண்டான தாழ்வரைகளிலே யுண்டான கறியினுடைய வளர்ந்த கொடியானது - மிளகினுடைய வளர்ந்தகொடியானது, நெருங்கப் படர்ந்துகிடக்கு மாயிற்று. (போரித்யாதி). † வெளிநிலங்களில் சிறு மலைகளடையப்பெரிய சீற்றத்தையுடைய யுத்தோந்முகமான வேங்கைப்புலிகள் நெருங்கிக் கிடக்குமாயிற்று. (பூம்பொழிலிமயத்துள்) † இதுவாயிற்றுச்சோலையிருக்கும்படி.

(ஏரித்யாதி) † தர்சநீயமாம்படி பூத்திருந்துள்ள தடாகங்களின் கரைகளிலே படிந்து. (இனமலரெட்டுமிட்டு) § (அஹிம்ஸாதி

அரு.— ஏழாம் பாட்டு.— (கார் கொளித்யாதி). கீழ்நாலாம் பாட்டிலே, தேவர்கள் விபவத்திலே பணிந்தார் களென்றும், அஞ்சாம் பாட்டிலே, அவதார கந்தமான க்ஷீராப்தி நாதனை ஸ்துதித்தார்களென்றும், ஆறும்பாட்டிலே, அந்த க்ஷீராப்திநாதனே ஹிமவானிலே அர்ச்சாவதாரமாக இருக்கிறானென்று அங்கே ப்ரணமம் பண்ணினார்களென்றும் அருளிச்செய்தாராய்; இப்பாட்டிலே, அர்ச்யனுகையாலே, அர்ச்சநம் பண்ணுகிறார்களென்று ஸங்கதியை யுட்கொண்டு, "இனமலரெட்டு மிட்டு" என்றபதத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார், (புஷ்பாஞ்சலியித்யாதி). (ஆயிற்று) என்றவநந்தரம், "அத்தையருளிச்செய்கிறார்" என்றுசேஷம்.

காரை-மேகத்தைக், கொள்ளாநின்றுள்ள வேங்கைகளையுடைத்தான கனவரையைத்தழுவின, கறியுண்டு-மிளகு, அதினுடையவளர்கொடியாலே துன்னியிருக்கிறதாயென்றும்; கார்-கருமையை யுடைத்தான, வேங்கைகளென்று மருளிச்செய்கிறார், (காரென்றித்யாதி). புனமென்று-சொல்லையாய், அவ்விடத்திய வரைகளைத்தழுவின வேங்கைப்புலிகளையுடைத்தான இமயமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார், (வெளிநிலங்களிலித்யாதி). (இதுவாயிற்று) நித்ய வஸந்தமாய், பூத்தேயிருக்கும்படியாயிற்றென்றபடி.

ஏர் - அழகைக், கொள்ளாநிற்கிற, பூஞ்சுனை யென்றருளிச்செய்கிறார், (தர்சநீயேத்யாதி). இனமலர்போலே போக்யமான திருவஷ்டாக்ஷரத்தையும்

§ குண்டலிதம் க்வாசித்கம்.

மூ.— இரவுகூர்ந்திருள்பெருகிய வரைமுழை
இரும்பசியது கூர
அரவ மாவிக்கு மகன் பொழில் தழுவிய
வருவரை யிமயத்து
பரமனாதி யெம்பனிமுகில் வண்ணனென்
றெண்ணி நின்றிமை யோர்கள்
பிரமனோடு சென்றடிதொழும் பெருந்தகைப்
பிரிதி சென்றடை நெஞ்சே (அ)

களான புஷ்பங்கள் எட்டு மிட்டு) செங்கழுநீர், செண்பகம், இருவாட்சி, பாதிரி, புன்னை, குறுக்கத்தி, கருமுகை, தாமரை என்றுற்போலே ப்ரதாநமா யிருப்பன எட்டுமாதல்; அஷ்டாங்கப்ரணாமத்தைச் சொல்லிற்றாதல், அத்தைமலரென்னும்படி யென்னென்னில்; பூவோபாதி அவனுக்கு ஸ்ப்ருஹா விஷயமாயிருக்கு மாகிலாமிறே, (க) "சொன்மாலை" என்னுமாபோலே. † அன்றிக்கே, கீழிற்றிருமொழியிலே திருமந்த்ரம் ப்ரஸ்துதமாகையாலே திருவஷ்டாக்ஷரத்தைச்சொல்லிற்றாதல். (இமையோர்களித்யாதி) ப்ரஹ்மாதிகளானவர்கள் திருநாமங்களை அடைவுகெடச்சொல்லி ஆச்ரயியாநின்றுள்ள பிரிதிசென்றடைநெஞ்சே! கீழ் திருமந்த்ரமானபோது, (பெயர்களாயிரம்) என்னும்படி எங்ஙனே யென்னில்; (உ) "பேராயிரங்கொண்டதோர் பீடுடையன்" என்று, (உ) "நாராயணன்" என்றதிறே; இத்தால் நிரூபிதவஸ்துவுக்கு விசேஷணங்களாயிறே அல்லாதவை யிருப்பது, † தர்மிக்கு நிரூபகமிதிறே. † மலைத்தாழ்வரைகளடங்க மிளகுகொடிகளாலே நெருங்கிக்கிடக்கும், வெளிநிலத்தில் சிறுமலைகளடங்கலும் பாதகவர்க்கங்கள் நெருங்கிக்கிடக்கும், உள்ளொல்லாம் நாட்டுக்கு ஆச்ரயணீயராயிருக்கிறவர்களுடைய ஸ்தோத்ர கோஷத்தாலே நெருங்கிக்கிடக்கும். ... ... ... (அ)

கொண்டென்று மூன்றும் தாத்பர்யமருளிச்செய்கிறார்,(அன்றிக்கேயித்யாதி). திருமந்த்ரம் நிரூபகமாயிருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார், (தர்மிக்கித்யாதி). ஸாஷ்டாங்கப்ரணாமமாகவும் திருவஷ்டாக்ஷரமாகவும் சொன்ன விரண்டுயோஜனைகளிலும், கீழ்ப்பாட்டிலே தாளீதர்சநம் போலே ப்ராதமிகப்ரணாமமாய், இப்பாட்டிலே ஸமந்த்ரகமாகவும் ஸப்ரகாரமாகவு மாச்ரயித்தார்களென்று ஸங்கதிகண்டு கொள்வது. இப்பாட்டி லிப்படிவர்ணித்தவர்க்குத்தாத்பர்யத்தையருளிச்செய்கிறார், (மலையித்யாதி). இத்தால், பாரதந்த்ர்யத்தாலே ஸ்த்ரீப்ராயரான ப்ரபந்நஜநங்களெங்கும் வ்யாபித்தார்களென்

(க) க - திரு க. (உ) தி - வாய் - க - ங - க.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இரவு | ராத்ரியே | எம் | எங்களுக்கு |
| கூர்ந்து | விஞ்சியிருப்பதாய் | பனி | குளிர்ந்திருந்துள்ள |
| இருள் பெருகிய | இருளேயாயிருக்கிற | முகில் | மேகம்போன்ற [னே |
| வரைமுழை | மலைமுழைஞ்சுகளி | வண்ணன் | வடிவையுடையவ |
| இரும்பசியது | பெரியபசியானது[லே | என்று எண்ணி | என்று இப்படி சொல் |
| கூர | மிக, | நின்று | லா நின்றுகொண்டு |
| அரவம் | மலைப்பாம்புகள் | இமையோர்கள் | தேவர்களானவர்கள் |
| ஆவிக்கும் | கொட்டாவி விடாநி | பிரமனோடு | ப்ரஹ்மாவுடன்கூட |
| | ன்றுள்ள | சென்று | போய் |
| அகன் பொழில் | உட்சோலையோடு | அடிதொழும் | ஆச்ரயிக்கத்தக்க |
| தழுவிய | கூடியதாய் | பெருந்தகை | மிகுந்த பெருமையை |
| அரு | ஏறவரிதான [ய | | யுடைய |
| வரை | தாழ்வரையையுடை | பிரிதி | திருப்பிரிதியிலே |
| இமயத்து | ஹிமவானிலே, | சென்று | போய் |
| பரமன் | ஸர்வாதிகனே! | நெஞ்சே | மநஸ்ஸே! |
| ஆதி | ஜகத்காரணபூதனே! | அடை | கிட்டப்பாராய். (அ) |

வ்யா.—எட்டாம் பாட்டு. (இரவித்யாதி). † சோலைச் செறிவாலே பகற்போது காணவொண்ணுமையாலே ராத்ரியே விஞ்சியிருக்கும். † பகல் † விரவாத ராத்ரியாயிருக்கும். † ஹேது மாறுமையாலே கார்யமும் மாறுதிறே. †ஆதித்ய கிரணங்கள் புகுந்து பரம்பாது பகலாயே யிருக்கிற † அதுவும். (இருள் பெருகிய வரைமுழை) இருளேயாயிருக்கிற மலைமுழைஞ்சுகளிலே. †வயிரம் பற்றினவிருளேயாயிருக்கை. † நெடுநாள் ராஜ்யம் பண்ணினுைப்போலே †அடிப்பட்டிருக்குமாயிற்று இருளும். ஆக, ராத்ரியாய் அத்தாலே இருள்

றும், விரோதிஜநங்க ளடங்கநின்றுர்களென்றும், தூர்மாநிகள் வந்து ஆச்ரயிப்பர்களென்றும் கருத்தநுஸந்தித்ததாயிற்று. ... ... ... (எ)

அரு.—எட்டாம்பாட்டு.—(இரவித்யாதி). கீழ்ப்பாட்டுக்களிலே "வானவர்" என்றும் "அமரர்கள்" என்றும், "இமையோர்கள்" என்றும் ஸாமாந்யேந வருளிச்செய்தத்தை,இப்பாட்டிலே, "பிரமனோடு" என்று விசேஷிக்கிறுரென்று ஸங்கதி யுட்கொண்டு வாக்ய தாத்பர்யமருளிச்செய்கிறுர், (சோலையித்யாதி). ராத்ரியே விஞ்சியிருக்கையை உபபாதிக்கிறுர், (பகலித்யாதி). (விரவாத)-கூடாத. (ஹேது) என்றது சோலைச்செறிவென்கை. ஆனுல் பகல் தானில்லையோவென்ன; அருளிச்செய்கிறுர், (ஆதித்யேத்யாதி). (பகலாயேயிருக்கிறவதிலேயும் ஆதித்ய கிரணங்கள் புகுந்து பரம்பாது) என்று அந்வயிப்பது. (அதுவும்) என்றது - அத்தையுமென்றபடி, "பெருகிய" என்ற பதவாஸநையாலே யருளிச்செய்கிறுர், (வயிரமித்யாதி). இத்தை த்ருஷ்டாந்த பூர்வகம் விவரிக்கிறுர், (நெடுநாளித்யாதி). (அடிப்பட்டிருக்கை) வேர்

ிக்கிருந்துள்ள மலேமுழைஞ்சுகளிலே. (இரும்பசியது கூர) வெளி கண்டு புறப்பட்டு வ்யாபரிக்கப் பெறுமையாலே பெரிய பசியானது மிக. † நித்யஸூரிகள் அந்நபாநாதிகளொழியத் தரிக்குமதுவு முத்தேஶ்யமாய் அவர்கள்தாங்களு முத்தேஶ்யராயிருக்குமாபோலே, அந்தஸர்ப்பங்களினுடைய பசியும் திர்யக்ஜாதிக்கு மவ்வருகாயிருக்கிற ஸர்ப்பங்கள்தானு முத்தேஶ்யமாயிருக்கிறதாயிற்று இவர்க்கு. ஏதேனுமாக அந்நிலத்திலுள்ளதாமித்தனேயே வேண்டுவது இவர்க்கு ஆதரிக்க. (அரவமாவிக்கும்) ஆவிக்கையாவது-பசியாலே கொட்டாவி கொள்ளுகையாகவுமாம். அன்றிக்கே, ப்ராணிக்கையாய்-மூச்சுவிடுகையாய், அதாவது - சோலேயின் பரிமளத்தோடே கூடின † காற்றை யாஶ்வஸித்துத் தரியாநிற்கும். வாயுவை யிறே அவை பக்ஷிப்பது. † முக்தர் † ஸத்யகாமாதிகளேயுடையராயிருக்குமாபோலே அங்குத்தை ஸர்ப்பங்கள் ஸஞ்சாரயோக்யதையில்லாமையாலே கிடந்தவிடத்தே கிடந்து மணத்தை ஆக்ராணம் பண்ணித் தரியாநிற்கும். அகன்பொழிலுண்டு - அகவாயில் பொழில் - உட்சோலே, அது அணேந்திருந்துள்ள அருவரையிமயத்து.

(பரமனித்யாதி) † ஸர்வஸமாஶ்ரயணீயன் வந்து வர்த்திக்கிற தேசமாகையாலே நமக்கு ஆஶ்ரயணீயஸ்த்தலமான பின்பு, நெஞ்சே! அங்கேசென்று கிட்டப்பாரா யென்கிறார். ஸர்ப்பங்களோடு ப்ரஹ்மாதிகளோடு வாசியற எல்லார்க்கு மாஶ்ரயணீயமான தேசமாயிற்று. (பரமனித்யாதி) † ஆஶ்ரயிக்கிற ப்ரஹ்மாதிகளுடைய பாசுரமிருக்கும்படி. † ஸர்வாதிகனுய், † தனக்கு அவ்வருகொருவருமில்லாதபடி யிருக்கிற, † ஸர்வேஶ்வரன்; † ஸர்வாதிகனு

---

பாய்ந்திருக்கை, ஊர்ஜிதமாயிருக்கையென்றபடி. பகவத்ப்ரவணரான விவர்க்ஷேத்ர ஜந்துக்களிருக்கும்படியை வர்ணிக்கை சேருமோவென்ன; அருளிச்செய்கிறார், (நித்யஸூரிகளித்யாதி வாக்யத்வயத்தாலே). (காற்றை) என்ற வநந்தரம், "பக்ஷித்து" என்று சேஷம். (முக்தர்) என்ற வநந்தரம், "இருந்தவிடத்தேயிருந்து" என்றுசேஷம். (ஸத்யகாமாதிகளே) என்றவநந்தரம், "அநுபாவ்யங்களாக" என்று சேஷம்.

பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்து, உத்தரார்த்தத்துக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார், (ஸர்வேத்யாதி வாக்யத்வயத்தாலே). "ஈஶ்வரோஹம்" என்றிருக்கிறவர்கள் இப்படி சொன்னார்களென்று ஈடுபாடுதோற்றவருளிச்செய்கிறார், (ஆஶ்ரயிக்கிற வித்யாதி). "பரமன்" என்றதினர்த்தம், (ஸர்வாதிகனுய்) என்றது. பரோமாயஸ்மாதிதியோகார்த்தம், (தனக்கித்யாதி). இவ்விரண்டாலும் பலித்தது, (ஸர்வேஶ்வரன்) என்றது. (ஸர்வாதிகனுகிலும்)

மூ.— ஓதி யாயிர நாமங்க ளுணர்ந்தவர்க்
குறு துய ரடையாமல்
ஏத மின்றி நின் றருளும் நம் பெருந்தகை
யிருந்த நல்லிமயத்துத்
தாது மல்கிய பிண்டி விண் டலர்கின்ற
தழல்புரை யெழில்நோக்கிப்
பேதை வண்டுக ளெரியென வெருவரு
பிரிதிசென் றடை நெஞ்சே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆயிரநாமங்கள் | (தன்னுடைய) ஆயிரந்திருநாமங்களையும் | உணர்ந்தவர்க்கு | (அவனே ரக்ஷகனென்னும்) ஜ்ஞாநம்பிறந்தவர்க்கு, |
| ஓதி | சொல்லி, (அத்தாலே) | உறு | வரக்கடவதான |

கிலும் † பெற்றதாயால் விடவொண்ணாதாப்போலே விடவொண்ணாதபடியான ப்ராப்தியையுடையவன்; விஷயங்களை விரும்புகிறது ஒரு ப்ராப்திகொண்டன்றிறே, கீழ்ச்சொன்னவை யிரண்டுமில்லையாகிலும் விடவொண்ணாதபடி ஸ்ரமஹரமான வடிவையுடையவன். ஆக, ஸர்வாதிகன், ஜகத்காரணபூதன், தர்சநீயமான வடிவையுடையவன். (என்றெண்ணி யித்யாதி) இப்படி சொல்லாநின்றுகொண்டு, தேவர்கள் தங்களுக்குக் † கண்காட்டியான ப்ரஹ்மாவோடே சென்றாஸ்ரயிக்கும்படி † மஹாப்ரபாவமான பிரிதி சென்றடை நெஞ்சே! † சிறியார் பெரியாரென்று வாசியின்றிக்கே எல்லார்க்கும் உத்தேஸ்யமானதேசம். சிறியார்க்கு வாசியுண்டு;- ஸர்ப்பங்கள் கிடந்தவிடத்தே கிடந்து அபிமதம் பெற்று புஜியாநிற்கும்; ப்ரஹ்மாதிகள் தங்களதிகாரார்த்தமாக ஆஸ்ரயித்துத்தட்டித்திரிவர்கள். புறம்படைய சோலைச் செறிவாலே வந்த விருட்சி மிக்கிருக்குமாபோலே, உள்ளடைய ஆஸ்ரயிக்கிற தேவதைகளுடைய நெருக்கு மிக்கிருக்கும்; ஆனபின்பு நீயுமத்தேசத்தை யாஸ்ரயிக்கப்பாராயென்கிறார். இத்தால், அங்குண்டான ஸர்ப்பங்கள் அச்சோலையில் பரிமளத்தைக் காற்றுவழியாலே பருகித் தரியாநிற்கும்; ப்ரஹ்மாதிகளானவர்கள் (க) "𑌸𑌰𑍍𑌵𑌗𑌨𑍍𑌧𑌃" ஸர்வகந்த:" என்கிற வஸ்துவை அநுபவித்துத் தரிப்பர்கள். ... ... ... (அ)

என்ற வநந்தரம், அல்லனாகிலும் என்று கூட்டுவது. (பெற்றதாயால்) என்றது பெற்றதாயாகையாலே யென்றபடி. (கண்காட்டி) - நிர்வாஹகன். * பெருந்தகையினர்த்தம், (மஹாப்ரபாவமான) என்றது. "சென்றடை" என்று தாம் நியமிக்கைக்குக் கீழ்ச்சொன்னதெல்லாம் ஹேதுவென்னுமது தோற்ற உட்கருத்துக்களை யருளிச்செய்கிறார், (சிறியாரித்யாதி). ... ... ... (அ)

(க) சாந்தோ-ங-கச-உ

| | | | |
|---|---|---|---|
| துயர் பாபங்கள் | | பிண்டி | அசோகபுஷ்பங்கள் |
| அடையாமல் | (அவர்களைக்) கிட்டாதபடியாகவும் | விண்டு | விரிந்து |
| | | அலர்கின்ற | அலருகிற |
| ஏதம்இன்றி | (தன்னை ஆஸ்ரயிப்பார்க்கு) ஒருவருத்தமும் வாராதபடியாகவும் | தழல்புரை | நெருப்புப்போன்ற |
| | | எழில் | அழகை |
| | | பேதை | அறிவில்லாத |
| | | வண்டுகள் | வண்டுகளானவை |
| நின்றருளும் | எழுந்தருளியிருக்கிற | நோக்கி | பார்த்து (அவற்றை) |
| நம் | நம்ஸ்வாமியான | எரியென | நெருப்பென்றுநினைத்து |
| பெருந்தகை | மஹாப்ரபாவன் | வெருவரு | பயப்படுகிற |
| இருந்த | வந்துவர்த்திக்கிற | பிரிதி | திருப்பிரிதியிலே |
| நல் | விலக்ஷணமான | சென்று | போய் |
| இமயத்து | ஹிமவானிலே, | நெஞ்சே | மநஸ்ஸே! |
| தாது | தாதுகள் | அடை | கிட்டப்பாராய். (கூ) |
| மல்கிய | மிக்கிருந்துள்ள | | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு.—(ஓதியாயிர நாமங்களுணர்ந்தவர்க்கு) † ஆயிரம் திருநாமங்களையும் வாயாலே சொல்லி அவற்றினுடைய அர்த்தாநுஸந்தாநம் பண்ணுகின்றுள்ளவர்களுக்கு. † ஒரு திருநாமத்தைச் சொல்லி, அவ்வளவில் பர்யவஸிக்கமாட்டாதே ஆயிரம் திருநாமங்களையு மடைவுபடச் சொல்லி, அந்நாமத்வாரா நாமியானவனை மநநம்பண்ணுகின்றுள்ளவர்களுக்கு. (உறுதுயரடையாமல்) † உறக்கடவதாய் நிற்கிற பாபங்கள் ப(ஃ)லாநுபவத்துக்கு இவனைத் தடராதபடியாக. (க) "अवश्यमनुभोक्तव्यं-அவஶ்ய மநுபோக்தவ்யம்" என்றும், (க) "नाभुक्तं क्षीयते-நாபுக்தம் க்ஷீயதே" என்றும், சொல்லுகிறபடியே அநுபவித்தாலல்லது நசியாத பாபங்கள் ப(ஃ)லாநுபவத்துக்கு வந்து கிட்டாதபடியாக. †ஒரு பிசாசம் சவங்

அரு.—ஒன்பதாம்பாட்டு.—(ஓதியித்யாதி). கீழ்ப்பாட்டிலே, ஸர்வஸமாஶ்ரயணீயஸ்தலமாகையாலே சென்றடை என்று நின்றீர், நமக்குக் கிட்டவொட்டாத பாபங்களிருக்க எங்ஙனே சென்றடைகிறதென்றும், ஸர்வாதிகனை நம் அயோக்யதை பாராதே கிட்டத்தான் கூடுமோவென்றும் திருவுள்ளத்துக்குக் கருத்தாக இப்பாட்டருளிச்செய்கிறுர் என்று ஸங்கதியையுள்ளேவைத்துக்கொண்டு, வாக்யார்த்த மருளிச்செய்கிறுர், (ஆயிரமித்யாதி). திருமந்த்ரம் போராதோ, ஆயிரநாமம் சொல்லவேணுமோ வென்ன; அருளிச்செய்கிறுர், (ஒரு திருநாமத்தை யித்யாதி). "உறுதுயர்" என்றதால் அநுபவ விநாஶ்யமான பாபங்களென்றருளிச்செய்கிறுர், (உறக்கடவதாயித்யாதி). திருநாமம் சொன்னவர்களுக்கு உறுதுயரடையாமல் போனவிடத்துக்கு ஐதிஹ்ய மருளிச்செய்கிறுர், (ஒரு பிசாசமித்யாதி). (பிசாசம்) கண்...

களை பக்ஷியாநிற்க நடுவு வா யொழிந்த வளவிலே (க) "𑌨𑌰𑌕𑌾𑌰𑍇 𑌜𑌗𑌨𑍍𑌨𑌾𑌥 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣 𑌪𑌰𑌾𑌯𑌣-நரகாரே ஜகந்நாத நாராயண பராயண" என்று சொல்ல; (உ) "𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌾𑌖𑍍𑌯𑌂 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌨𑍍-ஆத்மாநம்வாஸுதேவாக்யம் சிந்தயந்" என்று ஸ்வாநுபவம் பண்ணி அந்யபரதை யற்றிருக்கிற வளவிலே, இத்தைக் கேட்டு (ங) "𑌕𑌸𑍍𑌯 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌃 𑌕𑌰𑍇𑌸𑍍𑌥𑌿𑌤𑌾-கஸ்ய முக்தி: கரேஸ்த்திதா" என்று நம்பேரைச் சொல்லி நம்மையெழுதிக்கொண்டவனார்தான்? என்றானிறே. ஏதமென்று - து:க்கமாய் வருத்தத்தை நினைக்கிறது. † இத்திருநாமத்தைச் சொன்னால் இத்தை யுடையவன் செவிப்படும்படி அண்ணியனாய் நிற்கை ஆஸ்ரயிப்பார்க்கு வருத்தமின்றிக்கே யொழிகைக் குடலாயிருக்குமிறே; இவர்களுக்கு வருத்தமில்லாதபடி யிருக்கும். (உறுதுயரித்யாதி) (ச) † "வாக்குத்தூய்மையிலாமையினாலே மாதவா உன்னை வாய்க் கொள்ளமாட்டேன்" என்று அசித்ஸம்ஸர்க்கத்தை யநுஸந்தித்து "நாமங்குத்தைக்கு யோக்யராய்ப் பரிமாறுகையாவதென்?" என்று, தன் அயோக்யதையை யநுஸந்திக்கைக்கு அவகாசமில்லாதபடி ஆஸ்ரயணீயனை தான் ஸந்நிஹிதனாகையாலே ஆஸ்ரயிப்பார்க்கு ஒரு வருத்தமும் வாராதபடி யிருக்கிற மஹாப்ரபாவன் வந்து வர்த்திக்கிற விலக்ஷணமான ஹிமவானில்.

(தாதித்யாதி) தாது மிக்கிருந்துள்ள அசோக புஷ்பமானது விட்டலருகிற போதை அக்நிகல்பமான எழிலைப்பார்த்து. (பேதை வண்டுகள்) § (அசோகபுஷ்பங்களை) நித்யாநுபவம் பண்ணாநிற்கச்செய்தேயும் நித்யமாக ப்ரமிக்கவல்ல மௌக்த்யத்தையுடைய வண்டுகளாயிற்று. † தானும் நித்யவாஸம் பண்ணாநிற்கச் செய்தே, அதுவும் நாள்தோறு மலரா நிற்கச்செய்தே, எப்போது மொக்க "இது நெருப்பு, நெருப்பு" என்று ப்ரமிக்கும்படியாயிருக்கும். † முன்னாள் "இது அக்நி" என்று சங்கித்து விசாரித்து, "அன்று" என்று நிர்ணயித்துப் பிற்றை நாள் "அதன்று" என்றிருக்க மாட்டாதே, "நெருப்பு" என்றஞ்சி யிராநிற்கும்; அதுக்கடி † பய நிவ்

---

கர்ணன். இவன் ருத்ரன் பக்கலில் நின்றும்போய் குபேரன் பக்கலிலே திருநாமங்களை உபதேசித்துக்கொண்டானென்று ப்ரஸித்தி. ஏதம்-து:கமானால், அத்தையிட்டு வருத்தத்தைச் சொன்னதுக்கு ப்ரயோஜநமென்னென்ன; அருளிச்செய்கிறார், (இத்திருநாமத்தை யித்யாதி). உறுதுயர் அயோக்யதாநுஸந்தாநமென்று தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார், (வாக்குத்தூய்மை இத்யாதி).

"வெருவரு," வெருவாநிற்கும் என்ற வர்த்தமாந பலிதார்த்தம், (தானுமித்யாதி) கீழ்வாக்ய விவரணம், (முன்னாளித்யாதி). (பயநிவ்ருத்தியும் நித்ய

---

(க) (ங)
(உ) (ச) பெரி-திரு-ரு-க-க.
§ குண்டலிதம் க்வாசித்கம்.

ருத்தியும் நித்யமாய், பயமும் நித்யமாயிருக்கையாலே.

இதுக்கு த்ருஷ்டாந்தமாகத் திருவெள்ளறைத் திருமொழியிலே ஒருபாட்டருளிச்செய்வர்-(க) [ஆங்கு மாவலிவேள்வியில்-சென்று-இரந்து] மஹாபலியினுடைய யஜ்ஞவாடத்திலே தன்னை யர்த்தியாக்கிச்சென்று.[அகலித்யாதி] பூமிப்பரப்படைய வாங்குகிறவன்று, † அவனை எதிரிட்டுக்கொண்டு வாங்குகை யன்றிக்கே அவனேயிட்டுக் கொண்டிருக்கிற ஔதார்யத்துக்கு அநுரூபமாக வாங்கினன்; ராவணாதிகளைப்போலே தலையறுக்கவேண்டிற்றில்லை ஔதார்யமென்றொரு குணலேசம் கிடக்கையாலே; "இவன் கொடுக்க உகந்திருந்தான்" என்று தன்னை இரப்பாளனுக்கி † அவனேடிசையக் கொண்டான். † தன்னதான பூமியையிறே அவன் தந்தானுகக் கொண்டது. † ஆக, நம்முடைய ஆத்மஸமர்ப்பணம்போலேயிருப்பதொன்றிறே அவனுடைய தாநமும். (உ) [அத²வா கிம்நு ஸமர்ப்பயாமி - அதவா கிந்நுஸமர்ப்பயாமி] அநந்தரம் அநுசயிக்க வேண்டும்படியிறே இதுதானிருப்பது. † விழுக்காட்டில் ஆத்மஸமர்ப்பணத்தோடு ஆத்மாபஹாரத்தோடு வாசியற்றிறேயிருப்பது ; † ஆகையிறே உபாயநைரபேக்ஷ்யம் சொல்லுகிறது. [பரம நிற்பணிந்தெழுவேனெனக்கருள் புரியே.] ஸர்வாதிகனே! உன்னை வணங்கி யுஜ்ஜீவிக்கிற வெனக்கு ப்ரஸாதத்தைப் பண்ணியருளவேணும். † ஆஶ்ரயணத்

மாய்) என்றது.மதுவைப் பாநம் பண்ணுகையாலே பூவென்று நினைவுண்டாகாநிற்கச்செய்தேயுமென்றபடி.

"பாங்கினல்கொண்ட" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார், (அவனையித்யாதி வாக்யத்ரயத்தாலே). (அவனேடிசையக் கொண்டான்) என்றது-அவன் கொடுக்கிறவனும் தான் வாங்குகிறவனுமாயிருந்து கொண்டானென்றபடி. இதுக்கு ஜ்ஞாபகமென்னென்ன; அருளிச்செய்கிறார், (தன்னதானவித்யாதி). ப்ரஸங்காத் ஸ்வரூபசிக்ஷை பண்ணுகிறார், (ஆக) என்று தொடங்கி, (நைரபேக்ஷ்யம் சொல்லுகிறது) என்னுமளவும், அநுசயிக்கும்படி இது குற்றமோவென்ன; அருளிச்செய்கிறார், (விழுக்காட்டிலித்யாதி). அவனதான வஸ்துவைத் தன்னதென்று அபிமாநித்தது ஸ்வரூபவிருத்தமானாற்போலே, அவன் வஸ்துவை அவனுக்குக் கொடுத்தேனென்றிருக்கையும் ஸ்வரூபத்துக்குச் சேராதென்றபடி. (ஆகையிறே) என்றது-ஆத்மாபஹாரதுல்யமாகையாலேயிறேயென்றபடி. துல்யமன்றாகில் அதுவுமொரு ஸாதநமாகக் கூடுகையாலே, வைஷம்ய நைர்க்ருண்ய பரிஹாரார்த்தமாக அபேக்ஷித்திருக்குமீஶ்வரனுக்கு, * ஏகசப்தத்தில் சொல்லுகிற ஸாதநாந்தரநைரபேக்ஷ்யம் ஜீவியாதென்று கருத்து. வணங்கினலருளவேணுமென்கிற நிர்ப்பந்தமென்னென்ன; அருளிச்செய்கிறார், (ஆஶ்ரயணத்துக்கித்யாதி). "ஓங்கு பிண்டி

(க) இ-ரு-க. (உ) ஸ்தோ - ர - ௫௩.

தாக்கு பஞ்லவ்யாப்தி யுண்டிறே. [ஓங்கித்யாதி] ஆகாசமிட மறும்படி வளர்ந்த பரப்பு மாறப்பூத்த அசோகத்தினுடைய சிவந்த பூக்களிலே மதுபாநார்த்தமாக வண்டுகள் ஸஞ்சரிக்க, தர்சநீயமான குயில்களானவை "இவை நெருப்பிலே புக்கன" என்றே நிஸ்சயித்து, அது தன்னைத்தட்டாதபடி மாவிலேபோயேறிக் கூப்பிடாநிற்குமாயிற்று. சிவந்தபூப் பூவாத மாத்தேடி யேறிநின்று. [மிழற்றும்] எழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாதபடி கூப்பிடாநிற்கும். † இவற்றினுடைய தயநீய தசையைக்கண்டு இன்னதென்று பாசுரமிட்டுச் சொல்லமாட்டாதே கடக்க நின்று, "தர்மஹாநிகிடிகோள்!" என்பாரைப்போலே அவ்யக்தமாகக் கூப்பிடாநிற்கும். (படப்பை) இதாயிற்று ஊரில் கொடித்தோட்டங்களிருக்கும்படி.

இத்தால், அவனுடைய ஸர்வாதிகத்வத்தையும், அவனை யநுபவிப்பதாகச் சொல்லுகிற தங்களுடைய ஸம்ஸாரித்வத்தையு மநுஸந்தித்து "நாம்சென்று கிட்டுகை பாவதென்!" என்று துணுக்குத்துணுக்கென்னா நிற்பர்கள் † ப்ரஹ்மாதிகள்; இவ்வண்டுகளானவை புஷ்பஸாமாந்யத்தைக்கொண்டு மதுபாநார்த்தமாக மேல்விழாநிற்பது, அக்நியென்று கிட்டமாட்டாதே இருய்த்து வெருவுவதாகாநிற்குமாயிற்று. † அன்றிக்கே, ஆஸ்ரயிப்பார்க்கு, (க) "[Grantha] [Grantha]-"அதஸோ பயம் கதோபவதி" என்னு மிதுவு முண்டாய், † § போக்யதையால் வந்த பயம் என்று முண்டாயிருக்குமென்னுதல் - † ஆஸ்ரயணீயவஸ்து ஸுலபமாகையாலே ஆஸ்ரயிப்பார்க்குத் தந்தாமுடைய அநுபவ விநாஸ்யமான பாபங்களை யநுஸந்

யின் செம்மலரேறி வண்டுழிதர மாவேறித்தீங்குயில் மிழற்றும்" என்ற ஸமபிவ்யாஹாரத்தாலே பலித்ததாத்பர்யத்தை யருளிச்செய்கிறார், (இவற்றினுடைய வித்யாதி).

ப்ராஸங்கிகமான பாட்டுக்கு வ்யாக்யாநம் செய்தருளி, இப்பாட்டிலே "உறுதுயர்" என்றதுக்கு அயோக்யதாநுஸந்தாநமாகத் தாத்பர்யம் சொன்ன பக்ஷத்துக்கநுகுணமாக, இப்பாட்டுக்கு ஹார்த்தபாவ மருளிச்செய்கிறார்,(இத்தாலித்யாதி வாக்யத்வயத்தாலே). (ப்ரஹ்மாதிகள்) என்றது - "பிரமனேடு" என்று கீழிற்பாட்டில் ப்ரஸ்துதனா, இப்பாட்டில், "ஓதியாயிர நாமங்களுணர்ந்தவர்" என்றது என்று திருவுள்ளம். "உறுதுயர்" என்றது பாபங்களான பக்ஷத்திலே, பாட்டுக்குக் கருத்தருளிச்செய்கிறார், (அன்றிக்கே யித்யாதி). (போக்யதையால் வந்த பயம்) என்றது-அநுபவிக்கமாட்டாமையால் வந்த பயமென்றபடி. பாட்டுக்கெல்லாம் தொகுத்த பாவத்தை யருளிச்செய்து தலைக்கட்டுகிறார், (ஆஸ்ரயணீயவஸ்துவித்யாதி). அவனைக் கண்டால்

(க) தை-ஆந-எ-உ.
§ போக்யதையால் வந்தபயம்-போக்யதையால் அஸ்த்தாமே சங்கிக்கை.

மூ.—கரிய மாமுகில் படலங்கள் கிடந்தவை
முழங்கிடக் களிறென்று
பெரிய மாசுணம் வரையெனப் பெயர்தரு
பிரிதி யெம் பெருமானை,
வரிகொள் வண்டறை பைம்பொழில் மங்கையர்
கலியன தொலிமாலை
அரிய வின்னிசை பாடு நல் லடியவர்க்
கருவினை யடையாவே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கரிய | கறுத்த | வண்டு | வண்டு . ளானவை |
| மாமுகில் | மஹாமேகங்களின் | அறை | த்வநியாநின்றுள்ள |
| படலங்கள் அவை | கூட்டங்களானவை | பை | பரந்த [தான |
| | | பொழில் | ச்சோலையையுடைத் |
| கிடந்து | ஓரிடத்திலேயிருந்து | மங்கையர் | திருமங்கையிலுள்ளார்க்கு நிய மகரான |
| முழங்கிட | த்வநிக்க (அந்தத்வநியைக்கேட்டு) | கலியனது | ஆழ்வாருடைய |
| பெரிய | பெருத்த | ஒலி | ஒலியுடைத் தாய்படி அருளிச்செய்த |
| மாசுணம் | மலைப்பாம்புகள் | | |
| களிறுஎன்று | (தங்களுக்கு இரையான)யானைகள் (வருகிறன)என்று நினைத்து | மாலை | தொடையாய் |
| | | அரிய | ஒருவர்க்குமறிய வொண்ணாததாய் |
| | | இன் | மதுரமாய் |
| வரையென | மலைபோலே [யான | இசை | இசையையுடைய பாட்டுக்களை [ய் |
| பெயர்தரு | அசைந்து வரும்படி | | |
| பிரிதி | திருப்பிரிதியில் நித்ய வாஸம்பண்ணுகிற | பாடும் | அப்யஸிக்கிறவர்களா |
| | | நல் | விலக்ஷணரான |
| எம்பெருமானை | ஸர்வேஸ்வரன் விஷயமாக, | அடியவர்க்கு | பாகவதர்களை |
| | | அருவினை | மஹாபாபங்கள் |
| வரிகொள் | வரியையுடைய | அடையா | கிட்டமாட்டா. (கo) |

கித்து பயப்படவும் வேண்டா; அசோக புஷ்பத்தை அக்நியாகக் கொண்டு வண்டுகளஞ்சுகிற அச்சம் நித்யமாய்ச்செல்லா நிற்கும். ()

வ்யா.—பத்தாம்பாட்டு.— (கரியவித்யாதி) கழுத்தே கட்டளையாக நீரைப்பருகுகையாலே கறுத்த நிறத்தையுடைத்தான மஹா

தங்கள் வினைக்கஞ்சவேண்டா, அங்குத்தை ஸாமஸ்ஸாக்களுடைய ராக விசேஷத்தைக்கண்டால் தங்களுக்கதில்லாமையாலே சென்றணுகவஞ்சும்படியாயிருக்குமென்றதாயிற்று. ... ... ... ... ... ... (க)

மேகங்களுடைய ஸமூஹங்களானவை, முகந்த நீர்க்கநத்தாலே போர்ந்துபோகமாட்டாதே கிடந்தவிடத்தேகிடந்து முழங்க. †நீர்குறையும்படி வர்ஷித்து வெளுத்தது மன்றிக்கே கறுத்து, அதுதான் மேகசகலமுமாயிருக்கையன்றிக்கே மாமுகிலாய், அவைதான் ஒன்றிரண்டன்றிக்கே ஸமூஹங்களுமானவை, முகந்த நீர்க்கநத்தாலே கால்வாங்கிப்போக மாட்டாதே வாயுவாலும் ப்ரேரிக்கவொண்ணாதபடி கநத்து அவை கிடந்தவிடத்தே கிடந்து, கர்ப்பகேத(ஷ்)த்தாலே முக்குவாரைப்போலே முழங்கு மாயிற்று. (களிறென்று) நிறத்தினுடையவும் அதிருகிறத்வநியினுடையவும் ஸர்வதா ஸாம்யத்தாலே யானையென்று. (பெரிய மாசுணம்) பெரிய வடிவையுடைத்தாயிருக்கிற மலைப்பாம்புகளானவை. ஆனையைவிழுங்கும்படியாயிற்றுபெருமை யிருப்பது. (வரையெனப்பெயர்தரு) அம்மலைப்பாம்புகளானவை அவற்றுக்கஞ்சி மலைபோலே பேர்ந்து போய் புற்றிலே † புகாநிற்குமென்று; (க) "காருடைய மின்னென்று புற்றடையும்" என்றும், (உ) "பரந்ததலையுடையநாகம் வாரணத்தை யஞ்சியொளிக்கும்", என்கிறப்ரஸித்தியாலும், இப்படி "புற்றிலே யடையும்" என்றருளிச்செய்வர் ஜீயர்: "இதுவோ இதுக்கருளிச்செய்யும்படி ?" என்று பிள்ளைகேட்டருள ; "நீரிப்படி கேட்கும்போது ஒன்றை நினைத்தல்லது கேளீர், அத்தைச்சொல்லும்" என்ன; "பெயருகையாகிறது தான்போக்குவரத்து இரண்டுக்கும் ஸாதாரணமாயாயிற்றிருப்பது; இனித்தான் மலைக்குச் † சிறப்புச்சொல்லு மவர்கள் 'மலைப்பாம்புகள் ஆனையை விழுங்கும்' என்னக்கடவர்கள், ஆகையாலே, கரியமாமுகில் படலங்கள் கிடந்து முழங்குகிறவற்றைப் பெரிய மாசுணமானது ஆனையாகப் புத்திபண்ணி ஆமிஷார்த்தமாக மலை பேர்ந்தாற்போலே கால்வாங்கிவந்து கிட்டாநிற்குமாயிற்று என்றுமே" என்ன; "அதுவேயிறே பொருள்" என்று போரக்கொண்டாடியருளினார் என்றருளிச்செய்வர். ஆகையிறே, பெரியமாசுணமென்றது; - ஆனையைவிழுங்கும்படியாயிற்று இதினுடைய பெருமையிருப்பது.

(வரிகொளித்யாதி) வரியையுடைத்தாய் தர்சநீயமாயிருந்துள்ள வண்டுகளானவை மதுபாநம் பண்ணிக்களித்து த்வநியாநின்றுள்ள

அரு.—பத்தாம்பாட்டு.—(கரிய வித்யாதி). வ்யாவர்த்தகங்களைக் காட்டாநின்றுகொண்டு விவரிக்கிறார். (நீர்குறையும்படி யித்யாதி). (புகாநிற்குமென்று) என்ற வநந்தரம், "கூட்டுவது" என்றுசேஷம். (சிறப்பு) - உத்கர்ஷம்.

(க) க - திரு - ௩அ. (உ)

பரந்த பொழிலையுடைத்தான திருமங்கையிலுள்ளார்க்கு நியாமக ரான ஆழ்வார் ஒலியுடைத்தாம்படிசொன்ன தொடையாயிற்று. (அரிய இன்னிசை) "திருமங்கையாழ்வார் தம்திருவாயாலே அரிய வின்னிசை என்பதே!" என்றருளிச்செய்வர். † ஆழ்வார் திருவரங் கப்பெருமாளரையர் சிலரோடே பிணங்கி, கையில் தாளத்தைப் பொகட்டு, "வாலிமாவலத்தை என்னோடே † இசைசொல்லிப்போ" என்றாராம். வாதுபாட்டாகப் பாடுமது என்று ப்ரஸித்தமிறே. † இயலிலுமிழியலாம், பொருளிலுமிழியலாம்; † இசையிலொருவர்க்கு மிழியவொண்ணாது. † அருமையால் நினைக்கிறது † பெருமையை; இனிமையால் நினைக்கிறது † சுவைப்பாட்டை. (அரிய) † அருமை பெருமைகளையும் சுவைப்பாட்டையுமுடைத்தாயிருக்கை. (நல்லடியவர்க்கு) இத்தைப் பாடுமவர்களாயிற்று, ஸர்வேஶ்வரனுக்கு அந்தரங்கராகிறார். (அருவினை) அவர்களைப் பாபங்கள் வந்து கிட்டாது. † ஸர்ப்பங்களானவை மேகங்களை ஆமிஷமாக புத்திபண்ணி மேல்விழுமாபோலே, இத்தை அப்யஸித்தவர்கள் பக்கலிலே ஸர்வேஶ்வரன் போக்யதாபுத்திபண்ணி அவர்களுடையவிரோதிகளைப்போக்கி விஷயீகரிக்க, அவனாலே விஷயீக்ருதராகப் பெறுவர்கள். † இபபாசுரத்தைச்சொன்னவர்களை அச்சொல்வழியே ஸர்வேஶ்வரன் அவர்களையே எல்லாபோக்யமுமாக வந்துகிட்டும்; நடுவு பாபங்களுக்கு ஒதுங்க நிழலில்லாமையாலே யோடிப்போம்.()

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

இசையினுடைய அருமைக்கு ஒரு ஸம்வாத மருளிச்செய்கிறார், (ஆழ்வாரித்யாதி). (இயல்) சப்தம். (இசை) ராகம். அர்த்தாந்தரம் (அருமையாலித்யாதி). (பெருமை) அதிசயம். (சுவைப்பாட்டை) ரஸ்யதையை. இரண்டர்த்தத்தையும் தாத்ரேண கூட்டி சப்தார்த்த மருளிச் செய்கிறார், (அருவினையித்யாதி). பாட்டுக்கெல்லாம் தொகுத்த பாவம், (ஸர்ப்பங்களித்யாதி). ஸர்வேஶ்வரன் போக்குவாரானால் "வினையடையாவே" என்று இவற்றுக்குக் கர்த்ருத்வம் சொல்லுகைக்கு ப்ரயோஜநமென்னென்ன; அருளிச்செய்கிறார் (இப்பாசுரத்தை யித்யாதி). ... ... ... ... ... ... (ய)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

முதற்பத்தில் இரண்டாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## மூன்றாம் திருமொழி - முற்றமூத்து.

மூ.—முற்ற மூத்துக் கோல் துணையா முன்னடி நோக்கிவளைந்து
இற்றகால்போல் தள்ளி மெள்ள இருந்தங் கிளையாமுன்
பெற்ற தாய்போல் வந்த பேய்ச்சி பெருமுலை யூடுயிரை
வற்ற வாங்கி யுண்ட வாயான் வதரி வணங்குதுமே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முற்றமூத்து | மிகவும்கிழத்தனத்தை யடைந்து | பெற்றதாய் போல்வந்த | பெற்றதாயின் வடிவு கொண்டுவந்த |
| கோல் | ஊன்றுகோலை [டு | பேய்ச்சி | பூதனையுடைய |
| துணையா | ஸஹாயமாகக்கொண் | பெருமுலையூடு | பெரியமுலைவழியே |
| முன்அடி. | முன்னே இடவேண்டும் அடியை | உயிரை | (அவள்) ப்ராணனை |
| | | வற்ற | வறண்டுபோம்படி |
| வளைந்துநோக்கி | தலைகவிழ்ந்துபார்த்து | வாங்கி | உறுஞ்சி |
| | | உண்ட | அமுதுசெய்த |
| இற்றகால்போல் | முறிந்தகால்போலே | வாயான் | திருப்பவளத்தை யுடையஸர்வேஶ்வரனெழுந்தருளியிருக்கிற |
| தள்ளி | தடுமாறி | | |
| அங்கு | அவ்விடத்தில் | | |
| மெள்ள | மந்தமாக | | |
| இருந்து | உட்கார்ந்து | வதரி | ஸ்ரீபதரியை |
| இளையாமுன் | (இப்படி) இளைப்புவந்துமேலிடுவதற்கு முன்னே, | வணங்குதும் | வணங்குவோம். (க) |

வ்யா.—தம்திருவுள்ளத்தைக்குறித்து "திருப்பிரிதியை ஆஶ்ரயி" என்று உபதேசித்தார்; அது தம்த்வரைக்கீடாக த்வரித்ததில்லை; கெடுவாய்! நாமிருக்கிறவிருப்பில் பொல்லாங்கு கண்டாயே, கடுக ஒருக்ஷணம் முற்படட்டுடலாக ஆஶ்ரயிக்கப்பாராயென்கிறார். †கீழ் திருமந்த்ரத்தை அநுஸந்தித்தார்; அநந்தரம் மந்த்ரப்ரதிபாத்யமான வர்த்தத்தை அநுஸந்தித்தார்; மந்த்ரத்ரஷ்டாவானவனிருந்த தேசத்தை ஆஶ்ரயிப்போமென்கிறார். † திருமந்த்ரந்தன்னை அநுஸந்திப்பார்க்கு ப்ரதிபாத்யமானவஸ்துவோபாதி, ருஷிசந்தோ[illegible] தேவதைகளென்ன, பீஜசக்திகளென்ன, சோஷணதாஹநாதிகளை

அரு.—முற்றமூத்து ப்ரவேசம்.—கீழ்த்திருமொழியோடே யொருஸங்கதி யருளிச்செய்து, "வதரிவணங்குதுமே" என்றத்தைக் கடாக்ஷித்துக் கீழிரண்டு திருமொழிகளோடு ஸங்கதி யருளிச்செய்கிறார், (கீழே யித்யாதி). திருமந்த்ரம் ப்ரஸ்துதமானால் மந்த்ரத்ரஷ்டாவை யநுஸந்திக்கவேணுமோ வென்ன; அருளிச்செய்கிறார், (திருமந்த்ரந் தன்னை) என்று தொடங்கி (விஶ்வாஸப்ரதிக்கைக்காக) என்னுமளவும். 'உபாஸகனுக்குத் திருமந்த்ராநுஸந்தா

ன்ன, இவையெல்லாம் அநுஸந்தேயமாகக்கடவது. அதுவென்றி வானென்னென்னில்; (க) "நமோநாராயணாயவென்று - பரமமந்த்ரமனைச் சூழ்ந்திருந்தேத்துவர்" என்று இம்மந்த்ராநுஸந்தானம் பண்ணுவார் நித்யஸூரிகளாய், அவர்களுடைய யாத்ரையாயிற்று இது; அத்தையிறே குணத்ரயாத்மிகையான ப்ரக்ருதிவஶ்யனானவிவன் அநுஸந்திக்கப்பார்க்கிறது; ஆகையாலே, ஒருபாவனையாலே அவர்களோடபாதியாகத் தன்னுடைய சரீரத்தையும் பாவித்து அநுஸந்திக்கைக்காக சோஷணாதிகள் வேண்டுகிறது. இனி ருஷிசந்தோதேவதைகளை யநுஸந்திக்கிறது - இம்மந்த்ரத்திலுண்டான ஆதரதிசயத்தாலே, பீஜசக்திகளை அநுஸந்திக்கிறது, மோக்ஷப்ரதமென்று அவ்வழியாலே இவனுக்கிதில் விஶ்வாஸம் பிறக்கைக்காக.

†கீழே "பிரிதிசென்றடைநெஞ்சே" என்றார்; "க்ரமத்திலே செய்கிறோம்"என்றுறியிருந்தது நெஞ்சு; "கெடுவாய்! ப்ரக்ருதிலேம் ஸ்ருஷ்டராயிருப்பார்க்கு, 'அப்படிச்செய்கிறோம்' என்றுறியிருக்கப்போமோ? அப்ராக்ருத சரீரபரிக்ரஹம் பண்ணினார்க்கன்றோ? "பின்னைச்செய்கிறோம்" என்றுறியிருக்கலாவது" என்று இங்ஙனே ப்ரக்ருதியினுடைய அஸ்த்திரதையையும், விஷயங்களினுடைய தண்ணிமையையும், பற்றப்படுகிற விஷயத்தினுடைய வைலக்ஷண்யத்தையும் சொல்லி, இருந்தபடி இதுவானபின்பு † ஒருகைகால் முறியவாகிலும் ஒருக்ஷணம் முற்பட்டதடலாக ஆஶ்ரயிக்கப்பாராய்! என்று திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்கிறார்.

†(முற்றமூத்து) ஹிமவானில் திருப்பிரிதியை ஆஶ்ரயியென்று திருவுள்ளத்தைக்குறித்து உபதேசித்தார்; அது தம்த்வரைக்கு அநு

நம் பண்ணுமிடத்தில் ருஷிசந்தோதேவதைகள் வேண்டுமாபோலே ஆழ்வார்க்கு மந்த்ரத்தினுடைய உத்தேஶ்யதையாலே மந்த்ரப்ரதனிருந்த தேசமுத்தேஶ்யமென்று கண்டுகொள்வது என்றருளிச்செய்வர்.

கீழ்ச்சொன்ன மூந்தின ஸங்கதியைப் பாட்டில் தாத்பர்ய கதநபூர்வகம் விஸ்தரிக்கிறார், (கீழேயித்யாதி). (ஒருகைகால் முறிய வாகிலும்) என்றதுக்கு-முறியும்படியாகிலும் ஓடி ஆஶ்ரயி என்ற ஶ்ரைஷ்ட்யத்திலே தாத்பர்யமாதல், கேவல சரணசைதில்யம் பிறப்பதற்கு முன்னே யென்று தாத்பர்யமாதல்கொள்வது.

கீழிற்றிருமொழியிலே, "பிரிதிசென்றடைநெஞ்சே" என்றவது அதிதூரதேசமென்றஞ்சித்திமிர்த்திருக்க; ஸந்நிஹிதமாக வதரியிலே வந்தான், அங்கேகடுக ஆஶ்ரயி என்று ஸங்கத்யந்தரம் சொல்லுகைக்கு ப்ரதீகக்ரஹணம் பண்ணுகிறார், (முற்றமூத்து) என்று.

(க) திருப்பல் - கஉ.

ரூபமாக மேல்விழாதே திமிர்த்திருந்தது; (க) "மந ஏவ மநுஷ்யாணாம் - மநஏவ மநுஷ்யாணும்" என்று பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் ஹேது மநஸ்ஸிறே. இது பகவத்விஷயத்தில் மேல்விழுகிறதில்லை, இனி பழையதுவேயிறே நமக்குகிலை, இனி அவன்றான் விரோதியான இவ்வுடம்போடே தன்னையாஶ்ரயித்துப் பெறலாம் படிக்கீடாக இங்கேவந்து *ஸந்நிஹிதனானான்; இனி இந்த விரோதியான ப்ரக்ருதிதான் தேஹமாயும் இந்த்ரியங்களாயும் சப்தாதிவிஷயங்களாயுமிறே விரோதியாவது; அநுபாவ்யவிஷயங்களில் ப்ரதாந போக்யங்களாவன - ஸ்த்ரீகளிறே; அவர்கள் தாங்களாகிறார் - தங்களைக்கொண்டு அருமைப்படுத்தி இவன் ஸர்வஸ்வத்தையுமபஹரிக்கு மத்தனைபோக்கி, இவனுக்குத் தங்களுடைய உடம்புகொடுக்கக் கடவர்களன்றிக்கே, கொடுத்தார்களாகில் அதுதன்னில் அநுபாவ்யமொன்றில்லாதபடி அல்பமாய் அஸ்த்திரமாய் அநர்த்தாவஹமாய் துராராதமாயிறே யிருப்பது; இனி தேஹமாகிறதுதான், ஏகரூபமாயிருப்பதொன்றல்லாமையாலே, அவை தன்னுடைய அநுபவயோக்யமுள்ளது சிறிதுநாளாய், பின்பு அதுவுங்கூட இல்லாதபடியிறே யிருப்பது; இந்த்ரியங்களாகிறவிவை, (உ) "ஆநந்தயாதி - ஆநந்தயாதி" என்கிறபடியே - இவனுக்கு நிரதிசயாநந்தத்தைப் பண்ணிக்கொடுக்கும் பகவத்விஷயத்துக்குடலாகையன்றிக்கே ஸந்நிஹிதமான க்ஷுத்ரவிஷயங்களிலே மூட்டி துக்கத்தை விளைக்கக்கடவதாய், பின்பு தானுண்டாயிருக்கச்செய்தேயும் இக்கார்யந்தன்னையும் செய்யமாட்டாதபடியாயிறே யிருப்பது; இப்படியிருக்கையாலே, இவ்வசித்து தனக்கே பாங்காயிருக்கிறநாளிலே அவனை யாஶ்ரயித்துத் தன்னைக் கழித்துக்கொள்கைக்கு உடலாயிருப்பது மோராகாரமுண்டு; அவன்றானும் இது பாங்கானபோதே தன்னை யாஶ்ரயிக்கலாம்படி இங்கே ஸ்ரீபதரியிலேவந்து ஸந்நிஹிதனானான்; ஆனபின்பு இது அநுகூலமானபோதே அவனை யாஶ்ரயித்து இத்தைக் கழிப்பித்துக்கொள்வோமென்று பார்த்து அதிலே ஒருப்படுகிறார்.

†பட்டரை ஒருவ்யாபாரி, "'இது அல்பம் அஸ்த்திரம்' என்று இத்தை த்யாஜ்யமாக நினைத்திராநின்றார்கள் சிலர், 'காண்கிற வுடம்புக்கவ்வருகில்லை' என்று இது தன்னிலே போக்யதாபுத்தி பண்

---

சரீரந்தனக்கு ஆநுகூல்யமும் ப்ராதிகூல்யமும் கூடுமோவென்ன; கூடுமென்னுமதுக்கு ஸமாதமருளிச்செய்கிறார், (பட்டரையித்யாதி).

---

(க) வி - பு - ௬ - எ - உஅ. (உ) தை - ஆந - உ - எ - க.

ணியிராநின்றார்கள் சிலர், ஒன்றைப்பற்றி இவையிரண்டும் நடக்கிறபடி யெங்ஙனே" என்று கேட்க, "பாக்யாதிகர்க்கு இதினுடைய தோஷதர்சநத்தைக்கொண்டு கைவிடுகைக்குமுடலாய், பாக்யஹீநர்க்கு இதிலே போக்யதாபுத்திபண்ணி அநர்த்தப்படுகைக்குமுடலாம்படி அவ்வவருடைய புண்யபாபங்களையிட்டு அதுக்கநுரூபமாகக் காணுமித்தைப்பண்ணிற்று" என்றருளிச்செய்தார். (க) †[बाल्ये क्रीडनकासक्ताः - பால்யேக்ரீடநகாஸக்தா:] பால்யத்தில் லீலோபகரணங்கொண்டு போதுபோக்கித்திரியும், அல்பம் வெளிச்செறிப்புப்பிறந்தவாறே விஷயங்கள்வந்துகைக்கொள்ளும்,பின்னையுமவைதன்னையுமநுபவிக்கவொண்ணாதபடி மூப்புவரும், ஆனபின்பு இது பாங்கானநாளிலே ஒருக்ஷணம் முற்பட்டதுடலாக பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணவடுக்கும் என்னுகின்றதிறே.

முதற்பாட்டு.—(முற்றமூத்து) பரிணாமித்ரவ்யத்துக்குப் பரிணாம பரம்பரைகள் வரத்தவிராதிறே; இனி ஒரு அவஸ்த்தைக்கு அவகாசமில்லாதபடி கழியமூத்து. (கோல்துணையா) ‡முன்பு தன்னையெல்லார்க்கும் அபாஶ்ரயமாகவிறே நினைத்திருப்பது; ஒரு பரமசேதநனைப் பற்றுகிறானுமன்றே. † ஜீயர் ஸந்யஸித்தருளுகிறவன்று, " தண்டதாரணம்பண்ணுகிற † மந்த்ரம், 'நீயெனக்கு மித்ரமாய் எல்லாரக்ஷணங்களும் பண்ணவேணும்' என்றாயிற்றிருப்பது, அத்தைக்கேட்டு, 'ஒருஸர்வஜ்ஞன் ஸர்வசக்தி பரமசேதநனை ஓராசார்யன் முன்னாக இவ்வார்த்தை சொல்லிவைத்து இத்தையும் இவ்வார்த்தைசொல்லும்படியான இவ்வாஶ்ரம ப்ராப்திதானென்' என்றிருந்தேன்காண்" என்றருளிச்செய்வர். (முன்னடிநோக்கி வளைந்து) முன்பு இறுமாப்பாலே தரைபாராதேயிறே திரிவது. சோர்கள் வெற்றிலே சிலரிடவன்றிக்கே தாங்களே யெடுத்திறேதின்பது, "தலைகவிழ்ந்துவாங்கில் சிலரை வணங்கிற்று" என்னும் தூர்மாநத்தாலே (உ) "द्विधा भज्येयम् - த்விதாபஜ்யேயம்" என்பது § இயற்றி

ஒருதேஹத்திலிரண்டு ஆகாரம் கூடுமென்னுமதுக்கு ப்ரமாணமும் காட்டுகிறார், (பால்யேத்யாதி).

முதற்பாட்டு.—(முற்றவித்யாதி). மிகவும் மூத்தவனுக்குக்கோல்பிடிக்கை ஸ்வதஸ்ஸித்தமாயிருக்கவு மருளிச்செய்ததுக்குக் கருத்து - துணையாகாதத்தைத் துணையாக்கினானென்று தோற்றுகைக்காகவென்று பலித்த தாத்பர்யங்களை யருளிச்செய்கிறார், (முன்பித்யாதி). பரமசேதநன்தவிர வேறொன்று ரக்ஷகமன்றென்னுமதுக்கு ஸம்வாதம், (ஜீயரித்யாதி). மந்த்ரம் (௩) "सखा मे गोपाय - ஸகாமேகோபாய" என்றது.

(க)
§ இயற்றி - சக்தி -

(உ) ரா - யு - ௩௬ - கக.
(௩)

மூ — முதுகு பற்றிக் கைத்தலத்தால் முன்னொரு கோலூன்றி
விதிர் விதிர்த்துக் கண்சுழன்று மேற்கிளைக் கொண்டிருமி
இதுவென்னப்பர் மூத்தவாறென்றிளையவரேசாமுன்
மதுவுண் வண்டு பண்கள் பாடும் வதரி வணங்குதுமே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கைத்தலத்தால் | கையாலே | மூத்தவாறு | கிழத்தனத்தை யடைந்தபடி |
| முதுகுபற்றி | முதுகைப்பிடித்தும் | இது என் | இதென்ன- (இவ்வளவதிகமா!) |
| முன்ஒருகோல் | முன்னே ஒருகொம்பை | என்று | என்றுசொல்லி |
| ஊன்றி | ஊன்றிக்கொண்டும் | ஏசாமுன் | ஏசுவதற்குமுன்[illegible]ன, |
| விதிர்விதிர்த்து | உடம்புநடுங்கியும் | மது | பூவில்தேனை[illegible]ள்ள |
| கண்சுழன்று | கண்கள்சுழலமிட்டும் | உண் | பானம்பண்ணநின்று |
| மேல்கிளைக்கொண்டு | மேலானத்வநியோடே | வண்டு | வண்டுகள் |
| இருமி | இருமல்மேலிட்டும், | பண்கள்பாடும் | ராகங்களைப்பாடுகிற |
| இளையவர் | சிறுவர்கள் | வதரி | ஸ்ரீபதரியை |
| அப்பர் | பெரியவர் | வணங்குதும் | வணங்குவோம். (உ) |

யுண்டானநாளிறே; செயலற்றால் செய்யலாவதில்லையிறே. (இற்றகால்போல்தள்ளி) முறிந்தகால்போலே தடுமாறி. (மெள்ளவிருந்து) †ஸ்த்தியிலுண்டான அருமையாலே இருக்கவொருப்படும். ஒரு மஹாபாரதத்துக்குவேண்டும் ‡ நேர்த்திபோருமாயிற்று ஒருகாலிருந்தானைத் தலைக்கட்ட. (அங்கிளையாமுன்) இருந்த ஆயாஸந்தான் பொறுமை இளைக்குமாயிற்று. அக்லேசம் வருவதுக்குமுன்னே.

(பெற்றதாயித்யாதி) தாய்வடிவுகொண்ட பூதனையுடை பெரியமுலைவழியே ப்ராணனும் பாலோடொக்கவற்றும்படியமுது புஜிக்குமவனுடைய. அன்றிக்கே, பேய்வற்றும்படி முலையூடு உயிரையுண்டவாயானென்னவுமாம். † பால்நேரானவாறே ப்ராணனும் நேராயிற்று.

இத்தால், அநுகூலம்போலேதோற்றி ப்ரதிகூலமான ப்ரக்ருதியைக் கழித்துக்கொள்ளப்பார்க்கில், தாய்வடிவைக்கொண்டு அநுகூலரைப்போலே வந்து ப்ரதிகூலமான பூதனையை நிரஸித்தவன் திருவடிகளைப்பற்ற வடுக்குமென்கிறார். ... ... ... (க)

(ஸ்த்திதியில்) என்றது - நிற்கையிலென்றபடி.

(பேய்வற்றும்படி) என்றது - பேயின்சரீரம்வற்றும்படியென்றபடி. முலையூடு பாலையுண்ணக்கூடுமித்தனைபோக்கி ப்ராணனை யுண்ணக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார், (பாலித்யாதி). பால்சேர்பட்டவளவிலே இவனுடைய அகடிதகடநாஸாமர்த்யத்தாலே ப்ராணனும் சேர்பட்டது, ஆகையாலே உண்ணக்கூடுமென்று கருத்து. ... ... ... ... (க)

‡ நேர்த்தி-நேர்தல்-ப்ரயாஸம்.

மூ.—உறிகள்போல் மெய்ந்நரம் பெழுந்தூன் தளர்ந் துள்ளமெள்கி
நெறியை நோக்கிக் கண்சுழன்று நின்று நடுங்காமுன்
அறிதியாகில் நெஞ்ச மன்பா யாயிர நாமம்சொல்லி
வெறிகொள் வண்டு பண்கள் பாடும் வதரி வணங்குதுமே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மெய் | சரீரத்திலுள்ள | உறிகள்போல் | உறிகளைப்போலே |
| நரம்பு | நரம்புகளானவை | எழுந்து | மேலேகிளம்பி |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (முதுகுபற்றிக் கைத்தலத்தால்) † தளர்ப்பல்யத்தாலே முதுகுநோமே, ஒருகையாலே அத்தைப்பற்றும். (முன்னொருகோலூன்றி) முன்பு விழாமைக்காக ஒருகோலை யூன்றுமாயிற்று. இரண்டருகும் கப்புக்கால் கொடுக்கவேண்டும் படியிறே யிருப்பது. (விதிர்விதிர்த்து) சரீரமெங்குமொக்க நடுங்குமாயிற்று. (கண்சுழன்று) † ஓரோ அவயவங்களுக்குப் பிறக்கும் விகாரங்கள் சொல்லுகிறது. (மேற்கிளை) மேற்கென்று - மேலாய், † மேலிளைப்புக்கொண்டென்னுதல்; அன்றிக்கே, மேலானகிளையை - உச்சமான த்வநியைக்கொண்டிருமி. (இதுவென்னப்பர் மூத்தவாறு) † இதுதான் எல்லாரும் மூக்கக்கடவதிறே, இந்நனை † கழிய மூக்கலாகாது என்பர்களாயிற்று, அப்பர் - என்று - † ப்ரக்ருதி, அதின் மேலே †மூப்பு. (இளையவர்) அவர்களுக்கும் அது வ்யவஸ்த்திதமாய் தங்களுக்கும் † இவை வ்யவஸ்த்திதமானாற்போலேயிருக்க ஏசாநிற்பர்கள். (மதுவுண்டீத்யாதி) ஒருபண்ணைப் பாடுகையன்றிக்கே வண்டுகள் மதுபாநமத்தமாய் எல்லாப்பண்களையும் பாடாநிற்கும். (வதரி) † ஆக, இக்க்லேசத்தைத் தவிர்க்குமளவே யன்றிக்கே நிரதிசயாநந்தத்தைப் பெற்றுக் களிக்கலாம்படியான தேசமாயிற்று. ... (௨)

அரு.—இரண்டாம்பாட்டு.—(முதுகித்யாதி). மூற்றமூத்த ப்ரகார விசேஷத்தை விவரிக்கிறாரென்று ஸங்க்ஷிப்தமென்று வ்யாக்யானம் செய்தருளுகிறார், (தளர்ப்பல்யேத்யாதி). கண்சுழலுகை - உபலக்ஷணமாய், ஸர்வாவயவ விகாரங்களும் சொல்லுகிறதென்கிறார், (ஓரோவித்யாதி). (மேலிளைப்புக்கொண்டு) என்றது, மேல்ஸ்வாஸம் பிறக்கும்படி க்லேசம் கொண்டென்றபடி. "அப்பர்மூத்தவாறு என்," என்னவாயிருக்க, "இது" என்றதால் பலித்தவர்த்தம், (இது தானித்யாதி). (கழியமூக்கை) கேவலம் சிதிலாவயவனாகை. (ப்ரக்ருதி) என்றது, ஸ்வபாவத்தில் மூத்தமையைச் சொல்லுகிறதென்றபடி. (மூப்பு) என்றது - மூப்பையும் சொல்லுகிறதென்றபடி. இத்தால் கழிய மூத்தமையைச் சொல்லிற்றாயிற்று. (இவை) என்றது - இளமையும் சேர்க்கையுமென்றபடி. வண்டுகளைப்போலே நமக்கு மவனை வணங்கினால் ஆநந்திக்கலாமென்று முட்கருத்தை யருளிச்செய்கிறார், (ஆகவித்யாதி) ... ... (௨)

| | | | |
|---|---|---|---|
| ஊன் | மாம்ஸம் | அறிதி ஆகில் | ஜ்ஞாந முடையயானல் |
| தளர்ந்த | கட்டுக்குலைந்து | | |
| உள்ளம் | ஹ்ருதயம் | அன்பாய் | (ஸர்வேஶ்வரன் பக்கல்) பக்தியையுடையையாய் |
| மெள்கி | சிதிலமாய், (தூரப் போவதற்காக) | | |
| நெறியை நோக்கி | வழியைப்பார்த்து (அவ்வாயாஸத்தாலே) | ஆயிரநாமம் | (அவனுடைய) ஆயிரம்திருநாமங்களையும் |
| கண்சுழன்று | கண்ணுஞ் சுழலையிட்டு | சொல்லி | உச்சரித்து |
| | | வெறிகொள் | பரிமளப்ரசுரமான |
| நின்று | (போகமாட்டாதே) நின்று | வண்டு | வண்டுகள் |
| | | பண்கள் | இசைப்பாட்டுக்களை |
| நடுங்காமுன் | நடுங்கும்காலம் வருவதற்குமுன்னே, | பாடும் | பாடாநின்றுள்ள |
| | | வதரி | ஸ்ரீபதரியை |
| நெஞ்சம் | மநஸ்ஸே! | வணங்குதும் | வணங்குவோம். (ங) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (உறிகளித்யாதி) † மெய்யில் - சரீரத்தில், நரம்புகளானவை; † பால்யத்தில்மறைந்து கிடந்தவை, சரீரம் பசையறஉலர்ந்தபடியாலே உறிபோலே மேலே † §புடைக்குமாயிற்று. அதுக்குறுப்பாக, (ஊன்தளர்ந்து) மாம்ஸம்க்ஷயித்து. (உள்ளமெள்கி) அத்தாலே ஹ்ருதயமீடுபட்டு. (நெறியையித்யாதி) போக்கைநினைக்குமே, தூரப்போகநினைக்கிறுனையாலே வழியைப் பார்க்குமே, நெடுகப்பார்த்த ஆயாஸம் பொறாமை கண்சுழலும், பின்பு அடிபேர்த்திடமாட்டாதே நின்று நடுங்குமாயிற்று. (அறிதியாகில் நெஞ்சம்) ஜ்ஞாநப்ரஸரத்வாரமாகில்; அவன் பக்கலிலே அன்பையுடையையாய், சிலவற்றைச்சொல்லி மீளவேண்டாதபடி † பாங்கான வளவிலே ஆயிரம் திருநாமங்களையும்சொல்லி. (வெறியித்யாதி) பரிமளத்தை வகுத்தாற்போலே யிருக்கிற வண்டுகள் முக்தர் ஸாமகாநம் பண்ணுமாபோலே அநுபவத்துக்குப் போக்குவிட்டுப் பாடுகிறனவாயிற்று. ... ... ... .... ... (ங)

அநு.—மூன்றாம்பாட்டு.—(உறிகளித்யாதி) விதிர்விதிர்த்துக்கண்சுழலுகைக்கு ஹேதுகதநமுகேந மூப்பை வர்ணிக்கிறாரென்று ஸங்கதியை யுட்கொண்டு பதவ்யாக்யாநம் செய்தருளுகிறார், (மெய்யிலித்யாதி). "எழுந்து" என்றபதவாஸநை, (பால்யத்திலித்யாதி). (புடைக்கும்) - பரம்பும். "நெஞ்சம்" என்றது - அண்ஸம விளியாய், அதாவது - ஸமீபத்தே யழைக்கையாய், ஸம்போதநமென்று கண்டுகொள்வது. (பாங்கான வளவிலே) என்றது - வ்ருத்த(த்)ஞனல் திருநாமங்களை முடியச்சொல்லமாட்டாதே, சில சொல்லி நடுவே மீளவேண்டாத பால்யத்திலே என்றபடி. ... (ங)

§ புடைக்கும் - கிளம்பும்.

மூ.—பீளைசோரக் கண்ணிடுங்கிப் பித்தெழ மூத்திருமித்
தாள்கள்நோவத் தம்மில் முட்டித் தள்ளிநடவாமுன்
காளையாகிக் கன்றுமேய்த்துக் குன்றெடுத் தன்றுநின்றான்
வாளைபாயும் தண்டடம் சூழ் வதரி வணங்குதுமே. (ச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கண் இடுங்கி | கண்கள்நெருங்கி | அன்று | (இந்த்ரன் கல்வர்ஷத்தை வர்ஷித்த) |
| பீளை | கண்ணழுக்கு [ம் | | அக்காலத்திலே |
| சோர | புறப்படும்படியாகவு | | |
| பித்து | பித்தம் [ம் | குன்று | கோவர்த்தந மலையை |
| எழ | மேலிடும்படியாகவு | எடுத்து | குடையாகவெடுத்து |
| மூத்து | கிழத்தனத்தை யடைந்து | நின்றான் | (ஏழுநாள்) தரித்து நின்றவனுடைய |
| இருமி | இருமி | வாளை | மத்ஸ்யங்கள் |
| தாள்கள் | கால்கள் [க்கி | பாயும் | குதித்துப்பாயா நின்றுள்ள |
| தம்மில் முட்டி | ஒன்றோடொன்று தா | | |
| நோவ | நோம்படியாக | தண் | குளிர்ந்த |
| தள்ளி | தடுமாறி | தடம் | தடாகங்கள் |
| நடவாமுன் | நடப்பதற்குமுன்னே, | சூழ் | சூழ்ந்திருப்பதான |
| காளையாகி | யுவாவாய்க்கொண்டு | வதரி | ஸ்ரீபதரியை |
| கன்றுமேய்த்து | கன்றுகளை மேய்த்து | வணங்குதும் | வணங்குவோம். (ச) |

வ்யா.—நாலாம்பாட்டு. (பீளைசோரக்கண்ணிடுங்கி) † கண்ணானது ஸங்கோசத்தைபஜித்து; பசையற்றபடியாலே பீளைபாய்ந்து. (பித்தெழ) † கழிய மூத்து. † ஸ்க்காலித்யம் பிறக்கும்படி மூத்து. (தாள்களித்யாதி) † ஒருசஸ்த்ராதிகளாலாதல் மற்றொன்றிலே இடறியாதலன்றிக்கே, காலோடு காலரைந்துநோவ. தாள்கள்-தம்மில்முட்டி-நோவவென்றபடி. † பின்னையும் சாபலத்தாலே போகத்துடங்குமே; † தடுமாறிநடப்பதுக்குமுன்னே. (காளையாகி) † தன்னையாக

அரு.—நாலாம்பாட்டு.—(பீளையித்யாதி). போக்கிலேயொருப்பட்டு நெறியைநோக்கிநின்று நடுங்காநின்றாலும் - (ச) "ஆஶாத்ருஷ்ணாயதே- ஆசைகாதருஷ்ணையதே" என்கிறபடியே, போகநினைத்த விஷயத்திலே ஆசாதிசயத்தாலே போமவனுடையபடியை வர்ணித்தருளுகிறாரென்று ஸங்கதியைத் திருவுள்ளம் பற்றி, "கண்ணிடுங்கிப்பீளைசோர" என்றந்வயமுகேந தாத்பர்ய மருளிச்செய்கிறார், (கண்ணானதித்யாதி). பித்து - பைத்யமாய், அது எழும்படியாக மூத்தென்று சப்தார்த்தமாய், பலிதார்த்தம், (கழியமூத்தென்று). விவரணம், (ஸ்க்காலித்யமித்யாதி). "தம்மில்" என்றதுக்கு வ்யாவர்த்ய மருளிச்செய்கிறார், (ஒருவித்யாதி). மேலுக்கவதாரிகை, (பின்னையுமித்யாதி). சப்தார்த்தம், (தடுமாறியித்யாதி). மூப்பை நிந்தித்துக்கொண்டு வருகிற ப்ரகரணத்திலே "காளையாகி" என்று, - அவனுடைய யௌவநத்தை யருளிச்செய்தவருக்கு உட்கருத்தை யருளிச்செய்கிறார், (தன்னை யித்யாதி). "கன்று" என்றதுக்

மூ.—பண்டு காம ரானவாறும் பாவையர் வாயமுதம்
உண்டவாறும் வாழ்ந்த வாறு மொக்க வுரைத்திருமி
தண்டுகாலா வூன்றியூன்றித் தள்ளி நடவாமுன்
வண்டுபாடும் தண்டுழாயான் வதரி வணங்குதுமே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பண்டு | பால்யத்தில் | தண்டு | தடியை |
| காமரானஆறும் | ஸ்த்ரீகள் தன்னை விரும்பியிருந்தபடியையும் [ய | காலா | காலாகக்கொண்டு |
| | | ஊன்றிஊன்றி | (அசக்தியினால் ஓரிடத்திலேயே) பலதரமும் ஊன்றி |
| பாவையர் | (அந்த) ஸ்த்ரீகளுடை | | |
| வாய் | வாயிலுள்ள | தள்ளி | இளைத்து |
| அமுதம் | அம்ருதத்தை | நடவாமுன் | நடப்பதற்குமுன்னே, |
| உண்டஆறும் | புஜித்த படியையும் | வண்டுபாடும் | வண்டுகள்பாடுகிற |
| வாழ்ந்தஆறும் | சிற்றின்பத்தினால்ஸுகித்த (அழிந்த)படி | தண் | குளிர்ந்த |
| | | துழாயான் | திருத்துழாய் மாலையையுடையஸர்வேஶ்வரனது |
| ஒக்க | ஒருபடிப்பட[யையும் | | |
| உரைத்து | சொல்லி(அவ்வாயாஸத்தாலே) | வதரி | ஸ்ரீபதரியை |
| இருமி | (நடு நடுவே) இருமி | வணங்குதும் | வணங்குவோம். (ரு) |

ரயித்தார்க்குத் தன்னோடு ஸாம்யாபத்தியைக்கொடுக்குமவன். நித்யயுவாவாகலாம். (கன்றுமேய்த்து) † ரக்ஷ்யவர்க்கத்தில் † வரையாதே ரக்ஷிக்குமவன். (குன்றெடுத்தன்றுநின்றான்) அரியனசெய்து நோக்குமவனாயிற்று. (வாளையித்யாதி) தனக்கென்ன ஒரு †யோக்யதையில்லாதபதார்த்தங்களும் களித்துவர்த்திக்கும் தேசமாயிற்று. (ச)

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பண்டுகாமரித்யாதி) † தனக்கென்ன யோக்யதையுள்ளநாள் நிஷித்தங்களையே முன்னடிதோற்றாதே யநுஷ்டித்துப்போரும்; பின்பு பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணுமாகி

குத் தாத்பர்யம், (ரக்ஷ்யேத்யாதி). (வரையாதே) தரதமபாவம் பாராதே. (யோக்யதை யில்லாத) என்றது-பகவத்ஸமாஶ்ரயணத்துக்கு ஜ்ஞாநாதியோக்யதையில்லாதவென்றபடி..... ... ... ... ... ... (ச)

அரு.—அஞ்சாம்பாட்டு.—(பண்டுகாமரித்யாதி). தாள்கள் தம்மில் முட்டிநோவத்தள்ளி நடக்குமவனைப் பார்த்து, "நீ இங்ஙனே இளைத்து நடக்கப் புகாநின்றாய்" என்று சிலர் வினவ, அவர்களைக் குறித்து இவன் சொல்லுமதையும் நடக்கும் ப்ரகாரத்தையு மருளிச்செய்கிறாரென்று ஸங்கதியையுட்கொண்டு, "அவன் சொல்லும்போது காலம் குறுகிற்று, ஹிதம் சொல்லுவாருண்டோ" என்னவேண்டியிருக்க தூர்வ்ருத்த கீர்த்தநம் பண்ணவேண்டுவதே! என்று ஈடுபொட்டிலே தாத்பர்யமாக வருளிச்செய்கிறார், (தனக்கென்னவித்யாதிவாக்யத்ரயத்தாலே). "பாவையருடைய வாயமுதமுண்டவர

மூ.—எய்த்தசொல்லோ டீளையேங்கி யிருமி யிளைத்துடலம்
பித்தர்போலச் சித்தம்வேறாய்ப் பேசி யயராமுன்
அத்தனெந்தை யாதிமூர்த்தி யாழ்கடலைக் கடைந்த
மைத்தசோதி யெம்பெருமான் வதரி வணங்குதுமே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எய்த்த | பலஹீநமான | ஈளை | கோழையாலே |
| சொல்லோடு | பேச்சுடன் | ஏங்கி | இளைத்து |

லும், (க) "வணக்கொடுமாள்வது வலம்" என்கிறபடியே நன்மைக் குடலாய்த் தலைக்கட்டுமிறே, அதுவும்செய்யாதே, சேஷித்தநாள் வ்ருத்தகீர்த்தநத்தைப்பண்ணிச் செத்துப்போமாயிற்று. (பண்டித்யாதி) முன்புதான் ஸ்த்ரீகளுக்கு ஸ்ப்ருஹாவிஷயமாய்ப் போந்தபடியையும், அவர்களுடைய § வாகம்ருதத்தை புஜித்தபடியையும். †அன்றிக்கே, அவர்கள் தாங்கள் ஆதரித்து மேல்விழத்தானிருந்தபடியாகவுமாம். (வாழ்ந்தவாறும்) (உ) † "இன்னம் கெடுப்பாயோ" என்கிறபடியே - இப்போது கேடாகவிறே தாம் நினைக்கிறது. (ஒக்கவுரைத்திருமி) † இவற்றைச் சொல்லத்துடங்குமே, அநந்தரம் இருமல்வருமே, பின்னையும் சாபலத்தாலே விட்டகுறையிலே சொல்லத்துடங்குமே, ஆக இருமுவது சொல்லுவதாகாநிற்கும். (தண்டுகாலா) † காலால்கொள்ளுங் காரியத்தை ஒருதண்டாலே யாயிற்றுக் கொள்வது. †(ஊன்றியூன்றி) பின்னையழகிய மணவாளவரையர் இதுக்கு பட்டரருளிச்செய்தாராகச் சொன்னபடி. "ஒருகால் சரீரம் ஸ்த்திக்கவேண்டுமளவும்ஊன்றமாட்டானே,தன்கையில் பிடிக்கில்லாமையாலே, பலகாலித்தை யெடுத்தெடுத்து இடாநிற்கும்" என்று. (தள்ளியித்யாதி) தடுமாறிநடப்பதுக்குமுன்னே. (வண்டித்யாதி) "அன்று, இன்று" என்னவேண்டாதே என்றுமொக்க அநுபவமே யாத்ரையாகச்செல்லுந்தேசம். சிலநாள் அநுபவித்துப் பின்பிருந்து வ்ருத்தகீர்த்தநம் பண்ணவேண்டா. ... ... ... (௫)

றும்" என்று கீழருளிச்செய்து, பாவையர் தாங்கள் தன் வாயமுதமுண்டவாறுமென்று அர்த்தாந்தரமருளிச்செய்கிறார், (அன்றிக்கே யித்யாதி). "வாழ்ந்தவாறும்" என்றது - விபரீத லக்ஷணையாய், கெட்டவாறு மென்றாக்கியருளிச்செய்கிறார், (இன்னமித்யாதி). "உரைத்திருமி" என்னாதே, "ஒக்க" என்கைபாலே, பலிதவர்த்த மருளிச்செய்கிறார், (இவற்றை யித்யாதிவாக்ய சதுஷ்டயத்தாலே). தாள்கள் தம்மில் முட்டிநொந்தபடியாலே தண்டைக்காலாக்கிக்கொண்டு நடக்கத்துடங்குமென்றருளிச்செய்கிறார், (காலாலித்யாதி). "ஊன்றியூன்றித் தள்ளி நடக்கும்" என்று பூர்வர்கள் நிர்வாஹமாய், ஒருகால் தானுமூன்றச் சக்தியில்லாமையால் அங்கேதான் பலகாலூன்றுமென்று பட்டர்நிர்வாஹத்தை யருளிச்செய்கிறார், (ஊன்றியித்யாதிவாக்யத்வயத்தாலே. ()

(க) தி - வாய் - க - ௩ - அ.
§ வாக்யம்ருதம்.
(உ) தி - வாய் - ௬ - ௬ - அ.

| | | | |
|---|---|---|---|
| இருமி | இருமலாலேவருந்தி | ஆழ் | அகாதமான |
| உடலம் | சரீரம் | கடலை | ஸமுத்ரத்தை |
| இளைத்து | மிகவும் மெலிந்து | கடைந்த | கடைந்தவனாய் |
| பித்தர்போல | பைத்தியம்பிடித்தவர்களைப்போலே | மைத்த | கறுத்த [னாய் |
| | | சோதி | தேஜஸ்ஸை யுடைய |
| சித்தம்வேறாய்ப் பேசி | ஒன்றைநினைத்து மற்றொன்றைப்பேசி | எம்பெருமான் | என்னை அடிமைகொண்ட ஸர்வேச்வரனுடைய |
| அயராமுன் | தளருவதற்குமுன் | | |
| அத்தன் | ஸ்வாமியாய் [பே, | வதரி | ஸ்ரீபதரியை |
| எந்தை | எனக்குப்பிதாவாய் | வணங்குதும் | ஆச்ரயிப்போம். (௬) |
| ஆதிமூர்த்தி | ஜகத்காரணபூதனாய் | | |

வ்யா.—ஆறாம்பாட்டு. (எய்த்தசொல்லோடு) † துடங்கி எய்க்கையன்றிக்கே முற்றுறவே எய்த்தாயிற்றுச் சொல்லுவது; அது தான் அநந்தரம் ஈளையோடே கொடுபோய்ச் சேர்க்கும். (ஏங்கி) † அதினநந்தரமாக இளைப்புவந்து கைக்கொள்ளுமாயிற்று, (இருமி இளைத்து உடலம்) † அதுதான் இருமலுக்குப் பூர்வக்ஷணவர்த்தியாயிருக்குமிறே. இருமி, அத்தாலே சரீரம்போர இளைக்குமாயிற்று. (பித்தர்போலச் சித்தம்வேறாய்ப்பேசி) † நினைவொன்றும் சொல்லொன்றுமாயிருக்குமாயிற்று. † பித்தேறினாரைப்போலே நெஞ்சால் நினைப்பதொன்றாய் வாயால் சொல்லுமதொன்றாயிருக்குமாயிற்று. (சித்தம்வேறாய்ப் பேசியயராமுன்) † இப்படி பேசுகையுங்கூட வரிதாம்படி அயர்வோடே தலைக்கட்டும்; இப்படி மோஹிப்பதற்கு முன்பே. (அத்தனித்யாதி) வகுத்தஸ்வாமியானவன், எனக்கு ஹிதகாமனானவன், ஜகத்காரணபூதனான † ஸர்வேச்வரன். (ஆழ்கடலைக்கடைந்த)

அரு.—ஆறாம்பாட்டு.—(எய்த்தவித்யாதி). இருமியிருமி யுழைக்கத்துடங்கினவளவிலே கண்டுவினவினவன் விட்டுநடக்குமே, இவன் துடங்கின வார்த்தையை விடமாட்டாதே தன்னில் தான் சொல்லுமே, அத்தை வர்ணித்தருளுகிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

இருமியிருமி யுரைத்தத்தால் இளைப்பு வருகையாலே எய்த்த சொல்லாயிற்றென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார், (துடங்கியெய்க்கையித்யாதி). எய்த்து - இளைத்து. ஈளை - கோழை. ஏங்குதல் - பொருமுதலாய், அத்தால்வந்த இளைப்பைச்சொல்லுகிறதென்கிறார், (அதினித்யாதி), இப்படிப்பட்ட இளைப்பும் இருமலுக்கு ஹேதுவாய்விடுமென்கிறார், (அதுதானித்யாதி). போர இளைத்தவாறே நினைத்தபடிசொல்லவும் வல்லனல்லனென்று தாத்பர்யமருளிச்செய்கிறார், (நினைவித்யாதி). சப்தார்த்தம், (பித்தேறினாரையித்யாதி). (இப்படி பேசுகையும் கூட) என்றது - அபுத்யா சொல்லுமதுவும் கூடவென்றபடி. மூர்த்திசப்தம் - ஸ்வரூபவாசகமாய், (ஸர்வேச்வரன்) என்கிறது. ... (௬)

மூ.—பப்ப அப்பர் மூத்தவாறு பாழ்ப்பது சீத்திரனை
யொப்ப ஐக்கள் போதவுந்த வுன்தமர் காண்மினென்று
செப்பு நேர் மென் கொங்கைநல்லார் தாம்சிரியாதமுன்னம்
வைப்பும் நங்கள் வாழ்வுமானான் வதரி வணங்குதுமே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சீத்திரனை ஒப்ப | சீயின்திரட்சிபோல | தாம் | (முன்பு ஆதரித்துப் போந்த) தாங்களே |
| ஐக்கள் | கோழையானது | | (இப்போது அருகிருந்தவர்களைப் பார் |
| போதஉந்த | மிகவும்தள்ள, (அதைக்கண்டு) | | த்து) |
| செப்புநேர் | செப்புப்போன்ற | | [வர் |
| மெல் | ம்ருதுவான [ராய் | உன்தமர் | உன்னோடு உறவுள்ள |
| கொங்கை | ஸ்தநங்களை யுடைய | காண்மின் | இவர்படியைப்பாருங் |
| நல்லார் | தான்தனக்கு ஹிதபரராக நினைத்திருந்த ஸ்த்ரீகள் | என்று | என்றுசொல்லி [கள் |
| | | சிரியாத முன்னம் | ஹாஸ்யம்பண்ணுவதற்குமுன்னே, |
| பப்ப | பப்ப(ப ப்பூ) | நங்கள் | நமக்கு |
| அப்பர் | கிழவர் | வைப்பும் | நிக்ஷேபதநமும் |
| மூத்தஆறு | கிழத்தனத்தை அடைந்தபடி | வாழ்வும்ஆனான் | வாழ்ச்சியுமானவனுடைய |
| பாழ்ப்பது | சாலப்பொல்லாது (என்றுசொல்லி) | வதரி | ஸ்ரீபதரியை |
| | | வணங்குதும். | ஆஶ்ரயிப்போம். (எ) |

ஆரியனசெய்தும் அபேக்ஷிதம்செய்துகொடுக்குமவன். (மைத்த சோதி) அபேக்ஷிதம் செய்யாவிடினும் விடவொண்ணாத வடிவழகை யுடையவன்; வெளுத்தல் சிவத்தல் செய்கையன்றிக்கே கண்ணுக்குக் குளிர்ந்ததேஜஸ்ஸையுடையவன். (எம்பெருமான்) அவ்வடிவழகைக்காட்டி என்னையடிமை கொண்டவனுடைய வதரியை யாஶ்ரயிப்போம். (௬)

வ்யா.—ஏழாம்பாட்டு.—(பப்ப)க்ஷேபோக்தியில் †இவருடைய அநுகாரமிருக்கிறபடி. பப்ப (ப ப்பூ) - என்றபடி. (அப்பர்மூத்தவாறு) எல்லார்க்கும் மூப்புவருகை தவிராதிறே; இத்தனைகழியமூக்கலாமாகாதே! என்பர்களாயிற்று. மூப்பை †ப்ரக்ருதியாக்கி அதிலே மூத்தபடியாகவாயிற்றுச் சொல்லுவது. (பாழ்ப்பது) இது சால

அரு.—ஏழாம்பாட்டு.—(பப்பவித்யாதி). இப்படி எய்த்துக்கிடந்தவன் ஆயுஶ்ஶேஷத்தாலே மெள்ளத்தெளிந்து கந்தவ்யஸ்தலத்திலே செல்ல, அங்கே இவனுக்கு உத்தேஶ்யர் இவனை க்ஷேபிக்கும்படியைச் சொல்லுகிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

(இவருடைய) என்றது - இப்பாட்டிலே ப்ரஸ்துதரான ஸ்த்ரீகளுடைய வென்றபடி. (ப்ரக்ருதி யாக்கி) - ஸ்வபாவமாக்கி. போதஉந்த - போரத்தள்ள,

மூ.—ஈசிபோமி னீங்கிரேன்மி னிருமி யிளைத்தீர் உள்ளம்
கூசியிட்ட ரென்றுபேசும் குவளையங் கண்ணியர்பால்
நாசமான பாசம்விட்டு நன்னெறி நோக்கலுறில்
வாசம்மல்கு தண்டுழாயான் வதரி வணங்குதுமே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| போமின் | போங்கோள், | | தீர், (நாங்களிப்படி சொல்வதைக் கேட்டு, |
| ஈசி | சீ! சீ | | |
| ஈங்கு | இங்கு | | |
| இரேன்மின் | இராதே கொள்ளுங்[கோள், | உள்ளம்கூசியிட்டீர் | ஹ்ருதயம் கூசினீர் |
| இருமி | இருமலாலே | | |
| இளைத்தீர் | சரீரம்கட்டுக் குலைந் | என்றுபேசும் | என்றுசொல்லுகிற |

ப்பொல்லாது; அறப்பொல்லாததாயிருந்ததீ! இவ்வசித்ஸம்ஸர்க்கம் என்று வெறுப்புக்குடலாயிற்று. (சீயித்யாதி) பூயபிண்டம்போலே ஶ்லேஷ்மாவானது போரத்தள்ள. சித்திரளையொப்பஜக்கள் போதஉந்த, பப்ப! அப்பர் மூத்தவாறு! பாழ்ப்பது! என்பர்கள். (உன்தமர்காண்மினென்று)இவன்பக்கல் யௌவநமும் கையில்†வீசமுமுள்ளவன்று, எல்லாருமொக்க "என்தமர், என்தமர்" என்பர்கள்; கையில்வீசமும் போய் இவனோட்டை ஸம்பந்தம் நமக்கு அவத்யாவஹம் என்று தோற்றும்படி யௌவநமும்போனவாறே, "உன்னுடையவன்" என்றும் மற்றையவளும் "உன்னோடேயன்றோ அவனுக்குறவு" என்றும் தங்களோடே தொற்றறச்சொல்லிப் பிணங்காநிற்பர்கள். (செப்பித்யாதி) இவனைக்கொண்டு போதுபோக்குகைக்காக முலைக்கச்சை நெகிழ்த்தி முலையினுடைய ஸந்நிவேசத்தைக் காட்டுவர்கள். இவன் கண்ணை§விடுத்து எழப்பார்க்கும்; †அத்தைக் கண்டு, †பிள்ளாய்! இவன் இவற்றோடு என்ன உறவுண்டாய்ப்பார்க்கிறான்" என்று சிரிப்பர்களாயிற்று. †செப்புநேர்மென் கொங்கைநல்லார் - அப்பரென்று சிரியாதமுன்னமென்னுதல். பண்டு தன் ஸர்வஸ்வத்தைநேர்ந்திறே ஸ்மிதம்பெறுவது; இப்போது இவரிருப்புக் கண்டுவிட்டுச் சிரிப்பர்களாயிற்று. (வைப்பும்நங்கள் வாழ்வுமானான்) பரிக்ரஹித்தவன்றே ஸாதநமுமாய், பின்னை ப்ராப்யனுமானவன் வர்த்திக்கிற வதரிவணங்குதும். ஒருநாள் ஆதரித்து ஒருநாள் சிரியாதவனாயிற்று. (க) "அம்ருதம் ஸாதநம் ஸாத்யம்-அம்ருதம் ஸாதநம்ஸாத்யம்" என்னக்கடவதிறே. ... ... ... ... ... (எ)

(வீசம்) மாகாணிப்பணம், தங்கள் பருவத்தைக்காட்டிச் சிரிக்கும் ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார், (அத்தையித்யாதி). (பிள்ளாய்) என்றது - பெண்பிள்ளா யென்றபடி. இவன் மூப்பைக்கண்டு சிரிப்பார்களென்றருளிச்செய்கிறார், (செப்புநேரித்யாதி). ... ... ... ... ... .. (எ)

(க) § (பா) விழித்து.

| | | | |
|---|---|---|---|
| குவளை | குவளைமலர்போலே | வாசம்மல்கு | பரிமளம்நிறைந்த |
| அம் | அழகிய | தண் | குளிர்ந்த |
| கண்ணியர்பால் | கண்ணையுடைய ஸ்த்ரீகள்பக்கலிலே | துழாயான் | திருத்துழாயையுடைய ஸர்வேச்வரன் நித்யவாஸம் பண்ணுகிற |
| நாசமானபாசம் | விநாசத்தை விளைக்கும் ஸங்கத்தை | | |
| விட்டு | தவிர்ந்து | வதரி | ஸ்ரீபதரியை |
| நல்நெறிநோக்கலுறில் | நல்வழி போகப்பார்க்கில், | வணங்குதும் | வணங்குவோம். (அ) |

வ்யா—.—எட்டாம்பாட்டு. (ஈசிபோமின்) † நடவும்; சீ, சீ, என்றபடி. (போமின்) போகீர் என்பர்கள். என்றவாறே இருக்கச் சொல்லிற்றாகக்கொண்டு இருக்குமிறே † பழையவாஸனையாலே. (ஈங்கிரேல்மின்) நீரிருக்கிறவிடந்தன்னை அறிந்திலீரோ, உமக்கு இங்குத்தை இருப்பில் ஓரந்வயமில்லைகாணும், போம், என்பர்கள். "என்தான்? எனக்கு ப்போகவேண்டுகிற ஹேதுவென்?" என்னுமே; (இருமி இளைத்தீர் - உள்ளம் கூசியிட்டீர்) என்பர்கள். இருமலாலே போர இளைத்தீர், உம்மை அறிவீரே, "இவர்கள் முன்னே இப்படி படுவோமே!" என்று எங்கள் ஸந்நிதியை யநுஸந்தித்து ஹ்ருதயம் கூசினீர் என்று சொல்லுகிற. (குவளையங்கண்ணியர் பால்) †இவனுடைய எளிவரவு காண்கைக்காக ஸாதரமாகப்பார்ப்பர்களாயிற்று. † அருநஞ்சாகிலுமாகிறது, ஆரமுதாகிலுமாகிறது, இவர்கள்தான் பார்க்கப்பெற்றோமிறே! என்று இவனுடைய பாவபந்தத்துக்குடலாயிருக்குமாயிற்று. (நாசமானபாசம்விட்டு) ஏதே

அரு.—எட்டாமபாட்டு.—(ஈசியித்யாதி). செப்பு நேர்மென் கொங்கை நல்லார் முலைக்கச்சை நெகிழ்த்துவது சிரிப்பதானவாறே, இவன் தன் ப்ராப்யம் கைபுகுந்தது என்று அங்கேயிருக்கத்தொடங்குமே, அநந்தரம் அவர்கள் பண்ணும் பரிபவத்தை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

முந்துற முன்னம் "ஈசி" என்னவொண்ணாமையாலே "போமின்" என்ன, போகாமையாலே "ஈசி" என்கிறார்களென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார், (நடவும்) என்று. (பழையவாஸனையாலே) என்றது - ப்ரணயரஸத்தாலேகொண்டு போகச்சொல்லுவது இருக்கைக்காகவே சொல்லுவர்களே, அந்த வாஸனையாலே யென்றபடி. "ஈங்கிரேன்மின்" என்றபின்பும் பாசம் வருகைக்கு ஹேதுத்வேந, "குவளையங்கண்ணியர்" என்றதென்னுமிடம் தோற்றவருளிச்செய்கிறார், (இவனுடைய வித்யாதி). பேச்சாலே ஆசையறுத்திருக்கவும் கண்ணாலே வளைத்துவைத்தால் ஸங்கம் வரும்படியை யுபபாதிக்கிறார், (அருநஞ்சாகிலுமித்யாதி). ... ... ... ... (அ)

மூ.—புலன்கள்நைய மெய்யில்மூத்துப் போந்திருந்துள்ள மெள்கிக்
கலங்க வைக்கள் போதவுந்திக் கண்டபிதற் றும்முன்
அலங்கலாய தண்டுழாய் கொண்டாயிர நாமம்சொல்லி
வலங்கொள் தொண்டர் பாடியாடும் வதரி வணங்குதுமே. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மெய்யில் | சரீரத்தில் | தொண்டர் | சேஷபூதரான ஸ்ரீ வைஷ்ணவர்கள் |
| புலன்கள் | இந்த்ரியங்கள் | | |
| நைய | சிதிலமாம்படி | அலங்கலாய | மாலாரூபமான |
| மூத்து | கிழத்தனமடைந்து | தண்துழாய் | குளிர்ந்ததிருத் துழாயை |
| போந்து | ஏகாந்தமான விடந் தேடிப்போய் | கொண்டு | கையிலேந்திக் கொண்டு |
| இருந்து | (அங்கே) இருந்து | | |
| உள்ளம் எள்கி | நெஞ்சுகலங்கியும் | ஆயிரம்நாமம் | (அவனுடைய) ஆயிரந்திருநாமங்களையும் |
| கலங்க | (வாதபித்தஶ்லேஷ்மங்கள்) வேறுபட (அத்தாலே) | சொல்லி | உச்சரித்து |
| ஐக்கள் | கபமானது | பாடி | கானம்பண்ணி |
| போத உந்தி | போரத்தள்ளியும் [ம் | ஆடும் | நர்த்தநம்பண்ணுகிற |
| கண்ட | கண்டத்தையெல்லா | வதரி | ஸ்ரீபதரியிலெழுந்தருளியிருக்கும்ஸர்வேஶ்வரனை |
| பிதற்றும்முன் | வாயில்வந்தபடி சொல்லுவதற்கு முன்னே, | வணங்குதும் | ஸேவிப்போம். (௯) |
| வலம்கொள் | ப்ரதக்ஷிணம்(தடக்கமான அநுகூலவ்ருத்திகள்) பண்ணுகிற | | |

னும் தசையிலுமிவனைவிடாதே விநாசத்தைப்பலிப்பிக்கும்படியான ஸங்கமாயிற்று. ஹேயவிஷயத்தில்ஸங்கம் விநாசத்தைப் பலிப்பிக்குமிறே. அத்தைத்தவிர்ந்து, நல்வழிபோகப்பார்க்கில்; தன்னை ஆஶ்ரயித்தார்க்குக்கொடுத்து ஆதரிக்கைக்காக மாலையிட்டிருக்கிற. வனதானவதரியை வணங்குதுமே. (அ)

வ்யா —ஒன்பதாம்பாட்டு.—(புலனித்யாதி) சரீரத்தில் இந்த்ரியங்களானவை, ஸந்நிவேசமும் கிடக்கச்செய்தே தந்தாமுடைய விஷயங்களைப் பரிக்ரஹிக்கவும் மாட்டாதே, சிதிலமாம்படிமூத்து. (போந்திருந்து) அல்லாதாரோபாதி காண்பனகாணவும் கேட்பன கேட்கவும் பெறுமையாலே † ஆள்நடையாடாத விடந்தேடிப்போந்

அரு.—ஒன்பதாம்பாட்டு.—(புலனித்யாதி) "ஈங்கிரேன்மின்" என்று சொன்னதே பலித்து விடுகையாலே அவஸாதம் விஞ்சி விஜநப்ரதேசத்திலே பிதற்றும்படியை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

குவளையங்கண்ணியர் "ஈங்கிரேன்மின்" என்றபின்பு, ஸ்வஜநத்தோடு பரஜநத்தோடு பொருந்தாதே தனியே இடந்தேடிப் பிதற்றுகை ப்ராப்தமாகையாலே, (ஆள்நடையாடாதவிடந்தேடி) என்றது.

மூ — வண்டு தண்டே னுண்டுவாழும் வதரி நெடுமாலைக்
கண்டல்வேலி மங்கைவேந்தன் கலிய னொலிமாலை
கொண்டுதொண்டர் பாடியாடக் கூடிடில் நீள்விசும்பில்
அண்டமல்லால் மற்றவர்க் கோராட்சி யறியோமே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வண்டு | வண்டுகள் | | யுடையஇப்பத்துப் |
| தண்தேன் | குளிர்ந்ததேனை | | பாட்டையும் கொ |
| உண்டு | பானம் பண்ணி | | ண்டு |
| வாழும் | களித்துவர்த்திக்கிற | தொண்டர் | சேஷபூதரானவர்கள் |
| வதரி | ஸ்ரீபதரியில்எழுந்தரு | பாடி | கானம்பண்ணி [றில் |
| | ளியிருக்கும் [மாக | ஆடக்கூடிடில் | நர்த்தநம்பண்ணப்பெ |
| நெடுமாலை | ஸர்வாதிகன் விஷய | நீள்விசும்பிலல் | பரமபதத்திலொழிய |
| கண்டல் | தாழைகளை | லால் | |
| வேலி | வேலியாகவுடைய | மற்று | வேறு |
| மங்கை | திருமங்கைக்கு | ஓர் அண்டம் | ஒருலோகத்தில் |
| வேந்தன் | ராஜாவான | அவர்க்கு | அவர்களுக்கு |
| கலியன் | ஆழ்வாரருளிச்செய்த | ஆட்சியறியோம் | ஆளுகையில்லை. (கo) |
| ஒலிமாலை கொ | சப்த ஸந்தர்ப்பங்களை | | |
| ண்டு | | | |

திருந்து. (உள்ளமெள்கி) "நாம்பட்டதோ!" என்று ஹ்ருதயமானது ஈடுபட்டு. (கலங்கவித்யாதி.) † தோஷத்ரயமும்தலையெடுத்தவாறே ஶ்லேஷ்மாவானது போரத்தள்ளுமாயிற்று. (கண்டபிதற்றுமுன்) பின்னை † ப்ரதிபந்நங்களைப் பிதற்றுவதுக்குமுன்னே. (அலங்கலாய) அங்குத்தைக்குச் சாத்தியருளுகைக்கீடான மாலையான திருத்துழாயைக்கொண்டு. (ஆயிரநாமம்சொல்லி) கண்டபிதற்றுமே † அவ்வழியே இந்த்ரியங்களுக்கு அடைத்ததிருநாமம் சொல்லி, (க) "நாவாயிலுண்..." இத்யாதிப்படியே. (வலங்கொளித்யாதி) அநுகூலவ்ருத்திகளைப் பண்ணாநின்றுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள், சாத்துகைக் கீடான மாலைகளையுமேந்தி, திருநாமங்களையும் சொல்லி, பாடுவதாடுவதாகா நிற்பர்கள்; அத்திரளிலேபுக்கு அவர்களிலே யொருவராயாஶ்ரயிப்போம். (கூ)

(தோஷத்ரயம்) வாதபித்த ஶ்லேஷ்மவிகாரங்கள் - "கண்ட" என்றது - கண்டத்தை யென்றாய், (ப்ரதிபந்நங்களை) என்றது. (அவ்வழியே) என்றது - ப்ரதிபந்நங்களைச் சொன்னநாவாலே யென்றபடி. இந்த்ரியத்துக் கடைத்தது திருநாமம் என்னுமதுக்கு ஸம்வாதம், (நாவாயிலித்யாதி). [மெய்யில் - புலன்கள் நையமூத்தித்யாதி, - வலங்கொள் தொண்டர் அலங்கலாய தண்டுழாய் கொண்டாயிரநாமம் சொல்லி பாடியாடும் வதரிவணங்குதும்] என்று அந்வயம். ... ... ... ... ... ... .. ... (கூ)

(க) க - திரு - கரு.

வ்யா.—பத்தாம்பாட்டு. (வண்டுதண்டேனித்யாதி) †ஸர்வபதார்த்தங்களுமுத்தேஶ்யலாபத்தாலே களித்துவர்த்திக்கும் தேசமாயிற்று. இப்படியிருக்கிற ஸ்ரீவதரியிலே வந்திருக்கிற ஸர்வாதிகனைக் கவிபாடிற்று. (கண்டல்வேலி) கண்டலென்று தாழை. கடல் அணித்தாகையாலே தாழைகளுண்டாயிருக்குமிறே. பூத்ததாழைகளை வேலியாக உடைத்தான திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வாரருளிச்செய்தமாலை. (தொண்டுதொண்டர் பாடியாடக்கூடிடில்) இவற்றைக்கொண்டு, (க) "வழுவிலாவடிமைசெய்யவேண்டும்"என்றிருக்கிறவர்கள் பாடுவதாடுவதாகக் கூடிடில். நீள்விசும்பு என்கிறது - உபரிதநலோகங்களினுடைய ஸமுதாயத்தை; அதில், (அண்டமல்லால்)பரமபதமல்லது, மற்று அவர்க்காட்சி யறியோமென்னுதல்; அன்றிக்கே, நீள்விசும்பென்கிறது - பரமபதமாய், அதிலல்லால் மற்றோரண்டமவர்க்கு ஆட்சியாக வறியோமென்னுதல். † ப்ரக்ருதி ப்ராக்ருதங்களில் இவர் அருளிச்செய்த தோஷம் ப்ரத்யக்ஷித்து அநுபவியாநின்றோம், அவ்வோபாதி பகவத்விஷயமாக விவரருளிச்செய்ததும் மெய்யாயிருக்குமிறே; ஆனபின்பு, இவர்விடச்சொன்னவற்றைவிட்டு இவர்பற்றச் சொன்னவற்றைப் பற்றுகையிறே சேதநராயிருப்பார்க்குச் செய்யவடுப்பது. (க௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



---

அரு.—பத்தாம்பாட்டு.—(வண்டுதண்டேனித்யாதி) வண்டு, வாளை. - தொண்டர்களைக் கீழே யருளிச்செய்கையாலே, இதிலே வண்டைச்சொன்னது உபலக்ஷணமென்றருளிச்செய்கிறார், (ஸர்வபதார்த்தங்களுமித்யாதி). இத்தை அப்யஸித்தமாத்ரத்திலே, பரமபதமுண்டாகக் கூடுமோவென்ன; இது அர்த்தவாதமன்றோ வென்ன; அருளிச்செய்கிறார், (ப்ரக்ருதியித்யாதி).

ஜீயர் திருவடிகளே சரணம்.

முதற்பத்தில் மூன்றாந்திருமொழி முடிந்தது.

---

(க) தி - வாய் - ௩ - ௩ - க.

## ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து - நாலாந்திருமொழி - ஏனமுனாகி.

மூ.—ஏனமுனாகி யிருநிலமிடந்தன்
றிணையடியிமையவர் வணங்கத்
தானவனாகம் தரணியிற்புரளத்
தடஞ்சிலை குனித்தவென் தலைவன்
தேனமர் சோலைக் கற்பகம் பயந்த
தெய்வநன்னறு மலர்கொணர்ந்து
வானவர் வணங்கும் கங்கையின் கரைமேல்
வதரியாச் சிராமத்துள்ளானே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்று | (பூமியை ப்ரளயம் கொண்ட) அக்காலத்திலே | குனித்த | வளைத்தருளின |
| இமையவர் | ப்ரஹ்மாதிகள் | என் தலைவன் | என்ஸ்வாமியான நாராயணன், |
| இணை அடி | சேர்த்தியழகையுடைய திருவடிகளை | தேன் அமர் | தேன்மிக்கு [ள்ள |
| வணங்க | ஆஸ்ரயிக்கும்படியாக | சோலை | சோலைசெய்திருந்து |
| முன் | வராஹகல்பத்தின் ஆதியிலே | கற்பகம் | கல்பவ்ருக்ஷமானது |
| ஏனமாகி | பன்றிரூபங்கொண்டு | பயந்த | உண்டாக்கின |
| இருநிலம் | பரப்புடைத்தான பூமியை | தெய்வம் | திவ்யமாய் |
| இடந்து | குத்தியெடுத்து | நல் | விலக்ஷணமாய் |
| தானவன் | தநுவம்சத்திற்பிறந்த ராவணனுடைய | நறு | பரிமளமுடைய |
| ஆகம் | சரீரமானது | மலர் | புஷ்பங்களை |
| தரணியில் | பூமியிலே | வானவர் | தேவர்கள் |
| புரள | புரளும்படி | கொணர்ந்து | கொண்டுவந்து (ஸமர்ப்பித்து) |
| தடம் | பெரிய | வணங்கும் | ஆஸ்ரயிக்கும்படியாக |
| சிலை | வில்லை | கங்கையின் கரைமேல் | கங்காதீரத்திலுள்ள |
| | | வதரியாச்சிராமத்து | பதரிகாஸ்ரமத்திலே |
| | | உள்ளான் | எழுந்தருளியிருக்கிறான். |

அரு.—ஏனமுனாகிப்ரவேசம்.—கீழ்த்திருமொழியிலே, மந்த்ரப்ரதனான நாராயணன் வர்த்திக்கிறதேசத்தை யாஸ்ரயிப்போமென்று திருவுள்ளத்துக்குச்சொல்ல, நமக்கு ஸச்சிஷ்ய லக்ஷணங்களறிந்தன்றோ ஆஸ்ரயிக்கவேண்டுவது என்றுறியிருக்க; அக்குறைதீர்ந்தானு யெழுந்தருளியிருக்கும் தேசமான பதரிகாஸ்ரமத்தை ஆஸ்ரயிப்போமென்றருளிச்செய்கிறாரென்று ஸங்கதி

வ்யா.—ஏனமுனகி ப்ரவேசம்.—†ஸ்ரீபதரியென்றும் பதரிகாஸ்ரமமென்றும் இரண்டு திருப்பதியாய், அதில் இங்குத்தை யிருப்பாகிய து-ப்ரஜைகளினுடைய ரக்ஷணத்துக்குறுப்பாகத் தாய் †குடிநீர்குடிக்குமோபாதி இவைதன்னை வழிப்படுத்துகைக்குறுப்பாகத்தான் தபஸ்ஸு பண்ணி ஹிதகாமனாயிருக்கிறவிடமாய், சென்று ஆஸ்ரயிக்கும் நங்குறையே குறையாக, ஆஸ்ரயணீயனானவன் தன்குறையறுத்துக்கொண்டிருக்கிற விடமாயிருந்தது; ஆனபின்பு, நாமங்கே போய் ஆஸ்ரயிப்போமென்று திருவுள்ளத்தோடேகூட்டுகிறார். இந்த திருவுள்ளத்தைக் குறித்தருளிச் செய்கிறவிடமுண்டோ வென்னில்; கீழே (க) "வதரிவணங்குதும்" என்றும், (உ) "அறிநியாகில் நெஞ்சம்" என்றும், சொல்லிக் கொடுபோந்து, இதிலும், (ங) "துணிவினி யுனக்குச்சொல்லுவன் மனமே" என்று முடியத்திருவுள்ளத்தைக் குறித்துச் சொல்லிற்றாயிறே யிருக்கிறது. †கீழ் தாம்பெற்றதாகச் சொல்லி அர்த்தாநுஸந்தானம் பண்ணிப்போந்த மந்த்ரப்ரதனான நாராயணன் வந்திருக்கிறதேசமா†யிருக்குமிறே.

முதற்பாட்டு. — (ஏனமுனகி யித்யாதி) (முன் ஏனமாகி) வராஹகல்பத்தினுடைய ஆதியிலே, அண்டபித்தியிலே புக்குச் சேர்ந்து பரப்புடைத்தான பூமியை; †அத்தை யெடுக்கைக்கீடான செருக்கையுடைய மஹாவராஹமா யெடுத்துக்கொண்டு. (அன்றிணை யடியிமையவர்வணங்க) அப்போது அந்த †உளைமயிர்களிலே யொதுங்கிக்கிடந்த ப்ரஹ்மாதிகள், சேர்த்தியழகையுடைத்

தன்னை யருளிச்செய்கிறார், (ஸ்ரீபதரியித்யாதி). (குடிநீர்) - கஷாயம். இத்தால், (ச) "சிஷ்யனாய்நின்றது - சிஷ்யனிருக்குமிருப்பு நாட்டாரறியாமையாலே அத்தையறிவிக்கைக்காக" என்கிறபடியே, சேதநரை வழிப்படுத்துமென்றதாயிற்று. கீழ் மூன்று திருமொழியில் ப்ரமேயத்தையு மநுவதித்து ஸங்கதியை ஸ்ப்புரிப்பிக்கிறார், (கீழித்யாதி). (இருக்குமிறே) என்றவநந்தரம், "இங்கு தான் வர்த்திக்கிற தேசத்தைச்சொல்லுகிறது" என்று சேஷம்.

முதற்பாட்டு. (ஏனமுனகியித்யாதி) நிலத்துக்கிருமை சொல்லுகையாலே பலித்தவர்த்தம், (அத்தையித்யாதி). (உளைமயிர்) - பிடரிமயிர். (ஙு) "నమస్తస్మైవరాహాయలీలయోద్ధరతేమహీమ్ । ఖురమధ్యగతోయస్య మేరుః కణకణాయతే-நமஸ்தஸ்மைவராஹாய லீலயோத்தரதேமஹீம் | குரமத்யகதோயஸ்ய மேருஃ கணகணாயதே" என்கிறபடியே வளர்ந்த திருமேனியாகையாலே, உபரிதநலோகவர்த்திகள் உளைமயிரிலேயிருக்கை ப்ராப்தமென்று கருத்து.

(க) க-ங-க. (உ) க-ங-ங. (ங) க-ச-ச (ச) முமுக்ஷு-ப்ப-க. (ஙு)

மூ.—கானிடையுருவைச் சுடுசரந்துரந்து
கண்டுமுன்கொடுந் தொழிலுரவோன்
ஊனுடையகலத் தடுகணை குளிப்ப
வுயிர்கவர்ந்துகந்த வெம்மொருவன்

தான திருவடிகளை யாஶ்ரயிக்க. (க) † "సుకవికట సటాసఙ్కటైః-ஸாக விகடஸடாஸங்கடை:" என்னக்கடவதிறே. (தானவனித்யாதி) † இப்போது, தானவனென்கிறது - ராவணனை. (உ) "தையலாள் மேல் காதல்செய்ததானவன் வாளரக்கன்" என்னக்கடவதிறே. தநு (దను)வினுடைய வம்சஜனென்று தானவனென்கிறதாதல், ஆஸுரமா னவ்யாபாரங்களை யுடையவனென்றுதல். † ராவணனுடைய, வராதிக ளாலே பூண்கட்டி யிருக்கிற சரீரமானது அம்பு தைச்சு பூமியிலே புரளும்படியாக. (தடஞ்சிலையித்யாதி.) (ங) "మహాద్ధను:-மஹாத்தநு:" என்கிறபடியே, அளவுடைத்தான வில்லைவளைத்த. (என்தலைவன்) வீரரஸத்தில் ப்ரதாநனான என்னுயன்.

(தேனமரித்யாதி) ராவணனுடைய மிடுக்காலே கல்பகவ்ருக்ஷத் தினுடையபூவைப் பணிப்பூவிட்டுத் திரிவர்களாயிற்று தேவர்கள் முன்பு; அவன் தலையறுப்புண்டவாறே, அத்தை ப்ராப்த விஷயத் திலே யாக்கினார்களாயிற்று. தேன்மிக்குச்சோலைசெய்திருந்துள்ள கல்பகமானது உண்டாக்கின, திவ்யமாய், விலக்ஷணமாய், செவ் வியை யுடைத்தான பூக்களைக்கொண்டு, தேவர்கள் ஆஶ்ரயிக்கும் படியாக, கங்காதீரத்திலே ஸ்ரீபதரிகாஶ்ரமத்திலே வந்து ஸந்நி ஹிதனானான். ... ... ... ... (க)

உளைமயிரிலே யிருக்கைக்கு ப்ரமாணம், (ஸாகவியித்யாதி). ஸாகவிகளுக்கு, கடகல்பமாய் - வர்ண்யத்வேந ஆஶ்ரயமாயிருக்கிற, ஸடைகளிலே - பிடரிமயிர் களிலே, ஸங்கடை: - நெருங்கியிருக்கிறவர்களாய் என்றர்த்தம் கண்டுகொள் வது. ப்ரமாணத்திரட்டிலேயானால் (ச) "ఉత్థితస్తస్య జలార్ద్రకుక్షేర్మహావరా హస్య మహీం ప్రగృహ్య । విధూన్వతో వేదమయం శరీరం రోమాన్తరస్థా మునయస్స్తువన్తి-உத்திஷ்டதஸ்தஸ்ய ஜலார்த்ரகுக்ஷேர்மஹாவராஹஸ்யமஹீம் ப்ரக்ருஹ்ய । விதூந்வதோவேதமயம் சரீரம் ரோமாந்தரஸ்த்தா முநயஸ்ஸ்துவந்தி" என் னும வசநத்தை யெடுத்திருக்கிறது. "சிலைகுனித்து" என்கையாலே ஹிரண் யாக்ஷனைச் சொல்லவொண்ணுமென்றருளிச்செய்கிறார், (இப்போத்யாதி). தநுவம்சம் ராவணனுக்கு மாத்ருவம்சமாகையாலே, ஸமபிவ்யாஹார தாத்பர் யம், (ராவணனுடையவித்யாதி). "வணங்கும்படி - நிலமிடந்து" என்றந் வயம் ... ... ... ... ... (க)

(க) (உ) உ-உ-உ. (ங) ரா- (ச) வி-பு-க-ச-உக.

தேனுடைக்கமலத் தயனொடு தேவர்
சென்றுசென்றிறைஞ் சிடப்பெருகு
வானிடைமுதுநீர்க்கங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கானிடை | காட்டில் | எம்ஒருவன் | ஒப்பற்றபலமுடையனான என்ஸ்வாமி, |
| உருவை | மாயாம்ருகத்தை | தேன்உடை | தேனையுடைத்தான |
| கண்டு | பார்த்து | கமலத்து | திருநாபிகமலத்திற்பிறந்த [டு |
| சுடுசரம் | சுடக்கடவ அம்பை | அயனொடு | ப்ரஹ்மாவோடே கூ |
| துரந்து | (அதின்மேலே)விட்டு | தேவர் | தேவர்கள் [ழிந்து |
| முன் | ஸுக்ரீவன் சரணம்புகுந்தவன்று | சென்றுசென்று | நாள்நாள் என்று இ |
| கொடுந்தொழில் | க்ரூரமான செயலையும் | இறைஞ்சிட | ஆச்ரயணத்துக்குறுப்பாக ஸ்நாநம்பண்ண (அத்தாலே) |
| உரவோன் | மிடுக்கையுமுடைய வாலியினது | வானிடை | ஆகாசத்திலேயாய் |
| ஊன்உடை | மாம்ஸம்நிறைந்த | முதுநீர் | பழையதானஜலம் |
| அகலத்து | மார்விலே | பெருகு | மிக்குவருகிற |
| அடுகணை | கொலையம்பானது | கங்கையின்கரைமேல் | கங்கைக்கரையிலே |
| குளிப்ப | அழுந்தும்படி பண்ணி | வதரியாச்சிராமத்துள்ளான் | பதரிகாச்ரமத்திலெழுந்தருளியிருக்கிறான். (உ) |
| உயிர் | (அவன்)ப்ராணனை | | |
| கவர்ந்து | அபஹரித்து | | |
| உகந்த | ப்ரீதனான | | |

வ்யா — இரண்டாம்பாட்டு. (கானித்யாதி) தன்நிலமான காட்டிலே ஸஞ்சரிக்கிற, உருஉண்டு - மான் - மாயாம்ருகம், அத்தைக்கண்டு. (சுடுசரம் துரந்து) ஒருவர்க்கும் தோற்றாதபடி மறைவது தோற்றுவதாய்த் திரிகிற அத்தைக்கண்டு, பொறுக்கவொண்ணாதபடியான அம்பைவிட்டு; முன்பு. (கொடுந்தொழிலித்

அரு.—இரண்டாம்பாட்டு.(கானிடையித்யாதி)கோ(க்ரூ)ரமான ஸம்ஸார ப்ரளயத்தில் நின்றும் தம்மையெடுத்தபடியாலே,ப்ரஸ்துதமான வராஹாவதாராபதாநத்தில் பூமிப்பிராட்டிக்கு உபகரித்தவளவன்றிக்கே பெரியபிராட்டியார்க்காக ராவணவதம்பண்ணினமையை யநுஸந்தித்தார் கீழ்ப்பாட்டில்; அதுக்கடியான மாயாம்ருக நிரஸநாதிகளை யருளிச்செய்கிறாரிப்பாட்டில் என்று ஸங்கதி கண்டுகொள்வது.

"பன்றியாய்" என்று முதல்திருமொழியிலே ப்ரஸ்துதமானத்தை, "என் முனைகி" என்று ஸ்ப்புரிப்பித்தாரென்று திருவுள்ளம், "வாலிமாவலத்தொரு

மூ.—இலங்கையும் கடலுமடலரும் துப்பி
னிருநிதிக்கிறைவனும் அரக்கர்
குலங்களும் கெட முன் கொடுந்தொழில்புரிந்த
கொற்றவன் கொழுஞ்சுடர் சுழன்ற
விலங்கலி லுரிஞ்சி மேல் நின்ற விசும்பில்
வெண் துகில் கொடியென விரிந்து
வலந்தரு மணிநீர்க் கங்கையின் கரைமேல்
வதரியாச்சிரமத்துள்ளானே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இலங்கையும் | லங்கையும் | புரிந்த | பண்ணின [வரன், |
| கடலும் | ஸமுத்ரமும் | கொற்றவன் | ராஜாவான ஸர்வேஶ் |
| அடல் அரும் | (ஒருவராலும்) வெல்ல வொண்ணாத | கொழு | விளங்காநின்றுள்ள |
| | | சுடர் | ஸூர்யன் |
| துப்பில் | பலத்தையுடையனாய் | சுழன்ற | சுழலவருகிற |
| இருநிதிக்கு இறைவனும் | சங்கநிதிபத்மநிதிகளுக்குஸ்வாமியானராவணனும் | விலங்கலில் | மேருபர்வதத்திலே |
| | | உரிஞ்சி | தாக்கி |
| | | மேல்நின்ற | மேலேயிருக்கிற |
| அரக்கர் குலங்களும் | ராக்ஷஸஜாதியும் | விசும்பில் | ஆகாசத்திலே |
| | | வெள் | வெளுத்தநிறத்தையுடைத்தாய் |
| கெட | நசிக்கும்படியாக | | |
| முன் | ராமாவதாரத்தில் | கொடித்துகிலென | த்வஜத்தில் கட்டப்பட்ட வஸ்த்ரம்போல |
| கொடு | கொடிய | | |
| தொழில் | வ்யாபாரங்களை | விரிந்து | பரந்து [லே |

யாதி) †க்ரூரமான செயலையுடையனான வாலியுடைய †தசைந்து அகன்றிருந்துள்ள மார்விலே கொலையம்பானது அழுந்தும்படி பண்ணி, அவ்வழியாலே அவனுடைய ப்ராணனை யபஹரித்து, "மஹாராஜர்விரோதி போகப்பெற்றோம்" என்று உகந்த அத்விதீயமான பலத்தையுடையவன்.

(தேனித்யாதி) திருநாபிகமலத்தை உத்பத்திஸ்தாநமாகவுடைய ப்ரஹ்மாவோடே தேவர்களானவர்கள், அஹமஹமிகயா இழிந்து, ஆஶ்ரயணத்துக்குறுப்பாக ஸ்நாநம் பண்ணப்புக்கவாறே ஒன்றால் குறைதல் நிறைதல் செய்யாதே ஏகரூபமாயிருக்கக்கடவ ஜலம் பெருகுமாயிற்று; திருவடிகள் †ஸஹ்யமாகையாலே. (வானிடைமுதுநீர்) ஆகாசத்திலேயாய்ப் பழைதான நீரென்றபடி. (௨)

வன்" என்றத்தை ஸ்மரிக்கிறாரென்று விவக்ஷித்து, உரவோன் - மிடுக்கையுடைய வாலி என்றருளிச்செய்கிறார், (க்ரூரேத்யாதி). (தசைந்து) - மாம்ஸளமாய். "அடு" கொல்லுகிற. (ஸஹ்யமாகையாலே) - திருக்காவேரிக்கு ஸஹ்யபர்வதம் உத்பத்திஸ்தாநமானாற்போலேயாகையாலே. ... (௨)

மூ.—துணிவினி யுனக்குச்சொல்லுவன் மனமே
தொழுதெழு தொண்டர்கள் தமக்குப்
பிணியொழித்தமரர் பெருவிசும்பருளும்
பேரருளாளனெம்பெருமான்
அணிமலர்க்குழலாரரம்பையர் துகிலு
மாரமும் வாரிவந்தணிநீர்
மணிகொழித்திழிந்த கங்கையின் கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (ச)

| | | பதம். | உரை. |
|---|---|---|---|
| வலம்தரும் | (வேகத்தாலே) பலத்தையுடைத்தாய் | மனமே | நெஞ்சே! |
| மணி | தெளிந்திருக்கிற | இனி | இப்போது |
| நீர் | ஜலம்நிறைந்த | உனக்கு | விஷயவைலக்ஷண்யமறியாதவுனக்கு |
| கங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துஉள்ளான் | கங்காதீரத்திலுள்ள ஸ்ரீ பதரிகாஶ்ரமத்திலே நித்யவாஸம் பண்ணுகிறான். () | துணிவு | உறுதியானஒருவார்த்தையை |
| | | சொல்லுவன் | சொல்லுகிறேன்; |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (இலங்கையுமித்யாதி) ஒருவராலழிக்கவொண்ணாதபடியான லங்கையும், அதுக்கும் அகழாம்படியிருக்கிற கடலும், ஒருவராலடர்க்கவரிய ஸாமர்த்யத்தையுடையனாய், ஜ்யேஷ்டனானவைஶ்ரவணனை வென்று வாங்கின சங்கநிதி பத்மநிதிகளையுடையனாயிருக்கிற ராவணனும், அவனுக்கு பலமான ராக்ஷஸஜாதியாகவும் மண்ணுண்ணும்படியாக, பண்டு க்ரூரமான வ்யாபாரங்களைப் பண்ணினராஜாவானவன். (க) "ఇక్ష్వాకూణామియం భూమిస్సశైలవనకాననా-இக்ஷ்வாகூணாமியம் பூமிஸ் ஸசைலவநகாநநா" என்னக்கடவதிறே.

(கொழுஞ்சுடரித்யாதி) † ஆதித்யனானவன் சுழலவாரநின்றிருந்துள்ள மேருவிலே †தாக்கி, மேல் நின்ற, விசும்பிலே - ஆகாசத்திலே, வெளுத்த நிறத்தையுடைத்தான கொடியாடையை விரித்தாற்போலே இழிவந்து விழும்போதை நீர்த்தெளிவிருக்கும்படி. (வலந்தருமணிநீர்) வேகத்தாலே மிடுக்கையுடைத்தாய்த் தெளிவையுடைத்தாயிருக்குமாயிற்று. ... ... ... (ரு)

அரு.—மூன்றாம்பாட்டு. (இலங்கையித்யாதி). . வாலிவதாநந்தர பாவியாய் முதற்பாட்டில் ப்ரஸ்துதமான ராவணவதத்தை ஸப்ரகாரமநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

மேருவாகிற த்வஜஸ்தம்பத்திலே வெளுத்ததுகிலாலே கொடியைக் கட்டிவிட்டாற்போலே ஸ்வச்சமான நீரையுடைத்தான கங்கையென்றருளிச்செய்கிறார், (ஆதித்யனித்யாதி). "உரிஞ்சி" என்றதினர்த்தம், (தாக்கி)என்றது.

| | | | |
|---|---|---|---|
| தொண்டர்கள்தமக்கு | ஆச்ரிதர்க்கு | அரம்பையர் | அப்ஸரஸ்ஸுக்களுடைய |
| பிணி | விரோதியாயுள்ளவற்றை | துகிலும் | பரியட்டங்களையும் |
| ஒழித்து | போக்கி | ஆரமும் | ஹாரங்களையும் |
| அமரர் | நித்யஸூரிகளுடைய | வாரிவந்து | திரட்டிக்கொண்டும் |
| பெருவிசும்பு | பரமபதத்தை | மணி | ரத்நங்களை |
| அருளும் | தந்தருளுமவனாய் | கொழித்து | தள்ளிக்கொண்டும் |
| பேர்அருளாளன் | பரமக்ருபாவானான | இழிந்த | வந்திழிகிற |
| எம்பெருமான் | ஸர்வேச்வரன், | கங்கையின்கரைமேல் | கங்கைக்கரையிலுள்ள |
| அணிநீர் | தர்சநீயமான ஜலமானது | வதரியாச்சிராமத்து | ஸ்ரீபதரிகாச்ரமத்தில் |
| மலர் | புஷ்பங்களாலே | உள்ளான் | எழுந்தருளியிருக்கிறான், (அவனை) |
| அணி | அலங்கரிக்கப்பட்ட | தொழுது | ஆச்ரயித்து |
| குழலார் | மயிர்முடியையுடையரான | எழு | உஜ்ஜீவிக்கப்பார். (௪) |

வ்யா. — நாலாம்பாட்டு. (துணிவினியுனக்குச் சொல்லுவன் மனமே தொழுதெழு) † இப்போது உனக்கு உறுதியாக ஒரு நல்வார்த்தை சொல்லுகிறேன் நெஞ்சே! கேள்; சொல்லச்செய்தே பின்னையும் சொல்லாததின் பலமேயாகாமே, நீயவனைத்தொழுது உஜ்ஜீவிக்கப்பாராய். நீர் உறுதியாகச் சொல்லுங்காட்டில், அவன் நம்விரோதியைப்போக்கி நன்மையைத் தருமோவென்ன; (பிணியித்யாதி) † நம் விரோதியையும் போக்கிப் பரமபதத்தையும் நமக்குத் தரும். † ஒருகாலாச்ரயித்தமாத்ரத்திலே, நம் விரோதியைப்போக்கி நித்யஸூரிகளிருப்பை நமக்குப் பண்ணித்தரும் பெரிய க்ருபாவானான ஸர்வேச்வரன்.

அரு. — நாலாம்பாட்டு. (துணிவினியித்யாதி). அவதாரத்துக்கு ப்ரதாந ப்ரயோஜநமான ராவணவதத்தைக் கீழ்ப்பாட்டிலே யருளிச்செய்தவாறே, அதிமாநுஷமான செயலாகையாலே, (க) * அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றினமையும் திருவுள்ளத்திலேதோற்ற, அந்தப்ரஸங்கத்திலே அவனுடைய மோக்ஷப்ரதத்வத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

இனியுனக்கு - துணிவாக - சொல்லுவன் என்று அந்வயித்தருளிச்செய்கிறார், (இப்போதித்யாதி). "தொண்டர்கள் தமக்குப் பெருவிசும்பருளும், மனமே தொழுதெழு" என்றவர்க்கு விவக்ஷிதமான உட்கருத்தை யருளிச்செய்கிறார், (நம் விரோதியையித்யாதி). வாக்யார்த்தத்தை யருளிச்செய்கிறார், (ஒருகாலித்யாதி).

(க) பெரு - திரு - ௧௦ - ௧௦.

மூ.—பேயிடைக்கிருந்துவந்த மற்றவள்தன்
பெருமுலை சுவைத்திடப் பெற்ற
தாயிடைக்கிருத்த லஞ்சுவனென்று
தளர்ந்திட வளர்ந்த வென்தலைவன்
சேய்முகட்டுச்சி யண்டமும் சுமந்த
செம்பொன் செய் விலங்கலி லிலங்கு
வாய்முகட்டிழிந்த கங்கையின் கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வந்த | தாய்போல்வந்த | தளர்ந்திட | கூசி(ப்பரிந்துவளர்க்க) |
| பேய் | பூதனையுடைய | வளர்ந்த | வளர்ந்தருளின [ன், |
| இடைக்குஇருந்து | மடியிலிருந்து | என்தலைவன் | என்ஸ்வாமியானவ |
| | | சேய்முகடு | உயர்ந்தசிகரத்தின் |
| மற்று | அதுக்குமேலே, | உச்சி | உச்சியிலே |
| அவள்தன் | அவளுடைய | அண்டம் | அண்டத்தை |
| பெருமுலை | பெரியமுலையை [டு) | சுமந்த | தரிக்கிற |
| சுவைத்திட | உண்ண;(அதைக்கண் | செம்பொன்செய்விலங்கலில் | சிவந்தபொன்னால்செய்யப்பட்ட மேருபர்வதத்திலே |
| பெற்றதாய் | பெற்றதாயானயசோதைப்பிராட்டியானவள் [லே, | இலங்கு | விளங்காநின்றுள்ள |
| இடைக்கு | (பூதனையின்) மடியி | வாய் | இடமுடைத்தான |
| இருத்தல் | பொருந்தியிருக்கும் இருப்பை(க்கண்டு) | முகடு | சிகரத்தில்நின்றும் |
| | | இழிந்த | வந்துவிழுகிற |
| அஞ்சுவன் | பயப்படாநின்றேன் | கங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளான். (ரு) | |
| என்று | என்றுசொல்லி | | |

(அணியித்யாதி) † க்ருஷ்ணன்படியாயிற்று ஜலத்தினுடைய செருக்கு மிருப்பது. மலராலே யணியப்பட்ட குழலையுடையரான அப்ஸரஸ்ஸுக்களுடைய பரியட்டத்தையும் ஹாரத்தையும் வாரி †அணிகிற நீரென்னுதல்; அழகிய நீரென்னுதல். இவற்றைத் திரட்டிக்கொண்டு தர்சநீயமான நீரானது ரத்நங்களைக் கொழித்துக் கொண்டு வந்திழியாநின்றுள்ள வதரியாச்சிராமத்துள்ளானை; தொழுதெழு - என்கிறவிது இத்திருமொழிக்கெல்லாம் க்ரியை. (ச)

வஸ்த்ராபஹரணத்துக்கு ப்ரஸித்தி க்ருஷ்ணனிடத்திலே யாகையாலே அத்தை த்ருஷ்டாந்தீகரித்துக்கொண்டு தாத்பர்யமருளிச்செய்கிறார், (க்ருஷ்ணனித்யாதி). (அணிகிறநீர்) என்றது - கரையை அலங்கரிக்கிற நீரென்றபடி. ... ... ... ... ... ... ... ... (ச)

மூ.—தேரணங்கல்குல் செழுங்கயற்கண்ணி
திறத்தொருமறத்தொழில் புரிந்து
பாரணங்கிமிலேறேழும் முன்னடர்த்த
பனிமுகில் வண்ணனெம்பெருமான்
காரணந்தன்னால் கடும்புனற்கயத்த
கருவரை பிளவெழக்குத்தி
வாரணங்கொணர்ந்த கங்கையின் கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முன் | பூர்வகாலத்தில் | செழு | அழகிய [ற |
| தேர் | தேர்த்தட்டானது | கயல் | கயல்மத்ஸ்யம்போன் |
| அணங்கு | வருந்தி ஒப்பாகாநின் றுள்ள [ளாய் | கண்ணிதிறத்து | கண்களையுடைய நப் பின்னைப் பிராட்டிக்காக |
| அல்குல் | நிதம்பத்தையுடைய | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பேயித்யாதி) (வந்த - பேயிடைக்கு இருந்து) †யசோதைப்பிராட்டியுடைய வடிவைக்கொண்டுவந்த பூதனையுடைய மடியிலேயிருந்து, † அதுக்குமேலே அவளுடைய பெரிய முலையையுண்டிட. (பெற்றதாயித்யாதி) †இத்தைக்கண்ட யசோதைப்பிராட்டியானவள், நாம் மடியிலேவைத்து முலைகொடுத்துப் போந்த வாஸனைகொண்டு இவன், கண்ட பாதகராய் நம்மை அநுகரித்துவந்தார்மடியிலே பொருந்தி அவள் முலையுண்கிறதென்று கூசி அவள் பரிந்துவளர்க்க வளர்ந்தவென்தலைவன்.

(சேயித்யாதி) ஓங்கியிருந்துள்ள சிகரத்தினுடைய உச்சியிலே அண்டத்தைத்தரிக்கிற சிவந்தபொன்னாலே செய்யப்பட்ட மேருவிலே விளங்காநின்றுள்ள †இடமுடைத்தான சிகரத்தில் நின்றுமிழிந்த கங்கையின்கரைமேலே வதரியாச்சிராமத்திலேவந்து ஸந்நிஹிதனானான். ... ... ... ... (ரு)

அரு.—அஞ்சாம்பாட்டு. (பேயிடைக்கித்யாதி) துகில்வாரிவந்ததென்னும் ப்ரஸங்கத்திலே க்ருஷ்ணனுடைய வஸ்த்ராபஹாரணுபதாநத்தில் செருக்கும் ஸ்ம்ருதமாய் அதுக்குஹேதுவாக யசோதைப்பிராட்டி வளர்த்தபடியை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

"வந்த" என்று விசேஷிக்கைக்குத் தாத்பர்யம், (யசோதையித்யாதி). "மற்று" என்றதினர்த்தம், (அதுக்குமேலே) என்றது. பெற்றதாய் மடியிலே வைக்க அஞ்சினளொன்றால், "மேலே வளர்ந்த" என்னக்கூடாமையாலே, அதுக்கீடாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார், (இத்தையித்யாதி). மிகவும்பரிவோடே வளர்த்தாளென்று கருத்து.

"வாய்" என்றதினர்த்தம், (இடமுடைத்தான) என்றது. ... ... (ரு)

| | | | |
|---|---|---|---|
| மறம் | கோபத்தையுடைய | காரணந்தன்னல் | பகீரதன்செய்த தபஸ்ஸே ஹேதுவாக, |
| ஒருதொழில் | ஒருசெயலை | கடு | அதிகவேகத்தையுடைய |
| புரிந்து | செய்து, | புனல்கயத்த | ஜலத்தைத்தகைந்த |
| பார் | பூமியிலுள்ளார் | கருவரை | பெரியமலையானது |
| அணங்கு | நோவும்படியான | பிளவுஎழ | பிளக்கும்படி |
| இமில் | கருத்துக்களையுடைய | குத்தி | தோண்டி [னைகளை |
| ஏறுஏழும் | ருஷபங்கள்ஏழையும் | வாரணம் | (அங்குண்டான) யா |
| அடர்த்த | நிரஸித்தவனாய் | கொணர்ந்த | தள்ளிக்கொண்டுவந்திழிகிற |
| பனி | குளிர்ந்த | கங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளான். (௮) | |
| முகில் | மேகம்போன்ற | | |
| வண்ணன் | திருநிறத்தையுடையனாய் [வன் | | |
| எம்பெருமான் | எனக்குஸ்வாமியான | | |

வ்யா —ஆறாம்பாட்டு. (தேரித்யாதி) தேரானது† வருந்தியொப்பாகாநின்றுள்ள, அல்குலை யுடையளாய் - நிதம்ப ப்ரதேசத்தை யுடையளாய்; அணங்கென்று - நோவுபடுகைக்குப்பேர். தேர்த்தட்டை நிதம்பத்துக்கு ஒப்பாகச் சொல்லக்கடவர்கள். அழகிய கயலோடொத்த கண்களையுடைய நப்பின்னைப் பிராட்டிக்காக, மறத்தையுடைத்தாயிருப்பதொரு செயலைச்செய்து, பூமியாக நோவுபடும்படியான † கருத்துக்களையுடைய ருஷபங்களேழையும் நிரஸித்து, அநந்தரம் விரோதிபோகப்பெற்ற ஹர்ஷத்தாலே, குளிர்ந்த மேகம்போலேயிருந்துள்ள வடிவையுடையனாய், அவ்வடிவாலே யென்னை அநந்யார்ஹனாக்கினவன்.

(காரணமித்யாதி) பகீரதன் கங்கையை யவதரிப்பிக்கிறபோது நடுவழியிலே ஒருமலைதகைந்துகொடுநின்றதாய் அத்தை யிரண்டு பிளவாம்படி குத்தி யானைகளையு முருட்டிக்கொண்டு இவ்வருகே போந்து இழிந்ததாகச் சொல்லக்கடவது, அதுக்கடி யென்னென்றால், (காரணந்தன்னல்) தன்னுடைய தபோபலத்தாலே, பஸ்ம

---

அரு.—ஆறாம்பாட்டு. (தேரணங்கித்யாதி) வளர்ந்தபின்பு நப்பின்னையைத் திருமணம்புரிந்தமையை நினைத்தநுபவிக்கிறாரென்று ஸங்கதி கண்டு கொள்வது.

(வருந்தியொப்பாகாநின்றுள்ள) என்றதுக்கு - அணங்கென்று-நோவாய், அத்தாலே, மிகவும் ஸத்ருசமன்றென்று பலித்ததென்று கருத்து. மறத்தை-வ்ருஷபங்களினிடத்தில் கோபத்தை, "இமில்" என்றதினர்த்தம், (கருத்துக்களை) என்றது.

மூ.—வெந்திறல்களிறும் வேலைவாயமுதும்
விண்ணொடு விண்ணவர்க்கரசும்
இந்திரற்கருளி எமக்குமீந்தருளுமெந்தை
யெம்மடிகளெம்பெருமான்
அந்தரத்தமரரடியிணைவணங்க
ஆயிர முகத்தினாலருளி
மந்தரத்திழிந்த கங்கையின் கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வெந்திறல் | மிகுந்தமிடுக்கையுடைய | எம்அடிகள் | எமக்குஸ்வாமியாய் |
| களிறும் | ஐராவதமென்கிற யானையையும், [டான | எம்பெருமான் | எனக்குசேஷியானவன், |
| வேலைவாய் | திருப்பாற்கடலிலுண் | அந்தரத்து | ஸ்வர்க்கத்திலுள்ள |
| அமுதும் | அம்ருதத்தையும் | அமரர் | தேவர்கள் |
| விண்ணொடு | ஸ்வர்க்கத்துடன் | அடியிணை | திருவடிகளை |
| விண்ணவர்க்கு அரசும் | தேவர்களுக்கு ராஜாவாயிருக்குமிருப்பையும் | வணங்க | ஆச்ரயிக்கும்படி, |
| இந்திரற்கு | இந்த்ரனுக்கு | ஆயிரம்முகத்தினாலருளி | ஆயிரம்முகங்களால் புகவேணும் என்று ஸர்வேச்வரன் திருவுள்ளமாயருள, |
| அருளி | கொடுத்து | மந்தரத்து | மந்தரபர்வதத்தில் நின்றும் |
| எமக்கும் | (அநந்யப்ரயோஜநரான) எங்களுக்கும் | இழிந்த | வந்திழிந்த |
| ஈந்தருளும் | (தன்னைக்) கொடுத்தருளுமவனாய் | கங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளான். (எ) | |
| எந்தை | எனக்குப்பிதாவாய் | | |

மாய்க்கிடந்த தன்னுடைய பாட்டன்மாருடைய சுத்யர்த்தமாகக் கங்கையைப் பெறவேணுமென்று தபஸ்ஸுபண்ணினனிறே, அந்தகாரணத்தாலே, †பழமையாலே வந்த† மிடுக்கையுடைய †ஜலத்தையுடைத்தான, கருவரையானது இரண்டு பிளப்பாம்படி குத்தி அங்குண்டான ஆனைகளைத்தள்ளிக்கொண்டு வந்திழிகிற. அன்றிக்கே, அம்மலை தகைந்த வளவிலே இந்த்ரனை நோக்கி தபஸ்ஸுபண்ணினாய், பின்னை அவன் தன் சதுர்த்தந்தியை யிடுவித்து அம்மலைஇருபிளவாம்படி குத்துவித்து பின்னை அவ்வானைகொண்டுவந்ததாக ஒரு ப்ரமாண ப்ரஸித்தியுண்டு; அத்தைச்சொல்லிற்றாகவுமாம். (அ)

(பழமை) - ஸ்வபாவம், அத்தாலே வந்தமிடுக்கு - அதிவேகம். (ஜலத்தையுடைத்தான) என்றது - கங்கைக்கு விசேஷணம். ... ... ... (அ)

மூ.—மான்முனிந்தொருகால் வரிசிலை வளைத்த
மன்னவன் பொன்னிறத்துரவோன்
ஊன்முனிந்தவனதுடலிருபிளவா
உகிர்நுதி மடுத்து அயனரனைத்
தான் முனிந்திட்ட வெந்திறற்சாபம்
தவிர்த்தவன் தவம்புரிந்துயர்ந்த
மாமுனி கொணர்ந்த கங்கையின் கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (அ)

---

வ்யா.—ஏழாம்பாட்டு. (வெந்திறலித்யாதி) †ஐராவதத்தையும் கடலிலம்ருதத்தையும் ஸ்வர்க்கத்தையும் அத்தோடேகூட தேவர்களுக்கு ராஜாவாயிருக்கு மிருப்பையும் இந்த்ரனுக்குக் கொடுத்தருளி, எனக்குத் †தன்னைத்தந்தருளின. (எந்தை) எனக்கு ஜநகன், எனக்கு ஸ்வாமி, இவற்றாலே என்னை அநங்யார்ஹனாக்கினவன்.

(அந்தரத்தமரரித்யாதி) †ஸ்வக்கத்தில் தேவர்கள் திருவடிகளை யாம்ரயிக்க, ஒருமுகஞ்செய்துவந்து புகில் கடல் பொறாதென்று பார்த்து, "ஆயிரம் முகத்தினாலே போய்ப்புகு" என்று ஸர்வேம்வரன் திருவுள்ளமாயருள, அப்படி மந்தரபர்வதத்தில் நின்றும் வந்திழிந்ததாயிற்று. †அன்றிக்கே, கங்கைதன்னை யாம்ரயிக்க அதுதானருளுகையாகவுமாம்; (ஆயிரமுகத்தினால்) மேருவிலே யிழிந்து மந்தரத்திலே யிழிந்து, ஹிமவானிலே யிழிந்து, இங்ஙனே பலவகைகளாலே வரும்படியைச் சொல்லக்கடவதிறே. (எ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (வெந்திறலித்யாதி) நப்பின்னைப்பிராட்டிக்குத் தன்னைக் கொடுத்தவளவன்றிக்கே ப்ரயோஜநாந்தரபரனுக்கும் அபேக்ஷித ஸம்விதாநம் பண்ணினானென்று அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி யுட்கொண்டு வாக்யார்த்தமருளிச்செய்கிறார், (ஐராவதத்தையுமித்யாதி). "எமக்கும்" என்றத்தால் - களிறுமுதலானவற்றைத் தமக்குத் தந்தானென்று தோற்றினாலும் இது இவர் ப்ரக்ருதிக்குச்சேராதென்று விவக்ஷித்து, (தன்னை) என்று அத்யாஹரித்தருளிச்செய்கிறார், (எனக்கித்யாதி).

(க) "நாளுநந்திருவுடையடிகள் தம்நலங்கழல் வணங்கி" என்கிறவிடத்தில் "வணங்கி" என்கிறவிது - வினையெச்சமாய், வணங்கவென்று அர்த்தமாயிருக்கிறதென்று வ்யாக்யாநம் செய்தாற்போலே, இங்கே, "அருளி" என்றத்தை, அருள என்றாக்கி, இம்முகத்தினால் புகு என்று அத்யாஹாரமும் திருவுள்ளம்பற்றி ஒருயோஜனையருளிச்செய்கிறார், (ஸ்வர்க்கத்திலித்யாதி). இந்த யோஜனையில், "அடியிணை" என்றத்துக்கு ஸ்வாரஸ்யமுண்டென்று திருவுள்ளம். "அருளி" என்ற பதஸ்வாரஸ்யத்தைப்பற்ற யோஜநாந்தரம், (அன்றிக்கேயித்யாதி). இந்தயோஜனையில், "மந்தரம்" என்று - பஞ்சமியன்றிக்கே ஸப்தமியாய், அது உபலக்ஷணமென்று கருத்து. ... ... ... (எ)

---

(க) தி - வாய் - க - ரு - அ.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஒருகால் | பஞ்சவடியிலிருக்கும் போது | அயன்தான் | ப்ரஹ்மா, தானே |
| மான் | மானனமாரீசனை | அரனை | ருத்ரனை |
| முனிந்து | கோபித்து | முனிந்து | கோபித்து |
| வரி | அழகிய | இட்ட | கொடுத்த |
| சிலை | வில்லை | வெம்திறல் | மிகவும்க்ரூரமான |
| வளைத்த | (அவன்மேலே) வளைத்த | சாபம் | சாபத்தை |
| மன்னவன் | ராஜாவாய், | தவிர்த்தவன் | போக்கினஸர்வேஶ்வரன், |
| பொன்நிறம் | பொன்போலும் நிறத்தையும் | தவம்புரிந்து | தபஸ்ஸுபண்ணி |
| உரவோன் | மிடுக்கையுமுடைய ஹிரண்யனுடைய | உயர்ந்த | (அத்தாலே) ப்ரஹ்மர்ஷியான |
| ஊன் | மாம்ஸத்தை | மாமுனி | விஶ்வாமித்ரன் |
| முனிந்து | சீறி | கொணர்ந்த | (பெருமாளையும் இளையபெருமாளையும்) எழுந்தருளப்பண்ணிக்கொண்டுசென்ற |
| அவனது | அவனுடைய | கங்கையின்கரைமேல்வதரியாச்சிரமத்துள்ளான். (அ) | |
| உடல் | சரீரமானது | | |
| இருபிளவா | இரண்டுகூறும்படி | | |
| உகிர் நுதி | நகங்களின் நுனியை | | |
| மடுத்து | ப்ரவேசிப்பித்தவனாய் | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (மான்முனிந்தித்யாதி) †பெருமாளை, "இம்மானைப் பிடித்துத்தரவேணும்" என்று பிராட்டியருளிச்செய்ய, அவரும் அதின்பின்னே தொடர்ந்துபோனவிடத்து மாயாம்ருகமாகையாலே அது பிடிதராதே யொழிய, அத்தைச்சீறி, அதின்மேலே தர்சநீயமானவில்லை வளைத்த செருக்கன். (பொன்னிறத்துரவோனித்யாதி) பொன்போலே யிருந்துள்ள நிறத்தையும் மிடுக்கையுமுடையனானவன், ஹிரண்யனென்றபடி; அவனுடைய துர்மாநத்தாலே வளர்ந்த மாம்ஸத்தைச் சீறி, அதுக்கு ஆஶ்ரயமான உடலானது இருபிளவாம்படி திருவுகிரினுடைய நுனியைமாட்டி.

(அயனித்யாதி) † பிராட்டிதிறத்தில்செய்யுமத்தை ஒரு சிறுக்

அரு.—எட்டாம்பாட்டு. (மானித்யாதி). இந்திரற்கருளின வளவன்றிக்கே அநந்யையானவளுக்கும் அர்ப்பகனுக்கும் பிச்சையாண்டிக்கும் கூடக்கையாளாய் அபேக்ஷிதங்கள் செய்யுமவனென்று சிலகுணநுஸந்தாநம் பண்ணுகிறாரென்று ஸங்கதி.

"ஒருகால் மானைமுனிந்து - வரிசிலைவளைத்த மன்னவன்" என்று அந்வயம் விவக்ஷித்து ஸஹேதுகமாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார், (பெருமாளையித்யாதி) "ஒருகால்" ஒருகாலவிசேஷத்திலே.

(பிராட்டி) இத்யாதி வாக்யத்துக்கு - அபிமதையாய் நித்யாநபாயிநிக்

மூ.—கொண்டல் மாருதங்கள் குலவரை தொகுநீர்க்
குரைகடலுலகுடனனைத்தும்
உண்டமாவயிற்றோ னொண்சுடரேய்ந்த
உம்பரு மூழியு மானான்
அண்டமூட்றுத்தன்றந்தரத்திழிந்தங்
கவனியாளலமரப் பெருகும்
மண்டுமாமணிநீர்க்கங்கையின் கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (கூ)

கன் விஷயத்திலே செய்தான்; அவன் விஷயத்தில் செய்ததை துர் மாகியானருத்ரன் விஷயத்திலே செய்தானாயிற்று. † முற்பட இவன் செருக்கித் திரிகிறது பொறுக்கமாட்டாமை, "செய்திடுவானுக்கு" என்று "என் தலையையறு" என்று அதுமதிபண்ணிப் பின்னையும் தானே இவனை, "இப்படிசெய்தான்" என்று (க)"ब्रह्महत्या ... கபாலீத்வம் பவிஷ்யஸி" என்று பழியிட்டானாயிற்று. பெற்றதம ப்பன்பகையாக, அவனிலண்ணிய வுறவாயுதவுமவனாயிற்று.

(தவமித்யாதி) தவம்புரிந்துயர்ந்த மாமுனிகொணர்ந்தவென்கிற து-விஸ்வாமித்ரனை. அவன் க்ஷத்ரியனாயிருக்கச்செய்தேயும் தபோ பலத்தாலே ப்ரஹ்மர்ஷியானானிறே. அவன் பெருமாளையும் இளைய பெருமாளையும் நடத்திக்கொண்டுவந்தது அக்கரையேயாகையாலே அத்தைச் சொல்லிற்றாகவுமாம். †தபஸ்ஸைச்செய்து உயர்ந்தவென் றபடி. இதுக்கு, ஸ்ரீ பராங்குசதாஸர், † "ஜீயா! 'மாமுனி புகன்ற' என்று பாடபேதத்தைப் பண்ணி அதினுடைய ப்ரபாவத்தைப் பிள்ளைகளுக்குச் சொல்லிக்கொடு போந்தானிறே, அத்தைச் சொல் லிற்றாகவுமாமே" என்ன; †"அதுக்கு நமக்கு பு(ப)லம் போராது" என்றருளிச்செய்வர். அன்றிக்கே, பகீரதன்றன்னையே சொல்லுகிற தாய், அவன் கொடுவந்த கங்கையென்னுதல். (அ)

குக் கையாளானமையைக்காட்டிலும் ஆசாலேசமுடைய ப்ரஹ்லாதன் சொலவுக்குக் காரியம்செய்ததேற்றம், அதிலும் அரன்சாபந்தீர்த்த தேற்றமே ன்று ஈடுபாட்டிலே தாத்பர்யம். "அயன்தான் முனிந்திட்ட" என்கையாலே முனிகைக்கு யோக்யதையில்லாமை தோற்றுகையாலே, அத்தையருளிச்செய் கிறார், (முற்படவித்யாதி).

சப்தார்த்தம், (தபஸ்ஸையித்யாதி). (ஜீயா) என்றது - நம்பிள்ளையைப் பூஜ்யோக்தியாலே ஸம்போதித்தபடி. (அதுக்கு நமக்குபலம்போராது) என் னுதலுக்கு - ஆழ்வார் திவ்யஸூக்தியைத் திருத்திப் பாடபேதம் பண்ணுகைக்கு நம்போராதென்று நம்பிள்ளையருளிச்செய்தாரென்றுகருத்து.... ...(அ)

(க) மா - பு -

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கொண்டல் | மேகங்களையும் [ம் | அன்று | பகீரதன் கங்கையை அவதரிப்பிக்கிற போது |
| மாருதங்கள் | வாயுஸமூஹத்தை தயு | | |
| குலவரை | குலபர்வதங்களையும் | | |
| தொகுநீர் | ஜலஸம்ருத்தியை யுடைத்தாய் | அண்டம் | ப்ரஹ்மலோகத்தை |
| | | ஊடு அறுத்து | இடைவெளியாக்கிக் கொண்டு |
| குரை | சப்தியாநின்றுள்ள | | |
| கடல் | ஸமுத்ரங்களையும் | அந்தரத்து | ஆகாசத்தில்நின்றும் |
| உலகுஉடன் | பூமியுடன் | இழிந்து | கீழிழிந்து |
| அனைத்தும் | மற்றுமுள்ள பதார்த்தங்களையும் | அவனியாள் | ஸ்ரீபூமிப்பிராட்டியானவள் |
| உண்ட | அமுதுசெய்தருளின | அலமர | (பொறுக்கமாட்டாதே) வருந்தும்படி |
| மா | பெரிய [னுய் | | |
| வயிற்றோன் | திருவயிற்றையுடைய | பெருகும் | ப்ரவஹிக்குமதாய் |
| ஒள் | ப்ரகாசிக்கிற | மண்டு | நெருங்கி |
| சுடர் | சந்த்ரஸூர்யர்களை | மா | நிறைந்து |
| ஏய்ந்த | உடைய | மணி | தெளிந்த [ன |
| உம்பரும் | மேலுலகங்களையும் | நீர் | ஜலத்தையுடைத்தா |
| ஊழியும் | கல்பங்களையும் | | கங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளான். (கo) |
| ஆனான் | ப்ரகாரமாகஉடையனாயிருக்கிற ஸர்வேஶ்வரன், | | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (கொண்டல் மாருதங்கள்) மேகங்கள், † வாயுஸ்கந்தம், குலபர்வதங்கள், ஜலராசியையுடைத்தாய், கோஷியாநின்றுள்ள கடல், லோகங்களோடே ஸர்வபதார்த்தங்களையும் வைக்கப்பட்ட. (மாவயிற்றோன்) † இவற்றை வயிற்றிலே வைத்தவிடத்திலும் இவைதானளவுபட்டு வயிறே†பெருத்திருக்கை. (க) "வல்வயிற்றுப் பெருமான்" என்னக்கடவதிறே. (ஒண்சுடரித்யாதி) சந்த்ர ஸூர்யர்களையுடைத்தான உபரிதந லோகத்தையும், காலவிசேஷமான ப்ரளயகாலத்தையும், தான் என்று சொல்லலாம்படியானான். இவை ப்ரகாரமாகத்தான் ப்ரகாரியாய் நின்றான்.

அரு.—ஒன்பதாம்பாட்டு. (கொண்டலித்யாதி) அரனைவெந்திரச் சாபம் தவிர்த்த வளவேயோ, ஸர்வவிஷயமாக ஆபத்ஸகனன்றோ என்றநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

(வாயுஸ்கந்தம்) என்றது - வாயுஸமூஹமென்றபடி. "மா" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம். (இவற்றையித்யாதி). (பெருத்திருக்கை)-மாஹாத்ம்யத்தையுடைத்தாயிருக்கை. (உ) "ஜகதாம் [illegible]-அண்டாநாம்த்வதுதரமாமநந்திஸந்த:" என்ற ஶ்லோகமநுஸந்தேயம். ... (கூ)

(க) தி - வாய் -

(உ) வர - ஸ்த - சக.

மூ.—வருந்திரை மணிநீர்க்கங்கையின் கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானைக்
கருங்கடல் முந்நீர்வண்ணனை யெண்ணிக்
கலியன் வாயொலிசெய்தபனுவல்
வரஞ்செய்த வைந்துமைந்தும் வல்லார்கள்
வானவருலகுடன் மருவி
இருங்கடலுலகமாண்டு வெண்குடைக்கீ
ழிமையவ ராகுவர்தாமே. (௰)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வரும் | பெரிய வேகத்தோடே வருகிற | வரம்செய்த | பகவத்ப்ரஸாதத்தாலேபண்ணின |
| திரை | அலைகளையுடைத்தாய் | ஐந்தும் ஐந்தும் | இப்பத்துப் பாட்டுக்களையும் |
| மணி | தெளிந்த [ன | | |
| நீர் | ஜலத்தை யுடைத்தா | வல்லார்கள் | அர்த்தத்தோடு சொல்லவல்லவர்கள் |
| கங்கையின்கரைமேல் | கங்கைக்கரையிலுள்ள | இரு | பெரிய |
| | | கடல் | கடலாலேசூழப்பட்ட |
| வதரியாச்சிராமத்து | ஸ்ரீபதரிகாஶ்ரமத்திலே [மவனாய் | உலகம் | இப்பூமியை |
| உள்ளானை | நித்யவாஸம்பண்ணு | வெள் | வெளுத்த (இருந்து |
| கரு | கறுத்து | குடைக்கீழ் | குடைநிழலின் கீழே |
| முந்நீர் | மூன்றுவகைப்பட்ட நீரையுடைத்தான | ஆண்டு | செங்கோல்செலுத்தி (பின்பு) |
| கடல்வண்ணனை | கடல்போன்ற திருநிறத்தையுடையஸர்வேஶ்வரனை | வானவர் | இந்த்ராதி தேவர்களுக்குநிர்வாஹகனான ப்ரஹ்மாவினுடைய |
| எண்ணி | அநுஸந்தித்து | உலகு உடன் | ஸத்யலோகத்தையும் |
| கலியன் | ஆழ்வார் [ச்செய்த | மருவி | கிட்டி (அநுபவித்து) |
| வாய் | திருவாக்காலே யருளி | இமையவர் ஆகுவர் | நித்யஸூரிகளோடு ஒருகோவையாகப் பெறுவர் ...(௰) |
| ஒலிசெய்த | சப்தஸந்தர்ப்பமான | | |
| பனுவல் | பாட்டுக்களாய் | | |

(அண்டமித்யாதி) அண்டமுண்டு - ப்ரஹ்மலோகம், அதின் ...வ வழிகண்டுபோந்து, அதுக்கு இவ்வருகில் அந்தரிக்ஷத்திலே ...திழிந்து, எல்லாவற்றையும் பொறுக்கக்கடவ அவனியாளு ...பூமி, அவள் பொறுக்கமாட்டாதே தடுமாறும்படி பெருகுமா... (மண்டுமாமணிநீர்) எங்குமொக்கப்பரந்து பெருநீராய் அத...த் தெளிந்திருப்பதான கங்கையின் கரையிலே. (௧)

வ்யா.—பத்தாம்பாட்டு. (வருமித்யாதி) பெரிய வேகத்தோடே வருகிற, திரைகளையுடைத்தாய்த் தெளிந்த ஜலத்தையுடைத்தான கங்கையின் கரைமேலே ஸ்ரீபதரிகாஶ்ரமத்திலே யிருக்கிற ஸர்வேஶ்வரனைக் கவிபாடிற்று. (கருங்கடல் முந்நீர்) முந்நீரான கருங்கடல். ஆற்றுநீர், ஊற்றுநீர், வர்ஷஜலமான மூன்று வகை நீரையுடைத்தாய்க் கறுத்த நிறத்தையுடைய கடல்போலே யிருக்கிற நிறத்தையுடையவனை அநுஸந்தித்து ஆழ்வாரருளிச்செய்த பாட்டுக்கள் †இவைதான். (வரம்செய்த) பகவத் ப்ரஸாத லப்தமான பத்துப்பாட்டையும் வல்லவர்கள். அன்றியே, வரிஷ்ட்டமான பத்துப்பாட்டையுமென்னுதல்.

(வானவரித்யாதி) † பெரியகடல் சூழ்ந்த பூமியை ஏகாதபத்ரமாக நடத்திப் பின்பு ப்ரஹ்மபதத்தை நிர்வஹித்து அநந்தரம் நித்ய ஸூரிகளோடொருகோவையாகப் பெறுவர். இத்தால் சொல்லிற்றாயிற்று - இவனபிஸந்திபண்ணினவற்றையெல்லாம் தருமென்றபடி.

"அறிவுடையார் அபுருஷார்த்தமென்று காற்கடைக்கொண்ட ஐஶ்வர்யத்தை, (க) 'வேண்டேன் மனைவாழ்க்கை' என்றும், (உ) †'போந்தேன்' என்றும், வீதராகராய்ப் போந்தவிவர், இப்போது ஐஶ்வர்யத்தைப் ப(ஃ)லமாகச் சொல்லுவானென்?" என்று ஜீயர் பட்டரைக்கேட்க, †"திருமங்கையாழ்வா ரவதரித்தபின்பு, த்யாஜ்யமான ஐஶ்வர்யமும் பரமபுருஷார்த்தத்துக்குள்ளே புக்குப்போயிற்றுக்காணும், †'ஈஶ்வரனே யாகவுமாம், நித்யஸூரிகளே யாகவுமாம், ராஜா

---

அநு.—பத்தாம்பாட்டு. (வருந்திரையித்யாதி). (இவைதான்) என்று வ்யாக்யாதாவாக்யமாதல். "பனுவல்" என்ற ஆழ்வார் கருத்தாதல்.

அர்த்தக்ரமத்தைப்பற்ற, "இருங்கடலுலகம் வெண்குடைக்கீழ் ஆண்டு வர்னவருலகுடன்மருவி இமையவர் ஆகுவர்தாமே" என்றந்வயித்தருளிச்செய்கிறார், (பெரியவித்யாதி).

(போந்தேனென்றும்) என்றவநந்தரம், "துறந்து" என்றுசேஷம். (க)"வேண்டேன் மனைவாழ்க்கையை" என்னுமவர்தாமே ஐஶ்வர்யத்தைப் பலமாகச்சொல்லுகையாலே ஓராகாரத்தாலே த்யாஜ்யமானது ஆகாராந்தரேண உபாதேயமாயிற்றென்று விவக்ஷித்து, பட்டர் பரிஹரித்தமையை யருளிச்செய்கிறார். (திருமங்கையாழ்வாரித்யாதி). உள்ளேபுக்கபடி எங்ஙனேயென்ன; (ஈஶ்வரனேயித்யாதி). ஈஶ்வரபதார்த்தமாகவுமாம், பாகவதபதார்த்தமாகவுமாம், ராஜத்ரவ்யமாகவுமாம், ததீயர்க்குவிநியோகமானால் அதுவே புரு

---

(க) சு - க - க. (உ) சு - ௩ - ச.

வாகவுமாம், பறித்து பாகவதசேஷமாக்கலாமாகில்' என்றுமிவரிருப்பது" என்றருளிச்செய்தாராம். ... ... ... (ய)

பேரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



ஷார்த்தமென்றிருப்பரென்றபடி. ஈஸ்வரபதார்த்தத்தை பாகவத சேஷமாக்கினல் அது அவனுக்கு உகப்பாகையாலும், ராஜத்ரவ்யத்தைப்பறித்து பாகவத சேஷமாக்கினல் ப்ரத்யவாயமின்றிக்கே ஸ்வரூபாநுரூபமாகையாலும் அவைகூடிற்றேயாகிலும் பாகவதபதார்த்தத்தைப்பறித்து பாகவதர்க்குக் கொடுக்கக்கூடுமோவென்னில்; அவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களென்றறியாதே பறித்தானுகிலும் தோஷமுண்டாகையாலே. அதுவே பாகவதவிஷயத்திலே விநியோகமானல் அந்ததோஷம் வராதென்று கருத்தாகவுமாம், ஸம்பந்நராய்ச் சிலரிருந்தால் நிரவகாசராயிருப்பார்க்கு அவர்கையில்நின்றும் பறித்துக்கொடுத்தால், அவர்கள் பாகவதசேஷமாயிற்றே என்று உகப்பராகையாலே, தோஷமில்லை என்று கருத்தாகவுமாம். இங்ஙனன்றுகில், பாகவத ஸ்வத்தையெடுத்து பாகவதர்க்குக் கொடுக்கைக்குச் சாஸ்த்ரம் இசையாதிறே. ப்ரஹ்மபதத்தளவும் சொன்னது ஐஸ்வர்யத்துக்கு மேலெல்லையாகையாலே.

ஜீயர் திருவடிகளே சரணம்.

முதற்பத்தில் - நாலாந்திருமொழி முடிந்தது.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.
முதற்பத்து - ஐந்தாந் திருமொழி - கலையும்:

மூ.—கலையும் கரியும் பரிமாவும் திரியும் கானம் கடந்துபோய்ச் [அ
சிலையும் கணையும் துணையாகச்சென்றான்வென்றிச்செருக்களத்
மலைகொண் டலைநீ ரணைகட்டி மதிள்நீ ரிலங்கை வாளரக்கர்
தலைவன் தலைபத் தறுத்துகந்தான் சாளக்கிராமமடைநெஞ்சே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சிலையும் | வில்லையும் | மதிள் | மதிளையும் |
| கணையும் | அம்புகளையும் [டு | நீர் | கடலாகிற அகழையு |
| துணையாக | ஸஹாயமாகக்கொண் | | முடைய |
| கலையும் | மான்களும் | இலங்கை | லங்கையை(த் தனக் |
| கரியும் | யானைகளும் | | குநகரமாக) உடை |
| பரிமாவும் | குதிரைகளும் | | யனாய் |
| திரியும் | ஸஞ்சரிக்கிற | வாள் | வாளையுடையனாய் |
| கானம் | காட்டை | அரக்கர் தலைவன் | ராக்ஷஸர்க்குத் தலைவனான ராவணனுடைய |
| கடந்து | தாண்டி | | |
| போய் | நெடுந்தூரம்போய் | | |
| வென்றி | ஜயத்தையுடைத்தான போரைவிளைக்கக்கடவ | தலைபத்து | பத்துத்தலைகளையும் |
| | | அறுத்து | சேதித்து |
| | | உகந்தான் | உகந்தஸர்வேஶ்வரன் நித்யவாஸம் பண்ணுகிற |
| செருக்களத்து | யுத்தபூமியிலே | | |
| சென்றான் | புகுந்தவனாய் | | |
| அலை | அலையையுடைய | சாளக்கிராமம் | ஸ்ரீஸாளக்ராமத்தை |
| நீர் | ஸமுத்ரத்தை | நெஞ்சே! | ஓமநஸ்ஸே! |
| மலைகொண்டு | மலையால் [ணி | அடை | கிட்டப்பாராய் (க) |
| அணைகட்டி | ஸேதுபந்தநம்பண் | | |

வ்யா.—கலையும் ப்ரவேசம் - † ஸௌபரிபோகத்துக்குறுப்பாக அநேகம் வடிவுகொண்டாற்போலே, ஆஶ்ரிதரை யநுபவிக்கைக் குறுப்பாக உகந்தருளின நிலங்களெங்கும்புகுந்து ஸந்நிதி பண்ணிநுயிற்று அவன்; † இனி இவர்தாமும், (க) * தானுகந்த வூரெல்

அரு.—கலையும் கரியும் ப்ரவேசம்.—கீழ்நாலு திருமொழிகளாலும் தமக்குண்டான மந்த்ரலாபத்தையும் மந்த்ரார்த்தத்தையும் நரநாராயணரூபேண அவதரித்துத் திருமந்த்ரத்தை வெளியிட்டதேசத்தில் தமக்குண்டான ப்ராவண்யத்தையு மருளிச்செய்தாரேயாகிலும், ஸாளக்ராமம் தொடக்கமான திவ்யதேசங்களை விரும்புவானென்னென்கிற சங்கையிலே, இவர்விரும்புகைக்கு ஹேதுவை யருளிச்செய்யக்கோலி, அதுக்குறுப்பாக, அவன்பலபடியிருக்கைக்கு ஹேதுவையருளிச்செய்கிறார், (ஸௌபரியித்யாதி). அவன் பலபடி யிருந்தால் இவர்தாம் பலபடி அநுபவிக்கைக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார், (இனியித்யாதி). விஷயமொன்றாயிருக்க, எங்கும் தனித்தனியேபுக்க

(க) தி - நெ - சு.

லாம் தன் தாள்பாடி எங்கும் புக்கநுபவிக்கையிலேயாயிற்று அபே க்ஷைபண்ணியிருப்பது.† ஒருவிஷயத்தை யநுபவிக்கப்புக்கால் அவ் விஷயத்தில் அவயவங்கள்தோறும் ஸ்ப்ருஹை பண்ணுமாபோலே யாயிற்று இவ்ரெங்கும் புக்கநுபவிப்பதாகப் பாரிக்கிறதும். †ஆக - விரோதி நிரஸநசீலனுமாய், † ஆஶ்ரிதஸம்ஶ்லேஷைகஸ்வபாவனு மாய், † ப்ரஹ்மாதிகளாபந்நராமன்று அவ்வாபத்துக்களைப்போக்கி அவர்களுக்கு துஃகநிவர்த்தகனுயிருக்கிறவன்; † நித்யஸூரிகளோடு தன்பக்கல் ருசியுடையாரோடு கேவலப்ராஹ்மணரோடு வாசியற ஸர்வஸமாஶ்ரயணீயனுய்க்கொண்டு ஸ்ரீஸாளக்ராமத்திலேவந்து ஸந் நிஹிதனுனன், அங்கேபோயவனையாஶ்ரயிப்போமென்று திருவுள் ளத்தோடேகூட்டுகிருர். † கோஸலஜநபதமாகப் பெருமாளதாயிரு க்குமாபோலே, ஒரு மண்டலமாகத்தனக்கு † விஷயமாகக்கொண்டு ஸந்நிஹிதனுய்க்குறைவற வர்த்திக்கிறதேசமாயிற்று.

முதற்பாட்டு. (கலையித்யாதி) † கலைமுதலானவைகளை வர்த் நுபவிக்கவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிருர், (ஒருவிஷயத்தை யித்யாதி). (ஆக) என்றது - ஆகையாலே என்றபடி. (க) "ஊரான்குடந்தை யுத்தமன்" என்றத்தைப்பற்ற, (ஆஶ்ரிதஸம்ஶ்லேஷைகஸ்வபாவனுமாய் என்றது. (உ) "வெந்தாரென்பும்" என்கிற பாட்டைக் கடாக்ஷித்தருளிச்செய்கி ருர், (ப்ரஹ்மாதிகளித்யாதி). கபாலவிமோசநம்வேதாபஹரணுதிகளுக்கு முப லக்ஷணமென்று திருவுள்ளம். (ந) "தொண்டாமினமும்" என்கிறபாட்டைப் பற்ற, (நித்யஸூரிகளோடித்யாதி). கீழ்ச்சொன்னவரெல்லாரு மாஶ்ரயிக் கும்படி இடமுடைத்தாயிருக்குமோ வென்ன; (கோஸலேத்யாதி). மலையா கையாலே ஒரு மண்டலப்பரப்பு பெருத்திருக்குமென்று கருத்து. (விஷய மாக) வாஸஸ்த்தாநமாக.

முதற்பாட்டு. (கலையுமித்யாதி). "தானவனுகம் தரணியிற்புரள" என்றும், "இலங்கையும் கடலும்" என்றும். கீழ்த்திருமொழியிலே ப்ரஸ்துதமான ராமசரித்ரந்தான்,(ச)"తాదృక్షణో నను బహూవిధ రాఘవత్వే య స్తావకం చరితమన్వహ మన్వభుఙ్క్త । సోత్రైవహ న్తూహనుమాన్ పరమాం విము క్తిం బుద్ధ్వా విధూయ చరితం తవ సేవతేసౌ - தாத்ருக்குணோநுபபூவிதராகவத்வே யஸ்தாவகம்சரிதமந்வஹமந்வபுங்க்த | ஸோத்ராவஹந்த ஹநுமாந்பரமாம் விமுக்திம் புத்யாவிதூய சரிதம் தவஸேவதேஸௌ" என்கிறபடியே நித்யாநு பாவ்யமாய்த் தவக்கவற்ருகையாலே அத்தை யநுபவிக்கிருரென்று அவதா ரிகையிட்டுக்கொள்வது.

காடானபோதே ம்ருகம்முதலானவை யுண்டாயிருக்குமே, அவற்றை யிட்டு விசேஷிப்பானென்னென்ன; அருளிச்செய்கிருர், (கலையித்யாதி).

(க) க-இ-ச. (உ) க-இ-அ. (ந) க-இ-க. (ச) அதிமாநுஷஸ்த-கூஉ.

திக்கக்கடவதான காட்டைக்கடந்துபோய். (சிலையும் கணையும் துணையாகச் சென்றான் வென்றிச் செருக்களத்து) (க) † "[illegible] - தேவநேநவநம்கத்வா" என்கிறபடியே, படைவீட்டில்நின்றும் காட்டிலே புகுகையன்றிக்கே, காட்டில்நின்றுமாயிற்றுக் காட்டிலே வந்துபுகுந்தது; அப்படியே இங்கும், துஷ்டஸத்வப்ரசுரமான காட்டைக்கழிந்து பின்னை யுத்த பூமியிலேயாயிற்று வந்துபுகுந்தது. †கலைகளையும் ஆனைகளையும் குதிரைகளையுமுடைத்தாயிருக்கிற காட்டைக்கடந்துபோய் வென்றிச் செருக்களத்திலேவந்து புகுந்தான். அங்கு போய்ப்புகுகிற விடத்துத் துணையாரென்னில்; (சிலையும் கணையும் துணையாக) வில்லு மம்பும் துணையாகவாயிற்றுப் போயிற்றது. †லக்ஷ்மணாதிகளோவென்னில்; † அவர்களையும் ஒரவயவவிசேஷங்களாக நினைத்திருந்தாரித்தனைபோக்கி, தனித்தொருதுணையாக நினைத்திருந்திலராயிற்றிவர். † முதலிகளடங்கலும் பெருமாளுக்குத்

இத்தால், விஜநவநத்திலே யெழுந்தருளுவதே! என்றீடுபடுகிறாரென்றதாயிற்று. கரியைப்பற்றவும் கலையை முற்படவெடுத்தது - இவர்கள் நிலையைக் கொலைத்தது கலையென்று, (உ) "காணிடையுருவை" என்கிற பாட்டிலே ப்ரஸ்துதமான மாயாம்ருகத்தின் தௌஷ்ட்யத்தைப்பற்ற. "அரக்கர் தலைவன் தலைபத்தறுத்துகந்தான்" என்னவே, செருக்களத்துக்குப்போகை அர்த்தஸித்தமாயிருக்கவு மருளிச்செய்தததுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார், (தேவநேநேத்யாதி வாக்யத்வயத்தாலே). இத்தால் - நடுவிலாய்ச்சிக்காகக் காடேறப்போனாலும் அவ்வளவிலே மீண்டுவரப்பெறாதே ஸீதாவியோகவ்யாஜேந யுத்தரங்கத்திலே போகவேண்டிற்றே! என்றீடுபாடு தோற்றுகிறதென்றதாயிற்று. கீழ் தாத்பர்யங்களையருளிச்செய்து, சப்தார்த்தமருளிச்செய்கிறார், (கலைகளையுமித்யாதி). "சிலையும் கணையும் துணையாக" என்ற பதஸ்வாரஸ்யத்தாலே, செருக்களத்துக்கென்றது - கரவதவ்ருத்தாந்தமாகச் சொல்லலாயிருந்ததேயாகிலும், "கானம்போய்" என்னாதே, "கடந்து" என்றபதஸ்வாரஸ்யத்தாலே லங்கையில் யுத்தரங்கமேயாகவேணுமென்று விவக்ஷித்து, ஆனால் தநுர்பாணங்களே துணையென்னக்கூடுமோ? என்கிற சங்கையை உத்க்ஷேபிக்கிறார், (லக்ஷ்மணாதிகளோவென்னில்) என்று. ஆதிசப்தத்தாலே ஸுக்ரீவ மாருதி விபீஷணர்களைச் சொல்லுகிறது. இளையபெருமாள் (ங) "[illegible] - ராமஸ்ய தக்ஷிணோபாஹு:" என்னும்படியிருக்கையையும், ஸுக்ரீவர் ஏகக்ரீவராய்ப்போந்தபடியையும், ஸ்ரீவிபீஷணாழ்வானை இக்ஷ்வாகுவம்ஸ்யராக நினைத்தபடியாலே ராமபாஹு ஸ்த்தாநாபிஷிக்தரானபடியையுமுட்கொண்டு பரிஹரிக்கிறார் - (அவர்களையு மித்யாதி). (முதலிகளடங்கலும்) என்றது - மற்றுமுள்ள வாநரமுதலிகளெல்லாரு மென்றபடி.

(க) ரா-பா-க ௬0. (உ) க-ச-உ. (ங) ரா-யு - உஅ - உ௫.

†குழைச் சரக்கானார்களாயித்தனையிறே; (க) "రామలక్ష్మణగుప్తా సా ராமலக்ஷ்மணகுப்தாஸா". (வென்றிச்செருக்களத்து) †நலியவேணுமென்னுமபிஸந்தியுண்டாய் நலியாத ம்ருகங்களைத் தப்பிப்போனால் பின்னையும் போய்ப்புகுமிடம் யுத்தபூமியாயிற்று. †வென்றியையுடைத்தான போரை விளைக்கக் கடவ யுத்தபூமியிலே.

† அங்குப்போய்ப்புக்கபின்பு செய்த சேஷ்டிதங்களைச் சொல்லுகிறதுமேல். (மலையித்யாதி) பெரிய க்ஷோபத்தை யுடைத்தான கடலை, நீரிலே ஆழக்கடவ மலைகளைக்கொண்டு அணையாகக்கட்டி, மதிளையும், அதுக்ககழான கடலையுமுடைய லங்கையைக்கலவிருக்கையாகவுடையனுமாய், † ஒருதேவதையை யாச்ரயித்து அதின் பக்கலிலே ஒருவாளைப்பெற்று அது தனக்கு † அரணாக நினைத்திருப்பானாய், துர்வர்க்கத்துக்கெல்லாம் நியாமகனாயிருக்கிற ராவணனுடைய தலைகள் பத்தையும் அறுத்து, † "தேவர்களும் தந்தாமுடைய குடியிருப்புப்பெற்றார்கள், ருஷிகளும் தந்தாமுடைய ஆச்ரமங்களிலேயிருந்து தபஸ்ஸுபண்ணப்பெற்றார்கள்" என்று உகந்தவன், அப்படிஆச்ரித விரோதியைப்போக்கிப் பிற்பட்டார்க்குமுதவுகைக்காகவந்து வர்த்திக்கிற ஸ்ரீஸாளக்ராமத்தையாச்ரயிக்கப்பாராய் நெஞ்சே! என்கிறார். (க)

(குழைச்சரக்கு) குழையென்று - பையாய், பையில் சரக்குப்போலே ரக்ஷ்யமென்றபடி. "வென்றி" என்று விசேஷிக்கையாலும் - காட்டைப்பற்றவும் பாதகத்வத்திலாதிக்யம் ஸூசிதமாகிறதென்கிறார். (நலியவேணுமித்யாதி). நலியவேணுமென்றபிஸந்தியில்லாத ம்ருகங்களுள்ள காட்டைத்தப்பிப்போகப்பெற்றால் நலிகைக்கு இப்போது வரப்புகுகிறாரென்று விஜிகீஷுக்களிருக்குமிடத்தில் புகவேண்டிற்றே என்று கருத்து. சப்தார்த்தம், (வென்றியையித்யாதி).

மேலுக்கவதாரிகை, (அங்கித்யாதி). "செருக்களத்து சென்றான்" என்றது - ஸமுத்ர தீரத்திலே படையெடுத்துவிட்டபோதே போய்ப் புக்கதுஸித்தவத்கரித்தருளிச்செய்தாரென்று திருவுள்ளம்பற்றி ஸமுத்ரத்தில் ஸேதுபந்தநத்தையும் அங்குப்புக்குச்செய்த செயலாக வருளிச்செய்தாரென்று கண்டுகொள்வது. (ஒருதேவதை) ருத்ரன். (அரணாக) ரக்ஷகமாக. (உ) "సహిదేవైరుదీర్ణస్య రావణస్య వధార్థిభిః । అర్థితో మానుషే లోకే జజ్ఞే విష్ణుస్సనాతనః ஸஹிதேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி: । அர்த்திதோ மானுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ்ஸநாதந:" என்றும், (ங) "తేవయం భవతా రక్ష్యా భవద్విషయవాసినః - தே வயம் பவதா ரக்ஷ்யா பவத்விஷயவாஸிந:" என்றும் சொல்லுகிறபடியே இவர்களுக்காக ராவணன் தலையை அறுத்தானாகையாலே வந்தவுகப்பை யருளிச்செய்கிறார், (தேவர்களுமித்யாதி). (க)

(க) ரா - யு - (உ) ரா - அயோ - க - எ. (ங) ரா - ஆ - க - உ0.

மூ.—கடஞ்சூழ் கரியும் பரிமாவு மொலிமான் தேருங்காலாளும் [தான்
உடன்சூழ்ந் தெழுந்த கடியிலங்கை பொடியா வடிவாய்ச் சரந்துரந்
இடஞ்சூழ்ந் தெங்கு மிருவிசும்பி லிமையோர் வணங்க மணங்கமழு
தடஞ்சூழ்ந் தெங்கு மழகாய சாளக் கிராம மடைநெஞ்சே. [ம்

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கடம்சூழ் | மதஜலத்தையுடைய | இரு | பரப்பையுடைத்தான |
| கரியும் | யானைகளும் | விசும்பில் | ஸ்வர்க்கத்தில் வஸிக்கிற |
| பரிமாவும் | குதிரைகளும் | | |
| ஒலி | சப்தியாநின்றுள்ள | இமையோர் | தேவர்கள் |
| மாத்தேரும் | மஹாரதங்களும் | இடம்எங்கும் | பூமிப்பரப்பெல்லாம் |
| காலாளும் | பதாதிகளும் | சூழ்ந்து | பரவி [ய் |
| உடன்சூழ்ந்து | ஒன்றாகத்திரண்டு | வணங்க | ஆஶ்ரயிக்கத்தக்கதா |
| எழுந்த | கிளர்ந்துதோற்றின | மணம் | (செங்கழுநீர் முதலிய புஷ்பங்களின்) வாஸனையை |
| கடி | அரணையுடைத்தான | | |
| இலங்கை | லங்கையிலுள்ள துர்வர்க்கமானது | கமழும் | வீசாநின்றுள்ள |
| பொடியா | சூர்ணமாம்படியாக | தடம் | தடாகங்களாலே |
| வடி | கூரிய | சூழ்ந்து | சூழப்பட்டு [லும் |
| வாய் | வாயையுடைத்தான | எங்கும் | எல்லாப்பக்கங்களி |
| சரம் | பாணங்களை | அழகாய | அழகையுடைத்தாயிருக்கிற |
| துரந்தான் | ப்ரயோகித்த சக்ரவர்த்தித்திருமகன் | | சாளக்கிராமம் அடைநெஞ்சே! (உ) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. † ராவணனை நிரஸித்தபடியைச் சொல்லிற்று முதற்பாட்டில்; † அதுக்குறுப்பாக அவனுடைய முதல்நாளைப் படையெழுச்சி சொல்லுகிறது இதில்.

(கடஞ்சூழித்யாதி) ருஷிதான் படையெழுச்சியைச் சொன்ன † க்ரமத்திலே சொன்னாரிவரும். † மதஜலத்தையுடைத்தாய் †. மலை

அரு.—இரண்டாம்பாட்டு, (கடஞ்சூழித்யாதி) அரக்கர்தலைவன் தலை பத்தறுத்தபின்பு இலங்கைபொடியாம்படி சரந்துரந்தானென்னுமது கூடாமையாலே, தாத்பர்ய மருளிச்செய்கிறார், (ராவணனை யித்யாதி). (அதுக் குறுப்பாக) - நிரஸநத்துக்குறுப்பாக, இத்தால் - படையெடுத்து வந்திருந்த அம்பு கோத்தானுகையாலே தலையறுத்துவிட்டாரென்று கருத்து.

(க்ரமத்திலே) என்றது - ரதகஜதுரகபதாதிகளாகிற சதுரங்கஸேனையைச் சொல்லும் க்ரமத்திலே யென்றபடி. "கடம்" என்றதினர்த்தம், (மதஜலத்தை) என்றது. ஆனைகளை வர்ணிக்கிறவிடத்திலே, (க) "விலங்கல் போல்வன" என்று வர்ணிக்கையாலே அது இங்குவிவக்ஷிதமென்றருளிச் செய்கிறார், (மலையித்யாதி). மதஜலமுண்டாவது ஒருவயோவிசேஷத்திலே

(க) க - உ - உ.

மூ.—உலவு திரையும் குலவரையு மூழிமுதலா வெண்டிக்கும்
நிலவும் சுடரு மிருளுமாய் நின்றான் வென்றி விறலாழி [றும்
வலவன் வானோர் தம்பெருமான் மருவா வரக்கர்க் கெஞ்ஞான்
சலவன் சலஞ்சூழ்ந் தழகாய சாளக்கிராம மடைநெஞ்சே.(ந)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உலவு | ஸஞ்சரியாநின்றுள்ள | வென்றி | ஜயத்தையும் |
| திரையும் | அலையையுடைய கடலும் | விறல் | மிடுக்கையுமுடைய |
| குலவரையும் | (மேருமுதலான) எழு குலபர்வதங்களும் | ஆழி | திருவாழியை |
| ஊழிமுதலா | காலம்முதலாக | வலவன் | வலத்திருக்கையிலுடையனாய் |
| எண்திக்கும் | எட்டுத் திக்கிலுள்ளபதார்த்தங்களும் | வானோர்தம் | ப்ரஹ்மாதிகளுக்கு |
| நிலவும் | சந்த்ரனும் | பெருமான் | ஸ்வாமியாய் |
| சுடரும் | ஸூர்யனும் | எஞ்ஞான்றும் | எக்காலத்திலும் [சி |
| இருளும் | அந்தகாரமுமாகிய இவற்றுக்கு | மருவா | (தன்னை) ஆச்ரயியா |
| ஆய் | ப்ரகாரியாய் | அரக்கர்க்கு | ராக்ஷஸர்கள்விஷயத்தில் |
| நின்றான் | நின்றவனாய் | சலவன் | சத்ருவான ஸர்வேச்வரன் நித்யவாஸம் பண்ணுமதாய் |

வடிவுகொண்டு நடந்தாற் போலேயிருக்கிற ஆனைத்திரளும், அதுக்கநந்தரம் குதிரைத்திரளும், கோஷத்தை யுடைத்தாயிருந்துள்ள † பெரியதேர்களும், காலாளும், இவையடைய ஒன்றாகத்திரண்டு பெரிய கிளர்த்தியோடே தோற்றின அரணுடைத்தான லங்கை. (க) "ஶ்மஶாந ஸத்ருஶீ பவேத்" - ஶ்மசாநஸத்ருசீபவேத் ?'' என்கிறபடியாய்ப் போம்படிக்கீடாக, † வடித்தவாயையுடைத்தான சரத்தை நடத்தினையிற்று. (இடமித்யாதி) பூமியிலவகாசமுள்ள விடமெங்குப் பரந்துகொண்டு பரப்புடைத்தான ஸ்வர்க்கத்தில் தேவர்கள் †ஆச்ரயிக்க பரிமளப்ரசுரமான தடாகங்களையுடைத்தாய் எங்குமொக்க தர்சநீயமாயிருக்கிற ஸ்ரீஸாளக்ராமத்தை யாச்ரயிக்கப்பார். ... (உ)

யானையாலே அப்போதையில் மஹத்வம் த்யோதிதமென்றுகருத்து. மாத்தேர் என்னும் வல்லொற்று மெல்லொற்றாய், மாந்தேர் என்றாய், அதுதானும் குந்தம் என்னுமது குன்றம் என்று கிடக்கிறாப்போலே "மான்றேர்" என்று கிடக்கிறதென்று திருவுள்ளம்பற்றி, (பெரியதேர்களும்) என்றது. "மால்" என்று பெருமையாய், (உ) "வன்றாளினிணைவணங்கி" என்கிற விடத்தில் வலிமையையுடைய தாளென்றவோபாதி, "மான்றேர்" என்று மாலானதேரென்கிறதென்றாகவுமாம். கடி - கட்டுடைமையாய், அரணையுடைத்தாயென்றபடி. (வடித்த) கூரிடப்பட்ட. (ஆச்ரயிக்க) என்றவநந்தரம் "தக்கதாய்" என்று சேஷம். சரந்துரந்தான், அவனுக்கிடமாயிருக்கிற சாளக்கிராமம் என்றந்வயம். ... ... ... ... ... ... ... (உ)

(க) ரா - ஸு - உகூ - உக. (உ) பெரு - திரு - கூ - ௪

| | | | |
|---|---|---|---|
| சலம் | ஜலத்தாலே | அழகாய | அழகாயிருந்துள்ள |
| சூழ்ந்து | சூழப்பட்டு | | சாளக்கிராமமடைநெஞ்சே! (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (உலவித்யாதி) ஸஞ்சரியாநின்றுள்ள திரையையுடைத்தாய் - † பெரிய கோஷத்தையுடைத்தான கடலும் மலையும் † தொடக்கமாக. (ஊழிமுதலா எண்டிக்கும்) காலோபலக்ஷித மான ஸகலபதார்த்தங்களுமான † எட்டுத்திக்கும், சிலநாள் வர்த்திக் கக்கடவராயிருக்கிற சந்த்ர ஸூர்யர்களும், அதுக்கெதிரான இருளு மாய், அதடைய "தான்" என்கிற சொல்லாலே சொல்லலாம்படி தனக்கு ப்ரகாரமாகவுடையனாய் நின்றான். இத்தால் - ஜகதாகார னாய் நிற்கும்நிலை சொல்லிற்று; மேல் அஸாதாரண திவ்யவிக்ரஹயு க்தனான நிலையைச் சொல்லுகிறது. (வென்றியித்யாதி) † ஆஶ்ரித ரக்ஷணத்துக்குப்பரிகரமான திருவாழியை வலவருகேயுடையவன். (வானோர்தம்பெருமான்) ப்ரஹ்மாதிகளுக்கு ஆஶ்ரயணீயனானவன். (மருவா) † கண்வளர்ந்தருளும்போதும் தன்னோடுபொருந்தாத அஸுரவர்க்கத்துக்கு, (க) "அவுணர்க்கென்றும் சலம்புரிந்து" என்கிறபடியே சாத்ரவத்தையுடையனா யிருக்குமவன்; ஏவம்வித னானவன்வந்து ஸந்நிதிபண்ணுகிற ஜலஸம்ருத்தியை யுடைத்தாய் தர்சநீயமாயிருக்கிற. ... .... ... ... (௩)

அரு.—மூன்றாம்பாட்டு- (உலவுதிரையுமித்யாதி) இப்படி படையெழுச் சியோடேவந்த ராவணனை நிரஸித்தவநந்தரம் (உ) "தமஸ: பரமோதாதா ஶங்கசக்ரகதாதர:-தமஸ:பரமோதாதா சங்கசக்ரகதாதர:" என்றும், (௩) "பவாந்நாராயணோ தேவ:-பவாந்நாராயணோதேவ:" என்றும் பெருமாளுடைய பரத்வம் ஸ்ப்புடதரமாகச்சொல்லப்படுகையாலே, இவரும் அந்த ப்பரத் வத்தை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

பலிதம், (பெரியவித்யாதி). (தொடக்கமாக) என்றவநந்தரம், "பெருப் பெருத்த பதார்த்தங்களும்" என்று சேஷம். (எட்டுத்திக்கும்) - எட்டுத்திக் கிலுள்ள பதார்த்தங்களும். "நிலவு" - சந்த்ரன். "வென்றி" ஜயத்தையும், "விறல்" - அதுக்கூறுப்பான மிடுக்கையுமுடைய, "ஆழி" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார், (ஆஶ்ரிதேத்யாதி). "என்றும் - மருவா வரக்கர்க்கு - சலவன்," என்றந்வயம் விவக்ஷித்தருளிச்செய்கிறார், (கண்வ ளர்ந்தித்யாதி). இத்தால், நித்ராஸமயத்திலும் ப்ரதிபக்ஷத்தின்மேலே சீற்ற முடையவரென்று, (ச) "காலாக்நிஸத்ருஶ: க்ரோதே-காலாக்நிஸத்ருச: க்ரோதே" என்னும் குணாதிசயம் சொல்லிற்று. ... ... ... ... (௩)

(க) தி - நே - ௬. (௩) ரா - யு - ௧௨௦ - ௧௩.
(உ) ரா - யு - ௧௧௪ - ௧௫. (ச) ரா - பா - ௧ - ௧௮.

மூ.—ஊரான் குடந்தை யுத்தம னொருகா லிருகால் சிலைவளையத்
தேரா வரக்கர் தேர்வெள்ளம் செற்றான் வற்றா வருபுனல்சூழ்
பேரான் பேராயிர முடையான் பிறங்கு சிறைவண் டறைகின்ற
தாரான் தாரா வயல்சூழ்ந்த சாளக் கிராம மடை நெஞ்சே.(ச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஊரான் | திருவூரகத்தைத் தனக்கு வாஸஸ்தானமாகவுடையவனாய் | புனல் | ஜலத்தாலே |
| குடந்தை | திருக்குடந்தையில் கண்வளர்ந்தருளுகிற | சூழ் | சூழப்பட்ட |
| உத்தமன் | புருஷோத்தமனாய் | பேரான் | திருப்பேர்நகரில் நித்யவாஸம்பண்ணுமவனாய் |
| ஒருகால் | கான்முதலானோர் எதிர்த்தபோது | ஆயிரம்பேர் உடையான் | அநேகம் திருநாமங்களையுடையனாய் |
| சிலை | வில்லினுடைய [ம் | பிறங்கு | நெருங்கியிருந்துள்ள |
| இருகால் | இரண்டுகோடியையு | சிறை | சிறகுகளையுடைய |
| வளைய | வளைத்து (த்தம்முடைய வல்லமையைக் காட்ட) | வண்டு | வண்டுகளானவை |
| தேரா | (இவனை நம்மால்வெல்லமுடியாது என்று) ஆராய்ந்தறிய மாட்டாத | அறைகின்ற | ஆளத்திவைத்துப்பாடாநின்றுள்ள |
| அரக்கர் | ராக்ஷஸருடைய | தாரான் | திருத்துழாய் மாலையையுடையனான ஸர்வேஶ்வரன் எழுந்தருளியிருக்குமதாய் |
| தேர்வெள்ளம் | ரதஸமூஹங்களை | தாரா | தாரா என்னும் ஜலபக்ஷிகள்நிறைந்த |
| செற்றான் | சிந்நபிந்நமாம்படி பண்ணினவனாய் | வயல் | வயல்களாலே |
| வற்றா | வற்றுதலின்றிக்கே | சூழ்ந்த | சூழப்பட்ட |
| வரு | மேல்மேலும் வெள்ளமிடாநின்றுள்ள. | சாளக்கிராமம் | அடை நெஞ்சே! (ச) |

வ்யா.—நாலாம்பாட்டு. † அதுக்கும்முன்னே யுண்டான கரவத வ்ருத்தாந்தத்தைச் சொல்லுகிறது.

(ஊரான்) திருவூரகத்தைத் தனக்கிருப்பிடமாக வுடையவன். (குடந்தையுத்தமன்) † அவர்கள் † அபேக்ஷையின்றிக்கேயிருக்க ஆஶ்

அரு.—நாலாம்பாட்டு. (ஊரானித்யாதி). கீழ்ச்சொன்ன ராவணவதந் தான் வானரவீரர்களும் தாங்களுமாய்ச் செய்ததாகையாலே அதிலுமத்புததமமாகத்தனியே நின்று வென்ற வீரரஸந்தன்னை யநுஸந்திக்கிறாரென்று விவக்ஷித்து, "தேர்வெள்ளம்" என்ற பதத்திலே நோக்காக அவதாரிகை யருளிச்செய்கிறார், (அதுக்குமித்யாதி).

(அவர்கள்) திருக்குடந்தையிலுள்ளார். (அபேக்ஷை) ரக்ஷாபேக்ஷை.

அடுத்தார்த்தெழுந்தாள் பிலவாய்விட்டலறவவள் மூக்கயில்வாளால்
விடுத்தான் விளங்குசுடராழி விண்ணோர்பெருமான் நண்ணார்முன் [த்
கடுத்தார்த்தெழுந்தபெருமழையைக் கல்லொன்றேந்தியினநிரைக்கா
தடுத்தான் தடஞ்சூழ்ந் தழகாய சாளக் கிராம மடைநெஞ்சே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அடுத்து | கிட்டி | அயில் | கூர்மைபொருந்திய |
| ஆர்த்து | சப்தித்துக்கொண்டு | வாளால் | வாளாலே |
| எழுந்தாள் | கிளர்ந்தசூர்பணகையானவள் | விடுத்தான் | (இளையபெருமாளைக் கொண்டு), அறுத்தவனாய் |
| பிலம் | குஹைபோன்ற | | |
| வாய்விட்டு | வாயைத்திறந்து | விளங்கு | மிகவும் ப்ரகாசியாநின்றுள்ள |
| அலற | கூப்பிடும்படி | | |
| அவள் | அவளுடைய | சுடர் | ஒளியையுடைத்தான |
| மூக்கு | மூக்கை | | |

ரீதரக்ஷணத்துக்காகத் தானே திருக்குடந்தையிலே வந்து சாய்ந்தருளின நீர்மையிலேற்றத்தை யுடையவன். அன்றிக்கே, (திருக்குடந்தை - ஊரான் - உத்தமன்) என்றும் சொல்லவுமாம். (ஒருகால்) ஒருகால். (இருகால் சிலைவளைய) †வில்லிரண்டுகோடியும் வளையும்படியாக. †ராவணன் வணங்காமையாலே வில்லைவளைத்தான். (தேராவரக்கரித்யாதி) †"சக்ரவர்த்தித் திருமகனிறே நமக்கெதிரியாய் வருகிறான்" என்று மதிக்கவறியாத ராக்ஷஸருடைய தேர்வெள்ளத்தை அழியச் செய்தானுமிறே. (வற்றாவித்யாதி) நின்ற நீர் வற்றக்கடவதன்றிக்கே மேன்மேலே வாராநின்றுள்ள புனலையுடைத்தாயிருக்கிற திருப்பேரைத் தனக்கு வாஸஸ்தானமாகவுடையவன். (பேராயிரமுடையான்) தன்குண சேஷ்டிதங்களுக்கு வாசகமான அநேகம் திருநாமங்களையுடையவன்; †அந்நாம த்வாரா அநுபவிக்கும் வடிவைச்சொல்லுகிறது. (பிறங்கித்யாதி) நெருங்கியிருந்துள்ள சிறகையுடைத்தான வண்டுகளானவை மதுபானம்பண்ணி †அறையாநின்றுள்ள மாலையை யுடையவன். (தாராவித்யாதி) ஊரடங்கலும் மநுஷ்யர்குடியிருப்பு நெருங்கியிருக்குமாபோலே, தாராவாகிற பக்ஷிகளாலே நெருங்கியிருந்துள்ள வயலாலே சூழப்பட்டிருந்துள்ள சாளக்கிராமமடை நெஞ்சே! ... ... ... ... ... (௪)

"கால்" என்று - வில்லின் நுனியாய், அருளிச்செய்கிறார், (வில்லித்யாதி). (ராவணன்) என்றது - உபலக்ஷணமாய், (க) "நவமேஸ்ஸி நநமேயம்" என்னத்தக்க (ஷு)ராதிகளைச் சொல்லுகிறது. "தேரா" என்று - விசாரியாதவென்றாய் தாத்பர்யமருளிச்செய்கிறார், (சக்ரவர்த்தித்திருமகனிறேயித்யாதி). மேலுக்கவசாரிகை, (அந்நாமத்வாரேத்யாதி). (அறையாநின்றுள்ள) சப்தியாநின்றுள்ள. ... ... ... ... ... ... ... (௪)

(க) ரா - யு - ௩௬ - ௧௧.

| | | | |
|---|---|---|---|
| ஆழி | திருவாழியையுடையனாய் | நிரைக்கா | பசுக்களை ரக்ஷிக்கைக்காக |
| விண்ணோர் | நித்யஸூரிகளுக்கு | கல்ஒன்று | கோவர்த்தநம் என்னும் ஒருமலையை |
| பெருமான் | நிர்வாஹகனாய், [டே | | |
| கடுத்து | பெரியவேகத்தோ | ஏந்தி | தரித்து |
| ஆர்த்து | சப்தித்துக்கொண்டு | தடுத்தான் | மறுத்தவன் நித்யவாஸம்பண்ணுமதாய் |
| எழுந்த | தோற்றின | | |
| பெருமழையை | மஹாவர்ஷத்தை, | தடஞ்சூழ்ந்து | தடாகங்களாலே சூழ்ப்பட்டு |
| நண்ணார்முன் | எதிரிட்ட இந்த்ராதிகள் முன்னே | | |
| | | அழகாய | அழகாயிருந்துள்ள |
| இனம் | கூட்டமாயுள்ள | சாளக்கிராம மடநெஞ்சே! | (ரு) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. † அதுக்குமுன்னான சூர்ப்பணகை நிரஸநத்தை அருளிச்செய்கிறார்.

(அடுத்து) மேல்விழுந்துவந்துகிட்டி. (ஆர்த்தெழுந்தாள்) ஆரவாரத்தைப் பண்ணிக்கொண்டு † கிளர்ந்துவந்து தோற்றினவள், பிலம்போலேயிருக்கிற வாயைத்திறந்துகூப்பிட, அவளுடைய மூக்கை. (அயில்) கூர்மை-கூரிய §திருக்குற்றுடைவாளைவாங்கிப் போக்கினான். (விளங்கித்யாதி) கையும்திருவாழியுமான சேர்த்தியழகைக்காட்டி நித்யஸூரிகள் கார்யத்தை நிர்வஹித்துக்கொண்டு போருகிறவன், (நண்ணாரித்யாதி) † சத்ருக்கள் முன்பே, இந்த்ரனுடைய அபி

அரு.—அஞ்சாம்பாட்டு. (அடுத்தார்த்தித்யாதி). தேராவரக்கர் தேர் வெள்ளத்தை நிரஸிக்கைக்குக் காரணமென்னென்கிற சங்கைக்குப் பரிஹாரந் தோற்ற அவதாரிகையருளிச்செய்கிறார், (அதுக்கித்யாதி).

(கிளர்ந்துவந்து தோற்றினவள்) என்கையாலே-பிராட்டிபக்கல் அபசாரப்பட்டபடி தோற்றுகிறது. அவள் மூக்கைப்போக்கினவர் இளையபெருமாளேயாகிலும், (க) "ராமஸ்ய தக்ஷிணோபாஹு:" "ராமஸ்ய தக்ஷிணோபாஹு:" என்கிறபடியே அவயவபூதரானகையைப்பற்றப் பெருமாள் போக்கினாரென்னத் தட்டில்லை. இப்படி மஹர்ஷிகளுக்கு உபகாரகனானவளவன்றிக்கே ஜ்ஞாநாதிகரானஸூரிகளுக்கும் அஜ்ஞரான பசுக்களுக்கு முபகரிக்குமவனென்று திருவுள்ளத்தில் தோற்றி யருளிச்செய்கிறாரென்று "விளங்கு சுடர்" இத்யாதி பாட்டு சேஷத்துக்கவதாரிகை கண்டுகொள்வது. (சத்ருக்கள் முன்பே) என்றது - எதிரிட்டுவந்த இந்த்ராதிகள் முன்பேயென்றபடி. யத்வா, நந்தவ்ரஜத்திலுள்ளாரென்றாய், இந்த்ரனுக்குக்ரோதநீயத்வம் சொல்லவுமாம்.

§ குற்றுடைவாள் - சிறிதான அரையிலுள்ள கத்தி. குறு - உடைவாள்,
(க) ரா - யு - உஅ - உகி.

ரூ.—தாயாய் வந்த பேயுயிரும் தயிரும் விழுதும் முடனுண்ட
வாயான் தூய வரியுருவிற் குறளாய்ச் சென்று மாவலியை
ஏயா னிரப்ப மூவடிமண் ணின்றே தாவென் றுலகேழும்
தாயான் காயா மலர்வண்ணன் சாளக் கிராம மடைநெஞ்சே.

| பதம். | உரை. |
|---|---|
| தாயாய்வந்த | தாய்வடிவுகொண்டு வந்த |
| பேய் | பூதனையுடைய |
| உயிரும் | ப்ராணனையும் |
| தயிரும் | தயிரையும் |
| விழுதும் | வெண்ணெயையும் |
| உடன்உண்ட | ஒக்கஅமுதுசெய்த |
| வாயான் | திருப்பவளத்தையுடையனாய் |
| ஏயான் | யாசிக்கத்தகாததான் |
| தூய | பரிசுத்தமாய் |
| வரி | அழகாயிருந்துள்ள |
| உருவின் | ரூபத்தையுடைய |
| குறளாய் | வாமநனாய்க்கொண்டு |
| மாவலியை | மஹாபலிபக்கலிலே |
| சென்று | போய் |
| இன்றே | இப்போதே |
| மூவடிமண்தா என்று | மூன்றுஅடிநிலம் தரவேணுமென்று |
| இரப்ப | யாசிக்க, (அவன் நீர்வார்த்துத்தந்த உடனே) |
| உலகுஏழும் | ஏழுலோகங்களையும் |
| தாயான் | தாவி அளந்துகொண்டவனாய் |
| காயாமலர் | காயாம்பூப்போன்ற |
| வண்ணன் | திருநிறத்தையுடைய ஸர்வேஸ்வரன் நித்யவாஸம் பண்ணுகிற |
| சாளக்கிராமமடைநெஞ்சே! | |

ஸந்திபூர்வகமாக வருகிறதாகையாலே பெரிய †வேகத்தோடே கோஷித்துக்கொண்டு தோற்றின மஹாவர்ஷத்தைக் கோவர்த்தநகிரியைத்தரித்துப் பண்ணின உபகாரத்தையுமறியாதே ஸ்வரக்ஷணத்துக்குப்பரிகாரமுமில்லாத பசுக்களை நோக்குகைக்காகத் தடுத்தானாயிற்று. தடாகங்களாலே சூழப்பட்ட தர்சநீயமான. (ரு)

வ்யா.—ஆறும்பாட்டு. (தாயாயித்யாதி) தாய்வடிவைக்கொண்டுவந்த பூதனையுடைய உயிரையும், யசோதைப்பிராட்டியுடைய தயிரையும், வெண்ணெயையுமொக்க அமுதுசெய்த திருப்பவளத்தையுடையவன். † அநுகூலஸ்பர்சமுடைய த்ரவ்யமும் ப்ரதிகூல

"கடுத்து" என்றதினர்த்தம், (வேகத்தோடே) என்றது. "கடுகவர" என்னக்கடவதிறே. ... ... ... ... ... ... ... (ரு)

அரு.—ஆறும்பாட்டு. (தாயாயித்யாதி). பசுமேய்க்கும் பருவத்திற்செய்த கோவர்த்தநோத்தரணத்திலு மாஸ்சர்யாவஹமாகையாலே சைசவத்தில் சரிதத்தை யநுஸந்தித்துக்கொண்டு க்ருஷ்ணாவதாரத்தோடு§தோள் திண்டியான வாமந வ்ருத்தாந்தத்தை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

"தயிரும் விழுதும்" என்றது த்ருஷ்டாந்ததயா என்னுமது தோற்ற உட்கருத்தை யருளிச்செய்கிறார், (அநுகூலேத்யாதி). அநுகூலஸ்பர்சமுள்

§ தோள்திண்டியான - ஸமாநமான.

மூ.—ஏனோ ரஞ்ச வெஞ்சமத்து ளரியாய்ப் பரிய விரணியனை
ஊனா ரகலம் பிளவெடுத்த வொருவன் தானே யிருசுடராய்
வானாய்த் தீயாய் மாருதமாய் மலையா யலைநீ ருலகனைத்தும்
தானாய்த் தானு மானான்றன் சாளக் கிராம மடைநெஞ்சே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| ஏனோர் | சத்ருக்களான அஸுரர்கள் | ஊன் ஆர் | மாம்ஸம் நிறைந்த |
| அஞ்ச | பயப்படும்படியாக | அகலம் | மார்வை |
| வெம் | க்ரூரமான | பிளவு எடுத்த | கிழித்துப்பொகட்ட |
| சமத்துள் | யுத்தத்திலே [ண்டு | ஒருவன் | ஒப்பற்ற பலத்தையுடையனாய், |
| அரியாய் | நரஸிம்ஹமாய்க் கொ | தானே | இப்படிப்பட்டவன் தானே |
| பரிய | தடித்தசரீரத்தையுடையனான | இருசுடராய் | சந்த்ரஸூர்யர்களாயும் |
| இரணியனை | ஹிரண்யனுடைய | | |

ருடைய ப்ராணனு மொக்க தாரகமாகவளர்ந்தவன். (தூயவித்யாதி) † கண்ணழிவற்ற வாமநவேஷத்தையுடையனாய், † அம்புக்குச் செல்லாதவிடத்தை அழகாலே வசீகரிக்கும்படியான வாமநவேஷத்தையுடையனாய்க்கொண்டு சென்று. (ஏயானிரப்ப) (க) "గోసహస్రప్రదాతారం - கோஸஹஸ்ர ப்ரதாதாரம்" (உ) † "తద్యాఙ్నప్రతిగృహ్ణీయాత్ - தத்யாங்நப்ரதி க்ருஹ்ணீயாத்" என்று இரப்புத்தகாததான் சென்றிரக்க. (மாவலியையேயானிரப்ப) † "கொடேன்" என்றே அபிஸந்தி பண்ணியிருந்த அவன் பக்கலிலே இரப்பனென்னவுமாம். மூவடிமண் இப்போதே தரவேணுமென்று வேண்டிக்கொண்டு, அவனநுமதிபண்ணின வநந்தரம் மறுமநஸ்ஸூப்படுவதுக்குமுன்னே வளர்ந்து லோகங்களேழையு மளந்துகொண்டவன். (தாயான்) தாவினவன். (காயாமலர் வண்ணன்) அவ்வடிவைக்கொண்டாயிற்று பூமியை யளந்தது. ... ... ... (சு)

ளது தாரகமானாற்போலே ப்ரதிகூலருடைய ப்ராணனும் தாரகமாவதே என்று கருத்து. இத்தால், 'ப்ரதிகூல நிரஸநமிவனுக்கு ஜந்மஸித்தமென்றதாயிற்று. (கண்ணழிவற்ற) என்றதுக்கு விவரணம், (அம்புக்கித்யாதி). தூய-பரிசுத்தமான, வரி - அழகையுடைத்தான, உருவின் - ரூபத்தையுடைய, குறளாயென்று சப்தார்த்தம். (ஏயான்) ஏய்கை - பொருந்துகையாய், இரப்புப் பொருந்ாதவனென்றருளிச்செய்கிறார், (கோஸஹஸ்ரேத்யாதி). இப்பக்ஷத்தில், "மாவலியையேயானான தானிரப்ப, தூயவரியுருவிற் குறளாய்ச்சென்று மூவடிமண்ணின்றேதாவென் றுலகேழும்தாயான்" என்றந்வயம். அடைவே அந்வயமாய், "இரப்ப" என்றத்தை இரப்பனென்று உத்தமனாக்கி ஏகாரமவதாரணார்த்தமாக யோஜநாந்தரமருளிச்செய்கிறார், (கொடேனித்யாதி). (சு)

(க) ரா - யு - உக - எ. (உ) ரா - ஸு - ருரு - உசு.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வெந்தார் | தஹநம்பண்ணப் பட்டவர்களுடைய | சென்று | (ஸர்வேஶ்வரன்பக்கல்) போய் |
| என்பும் | எலும்பையும் | என்எந்தாய் | எனக்குஸ்வாமியான வனே! |
| சுடுநீறும் | (அந்த சரீரங்களைக்) கொளுத்தின சாம்பலையும் | சாபம் | இந்தசாபத்தை [ம் |
| | | தீர் | போக்கியருளவேணு |
| மெய்யில் | தன்னுடம்பில் | என்ன | என்றுப்ரார்த்திக்க, |
| பூசி | ஸம்பத்திப்பித்துக் கொண்டும், [ய் | இலங்கு | விளங்காநின்றுள்ள |
| | | திருமார்வில் | தன்திருமார்விலுண்டான |
| சந்துஆர் | துளைகளையுடைத்தா | | |
| ஓர் | ஒருவராலும்நிறைக்க வொண்ணாத | அமுதநீர் | அம்ருதஜலத்தை |
| | | தந்தான் | தெளித்துப்போக்கி னவன்நித்யவாஸம் பண்ணுமதாய் |
| தலை | ப்ரஹ்மகபாலத்தை | | |
| கையகத்து | கையிலே | | |
| கொண்டு | ஏந்திக்கொண்டு [ம் | சந்து | சந்தநவ்ருக்ஷங்கள் |
| உலகேழும் | ஸப்தலோகங் களிலு | ஆர் | நிறைந்த |
| திரியும் | திரியுமவனாய் | பொழில் | சோலைகளாலே [ன |
| பெரியோன்றான் | பெருமைபாவித்திருக்கும் ருத்ரன் | சூழ்ந்த | சூழப்பட்டிருப்பதா |

சாளக்கிராமமடைநெஞ்சே! (அ)

வ்யா.—எட்டாம்பாட்டு. (வெந்தாரென்பும்) வெந்தவர்களுடைய எலும்பும் அதுசுட்டசாம்பலும் உடம்பிலேபூசி; கையிலே, சந்துகளார்ந்திருந்துள்ள தலையைக்கொண்டு. † எல்லாநரம்புகளும் வந்துகூடின விடத்திலேயிறே சேதித்தது. (உலகித்யாதி)† கூறுசெய்தவளரிலே கையும் †கைத்தலையுமாய்த் திரிவாரைப்போலே, ஈஶ்வராபிமாநியாய்த் தன்னாஜ்ஞை நடத்திப்போந்த விடத்திலே கையுமோடுமாய்த் திரிந்த தார்மாநியானவன் சென்று "என் ஸ்வாமீ! என்னுடைய சாபத்தைப்போக்கவேணும்" என்ன. (திருமார்வில் -

அரு.—எட்டாம்பாட்டு. (வெந்தாரித்யாதி). கீழ்த்திருமொழியிலே (க) "ஊன்முனிந்தவன தடலிருபிளவா வுகிர்நுதிமடுத்து" என்று - அர்ப்பகனை ரக்ஷித்த ந்ருஸிம்ஹாபதாநாநந்தரம் அரன்சாபம் தவிர்த்தது ப்ரஸ்துதமான படியாலே, இங்கும் கீழ்ப்பாட்டில் நரஸிம்ஹாவதாரம் ப்ரஸ்துதமாகையாலே * வெந்திறற்சாபம் தவிர்த்தபடியை ஸவிஸ்தரமநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

சந்துகள் - நரம்புகள். தலையென்னவமைந்திருக்க "சந்தார்" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறுர், (எல்லாநரம்புகளுமித்யாதி). இத்தால், ப்ராணவியோகம்பிறக்கும்படி மர்மத்திலே சேதித்தாளுகையாலே தோஷாதிக்யம் விவக்ஷிதமென்று கருத்து. (கூறுசெய்த) - பங்காண்ட, (கைத்தலை) - கைவிலங்கு. ... ... ... ... ... ... (அ)

(க) க - ச - அ -

கூ. தொண்டாயினமு மிமையோரும் துணைநூல் மார்வி னந்தணரும்
அண்டா எமக்கேயருளாயென் றணையும் கோயி லருகெல்லாம்
வண்டார் பொழிலின் பழனத்து வயலி னயலே கயல்பாயத்
தண்டாமரைகள் முகமலர்த்தும்சாளக் கிராம மடைநெஞ்சே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தொண்டாம் இனமும் | அவனுக்கே எல்லா கைங்கர்யங்களும் செய்துபோரும் ஸ்ரீவைஷ்ணவர்களுடையதிரளும் | அருகெல்லாம் | ஸமீபஸ்தலங்களெங்கும் |
| | | வண்டு | வண்டுகளாலே |
| | | ஆர் | நெருங்கப்பட்டிருந்துள்ள |
| இமையோரும் | நித்யஸூரிகளும் [த | பொழிலின் | சோலையிலுண்டான |
| துணைநூல் | இரண்டு பூணூல்தரித் | பழனத்துஅயல் | நீர்நிலங்களின் சுற்றுப்புறத்திலுள்ள |
| மார்வின் | மார்பினையுடைய | | |
| அந்தணரும் | ப்ராஹ்மணரும் | வயலின் | வயலில்நின்றும் |
| அண்டா | அண்டங்களுக்கெல்லாம் நிர்வாஹகனானவனே! | கயல் | மத்ஸ்யங்களானவை |
| | | பாய | (அந்த நீர்நிலங்களிலே) பாய |
| எமக்கு | எங்கள்விஷயத்திலே | தண் | குளிர்ந்த [ளானவை |
| அருளாய் | க்ருபைசெய்தருளவேணும் | தாமரைகள் | தாமரைமொட்டுக்க |
| | | முகம்அலர்த்தும் | முகவிகாஸத்தையுடையா நின்றுள்ள |
| என்று | என்றுசொல்லி | | சாளக்கிராமமடைநெஞ்சே! (கூ) |
| அணையும் | ஆஸ்ரயிக்கிற | | |
| கோயில் | கோயிலினுடைய | | |

இலங்காமுதுநீர் - தந்தான்) விளங்காநின்றுள்ள திருமார்வில் அம்ருதரூபமான ஜலத்தைக்கொடுத்து அவனுடைய சாபமோக்ஷத்தைப் பண்ணினவன். (சந்தார்பொழில்) சந்தநத்தாலே நிறைந்தபொழிலாலே சூழப்பட்ட. ... ... ... ... (அ)

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (தொண்டாமினமும்) (க) "வழுவிலாவடிமை செய்யவேண்டு நாம்" என்றிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய திரளும், நித்ய ஸூரிகளும், கேவல ப்ராஹ்மணரும். (உ)† "[illegible] -வித்யா விநயஸம்பந்நே - ப்ராஹ்ம

அரு.—ஒன்பதாம்பாட்டு. (தொண்டாமித்யாதி) கீழ்ப்பாட்டுக்களெல்லாவற்றாலும் ராமக்ருஷ்ணாதிரூபேண அவதரித்துச்செய்தவற்றையெல்லாம் ஸ்ரீஸாளக்ராமத்திலே தர்மைக்யத்தாலே யநுபவித்தாராய், இனி ஸ்ரீஸாளக்ராமத்தையே ஸர்வருமாஸ்ரயிக்கும்படியைச் சொல்லுகிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

(க) "[illegible] - ப்ரஹ்மவித் ப்ராஹ்மண:" என்கிறந்யாயத்தாலே "தொண்டாமினமும்" என்கிற ஸாமாந்யோக்திக்குள்ளே அந்தணருக்கும் ப்ரவிஷ்டராயிருக்கத் தனித்தருளிச்செய்ததுக்கு த்ருஷ்டாந்த கதநமுகேன தாத்பர்யமருளிச்செய்கிறார், (வித்யேத்யாதி) "[illegible]

(க) திருவாய்-கூ-கூ-க. (உ) கீதை-இ-கஅ. (ரு)

ஆ—தாரா வாரும் வயல்சூழ்ந்த சாளக் கிராமத் தடிகளைக்
காரார் புறவின் மங்கைவேந்தன் கலிய னொலிசெய் தமிழ்மாலை
ஆரா ருலகத் தறிவுடையா ரமரர் நன்னாட் டரசாளப்
பேரா யிரமு மோதுமின்க ளன்றி யிவையே பிதற்றுமினே. ()

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உ.ை |
|---|---|---|---|
| உலகத்து | இந்தலோகத்திலே | பேர்ஆயிரமும் | (அவனுடைய)ஆயிரம் திருநாமங்களையும் |
| அறிவுடையார் ஆரார் | அறிவுண்டயவர்கள் எல்லாரும் | ஓதுமின்கள் | சொல்லப்பாருங்கள்; |
| அமரர் | நித்யஸூரிகளுடையதாய் [பதத்தை | அன்றி | அப்படி சொல்லமாட்டீராகில், [கள் |
| நல்நாடு | விலக்ஷணமான பரம | தாரா | தாரா என்னும் பக்ஷி |
| அரசாள | அரசாளும்படி | ஆரும் | நிறைந்த |

ணே" என்று பிரித்தாரிறேபாஷ்யகாரர். (அண்டா) † தேவனே, எங்களுக்காஶ்ரயணீயனானவனே! †எங்களுக்கருளவேணும் என்று தனித்தனியே சொல்லாநின்றுகொண்டு சேருகிற கோயிலருகெல்லாம். (வண்டாரித்யாதி) வண்டுகளாலே † மிடையப்பட்டுள்ள பொழிலிலுண்டான, பழனமுண்டு - நீர்நிலங்கள், அதினுடைய ‡ பர்யந்தங்களிலுண்டான வயலிலேநின்று கயலானது நீர்நிலங்களிலே வந்துபாய. (தண்டாமரைகள் - முகமலர்த்தும்) † கூத்தாடுமவர்கள் வாய்க்க அடியிட்டால் ஸதஸ்யராயிருப்பார் தம்முகவிகாஸத்தாலே கொண்டாடுமாபோலே, தாமரைகள் முகமலர்த்துமாயிற்று. ... (கூ)

బ్రాహ్మణే గవిహస్తిని । శునిచైవశ్వపాకేచ పణ్డితాస్సమదర్శినః - வித்யாவிநயஸம்பந்நேப்ராஹ்மணேஹ கவிஹஸ்திநி | சுநிசைவஶ்வபாகேச பண்டிதாஸ்ஸமதர்ஶிநஃ" என்கிற வசநத்தில் "విద్యావినయసంపన్న కేవల బ్రాహ్మణగోహ స్తిశ్వశ్వపాకాదిషు - வித்யாவிநயஸம்பந்ந கேவலப்ராஹ்மண கோஹஸ்திஶ்வஶ்வபாகாதிஷு" என்று வித்யாவிநயஸம்பந்நன் தொண்டுபடுகைக்கு ஹேது - ஜ்ஞாநாதிகனென்றும், நூலையே துணையாகவுடைய த்விஜனைக் கேவல ப்ராஹ்மணனென்றும் பிரித்தருளிச்செய்தாரென்றும் உட்கருத்து; கவாதிபதங்களிலே விசேஷணமிடாமையாலும், வித்யாவிநயஸம்பந்நே" என்றதுக்கு ப்ரதிகோடி சொல்லவேண்டுகையாலும் பிரித்தாரென்று கண்டுகொள்வது, அண்டத்தை - ஆகாசத்தை, உடையவன், அண்டனென்றாய், பலிதார்த்தம். (தேவனே) என்று, "எமக்கு" என்றபதத்தை, "அண்டா" என்றவிடத்தில் அநுஷங்கித்து, அத்தால் பலிதமருளிச்செய்கிறார், (எங்களுக்கித்யாதி). (மிடைய) - நெருங்க. "அயலேயானவயல்" என்றந்வயித்து (பர்யந்தங்களிலுண்டான) என்றது. வண்டுகள் கா(ஈ)யகராகவும், கயல்கள் நர்த்தகராகவும் கமலங்கள் கண்டுகக்குமவர்களாகவும் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார், (கூத்தாடுமவர்களித்யாதி). ... ... ... ... (கூ)

| | | | |
|---|---|---|---|
| வயல் | வயல்களாலே | வேந்தன் | அரசனான |
| சூழ்ந்த | சூழப்பட்ட | கலியன் | ஆழ்வார் [படி |
| சாளக்கிராமத்து | ஸ்ரீஸாளக்ராமத்திலேவர்த்திகிட்டிநிற்கிற [மாக | ஒலி | ஒலியையுடைத்தாம் |
| அடிகளை | ஸர்வஸ்வாமி விஷய | செய் | அருளிச்செய்த |
| கார்ஆர் | மேகங்கள்நிறைந்திருந்துள்ள | தமிழ்மாலை இவையே | த்ராவிடசப்தஸந்தர்ப்பரூபமான இப்பத்துப்பாட்டையே |
| புறவின் | சூழலையுடைய | பிதற்றுமின் | அடைவுகெடச்சொல்லப்பாருங்கோள். |
| மங்கை | திருமங்கைநாட்டுக்கு | | |

வ்யா. — பத்தாம்பாட்டு. (தாராவித்யாதி) † தாராக்களாலே நிறைந்திருந்துள்ள வயல்சூழ்ந்த ஸ்ரீ ஸாளக்ராமத்திலேவந்து ஸந்நிஹிதனான ஸர்வஸ்வாமியைக் கவிபாடிற்று. (கார்ரித்யாதி) மேகங்களையுடைய † கிரந்தரஸஞ்சாரத்தையுடைத்தான பர்யந்தத்தையுடைய திருமங்கைக்கு ராஜாவான ஆழ்வார். ஒலியுடைத்தாம்படியாகச் சொன்னதொடை. (ஆராருலகத்தறிவுடையார்) லோகத்தில் அறிவுடையராயிருப்பாரார்; நித்யஸூரிகளுடைய நல்நாடு - பரமபதம், அத்தை, (க) "ஆண்மின்கள் வானகம்" † என்கிறபடியே தாங்களிட்ட வழக்காம்படி நடத்த, ஆயிரம் திருநாமங்களையும் வாயாலே சொல்லப்பாருங்கோள்; அங்ஙனன்றிக்கே, (இவையே பிதற்றுமினே) இவற்றையே அடைவுகெடச்சொல்லப்பாருங்கோள். (உ) † "ஸங்கீர்த்தயேஜ்ஜகந்நாதம் வேதம் வாபிஸமீரயேத்" -ஸங்கீர்த்தயேஜ்ஜகந்நாதம் வேதம் வாபிஸமீரயேத்". (கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு. (தாராவித்யாதி) தொண்டாமினம் முதலானோர் வர்த்திக்கை ஆஸ்சர்யமல்லாமையாலே, பக்ஷிவிசேஷங்கள் திவ்யதேசத்தைப் பற்றிக் கிடப்பதே என்று ஈடுபட்டு விசேஷிக்கிறாரென்று திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளிச்செய்கிறார். (தாராக்களாலேயித்யாதி). ஸமுத்ரதீரமாகையாலே (நிரந்தர ஸஞ்சாரத்தை) என்றது. இத்தால், பரமோதாரரான ஸ்ரீமஹாபாகவதர்வர்த்திக்கும் தேசத்தில் வர்த்திக்குமவரென்று ஆப்ததமத்வம் ஸூசிதமாயிற்று. (என்கிறபடியே) என்றவநந்தரம், "அவர்கள்தான்" என்றுசேஷம்; அங்ஙனன்றிக்கே, கீழ் - (அத்தை) என்றதுக்கு அந்வயமில்லை. ஆயிரந்திருநாமங்களைச் சொல்லுங்கோள், கூடாவிட்டால் இப்பத்துப்பாட்டையும் சொல்லுங்கோளென்றாற்போலே சொன்னவிடமுண்டோவென்ன; அருளிச்செய்கிறார், (ஸங்கீர்த்தயேதித்யாதி). ... ... ... ... ... (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்.

முதற்பத்தில் ஏழாந்திருமொழி முடிந்தது.

---

(க) திருவாய் - கo - கூ - க. (உ)

## ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து - ஆறாந்திருமொழி - வாணிலா.

மூ.—வாணிலா முறுவல் சிறுநுதல் பெருந்தோள்
மாதரார் வனமுலைப் பயனே
பேணினே னதனைப் பிழையெனக் கருதிப்
பேதையேன் பிறவி நோ யறுப்பான்
ஏணிலே னிருந்தே னெண்ணினே னெண்ணி
இளையவர் கலவியின் திறத்தை
நாணினேன் வந்துன் திருவடி யடைந்தேன்
நைமிசா ரணியத்து ளெந்தாய். (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நைமிசாரணியத்துள் | நைமிசாரண்யத்திலெழுந்தருளியிருக்கிற | கருதி | நினைத்து [இவை |
| எந்தாய் | என்ஸ்வாமீ! [இற | பிறவிநோய் | ஸம்ஸாரமாகிறவ்யா |
| வாள்நிலா | ஒளிபொருந்தியிருக் | அறுப்பான் | போக்கிக்கொள்ளுகைக்காக |
| முறுவல் | மந்தஹாஸத்தையும் | ஏணிலேன் இருந்தேன் | எண்ணாதிருந்தேன்; |
| சிறுநுதல் | சிறியநெற்றியையும் | எண்ணினேன் | (இதற்குமுன்பு) நின்றநிலையை யாராய்ந்தேன்; [து |
| பெரு | பெருத்த | எண்ணி | (இப்படி) அநுஸந்தித் |
| தோள் | தோள்களையுமுடையரான | இளையவர் | யுவதிகளுடைய |
| மாதரார் | ஸ்த்ரீகளுடைய | கலவியின் திறத்தை | ஸம்ஶ்லேஷவிஷயத்தை |
| வனம் | அழகிய | நாணினேன் | லஜ்ஜித்தேன் |
| முலையே | ஸ்தநங்களையே | நாணி | லஜ்ஜித்தவனாய் |
| பயன் | பரமப்ரயோஜநமாக | உன் | உன்னுடைய |
| பேணினேன் | ஆதரித்துக்கொண்டு போந்தேன்; | திருவடி | திருவடிகளை |
| பேதையேன் | அறிவுகேடனான நான் | வந்து | கிட்டி |
| அதனை | அத்தை | அடைந்தேன் | சரணமபுகுந்தேன். |
| பிழையென | தப்பென்று | | |

வ்யா.—வாணிலாமுறுவல்ப்ரவேசம்.—† திருவுள்ளத்தைக்குறித்து, "உகந்தருளின நிலங்களை ஆஶ்ரயி" என்று பலகாலும் சொல்லிக்கொண்டு போந்தார் கீழ்; அதுவும் அப்படியே செய்வதாக வொருப்பட்டது; அநந்தரம், தாம் தம்முடைய நிகர்ஷத்தை யநு

அநு.—வாணிலாமுறுவல் ப்ரவேசம்,—கீழஞ்சு திருமொழிகளாலும் மந்த்ரமந்த்ரார்த்தங்களை லபித்த ஆழ்வார், தன்னெஞ்சும் தம்மோடொருமிடறானவாறே மந்த்ரவிவரணமானத்வயத்தில் பூர்வகண்டார்த்தாநுஷ்டாநம்பண்ணுகிறார் என்று ஸங்கதிதோற்ற வருளிச்செய்கிறார், (திருவுள்ளத்தையித்யாதி).

[illegible] தம்முடைய பூர்வவ்ருத்தத்தையும், விஷய்ப்ராவண்யத் [illegible], ஆர்த்தவிஷயத்தில் "ஐயோ!" என்னுதே போந்தபடி [illegible], பரஹிம்ஸையே யாத்ரையாய்ப் போந்தபடியையும், இவற் [illegible] முன்னிட்டு, (க) "[illegible] ராவணோ நாம [illegible]" என்று ஸ்ரீ விபீஷணுழ்வான் ஆகாசத்திலே நின்று [illegible]ஷத்தைச்சொல்லி சரணம் புக்காற்போலே, இவரும் தம் [illegible] அநந்யகதித்வத்தை விண்ணப்பம்செய்து திரு நைமிசா [illegible]த்திலே நிற்கிற ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே †பெரிய பிராட் [illegible] முன்னிலையாகச் சரணம்புகுகிறார்.

[illegible]ற்பாட்டு. (வாணிலா முறுவல் சிறுநுதல் பெருந்தோள் [illegible] வனமுலைப் பயனே பேணினேன்) இது என்னுடைய பூர்வ [illegible] இருந்தபடி என்கிறார். † விஹிதங்களை யநுஷ்டித்து சம [illegible]ாத்மகுணோபேதராயிருப்பாரிறே † இதுக்கதிகாரிகள், அதில் [illegible] செய்துநின்ற நிலை இதுவென்கிறார்.

(வாணிலாமுறுவல்) ஒளியானது நிலாவாநின்றுள்ள - வர்த் [illegible]ன்றுள்ள, முறுவலென்னுதல்; அன்றிக்கே, ஒளியானது [illegible]லக்காணுருடைய நெஞ்சுவிட்டுப் போகாதே வர்த்தியாநின்று [illegible] முறுவலென்னுதல். நுதல்-நெற்றி; அதுவும் சிறுத்திருக்கை; [illegible]லையாகில் பும்ஸ்த்வகந்தியாயிருக்குமிறே. (பெருந்தோள்) போக் [illegible] வல்லாதபடி போக்யதை கரைபுரண்டதோள். (மாதரா [illegible]) † ஒளிநிலாவாநின்றுள்ள முறுவலையும் அளவுபட்டநுதலை [illegible]ாதப்ரகர்ஷத்தையுடைத்தான தோள்களையுமுடையரான [illegible]ருடைய † ஸந்நிவேசத்தழகை யுடைத்தாயிருக்கிற மாம்ஸ

(உ) "தேனுடைக்கமலத் திருவினுக்கரசே" என்றத்தைப்பற்ற (பெரிய [illegible] முன்னிலையாக) என்றது.

[illegible]ற்பாட்டு. (வாணிலாவித்யாதி) ப்ரபத்தி ஸர்வாதிகாரமன்றோ, [illegible]த்தை யநுஸந்தித்து அநுதப்தஹ்ருதயராய் அவற்றையெல் [illegible] வந்தாஶ்ரயிக்கவேணுமோவென்ன; அருளிச்செய்கிறார், (விஹிதங் [illegible]யாதி) வாக்யத்வயத்தாலே). பூர்வவ்ருத்தம் ப்ரபத்திக்கு விரோதியெ [illegible]த்தாரல்லர், ஸாதநாந்தரங்களுக்கு விருத்தங்களைச்செய்து போந் [illegible]யாலே உபாயாந்தர சூந்யனென்று தம்முடைய அநந்யகதித்வத்தை [illegible]ரென்று கருத்து. (இதுக்கு) என்றது - இந்தபகவத்விஷயத்தில் [illegible]கிறதுக்கென்கை. அதாவது - பக்தியென்றபடி.

[illegible] சிலபதங்களுக் கர்த்தமருளிச்செய்து, வாக்யார்த்தமருளிச்செய்கி [illegible], (ஒளியித்யாதி). "ஒணம்" என்றதினர்த்தம், (ஸந்நிவேசத்தழகு)என்றது.

(க) ரா-யு-கஎ-கஉ. (உ) க-கூ-கூ.




க்ரந்தியையே ப்ரயோஜநமாக ஆதரித்துக்கொடுபோந்தேன். (பயனே பேணினேன்) † அவ்வருகில் அத்ருஷ்டமாகவும் நினைத்திருப்பது இது தன்னையேயாயிற்று. † தங்களுடைய அவயவசோபையாலே இவனை யகப்படுத்தி, இவன் கையிலுள்ள ஸர்வஸ்வத்தையு மபஹரித்து "இவனகப்பட்டான்" என்றறிந்தவாறே பின்னை இவன் நினைத்தபடி தங்களைக்கொடுக்கக்கடவரல்லாத ஸ்த்ரீகளுடைய மாம்ஸக்ரந்தியையே ப்ரயோஜநமென்று ப்ரமித்து ஆதரித்துப் போரப் பேணினேன். † அது தன்னில் அநுபாவ்ய மொன்றில்லையே; அதிலே † குவாலுண்டாக நினைத்து ஆதரிக்கிற இவன் ப்ரமமே யிறேயுள்ளது. (அதனைப்பிழையெனக்கருதி) இப்படி நெடுநாளா தரத்துக்கு விஷயமாய்ப்போந்தது இன்றாகப்பிழை என்று நெஞ்சிலே பட்டது; † விஷயப்ரவணனானவன் "நீ அவற்றை விடு" என்றால் விடானிறே; † இவர்க்கிப்போது இவைதன்னை விடுகைக்கு † உவாத்து இவைதானேயாயிற்று. அதாகிறது - அவர்களுடைய அநாத்மகுணங்களை அநுஸந்தித்தவாறே கடுகவிட்டுக்கொடு நிற்கலாமிறே. இன்று தப்பென்றுவிட்டுக்கொடு நிற்கவேண்டியவற்றையாயிற்று நெடுநாள் ப்ரயோஜநமாக புத்திபண்ணிப்போந்தது. (பேதையேன்) இன்று பிழையென்று கைவிடவேண்டியதொன்றை இத்தை அநாதிகால மாதரித்துப்போரவேண்டின ஹேதுவென்னென்ன; (பேதையேன்) அறிவுகேடு எத்தைப்பண்ணாதுகாண்.

(பிறவியித்யாதி) † இப்படி யறிவுகேடனாகையாலே "ஸம்ஸாரமாகிறது அல்பம், அஸ்த்திரம், து:க்காவஹம், ஆனபின்பு இத்தைத் தவிர்த்துக் கொள்ளவேணும்" என்னும் மநோரதத்தை யுடையே

---

"பயனே" என்றவிடத்தில் ஏகாரத்தை "மூலை" என்றவிடத்திலே நீயேயருளிச்செய்து, "பயனே" என்றவிடத்திலேதானேயாக்கி அத்ருஷ்டம் வ்யாவர்த்யமாக அர்த்தாந்தரமருளிச்செய்கிறார், (அவ்வருகிலித்யாதி). முதல்யோஜனைக்கு விவரணம், (தங்களுடையவித்யாதி). அது போக்யமாயன்றோவிருப்பது, ப்ரமித்தேனென்பானென்னென்ன; அருளிச்செய்கிறார், (அது தன்னிலித்யாதி வாக்யத்வயத்தாலே). (குவால்) ஆதிக்யம். இன்றுபிழையென்று கருதுகிறவர், அப்போது ஆதரிப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார், (விஷயப்ரவணனானவனித்யாதி). அன்றுசொன்னாலும் விடாதவர் இப்போது பிழையென்று கருதுகைக்கு ஹேதுவேதென்ன; அருளிச்செய்கிறார் (இவர்க்கித்யாதி). (உவாத்து) - உபாத்யாயன்.

"பேதையேன்" என்றது-கீழுக்கும் ஹேதுவானவளவன்றிக்கே, மேலுக்கும் ஹேதுவென்னுநின்றுகொண்டு தாத்பர்யமருளிச்செய்கிறார், (இப்படியித்யாதி). "சேண்" என்றாற்போலே "ஏண்" என்று உயர்த்தியாய் அநுகூல

காண் றிக்கே யிருந்தேன். (ஏணிலேன்) † இத்தைத்தவிர்த்துக் கொள்ளுகைக்கீடான உயர்த்தியை யுடையேனல்லேனென்னுதல். (இருந்தேன்) "நன்று" என்றநுஸந்தித்துப் போந்தவித்தைத் "தண்ணிது" என்றாவிட்டாரே, அநந்தரம் உத்தேஶ்யபூமியிலேபோய்ப் புகப்பெற்றிலரோ, நடுவில் நிலையையாயிற்று இருந்தேனென்கிறது. (க) "ஓடினேன்" என்றவிவர் இருக்கைக்கவகாசமில்லை. (உ)"ஸ்ஸ ஏவ வ்யதிஷ்டத" "கஸ்த்த ஏவவ்யதிஷ்டத" என்னுமாபோலே. (எண்ணினேன்) "நாம் முன்புசெய்து போந்ததென், நாம்தாமார், இனிச்செய்யவர் த்திக்கவடிப்பதென்" என்று ஆராயத்துடங்கினேன்.

(எண்ணி) இப்படிஅநுஸந்தித்து. (இளையவர் கலவியின் திறத்தை நாணினேன்) தங்கள் பருவத்தாலே இதினுடைய தண்மை நெஞ்சிற்படாதபடியாக மறைத்துக் கொடுபோருகிறவர்களுடைய கலவி † யிடையாட்டத்தை இப்போது லஜ்ஜித்தேன். † ஆண்பிள்ளைச்சோறுள்வியை ஸ்த்ரீயென்று பின்தொடருமாபோலே யிருப்பதொன்றிறே சப்தாதிவிஷயங்களிலே போக்யதாபுத்தி பண்ணிப் பின்தொடருகையாகிறவிது. வெளிச்செறிப்புப்பிறந்தவநந்தரம் லஜ்ஜித்துக் கைவாங்கவேண்டுமத்தையிறே நெடுநாள் ஆதரித்துப் போந்தது. (வந்துன்திருவடியடைந்தேன்) நெடுநாள் ப்ரயோஜநம் என்றாதரித்து ஒருநாளாக லஜ்ஜித்துக் கைவாங்கவேண்டும்படியன்றிக்கே, என்றுமொக்க ப்ரயோஜநரூபமான திருவடிகளிலே வந்து சரணம்புகுந்தேன். (நைமிசாரண்ணியத்துள் எந்தாய்) அவன் பக்கல் ப்ரயோஜநமுள்ளன வாங்கிப் பின்னைக் கைவிடுமாகில் இவனுக்கல்லாதாரில் வாசியில்லையிறே, அங்ஙனன்றிக்கே நிருபாதிகபந்துவாய் ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய் வகுத்தஸ்வாமியாய்,

---

யுருத்தியால்வந்த உயர்த்தியைச் சொல்லுகிறதென்கிறார், (இத்தையித்யாதி). "இருந்தேன்" என்றதுக்கு-அங்குமன்றிக்கே இங்குமன்றிக்கே யிருந்தேனென்று விஷாதத்திலேயாக்கிக் கீழருளிச்செய்து, பிழையெனக் கருதியிருந்தேன் - நிர்ப்பரனாயிருந்தேனென்னும் தாத்பர்யாந்தரத்தை யருளிச்செய்கிறார், (ஓடினேனித்யாதி). முந்தின அர்த்தத்துக்கு த்ருஷ்டாந்தம், (கஸ்தஇத்யாதி).

(இடையாட்டத்தை) என்றவநந்தரம், "கண்டு" என்றுசேஷம். நாணுகைக்கு ஹேதுவென்னென்ன; அருளிச்செய்கிறார், (ஆண்பிள்ளையித்யாதி). (சோறுள்வி) - சோற்றுக்கு நிர்வாஹகை; சோறாக்குகிறவளென்றபடி. (ஆண்பிள்ளைச்சோறுள்வி) என்றது-ஸ்த்ரீவேஷங்கொண்ட புருஷனென்றபடி. [பயனே பேணினேன், பேதையேன்பிறவிநோயறுப்பானேணிலேன் - அதனைப் பிழையெனக்கருதி - இருந்தேன், எண்ணினேன், எண்ணி-எந்தாய்] என்றந்வயம். ... ... ... ... ... ... (க)

---

(க) க - க - க. (உ) ரா - யு - ௧௭ - அ.

மூ.—சிலம்படியுருவில் கருநெடுங் கண்ணார்
திறத்தனா யறத்தையே மறந்து
புலன்படிந் துண்ணும் போகமே பெருக்கிப்
போக்கினேன் பொழுதினை வாளா
அலம்புரி தடக்கை யாயனே மாயா
வானவர்க் கரசனே வானோர்
நலம்புரிந் திறைஞ்சும் திருவடி யடைந்தேன்
நைமிசா ரணியத் துளெந்தாய். (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நைமிசாரணியத் | துளெந்தாய்! | போக்கினேன் | கழித்துவிட்டேன்; |
| சிலம்பு | சிலம்பையணிந்து | அலம்புரி | கலப்பையாகிற ஆயுதம்தரித்த |
| உருவில் | அழகாயிருந்துள்ள | தடம் | பரந்த [ளாய் |
| அடி | பாதங்களையும் | கை | திருக்கைகளையுடைய |
| கருநெடு | கறுத்துநீண்ட | ஆயனே | இடைச்சாதியில் திருவவதரித்தவனே! |
| கண்ணார்திறத்தனாய் | கண்களையுமுடைய ஸ்த்ரீகள்பக்கலிலே ஆஸக்தனாய் | மாயா | ஆஸ்சர்யச்செய்கையுடையவனே! |
| அறத்தை | தர்மரூபியான உன்னை [ல் | வானவர்க்கு | தேவர்களுக்கு |
| மறந்தே | சற்றேனும்நினையாம | அரசனே | தலைவனானவனே! |
| புலன் | இந்த்ரியங்கள் | வானோர் | நித்யஸூரிகள் |
| படிந்து | பொருந்தி | நலம்புரிந்து | அன்பையுடையராய்க்கொண்டு |
| உண்ணும் | அநுபவிக்கிற | இறைஞ்சும் | ஆஸ்ரயியாநின்றுள்ள |
| போகமே | போகத்தையே | திருவடி | (தேவர்) திருவடிகளை |
| பெருக்கி | மேன்மேல் பெருகச் செய்து | அடைந்தேன் | அடைக்கலமாகக்கிட்டினேன். (உ) |
| பொழுதினை | காலத்தை | | |
| வாளா | வ்யர்த்தமாக | | |

இவன்றான் நெடுநாளை யிழவையநுஸந்தித்து வெறுத்தால், "பிழை புகுந்ததாகில் அதுக்குப் பரிஹரிக்கைக்கு நானிருந்தேன், செய்யலாவதுண்டோ!" என்றெடுத்து முகத்தைத்துடைத்துக் குளிர முகந்தருமவனாயிருந்தான். ... ... ... (க)

வ்யா.—இரண்டாம்பாட்டு. † திருவடிகளிலே விழுந்து சரணம் புக்கவாறே முன்புதாம் செய்துபோந்தபடிகளடங்கலும் தோன்றிற்று; அத்தாலே, "போக்கினேன் பொழுதினை †வாளா" என்கிறார்.

அரு.—இரண்டாம்பாட்டு. (சிலம்படியித்யாதி). கீழ்ப்பாட்டிலே அவன் திருவடிகளிலே விழுந்தபடியை அநுஸந்தித்தவாறே, முன்பு விஷயாந்தரங்களிலே விழும்படிகள் தோற்றி அத்தை யநுஸந்தித்து அநுதபிக்கிறாரென்று ஸங்கதியருளிச்செய்கிறார், (திருவடிகளிலேயித்யாதி). (வாளா) வ்யர்த்தமாக

(சிலம்படி) சிலம்பையுடைய அடியாயிற்று. (உருவில்) † அது தன்னிலே செம்பஞ்சையு மிட்டுவைப்பர்களாயிற்று இவனைத் தாமக்குகைக்காக. (கருநெடுங்கண்ணார்) கறுத்துப் பரப்பை யுடைத்தாயிருந்துள்ள கண்களாலே நோக்குவர்களிவனே; † இவன் இதிலே அவக்குண்டு காலிலே விழுந்து பின்னை அவர்கள் தங்களைவிட்டு அவர்களுடைய கதா (६ दृ) கந்த (४६) முள்ளதேசத்திலே † அணுவாய்த்துத் திரியுமாயிற்று. (அறத்தையேமறந்து) † ஸ்த்ரீகளுக்கு வழிபறித்திடுமது மறக்கவொண்ணுதே; தன்னுடைய உஜ்ஜீவநத்துக்கு உபாயமானத்தையேயாயிற்று வருந்தி மறப்பது. (புலனித்யாதி) † கொண்டி திரியும் பசுப்போலே இந்த்ரியங்கள் தான் விஷயங்களிலே மண்டியாயிற்றிருப்பது முதல் தன்னிலே; அதுக்குமேலே விஷயஸந்நிதியுள்ள விடத்திலே வர்த்தித்து, இந்த்ரியங்களுக்கு விஷயங்களிலே போக்யதாபுத்தியைப் பிறப்பித்து, அவை அவற்றிலே மேல்விழுந்து புஜிக்கும்படி அத்தால் வந்த போகத்தையே பெருக்கி. (போக்கினேன்) † பகவத் விஷயத்திலே அடிக்கழஞ்சுபெற்றுச் செல்லக்கடவகாலத்தை வ்யர்த்தமேபோக்கினேன்.

(அலம்புரிதடக்கை யாயனே) இவன்கையிலுள்ளத்தை அபஹரிக்கை யன்றிக்கே, இவனுக்கு "அமையும்" என்னும்படி ஸர்வஸ்வத்தையும் கொடுக்குமவனாயிற்று. அலமென்னக்கொடுக்கும் தடக்கையையுடையவனென்னுதல். அலமென்றது - ஹலமென்றபடியாய், கலப்பையைத் தரித்த திருக்கையை யுடையவனென்னுதல். (மாயா) இவன் ஒருநாள் திருவடிகளிலே விழுந்தால் பின்னை இவனுடைய கெடுநாளை யிழவு மறக்கும்படி முகங்கொடுக்கும்படிக்கடியான ஆஸ்சர்யகுணசேஷ்டிதங்களை யுடையவனே! (வானவர்க்கரசனே)

---

"உரு" என்று அழகாய், லாக்ஷாரஸத்தால் வந்த வழகைச்சொல்லுகிறதென்கிறூர், (அதித்யாதி). சிலம்படியில்விழுகைக்கு ஹேது கண்ணழகென்று விவக்ஷித்து, அதுக்கும் "திறத்தனாய்" என்றதுக்கும் தாத்பர்ய மருளிச்செய்கிறூர், (இவனித்யாதி). (அணுவாய்க்கை) அதுவேபோதுபோக்காகை. அது வெகாலக்ஷேபமாயென்றபடி. "அறத்தையே" என்ற ஏவகாரதாத்பர்ய கதநமேக தாத்பர்ய மருளிச்செய்கிறூர், (ஸ்த்ரீகளுக்கித்யாதி). "போகமே பெருக்கி" என்னவமைந்திருக்க, "புலன்படிந்துண்ணும்" என்றுவிசேஷித்ததுக்குக் கருத்தருளிச்செய்கிறூர், (கொண்டிதிரியுமித்யாதி). கொண்டி திரிகை - பட்டிமேய்கை. "போகமே" என்ற ஏவகாரதாத்பர்ய..., (பகவத்விஷயத்திலேயித்யாதி).

(உ)

மூ.—சூதினைப் பெருக்கிக் களவினைத் துணிந்து
சுரிகுழல் மடந்தையர் திறத்துக்
காதலே மிகுத்துக் கண்டவா திரிந்த
தொண்டனேன் நமன்றமர் செய்யும்
வேதனைக் கொடுங்கி நடுங்கினேன் வேலை
வெண்டிரை யலமரக் கடைந்த
நாதனே வந்துன் திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வெள் | வெளுத்த | காதல்மிகுத்து | மிகுந்த ஆசையையுடையனாய் |
| திரை | அலைகளையுடைய | கண்டஆ | கண்ணுக்குத்தோற்றின விஷயங்களிலே |
| வேலை | திருப்பாற்கடலை | திரிந்த | யதேச்சமாகநடந்து |
| அலமர | கலங்கும்படி | தொண்டனேன் | (அவர்களுக்கு) பரிசர்யைபண்ணிப்போந்தநான் |
| கடைந்த | ..நம்பண்ணின | | |
| நாதனே | ஸ்வாமியே! | | |
| நைமிசாரணியத்துள் | நைமிசாரண்யத்தில் (வந்து) [னவனே! | | |
| எந்தாய்! | எனக்கு உபகாரகனு | நமன்தமர் | யமபடரானவர்கள் |
| சூதினைப்பெருக்கி | ..ருக்கச்சூதாடியும் | செய்யும் | பண்ணுகிற [து |
| | | வேதனைக்கு | ஹிம்ஸையினைத் |
| களவினைத்துணிந்து | ..வுகா.. அதயவஸித்தும் | ஒடுங்கி | அவயவங்களெல்லாம் தம்தம்நிலைகுலைந்து |
| சுரி | சுருண்ட | நடுங்கினேன் | நடுங்கினவனாய் [லே |
| குழல் | மயிர்முடியையுடைய | உன்திருவடி | தேவரீர்திருவடிகளி |
| மடந்தையர்திறத்து | ஸ்த்ரீவர்க்கங்களிலே | வந்து அடைந்தேன். | வந்து சரணம்புகுந்தேன். (ரு) |

ப்ரஹ்மாதிகளுக்காஸ்ரயணீயனாயுள்ளவனே! (வானோரித்யாதி) நித்யாநுபவம்பண்ணுகிற நித்யஸூரிகள், இதுக்கு முன்பொருநாளும் கண்டறியாதாப்போலே யிருக்க ஸ்நேஹத்தைச்செய்து ஆஸ்ரயியாநின்றுள்ள திருவடிகளிலே வந்து சரணம்புகுந்தேன். (நைமிசாரணியத்துளெந்தாய்) பரமபதத்திலே நித்யஸூரிகளுக்கநுபாவ்யனாய்க்கொண்டு அவர்களுக்கு ஓலக்கம் கொடுத்துக்கொண்டிருக்கக்கடவ நீ எனக்கு உன் திருவடிகளிலே வந்து சரணம் புகலாம்படி ஸங்கிஹித னானையாலே சரணம்புகுந்தேன். ... (உ)

அரு.—மூன்றும்பாட்டு. (சூதினையித்யாதி.) கீழ்ப்பாட்டிலே கண்ணழகுக்குத் தோற்றுக்காலிலே விழுந்து அவர்கள் நெஞ்சுருகாவிட்டாலும் அவர்கள் கதா (ஞ) ஸம்பந்தமுள்ள தேசத்தை விரும்பி ததுபாய சிந்தை பண்ணி த்ரவ்யார்ஜநமுகேந அவர்களைக் கிட்டி போகத்தைப் பெருக்கினபடியைச் சொல்லி, "வாளா" என்றருளிச்செய்தார், இதில் த்ரவ்யார்ஜநம் பண்ணின

வ்யா.—மூன்றாம்பாட்டு. † "போக்கினேன்பொழுதினைவாளா" என்றார்; † சிலவற்றைச் செய்திறே போதுபோக்குவது, செய்தபடி தானெங்ஙனே யென்ன; அதுதன்னைச் சொல்லுகிறார்.

(சூதினைப் பெருக்கிக் களவினைத் துணிந்து) பகலெல்லாம் சூதுபொருது, தோற்றவன் குறைவறக்கொடுக்கக் கண்டவாறே "இவன் பக்கலிலே கனக்கவுண்டாகையிறே இவன் தருகிறது" என்று ராத்ரியில் களவுகாண அத்யவஸிப்பது இவன் க்ருஹத்திலேயாயிற்று. ஆக, காணவும்கொண்டு காணாதபடியும் கொள்ளுமாயிற்று. † இவைதான் நிஷித்தாநுஷ்டாநமாகையாலே, இவை தன்னையே சொல்லிற்றாகவுமாம். † அன்றிக்கே, ஆஸ்திக்ய முடையனாயிருப்பானொருவன், "கெடுவாய்! ஈஶ்வரனென்பானொருவனுண்டு காண்" என்றால், நாஸ்திக்யத்தாலே பஶ்யதோஹரனாய், "ஈஶ்வரனாகிறவனார்?-என்றும் ஆத்மாபஹாரம் பண்ணியுமாயிற்றுப் போந்தது. (சுரிகுழலித்யாதி) இப்படி த்ரவ்யார்ஜநம் பண்ணினால் அது கொண்டுகொள்ளும் கார்யத்தைச் சொல்லுகிறது. (௧) "விரிகுழலாரிற்பட்டு" என்கிறபடியே மயிர்பேணாதே யிருக்கில் அதிலே ஈடுபடுவர், மயிர்சுழன்று முடித்திருக்கில் அதிலே யீடுபடுவர், ஏதேனுமாக அவர்களிருந்தபடியமையுமாயிற்று இவர்க்கீடுபடுகைக்கு; (௨) "என்னையுன்செய்லகை நைவிக்கும்" என்னுமாபோலே. (கண்டவாதிரிந்த) (௩) "ந்ருபஶு: ந்ருபசு:" என்னுமாபோலே, கண்ணுக்குத் தோற்றின விஷயங்களில், இவை சாஸ்த்ரங்கள் நிஷேதித்தவிடம் என்று மீண்டறிவதில்லை. தோற்றினபடி மூலையடியே திரிந்த வித்தனை. (தொண்டனேன்) தொண்டனாகிறான் - பரதந்த்ரன். அது அப்ராப்த விஷயங்களிலே யானபோது அபகர்ஷஹேதுவாகக்கடவது; ப்ராப்தவிஷயங்களிலேயானபோது, உத்கர்ஷ ஹேதுவாகச்சொல்லக்கடவது.

---

படியைச் சொல்லுகிறாரென்று ஸங்கதியருளிச்செய்கிறார், (போக்கினேனித்யாதி). (சிலவற்றை) த்ரவ்யார்ஜநப்ரகாரங்களை.

சூதையும் களவையும் த்ரவ்யார்ஜநத்துக்கு சேஷமாக வருளிச்செய்து, யோஜநாந்தரமருளிச்செய்கிறார், (இவைதானித்யாதி). ஈஶ்வரனை வாதமுகத்தாலில்லை செய்கை-சூதென்றும், ஸ்வாநுபவத்தாலில்லை செய்கை களவென்றும் மூன்றாம் தாத்பர்யமருளிச்செய்கிறார், (அன்றிக்கே யித்யாதி). இவ்விரண்டு யோஜனையிலும் வாளா போதுபோக்கினப்ரகாரங்களேதென்ன; பின்னையும் சிலவற்றைச் சொல்லுகிறாரென்று ஸங்கதி.

---

(௧) தி-மா-௩௩. (௨) தி-வாய்-௫-௧0-௨. (௩) ஸ்தோ-ர-௫௮.

மூ.—வம்புலாங் கூந்தல் மனைவியைத் துறந்து
பிறர்பொருள் தாரமென் றிவற்றை
நம்பினா ரிறந்தால் நமன்றமர் பற்றி
யெற்றிவைத் தெரியெழு கின்ற
செம்பினா லியன்ற பாவையைப்பாவீ
தழுவென மொழிவதற் கஞ்சி
நம்பனே வந்துன் திருவடி யடைந்தேன்
நைமிசாரணியத் துளெந்தாய். (ச)

| பதம். | உரை. |
|---|---|
| நைமிசாரணியத்துள் எந்தாய்! | |
| நம்பனே | விச்வஸநீயனே! |
| வம்புஉலாம் | பரிமளம் வீசாநின்றுள்ள |
| கூந்தல் | குழலையுடையளான |
| மனைவியை | (தன்)பார்யையை |
| துறந்து | விட்டு |
| பிறர்பொருள் | பிறர்த்ரவ்யமும் [ம் |
| பிறர்தாரம் | பிறர்மனையாட்டிகளு |
| என்று இவற்றை | ஆகிய இவைகளை |
| நம்பினார் | விரும்பினவர்கள் |
| இறந்தால் | இறந்துபோனால் |
| நமன்தமர் | யமபடர்கள் |
| பற்றி | பிடித்துக்கொண்டு |
| எற்றி | ஹிம்ஸித்து |
| வைத்து | ஓரிடத்திலே போகட் |
| செம்பினால் | செம்பாலே [டு |
| இயன்ற | செய்யப்பட்டதாய் |
| எரிஎழுகின்ற | நெருப்புப்பொறி வீசாநின்றுள்ள |
| பாவையை | ஒருஸ்த்ரீ ப்ரதிமையை (முன்னேநிறுத்தி) |
| பாவீ! | பாபீ! [டவாய் |
| தழுவு | (இத்தைத்) தழுவக்க |
| என மொழிவதற்கு | என்றுசொல்லுகிற சொற்களுக்கு |
| அஞ்சி | பயந்து |
| உன் திருவடிவந்து அடைந்தேன். (ச) | |

(நமன்றமரித்யாதி) இப்படி முறைகெடவர்த்திக்கையாலே, யமபடர்பண்ணும் வேதனையையநுஸந்தித்து அஞ்சி, ஸர்வாவயவங்களுமொடுங்கி சரீரந்தான் எடுத்தெடுத்து அறையத்தொடங்கும். (வேலை யித்யாதி). ப்ரயோஜநாந்தரபரர்க்காகக்கடலை நெருங்கக் கடைந்து அபேக்ஷிதஸம்விதாநம்பண்ணும்படியன்றோ இவ்வாத்மாவோடு தேவர்க்குண்டான் ஸம்பந்தம். (வந்தித்யாதி) † ப்ரஹ்மாதிகளுக்கு ஆச்ரயணீயனாய்க் கொண்டு அவர்களுடைய கூக்குரல் கேட்கைக்காக அங்கே திருப்பாற்கடலிலே சாய்ந்தாற்போலே, எனக்கு வந்து சரணம் புகலாம்படி இங்கேவந்து ஸந்நிதி பண்ணியருளிற்றே. ... ... ... ... ... (ரு)

“வேலை வெண்டிரை - நாதனே” என்றநுஷங்கித்து அத்தை த்ருஷ்டாந்தமாகவிவக்ஷித்து, “நைமிசாரணியத்துளெந்தாய்” என்றதுக்குத் தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார், (ப்ரஹ்மாதிகளுக்கித்யாதி). (ரு)

வ்யா.—நாலாம்பாட்டு. † அத்தனையோ, இன்ன மேதேனும் செய்ததுண்டோவென்ன; இன்னமும்செய்தது † குவாலென்கிறார்.

(வம்பித்யாதி) † நித்யாபூர்வமான குழலையுடைய மனைவியை யென்னுதல், பரிமளத்தையுடைத்தான குழலென்னுதல், † அக்நி ஸாக்ஷியாகக் கைப்பிடித்த ஸ்த்ரீயையாயிற்று த்யஜிப்பது. † விஷயாந்தரங்களிலே ஸ்ப்ருஹையைப்பண்ணுமே; அவற்றில் வந்தால் வம்புலாங்கூந்தலாகவும் வேண்டாவாயிற்று. பிறராமித்தனையே யாயிற்று ஆதரிக்கைக்கு வேண்டுவது. பரதாரபரத்ரவ்யங்களை விரும்பினவர்களிறந்தால்.

(நமனித்யாதி) ஸர்வேஶ்வரன் தன்னோடொக்க † ஸமமாக ஆராய்ந்து கேட்பானொருவனை விட்டவனாயிற்று, யமனாகிறான்; † அவன்றான் தன்னோடொப்பார் சிலரையாயிற்று வரவிட்டது; † அவர்கள் தாங்கள் ஒருகைக்கு ஆயிரம்பேராக வந்து பற்றுவர்களாயிற்று; பின்னை இவனுடம்பு தன்னோடே எற்றுவர்கள்; அநந்தரம் தங்கள் கைசலித்தவாறே பொகட்டு இட்டுவைப்பர்கள்; † "இவர் இத்தனைபோது ஸ்த்ரீகளை யொழிய இருக்கவல்லரோ! அவளை யழைப்பியும்" என்பர்கள்; இவனும் "நம்மை நலிவதெல்

அரு. — நாலாம்பாட்டு. (வம்புலாமித்யாதி). "சுரிகுழல்மடந்தையர் திறத்துக்காதல் மிகுதியாலே கண்டவாதிரிந்தேன்" என்றீர், அப்படி அபிமதைகளான ஸ்த்ரீகளை சாஸ்த்ரீயமாகக் கைப்பிடித்துக்கொண்டால் * நமன்றமர் வேதனைக்கொடுங்கவும் வேண்டாதே காதல் தீர்த்துக்கொள்ளலாமே, இதுக்கஞ்சுவானென், அஞ்சும்படி பின்னையும் செய்தவையுண்டேயென்னுமீஶ்வராபிப்ராயத்தை யருளிச்செய்கிறார், (அத்தனையோவித்யாதி).

வம்பு - புதுமை, உலாவாநின்றுள்ள - வர்த்தியாநின்றுள்ள, கூந்தலென்றொருயோஜனையருளிச்செய்கிறார், (நித்யேத்யாதி). இத்தால், வாரிமுடித்து வளர்க்கும் பருவமென்று கௌமாரம் தோற்றுகிறது. "மனைவி" க்ருஹிணீ என்று, அந்தபதவாஸனை, (அக்நீத்யாதி). இத்தால், விஹிதபரித்யாகம் பண்ணினமையைச் சொல்லிற்று. பரதாரத்துக்கு விசேஷணமிடாதே அருளிச்செய்ததுக்குத் தாத்பர்யம், (விஷயாந்தரங்களிலே யித்யாதிவாக்யத்ரயமும்).

(ஸமமாக) என்றது - சேதநரிடத்தில் பக்ஷபாதமின்றிக்கேயென்கை. யமனைவிட்டு படரை நிரூபிக்கையாலே (க) "யச்சீலஸ்ஸ்வாமீ தச்சீலோதாஸ:" யச்சிலஸ்ஸ்வாமீ தச்சிலோதாஸ:" என்கிற வசநத்தையுட்கொண்டருளிச்செய்கிறார், (அவன்றானித்யாதி). பஹுவசநப்ரயோக தாத்பர்யம், (அவர்கள் தாங்களித்யாதி). கைசலிக்கநலிந்தபின் இவனைக்குறித்து, "பாவையைத்தழுவு" என்றுசொல்ல ப்ரஸக்தியுண்டோ, இவனயர்த்துக்கிடவானேவென்ன; அருளிச்செய்கிறார், (இவரித்யாதி). "பாவீ!" என்று ஸம்போதித்தவர்களுடைய

(க)

மூ.—இம்மையா லடர்ப்புண் டிடும்மினே தற்றென்
றிரந்தவர்க் கில்லையே யென்று
நெடுஞ்சொலால் மறுத்த நீசனே னந்தோ
நினைக்கிலேன் வினைப்பயன் றன்னைக்

லாம் நலிந்தார்களாகில் இனியவனை யழைக்கிறார்களித்தனையிறே" என்று குறுவிழிகொண்டு கிடக்கும்; (எரியித்யாதி) எரி எழாநிற்பதாய், செம்பாலே செய்யப்பட்ட பாவையை, பாவீ! தழுவு என்பார்களாயிற்று. †"கெடுவாய்! அவர்கள் †ஒழிச்சினவன்றாகிலும் அநுதாபம் பிறந்து உகந்தருளிற்றொரு திருவாசலிலே யொதுங்கினுயாகில் இன்றெங்களுக்குக் கைசலியாதொழியலாயிற்று" என்பர்களாயிற்று. (மொழிவதற்கஞ்சி) † அவர்கள் பண்ணும் நலிவைப் பொறுக்கலாமாகாதே; க்ரூரமான பேச்சாயிற்று பொறுக்கப் போகாதது.

(நம்பனே வந்துன் திருவடியடைந்தேன்) ஏதேனும் தோற்றீற்றுச்செய்து திரிந்தார்க்கும் வந்து பற்றலாம்படி சரண்யனை நீ வந்து ஸந்நிஹிதனுகையாலே திருவடிகளிலே சரணம்புகுந்தேன். (நைமிசாரணியத்துளெந்தாய்) இவன் விஷயங்களில் ப்ரவணனுகிறது கண்ணுக்கிலக்காகையிறே; அவ்வோபாதி நம்மையும் கண்ணுக்கிலக்காக்கவே இவன் நம்பக்கலிலே ப்ரவணனுமென்று உன்னைக் கண்ணுக்கிலக் காக்கிக்கொடுவந்து நின்றாய். † நிஷேதவிதியும் கிடக்கச்செய்தே அப்ராப்தங்களில் ப்ரவணனுகிறது அவை கண்ணுக்கிலக்காகை §சுட்டியிறே; விதிவிஷயமுமாய் உத்தேஶ்யமான வது ஸந்நிஹிதமானல் இவன் விரும்பானே என்று உன்னைக்கண்ணுக்கிலக்காக்கிவைத்தாய். ... ... ... (௪)

உட்கருத்தை (௧) 'నరకేపచ్యమానస్తు యమేన పరిభాషితః। కింత్వయా నార్చితో దేవః కేశవః క్లేశనాశనః - நரகேபச்யமாநஸ்து யமேநபரிபாஷித꞉ | கிம்த்வயா நார்ச்சிதோதேவ꞉ கேசவ꞉ க்லேசநாசந꞉'' என்கிற வசநத்தை யுட்கொண்டருளிச்செய்கிறார், (கெடுவாயித்யாதி). யமன்சொன்னவார்த்தை இவர்களும் சொல்லுவர்களென்று கருத்து. (ஒழிச்சினவன்றாகிலும்) என்றது - (௨) "ஈசிபோமினீங்கிரேன்மின்" என்று தள்ளிவிட்டவன்றாகிலுமென்றபடி. தழுவு என - தழுவுவதற்கஞ்சி என்னவேண்டியிருக்க, "மொழிவதற்கு" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார், (அவர்களித்யாதி). "தழுவு" என்கிற சப்த ஶ்ரவணத்தின்கொடுமை, தழுவி இளைப்பாறலாம்படியிருக்குமதென்கை.
இவர்தாம் "அஞ்சிவந்தடைந்தேன்" என்கையாலே-இப்படிசெய்துபோந்து வந்தேனென்னுமது அர்த்தஸித்தம்; ஆகையாலே (செய்தது குவாலென்கிறார்) என்று அவதாரிகையருளிச்செய்தார். கண்ணுக்கிலக்காக்கினுல் பற்றுகைக் குடலாமோவென்ன; அருளிச்செய்கிறார், (நிஷேதவிதியுமித்யாதி). ... (௪)

§ சுட்டியிறே - ஹேதுவாகவன்றே. (௧) (௨) ௧-௩-௮.

கடுஞ்சொலார் கடியார் காலனார் தமரால்
படுவதோர் கொடுமிறைக் கஞ்சி
நடுங்கிநான் வந்துன் திருவடி யடைந்தேன்
நைமிசாரணியத் துளெந்தாய். (ரு)

| பதம். | உரை. |
|---|---|
| நைமிசாரணியத்துளெந்தாய்! | |
| இடும்பையால் | தாரித்ர்யத்தாலே, |
| அடர்ப்புஉண்டு | நெருக்குப்பட்டு[வும்) |
| துற்று | ஒருகவளம் (சோறுகி |
| இடுமின் | இடுங்கோள் |
| ஓ என்று | ஓ! என்று தங்கள் வறுமை தோற்றக்கூப்பிட்டு |
| இரந்தவர்க்கு | யாசித்தவர்களுக்கு |
| இல்லையேயென்று | (உங்களுக்குக்கொடுக்கைக்கு ஒருபொருளும்) இல்லையேயெ |
| [ல் | ன்று |
| நெடுஞ்சொலா | கடுஞ்சொல்லாலே |
| மறுத்த | தடுத்துச்சொன்ன |
| நீசனேன் | மிகத்தண்ணியனான |
| நான் | அடியேன் |

| பதம். | உரை. |
|---|---|
| அந்தோ | ஐயோ! |
| வினைப்பயன்தன்னை | (கீழ்செய்த) பாபத்தின்பலத்தை |
| நினைக்கிலேன் | நினைக்கமாட்டாதவனாய்க்கொண்டு, |
| கடும் | க்ரூரமான |
| சொலார் | சொல்லையுடையராய் |
| கடியார் | க்ரூரமான செயலையு |
| [ல் | முடையரான |
| காலனார்தமரால் | யமபடராலே |
| படுவது | படக்கடவதாய் |
| ஓர்கொடு | மிகக்கொடியதாயிருந்துள்ள [து |
| மிறைக்கு | ஹிம்ஸையை நினைத் |
| அஞ்சி | பயந்து |
| நடுங்கி | நடுக்கமுற்றவனாய் |
| உன்திருவடிவந்து அடைந்தேன். (ரு) | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. † அத்தனையோ, இன்னும் ஏதேனுமுண்டோவென்ன; திருவுள்ளத்துக்குப் பொறுக்கவொண்ணாதவையுமெல்லாம் செய்துபோந்தேனென்கிறார்.

(இடும்பையாலடர்ப்புண்டு) தாரித்ர்யத்தாலே நெருக்குண்டு. (இடுமினோ துற்றென்றிரந்தவர்க்கு) † ஆரேனுமாகிலுமெல்லாருங்

அரு.—அஞ்சாம்பாட்டு. (இடும்பையித்யாதி). பரதாரபரத்ரவ்யாபஹாரம்பண்ணினேனென்னாநின்றீர். (க) "श्लोकार्धेन प्रवक्ष्यामि यदुक्तं ग्रन्थकोटिभिः । परोपकारः पुण्याय पापाय परपीडनम् - ஶ்லோகார்த்தேநப்ரவக்ஷ்யாமி யதுக்தம்க்ரந்தகோடிபி: | பரோபகார: புண்யாயபாபாய பரபீடநம்" என்கிறபடியறிந்து சிலர்க்கு ஸத்கரித்திருந்தீராகில், (உ) "धर्मेण पापमपनुदति-தர்மேண பாபமபநுததி" என்கிறபடியே கீழ்ச்சொன்ன பாபம்கழிந்து கொடுநிற்கும்; அதுகிடக்கிடீர், வேறேதேனுமுண்டாகில் சொல்லிக்காணுமென்னு மீஶ்வராபிப்ராயத்தை யருளிச்செய்கிறார், (அத்தனையோவித்யாதி).

"இடுமின்" என்கிற பஹுவசநத்தையும், "ஓ" என்கிற ஆர்த்யதிசய ஸூசக சப்தத்தையும், "துற்று" என்கிற ஏகவசநத்தையும் கடாக்ஷித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார், (ஆரேனுமித்யாதி). நிரதிசய புருஷார்த்தத்துக்

(க) (உ)

கூட எனக்கொருகால் வாயிலே யிடுகைக்கு வேண்டுவது தரவேணும் என்று, (க) † "முனியே" என்பானைப்போலே கூப்பிடுமாயிற்று. துற்றுகிறது - ஒருகால் வாயிலேயள்ளியிடுமதாயிற்று. (துற்றென்றிரந்தவர்க்கு)[1] இப்படியே தயநீயமாம்படி சொல்லிக் காலைக்கட்டினவர்களுக்கு. (இல்லையேயித்யாதி) †அவர்களுக்கு இல்லையே! என்னும்போது சொல்லும் வார்த்தையிற் கொடுமையை † அநுஸந்தித்து, †"நாமிவனை யொன்றபேக்ஷித்துவர இவன் இல்லையென்ற பாசுரத்தைக்கேட்டு இன்னமும் ஜீவிக்கவிருக்குமதில் இத்தனை நஞ்சு பெற்றோமாகில் முடிந்து போகவாயிற்று" என்று காலதத்வமுள்ளதனையும் அவன் நெஞ்சு புண்பட்டுக்கிடக்கும்படி சொன்ன கொடுமையைச் சொல்லுகிறதாயிற்று. (அந்தோ) என்கிறாராயிற்று - மேல்வருகிற நலிவை அநுஸந்தித்து. (நினைக்கிலேன் வினைப்பயன்றன்னை) † கீழ் செய்த செயல்தானே யநுஸந்திக்க வரிதாயிருந்தபின்பு, அதின் பலமாய் வருமதுதானே யநுஸந்திக்கப் போகாதிறே.

(கடுஞ்சொலாரித்யாதி) வெட்டியசொல்லையுடையராய் க்ரூரமான செயலையுடையராயிருந்த யமபடராலே படக்கடவதான கொடிய §மிறுக்கை † அநுஸந்தித்து. (கடுங்கிநான் வந்துன்திருகாக, "ஆழ்வார், "முனியே! நான்முகனே!" என்று பெருமிடறுசெய்து கூப்பிடுமாபோலே, இவனும் தார்த்ர்யத்தாலே நெருக்குண்டு க்ஷுதா(து)ர்த்தனாய்பலரைக்குறித்து ஒருகபளத்தை யிடச்சொல்லிப் பெருமிடறுசெய்து கூப்பிடுமென்று கருத்து. "இடுமின்" என்றதே இரப்பாயிருக்கவும், "இரந்தவர்க்கு" என்கையாலே பலித்த அர்த்தம், (இப்படியேயித்யாதி). பரத்ரவ்யாபஹாரத்தாலே ஸம்பந்நராயிருக்கிறவளவிலே, பசித்தவன்வந்து "சோறிடு" என்ன; இவன் "இல்லை" என்ன; ஒரு "துற்றிடுமின்" என்ன, எல்லார்க்குமாகத்தான் "இல்லையே" என்ன; "ஓ" என்று ஆர்த்தனுக ; தான் நெடுஞ்சொல்லாலே "இல்லை" என்ன; அவன்காலிலேவிழ; இவன் பால் மறுத்தபசு உதைத்துக்கொள்ளுமாபோலே உதைத்துக்கொண்டுபோன கொடுமையைத் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டு தாத்பர்யமருளிச்செய்கிறார், (அவர்களுக்கில்லையேயித்யாதி). (அநுஸந்தித்து) என்றவநந்தரம், "நீசனேனென்கிறார்" என்று கூட்டுவது. அந்தக்கொடுமையின் சரமாவதி தன்னைக்காட்டுகிறார், (நாமிவனையித்யாதி). பயன்என்னாதே, "பயன்றன்னை" என்ற ப்ராதாந்யமெத்தைப் பற்றவருளிச்செய்தாரென்ன; அருளிச்செய்கிறார், (கீழ்செய்தவித்யாதி).

நெடுஞ்சொலால் மறுத்ததுக்குத்தக்கபலமாக, "கடுஞ்சொலார் கடியார்" என்று விசேஷிக்கிறார் என்று கண்டுகொள்வது. மேலே பயகார்யமான நடுக்கத்தைச்சொல்லுகையாலே, "அஞ்சி" என்று தத்காரணமான அநுஸந்தாநத்தைச் சொல்லுகிறதென்கிறார், (அநுஸந்தித்து) என்று. ... ... (ரு)

(க) தி - வாய் - கo - கo - க.
§ மிறுக்கு - ஹிம்ஸை.

மூ.—கோடிய மனத்தால் சினத்தொழில் புரிந்து
திரிந்து நாயினத்தொடும் திளைத்திட்டு
ஓடியுமுழன்று முயிர்களே கொன்றே
னுணர்விலே னாதலால் நமனூர்
பாடியைப் பெரிதும் பரிசழித்திட்டேன்
பரமனே பாற்கடல் கிடந்தாய்
நாடிநான் வந்துன் திருவடி யடைந்தேன்
நைமிசாரணியத்து ளெந்தாய். (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பரமனே | எல்லாரிலும் உயர்ந்தவனே! | ஓடியும் | (பரஹிம்ஸைக்காக நெடுந்தூரம்) ஓடிச் சென்றும் |
| பாற்கடல் | க்ஷீராப்தியில் | உழன்றும் | வருந்தியும் |
| கிடந்தாய் | கண்வளர்ந்தருளுமவனே! | உயிர்கள் | ப்ராணிகளை |
| நைமிசாரணியத்துளெந்தாய்! | | கொன்றேன் | கொன்றவனாய் |
| கோடிய | நல்விஷயங்களில் புகாத [ய் | உணர்விலேன் | ஜ்ஞானஹீனனாய்ப் போந்தேனை |
| மனத்தால் | மனஸ்ஸையுடையனா | நான் | அடியேன் |
| சினம் | (பிறர்க்குக்) க்ஷோபமுண்டாகத்தக்க | நாடி | ஆராய்ந்து |
| | | உன்திருவடிவந்து அடைந்தேன். | |
| தொழில் | செயல்களை | ஆதலால் | அத்தாலே [ன் |
| புரிந்து | செய்தவனாய் | நமனூர்பாடியை | யமபுரமானநரகத்தி |
| நாயினத்தொடும் | நாய்முதலானவற்றோடுகூட | பரிசு | நிலைமையை |
| திரிந்து | வேட்டையாடி | பெரிதும் | மிகவும் |
| திளைத்திட்டு | களித்தவனாய் | அழித்து இட்டேன். | அழித்துவிட்டேன். |

வடியடைந்தேன்) தேவர் திருவடிகளிலேவந்து சரணம்புகுந்தேன். (நைமிசாரணியத்து ளெந்தாய்) இரந்தார்க்கு இல்லையென்று மறுத்துப் போந்த வெனக்கு நானிரவாதிருக்க நீவந்து ஸந்நிஹிதனையிற்றது எனக்கு உபகரிக்கைக்காக வன்றோ. இவற்றால் சொல்லிற்றாயிற்று - முன்பெல்லாம் தோன்றினபடிசெய்து திரிந்து அவற்றுக்கு வரும்பலத்தைக்கேட்டு பயப்பட்டுப் போக்கடிதேடி, புறம்பொருபுகல் காணாமையாலே தேவர் திருவடிகளிலே சரணம் புகுந்தேனென்கிறார். ... ... ... ... ... ... (ரு)

அரு.—ஆறாம்பாட்டு. (கோடியவித்யாதி). த்ரவ்யலோபத்தாலே சிலரை ஸத்கரிக்கமாட்டிற்றிலீராகில், (க) "அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் - அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம்" என்றும், (உ) "அஹிம்ஸா ப்ரதமோ தர்ம:-அஹிம்ஸாப்ரதமோ

(க) (உ)

வ்யா.—ஆறும்பாட்டு. † அத்தனையோ, இன்னும் செய்ததுண்டோவென்ன, § கைதொடனாய்க்கொன்றேபோந்தேனென்கிறார்.

(கோடிய மனத்தால்) † அநுகூலவிஷயத்திலும் நெஞ்சுவிலகியாயிற்றிருப்பது. (சினத்தொழில்புரிந்து) மறச்செயல் செய்து. (திரிந்துநாயினத்தொடும்திளைத்திட்டு)ஹிம்ஸ்ரபதார்த்தங்களோடே † வேட்டையாடித் திரிந்தபடியைச் சொல்லுதல், தண்ணியவர்களோடேகூடி விளையாடிக்களித்துத் திரிந்தபடியாதல். (ஓடியும்) "ஒருவனை ஹிம்ஸிக்கலாம், பதின்காத † மாறுபோகலாமோ" என்றால், தட்டுப்பாராதே அவ்வளவும் ஓடியும். (உழன்றும்) "ஹிம்ஸித்ததாம்போது சால†வருந்தவேணும்" என்றால் அப்படி வருந்தி வ்யாபரித்தும். (உயிர்களேகொன்றேன்) ப்ராணவிஶ்லேஷபர்யந்தமாக்கிப்போந்தேன்; புடைவையுரிந்துவிட்டிலேன். (உணர்விலேன்) ஸர்வேஶ்வரனொருவனுளன் என்னும் † இச்சாண்சந்தையும் நெஞ்சிற்படாதபோது செய்யாததுண்டோ?

‡ (ஆதலால் நமனார்பாடியைப்பெரிதும் பரிசழித்திட்டேன்) என்று ‡ வக்ஷ்யமாணத்தை உத்தேசித்துச்சொல்லுகிறதாகவுமாம்; அன்றிக்கே - கீழோடே சேரவுமருளிச்செய்வர். யமனுடைய ஆஜ்ஞை நடவாதபடி அத்தை வென்றேன். யமபுரத்தைவென்றேனென்றபடி. அன்றிக்கே-கீழோடேயானபோது, "இவனை நலியவிவன் மாட்டான், வேறேயொருபடைவீடும் ஒரு புதுக் † கோமுற்றவனு

---

தர்மஃ" என்றும் சாஸ்த்ரம் சொல்லிவைத்ததிறே; அதுண்டாகிலவற்றுக்கெல்லாம் வந்ததென்னென்னு முட்கருத்தை ஸூசிப்பிக்கிறார், (அத்தனையோவென்று).

கோடுதல் - விலங்குதலாய், ஸர்வவிஷயத்திலும் விலங்கின மநஸ்ஸாலென்று சப்தார்த்தமாய், பலிதத்தை யருளிச்செய்கிறார், (அநுகூலேத்யாதி). இத்தால், ஒருகாலும் நெஞ்சீரமில்லையென்றதாயிற்று. "திளைத்திட்டு" என்றதின் பலிதார்த்தம், (வேட்டையாடி) என்றது. (ஆறு) - வழி. (வருந்தவேணும்) - ப்ரயாஸப்படவேணும். (இச்சாண்சந்தை) என்றது - இந்த ஸ்வல்பமான வாக்யமென்றபடி.

நமனாரானவர், பாடியை - தன்னூரை - நரகத்தை, பெரிதும், பெரியதாக்கும், அதாவது-பாபிகளைக்கூட்டி நியமிக்கும், பரிசு - ப்ரகாரத்தை, அழித்திட்டேனென்று வாக்யார்த்தம் விவக்ஷித்து, "ஆதலால்" என்றதுக் கர்த்தவ்யமருளிச்செய்கிறார், (ஆதலாவித்யாதிவாச்யத்வயத்தாலே). (வக்ஷ்யமாணத்தை) என்றது-"திருவடியடைந்தேன்" என்னுமது. இப்போது [உணர்விலேன் - பரமனே! பாற்கடல் கிடந்தாய்! நாடிநான்வந்துன் திருவடியடைந்தேன் - ஆதலால் நமனார் பாடியைப் பரிசழித்திட்டேன்] என்றந்வயம். (கோமுற்றவனும்) ராஜாவையும்.

---

§ கைதொடனாய் - கையாலேதொட்டு. ஹிம்ஸகனுக்கு ஸஹாயபூதனன்றிக்கே நானேகொன்றேனென்றபடி.

மூ.—நெஞ்சினல் நினைந்தும் வாயினல் மொழிந்தும்
நீதியல்லாதன செய்தும்
துஞ்சினர் செல்லும் தொன்னெறி கேட்டே
துளங்கினேன் விளங்கனி முனிந்தாய்
வஞ்சனேனடியேன் நெஞ்சினிற் பிரியா
வானவா தானவர்க்கென்றும்
நஞ்சனேவந்துன் திருவடி யடைந்தேன்
நைமிசாரணியத் துளெந்தாய். (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| விளங்கனி | விளாவின் பழமாய்வந்த கபித்தாஸுரனை | நெஞ்சினல் | மநஸ்ஸாலே |
| முனிந்தாய் | கோபித்து நிரஸித்தவனே! | நினைந்தும் | நினைத்தும் |
| வஞ்சனேன் அடியேன் | கபடியான என்னுடைய | வாயினல் | வாயாலே |
| நெஞ்சினில் | ஹ்ருதயத்தில் (புகுந்து) | மொழிந்தும் | சொல்லியும் |
| பிரியா | விடாதேயிருக்கிற | செய்தும் | அநுஷ்டித்தும்போந்து |
| வானவா | நித்யஸூரிநிர்வாஹகனே! | துஞ்சினர் | முடிந்தவர்கள் |
| என்றும் | எப்போதும் | செல்லும் | போகத்தக்க |
| தானவர்க்கு | அஸுரர்களுக்கு | தொல் | பழையதான |
| நஞ்சனே | ம்ருத்யுவானவனே! | நெறி | நரகமார்க்கத்தை |
| நைமிசாரணியத்துள் எந்தாய்! | | கேட்டே | கேட்டமாத்ரத்திலே |
| நீதியல்லாதன | சாஸ்த்ரங்கள் "ஆகாது" என்றவற்றை | துளங்கினேன் | நடுங்கினவனாய்க் கொண்டு |
| | | உன்திருவடிவந்து அடைந்தேன். (எ) | |

பிடவேணும்" என்னும்படி பாபங்களையே பண்ணிப்போந்தே னென்னுதல். (பரமனே) ஒருஹேதுவின்றிக்கே யிருக்கச்செய்தே ஔதார்யம் பண்ணுமிடத்தில் உனக்கவ்வருகொருவரில்லாதபடி யிருக்கிறவனே! (பாற்கடல் கிடந்தாய்) அதுக்குறுப்பாக † அடுத் தணித்தாகத் திருப்பாற்கடலிலேவந்து சாய்ந்தருளினவனே! (நாடி நான் வந்துன்திருவடியடைந்தேன்) பரஹிம்ஸையே பண்ணித் தோற்றினபடி திரிந்து அதுக்கு வரும்பலத்தைக் கேட்டஞ்சி அநந் தரம் நமக்குப் புகலேதோ! என்று ஆராய்ந்து திருவடிகளிலே வந்து சரணம்புகுந்தேன். (நைமிசாரணியத்து ளெந்தாய்) நான் நாடிக்கிட்டினேனாக நினைத்திருந்தேன், நீ எனக்குமுன்பே நாடி † பூர் வஜனாய்த் திருநைமிசாரண்யத்திலே வந்து ஸந்நிஹிதனானாய். ... (கூ)

(அடுத்து) அநுரூபமாய். (பூர்வஜனாய்) என்றதுக்கு "महापुरुष पूर्वज- மஹாபுருஷபூர்வஜ" என்கிறவசநத்திலே நோக்கு. ... ... (கூ)

(க) ஸ்ரீ-ஸ்தோ-க.

வ்யா—ஏழாம்பாட்டு. (நெஞ்சினாலித்யாதி) (நீதியல்லாதன-நெஞ்சினால் நினைந்தும், வாயினால் மொழிந்தும் - செய்தும்) †கீழெல்லாம் தாம்செய்த தப்புக்களைச் சொல்லிக்கொடுபோந்தார்; அவற்றையெல்லாம் †திரளச்சொல்லுகிறாராயிற்று. (நீதியல்லாதன) என்று † மனோவாக்காயங்கள் மூன்றாலும் நிஷித்தங்களையே யநுஷ்டித்துப்போந்தவர்கள் முடிந்தால் போம்வழியுண்டு - நரகத்துக்குப் போம்வழி, அத்தைக்கேட்டுத் துளங்கினேன். (தொல்நெறி) (க) ''ஜகதஸ்ஶாஶ்வதேமதே'' என்று பரமபதத்துக்குப்போம் வழியோபாதி இதுவும் பழையதிறே; † இனி அதிலித்துவாசி - ஆளொழுக்கற்றமையிறே. (கேட்டேதுளங்கினேன்) †அநுபவித்தன்றிக்கே, ஶ்ரவணவேளையிலே நடுங்கினேன். †அதின் பலத்தையும் புஜிக்குமத்தனையன்றோ வென்ன; (விளங்கனியித்யாதி) பலத்தையுதிர்த்தது, பக்வபலாநுபவம் பண்ணவேண்டாவென்று † கருத்து.

(விளங்கனிமுனிந்தாய்) †கனியாகிற அஸுரனை நிரஸித்தவனே! விரோதி நிரஸநஸ்வபாவனான நீ என் விரோதியையும் போக்கவேணுமென்கிறார். (வஞ்சனேனடியேன் நெஞ்சினிற்பிரியாவானவா) அடியேன் என்று அஹ்ருதயமாக நானொரு உக்திமாத்ரத்தைச்சொல்ல, அத்தை ஸஹ்ருதயமாக்கி, நித்யஸூரிகளுக்கே உன்னையநுபவிக்கக் கொடுத்துக்கொண்டிருக்கக்கடவ நீ என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்து விடாதேயிருந்தாய். (தானவர்க்கித்யாதி) அஸுரவர்க்கத்துக்கு என்று மொக்க நஞ்சானவனே! உன்திருவடிகளிலேவந்து சரணம்புகுந்தேன். (நைமிசாரணியத்துளெந்தாய்) † நன்னெறி காட்டுகைக்கணித்தாக நீ வந்திருந்தாய். தொன்னெறிக்கெதிர்த்தட்டானத்தையாயிற்று நினைக்கிறது. ... ... (எ)

அரு.—ஏழாம்பாட்டு. (நெஞ்சினாலித்யாதி). ஸங்கதி ப்ரதர்சநம்பண்ணுகிறார், (கீழெல்லாமித்யாதி). (திரள) ஸங்க்ரஹமாக. வாக்யார்த்தம், (மனோவாக்காயங்களித்யாதி). "செல்லும்" என்ற விசேஷணலப்தார்த்தம், (இனி அதிலித்யாதி). "கேட்டே" என்ற ஏவகாரவ்யாவர்த்யம், (அநுபவித்தித்யாதி). நீதியல்லாதவற்றைக் கரணத்ரயத்தாலும் செய்தால் பலாநுபவம்பண்ணாதே தீருமோவென்னும் பகவதபிப்ராயத்தையநுவதித்து அதுக்குத்தரமாக விரோதியான பலங்களையுதிர்த்த நீ என் விரோதியானபலங்களையுமுதிர்க்கவேணுமென்னும் கருத்தாலே அந்த அபதாநத்தை யருளிச்செய்கிறாரென்கிறார்; (அதினித்யாதி). (கருத்து) என்றவநந்தரம், "எனக்கத்தைக் காட்டினாய்" என்று பூரித்துக்கொள்வது.

(கனியாகிறவஸுரனை) என்றது - அஸுராவிஷ்டமான வ்ருக்ஷைகதேசமாகையாலே. "இங்கு, எந்தாய்" என்றது - அபதே ப்ரவ்ருத்தனையும் ஸந்மார்க்கத்திலே ப்ரவர்த்திப்பிக்கும் பித்ருக்ருத்யத்தைப்பற்றவென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார், (நன்னெறியித்யாதி). ... ... ... (எ)

(க) கீதை - அ - உசு.

மூ.—ஏவினார் கலியார் நலிகவென் றென்மே
லெங்ஙனே வாழுமாறு ஐவர்
கோவினார் செய்யும் கொடுமையை மடித்தேன்
குறுங்குடி நெடுங்கடல் வண்ணா
பாவினா ரின்சொல் பன்மலர் கொண்டுன்
பாதமே பரவி நான் பணிந்து என்
நாவினால் வந்துன் திருவடி யடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (அ)

| பதம். | உரை. |
|---|---|
| குறுங்குடி | திருக்குறுங்குடியிலே நின்றருளி யிருக்கிறவனே |
| நெடு | பரந்து ஆழ்ந்த |
| கடல் | ஸமுத்ரத்தின் |
| வண்ணா | நிறம்போன்றவடிவழகை யுடையவனே! |
| நைமிசாரணியத்துளெந்தாய்! | |
| கலியார் | கலிகாலமானது |
| நலிக என்று | (இவனை) வருத்துங்கோள் என்று |
| என்மேல் | என்பக்கல் |
| ஐவர் | அஞ்சு இந்த்ரியங்களையும் |
| ஏவினார் | ஏவிற்று; |
| வாழும் ஆறு எங்ஙனே | (அந்த இந்த்ரியங்கள்) ஜீவிக்கும்விரகு ஏதோ? |
| கோவினார்செய்யும் | ப்ரபலமான அவ்வைந்தும் பண்ணத்தக்க |
| கொடுமையை | க்ரூரமான செயல்களை |
| மடித்தேன் | திருப்பிவிட்டவனாய்க் கொண்டு |
| என் நாவினால் | என் நாக்காலே |
| பா | நல்ல சந்தஸ்ஸுக்கள் |
| ஆர் | நிறைந்த |
| இன்சொல் | இனியசொற்களாகிற |
| பல்மலர் | பல புஷ்பங்களையும் |
| கொண்டு | ஸம்பாதித்துக்கொண்டு |
| பரவி | வாழ்த்தி |
| உன்பாதமேபணிந்து, | தேவர் திருவடிகளிலே விழுந்து |
| உன்திருவடிவந்து நான் அடைந்தேன். | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (ஏவினார் கலியார்) † கலியாரென்கிறார் ஆயிற்று கலிகாலத்துக் கஞ்சினபடியாலே. கலியாரானவர், நலியுங்கோள் என்று என்மேலே அஞ்சு இந்த்ரியங்களையும் ஏவினார். (எங்ஙனே வாழுமாறு) † அவரெங்ஙனே இனி ஜீவிக்கும்படி. என்

அரு.—எட்டாம்பாட்டு. (ஏவினாரித்யாதி) "தொன்னெறிகேட்டேதளங்கினேன்" என்று பூர்வவ்ருத்தத்துக்கஞ்சின ஆழ்வார் அவனுடைய விரோதிநிரஸநஸ்வபாவாநுஸந்தாநத்தைப் பண்ணினபடியாலே அச்சங்கெட்டுத் தாமப்போதிருந்தபடியைப்பேசுகிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

கலியேவிற்று என்னாதே, பூஜ்யோக்திதோன்ற வருளிச்செய்ததுக்குத் தாத்பர்யம், (கலியாரித்யாதி). "எங்ஙனே நான் வாழுமாறு" என்று க்லேசிக்கிறதாக அர்த்தம் விவக்ஷித்தால், மேலே "கொடுமையைமடித்தேன்" என்னுமது சேராமையாலே, அதுக்கநுகுணமாக வருளிச்செய்கிறார், (அவரித்யாதி).

மூ.—ஊனிடைச்சுவர் வைத் தென்பு தூணுட்டி
யுரோம மேய்ந்தொன்பது வாசல்
தானுடைக்குரம்பை பிரியும் போதுன்றன்
சரணமே சரண மென்றிருந்தேன்
தேனுடைக்கமலத்திருவினுக்கரசே
திரை கொள் மாநெடுங்கடற்கிடந்தாய்
நானுடைத்தவத்தால் திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்து ளெந்தாய். (கூ)

| பதம். | உரை | பதம். | உரை. |
|---|---|---|---|
| தேன் | மதுவை | கிடந்தாய் | கண்வளர்ந்தருளினவனே! |
| உடை | உடைத்தான | | |
| கமலம் | தாமரைப்பூவை யிருப்பிடமாக உடைய | நைமிசாரணியத்துள் | திரு நைமிசாரண்யத்திலெழுந்தருளியிருக்கிற |
| திருவினுக்கு | பெரிய பிராட்டியார்க்கு | | |
| அரசே | வல்லபனே! | எந்தாய் | பரமோபகாரகனே! |
| திரைகொள் | அலையையுடைத்தாய் | ஊன் | மாம்ஸத்தை |
| மா நெடு | பரந்து ஆழ்ந்த | இடை | நடுவே |
| கடல் | திருப்பாற்கடலிலே | சுவர்வைத்து | சுவராகவைத்து |

தான்? ஏவிற்றுகில் வந்ததென்னென்னில்; (ஐவரித்யாதி) மநஸ்ஸுக்கு சேஷமாய் இந்த்ரியங்கள், அதுபோன வழியே இவை போகக்கடவதாயிருக்க அது தவிர்ந்து, இவை தானிப்போது மநஸ்ஸைச்சுமை யெடுக்கத்தொடங்கிற்றுய்த்து; இவை தான் நினைத்தபடி செய்யும் க்ரூரமான செயல்களைத்திரிய விடுவித்தேன்.

ஆரைப்பற்றித்தான் நீரிவற்றைத்திரிய விடுவித்ததென்ன;(குறுங்குடிநெடுங்கடல் வண்ணு) திருக்குறுங்குடியிலே ஶ்ரமஹரமான வடிவைக்கொடுவந்து நீ ஸங்கிஹிதனுகையாலே. (பாவினுரித்யாதி)† †நல்லசந்த(ஃந்) ஸ்ஸுக்கள் ஆர்ந்திருந்துள்ள இனிய சொற்களாகிற பலமலர்களையுங்கொண்டு அடைவு கெட ஸ்தோத்ரம் பண்ணித் திருவடிகளிலே விழுந்து. (என்நாவினுல்) அநர்த்தங்களை விளைக்கைக்குறுப்பானவற்றையே சொல்லிப்போந்த என் நாவாலே. (நைமிசாரணியத்துளெந்தாய்) ஸ்துத்யனை நீ என்னுடைய ஸ்துதிக்கு விஷயபூதனுய்க்கொண்டு திரு நைமிசாரண்யத்திலே வந்து ஸந்நிஹிதனுனாய். ... ... ... ... ... (அ)

[என் நாவினுல்—பாவினுரின் சொல்பன்மலர்கொண்டு - பரவி - உன்பாதமேபணிந்து - வந்துன் திருவடியடைந்தேன்,] என்றந்வயம் விவக்ஷித்தருளிச்செய்கிறார், (நல்லவித்யாதி). ஸ்துதி ப்ரணமபூர்வகமாஶ்ரயித்தேனுகையாலே கொடுமையைமடித்தேனென்று கருத்து. ... ... (அ)

| | | | |
|---|---|---|---|
| என்பு | எலும்பை | சரணமே | திருவடிகளே [ன்று |
| தூண்நாட்டி | தூணாக நட்டு | சரணம்என்று | ரக்ஷகமாகவேணும் எ |
| உரோமம் | மயிராலே | இருந்தேன் | நினைத்திருந்தேன்; |
| மேய்ந்து | மூடப்பட்டதாய் | நானுடை | (இப்போது) என்னு |
| ஒன்பதுவாசல் | நவத்வாரங்களை | | டைய [லே |
| உடை | உடைய [தை | தவத்தால் | தபஸ்ஸான தேவரீரா |
| குரம்பை | குடிலாகிற இச்சரீரத் | திருவடி | தேவர் திருவடிகளை |
| பிரியும்போது | விட்டுப்பிரியுங்காலத் | அடைந்தேன் | கிட்டப்பெற்றேன். |
| உன்றன் | தேவரீருடைய [தில் | | |

**வ்யா.**—ஒன்பதாம்பாட்டு. (ஊனிடைச்சுவர்வைத்து) மாம்ஸத்தை இடையிடையே சுவராகவைத்து; † அன்றிக்கே, மாம்ஸப்ரசுரமான † சரீரத்தைச் சுவராகவைத்து; எலும்பைத் † தூணாக நாட்டி ரோமத்தாலே மேய்ந்து. (ஒன்பது வாசல் தானுடைக்குரம்பை) (க) "𑌨𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇 𑌪𑍁𑌰𑍇 - நவத்வாரேபுரே" என்று எங்கேனும் புக்கு எங்கேனும் புறப்படலாம்படியிறே இச்சரீரந்தானிருப்பது. †ராஜபுத்ரன் ஒருகுடிலிலே யொதுங்கினாற்போலே, நித்யமாய் ஜ்ஞாநாநந்த லக்ஷணமாய் ஏகரூபமாயிருக்கிற ஆத்மவஸ்து கர்மத்தாலே ஜ்ஞாநஸங்கோசத்தைப் பிறப்பிப்பதான சரீரத்திலேயகப்பட்டதாயிற்று (பிரியும்போது) அதிலே புகுகைக்கொரு கர்மம்பண்ணிவைத்தவோபாதி அத்தைவிடுகைக்கு மொருகர்மம் பண்ணிவைக்குமே; அப்போதைக்கு, உன் திருவடிகளே புகல் என்று அத்யவஸித்தேன்.

நீரிப்படி நினைத்திருந்ததென்னபற்றாசுகொண்டுதானென்னில், (தேனுடைக்கமலத் திருவினுக்கரசே) புருஷகாரபூதையான பிராட்டியோடணைந்த வணுகையாலே† மறமானசெயல் செய்யமாட்டா

அரு—.ஒன்பதாம்பாட்டு.(ஊனிடையித்யாதி). வடிவை சுபாஶ்ரயமாய்க் கொண்டு நீர்ஸ்துதிப்ரணாமபூர்வகமாஶ்ரயித்து, இந்த்ரியங்களை வென்றேனென்றீர்; ஆகில் அந்திமஸ்ம்ருதியும் பண்ணினீராகில் அபேக்ஷிதம் தானே கைகூடுகிறதென்ன; அங்ஙன் சொல்லவொண்ணாது, "உன்றன் சரணமேசரணமென்றிருந்தேன்" என்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது. இத்தால் - எப்போதைக்குமுன் திருவடிகளேயுபாயம், உபாயபலமாய் வந்தபேறுகளைச்சொன்னேனித்தனையென்றுகருத்து.

ஊனாலே - மாம்ஸத்தாலே, இடையை - நிறையையுடைய சரீரத்தையென்றர்த்தாந்தரம், (அன்றிக்கேயித்யாதி). (சரீரத்தை)என்றது - சரீரைகதேசத்தையென்றபடி. இங்ஙனன்றாகில், மாம்ஸாஸ்த்யாதிமயமான சரீரத்தைச்சொன்னால் எலும்பைத்தூணாகச்சொல்லாதிறே. "ஊனிடை" என்று முழுச்சொல்லென்றும் சொல்லுவர்கள். (தூணாக) என்றது - சுவரில் கூச்சுக்கால்களாகவென்றபடி. "மேய்ந்து" என்றது - செத்தையாலே மூடுகை. "குரம்பை" என்றபதவாஸனை, (ராஜபுத்ரனித்யாதி). குரம்பை - குடீரம்.

(க)

மூ.—ஏதம் வந்தணுகா வண்ண நாமெண்ணி
யெழுமினோ தொழுதுமென்றிமையோர்
நாதன் வந்திறைஞ்சும் நைமிசாரணியத்
தெந்தையைச் சிந்தையுள்வைத்துக்
காதலே மிகுத்த கலியன் வாயொலிசெய்
மாலை தான் கற்றுவல்லார்கள்
ஓதநீர் வையகமாண்டு வெண்குடைக்கீ
ழும்பரு மாகுவர்தாமே. (க0)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஏதம்வந்து | து:கங்கள் வந்து | நைமிசாரணியத்து எந்தையை | திரு நைமிசாரண்யத்திலெழுந்தருளியிருக்கும் என்ஸ்வாமியை |
| அணுகாவண்ணம் | கிட்டாதபடி | சிந்தையுள்வைத்து | ஹ்ருதயத்தில் வைத்துக்கொண்டு |
| நாம் எண்ணி | நாம் மநோரதித்து | காதல்மிகுத்த | (பகவத் விஷயத்தில்) ஆசை அதிசயித்த |
| தொழுதும் | (அவனை) ஆஸ்ரயிப்போம் | கலியன் | ஆழ்வார் |
| எழுமின்என்று | ஒருப்படுங்கோள் என்று | வாய் | அருளிச்செய்த |
| இமையோர் | தேவர்களும் | | |
| நாதன் | அவர்களுக்கு நிர்வாஹகனான இந்த்ரனும் | | |
| வந்து இறைஞ்சும் | வந்து ஆஸ்ரயிக்கிற | | |

யென்னுமத்தாலே. †புருஷகாரபல(ப)த்தாலே. (திரையித்யாதி) ஸ்ரமஹரமான திருப்பாற்கடலிலே வந்து கண் வளர்ந்தருளினவனே! (மாநெடுங்கடல்) பரப்பிலு மாழத்திலுமாயிற்று. (நானுடை யித்யாதி) †தம்முடையவ்ருத்தியிருந்தபடியடையக் கீர்த்தித்தாரிறேமுன்பே; இனி நானுடைத்தவமென்கிறது—அவன்றன்னை. † நான் பண்ணின தபஸ்ஸாலே திருவடிகளிலே வந்து சரணம் புகுந்தேன். (நைமிசாரணியத்துளித்யாதி) †ஜகத்ஸ்ருஷ்டிபண்ணியும் அவதரித்தும் உகந்தருளின நிலங்களிலே வந்து ஸந்நிஹிதனாயுமிறே ஸுக்ருதத்தை உத்பாதிப்பது. ... ... .... (கூ)

' (மறமான செயல் செய்யமாட்டாய்) என்றது, கோபத்தால்வந்த தண்டனைபண்ணமாட்டா யென்றபடி, பலிதம், (புருஷகாரபலத்தாலே) என்றது. இத்தால், பூர்வகண்டத்தில் ஸ்ரீமத்பதார்த்தமநுஸந்திக்கப்பட்டது. "திரை" இத்யாதியாலே (க) "ஏஷ நாராயண: ஸ்ரீமாந் - ஏஷநாராயணஸ்ரீமாந்" என்கிறவசநத்தின்படியே நாராயணசப்தார்த்த மநுஸந்திக்கப்பட்டது. "உன்றன்சரணமே" என்று ஸாவதாரணமாக அநுஸந்தித்தவர் "நானுடைத்தவம்" என்னைக்குக்கருத்தென்னென்னுமத்தை ஸங்யாமகமாக வருளிச்செய்கிறார், (தம்முடையவித்யாதி). ' சப்தார்த்தம், (நானித்யாதி). அவனே தம்முடைய தபஸ்ஸென்னும்படி அவன் பண்ணின வ்யாபாரமென்னென்ன; "எந்தாய்" என்றத்தையுட்கொண்டருளிச்செய்கிறார், (ஜகதித்யாதி).

(க) ஹரிவம்சம் - ககரு - கூஉ.

| | | | |
|---|---|---|---|
| ஒலிசெய்மாலை | சப்தஸந்தர்ப்பங்களை | வெண் | வெளுத்த |
| கற்றுவல்லார்கள் | அர்த்தத்துடன் கற்க வல்லவர்களுடைய | குடைக்கீழ் | குடைநிழலின்கீழே |
| | | ஆண்டு | செங்கோல்செலுத்தி |
| நீர் | ஜலஸம்ருத்தியையுடைய | உம்பரும்ஆகுவர் | நித்யஸூரிகளோடும் ஒருகோவையாகப் பெறுவர். |
| ஓதம் | கடலாலேசூழப்பட்ட | | |
| வையகம் | இப்பூமியை | | |

**வ்யா.**—பத்தாம்பாட்டு. (ஏதமித்யாதி) † து:க்கங்கள் வந்து கிட்டாதபடியை மநோரதித்து, அவனைத் தொழுதுஜ்ஜீவிப்போம், ஒருப்படுங்கோள் என்று, தேவர்களோடேகூட அவர்களுக்கு நிர்வாஹகனான இந்த்ரன் வந்தாச்ரயிக்கிற திருநைமிசாரண்யத்திலே வந்து ஸந்நிஹிதனான ஸ்வாமியை ஹ்ருதயத்திலேவைத்து. அன்றிக்கே, நித்யஸூரிகளோடே ஸ்ரீஸேநாபதியாழ்வார் வந்து ஆச்ரயிக்கிறவென்னுதல். (காதலே மிகுத்த) பகவத்விஷயத்திலாசைமிகுந்துவருகிற ஆழ்வாரருளிச்செய்த சப்தஸந்தர்ப்பத்தை அர்த்தஸஹிதமாகக் கற்கவல்லவர்கள். †இருந்தவனுக்கு ஒதுங்க நிழல்பண்ணிக் கொடுத்தபடியாயிற்று. (ஓதநீர்வையகமாண்டு) † நித்யஸூரிகளோடொருகோவையாமதுதானே ஸித்தமிறே. அபேக்ஷையுண்டாகில், ஐச்வர்யத்தையும் நிர்வஹித்துப் பின்னை நித்யஸூரிகள் பதத்தைப் பெறுவர். ... ... ... ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

**அரு.**—பத்தாம்பாட்டு. (ஏதமித்யாதி) "ஏதம் வந்தணுகா வண்ணம் நாமெண்ணி, தொழுதும், எழுமினோ" இத்யாத்யந்வயம் விவக்ஷித்தருளிச்செய்கிறார், (துக்கங்களித்யாதி). இமையோர்நாதன், ஸ்ரீஸேநாபதியாழ்வானென்னும் பக்ஷத்தில், நாமுங்களுக்கு ஏதம்வந்தணுகா வண்ணமெண்ணிவந்தோம், தொழுதும், எழுமினோ என்றுசொல்லும்படியிருக்கிற நைமிசாரணியத்தெந்தை, என்றத்யாஹரித்து யோஜித்துக்கொள்வது. அன்றிக்கே, சிலாநுபவாலாபப்ரயுக்த ஏதமென்று விவக்ஷித்து முன்புத்தைப்போலே அந்வயித்துக் கொள்ளவுமாம். (இருந்தவன்) இத்யாதிவாக்யத்துக்கு, "சிந்தையுள் வைத்து" என்று தன்னெஞ்சிலிருந்தவனுக்குக் காதலாகிற நிழல்பண்ணிக் கொடுத்தாரென்று கருத்து. ஐச்வர்யத்தையும் பலமாக இவரருளிச்செய்கைக்கு, "இருங்கடலுலகமாண்டு," என்கிறபாட்டிலே யொருபரிஹாரமருளிச்செய்தாராய், இங்கே பரிஹாராந்தரமருளிச்செய்கிறார், (நித்யஸூரிகளோடித்யாதி). 'அன்றிக்கே, ஏகபரிஹாரமேயாய் பாகவதகைங்கர்யத்திலபேக்ஷையுண்டாகிலென்று சொல்லவுமாம்.... ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளேசரணம்.

முதற்பத்தில் - ஆறாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து - ஏழாந்திருமொழி - அங்கண்.

மூ.—அங்கண்ஞால மஞ்ச வங்கோ ராளரியாய் அவுணன்
பொங்க வாகம் வள்ளுகிரால் போழ்ந்த புனிதனிடம்
பைங்கணானைக் கொம்புகொண்டு பத்திமையாலடிக்கீழ்
செங்கணாளி யிட்டிறைஞ்சும் சிங்கவேழ் குன்றமே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அங்கு | ப்ரஹ்லாதன் ப்ரதிஜ்ஞைபண்ணின அவ்விடத்திலேயே | புனிதன் | பரிசுத்தனான ஸர்வேச்வரன் (வர்த்திக்கிற |
| அம் | அழகியதாய் | இடம் | ஸ்தாநமாவது, [ய |
| கண் | இடமுடைத்தான | செங்கண் | சிவந்தகண்களையுடை |
| ஞாலம் | பூமியெல்லாம் | ஆளி | ஸிம்ஹங்களானவை |
| அஞ்ச | பயப்படும்படி | பை | பசுமையையுடைய |
| ஓர் | அபூர்வமான | கண் | கண்களையுடைத்தான |
| ஆள் அரியாய் | நரஸிம்ஹ ரூபியாய் (த்தோற்ற) (அத்தைக்கண்டு) | ஆனை | யானைகளின் |
| | | கொம்பு | கொம்புகளை |
| | | கொண்டு | பறித்துக்கொண்டு |
| அவுணன் | ஹிரண்யாஸுரன் | பத்திமையால் | பகவத்பக்தியாலே |
| பொங்க | கிளர [தை | அடிக்கீழ் | திருவடிகளிலே |
| ஆகம் | (அவனுடைய) சரீரத் | இட்டு | ஸமர்ப்பித்து |
| வள்உகிரால் | கூர்மையுள்ளதிருவுகிரால் | இறைஞ்சும் | ஆச்ரயிக்கிற, |
| | | சிங்கவேழ்குன்றம் | சிங்கவேழ்குன்றமாம். |
| போழ்ந்த | பிளந்துபொகட்ட | | |

அ௩.—அங்கண்ப்ரவேசம்—கீழ்த்திருமொழியில் ஆழ்வார் தம்முடைய பூர்வவ்ருத்த கத்தமுகேந அநந்யோபாயத்வத்தை முன்னிட்டு ஒருகாலைப் போலே ஒன்பதின் காலும் "திருவடியடைந்தேன்" என்று பெரியபிராட்டியார் புருஷகாரமாக ஆச்ரயித்தபடியை அநுஸந்தித்த ஈச்வரன் (க) "గోవిన్దేతియదాక్రన్దత్కృష్ణామాం దూరవాసినమ్। ఋణంప్రవృద్ధమివమే హృదయా న్నాపసర్పతి-கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம்|ருணம் ப்ரவ்ருத்தமிவமே ஹ்ருதயாந் நாபஸர்ப்பதி" என்னும்படியிருப்பானொருவனை யாலே, இவரத்யவஸாயத்தளவு ஸஹிக்கமாட்டாதே, (உ) "ఉపమానమశేషాణాం సాధూనామ్-உபமாநமசேஷாணாம் ஸாதூநாம்" என்கிறபடி இவர்க்குப்போல யான சிறுக்கனுக்குதவி அவ்வடிவையெல்லார்க்கு மாக்கிக்கொண்டிருந்த சிங்கவேழ்குன்றத்திலிருப்பைக்காட்டக் கண்டநுபவிக்கிறாரென்று ஸங்கதி

(க) பார-உத்யோ-௬௯-உஉ. (உ) வி-பு-க-௧௫-௧௫௬.

வ்யா.—அங்கண்ப்ரவேசம்.—(க)†"ஒன்பதுவாசல்தானுடைக் குரம்பை பிரியும்போதுன்றன் சரணமே சரணமென்றிருந்தேன்" என்றீரே; நீரிப்படி ஒருதலையிலத்யவஸாயமாகச் சொல்லுகிற தென்தான்? இத்தலையில் செயலற்றவளவிலே ப்ரஹ்லாதனுடைய ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே ப்ரதிஜ்ஞைபண்ணின விடத்திலேவந்து ஸந்நிதிபண்ணி அவனுடைய விரோதியைப்போக்கி உபகரித்திலோமோ, அதுதான் அக்காலமொன்றிலுமேயாய்ப் பிற்பட்டகாலத்திலுள்ளார்க்கு மிழக்கவேண்டாதபடி, (உ)†"உன்னைப் பிரமாணித்தார் பெற்றபேறு" என்கிறபடியே ஆஶ்ரிதரானா ரெல்லார்க்குமாகச்செய்த செயலன்றோ. ஆனபின்பு உம்முடையபோல்வார்க்கு இழக்கவேண்டாதபடி சிங்கவேழ்குன்றிலேவந்து நீர் கிட்டி யநுபவிக்குமதுவே குறையாக நாம் வந்திருந்தோமே, இப்படியிருக்க, ஒருதலை யத்யவஸாயமேயாக நீர்சொல்லுவானேன்? என்று தான் சிங்கவேழ்குன்றிலேவந்து ஸந்நிதிபண்ணினபடியைக்காட்டிக்கொடுக்க; அங்கே புருஷகாரபூதையான †பிராட்டியாரோடேகூட வெழுந்தருளியிருக்கிற விருப்பையநுஸந்தித்து ஹ்ருஷ்டராய், உத்தேஶ்யனாயிருக்கிறவன் வந்திருக்கிற தேசமாகையாலே அங்குள்ளதடைய உத்தேஶ்யமாய், சிலரால்வந் தணுகவொண்ணாதபடி ஸாரஸ்யிதமாகவெழுந்தருளியிருக்கப்பெற்றது என்று† திருவுள்ளத்தோடே கூடிப்போயநுபவிக்கையிலே யொருப்படுகிறார்.

முதற்பாட்டு, (அங்கண்ஞாலமஞ்ச) அழகிதான இடத்தையுடைத்தாயிருந்துள்ள பூமியாக அஞ்ச. நரஸிம்ஹமாயிற்றுத்தான் ஜகத்ரக்ஷணத்துக்காகவிறே; அங்ஙனே யிருக்கச்செய்தேயும் இதினுடைய†விளைவதறியாமையாலே ஜகத்தாக நடுங்கிற்றாயிற்று. இதை

தன்னை யருளிச்செய்கிறார், (ஒன்பதித்யாதி). (பிரமாணித்தார் பெற்றபேறு) என்றதுக்குத் தாத்பர்யம் - அன்று இரத்தானுக்குக் காரியம் செய்த நீ இன்று எனக்கும் செய்யவேணுமென்று வழக்குச்சொல்லிக் கார்யங் கொள்ளவாயிருக்கையாலே, அன்று ஒராஶ்ரிதனுக்குச் செய்தது இன்றெல்லார்க்குமாகச் செய்ததாமென்று. (பிராட்டியாரோடே)என்றது-(ஈ)"அல்லிமாதர்" என்றத்தைப்பற்ற. (ஈ) "நல்லநெஞ்சே!" என்றத்தைப்பற்ற, (திருவுள்ளத்தோடே) என்றது. இத்திருமொழியாலே உத்தரகண்டார்த்தமான ப்ராப்யாநுபவம் பண்ணுகிறாரென்று கருத்து.

முதற்பாட்டு. (அங்கணித்யாதி). (விளைவதறியாமையாலே) என்றது - ஆஶ்ரிதவிரோதியைப்போக்குகைக்காகக் கொண்ட சீற்றம் என்றறியாமை

(க) க-ரு-கூ. (உ) உ திரு-கக (ஈ) க-எ-கூ.

வ்வளவாய்த் தலைக்கட்டுகிறதோ என்றிருந்ததாயிற்று. (அங்கு) அவன் ப்ரதிஜ்ஞைபண்ணின அவ்விடந்தன்னிலே. (ஓராளரியாய்) இதுக்கு முன்போரிடத்திலும் கண்டறியாத நரஸிம்ஹமாய். (அவுணன்பொங்க) ஆஸுரப்ரக்ருதியான ஹிரண்யன் கிளர்ந்தானாயிற்று, †நரஸிம்ஹத்தைக் கண்டகாட்சியிலே. இதுக்குமுன் பொருவன், "நான் எதிரி" என்று தோற்றக்கண்டறியானே, இவனுடையதோற்றரவிலே கிளர்ந்தானாயிற்று, அவனுடைய சரீரத்தைக் கூரிய திருவுகிராலே யிருபிளவாம்படி பண்ணின. சில அசித்பதார்த்தங்களை வகிர் செய்யுமாபோலேயாயிற்றுப்†போழ்ந்தபடி. (போழ்ந்தபுனிதனிடம்) ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளில்வந்தால் ப்ரஹ்மாதிகளையேவித் தான்கடக்கவிருக்கும்; அங்ஙனன்றியே, தானே கைதொட்டு வ்யாபரிக்கையாலே பிறந்த † சுத்தியைச்சொல்லுகிறது. அவனப்படி பின்புள்ளார்க்கு உதவுகைக்காக வர்த்திக்கிறஸ்தாநம்.

(பைங்கணித்யாதி) † ஹிரண்யனைக்கண்ட நரஸிம்ஹத்துக்குச் சீற்றம் மாறாதாப்போலே, ஆனைகளைக்கண்ட ஸிம்ஹங்களுக்கும் சீற்றம்மாறாதேயிருக்கும்படி. (பைங்கண்) ஜாத்யுசிதமான பசுமையையுடைத்தாயிருக்குமாயிற்று. (கொம்பு கொண்டு) ஆனையினுடைய மஸ்தகத்தைக்கிழித்து அதினுடைய கொம்பைப்பறித்து பகவத்பக்தியாலே திருவடிகளிலேயிட்டு ஆஸ்ரயியாநிற்கு மாயிற்று ஸிம்ஹங்களானவை. (க) "யதந்ந: புருஷோ பவதி - யதந்நঃ புருஷோபவதி" இறே. செங்கணாளி பைங்கணானைக்கொம்புகொண்டு பத்திமையாலடிக்கீழ் இட்டிறைஞ்சும். (செங்கணாளி) இவற்றுக்கானைகளின்மேலே சீற்றம்மாறாதே யிருக்கச்செய்தேயும், பகவத்பக்தி ஒருபடிப் பட்டுச்செல்லுமாயிற்று. சீற்றம் விக்ருதியாய், பகவத்பக்தி ப்ரக்ருதியாயிருக்குமாயிற்று. ... ... (க)

யாலேயென்கை. பூமியாக அஞ்ச ஹிரண்யன் கிளர்ந்ததுக்கு ஹேதுவென்னென்ன; அருளிச்செய்கிறார், (நரஸிம்ஹத்வத யித்யாதி). (போழ்ந்தபடி) பிளந்தபடி. (சுத்தியை) பாவசுத்தியை.

"செங்கணாளி" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம், (ஹிரண்யனையித்யாதி). (உ) *வலியிக்க பெயமான விராமாநுசனேடொப்பார், பாவாதிமத்தகஜங்கள் மேல் கொண்ட சீற்றத்தோடே யிருக்கச்செய்தேயும் பகவத்பக்தி குறைவற்றிருப்பரென்று ஸ்வாபதேசம்.... ... ... ...(க)

(க) ரா-அயோ-க0ௌ-ரு0. (உ) இரா - நூ - அஅ.

மூ.—அலைத்த பேழ்வாய் வாளெயிற்றோர் கோளரியாய் அவுணன்
கொலைக் கையாளன் நெஞ்சிடந்த கூருகிராளனிடம்
மலைத்த செல்சாத் தெறிந்தபூசல் வன்துடிவாய் கடுப்பச்
சிலைக்கை வேடர் தெழிப்பறாத சிங்கவேழ் குன்றமே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அலைத்த | (சீற்றத்தாலே) நாவலையா நின்றுள்ள | மலைத்த | (வேடரால்) தகையப்பட்ட |
| பேழ்வாய் | பெரியவாயையும் | செல் | தீர்த்தயாத்ரைபோகிறவர்களுடைய |
| வாள் | ஒளிதங்கின | சாத்து | ஸமூஹமானது |
| எயிறு | பற்களையும் | எறிந்த | இட்ட |
| ஓர் | ஒப்பற்ற | பூசல் | யுத்தத்திலே |
| கோள் | மிடுக்கையுமுடைய | வல் | மிகவும் த்வநியாநின்றுள்ள |
| அரியாய் | ஸிம்ஹமாய்க்கொண்டு [பாவமான | | |
| கொலை | கொல்லுகையே ஸ்வ | வாய் | வாயையுடைத்தான |
| கையாளன் | கையையுடையனான | துடி | உடுக்கை |
| அவுணன் | ஹிரண்யனுடைய | கடுப்ப | சப்திக்கவும் |
| நெஞ்சு | மார்வை | சிலை | வில்லை [ன |
| இடந்த | கிழித்துப்பொகட்ட | கை | கையிலேயுடையரா |
| கூர்உகிராளன் | கூரிய திருவுகிரையுடைய ஸர்வேச்வரன் நித்யவாஸம்பண்ணுகிற | வேடர் | வேடருடைய |
| | | தெழிப்பு | ஆரவாரமானது |
| | | அறாத | எப்போதும்மாறாத |
| | | சிங்கவேழ்குன்றம். (உ) | |
| இடம் | ஸ்தாநமானது, | | |

வ்யா—இரண்டாம்பாட்டு. (அலைத்த) சீற்றத்தாலே கடைவாய்களோடே நாக்கையெற்றிக்கொள்ளா நின்றுள்ள பெரியவாயையும், ஒளியையுடைத்தான எயிற்றையுமுடைய அத்விதீயமான †மிடுக்கையுடைத்தான ஸிம்ஹமாய். (அவுணன் கொலைக்கையாளன்) †நாட்டார் பரஹிம்ஸைபண்ணுவது தந்தாமுடையப்ரஜைகளுடைய ரக்ஷணத்துக்காகவிறே; இவனுக்கதுபோய் ப்ரஜையை ஹிம்ஸிக்குமது பலித்ததாயிற்று. †பரஹிம்ஸை பண்ணுகைக்கு தேவதைகள் பக்கலிலே வரம்பெற்று அதுதானே யாத்ரையாய்த்திரிகிற அஸுரனுடைய நெஞ்சை யிடந்த கூரிய திருவுகிரையுடையவன் வர்த்திக்கிற ஸ்தாநம்.

அரு.—இரண்டாம்பாட்டு. (அலைத்தவித்யாதி). *ஞாலமஞ்ச ஆளரியான ப்ரகாரத்தை வர்ணிக்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

"கோள்" என்றதினர்த்தம், (மிடுக்கை) என்றது. ⁑[கொலைக்கையாளனை அவுணன் - நெஞ்சிடந்த] என்றந்வயம். கொலையே ஸ்வபாவமாகவுடைய கையையுடையவனென்று சப்தார்த்தம். அத்தையுபபாதிக்கிறார், (நாட்டாரித்யாதி). வாக்யார்த்தம், (பரஹிம்ஸை யித்யாதி).

ரு.—எய்ந்த பேழ்வாய் வாளெயிற்றோர் கோளரியாய் அவுணன்
வாய்ந்த வாகம் வள்ளுகிரால் வகிர்ந்த வம்மானதிடம்
ஓய்ந்தமாவு முடைந்தகுன்று மன்றியும் நின்றழலால்
தேய்ந்த வேயு மல்லதில்லாச் சிங்கவேழ் குன்றமே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எய்ந்த | வடிவுக்குத்தக்க | அரியாய் | நரஸிம்ஹ ரூபியாய்க் கொண்டு |
| பேழ் | பெருத்த | அவுணன் | ஆஸுரப்ரக்ருதியான ஹிரண்யனுடைய |
| வாய் | வாயையும் | வாய்ந்த | (நரஸிம்ஹத்துக்குத்) தகும்படி வளர்ந்த |
| வாள் | வாள்போன்ற | ஆகம் | சரீரத்தை |
| எயிறு | பற்களையும் | வள்உகிரால் | கூரியதிருவுகிராலே |
| ஓர் | ஒப்பற்ற | | |
| கோள் | மிடுக்கையுமுடைய | | |

(மலைத்தவித்யாதி) †திரள் திரளாகத்தீர்த்த யாத்ரைபோகாநிற்பர்களே; அவர்களைப்பறிக்கைக்காக அங்குண்டான வேடர் வந்து மலைத்து மேல்விழுவர்கள்; இவர்களும் அவர்களோடே யெதிர்ப்பர்கள். (எறிந்தபூசல்) எறிதல் - இடுதல்; இட்டபூசல். அவர்கள் இவர்களைச்†சூறை கொள்ளுகிற பூசலிலே. (வன்துடிவாய்கடுப்ப) கேட்டபோதே முடியும்படியான த்வநியையுடைத்தாயிருக்கிற துடியானது †கடுப்ப. (சிலைக்கை) கையில் வில்லையுடையராயிருந்துள்ள வேடருடைய†ஆர்ப்பரவம்மாறாத தேசமாயிற்று; அவர்கள் கையில் பயாவஹமான துடியோசையும் பறிக்கிற ஆர்ப்பரவமுமேயாய்ச் செல்லாநிற்குமாயிற்று. †உகந்தருளின நிலங்களிலே யுள்ளதாகையாலே அவர்கள் கையில்துடியோசையோடு அவர்களைப்பறிக்கிற த்வநியோடு வாசியற உத்தேஶ்யமாயிருக்கிறதாயிற்று. நரஸிம்ஹத்தினுடையசீற்றத்தோடு அங்குள்ளாருடைய சீற்றத்தோடு அவர்கள் வ்யாபாரத்தோடு வாசியற்றிருக்கிறதாயிற்றிவர்க்கு. ... ... (௨)

மலைத்த-தகையப்பட்ட, செல்சாத்து-செல்லாநிற்கிற ஸமூஹமென்று சப்தார்த்தமாய், அத்தை வர்ணிக்கிறார், (திரளித்யாதி). சூறை-புடைவை. கடுப்ப-சப்திக்க. தெழிப்பு - என்றதினர்த்தம், (ஆர்ப்பரவம்) என்றது. தீர்த்தயாத்ரைபோகிறவர்களுடைய சூறைகொள்ளுகிற வேடரை இவர் வர்ணிப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார், (உகந்தருளின வித்யாதி). இத்தால்-(க) "యస్యానుగ్రహమిచ్ఛామి తస్య విత్తం హరామ్యహమ్ - யஸ்யாநுக்ரஹமிச்சாமி தஸ்ய வித்தம் ஹராம்யஹம்" என்கிற ஈஶ்வரனைப்போதி அவர்களும் கைம்முதல் வாங்கி அகிஞ்சநர்களாக்கிவிட்டு இவர்களுடைய ஸர்வஸ்வத்தையும் ஆனியைப்போலே அந்நரஸிம்ஹத்துக்குச் சேஷமாக்குமவர்களாகையாலே உத்தேஶ்யமாய் வர்ணித்தாரென்றதாயிற்று. ... ... ... ...(௨)

(க) கீதை

| | |
|---|---|
| வகிர்ந்த | அநாயாஸேந கிழித்துப்பொகட்ட |
| அம்மானது | ஸர்வேஶ்வரனுடைய |
| இடம் | ஸ்தாநமானது, |
| ஓய்ந்த | (ஸாரமில்லாதநிலத்தில் ஸஞ்சரிக்கையாலே) ஓய்ந்துகிடக்கிற |
| மாவும் | ம்ருகங்களும் |
| உடைந்த | (தீக்கதுவி) உடைந்த |

| | |
|---|---|
| குன்றும் | சிறுமலைகளும் |
| அன்றியும் | அதுக்குமேலே |
| நின்று | தன்னிலேயுண்டான |
| அழலால் | நெருப்பாலே |
| தேய்ந்த | குறைக்கொள்ளியாய்க்கிடக்கிற |
| வேயும் | மூங்கிலும் |
| அல்லது | ஒழிய |
| இல்லா | வேறில்லாத |

சிங்கவேழ்குன்றம். (௩)

வ்யா.—மூன்றாம்பாட்டு. (ஏய்ந்தவித்யாதி) வடிவிற் பெருமைக்குத்தகுதியான பெரிய வாயையும்; வாள்போலேயிருந்துள்ள எயிறென்னுதல்; ஒளியையுடைத்தான எயிறென்னுதல். (ஓர் கோளரியாய்) மிடுக்கையுடைய அத்விதீய நரஸிம்ஹமாய், அவுணனுடைய - ஆஸுர ப்ரக்ருதியானவனுடைய, வாய்ந்த வாகமுண்டு - நரஸிம்ஹத்துக்குத் தகுதியாம்படி வளர்ந்த சரீரம், அத்தைக் கூரிய வுகிராலே வகிர்ந்த ஸர்வேஶ்வரனுடைய ஸ்தாநம்.

(ஓய்ந்தமாவும்) தளர்ந்து பசையற்ற நிலத்தின் ஸஞ்சாரத்தாலே அந்நிலத்துக்கடைத்த திர்யக்குக்களும் ஓய்ந்திருக்குமாயிற்று. (உடைந்தகுன்றும்) தொட்டாரோடே தோஷமாம்படி தீக்கதுவியுடைந்தகுன்றும், அதுக்குமேலே, தன்னிலேயுண்டான அழலாலே தேய்ந்த மூங்கிலுமல்லதில்லாத சிங்கவேழ்குன்றமே. †தன்னிலேயுண்டான நெருப்பாலே தேய்ந்த வேய்களும் (க)*வண்டினமுரலுஞ்சோலையோபாதியாகத் தோற்றுகிறதாயிற்றிவர்க்கு. (உ) "அதுவிது வுதுவென்னலாவனவல்ல" என்னக்கடவதிறே. † பிறர்க்குக் குற்றமாய்த் தோற்றுமவையும் உபாதேயமாய்த் தோற்றுகையிறே ஒருவிஷயத்தை உகக்கையாகிறது. .. .. (௩)

அநு.—மூன்றாம்பாட்டு. (ஏய்ந்தவித்யாதி). இவரவன்வாயைப்பார்த்துக்கொண்டிருக்குமவராகையாலே மீளவுமவன் வாயை வர்ணிக்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

"மா" என்று நாலுகாலுடைய ஜந்துக்களாய், ம்ருகங்களைச் சொல்லுகிறது. தேய்ந்த - குறைக்கொள்ளியான. குறைக்கொள்ளியைக்கொண்டாடுவானென்னென்ன; அருளிச்செய்கிறார், (தன்னிலேயித்யாதி). அவன்ஸம்பந்தமுள்ளதெல்லா முத்தேஶ்யமாய்த் தோற்றுகைக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார், (பிறர்க்கித்யாதி). ஆக, நரஸிம்ஹம் தன்னிலுண்டான கோபாக்நி

(க) தி - மா - கஉ. (உ) தி - வாய் - ௬ - ௧௦ - உ.

மூ.—எவ்வும் வெவ்வேல் பொன்பெயரோ னேதலனின்னுயிரை
வவ்வி ஆகம் வள்ளுகிரால் வகிர்ந்த வம்மானதிடம்
கவ்வு நாயும் கழுகு முச்சிப் போதொடு கால் சுழன்று
தெய்வ மல்லாற் செல்லவொண்ணுச் சிங்க வேழ் குன்றமே.()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எவ்வும் | து:கத்தைப்பண்ணு நிற்பதாய் | நாயும் | நாய்களும் [குகளும் |
| வெம் | க்ரூரமான | கழுகும் | (அப்படிப்பட்ட) கழு |
| வேல் | வேலையுடைய | உச்சிப்போதொடு | ஆதித்யனோடுகூட |
| ஏதலன் | சத்ருவான | கால்சுழன்று | கால் தடுமாறுமதாய் |
| பொன்பெயரோன் | ஹிரண்யனுடைய | தெய்வம் அல்லால் | தன்னை விரும்பித் தொழும் ஆஸ்ரிதர்க்கொழிய |
| இன் உயிரை | நற்ஜீவனை | செல்லவொண்ணு | சென்று கிட்டவொண்ணுத |
| வவ்வி | பரிக்ரஹித்து [தை | | சிங்கவேழ்குன்றம். (ச) |
| ஆகம் | (அவனுடைய) சரீரத் | | |
| வள்ளுகிரால்வகி | ர்ந்த அம்மானதிடம், | | |
| கவ்வும் | கண்டாரையெல்லாம்) கவருமதான | | |

வ்யா.— நாலாம்பாட்டு. (எவ்வும் வெவ்வேல் பொன்பெயரோன்) கையும் வேலுமாயிருக்கிற விருப்பைக் கண்டகாட்சியிலே, அது உடம்பிலே தைத்தால் பிறக்கும் து:க்கமெல்லாம் பிறக்கும்படியிருக்கை. எவ்வத்தைப்பண்ணுநின்றுள்ள வெவ்வியவேலையுடைய, பொன் பெயரோனுண்டு, ஹிரண்யன். எவ்வம் - து:க்கம், ஏதலன் - சத்ரு. சிறுக்கனுக்கு சத்ருவானபோதே தனக்கும் சத்ருவாயிருக்கிறுனுயிற்று. † "சத்ருக்ருஹத்தில் புஜிக்கவுமாகாது" என்றுனிறே. பாண்டவர்களுக்கு சத்ருவானபோதே தனக்கும்

யாலே குன்றுபோன்ற ஹிரண்யன் நெஞ்சுடைந்து தத்ரத்யரான ராக்ஷஸராகிறதுஷ்ட ம்ருகங்கள் ஓய்ந்து கிடக்கிறபடிக்கு ஸ்மாரகமாய் இவர்க்கு உத்தேஸ்யமாய்த் தோற்றுகிறதென்றதாயிற்று. ... ... ... (ரு)

அரு.—நாலாம்பாட்டு. (எவ்வுமித்யாதி). கீழ் "கோளரியாய்" என்று மிடுக்கைச்சொன்னது உபபந்நமென்று தோற்ற சத்ருவான ஹிரண்யனை வர்ணிக்கிறுரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

(க) "ద్విషదన్నం న భోక్తవ్యం ద్విషన్తం నైవ భోజయేత్। పాణ్డవాన్ ద్విషసే రాజన్ మమ ప్రాణా హి పాణ్డవాః - த்விஷதந்நம் நபோக்தவ்யம் த்விஷந்தம் நைவபோஜயேத் | பாண்டவாந் த்விஷஸே ராஜந் மமப்ராணுஹி பாண்டவா:" என்றவசநத்தை யுட்கொண்டு கீழ்ச்சொன்ன அர்த்தத்தை ஸாதிக்கிறுர், (சத்ருக்ருஹத்திலித்யாதி).

(க) பார - உத்.

மூ.—மென்ற பேழ்வாய் வாளெயிற்றோர் கோளரியாய் அவுணன்
பொன்ற வாகம் வள்ளுகிரால் போழ்ந்த புனிதனிடம்
நின்ற செந்தீ மொண்டு சூறை நீள்விசும் பூடிரியச்
சென்று காண்டற் கரிய கோயில் சிங்கவேழ் குன்றமே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மென்ற | (சீற்றத்தாலே) மெல்லாநின்றுள்ள | ஓர் அரியாய் | அத்விதீயநரஸிம்ஹமாய் |
| பேழ்வாய் | பெரியவாயையும் | பொன்ற | (அவ்வடிவைக்கண்டபோதே) நசித்த |
| வாள் | வாள்போன்ற | | |
| எயிறு | பற்களையும் | அவுணன் | அஸுரனான ஹிரண்யனுடைய |
| கோள் | மிடுக்கையுமுடைய | | |

சத்ருவானபடி. அவனுடைய இன்னுயிரை அவன் விரும்பின வுயிரை. வவ்வி-பரிக்ரஹித்து. (க) "పపౌ జనార్దనః క్రుద్ధః - பபௌ ஜநார்தந: க்ருத்த:" என்கிறபடியே.

(கவ்வுநாயும்) ஆரேனுமாகக் கண்டபோதே கவ்வியல்லது நில்லாத நாயும், அப்படி கவ்வும் கழுகும். (உச்சிப்போதொடு கால்சுழன்று) ஆதித்யனும் அங்கிலத்திலே வந்தவாறே கால்தடுமாறிச்சுழன்று வாராநிற்குமாயிற்று. உச்சிப்போதுண்டு - ஆதித்யன், அவனோடேகூட, கவ்வு நாயும் கழுகுமாகக்கால்சுழன்று வாராநிற்குமென்னுதல்; அன்றிக்கே, உச்சிப்போதோடே, காலுண்டு - காற்று, அது சுழன்று வாராநிற்கும். †நில வெம்மையைச் சொன்னபடி. †அத்தேசத்தைச் சென்று ப்ராபிக்க ஆசைப்படுகிறவர், "தெய்வமல்லால் செல்லவொண்ணா" என்கிறாராயிற்று, நரஸிம்ஹத்தினுடைய அழகைக்கண்டு கண்ணெச்சில் படுவாரில்லையென்னுமத்தைப்பற்ற. (உ) "அந்தியம்போதிலரியுருவாகியரியை யழித்தவனைப்பல்லாண்டு" என்னுமவர்களிறே. †அநாஸ்ரிதர்க்குச் சென்று கிட்டவொண்ணாதாயிற்று. ஹிரண்யன்போல்வார்க்குச் சென்று ப்ரவேசிக்கப் போகாதாயிற்று. ... ... (ச)

உஷ்ணகிரணனான ஆதித்யனுக்கும் கால்தடுமாறும்படி யென்னென்ன; அருளிச்செய்கிறார், (நிலவெம்மையித்யாதி). தாம் கிட்ட வாசைப்படுகிறவர் "தெய்வமல்லால் செல்லவொண்ணா" என்னக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார், (அத்தேசத்தையித்யாதி வாக்யத்ரயத்தாலே). இங்கு "தெய்வம்" என்றதுக்கு (ந) "విష్ణుభక్తిపరో దేవః - விஷ்ணுபக்திபரோதேவ:" என்கிறபடியே மங்களாசாஸநபரன்விநா ஆஸுரப்ரக்ருதிகளுக்குக் கிட்டவொண்ணாதென்று தாத்பர்யம் விவக்ஷித்தருளிச்செய்கிறார், (அநாஸ்ரிதர்க்கித்யாதி). (ச) "శీతో భవ హనూమతః - ஸீதோபவ ஹநூமத:" என்கிறபடியே அந்நிலவெம்மைதானே குளிர்த்தியைக்கொடுக்குமென்று கருத்து. ... (ச)

(க) வி-பு-க-கக-உச. (உ) தி-பல்-கூ. (ந) விஷ்ணுத- (ச) ரா-ஸு-நகு-உக.

| | | | |
|---|---|---|---|
| ஆகம் | சரீரத்தை | சூறை | சுழல்காற்றானது |
| வள்உகிரால் | கூரியதிருவுகிராலே | மொண்டு | முகந்துகொண்டு |
| போழ்ந்த | இருபிளவாம்படிபண்ணின | நீள்விசும்பு ஊடு | பரந்த ஆகாசத்தினிடையிலே |
| புனிதன் | பாவசுத்தியையுடைய ஸர்வேஶ்வரனெழுந்தருளியிருக்கிற | இரிய | சிதறவோகையாலே |
| | | சென்று | அருகேபோய் |
| | | காண்டற்கு | காண்கைக்கு [க்கிற |
| இடம் | ஸ்தாநமானது, | அரிய | எல்லார்க்குமரிதாயிரு |
| நின்ற | குறைவற்றுக்கிடக்கிற | கோயில் | திருப்பதியான |
| செந்தீ | சிவந்த அக்நியை | | சிங்கவேழ்குன்றமே. (ரு) |

வ்யா. — அஞ்சாம்பாட்டு. (மென்றவித்யாதி) சீற்றத்தாலே மடித்த பெரியவாயையும், வாள்போலேயிருந்துள்ள எயிற்றையும் பிடிக்கையுமுடைய அத்விதீய நரஸிம்ஹமாய். (அவுணன்பொன்ற) நரஸிம்ஹத்தினுடைய தோற்றரவிலே பிணமாயிற்று. (ஆகமித்யாதி) பின்னையும் சீற்றம் மாறுமையாலே பிணத்திலே வ்யாபரித்தானித்தனையாயிற்று. (புனிதனிடம்) பிறர்க்கு உபகரித்தானுயிருக்கையன்றிக்கே தன் விரோதியைப்போக்கின சுத்தியோகத்தை நினைக்கிறதாயிற்று.

(நின்றவித்யாதி) குறைவற்றுக்கிடக்குமாயிற்று அக்நி, அத்தை முகந்துகொண்டு,†சுழல்காற்று, பரப்பையுடைத்தான ஆகாசத்திலே, இரிய - அங்கே சிதறவோட, ஆர்ப்பரவத்தைப் பண்ணவென்னுதல்; (எரிய)என்று பாடமாகில் ஆகாசந்தானே இந்தளமாக எரியவென்றபடி. (சென்று) இப்படியிருக்கையாலே ஒருவர்க்கும் சென்று காண்கைக்கரிதாயிருக்குமாயிற்று. பரமபதத்தோபாதி இந்நிலத்துக்கும் நமக்கு பயப்படவேண்டா என்று ஹ்ருடராகிறார். ()

அரு.—அஞ்சாம்பாட்டு. (மென்றவித்யாதி). சக்ரவர்த்தித் திருமகன் விற்பிடித்தபிடியிலே அஸுரர் மண்ணுண்ணுமாபோலே, நரஸிம்ஹத்தின் வாயில் பிறக்கும் விக்ருதிகளிலேயும் நசிப்பர்களென்று திருவுள்ளம்பற்றி, ஏதலனின்னுயிரை வவ்வினதுக்கு ஹேதுவான *மென்ற பேழ்வாயை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

பொன்ற - நசித்த. மென்றவாயைக்காணவே பொன்றவாகமாயிற்றென்றுகருத்து.

"சூறை" என்றதினர்த்தம், (சுழல் காற்று) என்றது. "எரிய" என்ற பாடத்திலே, சூறைவீச அது நீள்விசும்பூடு "எரிய" என்றத்யாஹரித்துக் கொள்வது. ... ... ... ... ... (ரு)

மூ.—எரிந்தபைங்கணிலங்குபேழ்வாயெயிற்றொடிதெவ்வுருவென்று
இரிந்தவானோர் கலங்கியோட விருந்தவம்மானதிடம்
நெரிந்தவேயின் முழையுள் நின்று நீணெறி வாயுழுவை
திரிந்தவானைச் சுவடுபார்க்கும் சிங்கவேழ் குன்றமே. (கூ)

| பதம். | உரை. |
|---|---|
| எரிந்த | சீற்றத்தாலே எரியாநிற்பதாய் |
| பை | பசுமையான |
| கண் | கண்களையும் |
| இலங்கு | விளங்காநின்றுள்ள |
| பேழ்வாய் | பெரிய வாயையுமுடைத்தாய் |
| எயிற்றொடு | பற்களோடு கூடியிருக்கிற (வடிவைக்கண்டு) |
| இது எவ்வுரு | இதுஎன்ன வடிவு |
| என்று | என்று அஞ்சி |
| வானோர் | தேவர்கள் |
| இரிந்து | அங்கேயிங்கேசிதறி |
| கலங்கி | கால்தடுமாறி |
| ஓட | ஓடும்படியாக |
| இருந்த | எழுந்தருளியிருந்த |
| அம்மானது | ஸர்வேச்வரனுடைய |
| இடம் | ஸ்தாநமானது, |
| நெரிந்த | ஒன்றோடொன்றுசேர்ந்திருந்துள்ள |
| வேயின் [று | மூங்கிலின் |
| முழையுள்நின் | துளைவழியாக |
| உழுவை | புலிகளானவை, |
| நீள்நெறிவாய் | பெரிய வழியிலே |
| திரிந்த | ஸஞ்சரியாநின்றுள்ள |
| ஆனை | யானைகள்(போன) |
| சுவடு | அடையாளத்தை |
| பார்க்கும் | (கந்தாக்ராணத்தாலே) பாராநின்றுள்ள |
| | சிங்கவேழ்குன்றம். (கூ) |

வ்யா.—ஆறும்பாட்டு. (எரிந்தவித்யாதி). †சீற்றத்தாலே யெரியாநிற்பதாய் ஜாதிப்ரயுக்தமான பசுமையையுடைத்தான கண்ணையும், உஜ்ஜ்வலமாகாநின்றுள்ள பெரியவாயையும், எயிற்றையுமுடைய வடிவைக்கண்டு (இதெவ்வுருவென்று) "இற்றைக்கு முன்பு கண்டறியாத தொன்றாயிராநின்றது, †இதென்னவடிவு!" என்றஞ்சி தேவர்களானவர்கள் § (ஆர்ப்பரவத்தைப்பண்ணி) † அங்கேயிங்கே

அரு.—ஆறும்பாட்டு. (எரிந்தவித்யாதி). *அங்கண்ஞால மஞ்சினவளவன்றிகே, (க) "నవాయుః పస్పన్దేయయుథురథవా స్తం శశిరవీ దిశో నశ్యన్విశ్వాప్య చలదచలా సాచలకులా । నభశ్చప్రశ్చ్యోతిక్వథితమపి సాన్ద్రోసరహంరాత్వయి స్తమ్భేశుమ్భ ద్వపుషిసతి హే సున్దరభుజ -நவாயு: பஸ்பந்தே யயுதுரதவாஸ்தம் சசிரவீ திசோநச்யந்விச்வாப்யசலதசலா ஸாசலகுலா|நபச்ச ப்ரச்ச்யோதி க்வதிதமபிபாதோநரஹரௌ த்வயிஸ்தம்பே சும்பத்வபுஷிஸதி ஹேஸுந்தரபுஜ" என்கிறபடியே-தேவர்களு மஞ்சும்படியானபடியை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

மூலத்திலே "எயிற்றொடு" என்றவநந்தரம், இருக்கிற வடிவைக்கண்டு என்றத்யாஹாரம் திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார், (சீற்றத்தாலேயித்யாதி). "இரிந்து" என்றதினர்த்தம், (அங்கே யிங்கே சிதறி) என்றது.

(க) ஸு - ஸ்த - கூகு.

மூ.—மூனைத்த சீற்றம் விண்சுடப்போய் மூவுலகும் பிறவும்
அனைத்து மஞ்ச வாளரியா யிருந்த வம்மானதிடம்
கனைத்த தீயும் கல்லுமல்லா வில்லுடை வேடருமாய்த்
தினைத்தனையும் செல்லவொண்ணுச் சிங்கவேழ் குன்றமே. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மூனைத்தசீற்றம் | மிக்ககோபமானது | தீயும் | அக்நியையும் |
| போய் | இங்குநின்றும்போய் | கல்லும் | (அத்தாலேவேகிற)கற்களையும் |
| விண்சுட | ஆகாசத்தைச்சுடும்படியாகவும் | அல்லா | இவற்றிலுங்காட்டில் க்ரூரமாய் |
| மூவுலகும் | மூன்றுலோகங்களிலுள்ளவர்களும் | வில் | வில்லை (ன |
| பிறவும் | மற்றும் | உடை | கையிலேயுடையரா |
| அனைத்தும் | ப்ரஹ்மாதிலோகங்களிலுள்ளவர்களும் | வேடருமாய் | வேடர்களையுமுடைத்தாய் |
| அஞ்ச | பயப்படும்படியாகவும் | தினைத்தனையும் | (அநாஸ்ரிதர்களுக்கு) க்ஷணகாலமாகிலும் |
| ஆளரியாய் | நரஸிம்ஹரூபியாய் | செல்லவொண்ணு | கிட்டவொண்ணுத |
| இருந்த | எழுந்தருளியிருக்கிற | | சிங்கவேழ்குன்றம். |
| அம்மானது | ஸர்வஸ்வாமியுடைய | | |
| இடம் | ஸ்த்தாநமானது, | | |
| கனைத்த | (எரியும்போது) த்வநியாகின்றுள்ள | | |

சிதறிக் கால்தடுமாறி ஒருவர்புக்கவிடத்திலே யொருவர்புகாதே யோடும்படியாயிருந்த ஸர்வேஸ்வரனுடைய ஸ்த்தாநம்.

(நெரிந்தவித்யாதி) நெருக்கத்தாலே ஒன்றோடொன்று இழைந்து நெரிந்திருந்துள்ள மூங்கில் தாளேவழியே-அந்த† த்வாரத்தாலே, உழுவையுண்டு - புலி, அது நீணெறிவாயிலே - பெருவழியிலே, ஸஞ்சரியாநின்றுள்ள. (ஆனைச்சுவடுபார்க்கும்) ஆனையினுடைய மஸ்தகத்தைப்பிளந்து அத்தைப் பாநம்பண்ணுகைக்காக அவைபோகிற பெருவழியிலே அவற்றைச் † சுவடொத்தி நிற்குமாயிற்று. ஆஸுர ப்ரக்ருதிகளாயிருப்பாரை யழியச்செய்கைக்கு நரஸிம்ஹமடிச்சுவடொத்துமாபோலே. ... ... ... ...(சு)

(த்வாரத்தாலே) என்றவநந்தரம், "புறப்பட்டு" என்று சேஷம். இத்தால் - ஒன்றோடொன்று சேர்ந்திருந்துள்ள மூங்கில்களைத் தன் பலத்தாலே நீக்கி வெளிகண்டு புலி வெளிநிலத்திலே புறப்பட்டதென்று வம்சாபிவ்ருத்தியைச் சொல்லிற்றாயிற்று. (சுவடொத்திநிற்கும்) என்றதுக்கு-இங்கு அந்தாக்ராணம் பண்ணுநிற்குமென்று கருத்து. ... ... ... (சு)

மூ.—நாத்தழும்ப நான்முகனு மீசனுமாய் முறையா
லேத்த அங்கோ ராளரியா யிருந்த வம்மானதிடம்
காய்த்தவாகை நெற்றொலிப்பக் கல்லதர் வேய்ங்கழைபோய்
தேய்த்த தீயால் விண்சிவக்கும் சிங்கவேழ் குன்றமே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நா | நாவானது | அங்கு | அவ்விடத்திலே(அவர்களுக்கு ஸ்துத்யனாய்க்கொண்டு) |
| தழும்ப | தழும்பேறும்படியாக | | |
| நான்முகனும் | நான்குமுகத்தையுடைய ப்ரஹ்மாவும் | ஓர் ஆளரியாய் இருந்த அம்மானதிடம், | |
| ஈசனும் | ருத்ரனும் | காய்த்த | காய்கள் நிறைந்த |
| ஆய் | தந்தாமுடைய தரம் குலையாதபடியாக | வாகை | வாகைகளின் |
| | | நெற்று | நெற்றுகள் |
| முறையால் | (அவன் சேஷி, நாம் சேஷபூதர் என்னும்) க்ரமத்தாலே | ஒலிப்ப | சப்திக்கும்படியாக |
| | | கல் அதர் | கல்வழியிலேயுண்டான |
| ஏத்த | ஸ்தோத்ரம் பண்ண, | வேய்ங்கழை | குழல்மூங்கிலானது |

வ்யா.—ஏழாம்பாட்டு. (முனைத்தவித்யாதி) மிக்கசீற்றமானது போய் அந்தரிக்ஷத்தைச்சுட. (மூவுலகுமித்யாதி) த்ரைலோக்யமும் ப்ரஹ்மாதிகளுடைய குடியிருப்பும் எங்குமொக்க அஞ்சும்படியாக; †ஆண்மையையுடைய வென்னுதல், †மநுஷ்யத்வமும் ஸிம்ஹத்வமும் கலந்திருக்கையைச் சொல்லிற்றாதல்.

(கனைத்த) த்வநியாநின்றுள்ள அக்நியும்-எரிகிறபோதை வெடிவெடென்கிற த்வநியையுடைத்தானவக்நியும், அதிலே வைக்கோல் போர்போலே வேகிறகல்லும். (அல்லாவித்யாதி) †இங்ஙனெரிகிற நெருப்பிலும் கல்லிலும் அடியிடலாம், அங்குத்தைவேடர் முகத்தில் விழிக்கவொண்ணாதாயிற்று, அவர்களுடைய க்ரௌர்ய மிருந்தபடி. (தினைத்தனையும்) †உகவாதார்க்குக் கண்ணாலே காணலாம்படி சென்று கிட்டிக் கண்ணெஞ்சில்படவொண்ணாதபடி யிருந்த தேசமாயிற்று. ... ... ... ... ... (எ)

அரு—ஏழாம்பாட்டு. (முனைத்தவித்யாதி). "எரிந்தபைங்கண்" என்றத்தால் தோற்றின சீற்றத்தின் எல்லைநிலத்தை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

"ஆள்" என்றதினர்த்தம், (ஆண்மைய) என்றது. அதாவது-சேவகத்தனம். "ஆள்" என்றதுக்கர்த்தாந்தரம், (மநுஷ்யத்வ மித்யாதி).

"அல்லா," என்று விசேஷிக்கையாலே வேடர்க்கு ஆதிக்யம் தோற்றுகிறதென்கிறார், (இங்ஙனித்யாதி). "தினைத்தனையும்" தினையென்று ஸூக்ஷ்மமான தான்யமாய், எள்ளத்தனையென்னுமாபோலேயாய், பரிமிதகாலத்தைச் சொல்லுகிறதென்று விவக்ஷித்து, வாக்யத்துக்கு உட்கருத்தருளிச்செய்கிறார், (உகவாதார்க்கித்யாதி). ... ... ...(எ)

| | | | |
|---|---|---|---|
| ம்பாய | ஆகாசத்தை யளாவும் படி ஓங்கி | தீயால் | நெருப்பாலே |
| தேய்த்த | தன்னிலே உராய்கை யாலுண்டான | விண் | ஆகாசம் |
| | | சிவக்கும் | சிவந்துகிடக்கிற |
| | | சிங்கவேழ்குன்றம். | (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (நாவித்யாதி). †நாவானது தழும் பேறும்படியாக, சதுர்முகனும், தேவர்களில் தலையான ருத்ரனும், முன்பு ஹிரண்யனுக்கஞ்சி மநுஷ்யவேஷங்கொண்டு திரிந்தவர்கள், அவன் பட்டபின்பு தந்தாமுடைய தரம்குலையாதபடி முறையாலே வந்து சேஷித்வப்ராப்தியாலே ஸ்தோத்ரம்பண்ண; அவர்களுக்கு ஸ்துத்யனாய்க்கொண்டு அவ்விடத்திலே இதுக்குமுன்பு அநுபவித் தறியாத நரஸிம்ஹமாய்க்கொண்டிருக்கிற ஸர்வேஶ்வரனுடைய ஸ்த் தாநம்.

(காய்த்தவித்யாதி) காய்த்தவாலககளிலே நெற்றானது த்வநிப்ப. †பாலைநிலத்துக்கடைத்த வ்ருக்ஷங்களிவையுஞ்சொல்லக்கடவதிறே. (கல்லதர்வேய்ங்கழைபோய்) கழையென்று-மூங்கிலாய், அதரென்று-வழிக்குப்பேர். கல்வழியிலேயெழுந்த வேய்ங்கழையுண்டு-குழல் மூங்கில், அது அந்தரிக்ஷத்தளவும் வளர்ந்து தன்னிலே யிழைந்து அத்தாலேயுண்டான அக்நியானது, மேகத்தாலே ஆகாசம் கறுத்திருக்குமாபோலே இந்த நெருப்பாலே சிவந்து கிடக்குமாயிற்று. †இத்தால் - †அகவாயடங்க ப்ரஹ்மாதிகளுடைய ஸ்தோத்ரமாய்க்கிடக்கும்; †புறவாயடங்கலும் வாகை நெற்றினுடைய த்வநியாய்க்கிடக்கும். ... ... ... ... ... (அ)

அரு.—எட்டாம்பாட்டு. (நாத்தழும்பவித்யாதி). ஓரர்ப்பகரிப்பஜநத்தாலே விக்ருதியை யடைந்து ஹிரண்யனைக்கொன்றபடியை யநுஸந்தித்தாராய், பின்பு ப்ரஹ்மாதிகளாலே ஸ்துத்யனாயிருக்கும்படியை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

"ஈசனுமாய்" என்கையாலே - முன்பு மநுஷ்யராயிருந்தமை ஸூசிதமாயிற்றென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார், (நாவானதித்யாதி).

(பாலைநிலத்துக்கு) நிர்ஜலதேசத்துக்கு. மூனைத்த சீற்றம்போய் விண் சுடும்படி யிருந்த நரஸிம்ஹத்தின் சீற்றம் மாறுகைக்கு மெள்ள ப்ரஹ்மாதிகள் வந்துஸ்துதிக்குமாபோலே, விண்சிவக்கும்படியான மூங்கிலிலுண்டான அக்நிக்கு அஞ்சிக் காட்டுவாகைகள் ஸ்துதிக்கிறனவென்று விவக்ஷித்துக் கருத்தருளிச்செய்கிறார், (இத்தாலித்யாதி). (அகவாய்) என்கிறது - உள்ளிருக்கிற நரஸிம்ஹவிஷயத்திலே என்கை. (புறவாய்) என்றது - அந்த திவ்ய தேசத்தைச் சுற்றிலுமுண்டான மூங்கில் விஷயத்திலென்கை. .... (அ)

மூ.—நல்லே நெஞ்சே நாந்தொழுதும் நம்முடை நம்பெருமான்
அல்லிமாதர் புல்கநின்ற வாயிரந் தோளனிடம்
நெல்லிமல்கிக் கல்லுடைப்பப் புல்லிலே யார்த்ததர்வாய்
சில்லி சில்லென் றொல்லறாத சிங்கவேழ் குன்றமே, (கூ)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| நம்முடை | நமக்கு ஆஶ்ரயணீயனாய் | உடைப்ப | உடையப் பண்ணும்படியாகவும் |
| நம்பெருமான் | நமக்கு ஸ்வாமியாய் | புல்இலே | பனையோலையானது |
| அல்லிமாதர் | தாமரைப்பூவையிருப்பிடமாகவுடையபெரியபிராட்டியார் | ஆர்த்து | ஓசைப் படும்படியாகவும் |
| | | அதர்வாய் | வழியிலே (கள் |
| புல்க | கட்டிக்கொள்ளும்படி | சில்லி | சில்வீடுஎன்னும்ப க்ஷி |
| நின்ற | எழுந்தருளியிருக்கிற | சில்என்று ஒல் அறாத | சில்என்னும் ஓசைமாறாதபடியுமான |
| ஆயிரம்தோளன் | ஆயிரம் திருத்தோள்களையுடைய ஸர்வேஶ்வரனுடைய | சிங்கவேழ்குன்றம்; | |
| | | நல்லேநெஞ்சே! | எனக்குப்பாங்கான நெஞ்சே! |
| இடம் | ஸ்த்தாநமானது, | | |
| நெல்லி | நெல்லிமரங்கள் | நாம்தொழுதும் | நாம் (அங்கேசென்று அவனைத்) தொழுதுஉஜ்ஜீவிப்போம். |
| மல்கி | நிறைந்து | | |
| கல் | கற்களை | | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (நல்லேநெஞ்சே) எனக்குப்பாங்கான நெஞ்சே!. † ஸம்போதித்து, நெஞ்சே! நீயெனக்குப் பாங்காயிறே இப்பேறு†பெற்றது. (நாந்தொழுதும்) நாம்தொழுது உஜ்ஜீவிப்போம். இது - இத்திருமொழியிற் பாட்டுக்கெல்லாம் க்ரியாபதம். (நம்முடை நம்பெருமான்) † நித்யஸூரிகளுக்கநுபாவ்யனு

அரு.—ஒன்பதாம்பாட்டு. (நல்லேநெஞ்சேயித்யாதி). நான்முகனுமீசனுமேத்தச் செய்தேயும் சீற்றம்மாறாதேயிருக்கப் பிராட்டிபோய் ஸம்ஶ்லேஷித்துச் சீற்றத்தை மாற்றினபடியை யநுபவிக்கிறாரென்று ஸங்கதி கண்டு கொள்வது.

நல்லேயானநெஞ்சே என்று விசேஷணமாக வொருயோஜனை யருளிச்செய்து, நெஞ்சே! நீ நல்லேயென்று அந்வயித்து யோஜநாந்தரம், (ஸம்போதித்தித்யாதி). (பெற்றது) என்றவநந்தரம், "என்கிறாரென்றமாம்" என்று கூட்டுவது. இங்ஙனன்றாகில், (ஸம்போதித்து) என்று சொல்லவேண்டாவிறே. நம்பெருமான் என்னவமைந்திருக்க, "நம்முடை" "என்று விசேஷித்தத்தாலே, தாம் நிரூபகராணமைதோற்றுகையாலே, அத்தைஸத்ருஷ்டாந்தமுபபாதிக்கிறார், (நித்யேத்யாதி). "அயர்வறுமமரர்கள்" என்னக்கடவதிறே.

மூ.—செங்கணாளியிட்டிறைஞ்சும் சிங்கவேழ் குன்றுடைய
எங்களீச னெம்பிரானை யிருந்தமிழ் நூற்புலவன்
மங்கையாளன் மன்னு தொல் சீர் வண்டறை தார்க்கலியன்
செங்கையாளன் செஞ்சொல் மாலை வல்லவர் தீதிலரே. (கO)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| செம் | சிவந்த | உடைய | வாஸஸ்தாநமாகவுடையனாய் |
| கண் | கண்களையுடைய | | |
| ஆளி | ஸிம்ஹங்கள் | எங்கள் | ஸம்ஸாரிகளான நம்போல்வார்க்கும் |
| இட்டு | (திருவடிகளிலே ஸமாராதநோபகரணங்களை) ஸமர்ப்பித்து | ஈசன் | ஸ்வாமியாய் |
| | | எம்பிரானை | எனக்கு உபகாரகனான ஸர்வேஸ்வரன் விஷயமாக |
| இறைஞ்சும் | ஆஶ்ரயியாநின்றுள்ள | | |
| சிங்கவேழ்குன்று | சிங்கவேழ் குன்றத்தை | இரு | பெரிய |
| | | தமிழ்நூல் | தமிழ்சாஸ்த்ரத்தில் |

யிருக்குமாபோலே நமக்கும் ஆஶ்ரயணீயனாய்க் கொண்டுவந்து ஸந்நிதிபண்ணின ஸர்வேஸ்வரன். (அல்லியித்யாதி) ப்ரஹ்மாதிகளாஶ்ரயிக்க தேவர்கள் கலங்கி யோடப்புக்கவாறே, "ப்ரதிகூலநிரஸநத்துக்காக இவ்வடிவு கொண்டதுபோய் அநுகூலர் பக்கலிலேயும் வந்து பலிக்குமளவாயிற்று!" என்று அந்தச்சீற்றத்தை ஆற்றுகைக்காகப் பெரிய பிராட்டியார் வந்து கட்டிக்கொள்ளுமாயிற்று. (ஆயிரந்தோளன்) இவளணைத்தால் இவளைக்கட்டிக்கொள்ள ஆயிரம் தோளுண்டாமாயிற்று.

(நெல்லியித்யாதி) நெல்லிகளானவை மிக்குக் கற்களையுடையப் பண்ணுமாயிற்று. நெல்லிமரங்கள் வேரோடிக் கற்களையுடையப் பண்ணும். (புல்லிலையார்த்து) மூங்கிலிலைகளானவை த்வநிக்கவென்னுதல், பனையோலை ஓசைப்படவென்னுதல். † அதர்வாயிலே - வழியிடத்திலே. சில்லியுண்டு - †சில்வீடு, அது சில்லென்று நிற்குமாயிற்று - ஒரு சப்தாநுகாரத்தைப் பண்ணுநிற்குமாயிற்று. ஒல்லருத - த்வநிமாருத. ... ... ... ... (கூ)

ஹிரண்யனுடைய நெஞ்சிடந்தபோது அவனெலும்பு உடையும்படியும், அவனுடைய ஆர்த்துக்கொள்ளுகையும், அவன் ரக்தம் சில்லென்று புறப்படும்படியும், அத்தேசத்தைக் கண்ட உடனே ஸ்ம்ருதிவிஷயமாகிறதென்னும் கருத்தாலே வர்ணிக்கிறாரென்றுகொள்வது. (சில்வீடு) என்றது - பக்ஷி விசேஷம். இப்படி நரஸிம்ஹாவதாராபதாநத்தில் த்வநிக்குஸூசகமான தேசமாகையாலே, "நாம் தொழுதும்" என்கிறாரென்று கருத்து. .... (கூ)

| | |
|---|---|
| புலவன் | வல்லவராய் [வாய் |
| மங்கையாளன் | திருமங்கைக்கு ராஜா |
| தொல்மன்னு | அநாதியாய்நிலைநின்ற |
| சீர் | ஸ்ரீயையும் |
| வண்டு | வண்டுகள் |
| அறை | சப்தியாநின்றுள்ள |
| தார் | மாலையையும் |
| செங்கையாளன் | மிகவும் ஔதார்யத்தையுமுடையரான |
| கலியன் | ஆழ்வாரருளிச்செய்த |
| செம்சொல்மாலை | செவ்வியசொல்தொடையை |
| வல்லவர் | கற்கவல்லவர்கள் |
| தீதுஇலர் | பொல்லாங்கு இல்லாதவர் ஆவர். (கo) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (செங்கணித்யாதி). வீரஸ்ரீயாலே சிவந்த கண்களையுடைய ஆளிகளானவை தங்களுக்கு ப்ரதிகூலமான ம்ருகங்களை யழியச்செய்து அவற்றைத் திருவடிகளிலே ஸமாராதநோபகரணமாகக்கொண்டுவந்து பொகட்டு ஆஶ்ரயியாநிற்குமாயிற்று. †ஸ்ரீ கண்டாகர்ணாழ்வான், "இது ப்ராஹ்மணவம்சம் - உத்தமம்" என்று, "இது புதிசு" என்றானிறே. சிங்கவேழ்குன்றம் தனக்கு வாஸஸ்தாநமாகவுடையவன். ஸம்ஸாரிகளான நம்போல்வார்க்கும் சென்றாஶ்ரயிக்கலாம்படி யிருக்கிற உபகாரகனை. (இருந்தமிழ் நூற்புலவன்) ஒருவரால் கரைகாணவொண்ணாதபடி யிருக்கிற தமிழ் சாஸ்த்ரோக்தமான படியைக்கரைகண்ட ஜ்ஞாநாதிக்யத்தையுடையவர். (மங்கையாளன்) திருமங்கைக்கு நிர்வாஹகரானவர். (மன்னு தொல்சீர்) நிலைநின்ற பாரதந்த்ர்ய ஸ்ரீயையுடையவராயிற்று. (க) "లక్ష్మీలక్ష్మీసంపన్నః - லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந:" வண்டுகளானவை மதுபாநம்பண்ணி † அறையாநின்றுள்ள மாலையையுடைய ஆழ்வார். (செங்கையாளன்) † மஹோதாரன் - இப்ப்ரபந்தத்தைப்பிறர்க்கநுபாவ்யமாம்படி பண்ணித் தந்தவரிறே. (செஞ்சொல் மாலை வல்லவர்) அரிய அர்த்தத்தை உள்ளபடி காட்டவற்றான செவ்விய சொல்தொடை வல்லவர். (தீதிலரே) நரஸிம்ஹம் விரோதியைப் போக்குகையாலே அவர்களுக்குப் பொல்லாங்கு வாராதிறே...(கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

—oo✽oo—

அரு.—பத்தாம்பாட்டு. (செங்கணாளியித்யாதி). (உ) "నవంశపవిదంపుణ్యం వేదపారగమచ్యుత। యజ్ఞశీలంమహాప్రాజ్ఞం బ్రాహ్మణం శివముత్తమమ్ - நவம்சவமிதம் புண்யம் வேதபாரகமச்யுத। யஜ்ஞசீலம் மஹாப்ராஜ்ஞம் ப்ராஹ்மணம் சிவமுத்தமம்" என்கிற வசநத்தையுட்கொண்டு உக்தார்த்தத்தை ஸமர்த்திக்கிறார், (ஸ்ரீகண்டாகர்ணாழ்வானித்யாதி). (அறையாநின்றுள்ள) - சப்தியாநின்றுள்ள. செம் - அழகான, கையை யாளுமவனென்று சப்தார்த்தம், (மஹோதாரன்) என்று. ... ... ... ... ... (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்.

முதற்பத்தில் ஏழாந்திருமொழி முடிந்தது.

(க) ரா - பா - கஅ - உக. (உ)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து - எட்டாந் திருமொழி - கொங்கு.

மூ.—கொங்கலர்ந்த மலர்க்குருந்த மொசித்த கோவலனெம்பிரான்
சங்குதங்கு தடங்கடல் துயில்கொண்ட தாமரைக்கண்ணினன்
பொங்குபுள்ளினை வாய்பிளந்த புராணர்தம்மிடம் பொங்குநீர்
செங்கயல் திளைக்குஞ் சுனைத் திருவேங்கட மடைநெஞ்சமே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சங்கு | சங்குகள் | புள்ளினை | பகாஸுரனுடைய |
| தங்கு | பொருந்தி | வாய் | வாயை [வனாய், |
| தடம் | பரந்திருந்துள்ள | பிளந்த | கிழித்துப்பொகட்ட |
| கடல் | திருப்பாற்கடலில் | எம்பிரான் | எனக்குஉபகாரகனாய், |
| துயில்கொண் | கண்வளர்ந்தருளுகிற வனாய், | புராணர்தம் | புராணப்ரஸித்தனான ஸர்வேஶ்வரனுடைய, |
| தாமரைக்கண்ணினன் | தாமரைமலர்போன்ற திருக் கண்களையுடையனாய், | இடம் | ஸ்த்தாநமாய் |
| கோவலன் | க்ருஷ்ணனாய்க்கொ | பொங்குநீர் | மிக்க ஜலத்தையுடைத்தாய் |
| கொங்கு | பரிமளம் [ண்டு | செம் | சிவந்த |
| அலர்ந்த | வீசாநின்றுள்ள | கயல் | மத்ஸ்யங்களானவை |
| மலர் | புஷ்பங்கள் நிறைந்த | திளைக்கும் | களித்துவர்த்திக்கிற |
| குருந்தம் | (அஸுரா விஷ்டமான) குருக்கத்தியை | சுனை | சுனைகளையுடைய |
| ஒசித்த | நிரஸித்தவனாய், | திருவேங்கடம் | திருமலையை |
| பொங்கு | கிளர்ந்துவந்த | நெஞ்சமே | மநஸ்ஸே! |
| | | அடை | கிட்டப்பாராய்....(க) |

அந.—கொங்கலர்ந்த ப்ரவேசம்.—கீழ்த்திருமொழியிலே, (க) "நின்ற செந்தீமொண்டு சூறை நீள் விசும்பூடிரிய" என்றும், (உ) "கனைத்த தீயும் கல்லும்" என்றும், (ங) "தேய்த்த தீயால் விண்சிவக்கும்" என்றும் விரோதிகளுக்கு துஷ்ப்ரவேசமாயிருக்கும்படியை யநுஸந்தித்து, (ச) "நெஞ்சே! நாள்தொழுதும்" என்று அநுஸந்தித்தார்; இப்படி நிலவெம்மையை யநுஸந்தித்த ஹேதுவாக, பரமகாருணிகனான ஸர்வேஶ்வரன் இவரிடத்தில், தன்னுடைய படிகளைக் காட்டிக்கொடுக்கக், கண்டநுபவிக்கிறாரென்று ஸங்கதியுட்கொண்டருளிச்செய்கிறார், (விரோதியித்யாதி). (ரு) "பொங்குநீர் செங்கயல் திளைக்கும்சுனை" என்றிறே அநுஸந்திக்கிறது. குருந்தம், புள்,

(க) க - எ - ரு. (ங) க - எ . அ. (ரு) க - அ - க.
(உ) க - எ - எ. (ச) க - எ - க.

வ்யா.---கொங்குப்ரவேசம் †விரோதி நிரஸநசீலனாய், †ஆஶ்ரித ஸம்ஶ்லேஷஸ்வபாவனாய், †ஸர்வாந்தராத்மாவாயிருக்கிற †ஹரியான வன், வாயாலே திருநாமஞ்சொன்னானென்று ஒரு சிறுக்கனுக்குத் தமப்பன் பகையாக உதவிற்றொருவடிவைக்கொண்டுவந்து தோற்றி அவனுடைய விரோதியைப்போக்கி உபகரித்தவன், † அவனொருவ னளவிலேயும் பர்யவஸிக்கையன்றிக்கே திருநாமம் சொன்னாரெல் லாருடைய ஸம்ஸாரது(ஃ)ரிதத்தைப்போக்குகைக்காகத் திருமலை யிலே வந்து ஸந்நிஹிதனானான், நாமங்கேபோ யநுபவிப்போமென்று திருவுள்ளத்தோடே கூட்டுகிறார். † தமிழ்பாஷை நடையாடுகிறதுக் கும் எல்லையான நிலமாயிருக்குமிறே.

முதற்பாட்டு. (கொங்கலர்ந்த) பரிமளத்தை ப்ரவஹியாநிற் பதான மலரையுடைத்தான. (குருந்தமொசித்த) † அடியேபிடித்து த் தலையளவும் பூத்து தர்சநீயமாய் அஸுராவேசத்தாலே நலிவ தாகத்தேடி நிற்க, "இதழுகிதாயிருந்தது, முறிந்துக் காரியங்கொ ள்ளுவோம்" என்று ஒசித்தானாயிற்று. (கோவலனெம்பிரான்)

பேய், மாமருதுகளை நிரஸித்தபடியைச் சொல்லுகையைப்பற்ற, (விரோதி நிரஸநசீலனாய்) என்றது. (க) "கோத்தங்காயர்தம்பாடியில் குரவை" இத் யாதியைப்பற்ற (ஆஶ்ரிதஸம்ஶ்லேஷஸ்வபாவனாய்) என்றது. (உ) "பாரும் நீரெரிகாற்றினோடு" இத்யாதியைப்பற்ற, (ஸர்வாந்தராத்மாவாய்) என்றது. (ந) "திண்டிறலரியாயவன்." என்றத்தைப்பற்ற, (ஹரியானவனித்யாதி). (௪) "பேசுமின்திருநாமம்" என்கிற பாட்டைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார், (அவனொருவனித்யாதி). திருமலையை அநுபவிக்கைக்கு நியாமகாந்தரம், (தமிழித்யாதி). இத்தால், - சிங்கவேழ்குன்றத்திலே தாமெழுந்தருளினால் அங்குள்ளார் வடுகராய் தாம்தமிழராகையாலே (இ) *போ⁴த⁴யந்த: பரஸ்பரம் - போதயந்த: பரஸ்பரம் பண்ணுகைக்குச் சேரவிழாமையாலே, இத்திருமலை யிலே இரண்டும் கலசியிருக்குமென்று அநுபவிக்கிறாரென்று கருத்து.

முதற்பாட்டு. (கொங்கித்யாதி). ஹிரண்யன்தான் * கொலைக்கை யாளனாய் தன்னுடைய விரோதித்வந்தோற்றவிருந்தான், குருந்தம்முதலான வை ஆநுகூல்யந்தோற்றவந்து வஞ்சகங்களாயிருக்கையாலே அவனிலும் க்ரூரங்களென்று திருவுள்ளத்திலே தோற்றி அவற்றை யருளிச்செய்கிறாரெ ன்று அவதாரிகையிட்டுக்கொள்வது.

அழித்த என்னாதே, "ஒசித்த" என்றதுக்கு வாஸனை, (அடியே பிடித் தித்யாதி). இத்தால் - மாயாம்ருகத்தை ம்ருகமென்று பிடிக்கத்தேடினாற் போலே பூத்தமரமென்றே பூவுதிராதபடி பேர்த்தானென்றதாயிற்று. குருந்

(க) க - அ - ௬.
(உ) க - அ - எ.
(ந) க - அ - ௯.
(௪) க - அ - ௯.
(இ) கீதை - ௧௦ - ௯௯.

மூ.—பள்ளியாவது பாற்கட லரங்க மிரங்க வன் பேய்முலை
பிள்ளையா யுயிருண்ட வெந்தை பிரானவன் பெருகுமிடம்[றும்
வெள்ளியான்கரியான் மணிநிறவண்ண னென்றெண்ணி நாடொ
தெள்ளியார் வணங்கும்மலைத்திருவேங்கட மடைநெஞ்சமே.()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வல் | வலியநெஞ்சுடைய | எந்தை | எனக்குநாதனாய் |
| பேய் | பூதனையுடைய[ளான | பிரான் அவன் | உபகாரகனான ஸர்வேஶ்வரனானவன் |
| முலை | முலைகளானவை | | |
| இரங்க | தானேசுரக்கும்படி | பள்ளியாவது | (கண்வளர்ந்தருளும்) படுக்கையாவது |
| பிள்ளையாய் | சிறியகுழவிவடிவு கொண்டு [ணனை | | |
| உயிர் | (அவளுடைய) ப்ரா | பாற்கடல் | திருப்பாற்கடலும் |
| உண்ட | அமுது செய்தருளின வனாய் | அரங்கம் | திருவரங்கமுமாம்; |
| | | பெருகும் | வளருகிற |
| | | இடம் | ஸ்த்தாநமானது, |

க்ருஷ்ணனாய் வந்தவதரித்துக்குருந்தைமுறித்தாற்போலே என் விரோதியைப்போக்கி எனக்கு உபகரித்தவன். † அதின் நினைவின் படி கார்யம் செய்கையன்றிக்கே என்னுடைய கார்யஞ்செய்த உப காரகன். (சங்கித்யாதி) இவ்வவதாரத்துக்கடியாகத் திருப்பாற் கடலிலேவந்து ஸந்நிதிபண்ணினபடியைச் சொல்லுகிறது. சங்கெ ன்றுபேர்பெற்றவையடையச் சேராநிற்பதாய், கண்வளர்ந்தருளு கைக்கீடான பரப்பையுடைத்தான திருப்பாற்கடலிலே கண்வளர் ந்தருளினவன். (பொங்கித்யாதி) பெரியகிளர்த்தியோடே மிகைத்து வந்து தோற்றினபகாஸுரனை வாயைக்கிழித்து, இப்படி விரோதி களைப்போக்குகை பழையதாகச் செய்துபோருகிறவர்வந்து வர்த்தி க்கிற ஸ்த்தாநம். (பொங்கித்யாதி)† ஜலத்தினுடைய ஸம்ருத்தி கயலி னுடைய களிப்புக்கீடாயிருக்குமிறே. இளமையாலே சிவந்த நிறத் தையுடைய கயல்களானவை களித்து வர்த்திக்கிற சுனைகளையுடைய திருமலையை அடைநெஞ்சே! என்கிறார் .... ... ... (க)

தொசித்ததே தமக்கு உபகாரமாக்கி அத்தால் அர்த்தாந்தர மருளிச்செய்கி றார், (அதின் நினைவித்யாதி). நீர்ப்பசையற்ற நிலமாகையாலே * ஓய்ந்த மாவாயிருந்தது, அதுக்கு ப்ரதிசீர்ஷமான நிலமென்று தோற்ற, "பொங்கு நீர்" என்கிறாரென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார், (ஜலத்தினித்யாதி). "சங்கு தங்குதடங்கடல் துயில்கொண்ட தாமரைக்கண்ணினன்" என்றத் தை முந்துற அநுஸந்தித்து, பாட்டு அநுஸந்திக்கை அந்வயம். ஆக, இப் பாட்டால்.திருமலை சென்றுகிட்டலாம் தேசமாகையாலே விரோதிகளநுகூல வேஷத்தாலே வந்தாலும் திருவேங்கடமுடையான் அவர்களை நிரஸிப்பனெ ன்று சொல்லிற்றாயிற்று. ... ... ... ... (க)

| | | | |
|---|---|---|---|
| தெள்ளியார் | அநந்யப்ரயோஜநர் | என்று எண்ணி | என்று (பலகாலும் இவ்வடிவுகளை) அநுஸந்தித்து |
| வெள்ளியான் | (க்ருதயுகத்தில்) வெளுத்த நிறத்தையுடையவன் | நாடோறும் | நாள்தோறும் |
| கரியான் | (கலியுகத்தில்) கறுத்த நிறத்தையுடையவன் | வணங்கும் | ஆச்ரயிக்கிற |
| | | மலை | மலையான |
| மணிநிறவண்ணன் | (த்வாபரயுகத்தில்) நீலமணிபோன்ற நிறத்தையுடையவன் | திருவேங்கடம் | திருமலையாம்; (அதை) நெஞ்சமே! அடை. (உ) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (பள்ளியாவது பாற்கடலரங்கம்) ப்ரஹ்மாதிகளுக்காஶ்ரயணீயனுய்க்கொண்டு கண்வளர்ந்தருளுகிறது, திருப்பாற்கடல் படுக்கை; அவ்வளவும் சென்று கிட்டமாட்டாத ஸம்ஸாரிகளுக்காகக் கோயில். (இரங்கவித்யாதி) முலையை ஸ்பர்சித்தவளவிலே நெகிழ்ந்து முலை சுரக்கும்படியாக வென்னுதல்; அன்றிக்கே; அவள் கதறவென்னுதல். வன்மையையுடைத்தான நெஞ்சையுடைய பூதனையுடைய முலையைப் பிள்ளையாயே யுண்டானுயிற்று. † மௌக்த்யத்தாலே உயிருக்கும் முலைக்கும் வாசியறியாதே அமுது செய்தானுயிற்று. (எந்தை பிரானவன் பெருகுமிடம்) எனக்குக் குலநாதனுன உபகாரகன் வர்த்தி(ரு)க்கிறதேசம், பெருகுகை - வளருகை. அத்தால் - †வர்த்தி(ரு)க்கையைச் சொன்னபடி. (வெள்ளியானித்யாதி) கொண்ட கொண்ட வடிவெல்லா மிவர்க்கு உத்தேஶ்யமாயிருக்கிறதாயிற்று அவன் கொண்ட வடிவாகையாலே. க்ருதயுகத்தில் வெளுத்த நிறத்தையுடையனுய், கலியுகத்தில் கறுத்த நிறத்தையுடையனுய், த்வாபரயுகத்தில் வுக்தவாறேஶ்யாமமான நிறத்தையுடையனுயிருக்குமென்று இவ்வடிவுகளையநுஸந்தித்து, தெள்ளியாருண்டு - † அநந்யப்ரயோஜநரானவர்

அரு.—இரண்டாம்பாட்டு. (பள்ளியித்யாதி). கீழ்ப்பாட்டில் க்ஷீராப்திசாயித்வம் பின்னுட்டி ஸ்ரீரங்கசாயித்வத்தையும் யசோதை தொட்டிற்கிடையையும் ஸ்மரிப்பிக்க அநுஸந்திக்கிறுரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

பிள்ளையாயுயிருண்ணக்கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறுர், (மௌக்த்யத்தாலே யித்யாதி). (வர்த்திக்கையைச் சொன்னபடி) என்றதுக்கு-தொட்டிற்பிள்ளை பேயுயிருண்டபின்பு கிடக்கத்தது திருமலையிலே என்று கருத்து. (அநந்ய ப்ரயோஜநரானவர்கள்) என்றது - (க) "பாவினீர்மை செம்பொனீர்மை" இத்யாதியாலே அநுபவிக்கவேயே ப்ரயோஜநமாயிருந்த

(க) தி - ச - வி - சச.

மூ.—நின்றமாமருதிற்று வீழ நடந்த நின்மலன் நேமியான்
என்றும் வானவர் கைதொழு மிணைத்தாமரை யடி யெம்பிரான்
கன்றி மாரிபொழிந்திடக் கடிதாநிரைக்கிடர் நீக்குவான்
சென்று குன்ற மெடுத்தவன் திருவேங்கடமடைநெஞ்சமே. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நின்ற | (அஸுராவேசத்தாலே)பேராதேநின்ற | எம்பிரான் | உபகாரகனாய், |
| | | கன்றி | (இந்த்ரன்)கோபித்து |
| மாமருது | பெரியமருதமரம் | மாரி | மஹாவர்ஷத்தை |
| இற்றுவீழ | முறிந்துவிழும்படி | பொழிந்திட | வர்ஷிப்பிக்க |
| நடந்த | நடுவேபோன | ஆ | பசுக்களுடைய |
| நின்மலன் | நிர்மலமானமநஸ்ஸையுடையனாய், | நிரைக்கு | திரள்களுக்குண்டான |
| | | இடர் | துக்கத்தை [காக |
| நேமியான் | திருவாழியை(த்திருக்கையிலே)யுடைய | நீக்குவான் | போக்கி ரக்ஷிக்கைக் |
| | | கடிது | சடக்கென |
| வானவர் | நித்யஸூரிகள் [ளாய், | சென்று | போய் |
| என்றும் | எப்போதும் | குன்றம் | கோவர்த்தநமலையை |
| கைதொழும் | ஸேவித்துக்கொண்டிருப்பதாய் | எடுத்தவன் | குடையாகத்தரித்தஸர்வேச்வரன் எழுந்தருளியிருக்கிற |
| தாமரை | தாமரைமலர்போன்ற | | |
| இணையடி | இரண்டு திருவடிகளையுடைய | திருவேங்கடம் நெஞ்சமே! அடை. () | |

ளர், நாடோறும் வணங்குவர்களாயிற்று நித்ய ஸூரிகளைப்போலே நித்யாநுபவம் பண்ணும் †மலையான. ... ... (உ)

வ்யா.—மூன்றாம்பாட்டு. (நின்ற) † அஸுராவேசத்தாலே பேராதே நின்ற, மாமருதுண்டு - பெரியமருது; † அவ்வருகே விழுந்தவிது †இவ்வருகேயாயிற்றதாகில் செய்வதென்! என்று பயப்படவேண்டும்படியாயிருக்கிறதாயிற்று. அது முறிந்து விழும்படியாக.

திருமழிசைப்பிரான்போல்வார்களென்கை. (மலையான) என்றவநந்தரம், திருவேங்கடமித்யாதியைப் பூரிப்பது என்று திருவுள்ளம். ... ... (உ)

அரு.—மூன்றாம்பாட்டு. (நின்ற மாமருதித்யாதி). "பெருகுமிடம்" என்றத்தாலே - நிற்கக்கற்றவன் என்று தோற்றினவளவன்றிக்கே நடைகற்றுச்செய்தவற்றை யநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

மருதானபோதே நின்றிராதோ, "நின்ற" என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார், (அஸுரேத்யாதி). (நின்றமாமரம்) என்றும் பாடமுண்டென்று சொல்லுவர்கள். "மா" என்றதுக்கு உட்கருத்தை யருளிச்செய்கிறார், (அவ்வருகேயித்யாதி). (இவ்வருகே) என்கையாலே, தாமும் க்ருஷ்ணனுமொரு ப்ரதேசத்திலே யிருந்தமை தோற்றுகிறது. "நின்மலன்" என்ற

மூ.—பார்த்தற்காயன்று பாரதம் கைசெய்திட்டு வென்ற பரஞ்சுடர்
கோத்தங் காயர்தம்பாடியில் குரவைபிணைந்த வெங்கோவலன்
ஏத்துவார்தம் மனத்துள்ளான் இடவெந்தைமேவிய வெம்பிரா
தீர்த்தநீர்த் தடஞ்சோலைசூழ் திருவேங்கடமடைநெஞ்சமே.[ன்

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்று | த்வாபராந்தத்தில் | கோத்துப்பிணைந்த | கைகோத்து ஆடினவனாய், |
| பாரதம் | பாரதயுத்தத்திலே | ஏத்துவார்தம் | வாழ்த்துமவர்களது |
| பார்த்தற்காய் | அர்ஜுநனுக்காக | மனத்து | மநஸ்ஸில் [னாய், |
| கைசெய்திட்டு | கையுமணியும்வகுத்து | உள்ளான் | விடாதேயிருக்குமவ |
| வென்ற | (துர்யோதநாதிகளை) ஜயித்து (அத்தாலே) | இடவெந்தை | திருவிடவெந்தையில் |
| பரஞ்சுடர் | மிக்க ஒளியையுடையனாய், | மேவிய | பொருந்தியிருக்கிற |
| ஆயர்தம்பாடியி [ல் | திருவாய்ப்பாடியிலே | எம்பிரான் | ஸ்வாமியுடையதாய் |
| எங்கோவலன் | கோபகுலத்திலவதரித்து | தீர்த்தம் | பாவநமான |
| அங்கு | அக்கோகுலத்தில் | நீர் | ஜலத்தையுடைய |
| குரவை | குரவைக்கூத்தில் | தடம் | தடாகங்களாலும் |
| | | சோலை | பொழில்களாலும் |
| | | சூழ் | சூழப்பட்டிருக்கிற |
| | | திருவேங்கடமடைநெஞ்சமே! (௪) | |

†நெஞ்சில்† நினைவின்றிக்கே அது முறியும்படி நடந்த சக்தியையுடையவன். (நேமியான்) தான் கைதொட்டு வ்யாபரிக்கவேண்டா, தன்னையொழிய விரோதியைப் போக்குகைக்கீடான பரிகரமுண்டாயிருக்கச் செய்தே கிடீர் தான்வந்தகப்பட்டது. (என்றுமித்யாதி) நித்யஸூரிகள் ஒருநாடாகப் பரியவிருக்குமவன் கிடீர் தனியே புகுந்தகப்பட்டான். (கன்றியித்யாதி) பெரிய சீற்றத்தையுடையனாய்க்கொண்டு இந்த்ரனானவன் மேகங்களையேவ அவையும் அவன் கருத்தை யநுவர்த்தித்து மாரிபொழிந்திட. (ஆநிரைக்கிடர் நீக்குவான் கடிதுசென்று குன்றமெடுத்தவன்) ஸ்வரக்ஷணத்துக்குப் பரிகரமில்லாதவற்றின்மேலே ஒருதுளி விழுவதற்கு முன்பே அவற்றுக்கிடர் வாராதபடியாகக் கடுநடையிட்டுச்சென்று கோவர்த்தநத்தையெடுத்தவன். (திருவேங்கடமடைநெஞ்சமே) †ஒருமலையை யெடுத்துப் பரிஹரித்தவன் ஒருமலையிலே நின்று ரக்ஷிக்கப்பார்த்தான், அவனையாஸ்ரயிக்கப் பார் நெஞ்சே யென்கிறார். ... ... (௩)

பதவாஸனை, (நெஞ்சிலித்யாதி). (நினைவு) அஸாராவிஷ்டமென்கிற நினைவு. அன்று சென்று குன்றொன்றையேந்தினதும், இன்று குன்றில் நின்றதும் என்றும் ஆஸ்ரிதர்க்காகவென் றருளிச்செய்கிறார், (ஒருமலையையித்யாதி). ஒருமலை ஆதேயமாய், ரக்ஷணோபகரணமாய், திருமலை ஆதாரமாய் ரக்ஷணோபகரணமாயிற்று; என்றும் திருமலைபோலே காணும் ரக்ஷித்ததென்று திருவுள்ளம்.()

மூ.— வண்கையானவுணர்க்குநாயகன்வேள்வியிற்சென்றுமாணியாய்
மண் கையா லிரந்தான் மராமர மேழு மெய்த வலத்தினன்
எண்கையானிமயத்துள்ளானிருஞ்சோலைமேவியவெம்பிரான்
திண்கைமா துயர்தீர்த்தவன் திருவேங்கடமடைநெஞ்சமே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வண்கையான் | உதாரமானகையையுடையனாய் | இமயத்து உள்ளான் | ஹிமவானில் (திருப்பிரிதியில்) எழுந்தருளியிருக்குமவனாய், |
| அவுணர்க்கு | அஸுரர்களுக்கு | இருஞ்சோலை | தெற்குத் திருமலையான திருமாலிருஞ்சோலையிலே [நித் |
| நாயகன் | தலைவனான மஹாபலியினுடைய | மேவிய | நித்யவாஸம்பண்ணு |
| வேள்வியில் | யாகசாலையிலே | எம்பிரான் | ஸர்வஸ்வாமியாய், (முதலையின் கையிலேயகப்பட்ட) |
| மாணியாய் | ப்ரஹ்மசாரியாய் | திண் | பலிஷ்டமான |
| சென்று | போய் | கை | துதிக்கையையுடைய |
| மண் | பூமியை | மா | ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய |
| கையால் | தன்கையாலே | துயர் | து:கத்தை |
| இரந்தான் | யாசித்தவனாய், | தீர்த்தவன் | போக்கின ஸர்வேச்வரன் ஸந்நிதிபண்ணியிருக்கிற |
| மராமரம்ஏழும் | ஏழுஸாலவ்ருக்ஷங்களையும் | திருவேங்கடம் அடை நெஞ்சமே! () | |
| எய்த | (ராமாவதாரத்தில்) ஒருபடிப்படப்போக்கின [ய் | | |
| வலத்தினன் | மிடுக்கை யுடையனா | | |
| எண்கையான் | அநேகம்திருக்கைகளையுடையனாய் | | |

வ்யா.— அஞ்சாம்பாட்டு. (வண்கையானித்யாதி) † உதாரனாயிருந்தானாயிற்று. ஆஸுரப்ரக்ருதிகளுக்குத் தலைவனாயிருந்தானேயாகிலும், ஔதார்யமென்றொருகுணம் கிடக்கையாலே அம்பாலேயழிக்கலாயிருந்ததில்லை. இவன்றான் கொடுக்க உகந்திருந்தான்; அவன் உகந்தவழியே வாங்குவோமென்று தன்னையிரப்பாளனாக்கி

அரு.— அஞ்சாம்பாட்டு. (வண்கையானித்யாதி). கீழே ஆச்ரிதர்க்காக தௌத்யஸாரத்யங்களைப் பண்ணினபடியாலே கையாளாக்கினபடி சொல்லிற்று; அவ்வளவன்றிக்கே, ஆச்ரிதர்க்காகத் தன்னை யிரப்பாளனாக்கியும், மழுவேந்திக்கொடுத்தும், பலவிடங்களிலேயும் அவஸரப்ரதீக்ஷனாய் அலைகுலையத் தலைகுலைய வந்துதவினபடியை யநுபவிக்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

மஹாபலிவண்கையானாயிருந்தது ச்ரிய:பதி மாணியாகைக்கு ஹேதுவென்றுமிடம் தோற்றவருளிச்செய்கிறார், (உதாரனாயித்யாதி).

வாங்கினானாயிற்று. (மாணியாய் மண் கையாலிரந்தான்) அவனுடைய யஜ்ஞவாடத்திலே இரப்பிலே தகணே ஹினவடிவைக்கொண்டு சென்று, தன்கையிலே †பருத்திபட்ட பன்னிரண்டும் பட்டபூமியை யிரந்தானாயிற்று. (மராமரம்) ஆஶ்ரிதரை விஶ்வஸிப்பித்தும் காரியம் செய்து கொடுக்குமவன். (வலத்தினான்) மிடுக்கையுடையவன். (எண்கையான்) ஆஶ்ரிதவிரோதி நிரஸநத்துக்குறுப்பான திவ்யாயுதங்களைத் தரிக்கைக்கும் †பலதிருக்கைகளையுடையவனென்னுதல். அன்றிக்கே, திருவட்டபுயகரத்தைச் சொல்லிற்றாகவுமாம். (இமயத்துள்ளான்) ஹிமவானில் திருப்பிரிதியிலேவந்து ஸந்நிஹிதனானவன். (இருஞ்சோலையித்யாதி) ம்லேச்சபூமியான தெற்கில் திருமலையிலேவந்து ஸந்நிஹிதனானவன். (திண்கைமாதுயர் தீர்த்தவன்) ஸ்ரீகஜேந்த்ராழ்வான் முதலையாலே யீடுபட்டு ப்ரதிக்ரியை பண்ணமாட்டாத வளவிலே வந்து அவனுடைய துக்கத்தைப்போக்கி ரக்ஷித்தவன். (திண்கை) தன்னையொழிந்தவற்றையடைய இடர்படுத்துமவன்று னிடர்பட அத்தைப் பரிஹரித்தானென்கை. (திருவேங்கடம்) †ஸ்ரீகஜேந்த்ராழ்வான் வ்யாபாரம் ஒவுந்தனையும் பார்த்திருந்து,

---

(பருத்திபட்டபன்னிரண்டுபடுகை) யாவது-கொட்டைவாங்கிப், பன்னிச், சுருட்டி, நூலாக்கியும், பாவோடி, நெய்து, மடித்து, விற்றுப்போகவும் படியும், தோய்த்து, உலர்த்தி, உடுத்துக், கிழித்துவிடும்படியும், சேதநர்க்கு வஶ்யமாகை. தார்ஷ்டாந்திகத்தில் - ஈஶ்வரன் தன்னில் விபக்தமாக்கி, பஞ்சீக்ருதமாக்கி, அண்டமாக்கி, தேவாதி சரீரங்களாக்கி, லோகவ்யவஸ்த்திதியுண்டாக்கி, அவாந்தரஸ்ருஷ்டியைப்பண்ணி, ரக்ஷித்து, ப்ரஹ்மாதிகளுக்காக்கி, ப்ரளயத்திலே யெடுத்து எயிற்றிலேவைத்து, வயிற்றிலேவைத்து, உமிழ்ந்து, பின்பு ஸம்ஹ்ருதமாக்கியும் செய்தபடிகளை யெண்ணிக் கண்டுகொள்வது. ஆக, இத்தால் - கேவலம் ஸ்வாதீநமானதென்றதாயிற்று. (க)" త్వంనిర్మితా జఠరగాచ తవ త్రిలోకీ కిం భిక్షణాదియమృతే భవతా దురాపా । మధ్యేతథాతు న విచక్రమిషే జగచ్చేత్ త్వద్విక్రమైః కథమివ శ్రుతిరఞ్చితా స్యాత్ ॥ த்வம் நிர்மிதா ஜடரகாச தவ த்ரிலோகீ கிம் பிக்ஷணாதியம்ருதே பவதாதுராபா। மத்யே ததாதுநவிசக்ரமிஷே ஜகச்சேத் த்வத்விக்ரமைஃ கதமிவ ஶ்ருதிரஞ்சிதாஸ்யாத்" என்கிறதநுஸந்தேயம். (பலதிருக்கைகளையுடையவன்) என்றது - எண்கையான்" எண்ணப்பட்டகையானென்கிற சப்தார்த்தத்தைப் பற்ற. இத்தால் - (உ) "தோள்களாயிரத்தாய்" என்றத்தை நினைக்கிறது. "மா" என்று ஆனையாய், இப்போது இந்த அபதாநத்தையருளிச்செய்ததின் கருத்தைக் காட்டுகிறார், (ஸ்ரீகஜேந்த்ரேத்யாதி). ... ... ... (ரு)

---

(க) அதிமாநு - ஸ்த - கசு. (உ) தி - வாய் - அ - க - கப.

மூ—எண்டிசைகளு மேழுலகமும்வாங்கிப் பொன்வயிற்றிற்பெய்து
பண்டொராலிலைப்பள்ளிகொண்டவன்பான்மதிக்கிடர்தீர்த்தவ
ஒண்டிறலவுணனுரத்துகிர்வைத்தவனொள்ளெயிற்றொடு [ன்
திண்டிறலரியாயவன்திருவேங்கடமடைநெஞ்சமே!. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எண்திசைகளும் | எட்டுத் திக்குக்களையும் | தீர்த்தவன் | போக்கினவனாய், [ய |
| ஏழுஉலகமும் | ஏழுலோகங்களையும் | ஒண்திறல் | மிக்கமிடுக்கை யுடை |
| பண்டு | மஹாப்ரளயத்தில் | அவுணன் | அஸுரனான ஹிரண்யனுடைய |
| வாங்கி | அமுதுசெய்து | உரத்து | மார்பிலே |
| பொன் | ஶ்லாக்யமான | உகிர்வைத்தவன் | திருவுகிரை வைத்துக் கிழித்தவனாய், |
| வயிற்றில் | (தன்) திருவயிற்றிலே | ஒள் | ஒளிதங்கின |
| பெய்து | வைத்து | எயிற்றொடு | பற்களுடன் |
| ஓராலிலை | ஓராலந்தளிரிலே | திண் | சலியாத |
| பள்ளிகொண்டவன் | கண்வளர்ந்தருளினவனாய், | திறல் | மிடுக்கையுடைய |
| பால் | பால்போன்ற (ப்ரகாசகனான) | அரியாயவன் | நரஸிம்ஹரூபியானவன்நித்யவாஸம்பண்ணுகிற |
| மதிக்கு | சந்த்ரனுக்குவந்த | | |
| இடர் | க்ஷயத்தை | திருவேங்கடமடைநெஞ்சமே! (கூ) | |

பிற்பாடனைகுறைதீர ஆஶ்ரிதர்க்கு முற்பாடனாயுதவுகைக்காக வந்திருக்கிற தேசமாயிற்று. ... ... (ரு)

வ்யா.—ஆறும்பாட்டு. (எண்டிசையித்யாதி) எட்டுத்திக்குக்களோடே கூடியிருந்துள்ள லோகங்களேழையும் வாங்கி ஶ்லாக்யமான திருவயிற்றிலேவைத்துப், பண்டு பவனாயிருப்பதொரு ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளின அகடிதகடநா ஸாமர்த்யத்தையுடையவன். (பால்மதிக்கிடர் தீர்த்தவன்) பால்மதியுண்டு - சந்த்ரன், அவனுக்கு தர்மிலோப பர்யந்தமாக ஓரிடர்வர, அது அவ்வளவாகாதபடி பரிஹரித்து அவனிடரைப் போக்கினவன். (ஒண்டிறலித்யாதி) மிக்கமிடுக்கை யுடையனாயிருந்துள்ள ஹிரண்யனுடைய வுரஸ்ஸிலே திருவுகிரைவைத்தவன்; அதுக்குறுப்பாக அழகிய திருவெ

அரு.—ஆறும்பாட்டு- (எண்டிசைகளுமித்யாதி). மாணியாயிருந்துகொண்டத்தை யொரு சிறுபிள்ளையாயுண்டசமர்த்தும், மதிகெட்டுப்போகாதபடி போக்கின சமர்த்தும், அரைகுலையத் தலைகுலைய வரவேண்டாதே * ஸமஸமய ஸமுத்பவம் திருவுள்ளத்திலேதோற்றியருளிச்செய்கிறாரென்று அவதாரிகை பிடிக்கொள்வது.

மூ.—பாரு நீரெரி காற்றினோ டாகாயமு மிவை யாயினான்
பேருமாயிரம் பேசநின்ற பிறப்பிலி பெருகுமிடம்
காரும் வார்பனி நீள் விசும்பிடைச் சோருமாமுகில் தோய்தர
சேருவார்பொழில்சூழெழில்திருவேங்கடமடைநெஞ்சமே.(எ)

| பதம். | உரை. |
|---|---|
| பாரும் | பூமியும் |
| நீர் | ஜலமும் |
| எரி | அக்நியும் |
| காற்றினோடு | வாயுவோடு |
| ஆகாயமும் | ஆகாசமும் |
| இவை | ஆகியபூதபஞ்சகமும் |
| ஆயினான் | தானேயாயிருக்குமவனாய், |
| ஆயிரம்பேரும் | ஆயிரம் திருநாமங்களையும் [ம்படி |
| பேச | சொல்லி யாச்ரயிக்கு |
| நின்ற | நித்யவாஸம்பண்ணுமவனாய், |
| பிறப்பிலி | ஜந்மரஹிதனான ஸர்வேச்வரன் |

| பதம். | உரை. |
|---|---|
| பெருகும் | வளருகிற |
| இடம் | ஸ்தாநமானது, |
| காரும் | மேகங்களும் |
| வார்பனி | மிக்கபனியும் |
| நீள்விசும்பிடை | பெரியஆகாசத்தின் இடையிலே [தாய் |
| சோரும் | சொரியும்படியிருப்ப |
| மாமுகில் | பெரியமேகங்கள் |
| தோய்தர | படியும்படி |
| சேரு | தகுதியாக |
| வார் | நீண்ட |
| பொழில் | சோலையாலே |
| சூழ் | சூழப்பட்டு |
| எழில் | அழகையுடைத்தான |
| திருவேங்கடமடைநெஞ்சமே ! | (எ) |

யிற்றேடே கூட சலியாத மிடுக்கையுடைய நரஸிம்ஹமானவன். †திருமந்த்ரஞ்சொன்ன சிறுக்கனுக்கு உதவினவன், திருநாமம் சொன்னாரெல்லாருடையவும் ஸம்ஸார துரிதத்தைப் போக்குகைக்காக வர்த்திக்கிற திருமலையை யடையப்பாராய். ... (கூ)

"பேசுமின்திருநாமம்" இத்யாதி பாட்டையுட்கொண்டு சிங்கவேழ்குன்றத்திலரியானவனேடொரு ஸாதர்ம்யத்தை வெளியிடாநின்றுகொண்டு, அரி என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார், (திருமந்த்ரமித்யாதி). "ஹரதிஇ ஹரி:" என்கிற யோகார்த்தத்திலே நோக்கு. இத்தால், சிங்கவேழ்குன்றத்தில் நட்யா ஹரிபதவாச்யன், யோகசக்த்யா திருவேங்கடத்திலே வாச்யனாயிருக்கிறானென்று ஸங்கதி ஸூசிதமாயிற்று. ... ... ... (சு)

அ.—எழாம்பாட்டு. (பாரு நீரித்யாதி). இற்பாட்டில், (க) *எங்குமுளன் கண்ணனென்றமகனைக்காய்ந்த ஹிரண்யநிரஸநார்த்தமாகத்தத்ஸமகாலத்திலே தோற்றின ஸ்ரீந்ருஸிம்ஹாவதாரம் ப்ரஸ்துதமாகையாலே ஸம்ருதமான ஜகதாகாரதையை அநுஸந்தித்து, திருநாமஞ்சொல்ல ஸஹியாத ஹிரண்யனைக்கொன்றவன் நின்றவிடமாகையாலே திருநாமங்கள் சொல்லலாம்படியுமிருக்கிறானென்றநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

(க) தி - வாய் - உ - அ - கூ.

வ்யா. — ஏழாம்பாட்டு. (பாரித்யாதி) பூதபஞ்சகத்தையும் சொல்லுகையாலே - ஜகதாகாரனாய் நிற்கும்படியைச்சொல்லிற்று. தான் கொடுத்த உடம்பைக்கொண்டு தன்னுடைய திருநாமத்தைச் சொல்லி ஆஶ்ரயிக்கலாம்படி நிற்கிறவன். (பிறப்பிலிபெருகுமிடம்) †அகர்மவஶ்யனாய் இதரவிஸஜாதீயனாய் ஜகத்தின்படியன்றிக்கேயிருக்கிறவன் வர்த்திக்கிறவிடம். (காரித்யாதி) †மேகங்களும், மிக்கபனியும் பெரிய ஆகாசத்தினிடையிலே சொரிவதாய், பெரிய மேகங்கள் †படியும்படி †நீண்டசோலை சூழப்பட்ட திருவேங்கடம்; †பெருகின மிக்கஜலத்தையுடைத்தாய், ஆகாசத்திலே வர்ஷிக்கிற மேகங்களானவை. (சேரும்) என்று பாடமானபோது, சேருகிற - ஸ்பர்சிக்கும்படி சேருகிற - கிட்டுகிற, பரந்த பொழிலாலே சூழப்பட்டு எழிலையுடைத்தான திருமலையை. காரும் - பெருகுகை. வார் - மிகுகை. ()

(க) "பிறந்தவாறும் வளர்ந்தவாறும்" என்று பிறப்புச் சொல்லியிருக்க "பிறப்பிலி" என்னக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார், (அகர்மேத்யாதி). "நீள் விசும்பிடை, காரும் - மேகமும், வார்பனியும் சோருமதாய், மாமுகில் தோய்தரும்படி சேருவார் பொழிலாலே சூழப்பட்டதுமாய், எழிலையுடைத்தான திருவேங்கடம்" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி ஒரு யோஜனையருளிச்செய்கிறார், (மேகங்களுமித்யாதி). பெரியவாகாசத்தினிடையிலேயிருக்கிற மேகங்களும் மிக்கபனியும் சோருவதாய் என்று வாக்யத்தை அந்வயித்துக்கொண்டு, திருவேங்கடத்துக்கு விசேஷணமாக்கிக்கொள்வது. இங்ஙனன்றாகில், மேகங்கள் சோருவதான பெரியமேகங்களென்ன வொண்ணாதிறே. சோருவதாய் - சொரியும்படியிருப்பதாய். "தோய்தர" என்றதினர்த்தம், (படியும்படி) என்றது. (நீண்ட) என்றது-"சேருவார்" என்றதினர்த்தம். "சேருவார்" தகுதியாக நீண்டவென்றபடி. அன்றிக்கே, "காரும் வார்பனி" என்று ஸமஸ்தபதமாய், காராநிற்கிற - பெருகாநிற்கிற, வார் பனியானது மிக்க ஜலமானது, நீள் விசும்பிடைச் சொரியும்படி யிருப்பதான மாமுகிலானவை, தோய்தர - ஸ்பர்சிக்கைக்கு. சேரு - அநுரூபமான, வார் - நீண்ட, பொழில் சூழெழில் திருவேங்கடமென்று க்ரமேண ஒரு யோஜனையை விவக்ஷித்துத் தாத்பர்யத்தை யருளிச்செய்கிறார், (பெருகினவித்யாதி). "சேருமாமுகில்" என்றபாடாந்தரத்திலே, நீள்விசும்பிடைச் சேராநிற்கிற - நடந்துவாராநிற்கிற, மாமுகிலென்று சப்தார்த்தம். இப்போது, காராநிற்கிற வார்பனியையுடைத்தாயென்று விசேஷணமாக்கிக்கொள்வது. ... (எ)

(க) தி - வாய் - ரு - ௪௦ - க.

மூ—அம்பர மனல் கால் நிலம் சலமாகி நின்ற வமரார்கோன்
வம்புலா மலர்மேல்மலி மடமங்கைதன் கொழுனனவன்
கொம்பினன்ன விடை மடக் குறமாதர் நீளிதணந்தொறும்
செம்புனமவை காவல்கொள் திருவேங்கடமடைநெஞ்சமே. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அம்பரம் | ஆகாசம் | மங்கைதன் | பெரியபிராட்டிக்கு |
| அனல் | அக்நி | கொழுனனவன் | நாயகனான ஸர்வேச்வரன் நித்யவாஸம் பண்ணுமிடமாய் |
| கால் | காற்று | | |
| நிலம் | பூமி | | |
| சலம் | ஜலம் ஆகிய பஞ்சபூதங்களும் | கொம்புஅன்ன | வஞ்சிக்கொம்புபோன்ற |
| ஆகிநின்ற | தானேயாயிருக்குமவனாய், | இடை | இடுப்பையும் |
| | | மடம் | மடப்பத்தையுமுடைய |
| அமரர் | நித்யஸூரிகளுக்கு | குறமாதர் | குறப்பெண்கள் |
| கோன் | தலைவனாய், | நீள் | உயர்ந்த |
| வம்பு | பரிமளம் | இதணம்தொறும் | பரண்கள்தோறும் (இருந்து) |
| உலாம் | வீசுகிற | | |
| மலர்மேல் | தாமரைமலரின்மேலே | செம் | சிவந்த |
| மலி | பொருந்தியிருக்குமவளாய் | புனமவை | கொல்லைநிலங்களை |
| | | காவல்கொள் | காத்துக்கொண்டிருப்பதான |
| மடம் | மடமென்னும் குணம் நிறைந்த | | |
| | | திருவேங்கடம் அடைநெஞ்சமே! (அ) | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (அம்பரமித்யாதி) ஜகதாகாரனாய் நிற்கும்படியைச் சொல்லுகிறது. (அமரர்கோன்) இத்தால் - அஸாதாரணமான திவ்யவிக்ரஹயுக்தனாய், * அயர்வறு மமரர்களதிபதியாயிருக்கும்படியைச்சொல்லுகிறது. (வம்புலா) †நித்யஸூரிகள் ஓலக்கங்கொடுக்கப் பிராட்டியும் தானுமாய் பரமபதத்திலே யிருக்குமிருப்பைச்சொல்லுகிறது. † செவ்விமாறாத மலரை வாஸஸ்த்தாநமாக

அரு.—எட்டாம்பாட்டு. (அம்பரமித்யாதி). கீழ்ப்பாட்டில் ப்ரஸ்துதமான ஜகதாகாரத்வமாத்ரமன்றிக்கே உபயவிபூதியோகத்தையு மநுஸந்தித்துக்கொண்டு, "(க) ஸ்ரீயா ஸார்த்தம் ஜகத்பதி:" என்கிறபடியே அங்கிருக்குமிருப்பை யநுபவிக்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

"அமரர்கோன்" என்ற பதச்சேர்த்தியால் பலித்த அர்த்தத்தையருளிச்செய்கிறார், (நித்யேத்யாதி). வம்புலா - பரிமளமுலாவாநின்றுள்ள, மலர்மேல் மலி - ஸம்ருத்தையாயிருந்துள்ள, மடமங்கை - பவ்யதையையுடைய பிராட்டியென்று சப்தார்த்தமாய், வாக்யத்துக்குப் பலிதார்த்தமருளிச்செய்கிறார், (செவ்வியித்யாதி). வம்பு - புதுமையாய், அத்தாலே - செவ்வியென்றதென்

(க) பாஞ்சரா.

மூ.—பேசுமின் திருநாமமெட் டெழுத்தும்சொல்லிநின்றுபின்னரும்
பேசுவார்தம்மை யுய்யவாங்கிப் பிறப்பறுக்கும் பிரானிடம்
வாசமாமலர் நாறுவார் பொழில் சூழ்தருமுலகுக் கெல்லாம்
தேசமாய்த் திகழும்மலைத் திருவேங்கடமடைநெஞ்சமே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பேசும் | (எல்லாராலும்) உச்சரிக்கப்படுமதாய் | இடம் | ஸ்த்தானமாய், |
| இன் | (நாவுக்கு) இனிய | வாசம் | பரிமளத்தை யுடைத்தாய் |
| திருநாமம் | திருநாமமான | மா | ஶ்லாக்யமான |
| எட்டெழுத்தும் | எட்டுத் திருவக்ஷரத்தையும் | மலர் | புஷ்பங்கள் |
| சொல்லிநின்று | ஒருதரம்அநுஸந்தித்து | நாறு | கமழாநின்றுள்ள |
| பின்னரும் | பின்னையும் | வார் | பரந்த |
| பேசுவார்தம்மை | அநுஸந்திக்குமவர்களை | பொழில் | சோலைகளாலே |
| உய்ய | உஜ்ஜீவிக்கும்படி | சூழ்தரும் | சூழப்பட்டிருப்பதாய் |
| வாங்கி | அங்கீகரித்து | உலகுக்குஎல்லாம் | எல்லா லோகங்களுக்கும் |
| பிறப்பு | (அவர்களுடைய)ஸம்ஸாரபந்தத்தை | தேசமாய் | ஒளியைவிளக்கத்தக்கதாய் |
| அறுக்கும் | போக்கித் தந்தருளுகிற | திகழும் | விளங்குகிற |
| பிரான் | மஹோபகாரகன் பண்ணுகிற | மலை | மலையான |
| | | திருவேங்கடம் அடைநெஞ்சமே! | () |

யுடைய பெரியபிராட்டியார்க்கு †வல்லபனானவன். (கொம்பித்யாதி) †வஞ்சிக்கொம்போடொத்த இடையையும் ஆத்மகுணங்களையுமுடைய குறமாதருண்டு - குறப்பெண்கள், ஒக்கத்தையுடைத்தான †பரண்கள்தோறும். (செம்புனம்) பாலை நிலமாகையாலே நிலப்ரயுக்தமான சிவப்பைச்சொல்லுதல். † தினைமுற்றிநுனிபழுத்த வளவிலே கிளிகள் †புறாக்கள் கடியாதபடி நோக்குகிற திருமலையை. ... (அ)

வுமாம், "கொழுநன்" என்றதினர்த்தம், (வல்லபன்) என்றது. இன்-சாரியைச்சொல்லாய், கொம்பன்னவென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார், (வஞ்சிபித்யாதி). "இதணம்" என்றதினர்த்தம், (பரண்) என்றது. "செம்புனம்" என்றதுக்கு - கதிர்நுனி பழுக்கையாலேவந்த சிவப்பென்று யோஜநாந்தரமருளிச்செய்கிறார், (தினையித்யாதி). (புறாக்கள்) - கபோதங்கள். ... (அ)

அந.—ஒன்பதாம்பாட்டு. (பேசுமினித்யாதி). (க) "వైకుణ్ఠేతు పరే లోకే శ్రియాసార్ధం జగత్పతిః । ఆస్తే విష్ణురచిన్త్యాత్మా భక్తైర్భాగవతైస్సహ" - வைகுண்டேது பரே லோகே ஶ்ரியாஸார்த்தம் ஜகத்பதி: ।ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மாபக்தைர்பாகவதைஸ்ஸஹ" என்கிறபடியே யிருக்குமிருப்பைக் கீழ்ப்பாட்டிலே

(க) பாஞ்சரா.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பேசுமினித்யாதி) †(பேசுவார் தம்மை யுய்யவாங்கிப் பிறப்பறுக்கும் பிரானிடம் - பேசுமின் திருநாமமெட்டெழுத்தும் சொல்லிநின்று) என்று - இத்தனையும் பரோபதேசமாய், (வாசமாமலர்) என்று - மேலித்தனையும் ஸ்வகதமாக வருளிச்செய்கிறாரென்றுமாம். †அன்றிக்கே, திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்கிறாராகவுமாம். (பேசுமினித்யாதி)†ஓரதிகாரிஸம்பத்தி வேண்டாவிறே பெற்ற தாய் பேர்சொல்லுவார்க்கு; † அப்படியே, இடர்வந்தபோது எல்லாரு மொக்கச்சொல்லிக் கொடுபோரக்கடவதான இனியதிருநாமமான எட்டெழுத்தையும் சொல்லிநின்று. ஒருகால் சொன்னோமிறே என்று கைவாங்கியிருக்கை யன்றிக்கே, (பின்னரும்) பின்னையுமென்றபடி. வாயாலே திருநாமத்தைச் சொல்லுமவர்களுக்கு ஸத்தாஹாநிவாராமே அவர்களுஜ்ஜீவிக்கும்படி அங்கீகரித்துப், † பின்னையும் அவர்களுக்கு விரோதியான ஸம்ஸாரஸம்பந்தத்தை யறுத்துக்கொடுக்கு முபகாரகன் வர்த்திக்கிறஸ்தாநம்.

---

“அமரர்கோன்” இத்யாதியாலே அநுஸந்தித்தவர். (க) “త్యక్త్వా వైకుణ్ఠముత్తమమ్ । స్వామిపుష్కరిణీ తీరే రమయా సహ మోదతే - த்யக்த்வாவைகுண்ட முத்தமம் । ஸ்வாமிபுஷ்கரிணீதீரே ரமயாஸஹமோததே” என்றுவந்தபடியை யநுஸந்தித்து, அவன் வந்ததுக்கு ப்ரயோஜநத்தையருளிச் செய்கிறார் என்று அவதாரிகை கண்டுகொள்வது.

“பேசுமின்” என்னுமது க்ரியாபதத்வேந ப்ரஸித்தமாகையைப்பற்ற ஒருயோஜனையருளிச்செய்கிறார், (பேசுவாரித்யாதி). (திருநாம மெட்டெழுத்துஞ் சொல்லிநின்று பின்னரும் பேசுவார் தம்மையுய்யவாங்கிப் பிறப்பறுக்கும் பிரானிடம் - பேசுமின்என்று இத்தனையும் பரோபதேசமாய்) என்று வாக்யத்தை அந்வயித்துக்கொள்வது. ப்ரகரணஸ்வாரஸ்யத்துக்கு அநுகுணமாக, பேசுமதாய், இனியதிருநாமமென்று ஸமஸ்தபதமாக்கியருளிச்செய்கிறார், (அன்றிக்கேயித்யாதி). பரோபதேசமென்னும் பக்ஷத்திலே, பஹுவசநப்ரயோகத்தாலே எல்லாரையும் சொன்னதுக்கு உட்கருத்தை யருளிச்செய்கிறார், (ஓரதிகாரியித்யாதி வாக்யத்வயத்தாலே). பாட்டெல்லாவற்றையும் திருவுள்ளத்தைக்குறித்தருளிச் செய்கிறாரென்னும் பக்ஷத்திலே அர்த்தமருளிச்செய்கிறார், (அப்படியே யிடரித்யாதி). அன்றிக்கே, இரண்டாம்யோஜனை தன்னிலே, “பேசும்” என்ற ஸாமாந்யோக்திக்குத்தாத்பர்யம், (ஓரதிகாரி) இத்யாதிவாக்யம் என்று கொள்ளவுமாம். “உய்யவாங்கி” என்றவநந்தரம், “பின்னரும்” என்றபதத்தை அநுஸந்தித்துக் கொண்டருளிச்செய்கிறார், (பின்னையுமவர்களுக்கித்யாதி). ஸம்ஸாரவிமோசநமே திருவேங்கடத்தானுகை

---

(க)

மூ.—செங்கயல் திளைக்குஞ்சுனைத் திருவேங்கடத்துறைசெல்வனை
மங்கையர் தலைவன்கலிகன்றிவண்டமிழ்ச்செஞ்சொல்மாலைகள்
சங்கையின்றித் தரித்துரைக்கவல்லார்கள் தஞ்சமதாகவே
வங்க மா கடல் வையம் காவலராகி வானுலகாள்வரே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| செம் | (இளமையாலே)சிவந் | கலிகன்றி | கலிதோஷத்தைப் போக்கின ஆழ்வார் |
| கயல் | மத்ஸ்யங்கள் [த | | |
| திளைக்கும் | களித்துவர்த்திக்கிற | வண் | அழகிய |
| சுனை | சுனைகளையுடைய | தமிழ் | தமிழ்ப்பாஷையால் |
| திருவேங்கடத்து | திருமலையில் | சொல் | அருளிச்செய்த |
| | | செம் | செவ்விய |
| உறை | நித்யவாஸம்பண்ணுகிற | மாலைகள் | சப்த ஸந்தர்ப்பங்களை |
| | | தரித்து [ர்கள் | (நெஞ்சிலே) தரித்து |
| செல்வனை | ஸ்ரியப்பதிவிஷயமாக | உரைக்கவல்லா | சொல்லவல்லவர்கள், |
| மங்கையர் | திருமங்கையிலுள்ளார்க்கு | தஞ்சமதாக | நிஸ்சயமாக [த |
| | | வங்கம் | மரக்கலங்கள் நிறைந் |
| தலைவன் | ராஜாவாய் | மா | பெரிய |

(க) †"ஆக்கை புகாமையுய்யக்கொள்வான் நின்றவேங்கடம்" என்னக் கடவதிறே. (வாசமித்யாதி) பரிமளத்தை யுடைத்தாயிருந்துள்ள மலராலே கமழாநின்றுள்ள பரந்த பொழிலாலே சூழப்பட்டிருப்பதுமாய். (உலகுக்கெல்லாம் தேசமாய்த்திகழும்மலை) (க) †"நீணிலத்துள்ளது" என்கிறபடியே பரமபதத்துக்குண்டான ஏற்றம் போலே திருமலையிங்கேயாகையாலே ஸம்ஸாரமுத்தேஸ்யமாம்படியிருக்கிறதாயிற்று. (உ) "திலதமுலகுக்காய்" என்னக்கடவதிறே. (ங) †"நிலமகள்தன் நெற்றிக்குத் திலதமாய்நின்ற" என்று இட்டுவைத்தான். ... ... ... (சு)

ப்ரயோஜநமென்னுமதுக்கு ஸம்வாதம், (ஆக்கையித்யாதி). உலகுக்கெல்லாம் தேஜஸ்கரமாய் ப்ரகாசிக்கும் மலையென்று சப்தார்த்தமாம். "சென்று ...கதொழுவார்கள் தேவர்கள்" என்றபாசுரசேஷத்திலும் நோக்காகத்தாத்பர்ய மருளிச்செய்கிறார், (நீணிலத்தித்யாதி). திலதமாகப்பின்னையும் சொன்...ருருன்டோவென்ன; தமிழனும் சொன்னானென்கிறார், (நிலமகளித்யாதி).()

(க) தி - வாய் - கூ - ங - அ. (ங)
(உ) தி - வாய் - சா - க - கப.

| | | | |
|---|---|---|---|
| கடல் | ஸமுத்ரத்தால்சூழப்பட்ட | ஆள்வர் | ஆளப்பெறுவர்; (இவ் வர்த்தத்தில்) |
| வையம் | பூமிக்கு | சங்கையின்றி | ஸந்தேஹமின்றிக்கே யிருங்கோள். (கO |
| காவலராகி | ரக்ஷகராய்க்கொண்டு | | |
| வானுலகு | பரமபதத்தை | | |

வ்யா.—பத்தாம்பாட்டு. (செங்கயலித்யாதி) † முக்தர் என்று மொக்க பஞ்சவிம்சதி வார்ஷிகராய் பகவதநுபவமேயாத்ரையாய்க் களிக்குமாபோலே, யௌவநப்புகராலே சிவந்த நிறத்தையுடைய கயல்களானவை ஒன்றேடொன்று களித்து வர்த்தியாநின்றுள்ள சுனைகளையுடைத்தான திருமலையிலே நித்யவாஸம்பண்ணுகிற ஸ்ரீயஃபதியை. (மங்கையர்தலைவன்) திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வார், † அழகிய தமிழில் செவ்வியசொல்லாலே செய்த தொடையைத் தரித்துச் சொல்லவல்லவர்கள், †நிஸ்சிதமாகவே,கடல்சூழ்ந்தபூமிக்கு ரக்ஷகராய், பின்பு நித்யவிபூதியும் தாங்களிட்ட வழக்காம்படி ஆகப்பெறுவர்கள். இது கூடுவதொன்றேவென்னில்; (சங்கையின்றி) இதில் சங்கைபண்ணவேண்டா.... ... ... (கO)

பேரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

—·-·—

அரு,—பத்தாம்பாட்டு. (செங்கயலித்யாதி). "பொங்குநீர் செங்கயல் திளைக்கும்சுனை" என்று முதற்பாட்டிலே சொன்னவிசேஷணத்தை இங்கே நிகமத்திலேயுமருளிச் செய்தவருடைய உட்கருத்தையருளிச்செய்கிறார்,(முக்தரித்யாதி) [illegible] தாமும் (க) "மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேனே" என்று மநோரதிக்கிற [illegible] என்றதாயிற்று, "வண்" என்றதினர்த்தம், (அழகிய) என்றது. "தஞ்சமதாகவே" என்றதுக்குப் பலிதார்த்தம், (நிஸ்சிதமாகவே) என்றது. வானுலகாள்வர் சங்கையின்றி இருங்கோள் என்றுகூட்டிக் கொள்வது. (கO)

ஜீயர் திருவடிகளே சரணம்.

முதற்பத்தில் - எட்டாந்திருமொழி முடிந்தது.

---

(க) பெரு - திரு - ச - 2.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# முதற்பத்து - ஒன்பதாந்திருமொழி - தாயே.

௬0.—தாயே தந்தையென்றும் தாரமே கிளைமக்க ளென்றும்
நோயேபட்டொழிந்தே னுன்னைக் காண்பதோ ராசையினால்
வேயேய் பூம்பொழில்சூழ் விரையார் திருவேங்கடவா
நாயேன் வந்தடைந்தேன் நல்கியாளென்னைக் கொண்டருளே.()

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| வேய் | மூங்கில்கள் | மக்களேயென்றும் | (மக்களல்லாதாரைப்) பிள்ளைகளென்றும் நினைத்து |
| ஏய் | நெருங்கியிருப்பதாய் | நோய்பட்டு ஒழிந்தேன் | அநர்த்தப்பட்டுப்போந்தவனாய், |
| பூ | புஷ்பித்து [தான | நாயேன் | நாய்போலே மிக்க தண்ணியனான நான் |
| விரை ஆர் | பரிமளம்மிக்கிருப்ப | உன்னை | நிருபாதிகபந்துவான தேவரீரை |
| பொழில்சூழ் | சோலையாலே சூழப்பட்டிருக்கிற | காண்பது | காணவேணுமென்கிற |
| திருவேங்கடவா | ஸ்ரீ வேங்கடாத்ரியை நிரூபகமாக வுடையவனே! | ஓர் ஆசையினால் | ஒரு ஆசையாலே |
| தாயே என்றும் | (தாயல்லாதானைத்)தாயென்றும் | வந்து | (தேவரீர் திருவடிகளிலே) வந்து |
| தந்தையென்றும் | (தந்தையல்லாதானைத்) தகப்பனென்றும் | அடைந்தேன் | சரணம்புகுந்தேன்; |
| தாரமேயென்றும் | (மனையாளல்லாதவளை) மனையாட்டியென்றும் | என்னை | தாஸபூதனான வென்னை |
| கிளையேயென்றும் | (பந்துக்களல்லாதவர்களை) பந்துக்களென்றும் | நல்கி | க்ருபைசெய்து |
| | | ஆள்கொண்டருள் | அடிமைகொண்டருளவேணும். ......(௧) |

வ்யா.—தாயே தந்தை ப்ரவேசம்—திருமலையை ஆஶ்ரயியென்று திருவுள்ளத்தைக் குறித்து உபதேசித்தார் கீழ்; அப்படியே அது மும் பாங்காய், தாமும் அநுபவிப்பாராய் திருமலையிலே வந்து புகு

அரு.—தாயே தந்தை ப்ரவேசம்.—கீழ்த்திருமொழியிலே - "திருவேங்கடமடைநெஞ்சமே!" என்று பலகால் சொல்லிக்கொண்டநுபவிக்க விழிந்த பின், இத்திருமொழியிலே, பூர்வவ்ருத்தத்தைச் சொல்லிக்கொண்டு சரணம் புகுகைக்கு ப்ரஸங்கமென்னென்கிற சங்கையிலே யருளிச்செய்கிறார்,

ந்தார்; † ஸர்வ ஸ்வாமியாய் நிருபாதிகபந்துவுமானவனிங்கேவந்து ஸந்நிஹிதனுகையாலே, தம்முடைய அபேக்ஷிதங்களெல்லாம் பெறலாமென்று, அக்ரூரன் (க) "மாமக்ரூரேதி வக்ஷ்யதி - மாமக்ரூரேதிவக்ஷ்யதி" என்று மநோரதித்துக் கொண்டுவந்தாற்போலேயும், † ஸ்ரீபுண்டரீகன் மநோரதம்போலேயும், இவரும் மநோரதித்துக்கொண்டு வந்தவிடத்தில், அப்படி எதிரேவருதல் அணைத்தல், ஓர் இன்சொல் சொல்லுதல், (உ) "க்ரியதாம் - க்ரியதாம்" என்று கைங்கர்யத்திலே ஏவுதல் செய்தருளக்காணுமையாலே மிகவும் நொந்து, நித்ய ஸந்நிதியுமுண்டாய், நினைத்தது செய்து தலைக்கட்டுகைக்கீடான சக்தியுமுண்டாய், ப்ராப்தியுமுண்டாயிருக்க, அபேக்ஷிதம் செய்யாதொழிகிறது செய்தருள நினையாமைக்கீடாயிருப்பதொரு ஹேது இத்தலையிலே யுண்டாகையிறே என்று † கைவாங்கினவர், பின்னையும் கைங்கர்யத்திலுண்டான சாபலாதிசயத்தாலே தவிரமாட்டாமை † மீண்டு, என்னுடைய பாபங்களைப் † பார்த்தால், அபந்துக்களை பந்துக்களாக நினைத்தும், போக்யமில்லாதவிடத்திலே போக்ய புத்தியைப்பண்ணியும், பரஹிம்ஸையைப் பண்ணியும், ஆர்த்த விஷயங்களிலே ஐயோ! என்னுதேயும், உன்னையொழியப் புறம்பே காலத்தைப்போக்கியும் போந்தேன், இங்ஙனே போந்தேனேயாகிலும், இப்போது தேவரையொழியச் செல்லாமையுண்டாய் வந்தேன், இத்தலைசேஷமாய், தேவர்சேஷியாய், விடவொண்ணுதபடியான ஸம்பந்தமுமுண்டாய்,என்குற்றங்களைப் பொறுப்பிக்கைக்குப் பிராட்டி ஸந்நிதியுமுண்டானபின்பு, என் அபராதங்களைப் பொறுத்தருளி என்னுடைய ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியைக்கொண்டருளவேணும்.

(ஸர்வஸ்வாமியித்யாதி). (க) "யோநந்த: ப்ருதிவீம் தத்தே சேகரஸ்தி ஸம்ஸ்திதாம்। ஸோவதீர்ணோ ஜகத்யர்த்தே மாமக்ரூரேதி வக்ஷ்யதி - யோநந்த: ப்ருதிவீம் தத்தே சேகரஸ்த்திதி ஸம்ஸ்த்திதாம் | ஸோவதீர்ணோ ஜகத்யர்த்தே மாமக்ரூரேதி வக்ஷ்யதி" என்று ப்ரமாணசேஷம். (ஸ்ரீபுண்டரீகன் மநோரதம்) என்றது - திருக்கடன் மல்லையிலே ஸ்ரீபுண்டரீகனென்கிற ருஷி கடலைவற்ற இறைத்து க்ஷீராப்திசாயிக்குக் கைங்கர்யம்பண்ண நினைத்த நினைவென்றபடி. (கைவாங்கினவர்) என்றது- "நோயேபட்டொழிந்தேன்" என்றத்தைப்பற்ற. கீழே "திருவேங்கடமடை நெஞ்சமே" என்றவர் "நோயேபட்டொழிந்தேன்" என்றத்தாலே கைவாங்கினது அர்த்தஸித்தமென்று கருத்து. (மீண்டு) என்றதுக்கு (சரணம்புகுகிறுர்) என்றத்தோட ந்வயம். (பார்த்தால்) என்றதுக்கு, (போ தேன்) என்றத்

மென்று, † பெரியபிராட்டியார் புருஷகாரமாகத் திருவடிகளிலே விழுந்து சரணம்புகுகிறார்.

இதுதான்(க)*வாணிலாமுறுவலிலே செய்ததன்றோவென்னில்; ஸுகுமாரராயிருக்குமவர்கள் விடாய்த்தால் பலகாலும் முகத்திலே நீரையள்ளி யேறிட்டுக்கொள்ளுமாபோலே பலகாலும் ப்ரபத்திபண்ணும்படியாயிற்று இவருடைய மார்த்தவமிருப்பது. †ஒருகால் பெற்றிலோமென்று கைவாங்குமளவன்றிக்கே பெற்றவளவும் ப்ரபத்தி பண்ணுவராயிற்று. (உ) "निपपात विभीषणः- நிபபாதவிபீஷண:" என்று அவன் திருவடிகளிலே விழுந்து சரணம்புக்காற்போலேயாயிற்று.

முதற்பாட்டு. (தாயேயித்யாதி) (ங) "माता पिता भ्राता-மாதாபிதாப்ராதா" (ச) "भ्राता भर्ता च-ப்ராதாபர்த்தாச" (ரு) "एकैकफललाभाय-ஏகைகபலலாபாய" என்கிறபடியே தேவரே ஸர்வவிதபந்துவுமா

தோடந்வயம். (சு) "எங்கள் மாதவனே!" என்றத்தைப்பற்ற, (பெரியபிராட்டியாரித்யாதி).

கீழ்த்திருமொழிகளில் தோற்றின பௌநருக்த்யத்தைப் பரிஹரித்து, இதில் பாட்டுத்தோறும் "வந்தடைந்தேன்" என்கைக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார், (ஒருகாலித்யாதி) "पपात - பபாத" என்னாதே "निपपात - நிபபாத" என்றத்தாலே - பலகால் சரணம் புக்கானென்று கருத்து.

முதற்பாட்டு.—(தாயேயித்யாதி). "தாயே" என்கிற விடத்தில், ஏகாரம் பிரிநிலை ஏகாரமாய், தாயாகாதவனைத்தாயே என்றிருந்தேனென்று தாத்பர்யமாய், இதுதானும் எல்லாப்பதங்களிலும் அநுவர்த்திக்கையால் ஒருவர்க்கு மொருஸம்பந்தமும் வாஸ்தவமாக இல்லையென்று பலிக்கையாலே, வேங்கடவனே இவையெல்லாமாயிருப்பனென்று விவக்ஷித்து ப்ரமாணங்களையும் காட்டாநின்றுகொண்டு தாத்பர்ய மருளிச்செய்கிறார், (மாதேத்யாதி). (ங) "माता पिता भ्राता निवासः शरणं सुहृद्गतिर्नारायणः - மாதாபிதாப்ராதா நிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:" என்றவிடத்திலும், (ச) "अहं तावन्महाराजे पितृत्वं नोपलक्षये - भ्राता भर्ता च बन्धुश्च पिता च मम राघवः"- அஹம்தாவந் மஹாராஜேபித் ருத்வம் நோபலக்ஷயே | ப்ராதா பர்த்தாச பந்துச்ச பிதாசமமராகவ:" (ரு) "पितृ मातृ सुत भ्रातृ दार मित्रादयोऽपि वा । एकैक फल लाभाय सर्व लाभाय केशवः" பித்ருமாத்ருஸுத ப்ராத்ரு தாரமித்ராதயோபிவா | ஏகைகபலலாபாய ஸர்வலாபாயகேசவ:". என்றவிடத்திலும், "सर्वं वाक्यं सावधारणम् - ஸர்வம் வாக்யம் ஸாவதாரணம்" என்கிற ந்யாயத்தாலே நாராயண ஏவ என்று கொள்வது. मित्रादयोऽपि वा-மித்ராதயோபிவா" என்கிறவிடத்திலே,

(க) க-சு. (ங) ஸுபாலோ-சு. (ரு)
(உ) ரா-யு-கக-உ. (ச) ரா-அ-ருக-ஙo. (சு) க-க-க.

யிருக்க, ஸோபாதிகபந்துக்களாய் இத்தலையில் †ப்ரயோஜநமுள்ள நாள் கொண்டு இவனுக்கு உதவவேண்டுமென்று தங்களைக்கொண்டு அகலநின்று அபகாரத்தையே பண்ணுமவர்களையேபந்துக்களென்று நினைத்து அநர்த்தப்பட்டேனென்கிறார். தாயேயென்றும் தந்தையேயென்றும் தாரமேயென்றும் †கிளையேயென்றும் மக்களேயென்றும் புத்ரமித்ராதிகளையாசைப்பட்டு. (நோயேபட்டு) †இவன்பக்கல் உபகாரங்கொள்ளலாமன்று†கொண்டு இவனுக்குஉதவவேண்டுமென்று அபகாரத்தைப்பண்ணித் தங்களைக்கொண்டு அகலநினைக்குமவர்களை பந்துக்களென்றுநினைத்தால், அவர்கள் பந்துக்ருத்யம்பண்ணக்காணுமையாலே க்லேசமேயிறே விளைப்பது. இவன்பந்துக்களென்று நினைத்திருக்குமத்தனையிறே. அவர்கள்பக்கல் அதில்லையே. †வேறொரு வ்ருத்தாதிகளால்வேண்டாதே அவர்கள் தாங்களே க்லேசத்துக்குடலாயிறேயிருப்பது. (பட்டொழிந்தேன்) பட்டேனென்றபடியாகவுமாம். †அன்றிக்கே, நோயேபட்டு ஒழிந்தேன் - விட்டே

---

"வா" என்கையாலே பித்ருத்வாதிகளில்லை, உண்டானும் என்னும் அப்யுபகம்யவாதம் ஸூசிதமாகிறது. ஆக, இந்த ப்ரமாணங்களாலே மாத்ருத்வாதிகள் மற்றொருவர்க்குமில்லை; எம்பெருமானுக்கேயுள்ளதென்று சொல்லிற்றாயிற்று. (ஸோபாதிகபந்துக்கள்) என்றது-தன்னிச்சையாலே ஆரோபிதபந்துத்வவான்களென்றபடி; கர்மோபாதிகபந்துக்களென்னவுமாம். (கிளையேயென்றும்) என்றது - ஸம்பந்திகளேயென்றுமென்றபடி. "தாயேதந்தை" இத்யாதிக்கு - ஸ்தநந்தயாவஸ்த்தாப்ரப்ருதியான இவனுடைய * பாந்தவாபாஸலோலத்வத்தை அடைவே யருளிச்செய்கையிலே தாத்பர்யமென்று திருவுள்ளம். இவன் "தாய்" என்று ஆதரித்தானாகில் அவர்களாலே நோயேபடவேண்டுவானேனென்னென்ன; அருளிச்செய்கிறார், (இவன் பக்கலித்யாதி). (கொண்டு) வாங்கிக்கொண்டு. இத்தால் - இவனுதரிக்கைக்குறுப்பாகத் தாங்களும் தாய்நினைவுகொண்டுவருமத்தனை போக்கி இவனுக்கு உதவுகைக்குறுப்பான தாய்தந்தையன்றிக்கே,பலியிடக்கொடுத்தும் தாங்கள்விற்றும் ஜீவிக்குமவர்களுண்டென்றதாயிற்று. "தாயே" இத்யாதிகளில் ஏவகாரங்களுக்குத் தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார்; (வேறொருவித்யாதி). இத்தால் - அவர்களுடைய அபகாரத்தாலே நோவுபடுகையன்றிக்கே அவர்கள் ஸ்வரூபமே நோய்க்கு நிதாநமென்று வ்யாவர்த்தகங்களென்றதாயிற்று. இப்பக்ஷத்தில், அவர்கள் நியதஸ்வபாவராகையாலே நினைத்து நினைத்து து:கிக்கைக்குறுப்பாயிருப்பர்களென்று திருவுள்ளம். முழுச்சொல்லாக ஓரர்த்தமருளிச்செய்து, பதபேத விவக்ஷயா அர்த்தாந்தரம், (அன்றிக்கேயித்யாதி). அநாதியாக ஆத

னென்னவுமாம். †பகவத்குணங்கள் உத்தேஶ்யமென்றறியும்போது ஸதாசார்யோபதேசமும் சாஸ்த்ரமும்வேணும்; ஸம்ஸாரத்தில் த்யாஜ்யதையில் ப்ரத்யக்ஷமே †அமையுமிறே. இவைத்தானே உபாத்யாயர்களாகவாயிற்று விட்டது. (உன்னைக்காண்பதோராசையினால்) †ஸோபாதிகபந்துக்களை பந்துக்களென்று ப்ரமித்து அவர்கள் உதவவேண்டுமென்று உதவக்காணாமையாலே நிருபாதிகபந்துவான உன்னைக் காணவொண்ணாதோவென்னும்படியாய் உன்பக்கலிலே அவை தானே ஆசையைப்பிறப்பித்தன.

(வேயித்யாதி) †ப்ரயோஜநமுள்ளநாள்கொண்டு உதவவேண்டுமன்றாக அகலநிற்கையன்றிக்கே, முன்பெல்லாமகலநின்று கார்யவேளையிலேவந்து முகங்காட்டி உபகரிக்குமவனாயிருந்தாய்நீ, வேய்கள் ஏய்ந்திருப்பதாய். (பூம்பொழிலித்யாதி) (க) †“ஸர்வகந்த:” - ஸர்வகந்த:”என்கிறவஸ்து உள்ளேநிற்கிறதென்று தோற்றும்படியாயிற்றிருக்கிறது; †அப்பரிமளம்வழிகாட்டவந்தேன். (வேங்கடவா) †அவனுடையபாந்தவமும் சாபலமும் ப்ரத்யக்ஷிக்கலாயாயிற்றிருக்கிறது. அகர்மவஶ்யனாய் பரமபதத்திலே நித்யஸூரிகளுக்கு ஓலக்கம்கொடுத்திருக்குமவன், இவைநோவுபடுகிற ஸம்ஸாரத்திலே, ப்ரஜைவிழுந்தகிணற்றிலே ஒக்கவிழுந்து எடுக்கும் தாயைப்போலே இங்குவந்திருக்கிறது ரக்ஷிக்கைக்காகவிறே. (நாயேன்) நான் செய்தகொ

ரித்தே போந்தவனுக்கு இப்போது விடுகைக்கு நிமித்தமெனனென்ன; அருளிச்செய்கிறார், (பகவதித்யாதி). விசேஷதர்சநத்தால் அநாதி ப்ரமம் நிவ்ருத்தமாயிற்றென்று கருத்து. (அமையுமிறே) என்றவநந்தரம், ஆசையாலே என்று சேஷம். விடுகைக்கு ஹேதுவான வளவன்றிக்கே ஈஶ்வரவிஷய ராக(ராக)ஹேதுவுமாயிற்றனவென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார், (ஸோபாதிகேத்யாதி).

“உன்னை” என்று முன்னிலேதோற்றச்சொன்னபோதே ஸம்புத்தி தோற்றியிருக்கவும், “வேங்கடவா” என்று ஸம்போதித்தவர்க்கு உட்கருத்தையருளிச்செய்கிறார், (ப்ரயோஜநமித்யாதி). பூத்தபொழிலானபோது, விரையானது - பரிமளமானது, ஆர்ந்திருக்குமே, “விரையார்” என்று விசேஷிப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார், (ஸர்வகந்த இத்யாதி). இத்தால் - “விரையார்” என்று ஸர்வேஶ்வரனுடைய பரிமளம் பூர்ணமாயிற்றென்று கருத்து. இப்படி வர்ணித்ததுக்கு ப்ரக்ருதாநுகுண்யம் காட்டுகிறார், (அப்பரிமளமித்யாதி). “முகங்காட்டியுபகரிக்குமவனாயிருந்தாய் நீ” என்று கீழ்ச்சொன்ன அர்த்தம் பதரூடமானபடியை யுபபாதிக்கிறார், (அவனுடைய

(க) சாந்தோ - ங - கச.

மூ.—மானேய் கண்மடவார் மயக்கிற்பட்டு மாநிலத்து
நானே நானாவித நரகம் புகும் பாவம் செய்தேன்
தேனேய் பூம்பொழில்சூழ் திருவேங்கட மாமலை யென்
ஆனாய் வந்தடைந்தே னடியேனை யாட்கொண்டருளே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தேன் | வண்டுகள் | பட்டு | அகப்பட்டு |
| ஏய் | நிறைந்த | மாநிலத்து | மஹாப்ருதிவியிலே |
| பூ | பூக்களையுடைய | நானாவிதநரகம் | பலவிதமானநரகங்களிலும் [ன |
| பொழில் | சோலையாலே | புகும் | ப்ரவேசிக்கும்படியா |
| சூழ் | சூழப்பட்ட | பாவம் | பாபத்தை |
| திருவேங்கட மாமலை | திருமலையைவாஸஸ்த்தானமாகவுடையனாய் | நானே | அடியேன் ஒருவனுமே |
| என் ஆனாய் | என்னுடையகுற்றங்களை ஆனைபோலே பொறுக்குமவனே! | செய்தேன் | பண்ணினவனாய்க் |
| மான் ஏய் | மான்போன்ற | வந்து | கிட்டி [கொண்டு |
| கண் | கண்களையும் | அடைந்தேன் | தேவரீர் திருவடிகளைச் சரணமாகப்பற்றினேன்; னை |
| மடவார் | மடப்பத்தையுமுடையஸ்த்ரீகளது | அடியேனை | சேஷபூதனானவென் |
| மயக்கில் | கண்மயக்கிலே | ஆள்கொண்டருள் | அடிமைகொண்டருளவேணும். (உ) |

ண்டபடியைப்பார்த்தால் புறம்புத்தைக்கும் ஆகேன், தேவர்க்குமாகேன். புறம்பேபோகில் கல்லைவிட்டெறிவர்கள், உள்ளேபுகுரில் தொட்டனவும் †தீண்டினவும் பொகடவேண்டிவரும். (வந்தடைந்தேன்) அநந்யகதித்வத்தாலே திருவடிகளிலேவந்து சரணம்புகுந்தேன். நீரேயிப்படிசெய்துகொண்டீராகில் இப்போது நம்மைச் செய்யச்சொல்லுகிறதென்னென்ன; (நல்கி) அந்தக்ஷேத்ரபதார்த்தத்தையே ராஜபுத்ரன் செருக்காலே †மேல்விழுமிறே. (ஆளென்னைக் கொண்டருளே) நீயே, ஸர்வவிதபந்துவுமென்று நினைத்து, (க) "𑌅𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 - அஹம்ஸர்வம் கரிஷ்யாமி" என்று நித்யஸூரிகளைக்கொள்ளுமடிமை என்னைக்கொண்டருளவேணும். (க)

வ்யா.—இரண்டாம்பாட்டு. பந்துக்களல்லாதாரை பந்துக்களென்று நினைத்திருந்தேன், அக்குற்றத்தைப்பொறுத்தருளவேணு

வித்யாதி). (தீண்டினவும்) என்றது - பரம்பராஸ்பர்சமுள்ளனவுமென்றபடி. (மேல் விழுமிறே) வேட்டைக்கு உபயுக்தமென்று அபிநிவிஷ்டனுமிறே. (க)

(க) ரா - அ - ௩௧ - உ௫.

மென்று சரணம்புகுந்தார் முதற்பாட்டில்; போக்யமல்லாதவற்றி லே போக்யதாபுத்திபண்ணிப்போந்தேன், அக்குற்றத்தைப்பொறுத் தருளவேணுமென்று சரணம்புகுகிறாரிதில்.

(மானேயித்யாதி) மானேய்ந்திருக்கிறநோக்கையுடைய. †அக வாய் நஞ்சாயிருக்கச்செய்தேயும் இவனையொழியச்செல்லாதாரைப் போலேயிருக்க நோக்குமவர்களாயிற்று. † அகவாயாராய்கைக்கி டானவளவில்லையே இவனுக்கு; கார்யபுத்யா ஆராயாநிற்கச்செய்தே யும் அநந்யப்ரயோஜநைகளாக நோக்குகிறார்களாகக்கொண்டு அதி லே துவக்குண்ணுமாயிற்று. (மடவார்) நாண், மடம், அச்சம், என்கிற இவற்றில் மடப்பத்தையுடையராயிருப்பார்களிறே.†அத்தா லே சொல்லுகிறது - ஸமஸ்தகல்யாணகுணாத்மகமான விஷயத்து க்குள்ளதெல்லாம் தங்களுக்குண்டாக நினைத்திருப்பது. (மாநிலத் தில் - நாநாவித - நரகம் - நானே - புகும் பாவம் செய்தேன்) சேதந பேதத்துக்கெல்லையில்லையிறே; அவர்களைக் கர்மாநுகுணமாக அநு பவிப்பிக்கைக்கு லோகங்கள்தோறும் பண்ணிவைக்கும் நரகங்களுக் கும் ஓரவதியில்லையிறே; அவையெல்லாவற்றுக்கும், நானொருவனு மே †தேவையறுக்கும்படியான பாபத்தைப்பண்ணினேன். ஈஶ்வர னுக்கு ஜகந்நிர்வாஹம் நடக்கவேண்டில் வேறே சிலநரகங்கள் ஸ்ரு ஷ்டிக்கவேணும்.†ஸ்ரீராமாயணத்திலே கைகேயியை "நீயென்ன நர கத்திலே புகக்கடவை" என்றுண்டு; அவ்விடத்தை வாசியாநிற்க, நம்பிள்ளை, "முன்பே ஸ்ருஷ்டமான நரகங்கள்போராதென்கிறதோ" என்ன; "அழகிதாகச்சொல்லிற்று" என்று ஜீயரருளிச்செய்தார்.

---

அரு. — இரண்டாம்பாட்டு. (மானேயித்யாதி). அழகில்மண்டியென் றுதே, "மயக்கிற்பட்டு" என்கைக்குக் கருத்தருளிச்செய்கிறார், (அகவாயித் யாதி). அவர்கள் கண்ணாலே மயக்கினால் இவன் கண்ணைக்காணாதே மயங் குவானென்னென்ன; அருளிச்செய்கிறார், (அகவாயித்யாதி வாக்யத்வயத் தாலே). நெஞ்சுநஞ்சாம்படியிருக்குமவர்களை, "மடவார்" என்று பவ்யதை யே நிரூபகமாகச் சொல்லப்போமோவென்ன; அருளிச்செய்கிறார், (அத்தா லேயித்யாதி). (தேவையறுக்கும்படி) அதாவது - இன்னார்க்கின்னநரகம் என்று எல்லார்க்குமாகவிட்ட நரகத்தை எல்லாருடைய பாபங்களையுடைய னாய் ஒருவர்க்குமில்லாதபடி பண்ணுகை. எல்லாநரகத்துக்கு மொருவனே விஷயமாகக்கூடுமோவென்ன; கூடுமென்னுமதுக்கு ஸம்வாதமாக ஐதிஹ்ய மருளிச்செய்கிறார், (ஸ்ரீராமாயணத்திலே யித்யாதி).

மூ.—கொன்றேன் பல்லுயிரைக் குறிக்கோளொன்றிலாமையினல்
என்றேனு மிரந்தார்க் கினிதாக வுரைத்தறியேன்
குன்றேய் மேகமதிர் குளிர்மாமலை வேங்கடவா
அன்றே வந்தடைந்தே னடியேனை யாட்கொண்டருளே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| குன்று | மலைகளிலே | மலைவேங்கடவா | ஸ்ரீவேங்கடாசலத்தை நிரூபகமாகவுடையவனே! |
| ஏய் | தங்கியிருந்துள்ள | குறிக்கோள் | தேஹாத்மவிவேகம் முதலான ஜ்ஞாநம் |
| மேகம் | மேகங்களானவை | ஒன்று | ஒன்றும் |
| அதிர் | முழங்காநிற்பதாய் | இலாமையினல் | பிறவாமையாலே |
| குளிர் | குளிர்த்திமாருதத்தாய் | | |
| மா | பெருமைமிக்க | | |

(தேனித்யாதி) தேனென்று-வண்டென்னவுமாம். (என்னுனய்) †அவ்வானைவர்த்திக்கிறமலையிலுள்ளதுதன்னையே காட்சியாகக்கொடுக்கவமையும். †ஆனை-பெரியகுற்றங்களைக்காணுக்†கண்ணிட்டு,பொறுக்கவரியன செய்யவற்றாயிருக்கையும், ஸதா†தர்சநீயமாயிருக்கையும். (வந்தித்யாதி) "நாநாவித்நரகம்புகும்பாவம்செய்தேன்" என்ற நானேவந்தடைந்தேன். அந்நரகாநுபவம் பண்ணும்போதைக்லேசத்துக்கெதிர்த்தட்டான ஸுகைகதாநமாயிருக்கும் கைங்கர்யத்தை என்னைக்கொண்டருளவேணும். †காமுகனுக்கு அங்கநாபரிஷ்வங்கம் போலேரஸிக்குமிறே சேஷபூதனுக்குக் கைங்கர்யம்;(க)†"ரமமாண:-ரமமாண:". ... ... ... ... (உ)

§ "மாமலையென்னுனய்" என்ற ஸமபிவ்யாஹார லப்தார்த்தத்தையருளிச்செய்கிறார், (அவ்வானையித்யாதி). (ஆனை) என்றவநந்தரம், என்கிறது என்று சேஷம். (கண்ணிட்டு) என்றவநந்தரம், இருக்கையும் என்று சேஷம். (தர்சநீயமாயிருக்கையும்) என்றவநந்தரம், உண்டாகையாலே என்று பூரிப்பது. "ஆட்கொண்டருளே" என்றதுக்கு "அடியேனை" என்றது ஹேதுகர்ப்பமென்னுமிடந்தோற்றத் தாத்பர்ய மருளிச்செய்கிறார், (காமுகனுக்கித்யாதி). "ரஸிக்கும்" என்கைக்கு ப்ரமாணம் (ரமமாணஇத்யாதி). "రమ్యమావసథం కృత్వా రమమాణావనే త్రయః। దేవగన్ధర్వ సఙ్కాశా స్తత్ర తే న్యవసన్సుఖమ్"- ரம்யமாவஸதம்க்ருத்வா ரமமாணவநேத்ரய:। தேவகந்தர்வஸங்காசாஸ்தத்ர தேந்யவஸந்ஸுகம்". ... ... ... ... ... (உ)

(க) ரா - பா - க - ருஉ.

§ (பா) "ஸ்வாமி, நாயன்" என்னுமல் "ஆனை" என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார், (அவ்வானையித்யாதி). ஆனையானது மலையிலே வர்த்திக்குமதாகையாலே அவன் மலையிலுள்ளது ஏதாகிலும், போருமென்று தாத்பர்யம். அவ்வானை என்ற திருவேங்கடமுடையானுக்கு ஆனையோட்டை ஸாம்யமருளிச்செய்கிறார், (ஆனைபெரியவித்யாதி).

| | | | |
|---|---|---|---|
| பல்உயிரை | அநேகப்ராணிகளை | என்றேனும் | ஒருகாலத்திலும் |
| கொன்றேன் | ஹிம்ஸித்தேன்; | உரைத்தறியே | சொல்லியறியாதவ |
| இரந்தார்க்கு | யாசித்தவர்களுக்கு | ன் | னை அடியேன் |
| இனிதாக | நல்லவார்த்தைகளாலே | அன்றே | அப்போதே |
| | | வந்துஅடைந்தேன்; அடியேனை ஆட்கொண்டருள். (ங) | |

வ்யா.—மூன்றாம்பாட்டு. †பந்துக்களல்லாதாரை பந்துக்களென்றும் போக்யமல்லாதார் பக்கலிலே போக்யதாபுத்திபண்ணியும் போந்தவளவேயோ, தேவர்திருவுள்ளத்துக்கு அஸஹ்யமாம்படி பரஹிம்ஸையே பண்ணிப்போந்தேனென்கிறார்.

(கொன்றேன்) மடிதடவி விட்டிலேன் - அர்த்தம் கொடுவந்தானாகில், †பின்துடர்த்தியறக்கொன்றுபறிக்கும்; வெறுங்கையனாகில், நான் †அவள்பக்கல் என்கொடுபோகக்கடவேனாக நீ வெறுங்கையே வந்தது என்று கொல்லுவன். (பல்லுயிரை) அநுதாபம்பிறந்ததில்லை, ப்ராயச்சித்தாதிகாரமுமில்லை. †அநுதாபமுண்டாகில் ஒன்றிரண்டளவிலே மீளுமிறே; அப்போதிறே ப்ராயச்சித்தாதிகாரமுமுள்ளது. †இப்போது இத்தைக் குற்றமாகச்சொல்லுகிற நீர் அன்று அது செய்வானென்னென்ன; (குறிக்கோளொன்றிலாமையினால்) †தேஹாதிரிக்தமாயிருப்பதோராத்மவஸ்து உண்டு, இதுசெய்யில் நரகாநுபவம் தப்பாதென்றுதல், அன்றிக்கே, இத்தையுடையானொருவனுளன், அவன் ஸர்வபூதஸுஹ்ருத்தாயிருப்பானொருத்தன், அவனுக்கிது அஸஹ்யமா†யிருக்குமென்று புத்தியிற்படாமையாலே செய்தேன்; †அவனைப்பார்த்தல், நாம் நின்றநிலையிது என்றாராய்தல்

அரு.—மூன்றாம்பாட்டு. (கொன்றேனித்யாதி). கீழிரண்டுபாட்டோடும் ஸங்கதிதன்னை யருளிச்செய்கிறார், (பந்துக்களித்யாதி).

(பின்துடர்த்தியற) - தன்பின்னே துடர்ந்துவாராதபடி. (அவள் பக்கல்) *மானேய் கண்மடவாள் பக்கல். கீழ்வாக்யத்துக்கு விவரணம், (அநுதாபமுண்டாகி லித்யாதி). மேலுக்கவதாரிகை, (இப்போதித்யாதி). "குறிக்கோள்" ஜ்ஞாநம். "ஒன்று" என்றது - ஒன்றும் என்றாய், அநேகமுண்டாகிலன்றோ ஒன்றும் என்னவேண்டுவதென்ன; அருளிச்செய்கிறார், (தேஹேத்யாதி). (இருக்குமென்று) என்ற வநந்தரம், ஆதல் என்று சேஷம். கீழ்பண்ணின ப்ரஶ்நத்துக்கு உத்தரமாம்படி தாத்பர்யமருளிச்செய்து, சப்தார்த்தத்தை யருளிச்செய்கிறார், (அவனையித்யாதி). இவற்றிலொன்றில்தால

செய்யாமையாலே †ஒருதலையறியிலும் பரஹிம்ஸையில் ப்ரவ்ருத்தியானிறே. †விஷயார்த்தமாக த்ரவ்யார்ஜநம்பண்ணுகிறநாளில் முன்னடிதோற்றாமையாலே பரஹிம்ஸையைப்பண்ணிப்போந்தீராகில் பின்பு த்ரவ்யங்களும் பெற்று அபிமதவிஷயங்களும் கைபுகுந்து நீருமவளுமாய் ரஸித்திருக்கிறவளவில்தான் ஆர்த்தவிஷயத்தில் ஐயோ! என்றீரோவென்ன,(என்றேனுமித்யாதி) †காத்திகைப்புதியதுக்கும் நாமிடவேணுமென்னுதல், இவன் ஜீவிக்கவேணுமென்னுதல், செருக்காலேயாதல். இட்டறியேனென்பது அதுக்கு ப்ரஸங்கமுண்டாகிலிறே. (இனிதாக) ஒருவனர்த்தித்துவந்தால், "இரப்பாளனாய்வந்தவனுக்குக் குறைவறத்தரப்பெற்றிலேன்" என்றாறிவார்த்தைசொன்னானாகில், "இவன்றான்செய்வதென், தன்வெறுமையாலேயன்றோ தாராவிட்டது" என்று அவனும் ஆறிப்போமிறே; அங்ஙனன்றிக்கே, "நாமும் நம்தாரித்ர்யமுமாய்ப்பட்டதுபடாதே இவன்வாயில் வார்த்தைகேட்கைக் கென்செய்ய அபேக்ஷித்தோம்" என்று உள்ளதனையும் நெஞ்சு புண்படும்படியாயிற்று இல்லையென்பது.

(குன்றேய்மேகமதிர்) †குன்றிலேயென்னுதல். குன்றுபோலேயென்னுதல்.†கனக்க நீரைமுகந்தால் ஓரிடத்திலேதங்கியிறேவர்ஷிப்பது. (அதிர்) †இரவாதிருக்கச்செய்தேயும் இனிதாகச்சொல்லுவாரைப்போலேயாயிற்று முழக்கமிருப்பது. (அன்றேவந்தடைந்தேன்) அநுதாபம்பிறந்தால் ப்ராயஶ்சித்தம்பண்ணியாதலன்றிக்கே கொன்றகை கழுவாதே உதிரக்கை கழுவாதே வந்து சரணம்புகுந்

---

மையுமோவென்ன, (ஒருதலையித்யாதி). மேலுக்கவதாரிகை. (விஷயேத்யாதி). "என்றேனும், ஒருநாளாகிலும், இரந்தார்க்கினிதாகவுரைத்தறியேன்" என்றதுக்கு உட்கருத்தருளிச்செய்கிறார், (காத்திகை யித்யாதி). இத்தால் புண்யத்துக்காக வாதல், ஐயோ! என்றிரக்கத்தாலே யாதல் க்யாதிக்காக வாதல், ஒருநாளும் சோறிட்டதில்லையே. நல்வார்த்தையுஞ் சொல்லியறியேனென்றதாயிற்று.

(குன்றிலே) என்றது - குன்றின் கொடுமுடியிலே யென்றபடி. அன்றிக்கே, குன்றுகளிலே வர்த்திக்கக்கடவ மேகமென்றுகொள்ளவுமாம். இப்படி விசேஷித்ததுக்கு ப்ரயோஜநம், (கனக்கவித்யாதி). பல்லுயிரைக்கொன்றவெனக்கு ப்ரதிகோடியாகப் பல்லுயிருக்கும் ஜீவநப்ரதாநசீலமாய், இனிதாகவுரைத்தறியாதவெனக்கெதிராகப் பரமோதாரர்வர்த்திக்கிறதேசத்திலிருக்கும் (க)*ஸ்ரீவேங்கடாத்ரிசிகராலயகாளமேகத்தை ஸம்போதிக்கிறாரென்று உட்கருத்தையுட்கொண்டு அதிர்ப்பதத்துக்குக் கருத்தருளிச்செய்கிறார், (இரவா

---

(க) முக்தகம்.

மூ.—குலந்தா னெத்தனையும் பிறந்தே யிறந்தெய்த்தொழிந்தேன்
நலந்தா னொன்றுமிலேன் நல்லதோரறஞ் செய்துமிலேன்
நிலந்தோய் நீள்முகில்சேர் நெறியார் திருவேங்கடவா
அலந்தேன் வந்தடைந்தே னடியேனை யாள்கொண்டருளே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நிலம் | பூமியிலே | ஒருநலமும் இலேன் | ஒருநன்மையும் இல்லாதவனாய் |
| தோய் | படிந்த | நல்லது | (பலத்தோடே கூடியிருப்பதாய்) நன்மையையுடைத்தான |
| நீள்முகில் | மஹாமேகங்கள் | ஓர் அறமும் | ஒரு ஸாதநாநுஷ்டாநத்தையும் |
| சேர் | ஸஞ்சரிக்கிற | செய்திலேன் | பண்ணப்பெறாதவனாய்க்கொண்டு |
| நெறி | வழியை | அலந்தேன் | (ஜந்மங்கள்தோறும் திரிந்து) க்லேசித்த அடியேன் |
| ஆர் | உடைத்தான | வந்து அடைந்தேன்; அடியேனை ஆள் கொண்டருள். (௪) | |
| திருவேங்கடவா | ஸ்ரீ வேங்கடாத்ரிக்கு நிர்வாஹகனே! [ம் | | |
| எத்தனை குலமும் | எல்லாக் குலங்களிலு | | |
| பிறந்து இறந்து | பிறப்பதுஇறப்பதாய்க்கொண்டு | | |
| எய்த்தொழிந்தேன் | இளைத்துப்போனவனாய் | | |

தேன்; †என்செயலைப்பாராதே ஸ்வரூபத்தைப்பார்த்தடிமைகொண்டருளவேணும். †பூர்வவ்ருத்தத்தைப்பார்த்தால் பரஹிம்ஸையாகில் பண்ணிற்று, இப்போதொரு ஸாதநாநுஷ்டாநம் பண்ணிவந்தாற்போலே யிருக்கச்சொல்லுகிறதென்னென்ன; அவனையே பார்த்துத் தம்மைப்பாராதே வார்த்தைசொல்லுகிறார். அவனைப்பார்த்தால், (க) "𑌅𑌰𑌿𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 - அரி:ப்ராணாந்பரித்யஜ்ய" என்றிறேயிருப்பது. "𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑌪𑌿 - ப்ராணாநபி" என்னவிட்டது, † அவற்றைக்குவாலாக நினைத்திராமை. †காலிலேவந்துவிழுந்தவனை முன்புத்தை சாத்ரவம் பாராதே ரக்ஷித்தவிதேதாரேற்றமோ என்றிருக்குமவராயிற்று. (ரு)

இத்யாதி). "அடியேனை" என்றதுக்கு பாவம், (என்செயலை யித்யாதி). "கொண்டருளே" என்ற இதுக்கு சங்காபரிஹாரரூபேண பாவ மருளிச்செய்கிறார், (பூர்வேத்யாதி). "𑌆𑌰𑍍𑌤𑍋 𑌵𑌾 𑌯𑌦𑌿 𑌵𑌾 𑌦𑍃𑌪𑍍𑌤𑌃 𑌪𑌰𑍇𑌷𑌾𑌂 𑌶𑌰𑌣𑌾𑌗𑌤𑌃 । 𑌅𑌰𑌿𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌵𑍍𑌯𑌃 𑌕𑍃𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 - ஆர்த்தோவா யதிவா த்ருப்த: பரேஷாம் சரணாகத: । அரி: ப்ராணாந்பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா". (அவற்றை) ப்ராணன்களை, ஆத்மநி பஹுவசநம். குவாலாக நினையாமைக்கு ஹேதுவென்னென்ன; அருளிச்செய்கிறார், (காலிலேயித்யாதி). (ரு)

அரு.—நாலாம்பாட்டு. (குலமித்யாதி). "பல்லுயிரைக்கொன்றேன்" என்கைக்கு நீர்தாம் ஆசந்த்ரார்க்கஸ்த்தாயியாயிருந்திரோவென்ன; அதோன்

(க) ரா - யு - கஅ - உஅ.

வ்யா.—நாலாம்பாட்டு. (குலந்தானித்யாதி) †குலங்களெங்கும் பிறந்திறந்து திரிந்தேன். †அநுலோம†ப்ரதிலோமரூபத்தாலே பிறந்த பிறவிக்கு ஓரெல்லையில்லையாயிறறு. †எல்லா ஜந்மங்களிலும் புக்குப் பிறப்பதிறப்பதாய் இனி பிறக்கைக்கீடான கர்மவிசேஷமுண்டாகிலும் பிறக்கைக்கு க்ஷமனல்லாதபடி இளைத்தேன். (நலந்தானொன்றுமிலேன்)†இப்படி அநேகஜந்மங்கள்பிறந்து மரித்துப்போருகிறவிடத்திலும் நடுவேயொரு ஸுக்ருதமாதல் அதுக்கு பல(ஃல)மான ஜ்ஞாநமாதல் உடையேனாயிற்றிலேன். (நல்லதோரறஞ்செய்துமிலேன்)இப்போது நன்மைபிறக்கைக்கடியாக முன்புசெய்ததொன்றில்லையேயாகிலும்,மேலொருநன்மை பிறக்கைக்கீடாக †இப்போது ஏதேனுமொரு ஸாதநாநுஷ்ட்டாநம் பண்ணுகிறதுண்டோ வென்னில்; பல(ஃல)த்தோடே வ்யாப்தமாயிருப்பதொரு ஸாதநாநுஷ்ட்டாநம்பண்ணப்பெற்றிலேன்.

(நிலமித்யாதி) நிலத்திலே தோய்ந்த மஹாமேகங்களானவை போன அடிப்பாடு ஆர்ந்திருக்குமாயிற்று †கழுத்தே கட்டளையாக நீரைப்பருகி மூகந்தநீர்க்கனத்தாலே கால்வாங்கிப்போகமாட்டாதே நகர்ந்து நகர்ந்து துளித்துத்துளித்துக்கொண்டு ஸஞ்சரிக்கிறமேகங்கள் போன அடிப்பாடு தெரியும்படியாயிருக்குமாயிற்று. (அலந்தேன் வந்தடைந்தேன்)ஜந்மபரம்பரைகளிலே அலந்து†மூசித்தேன். (அடியேனை) இனியொருஜந்மம் வருமென்றஞ்சி ஏங்கவேண்டாதபடியான தாஸ்யத்திலே என்னை மூட்டவேணும். ... (௪)

றுமில்லை, நான்பட்டபாட்டைக்கேளீரென்கிறார் என்று ஸங்கதிகண்டுகொள்வது.

“பிறந்தே” என்கிற எவகாரம் பிறவாமலிறப்பில்லாமையால் வ்யாவர்த்தகமன்றென்று பிறப்பினுடைய நைரந்தர்யஸூசகமென்று விவக்ஷித்து பலிதார்த்தமருளிச்செய்கிறார், (குலங்களித்யாதி). பிறப்பும் இறப்பும் விநா வேறு க்ரியையில்லையென்றுகருத்து. “எத்தனையும்” என்ற பதத்துக்கூத்தாத்பர்யம், (அநுலோமேத்யாதி). (அநுலோமம்) என்றது - உத்க்ருஷ்டவர்ணன் அபக்ருஷ்டவர்ணத்தில் விவாஹம்பண்ணின பெண்பிள்ளைவயிற்றில் பிறக்கை. (ப்ரதிலோமம்) என்றது - அபக்ருஷ்டவர்ணன் உத்க்ருஷ்டவர்ணத்தில் பரிக்ரஹித்த பெண்பிள்ளைவயிற்றில் பிறக்கை. வாக்யார்த்தகதநமுகேந, “எய்த்தொழிந்தேன்” என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார், (எல்லாவித்யாதி). “ஒன்றும்” என்றபதவாஸனை (இப்படியித்யாதி). “நலந்தானொன்றுமிலேன்” என்று சொல்லிவைத்து “நல்லதோரறஞ்செய்துமிலேன்” என்ன ப்ரஸக்தியுண்டோவென்ன; அருளிச்செய்கிறார், (இப்போதித்யாதி).

விவரணம், (கழுத்தேயித்யாதி). (மூசித்தேன்) க்லேசித்தேன். ... (௪)

மூ.—எப்பாவம் பலவு மிவையே செய்திளைத் தொழிந்தேன்
துப்பா நின்னடியே தொடர்ந்தேத்தவும் கிற்கின்றிலேன்
செப்பார் திண்வரைசூழ் திருவேங்கட மாமலை யென்
அப்பா வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| செப்புஆர் | செப்புப்போலேரக்ஷ | எப்பாவம்பலவும்இவையே | பலவகைப்பட்டபாபங்களையே |
| திண் | த்ருடமான [கமாய் | செய்து | பண்ணி |
| வரை | மலைகளாலே | இளைத்தொழிந்தேன் | (இவற்றுக்கு வரக்கடவபலன்களைக்கேட்டு) துக்கித்தவனாய், |
| சூழ் | சூழப்பட்ட | நின் அடி | தேவரீர்திருவடிகளை |
| திருவேங்கடமாமலை | திருமலையைவாஸஸ்த்தாநமாகவுடையனாய், | தொடர்ந்து | பின்சென்று |
| என் | (ஆஶ்ரிதனான) என்போல்வார்க்கு | ஏத்தவும் | பக்திபூர்வகமாகஆஶ்ரயிக்கவும் |
| அப்பா | உபகாரகனானவனே! | கிற்கின்றிலேன் | சக்தியற்றவனாய், |
| துப்பா | சக்தியையுடையவனே! | வந்து அடைந்தேன்; அடியேனை ஆள்கொண்டருள். ... (ரு) | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (எப்பாவமித்யாதி) அதிபாதகம், உபபாதகம், மஹாபாதகம் என்றாப்போலே சொல்லுகிற பஞ்சவிதமான பாபங்களை அநுஷ்டித்துப் பின்னை இவற்றுக்கு வரக்கடவ பலன்களைக்கேட்டு க்லேசப்பட்டேன். †இப்படி மஹாபாபங்களையே அநுஷ்டித்துக்கொடுபோராநின்றால் நடுவே யொருஸுக்ருதம் பிறந்து அத்தாலே என்பக்கலிலே ருசியுமுண்டாகப்பெற்றதாகில், (க) "न मे भक्तः प्रणश्यति - நமேபக்த: ப்ரணஶ்யதி" என்கிறவார்த்தையை விஶ்வஸித்திருக்கலாமிறே. †மஹாபாபங்களைப் பண்ணினானாகிலும் புருஷோத்தம வித்யையுண்டாக அவனுக்குப்பாபவிமோசநமுண்டாகச் சொல்லாநின்றதிறே. (துப்பா) இப்பாபங்களைப்

அந.—அஞ்சாம்பாட்டு, (எப்பாவமித்யாதி). இப்படி யெல்லாக்குலங்களிலும் புக்குப்பிறக்கைக்கடியான பாபப்ராசுர்யத்தை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

"இவையே" என்கிற அவதாரணத்துக்குத் தாத்பர்யகதநமுகேந மேலுக்கு அவதாரிகையருளிச்செய்கிறார், (இப்படியித்யாதி). அல்பம் பகவத்ருசியுண்டானால் பாபங்கள்போமோ, இவ்வசநத்தை விஶ்வஸிக்கும்படியென்னென்ன; அருளிச்செய்கிறார், (மஹாபாபங்களையித்யாதி). வசநபலத்தாலே விஶ்வஸிக்கக்கடவதென்னென்றுகருத்து.

(க) கீதை - கூ - ௩௧.

மூ.—மண்ணாய் நீரெரிகால் மஞ்சுலாவுமாகாசமுமாம்
புண்ணாராக்கைதன்னுள் புலம்பித்தளர்ந்தெய்த்தொழிந்தேன்
விண்ணார்நீள்சிகரவிரையார்திருவேங்கடவா
அண்ணாவந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| விண் | ஆகாசத்தை | காலாய் | வாயுவாயும் |
| ஆர் | அளாவும்படி | மஞ்சு | மேகங்கள் |
| நீள் | உயர்ந்த | உலாவும் | ஸஞ்சரியாநின்றுள்ள |
| சிகரம் | கொடுமுடிகளையும் | ஆகாசமுமாம் | ஆகாசமுமாகியபஞ்சபூதமயமானதாய் |
| விரை | பரிமளத்தையும் | | |
| ஆர் | உடைத்தான | புண்ஆர் | வ்ரணத்தோடொத்த |
| திருவேங்கடவா | திருமலையைவாஸஸ்தாநமாகவுடையவனே! [மானவனே! | ஆக்கை தன்னுள் | தேஹத்திலே (யகப்பட்டு) |
| | | புலம்பி | கூப்பிட்டு |
| | | தளர்ந்து | மெலிந்து |
| அண்ணா | எல்லாவுறவுமுறையு | எய்த்தொழிந்தேன் | மிகவும் இளைத்தவனாவடியேன் |
| மண்ணாய் | பூமியாயும் | | |
| நீராய் | ஜலமாயும் | வந்தடைந்தேன்; அடியேனை ஆள்கொண்டருள். ... ... (கூ) | |
| எரியாய் | அக்நியாயும் | | |

போக்கி உன்னைப்பற்றினாரை ரக்ஷிக்கைக்கீடான சக்தியோகத்தை யுடையவனே! (நின்னடியே) பக்திபூர்வகமாக உன் திருவடிகளை வடிம்பிட்டாஶ்ரயிக்க க்ஷமனாயிற்றிலேன்.

(செப்பாரித்யாதி) அரணாகப்போரும்படியான திண்ணியவரைகளாலே சூழப்பட்ட திருமலையை வாஸஸ்த்தாநமாகவுடைய நிருபாதிகபந்துவானவனே! (அடியேனை) என்னுடைய பாபாநுகூலமாகவன்றிக்கே உன்னோடுண்டான நிருபாதிக பாந்தவாநுரூபமான கைங்கர்யத்தில் என்னை மூட்டவேணும். ... ... ... (ரு)

"செப்பு" என்று ஆபரணத்துக்குரக்ஷகமான பாத்ரமாய், அத்தாலே, (அரணாக)என்றது - திருமலைக்குப்புறமலை ரக்ஷகமாயிருக்கையாலே தம்முடைய ரக்ஷகவஸ்து ஸுரக்ஷிதமாயிருக்கப்பெற்றதென்று திருவுள்ளமென்றுகருத்து.

அரு.—ஆறும்பாட்டு. (மண்ணாயித்யாதி.) இப்படி அதிபாதகாதிகளை பண்ணுகைக்கடி - ஜ்ஞாநதிரோதாநகரமான ப்ராக்ருததேஹஸம்பந்தமென்று, அதுதன்னையநுஸந்தித்து க்லேசித்துச் சரணம்புகுகிறாரென்று ஸங்கதிகண்டு கொள்வது.

"அப்பாவந்தடைந்தேனடியேனையாட்கொண்டருளே" என்றத்தாலே பித்ருபுத்ரஸம்பந்தமும் தம்முடைய ஸ்வாபாவிகாகாரமுமநுஸந்தித்தவர் பஞ்சபூதாத்மகமான புண்ணாராக்கையிலகப்பட்டமைக்கு ஸத்ருஷ்டாந்தமாகஹேது

ற. —தெரியேன் பாலகனாய்ப் பலதீமைகள் செய்துமிட்டேன்
பெரியே னாயினபின் பிறர்க்கேயுழைத் தேழையானேன்
கரிசேர் பூம்பொழில்சூழ் கனமாமலை வேங்கடவா
அரியே வந்தடைந்தே னடியேனை யாட் கொண்டருளே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ரி | யானைகள் | சூழ் | சூழப்பட்டு |
| சேர் | மிக்கிருப்பதாய் | கனம் | த்ருட மாயிருக்கிற |
| பூ | பூக்கள்நிறைந்த | மாமலை | பெரியமலையான |
| பொழில் | சோலையாலே | | |

வ்யா.—ஆரும்பாட்டு. (மண்ணாயித்யாதி)†ராஜபுத்ரன் வேடன் கையிலேயகப்பட்டுத் தன்னை வேடனாக ப்ரமிக்குமாபோலே, நித்யமாய் ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய் ஏகரூபமாய் ஈஶ்வரசேஷமான ஆத்மவஸ்து கர்மாநுகுணமாக அசித்தோடே ஸம்ஸ்ருஷ்டமாயிற்று. ஏகரூபமானவஸ்து உபசயாத்மகமான தேஹத்திலேயகப்பட்டது. (புண்ணாராக்கை) (க) *†புண்ணைமறையவரிந்திறே உடம்பிலேவைத்தது. அறிவுடையார், (உ) "ஶரீரம்வ்ரணவத்பஶ்யேத் - சரீரம்வ்ரணவத்பஶ்யேத்" என்று இதுதன்னையே வ்ரணமாகச்சொல்லாநின்றார்களிறே. தேஹத்திலே புக்ககப்பட்டு, பின்னை அங்கேகிடந்து கூப்பிட்டு, அதுதானும் மாட்டாதே தளர்ந்து, பின்னையிளைத்தேன்.

(விண்ணாரித்யாதி) நித்யஸூரிகள் வைகுண்டத்திற்போலே வந்தேத்தும்படியாக ஆகாசாவகாசத்தளவும் வளர்ந்த பெரியகொடுமுடிகளையுமுடைத்தாய், பரிமளப்ரசுரமான திருமலையை வாஸஸ்தாநமாகக்கொண்டுநிற்கிற. (அண்ணா,) கீழே "அப்பா" என்றார்; இங்கே அண்ணா என்னாநின்றார், * தாயே தந்தையென்றும் தாரமே கிளைமக்களென்றும்விட்ட உறவுமுறைக்கெதிர்த்தட்டான எல்லாவுறவுமுறையு மெம்பெருமானே யென்றாயிற்றிவரிருப்பது. (அடியேனை)†வெளிறுகழிந்தால் ஸம்பந்தம் நித்யஸூரிகளோடொத்திருக்குமிறே எனக்கும்; ஆனபின்பு அவர்களைக்கொண்டருளு மடிமையை என்னைக்கொண்டருளவேணும்.... ... ... (கூ)

---

வருளிச்செய்கிறார், (ராஜபுத்ரனித்யாதி). தேஹம் புண்ணாகைக்கு ப்ரமாணங்களைஸூசிப்பிக்கிறார்,(புண்ணையித்யாதி)."ஶரீரம் வ்ரணவத்பஶ்யேதன்னம் து வ்ரணலேபனம் வ்ரணஶோதனவத்பானம் வஸ்த்ரம் து வ்ரணபட்டவத் -சரீரம் வ்ரணவத்பஶ்யேதந்நந்து வ்ரணலேபநம் | வ்ரணஸேசநவத்பாநம் வஸ்த்ரந்துவ்ரணபட்டவத்" என்று ப்ரமாணசேஷம்.

(வெளிறு) அஸாரம். ... ... ... ... (சு)

---

(க) தி - வாய் - கு - க - கு. (உ) § (பா) ஸ்நாநம்.

| | | | |
|---|---|---|---|
| வேங்கடவா | திருமலையைவாஸஸ்தானமாகவுடையவ[னே! | பெரியேன் ஆயினபின் | யௌவநத்தையடைந்தபின்பு |
| அரியே | ஸிம்ஹமே! | பிறர்க்கே | அயலார்க்குவேண்டுமவற்றையே |
| பாலகனாய் | சிறுபிள்ளையானபோ[து | உழைத்து | தேடியிட்டு |
| தெரியேன் | ஜ்ஞாநஹீநனாயும் | ஏழையானேன் | சதிர்கெட்டுப்போன அடியேன், (இப்பொழுது) |
| பலதீமைகள் | (பின்பு) அநேகமான கொடியசெயல்களை | வந்தடைந்தேன்; அடியேனை ஆள்கொண்டருள் | ... ... (எ) |
| செய்துமிட்டேன் | பண்ணிப்போந்தவனாயும் | | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (தெரியேனித்யாதி)(பாலகனாய்-தெரியேன்) †சிலநாள் அதிசைசவமாய் யுக்தாயுக்தங்களறியாதேகிடந்தேன். †அல்பம் அறிவு பிறந்தபின்பு, தோன்றினபடி பலதீமைகள்செய்து திரிந்தேன். (பெரியேனித்யாதி) அநந்தரம் யௌவநம் முகங்காட்டினவாறே, நல்லதொரு பூக்கண்டால் † என்தலையிலே வையாதே ஸ்த்ரீபரதந்த்ரனாய் அவர்களுக்கே ஆவன தேடி தூகேப்பட்டுச் சதிர் கேடனாய் இளிம்பனானேன்.

(கரியித்யாதி) லீலார்த்தமாகஆனைகள்வந்து சேரப்பட்டு பூத்த பொழிலாலே சூழ்ந்து திண்ணியதாயிருக்கிற திருமலையைவாஸஸ்தானமாகவுடையவனே! (அரியே) என்னுடைய ப்ரதிபந்தகத்தைப் போக்குகைக்கீடான † பராபிபவந ஸாமர்த்யத்தை யுடையவனே!

அரு.—ஏழாம்பாட்டு. (தெரியேனித்யாதி) (க) "[illegible] - விசித்ராதேஹஸம்பத்தி ரீஶ்வராய நிவேதிதும்" என்றும், (உ) "[illegible] - சரீரமாத்யம்கலு தர்மஸாதநம்" என்றும் சொல்லுகிறபடியே ஆவஶ்யகமானத்தை "புண்ணாக்கை" என்று நீர் கர்ஹித்துக்கொண்டு வருவானென்னென்ன; அப்படியேயாமிறே உன் (ஈ)* பூவார்கழல்களிலே ஒரு பூவிடப்பெற்றேனாகில், அங்ஙனன்றிக்கே போனபடியைக் கேளாயென்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

"ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வான், இளையபெருமாள், ப்ரபந்நஜநகூடஸ்தரான நம்மாழ்வார், இவர்களுக்கெல்லாம் ஆஜந்மஸித்தமான பகவத்ப்ராவண்யம் தலையெடுக்கக்காணாமையாலே தாம் அதிசைசவந்தொடங்கி வ்யர்த்தமே போக்கினபடியை யநுஸந்திக்கிறாரென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார், (சிலநாளித்யாதி). த்ருவன் அஞ்சுவயஸ்ஸிலே பகவத்பஜநம் பண்ணினபடியை யுட்கொண்டருளிச்செய்கிறார், (அல்பமித்யாதி). "பிறர்க்கே" என்கிற ஏவகாரவ்யாவர்த்யம், (என்தலையிலே) என்றது.

"அரி" என்று ஸிம்ஹமாய், அத்தாலே, (பராபிபவநஸாமர்த்யத்தை யுடையவனே) என்றது. (எ)

(க) விஷ்ணுதத்வம். (உ) (ஈ) தி-வாய்-கூ-க0-ச.

மூ.—நோற்றேன் பல்பிறவி யுன்னைக் காண்பதோ ராசையினால்
ஏற்றேன் இப்பிறப்பே யிடருற்றன னெம்பெருமான்
கோற்றேன் பாய்ந்தொழுகும் குளிர்சோலைசூழ் வேங்கடவா
ஆற்றேன் வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கோல் | கோல்களில்நின்றும் | ஏற்றேன் | (தேவரீர் கடாக்ஷத்துக்கு)யோக்யனானேன்; (அத்தாலே) |
| தேன் | மதுவானது | உன்னை | தேவரீரை [ற |
| பாய்ந்து | வழிந்து [ய் | காண்பது | காணவேணுமென்கி |
| ஒழுகும் | வெள்ளமிடாநிற்பதா | ஓர் | ஒரு |
| குளிர் | குளிர்த்தியையுடைய | ஆசையினால் | ஆசையாலே |
| சோலைசூழ் | பொழில்களாலேசூழப்பட்ட | இப்பிறப்பே | இந்த ஜந்மத்திலேயே |
| வேங்கடவா | திருமலையைவாஸஸ்தாநமாகவுடையவனே! [ளுக்கு | இடருற்றனன் | (ஜந்மம்த்யாஜ்யமென்று)வருந்தினேன்; |
| எம் | ஆஸ்ரிதரான எங்க | ஆற்றேன் | (மாறிமாறிவரும்பலபிறவிகளை) ஸஹிக்கமாட்டாதவனாய், |
| பெருமான் | மஹோபகாரகனே! | | |
| பல்பிறவி | அநேகஜந்மங்களுண்டாம்படி | வந்தடைந்தேன்; அடியேனைஆள்கொண்டருள். ... ... ... (அ) | |
| நோற்றேன் | ஸாதநாநுஷ்டாநம் பண்ணிப்போந்த அடியேன் | | |

(ஆட்கொண்டருளே) பிறர்க்கேயுழையாமே ப்ராப்தவிஷயத்திலே கைங்கர்யத்தைக் கொண்டருளவேணும். ... ... (எ)

வ்யா.—எட்டாம்பாட்டு.—(நோற்றேன் பல்பிறவி) பல்பிறவி நோற்றேன். †எனக்குப் பலஜந்மங்களுண்டாகும்படியாகவாயிற்று

அரு. எட்டாம்பாட்டு. (நோற்றேனித்யாதி). "பிறர்க்கேயுழைத் தேழையானேன்" என்றிருக்கிறநீர் திருமலையளவும்வந்து சரணம்புகுருகைக்கு நிதானம்சொல்லிக்காணீரென்ன; நான் ஸம்ஸாரத்தைப் பெருக்கிக்கொள்ளச் செய்தே நீ சில ஸுக்ருதவிசேஷங்களைக் கதிர்பொறுக்கிக் கடாக்ஷித்தாயாக வேணுமென்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

"உன்னைக்காண்பதோ ராசையினால் - பல்பிறவிநோற்றேன்" என்று யதாஸ்ருதத்திலே தாம் ஸாதநாநுஷ்டாநம் பண்ணினமை தோற்றுகையால், அங்ஙனேயானால், "இடருற்றனன்" "ஆற்றேன் வந்தடைந்தேன்" என்கிற மேலிற்பதங்கள் சேராமையால், "பல்பிறவி" என்றவநந்தரம் உண்டாம்படி என்று அத்யாஹரித்து அர்த்தமருளிச்செய்கிறார், (எனக்கித்யாதி). "ஏற்றேன்

மூ.—பற்றே லொன்றுமிலேன் பாவமேசெய்து பாவியானேன்
மற்றே லொன்றறியேன் மாயனே எங்கள் மாதவனே
கற்றேன் பாய்ந்தொழுகும் கமலச்சுனை வேங்கடவா
அற்றேன் வந்தடைந்தே னடியேனை யாட்கொண்டருளே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மாயனே | ஆச்சர்யகுணசேஷ்டிதங்களையுடையவனே! | கல்தேன் | மலைக்குழைறயிலேயிட்டதேனனது |
| எங்கள் | எங்களுடைய (குற்றங்களைப்பொறுப்பிக்கும்) | பாய்ந்து ஒழுகும் | மிக்கு வெள்ளமிடாநிற்பதாய் |
| மாதவனே | பெரியபிராட்டிக்கு வல்லபனானவனே! | கமலம் | தாமரைகள்நிறைந்த |
| | | சுனை | அருவிகளையுடைய |
| | | வேங்கடவா | திருமலையில்நித்யவாஸம்பண்ணுமவனே! |

நான ஸாதநாநுஷ்டாநம்பண்ணிற்று. இப்படிபிறந்து போராநிற்கச்செய்தே நடுவே யாத்ருச்சிகமாகவொரு ஸுக்ருதம்பிறந்தது, அத்தாலே உன்னைக் காணவேணுமென்றாசை பிறந்து, தேவர்க்காம்படி†யோக்யனானேன். † நீர் யோக்யரென்னுமிடமறிந்தபடி யெங்ஙனேயென்ன; (இப்பிறப்பே யிடருற்றனன்) இஜ்ஜந்மந்தன்னிலே, நாம் நின்றநிலை சாலப்பொல்லாதென்று என்னெஞ்சிலேபட்டது.

(கோல்தேனித்யாதி) கோல்களிலேவைத்ததேனனது பாய்ந்து வெள்ளமிட்டுக் குளிர்ந்த சோலையாலே சூழப்பட்ட திருமலையை வாஸஸ்தாநமாகவுடையவனே! (ஆற்றேன்) ஜந்மபரம்பரைகளுக்கு ஆற்றமாட்டாதே திருவடிகளிலேவந்து சரணம்புகுந்தேன். (அடியேனையித்யாதி) † எனக்காற்றாமையுண்டானால் பிறப்பேயாற்றாமையுடையவுன்னை, என்ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைத் தரவேணுமென்று ப்ரார்த்திக்கவேண்டுகிறதென்? † நான்ஆற்றாமையுடையேனாயிருந்தேன்; ஆற்றாமை பிறப்பதெப்போதோ! என்றுபார்த்து நிற்குமவனா †யிருந்தாய் நீ. ... ... ... ...(அ)

என்றதினர்த்தம், (யோக்யனானேன்) என்றது. "எல்" என்று - தகுதியாய், அத்தாலே பலித்தது இவ்வர்த்தம். நான் யாத்ருச்சிகாதிகளைத்திரட்டிக்கொண்டது நீ ரறிந்ததெத்தாலே என்னும் பகவதபிப்ராயத்தை யருளிச்செய்கிறார், (நீரித்யாதி).

நான் ப்ரார்த்திக்கை மிகையென்னுமத்தையறிந்தே என் செல்லாமையாலே ப்ரார்த்திக்கிறேனென்னு முட்கருத்தை யருளிச்செய்கிறார், (எனக்கித்யாதி). விவரணம், (நானாற்றாமையித்யாதி). (இருந்தாய்நீ) என்ற வநந்தரம் இங்ஙனே இருக்கச்செய்தேயும் ப்ரார்த்திக்கிறேனென்கிறார் என்று பூரிப்பது. ... ... ... ... ... ... (அ)

| | | | |
|---|---|---|---|
| ஒன்றுபற்று | ஒருவிதமான (ஸுக்ருதாதி) ஆதாரமும் | ஒன்றும் | ஏகதேசமும் [யேன் |
| இலேன் | இல்லாதவனாய் | அறியேன் | அறியாதவனான அடி |
| பாவமேசெய்து | பாபத்தையேபண்ணி (அத்தாலே) | அற்றேன் | தேவரீருக்கேஅற்றுத் தீர்ந்தவனாய், |
| பாவியானேன் | பாபிஷ்டனாய் | வந்து அடைந்தேன்; அடியேனையாட்கொண்டருள். ... ...(கூ) | |
| மற்று | உபாயாந்தரத்தை | | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பற்றேலொன்றுமிலேன்) †பகவத்ஸம்பந்தத்தை யறுத்துக்கொண்டு கைகழியப்போன வஸ்துவுக்கு பகவத்ப்ராப்திக்கீடாகச் சொல்லலாவதொரு ஸுக்ருதமில்லை; அதில்லாமையாலே, பாபங்களையேபண்ணி, பின்னை நிரூபிக்குமிடத்தில் ஜ்ஞாநாநந்தாதிகளையொழிய பாபங்களையிட்டு நிரூபிக்கவேண்டும்படியானேன். (மற்றேலொன்றறியேன்) ப்ராப்திக்கீடான உபாயவிஷயஜ்ஞாநமில்லை. (க)†"అహమస్మ్యపరాధానా మాలయః - அஹமஸ்ம்யபராதாநாமாலயः."

(மாயனே) இங்ஙனேயிருந்துள்ளவர்களையும் ரக்ஷிக்கைக்கீடான ஆஶ்சர்யசக்தியுக்தனே! (எங்கள்மாதவனே) இப்படியிருப்பா

அந.—ஒன்பதாம்பாட்டு. (பற்றேலித்யாதி) யாத்ருச்சிக ஸுக்ருதமடியாக நாமே யுமக்கு ஸம்ஸாரத்தில் பொருந்தாமையைப் பிறப்பித்தோமாகில் இனி அபேக்ஷிதஸித்திக்குடலான ஸாதநத்திலே நீரிழிகிறீர், அதுக்கு நம்மைச் சரணம்புகுவானென்னென்ன; கார்யபலத்தாலே யொருநன்மை ஸம்பாவிதமாகச் சொன்னேனித்தனைபோக்கி என்னைப்பார்த்தா லொருநன்மையுண்டாக ஸம்பாவிதமோ என்றுநின்றுகொண்டு, திருவயோத்யைக்குப் போகச்சொன்ன பெருமாளை (உ) "భ్రాతుశ్చరణౌ గాఢం నిపీడ్య రఘునన్దనః। సీతామువాచాతియశా రాఘవంచ మహావ్రతమ్-ப்ராதுஶ்சரணௌ காடம் நிபீட்யரகுநந்தநः। ஸீதாமுவாசாதியசா ராகவம்ச மஹாவ்ரதம்" என்று பிராட்டியை முன்னிட்டுச் சரணம்புகுந்த இளையபெருமாளைப்போலே * அலர்மேல்மங்கையுறைமார்பனைச் சரணம்புகுகிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

"பற்றேல்" என்றது - பற்றாகிலென்றாய், அதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார், (பகவதித்யாதி). உக்தார்த்தே ப்ரமாணம், (அஹமித்யாதி). "అహమస్మ్యపరాధానా మాలయోऽకిఞ్చనోऽగతిః। త్వమేవోపాయభూతో మే భవేతి ప్రార్థనామతిః। శరణాగతిరిత్యుక్తా సా దేవేऽస్మిన్ ప్రయుజ్యతామ్ - அஹமஸ்ம்யபராதாநா மாலயோ கிஞ்சநோ கதிः। த்வமேவோபாயபூதோமேபவேதிப்ரார்த்தநாமதிः। சரணாகதிரித்யுக்தா ஸாதேவேஸ்மிந்ப்ரயுஜ்யதாம்."

(க) பாஞ்சரா - (உ) ரா-அயோ-௩௧-௨.

மூ—கண்ணா யேழுலகுக் குயிராய வெங் கார்வண்ணனை
விண்ணோர் தாம்பரவும் பொழில் வேங்கட வேதியனைத்
திண்ணார் மாடங்கள் சூழ் திருமங்கையர் கோன் கலியன்
பண்ணார் பாடல்பத்தும் பயில்வார்க்கில்லை பாவங்களே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஏழுலகுக்கு | ஏழுலோகங்களுக்கு | வேதியனை | வேதத்தாலேசொல்லப்படுமவனனஸர்வேஶ்வரன்விஷயமாக |
| கண்ணாய் | கண்போலேயும் | திண் ஆர் | திண்மையையுடைய |
| உயிராய் | ப்ராணன்போலேயுமிருக்குமவனாய், | மாடங்கள்சூழ் | மாடங்களாலேசூழப்பட்ட |
| எம் | ஆஶ்ரிதரான எங்களையநுபவிப்பிக்கைக்[கு | திருமங்கையர் | திருமங்கையிலுள்ளா[ர்க்கு |
| கார் | மேகம்போன்ற | கோன் | ராஜாவான |
| வண்ணன் | திருநிறத்தையுடையனாய், | கலியன் | ஆழ்வாரருளிச்செய்த |
| விண்ணோர்தாம் | நித்யஸூரிகளுங்கூட | பண் ஆர் | கானயுக்தமான |
| பரவும் | ஸ்துதிப்பதாய் | பத்துப்பாடலும் | பத்துபாட்டுகளையும் |
| பொழில் | சோலைகளையுடைய | பயில்வார்க்கு | அப்யஸிக்குமவர்களுக்கு |
| வேங்கடம் | திருமலையையிருப்பிடமாகவுடையவனாய், | பாவங்கள் | ப்ரதிபந்தகங்கள் |
| | | இல்லை | நசித்துப்போம். |

ருடைய குற்றங்களையும் பொறுப்பித்து ரக்ஷிக்கைக்கடியான பிராட்டியையுடையையாய் அத்தாலே ஸர்வாபாஶ்ரயபூதனானவனே! (கல்தேனித்யாதி) முழைஞ்சுகளிலேவைத்த தேன்களானவை நிறைந்து வழிந்து வெள்ளமிட்டு ஒழுகிவந்து சுனைகளிலே புகுர அங்கே தாமரைகள் அலருமாயிற்று. (அற்றேன்) தேவர் திருவடிகளிலே வ்யவஸிதனானேன். (அடியேனையாட்கொண்டருளே) †எனக்குப்புறம்பு பற்றில்லையென்றேனே, எனக்குப்பற்றான நீ லக்ஷ்மீபதியாயிருந்தாயே, ஆனபின்பு, என்னுடைய ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைக்கொண்டருளவேணும். ... ... ... (கூ)

வ்யா.—பத்தாம்பாட்டு. (கண்ணாயித்யாதி)†ஸகலலோகங்களுக்கும் த்ருஷ்டிபூதனாய், ஸத்தாஹேதுவானப்ராணனாய், அதுக்குமேலே

பாட்டெல்லாம்கடாக்ஷித்துத்தாத்பர்யம். (எனக்கித்யாதி). ... (கூ)

அரு.—பத்தாம்பாட்டு. (கண்ணாயித்யாதி). "ஏழுலகுக்கு-கண்ணாய்" என்றந்வயித்தர்த்தம், (ஸகலேத்யாதி).

என்னை யநுபவிப்பிக்கைக்காக மேகம்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையனாய், ஏழுலகத்துள்ளாரோபாதி நித்யஸூரிகளுமொரு மூலையிலே புகுந்தேத்துகிற திருமலையை வாஸஸ்த்தாநமாகவுடைய வேதைகஸமதிகம்யனையாயிற்றுக் கவிபாடிற்று.

(திண்ணார்) (க)† "సర్వంచకుశలంగృహే-ஸர்வம்சகுசலம்க்ருஹே" என்னும்படியாயிற்று. (பண்ணார்பாடல்) பண்மிகுந்திருக்குமாயிற்று; இவற்றையப்யஸிப்பார்க்கு ஒருபாபங்களும் வந்துகிட்டாது. பகவத்ப்ராப்திக்கு ப்ரதிபந்தகங்களடங்க ஓடிப்போம். †"பாவமே செய்து பாவியானேன்" என்று இவரும்சொல்லி ஈஶ்வரனும் அத்தைப்பொறுத்தபின்பு இவருக்குப்பாபமில்லையே. †ஸ்ரீவிபீஷணாழ்வானை (உ) "వధ్యతామ్ - வத்யதாம்" என்றபோது அதுக்குவிஷயமானார் கூடவந்த நால்வரும் பின்னை அவத்யரானார்கள், அப்படியே இவருடைய பரிகரமாய் இவருடைய ப்ரபந்தத்தை அதிகரிக்கவே, இவர்கள் பாபங்களைப் போக்குமாயிற்று. ஈஶ்வரனுக்குத் தம் வ்ருத்த ஹாநியைச் சொல்லிவைத்து அநந்தரம் "அடைந்தேன்" என்றதுக்குக் கருத்தென்னென்னில்; அதுசொன்னால் அவனிரக்கத்துக் கடியாமே, அவ்விரக்கம் ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்துக்குடலாம். ... ... ... ... ... (க௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

இப்போது திண்ணு 'மாடம்" என்கைக்குத்தாத்பர்யம், (ஸர்வமித்யாதி). (க) "పఙ్కదిగ్ధస్తు జటిలో భరతస్త్వాం ప్రతీక్షతే। పాదుకే తే పురస్కృత్య సర్వం చ కుశలం గృహే - பங்கதிக்த்தஸ்து ஜடிலோபரதஸ்த்வாம்ப்ரதீக்ஷதே। பாதுகேதே புரஸ்க்ருத்ய ஸர்வஞ்ச குசலம் கருஹே." ஸ்ரீபரதாழ்வானார்த்திகண்டு பெருமாளெழுந்தருளுவரென்றுநிர்ணயித்து எல்லாரும் தேறிக்களித்திருந்தாற்போலே, ஆழ்வாரார்த்திகண்டு திருவேங்கடமுடையான் ப்ரஸந்நராகக்கடவரென்றுதேறித் திருமங்கையிலுள்ளார் களித்தார்களென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம். "திண்ணார்" என்றது - திருமங்கைக்கு விசேஷணம். ஆழ்வார்தாம் "பாவியேன்" என்றன்றோசொன்னார், அவர் ஸம்பந்தங்கொண்டு இவர்கள் பாபங்கள்போம்படியென்னென்ன; அருளிச்செய்கிறார், (பாவமேயித்யாதி) இதுக்கு த்ருஷ்டாந்தம், (ஸ்ரீவிபீஷணேத்யாதி). "వధ్యతామేష తీవ్రేణ దణ్డేన సచివైస్సహ। రావణస్య నృశంసస్య భ్రాతా హ్యేష విభీషణః - வத்யதாமேஷதீவ்ரேணதண்டேநஸசிவைஸ்ஸஹ। ராவணஸ்ய ந்ருசம்ஸஸ்யப்ராதாஹ்யேஷவிபீஷண:".

ஜீயர் திருவடிகளே சரணம்.

முதற்பத்தில் - ஒன்பதாந்திருமொழி முடிந்தது.

---

(க) ரா - யு - ௧௨௭ - ௬. (உ) ரா - யு - ௧௭ - ௨௭.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து - பத்தாந் திருமொழி - கண்ணூர்.

மூ.—கண்ணூர் கடல்சூழிலங்கைக் கிறைவன்றன்
திண்ணாகம் பிளக்கச் சரஞ் செல வுய்த்தாய்
விண்ணோர் தொழும் வேங்கடமா மலைமேய
அண்ணா அடியே னிடரைக் களையாயே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கண்ஆர் | இடமுடைத்தான | தொழும் | ஆச்ரயிக்கும்படி |
| கடல்சூழ் | ஸமுத்ரத்தாலே சூழ | மா | பெருமைபொருந்திய |
| இலங்கைக்கு | லங்கைக்கு [ப்பட்ட | வேங்கடமலை | திருமலையிலே[வனாய் |
| இறைவன்றன் | தலைவனான ராவணனு | மேய | நித்யவாஸம்பண்ணுமவ |
| திண் | த்ருடமான [டைய | அண்ணா | ஸர்வவிதபந்துவுமா |
| ஆகம் | சரீரமானது | | னவனே ! |
| பிளக்க | பிளக்கும்படியாக | அடியேன் | சேஷபூதனானென்னு |
| சரம் | அம்புகள் | இடரை | க்லேசத்தை [டைய |
| செல | செல்லும்படி | களையாய் | போக்கியருளவேணு |
| உய்த்தாய் | நடத்தினவனாய் | | ம். ... ... (க) |
| விண்ணோர் | ப்ரஹ்மாதிதேவர்கள் | | |

வ்யா.—கண்ணூர்ப்ரவேசம்.—† தம்முடைய வெறுமையைச் சொல்லிக் கைங்கர்யலாபத்துக்காகச் சரணம் † புக்கார்; † பாஷ்யகாரர் சரணம்புக்கவநந்தரம், † "ஸ்தூலஸூக்ஷ்மரூபையான ப்ரக்ருதியைக் கழித்துத் தரவேணும், † அஹங்காரமமகாரங்களைக்கழித்துத்தரவேணும், † விரோதியைப் போக்கித்தரவேணும், † பரபக்த்

அரு.—கண்ணூர்கடல்சூழ்ப்ரவேசம்.—கீழ்த்திருமொழியில் இஷ்டப்ராப்தியை அர்த்தித்தார்; இதில் அநிஷ்டநிவ்ருத்தியை ப்ரார்த்திக்கிறாரென்று ஸங்கதியருளிச்செய்கிறார், (தம்முடையவித்யாதி). (புக்கார்) என்றவநந்தரம், விரோதிநிவ்ருத்தியை ப்ரார்த்திக்கிறாரிதில் என்றுசேஷம். இஷ்டப்ரார்த்தனையிலேதானே அநிஷ்டநிவ்ருத்திஸித்தியாதோ, தனித்தும் ப்ரார்த்திக்கவேணுமோவென்ன; த்ருஷ்டாந்தத்தமுகேநவிஸ்தரமாகப்ரமேயத்தையுமருளிச்செய்கிறார், (பாஷ்யேத்யாதி). (க) "మదీయానాది కర్మప్రవాహప్రవృత్తాం - மதீயாநாதிகர்மப்ரவாஹப்ரவ்ருத்தாம்" என்ற சூர்ணிகையினர்த்தம், (ஸ்தூலேத்யாதி). இதுக்குக்கீழில் (க) "అనాదికాల - அநாதிகால" இத்யாதி சூர்ணையில் ப்ரமேயம்,(அஹங்காரேத்யாதி).இதுக்கும் பூர்வமான, (க)"మనోవాక్కాయైః - மனோவாக்காயை:" இத்யாதி சூர்ணிகாபலிதார்த்தம், (விரோதியைப்போக்கித்தரவேணும்).என்றது, இங்கே வ்யுத்க்ரமமாக வெடுத்ததுக்குக்கருத்து - ப்ரக்ருதிவஶ்யதையாலே அஹங்காரமமகாரங்களும் அவற்றாலே பகவதபசாராதிகளும் பிறக்குமென்கிறக்ரமம் தோற்றவேணுமென்கை. (பரபக்த்யாதிகளைப்

(க) ஸத்யாத்ர - க.

யாதிகளைப் பிறப்பிக்கவேணும்" என்று அபேக்ஷித்தாற்போலே, விரோதிநிரஸநசீலனாய் † ஸர்வரக்ஷகனாய் † ஆஶ்ரிதஸ்பர்சமுள்ள த்ரவ்யத்தாலல்லது தரியாதவனாய் † ஆஶ்ரிதஸம்ஶ்லேஷைக ஸ்வபாவனாய் † ஸர்வஸுலபனாயுள்ள ஸர்வேஶ்வரனை, "என்னுடைய விரோதியைப் போக்கித்தரவேணும், உன்னாலல்லது செல்லாமையைப் பிறப்பிக்கவேணும்" என்றபேக்ஷிக்க; † உம்முடைய ஸர்வாபேக்ஷிதங்களையும் செய்கைக்கன்றோ நாமிங்கேவந்து நிற்கிறது என்று திருமலையில் † நிலையைக்காட்டி, அநந்தரம் இவர் † திருவுள்ளத்திலேவந்து இவர்க்கு † பரபக்த்யாதிகளைப் பிறப்பித்தானென்கிறது இத்திருமொழியில். † ப்ரபந்நனுக்குமுண்டுபக்தி, பக்திமானாகிற அதிகாரிக்குமுண்டு; (௧) "నమస్యన్తశ్చ మాం భక్త్యా - நமஸ்யந்தஶ்சமாம் பக்த்யா" என்று இரண்டிடத்திலும் சொல்லாநின்றதிறே.

---

பிறப்பிக்கவேணும்) என்றது-இவையில்லாமையும் கைங்கர்யவிரோதியாகையாலே; ஆகையிறே, ப்ரத்யுக்திரூபமான பகவதுக்த்யநுவாதத்திலே (௨) "పరభక్తి పరజ్ఞాన పరమభక్తి విఘ్నప్రతిహతోపి - பரபக்திபரஜ்ஞாந பரமபக்திவிக்நப்ரதிஹதோபி" என்று விரோதித்வந்தோற்ற வருளிச்செய்தது. (ஸர்வரக்ஷகனாய்) என்றது - (௩) "நீரார்கடலும்" என்றபாட்டைக்கடாக்ஷித்து. (௪) "உண்டாயுறிமேல்" என்றபாட்டின் ப்ரமேயம், (ஆஶ்ரிதேத்யாதி). (௫) "மானேய்மடநோக்கி" என்ற பாட்டைப்பற்ற, (ஆஶ்ரிதஸம்ஶ்லேஷேத்யாதி). (௬) "கோணாகணையாய்" என்றத்தைப்பற்றவாதல். (௭) "எங்கள் நம்பீ" என்றத்தைப்பற்ற, (ஸர்வஸுலபனாய்) என்றது. (நிலையைக்காட்டி) என்றது - ஶ்ரீஹஸ்தமுத்ரையாலே காட்டினமையைப்பற்ற. (௮) "என்னெஞ்சிலுளான்" என்றத்தைப்பற்ற, (திருவுள்ளத்திலேவந்து) என்றது. (௯) "ஆயனடியல்லது மற்றறியேனே" என்கையைத் திருவுள்ளம்பற்றி, (பரபக்த்யாதிகளைப்பிறப்பித்தான்) என்றது. உபாஸகனுக்கன்றோபக்தி, ப்ரபந்நனுக்கும் வேணுமோவென்ன; அருளிச்செய்கிறார், (ப்ரபந்நனுக்கு மித்யாதி). "సతతం కీర్తయన్తో మాం యతన్తశ్చ దృఢవ్రతాః । నమస్యన్తశ్చ మాం భక్త్యా నిత్యయుక్తా ఉపాసతే - ஸததம்கீர்த்தயந்தோமாம் யதந்தஶ்சத்ருடவ்ரதா:| நமஸ்யந்தஶ்சமாம்பக்த்யா நித்யயுக்தா உபாஸதே" "నమస్యన్తశ్చ - "நமஸ்யந்தஶ்ச" என்றது ப்ரபத்திபரமாகவுஞ்சொல்லுகிறது.

முதற்பாட்டு. (கண்ணாரித்யாதி). அபாரபாபஸாகரமத்யே*புண்ணாராக்கையாகிற லங்கையிலே அநந்யார்ஹனானவடியேன் அகப்பட்டு (௧௦) "ననమేయమ్ - நநமேயம்" என்கிற ஸ்வாதந்த்ர்யாபிமாநவிஶிஷ்டமான மநஸ்ஸாலே

---

(௧) கீதை-௯-௧௪. (௪) ௧-௧௦-௪. (௭) ௧-௧௦-௯. (௧௦) ரா-யு-௩௬-௧௧.
(௨) கத்யத்ர-௧. (௫) ௧-௧௦-௭. (௮) ௧-௧௦-௬.
(௩) ௧-௧௦-௩. (௬) ௧-௧௦-௫. (௯) ௧-௧௦-௮.

மூ.—இலங்கைப் பதிக்கென் றிறையாய வரக்கர்
குலங்கெட் டவர்மாளக் கொடிப்புள் திரித்தாய்
விலங்கல் குடுமித் திருவேங்கடம் மேய
அலங்கல் துளப முடியா யருளாயே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இலங்கைப்பதிக்கு | லங்காநகரத்துக்கு | புள் | பெரிய திருவடியை (ஏறி) |
| என்று | எக்காலத்திலும் | திரித்தாய் | ஸஞ்சரிப்பித்தவனாய் |
| இறையாய | ராஜாக்களாய் | விலங்கல் | (சந்த்ர ஸூர்யர்கள்,) விலகிநடக்கும்படி உயர்ந்த |
| அரக்கர்குலம் | ராக்ஷஸஜாதீயரான | | |
| அவர் | அந்தமாலிமுதலியராக்ஷஸர்கள் | குடுமி | கொடுமுடியையுடைத்தாய் |
| கெட்டு | தங்கள்நிலைமைகெட்டு | | |
| மாள | நசிக்கும்படி | திருவேங்கடம் | திருவேங்கடமென்னும்பேரையுடைய திருமலையிலே |
| கொடி | த்வஜமான | | |

முதற்பாட்டு. (கண்ணார்கடல்) கண்ணென்று - இடம். இடம் மிக்கிருந்துள்ளகடல். பூமியில் வர்த்திக்கும் பதார்த்தங்களினு மேற்றமுண்டிறே கடலில்வர்த்திக்குமவை; அவற்றுக்கெல்லாம் வேண்டுமிடம் போந்திருக்கும். அன்றிக்கே, வைத்தகண் வாங்க வொண்ணாதபடி தர்சநீயமான கடலென்னவுமாம். அக்கடலை அகழாக வுடைத்தாகையாலே அரணுடைத்தாயிருக்கிற லங்கைக்கு நிர்வாஹகனாய், அத்தாலே†அபிமாநித்திருக்கிற ராவணனுடைய. (திண்ணாகமித்யாதி) ப்ரஹ்மாஸ்த்ராதிகள் வாய்மடியும்படி தேவதைகள் வரத்தாலே திண்ணிதான உடலானது பிளக்கும்படியாக அம்பு செல்லும்படியாக நடத்தினாய். (விண்ணோரித்யாதி) † ராவணனாலே குடியிருப்பிழந்த தேவதைகள் இப்போது வந்தாஶ்ரயிப்பார்களாயிற்று. ப்ரஹ்மாதிகளாஶ்ரயிக்கும் ஸ்வபாவனாய் திருமலையை வாஸஸ்த்தாநமாகக்கொண்டு ஸந்நிதிபண்ணின நிருபாதிகபந்துவே! (அடியேனித்யாதி) இங்குத்தையிருப்பு இடர் என்று என் நெஞ்சிற் பட்டபின்பு என்கைங்கர்ய விரோதியைப் போக்கியருளவேணும். (௧)

அபஹ்ருதனாய்க் கிடக்கிறவடியேனிடரைக் களையவேணுமென்கிறாரென்று, அவதாரிகைகண்டுகொள்வது. (௧) "దశేన్ద్రియానసంఘోరం యో మనోరజనీచరమ్। వివేకశరజాలేన శమన్నయతి యోగిరాట్ - தசேந்த்ரியாநநம்கோரம்யோமநோரஜநீசரம் | விவேகசரஜாலேந சமம்நயதியோகிராட்" என்னக்கடவதிறே.

"தன்" என்றதினர்த்தம், (அபிமாநித்திருக்கிற) என்றது. "தன்" என்றத்தாலே - அவன் மதிப்புத்தோ[illegible]திறே. ஸமபிவ்யாஹாரதாத்பர்யம், (ராவணனாலேயித்யாதி). ... ... ... (௧)

(௧)

| | | | |
|---|---|---|---|
| மேய | நித்யவாஸம்பண்ணு மவனாய், | முடியாய் | திருவபிஷேகத்தையு டையவனே! |
| தளபம் அலங்கல் | திருத்துழாயாலாகிய மாலேயாலேஅலங்கரி க்கப்பட்ட | அருளாய் | க்ருபைசெய்து ரக்ஷி த்தருளவேணும். |

வ்யா.—இரண்டாம்பாட்டு. †ஆக,கீழிற்பாட்டிலும் இப்பாட்டிலும் - அவனுடைய விரோதி நிரஸநசீலதையைச்சொல்லி என் துக்கத்தைப் போக்கித் தரவேணுமென்கிறார்.

(இலங்கைப்பதிக்கித்யாதி) ராவணனுக்குமுன்பு குடியிருந்துபோந்த மாஸிப்ரப்ருதிகளை நிரஸித்தபடியைச்சொல்லுகிறது.†பற்றாது, என்றும் துஷ்டஸர்ப்பங்கள்மாறாதே போருமாபோலே, என்று மொக்க ராக்ஷஸருக்குக் குடியிருப்பாயே யாயிற்றுப் போருவது. (குலங்கெட்டவர்மாள) பாதாளத்திலே புக்கு†ஒளிப்பாரும் பட்டுப்போவாருமாம்படி த்வஜமான பெரியதிருவடியைச் †சுழற்றிக் கொடு திரிந்தவனே!(க) "కీర్తిభూతాంపతాకాంయోలోకేభ్రామయతిప్రభుః" கீர்த்திபூதாம் பதாகாம் யோ லோகேப்ராமயதிப்ரபுः". (விலங்கலித்யாதி) †திருவேங்கடமென்று திருமலைக்குப் பேருண்டாகையாலே, தன்மேலே ஸஞ்சரிக்கிற சந்த்ராதித்யர்களுக்கு நேர்கொடுநேர் போகவொண்ணாதே விலங்கிப் போகவேண்டும்படி ஓங்கின சிகரத்தையுடைய. (அலங்கலித்யாதி) ரக்ஷணத்துக்கு மாலையிட்டு முடிசூடியிருக்கிற நீ இனி என் † விரோதியைப்போக்குகை யென்றொன்றில்லை, என்பக்கலிலே க்ருபையைப் பண்ணியருளவேணும். ... (௨)

அரு.—இரண்டாம்பாட்டு. (இலங்கையத்யாதி). அநாத்யவித்யாகர்மவாஸநாநிவ்ருத்திகளையும் பண்ணித்தரவேணுமென்கிறாரென்று விவக்ஷித்து, ஆக இரண்டுபாட்டுக்கும் ஸமுதாயேந க்ரோடீகரித்து அவதாரிகையிடுகிறார், (ஆகவித்யாதி).

இலங்கையாகிற பதிக்கு-ஸ்தாநத்துக்கு, என்றும்-நியமேந "இறையாயவரக்கர்" என்கைக்கு, ராக்ஷஸரே ராஜாக்களாகவேணுமோவென்ன; அருளிச்செய்கிறார், (பற்றாதித்யாதி). இத்தால், ப்ராக்ருதமான சரீரமானால் விரோதிவர்க்கம் குறைவற்றிருக்குமென்றதாயிற்று. "கெட்டு" என்றதின் வாஸனை, (ஒளிப்பாரும்) என்றது. (சுழற்றிக்கொடு) - அதிலே யேறிச்சுழற்றிக்கொண்டு. "விலங்கல்" என்று பர்வதத்துக்கும்பேராகையாலே, "திருவேங்கடம்" என்றத்தோடு பௌநருக்த்யம் வருமென்று, விலங்குதலை இங்குச்சொல்லுகிறதென்கிறார், (திருவேங்கடமித்யாதி). (விரோதியைப்போக்குகையென்றொன்றில்லை) என்றது - ஸவாஹநனாய்வந்து நிரஸிக்கும்படி எதிரம்புகோத்த விரோதியுண்டாய்ப்போக்க வேண்டுவதில்லை யென்கை. அருளாவே உருமாயுமவைகிடீர் என்விரோதிகளென்று திருவுள்ளம். ... (௨)

மூ.—நீரார் கடலும் நிலனும் முழுதுண்டு
ஏரால மிளந்தளிர் மேல் துயி லெந்தாய்
சீரார் திருவேங்கட மாமலை மேய
ஆரா வமுதே யடியேற் கருளாயே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நீர் ஆர் | ஜலம்நிரம்பியிருக்கிற | மா | பெருமைபொருந்திய |
| கடலும் | ஸமுத்ரத்தையும் | திருவேங்கடமலை | திருமலையிலே |
| நிலனும் | பூமியையும் | மேய | நித்யவாஸம்பண்ணு மவனாய் |
| முழுது | மற்றுமுள்ளஎல்லாப் பொருள்களையும் | ஆரா | (காலமுள்ளதனையும் அநுபவித்தாலும்) த்ருப்திபிறவாத |
| உண்டு | அமுதுசெய்து | அமுதே | அம்ருதம்போலே போக்யனானவனே! |
| ஏர் | அழகியதாய் | அடியேற்கு | சேஷபூதனான அடியேன்விஷயமாக |
| இளம் | மிகவும்இளையதான | அருளாய் | க்ருபைபண்ணவேணும். (௩) |
| ஆலந்தளிர்மேல் | ஆலந்தளிரிலே | | |
| துயில் | கண்வளர்ந்தருளினவனாய் | | |
| எந்தாய் | என்போல்வார்க்குரக்ஷகனாயிருக்குமவனே! | | |
| சீர்ஆர் | ஐஶ்வர்யம்மிக்கிருப்பதாய் | | |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (நீராரித்யாதி).†ஸர்வரக்ஷகனாய் பூமிக்காக நிர்வாஹகனாயிருந்தபடியைச் சொல்லுகிறது.

(நீராரித்யாதி) ஜலராசியையுடைய கடலும், அதுக்கு உட்பட்ட பூமியும், இத்தையடைய வயிற்றிலேவைத்து. (ஏரித்யாதி) கண்வளர்ந்தருளுகைக்கீடான அழகையுடைய ஆலின் முகிழ்விரிந்த ளவான தளிரிலே கண்வளர்ந்து, அந்த அகடிதகடநாஸாமர்த்யத்தைக்காட்டி என்னை அநந்யார்ஹனாக்கினவனே! (சீராரித்யாதி) பரமபதத்திற்காட்டிலும் ஐஶ்வர்யம் மிக்குப்போலேகாணும் திருமலையிருப்பது. (ஆராவமுதே) †இவ்வம்ருதம் ஸ்வர்க்கத்திலல்லபோலே காணுமிருப்பது. (அடியேற்கு) இதுவே போக்யமென்றிருக்கிறவென்னை இத்தை யநுபவிப்பித்தருளவேணும். ... ...(௩)

அரு.—மூன்றாம்பாட்டு. (நீரார்கடலுமித்யாதி). ஒருகடலுக்குட்பட்டலங்கையில் விரோதிகளை நிரஸநம்பண்ணினவளவேயோ, கடல்களையும் பூமியையும் ரக்ஷித்திலையோவென்கிறாரென்று ஸங்கதி யருளிச்செய்கிறார், (ஸர்வேத்யாதி).

"ஆரா" என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிச்செய்கிறார், (இவ்வம்ருதமித்யாதி). "திருவேங்கடம்மேய" என்று ஸமபிவ்யாஹாரஸித்தமாகவுமாம்.

அரு.—நாலாம்பாட்டு. (உண்டாயித்யாதி). மண்ணையுண்டபிள்ளைக்கும், வெண்ணெயுண்டபிள்ளைக்கும், மண்ணையளந்தமாணிக்குமுள்ள ஸாதர்ம்யத்தாலே அத்தை அநுபவிக்கிறாரென்று ஸங்கதி கண்டு கொள்வது.

மூ.—உண்டா யுறிமேல் நறுநெய்யமுதாகக்
கொண்டாய் குறளாய் நில மீரடியாலே
விண்டோய் சிகரத் திருவேங்கடம்மேய
அண்டா அடியேனுக் கருள்புரியாயே. (ச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உறிமேல் | உறிகளிலேவைத்த | சிகரம் | கொடுமுடியையுடைய |
| நறுநெய் | நல்லநெய்யை [டு | | |
| அமுதாக | அம்ருதமாகக்கொண் | திருவேங்கடம் | திருமலையிலே [னுய் |
| உண்டாய் | அமுது செய்தருளினவனே! | மேய | பொருந்தியிருக்குமவ |
| குறளாய் | வாமநாவதாரம் செய் | அண்டா | அண்டாந்தர்வர்த்திகளான தேவர்களுக்கு நிர்வாஹகனுனவனே! [க்கு |
| நிலம் | பூமியை [தருளி | | |
| ஈரடியாலே | இரண்டடியாலே | | |
| கொண்டாய் | அளந்துகொண்டவனே! | அடியேனுக்கு | சேஷபூதனுன வென |
| விண்தோய் | பரமபதத்தளவும்செல்லவோங்கின | அருள்புரியாய் | (உன்கைங்கர்யத்தை) க்ருபைசெய்தருளவேணும்...... (ச) |

வ்யா.—நாலாம்பாட்டு. (உண்டாயித்யாதி) ஆஶ்ரிதஸ்பர்சமுள்ள த்ரவ்யத்தாலல்லது தரியாதானுய், †அவர்களுக்குத் தன்னைப் பேணுதே கார்யம்செய்யும்படி சொல்லுகிறது. உறிகளிலேசேமித்து வைத்த நறுநெய்யை அம்ருதமாகபுஜித்தாய். (கொண்டாயித்யாதி) ஸர்வாதிகனுன நீ வாமநவேஷத்தைப் பரிக்ரஹித்து, பரப்புடைத்தான பூமியை இரண்டடியாலேகொண்டாய். (விண்டோயித்யாதி) பரமபதத்தளவும் செல்லவோங்கின சிகரத்தையுடைய திருமலையிலே பொருந்திநிற்கிறவனே! (அண்டா) †இடையனே! அன்றிக்கே, அண்டாந்தர்வர்த்திகளுக்கு நிர்வாஹகனுனவனே! (அடியேனுக்கித்யாதி) †யசோதைப்பிராட்டியும் இந்த்ரனும்பெற்ற பேற்றினளவல்லாத என்னுடைய †கைங்கர்யத்தைத் தந்தருளவேணும். ... (ச)

(அவர்களுக்கு) இந்த்ராதிகளுக்கு. வெண்ணெயுண்டவாயனுக்குறுப்பாக வாதல் மண்ணைக்கொண்டகாலனுக்குறுப்பாகவாதல், "அண்டா" என்றதுக் கர்த்தமருளிச்செய்கிருர், (இடையனேயித்யாதி). அருளாயேயென்னுதே, "அருள்புரியாயே" என்றத்தாலே தா(ஸ)தவ்யத்தின் பெருமைதோற்றிற்றென்று தாத்பர்யமருளிச்செய்கிருர். (யசோதையித்யாதி). (கைங்கர்யத்தை) என்ற வநந்தரம், விரோதியைப்போக்கி என்றுசேஷம். ... ... (ச)

அரு.—அஞ்சாம்பாட்டு. (தாணுயித்யாதி). வாமநாவதாரத்தைக்காட்டிலும் அத்புதமான வேஷங்கொண்ட முன்புத்தை நரஸிம்ஹத்தை யநுஸந்திக்கிருரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

மூ—தூணாயதனூடரியாய்வந்துதோன்றிப்
பேணாவவுணனுடலம் பிளந்திட்டாய்
சேணார்திருவேங்கடமாமலைமேய
கோணாகணையாய் குறிக்கொள்ளெனைநீயே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தூணாய் | வெறும்தூணேயாயி | மா | பெருமைமிக்கிருந் |
| அதனூடு | அதினுள்ளே [ருக்கிற | திருவேங்கடமலை | திருமலையிலே [ள்ள |
| அரியாய் | நரஸிம்ஹமாய் | | [வனாய் |
| வந்துதோன்றி | வந்தவதரித்து, | மேய | பொருந்தி வர்த்திப் |
| பேணா | மதியாத | கோள் | மிடுக்கையுடைய |
| அவுணன் | ஹிரண்யனுடைய | நாகம் | திருவனந்தாழ்வானை |
| உடலம் | மார்பை | அணையாய் | திருப்பள்ளியாகவுடையவனே! |
| பிளந்திட்டாய் | இருபிளவாகக்கிழித்துப்பொகட்டவனே! | எனை | அடியேனை |
| | | நீ | தேவரீர் |
| சேண் ஆர் | மிக்கவுயர்த்தியையுடைத்தாய் | குறிக்கொள் | திருவுள்ளம்பற்றியருளவேணும். (௫) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (தூணாயித்யாதி) இனி†இரண்டுபாட்டாலே தமக்கு உபகரிக்க வொருப்பட்டபடி சொல்லுகிறாராய், † அதுக்குறுப்பாகத் திருமலையிலேவந்து நின்றபடியைச்சொல்லி அநந்தரம் திருவுள்ளத்தில் புகுந்தபடியைச் சொல்லுகிறார்.

(தூணாய்)†முன்பே நரஸிம்ஹத்தைவைத்துப் பண்ணிற்றென்ன வொண்ணாதாயிற்று. (௧)† "அளந்திட்டதூணை" என்றாரிறே. (அதனூடு) அதினுள்ளே, நரஸிம்ஹமாய்வந்துதோற்றி. (பேணாவவுணன்) ஸர்வேஶ்வரனைப் பேணாதொழிகையாவது - ஆஶ்ரிதரை நலிகையாயிற்று. (௨) "மமப்ராணாஹி - மமப்ராணாஹி" என்றானே. ஓக்கம்மிக்கிருக்கிற திருமலையிலேநிற்கிற. (கோளித்யாதி) மிடுக்கையுடைய திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடையவனே!

(இனி இரண்டுபாட்டாலே) என்ற வநந்தரம் திருவனந்தாழ்வானைப்போலே என்னையடிமை கொண்டு கைங்கர்யங்கொண்டருளவேணுமென்று ப்ரார்த்திக்க அவன் என்று இவ்வளவும் கூட்டிக்கொள்வது. இங்ஙனம் கூட்டாவிடில், இப்பாட்டிலும் நெஞ்சில்புகுந்தபடி சொல்லாமையால் சேராதிறே. (அதுக்கு) உபகரிக்கைக்கு.

"தூணாயதனூடு" என்றது தூணேயாயிருக்கிற வதிலே என்றர்த்தமாய், இப்படி விசேஷித்ததுக்குத் தாத்பர்யம், (முன்பேயித்யாதி). தூணானமையில் புரையில்லை யென்கைக்கு ஜ்ஞாபகமென்னென்ன; அருளிச்செய்கிறார், (அளந்திட்டவித்யாதி).

(௧) பெரி-திரு-௧-௭-௭. (௨) பார-உத்யோ-

௬.—மன்னு விம்மனிசப் பிறவியை நீக்கித்
தன்னாக்கித் தன்னின்னருள் செய்யும் தலைவன்
மின்னார் முகில்சேர் திருவேங்கடம்மேய
என்னானை யென்னப்பனென்னெஞ்சிலுளானே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மன்னு | நிலையில்லாத | சேர் | திரண்டுவர்த்திக்கிற [ளாய், |
| இம் | இந்த | திருவேங்கடம் | திருமலையிலே |
| மனிசப்பிறவியை | மநுஷ்யஜந்மத்தை | மேய | பொருந்தியிருப்பவ |
| | | என் | என்னையநுபவிப்பிக்கைக்கு |
| நீக்கி | விடுவித்து | | |
| தன் | தனக்கு | ஆனை | ஆனைபோலே அழகிய வடிவுடையனாய், |
| ஆக்கி | ஆளாக்கிக்கொண்டு | | |
| தன் | தன்னுடைய | என் | எனக்கு [வன் |
| இன் அருள் | பரமக்ருபையை | அப்பன் | மஹோபகாரகனான |
| செய்யும் | பண்ணுகிற்கும் | என் | என்னுடைய |
| தலைவன் | தலைமையையுடைய | நெஞ்சில் | மனஸ்ஸிலேயே |
| மின் | மின்னலாலே [ளாய், | உளான் | நித்யவாஸம்பண்ணுகிறான். (௬) |
| ஆர் | நிறைந்திருந்துள்ள | | |
| முகில் | மேகங்களானவை | | |

(௧) "[illegible] ஹூன பலைக தாமஸி-ப்ரக்ருஷ்ட விஜ்ஞாநபலைகதாமஸி." (குறி [illegible]யாதி) ப்ராப்தியொத்திருந்தபின்பு † அவன்பெற்றபேறு [illegible] பெறுவேனாகத் திருவுள்ளம்பற்றவேணும். ... (௫)

[illegible].—ஆறும்பாட்டு. †உம்முடையபக்கல் விலக்காமைக்கு [illegible]த்திருக்கிற நாம் உம்மை இரக்கவிட்டுவைப்புதோமோ [illegible] பெற்றவாறே, நெஞ்சிலேவந்து புகுந்தான்.

([illegible]யாதி) அஸ்த்திரமான இம்மநுஷ்ய ஜந்மத்தில் [illegible] நீக்கி. (தன்னாக்கி) தன்னோடொக்கப்பண்ணி யென் [illegible]; [illegible]யென்னுதல்; (உ.)† "நிரஞ்ஜநः பரமம் ஸாம்யமுபைதி" [illegible] ஸாம்யமுபைதி". (தன்னின்னருளித்யாதி) இவ் [illegible] பின்னையும் ஒன்றும் செய்யாதானாய்த் தன்பேறான

(அவன்பெற்றபேறு) - திருவனந்தாழ்வான்பெற்றபேறு. (௫)

[illegible].—ஆறும்பாட்டு. (மன்னுவித்யாதி). கீழ்ப்பாட்டில், "குறிக்கொள்" [illegible] இப்பாட்டில் "என்னெஞ்சிலுளானே" என்று தம்மிலே அநுஸந் [illegible] யருளிச்செய்கிறார், (உம்முடையவித்யாதி).

" [illegible]னோடொக்கப்பண்ணி " என்றதுக்கு ப்ரமாணம், (நிரஞ்சநஇத் [illegible]). * [illegible]வேங்கடாத்ரிசிகராலயகாளமேகத்தோடுஸாம்யந்தோற்ற " மின்

(௧) [illegible] - ௮ - ௬௧. (உ) முண்ட - ௩ - ௩.

மூ.—மானேய் மடநோக்கி திறத்தெதிர் வந்த
ஆனேழ் விடைசெற்ற வணிவரைத் தோளா
தேனே திருவேங்கட மாமலைமேய
கோனே என்மனம் குடிகொண் டிருந்தாயே. (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மான் | மான்விழியை | தோளா | திருத்தோள்களையுடையவனே! |
| ஏய் | ஒத்திருப்பதாய் | தேனே | எனக்குத்தேன்போலேஇனியனே! |
| மடம் | அழகிதாயிருந்துள்ள | மா | பெருமைபொருந்திய |
| நோக்கிதிறத்து | திருக்கண்களையுடையளான நப்பின்னைப்பிராட்டிவிஷயமா [க | திருவேங்கடமலை | திருமலையிலே |
| எதிர்வந்த | பகைத்துவந்த | மேய | பொருந்தி வர்த்திக்கி [றவனாய் |
| ஆன் | பசுக்களுக்குள்ளே (இச்சைப்படிதிரியவிட்ட) | கோனே | என்னையடிமைகொண்டவனே! |
| எழ்விடை | ஏழுருஷபங்களையும் | என் | அடியேனுடைய |
| செற்ற | கொன்றவனாய், | மனம் | மநஸ்ஸை |
| அணி | அழகுமிக்கிருப்பதாய் | குடிகொண்டு | வாஸஸ்த்தாநமாகக்கொண்டு |
| வரை | மலைபோலேதிண்ணிதான | இருந்தாய் | நிலைபெற்றிராநின்றாய். (௭) |

வருளைப்பண்ணும் தலைமையையுடையவன். (மின்னுமித்யாதி)† மேகமும் மின்னும் சேர்ந்தவிது, பிராட்டியுமவனும் சேர்ந்தாற்போலேயாயிற்றிருப்பது. (என்னானை) ஸதாதர்சநீயனாயிருக்குமவன். (என்னப்பன்) எனக்கு மஹோபகாரகனானவன். உமக்குப்பண்ணின உபகாரந்தானென்னென்ன ; (என்னெஞ்சிலுளானே) என்னெஞ்சிலே வந்து புகுந்து†போகமாட்டுகிறிலன். ... ... (௬)

வ்யா.—ஏழாம்பாட்டு. (மானேயித்யாதி)†மானேய்ந்த நோக்கையுடையளாயிருக்கிற நப்பின்னைப்பிராட்டிக்கு ஸ்ப்ருஹாவிஷயமா

னார்" இத்யாதியை யருளிச்செய்தாரென்கிறார், (மேகமுமித்யாதி). "உளானே" என்கிற ஏவகாரலப்த்தார்த்தம், (போகமாட்டுகிறிலன்) என்றது. (௬)

அநு.—ஏழாம்பாட்டு. (மானேயித்யாதி). நெஞ்சிலே புகுந்துபோகமாட்டாதவளவேயோ, தன்வீர்யசுல்கத்தாலே லப்த்தையான நப்பின்னையும் தானுமாகக் குடியாயிருந்தானென்கிறாரென்று அவதாரிகை கண்டுகொள்வது.

"மானேய் - நோக்கிதிறத்து" என்றதுக்குத் தாத்பர்யம், (மானேய்ந்தவித்யாதி). அவள் தன் வீரவாசியைக்கண்டு ஆசைப்படும்படி என்று கருத்து

மூ.—சேய னணிய னென சிந்தையுள் நின்ற
மாயன் மணிவாளொளி வெண்டரளங்கள்
வேய் விண்டுதிர் வேங்கடமா மலைமேய
ஆயனடியல்லது மற்றறியேனே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சேயன் | (பற்றாதார்க்கு) மிகவும் தூரஸ்தனாய் | வேய் | மூங்கில்களானவை |
| அணியன் | (பற்றினார்க்கு,) மிகவும் ஆஸந்நனாய் | விண்டு | பிளவுபட்டு |
| என | என்னுடைய | உதிர் | சிந்திக்கிடப்பதாய் |
| சிந்தையுள் | மநஸ்ஸிலே | ஒளி | ப்ரகாசத்தையும் |
| நின்ற | நித்யவாஸம்பண்ணுமவனாய் | வெண் | வெண்மைநிறத்தையுமுடைத்தான |
| மாயன் | ஆஶ்சர்யபூதனாய் | தரளங்கள் | முத்துக்களையும் |
| | | வாள் | ஒளியையுடைத்தான |

யிருக்கைக்காக. †மானினுடைய நோக்குப்போலே முக்தமான நோக்கையுடையளாய், அவ்வளவன்றிக்கே †ம்ருதுவாயிருக்குமாயிற்று. (எதிர்வந்த) பகைத்துவந்த ருஷபங்களை யழியச்செய்த. (அணிவரைத்தோளா) †நப்பின்னைப்பிராட்டிக்கு ஸ்ப்ருஹாவிஷயமாய், ருஷபங்களுக்கு இளகாத திண்ணிதான தோளையுடையவனே! (தேனே) நப்பின்னைப்பிராட்டிக்காகத் தன்னைப்பேணாதே ருஷபங்களின் மேலேவிழுந்து பண்ணினவ்யாபாரம், அநுஸந்திக்கிற தம்நெஞ்சுக்கு இனிதாயிருக்கிறபடி. (திருவித்யாதி) அத்தேன் குடிகொண்டவிடமாயிற்று. (கோனே) என்னை அடிமைகொள்ளுகைக்காகத் திருமலையிலேவந்து ஸந்நிஹிதனாய், உன்னுடைய நிரதிசயபோக்யதையைக்காட்டி என்னை அநந்யார்ஹமாக்கினவனே! (என்னித்யாதி) ருஷபங்களையழியச்செய்து நப்பின்னைப்பிராட்டியை லபித்து, அவளோடேகூட, (க) †"அரவத்தமளியினோடும்" என்கிறபடியேவந்து, இனி ஒருகாலும் பேரான் என்று தோற்றும்படியிருந்தானாயிற்று.()

நோக்கிலேமடப்பமுந்தோற்றுமென்று விவக்ஷித்து, வாக்யபலிதார்த்தம், (மானினுடையவித்யாதி). (ம்ருதுவாயிருக்கும்) என்றது - பவ்யதைதோற்றவிருக்குமென்றபடி. "அணி, வரை" என்கிற விசேஷணத்வயத்துக்கும் ப்ரயோஜநமருளிச்செய்கிறார். (நப்பின்னையித்யாதி). இத்தால், அவள் கண்ணாலேகாண இவன் தோளாலேதழுவினானென்றும், இவன் கண்ணழகுக்குத் தோற்றுத்தழுவ அவள் தோள் மிடுக்குக்குத் தோற்றாளென்றும் திருவுள்ளமென்று ஹ்ருதயம். "ஏழ் - ஆன் - விடை" ஆன்களுக்குள்ளே யதேச்சாவிஹாரம்பண்ணவிட்ட விடைகளையென்று சப்தார்த்தங்கண்டுகொள்வது. (அரவத்தமளி) சேஷனாகிறபடுக்கை. ... ... ... ... (எ)

(க) பெரி - திரு - ரு - உ - கo.

| | | | |
|---|---|---|---|
| மணி | ரத்நங்களையுமுடைத் தாய் [ள்ள | ஆயன் | இடையனானக்ருஷ்ணனுடைய |
| மா | பெருமைமிக்கிருந்து | அடியல்லது | திருவடிகளையொழிய |
| வேங்கடமலை | திருமலையிலே [ளுய் | மற்று | வேறொன்றையும் |
| மேய | பொருந்தியிருப்பவ | அறியேன் | ஒருபொருளாகமதித்தறியேன். (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. †ருஷபங்களையழியச்செய்து நப்பின்னைப்பிராட்டியைக் கைப்பிடித்துக்கொண்டு என்னுடைய ஹ்ருதயத்திலேவந்து புகுந்தபின்பு, இனி இக்†கார்ஹஸ்த்யத்துக்கு †எடுத்துக் கை நீட்டுகையொழிய †வேறெனக்கொன்றறியேனென்கிறார்.

(சேயனணியன்) அநாஶ்ரிதர்க்கு அத்யந்ததூரஸ்த்தனாய் ஆஶ்ரிதர்க்கு அத்யந்தம் ஆஸந்நனாயிருக்குமிறே. † இரண்டும், பாண்டவர்கள் விஷயத்திலும் துர்யோதநாதிகள் விஷயத்திலும் காணலாமிறே. உகப்பார்க்கு அவன்கையாளாயிருக்குமென்னுமிடம் நீர் † எங்கேகண்டு சொல்லுகிறீரென்ன; (என சிந்தையுள் நின்றமாயன்) † நான் அபேக்ஷியாதிருக்க என்னுடைய ஹ்ருதயத்திலேவந்து புகுந்து நித்யவாஸம்பண்ணுகிற ஆஶ்சர்யபூதன். (மணியித்யாதி) வா

அரு.—எட்டாம்பாட்டு. (சேயனித்யாதி). ஆயனடியல்லது மற்றறியேனே என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை (ருஷபங்களையித்யாதி). (கார்ஹஸ்த்யத்துக்கு) இவ்விருவருடைய கார்யத்துக்கு. (எடுத்துக் கைநீட்டுகை) - பரிசாரக க்ருத்யம். (வேறெனக்கொன்றறியேன்) என்றது - * மன்னுவிம்மனிசப்பிறவியை நீங்கப்பண்ணுவித்துக்கொண்டு அவன் வர்த்திக்கிற தேசவிசேஷப்ராப்திமுதலானவை எனக்குப் புருஷார்த்தமாகத் தோற்றவில்லை இப்போதென்றபடி.

மேலுக்கவதாரிகை, (இரண்டுமித்யாதி வாக்யத்வயமும்). (எங்கேகண்டு) என்றதுக்கு - பாண்டவர்கள் விஷயத்தில் கண்டுசொல்லுகிறீரோவென்றபடி, இவ்வாழ்வார், "அடியேனையாட்கொண்டருளே," "அடியேனிடரைக்களையாயே," குறிக்கொள்ளெனைநீயே" என்றுகொண்டு, அவனிருக்கும்தேசத்தில் போகை உத்தேஶ்யமாய் அவ்விடத்தில் கைங்கர்ய தத்விரோதிப்ராப்தி பரிஹாரங்களையே ப்ரார்த்தியாநிற்கவும், அவன்றனக்கு இவர் நெஞ்சில் வருகை உத்தேஶ்யமாய் இவரந்தரங்கவ்ருத்திகளி லபேக்ஷையாலே மஹிஷீஸஹிதனாய் அவஸரம்பெற்றவாறே புகுந்து கொடுநின்றான், இதைக்கண்டு, "என சிந்தையுள் நின்ற மாயன்" என்கிறாரென்று விவக்ஷித்துத்தாத்பர்யமருளிச்செய்கிறார், (நானித்யாதி). இங்ஙனன்றாகில், கீழ் - ஸாமாந்யேந ப்ரார்த்தித்தமைதோற்றப் பாட்டுக்கள் பலவுண்டாகையாலே, நானபேக்ஷியாதிரு

மூ.—வந்தா யென்மனம் புகுந்தாய் மன்னி நின்றாய்
நந்தாத கொழுஞ்சுடரே எங்கள் நம்பீ
சிந்தா மணியே திருவேங்கடம் மேய
எந்தாய் இனி யானுன்னை என்றும் விடேனே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நந்தாத | விச்சேதமில்லாத | | [வே! |
| கொழு | ஸம்ருத்தமான | எந்தாய் | என்னுடையபந்து |
| சுடரே | ஔஜ்வல்யத்தையுடையவனே! | வந்தாய் | (நானிருக்குமிடத்தில்) வந்தவிட்டினாய்; [த்தில் |
| எங்கள் | அபூர்ணரானஎங்களுடையகுறைகளைத் தீர்க்கவல்ல | என்மனம் | என்னுடையஹ்ருதய |
| | | புகுந்தாய் | ப்ரவேசித்தாய்; |
| நம்பீ | பூர்ணனே | மன்னிநின்றாய் | (என் ஹ்ருதயத்திலேயே) பொருந்தியிரு |
| சிந்தா | நினைத்தமாத்ரத்தில் (ஸகலமநோரதங்களையும்கொடுக்கவல்ல) | இனி | இனிமேல் [ந்தாய்; |
| | | யான் | நான் |
| | | உன்னை | இப்படி உபகாரகனான உன்னை |
| மணியே | ரத்நமே! | | |
| திருவேங்கடம் | வேங்கடாசலத்தில்[ற | என்றும் | எப்பொழுதும் |
| மேய | பொருந்திவர்த்திக்கி | விடேன் | விடமாட்டேன். (கூ) |

ளென்றும் ஒளியென்றும் - ஒளி; இவையிரண்டும் செய்வதென்னென்றால், † (மணிவாள்ஒளிவெண்டரளங்கள்) ஒளியையுடைத்தான ரத்நம், ஒளியையுடைத்தாய் †நீர்மையையுடைத்தாயிருக்கிற முத்துக்களை, வேய்விண்டு உதிராநிற்குமாயிற்று-மூங்கில்களானவை முற்றி வெடித்து முத்துக்களைச்சொரியாநிற்குமாயிற்று; இப்படிப்பட்டதிருமலையை வாஸஸ்தாநமாகவுடைய. (ஆயன்) நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனென்னுமிடத்துக்கு ஸூசகமிதேயிது. (அடியித்யாதி) †இதரநிரபேக்ஷனானவன் அநந்யகதியாய்க்கொண்டு என்பக்கலிலேவந்து புகுர ஸாபேக்ஷனான நான் அவனைவிட்டுப் போவேனோ.? ... ... ... ... ... (அ)

ங்க என்னக்கூடாது. ப்ரதிக க்ரஹணபூர்வகம் ப்ரச்நம் பண்ணுகிறார், (மணியித்யாதி). "வாள்" என்றது, * மணிவிசேஷணமாகவும், "ஒளி" என்றது * தரளத்துக்கு விசேஷணமென்றும், ப்ரத்யுத்தரமானமையைக்காட்டா நின்றுகொண்டு, ப்ரதிகக்ரஹணபூர்வகம் தாத்பர்யமருளிச்செய்கிறார், (மணிவாளொளியித்யாதி). "வாள் - மணி" என்றது * வேங்கடத்துக்கு விசேஷணம். * வெண்மையிளர்த்தம், (நீர்மையையுடைத்தாய்) என்றது. ரத்நங்களும் முத்துக்களும் கொழிக்கிற தேசவாஸத்தால் பலித்தவர்த்தம், (இதரநிரபேக்ஷனானவன்) என்றது. ... ... ... ... (அ)

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (வந்தாய்) ஸ்ரீவைகுண்டம் கலவிருக்கையாயிருக்க, இவரபேக்ஷியாதிருக்கச் செய்தேயும். †நானிருந்தவிடம் தேடிவந்து புகுந்தானாயிற்று வரவேண்டாமென்று விலக்கமாட்டாதேயிருந்தார், அதுவே பற்றாசாக ஹ்ருதயத்திலேவந்து புகுந்தான். (மன்னிநின்றாய்) முன்பு புகுரமாட்டாதேநின்றது உறவில்லாமையன்றிறே,இத்தலையி லிசைவு கிடையாமையிறே; இனிப்போகில் புகுர அரிதாமென்று அதுவே நிலையாக நின்றானாயிற்று. †இப்படியிருக்கிறவிடத்து, ஸ்ரீவைகுண்டம் கலவிருக்கையாக விருக்கக்கடவ நாம் இங்கே வந்து சிறைப்பட்டோமென்னும் இன்னாப்போடன்றிக்கே, இவர்பக்கலிலே புகுந்திருக்கப்பெற்றவிது பெருப்பேறாய், தனக்குப் பண்டில்லாத ஐஸ்வர்யம் பெற்றானாய் உஜ்ஜ்வலனாகாநின்றானாயிற்று. (நந்தாதகொழுஞ்சுடரே) விச்சேத மில்லாத ஔஜ்ஜ்வல்யத்தையுடையவனே!. (எங்கள்நம்பீ) இப் †பாழும்தாறை ஒருபடிநிரப்புகை. (சிந்தாமணியே) † இவன் ஒன்றை எனக்கு என்றுநினைப்பதுகாண் நாமத்தைக் கொடுக்கைக்கு என்றிராநின்றானாயிற்று. †ஜ்ஞாநம் பிறந்தாலும். உபேக்ஷியாதரத்நம். (திருவேங்கடம் மேயவெந்தாய்) திருமலையிலேவந்து புகுந்து உன்னுடைய ஸ்வாமித்வத்தைக்காட்டி என்னை அநந்யார்ஹனாக்கினவனே!

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (வந்தாயித்யாதி) "ஆயனடியல்லது மற்றறியேன்" என்று தம்மிலே தாமநுஸந்திக்கவே, எம்பெருமான், இவர்மற்றொன்று சிலவற்றை ப்ரஸங்கித்தார், அவற்றையறிந்துவிட்டாராயருளிச்செய்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

(நானிருந்தவிடம்) * அஹமர்த்தமிருந்தவிடம். அன்றிக்கே, (இருக்கச்செய்தேயும்)-என்றவநந்தரம், வந்தானாயிற்று என்றுபூரித்துக்கொண்டு, வ்யாக்யாத்ருவாக்யமாக்கிக்கொள்வது. (நானித்யாதி). "புகுந்தாய்" என்றதுக்கு ஆழ்வாருடைய ஹார்த்தபாவமென்று கண்டுகொள்வது. மேலுக்கவதாரிகாஸூசகமாக தாத்பர்யமருளிச்செய்கிறார், (இப்படியித்யாதி). (பாழும்தாறை) ஆழமானபள்ளத்தை. சிந்தாவிஷய பலப்ரதமான மணியென்றர்த்தமாக்கித் தாத்பர்யமருளிச்செய்கிறார், (இவனித்யாதி.) ஸர்வதாசிந்தாவிஷயமான மணியென்றர்த்தமாக்கி, த்யாஜ்யமான மணியுண்டோ இப்படி விசேஷிக்கைக்கென்ன; அருளிச்செய்கிறார், (ஜ்ஞாநமித்யாதி). (க) "ரத்நாநி...ரத்நாநிதநதாந்யாநி" என்று ஜ்ஞாநிக்குத்யாஜ்யங்களுண்டிறே என்று திருவுள்ளம். அன்றிக்கே, சிந்துதல் - சிதறுதலாய், அதில்லாமணியென்றர்த்தமாக்கி, அத்தால் பலிதார்த்தம், (ஜ்ஞாநமித்யாதி) என்றுமாம். (நிற்கிற

---

(க) கத்யத்ர - க.

மூ.—வில்லார் மலி வேங்கட மாமலைமேய
மல்லார் திரடோள் மணிவண்ண னம்மானைக்
கல்லார் திரடோள் கலியன் சொன்னமாலை
வல்லாரவர் வானவ ராகுவர் தாமே. (கO)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வில்லார் | வில்லையிடைவிடாமல்தரித்துநிற்கும் திருவேடுவர்கள் | கல் | கல்லோடு |
| மலி | மிக்கிருக்கிற | ஆர் | ஒத்ததாய் |
| வேங்கடமாமலை | திருமலையிலே | திரள் | திரட்சியையுடைய |
| மேய | பொருந்திவர்த்திப்ப[வனாய் | தோள் | தோள்களையுடைய |
| மல்ஆர் | மிடுக்குமிக்கதாய் | கலியன் | ஆழ்வார் [ரான |
| திரள் | திரண்டிருந்துள்ள | சொன்ன | அருளிச்செய்த |
| தோள் | தோள்களையும் | மாலை | மாலாரூபமானஇப்பத்துப்பாட்டையும் |
| மணி | நீலரத்நம்போன்ற | வல்லாரவர்தாம் | பொருளோடேகற்க வல்லார்கள் |
| வண்ணன் | திருநிறத்தையுமுடையனான | வானவராகுவர் | நித்யஸூரிகளைப் போலேகைங்கர்யம்பண்ணப்பெறுவர்கள். (கO) |
| அம்மானை | ஸர்வேஸ்வரன்விஷ[யமாக | | |

(இனியித்யாதி)எனக்காக வந்து†நிற்கிறநிலையை விடாய், ஆனபின்பு நானுனக்காம்படி †பற்றின பற்று விடுவேனோ?(என்றும்) இத்தால், †பரபக்திபர்யந்தமாகப்பிறந்ததென்றபடி.†அரைக்ஷணமவனையொழியச் செல்லாமையுண்டாகையிறே பரபக்தியாவது; வ்யதிரேகத்தில் ஜீவியாதபடியானார். ... ... ... (கூ)

வ்யா.—பத்தாம்பாட்டு.(வில்லாரித்யாதி)†பரமபதத்திலே நித்யஸூரிகள் அஸ்த்தானே பயசங்கைபண்ணிப்பரியவிருக்குமவனிறே ஸம்ஸாரத்திலேவந்து ஸந்நிதிபண்ணினான்; ஸம்ஸாரமாகையாலே ஸ்த்தானே பயமாயிருக்குமிறேயிங்கு; ஆகையாலே, அங்குத்தைத் திருவேடுவர் எப்போதும் ஏற்றிட்டவில்லுந்தாங்களுமாய் உணர்ந்து

நிலையை) - திருமலையில் நிற்கிறநிலையை. (பற்றினபற்று) - என்னெஞ்சிலே நீ பற்றினபற்று. "என்றும்" என்றது - அல்பகாலவிவக்ஷயாவருளிச்செய்கிறார், (அரையித்யாதி). (பரபக்தி) என்றதுக்கு - பரமபக்தியிலேதாத்பர்யம். (க) "புநர்விஶ்லேஷபீருத்வம் பரமாபக்திருச்யதே புநர்விஸ்லேஷபீருத்வம் பரமாபக்திருச்யதே" என்னக்கடவதிறே. ... ... ... ... (க)

அரு.—பத்தாம்பாட்டு. (வில்லாரித்யாதி). வில்லைநிரூபகமாகவுடைய வேடரால், மலி-ஸம்ருத்தமாயிருக்கிற, வேங்கடமென்று விசேஷித்ததுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார், (பரமபதத்திலேயித்யாதி). "திரள் - மாம்ஸள

நோக்குவர்களாயிற்று, ஸ்ரீகுஹப்பெருமாள் இராவெல்லாமுணர்ந்து நோக்கினாற்போலே. (மல்லாரித்யாதி) ஸிம்ஹம்கிடந்த முழைஞ்சை யாயிற்று இப்படியுணர்ந்து நோக்குகிறது. மிடுக்குமிக்கதோளை யுடைய தர்சநீயமான வடிவையுடையனான ஸர்வேஶ்வரனை. (கல்லாரித்யாதி) †இருவர்க்கு மரணைகப்போரும்படியாயிற்றுத் திருமங்கையாழ்வார் தோள்மிடுக்கிருக்கும்படி. (வல்லாரித்யாதி) இவற்றை அப்யஸிக்க வல்லவர்கள், நித்யஸூரிகளுடைய நித்யகைங்கர்யமே தங்களுக்கு யாத்ரையாகப் பெறுவர்கள். ... ... (க0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



மான. ஆர்தல் - பொருந்துதலாய், கல்லோடொத்ததோளென்று விசேஷிக்கைக்குத்தாத்பர்யம், (இருவர்க்குமித்யாதி). வேடர்க்கும் வேங்கடத்தானுக்குமென்றபடி. ... ... ... ... ... (க0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

முதற்பத்தில் - பத்தாந்திருமொழி முடிந்தது.

ஆக, திருமொழி - க0 - க்கு, பாசுரம் - க00.

முதல்பத்து ஸம்பூர்ணம்.





ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி-உ-பத்து-க-திருமொழி

## வானவர்ப்ரவேசம்.

(க) † "அடைந்தேனடியேனையாட்கொண்டருளே" என்றும், (உ) "இனியானுன்னையென்றும்விடேன்" என்றும், கைங்கர்யலாபத்துக்காகத் திருவடிகளிலேவந்து சரணம்புக்கு, இக்கைங்கர்யந்தான் நித்யமாய்ச்செல்லவேணுமென்னும்படி அதில் ப்ரேமம் பிறந்ததாய் நின்றது; நமக்கிப்படி இந்த ஸமாதிதான் பிறக்கைக்கடியென்னென்றாராய்ந்துபார்த்தார், உபகாரஸ்ம்ருதிக்காக; அத்தையாராய்ந்தவாறே, (ங) "[illegible]" என்கிறபடியே-†நாட்டார் பாஹ்யராயும் குத்ருஷ்டிகளாயு மநர்த்தப்பட்டுப்போராநிற்க, நமக்குக் கைங்கர்யலாபத்துக்காகத் திருவடிகளிலே விழுந்து சரணம்புகுகையும், அதுதான் அவிச்சிந்நமாய்ச் செல்லவேணுமென்னும்படியான ருசிபிறக்கையும், இஸ்ஸம்ருத்திக்கடி இந்நெஞ்சிறே யென்று தந்திருவுள்ளத்தைக் குறித்து, உன்னாலே இந்த ஸம்ருத்தியெல்லா முண்டாயிற்றென்று †திருவுள்ளத்தோடேகூட்டி †இனியராகிறார்.

அரு.—வானவர் ப்ரவேசம்—முதற்பத்தால் - திருமந்த்ர லாபத்தையும், மந்த்ரார்த்தாநுஸந்தாநம் செய்தருளினபடியையும், மந்த்ரம் விளைந்த நிலத்தில் தமக்குண்டான ப்ராவண்யத்தையு மருளிச்செய்து, மற்றும் ஸ்ரீஸாளக்ராம ஸ்ரீநைமிசாரண்ய ஸ்ரீஅஹோபில ஸ்ரீவேங்கடாசலங்களில் ப்ராவண்யத்தாலே அவற்றை அநுபவியா நின்றுகொண்டு, தமக்கு பகவத் விஷயத்தில் ப்ரீதிகாரித நித்ய கைங்கர்யமே புருஷார்த்த மென்று அறுதியிட்டாராயிற்று; இனி இரண்டாம் பத்தால் - திருவேங்கடம், திருவெவ்வுளூர், திருவல்லிக்கேணி, திருநீர்மலை, திருக்கடல் மல்லை, திருவிடவெந்தை, திருவட்டபுயகரம், ஸ்ரீபரமேச்சுர விண்ணகரம், திருக்கோவலூர், இவற்றிலே உகந்தெழுந்தருளியிருக்கு மெம்பெருமான்களை அபிநிவேசாதிசயத்தாலே பாடாநின்றுகொண்டு, நம்முடைய ஸ்வரூபந்தான் பாகவத சேஷத்வ பர்யந்தமா யிருக்கும்படியைச் சொல்லி, கீழ்ப்பத்தில் ப்ரார்த்தித்த கைங்கர்யந்தானும் அவன் நினைவாலே வரவேணு மென்கிற அர்த்தத்தை வெளியிட்டு அப்புருஷார்த்தத்தை § ஓடவைக்கிறாரென்று இப்பத்துக்கு ஸங்கதி கண்டுகொள்வது.

கீழிரண்டு திருமொழிகளோடு ஸங்கதி யருளிச்செய்கிறார், (அடைந்தேனித்யாதி). (க) "பொங்குபோதியும்" (உ) "துவரியாடையர்" என்கிற பாட்டுக்களைக் கடாக்ஷித்து, (நாட்டாரித்யாதி). (ங) "என் நெஞ்சமென்பாய்" என்றத்தைப்பற்றி, (திருவுள்ளத்தோடே கூட்டி) என்றது. (இனியராகிறார்). உபகார ஸ்ம்ருதி பண்ணி உகக்கிறாரென்கை.

§ ஓடவைக்கிறார் - நிஷ்கர்ஷிக்கிறார்.

(க) க-கூ-உ. (ங) வீ-பு-கூ- (ரு) உ-க-கூ-
(உ) க-க0-கூ. (ச) உ-க-ரு- (கூ) உ-க-கூ-

மூ.—வானவர்தங்கள்சிந்தைபோலவென்னெஞ்சமேயினிதுவந்து
மானவர்தங்கள்சிந்தையமர்ந்துறைகின்றவெந்தை [மாதவ
கானவரிடு காரகிற் புகை யோங்கு வேங்கடமேவி மாண்குற
ளானவந்தணற்கின்றடிமைத்தொழில்பூண்டாயே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| என்னெஞ்சமே | எனக்குப்பாங்கானமனஸ்ஸே! | ஓங்கு | உயர்ந்த |
| மா | மிக்க | வேங்கடம் | திருமலையிலே |
| தவம் | தபஸ்ஸையுடைய | மேவி | நித்யவாஸம் பண்ணுமவனாய் |
| மானவர்தங்கள் | மநுஷ்யர்களுடைய | மாண் | அழகிய [ட |
| சிந்தை | நெஞ்சில் | குறளான | வாமநவேஷங்கொண் |
| அமர்ந்து | பொருந்தி [ற | அந்தணற்கு | ப்ராஹ்மணனான என் ஸ்வாமிக்கு, |
| உறைகின்ற | நித்யவாஸம்பண்ணுகி | | |
| எந்தை | என்ஸ்வாமியாய் | வானவர்தங்கள் | நித்யஸூரிகளுடைய |
| கானவர் | வேடர்கள் [த | சிந்தைபோல | ஹ்ருதயத்திற்போலே |
| கார் | (வைரம்பற்றிக்)கறுத் | இனிது | இனிதாக |
| அகில் | அகில்மரங்களை(வெட்டி) [யாலுண்டான | உவந்து | உகந்துவந்து |
| | | இன்று | இப்போது |
| இடு | (நெருப்பில்) இடுகை | அடிமைத்தொழில் | கைங்கர்யம்பண்ணுகையில் |
| புகை | புகையானது (போய் வ்யாபிக்கும்படி) | பூண்டாயே | அந்வயித்தாயே! (க) |

வ்யா.—முதற்பாட்டு. (வானவரித்யாதி) நித்யஸூரிகள் ஹ்ருதயத்திற்போலே என்†ஹ்ருதயத்திலான. (மாதவமானவர் தங்கள்சிந்தையமர்ந்துறைகின்றவெந்தை) மஹாதபஸ்ஸையுடையராயிருக்கிற மநுஷ்யர்களுடைய ஹ்ருதயங்களிலே அநந்யப்ரயோஜநனாய்க்கொண்டு நித்யவாஸம்பண்ணுகிறஸ்வாமி. (கானவரித்யாதி) கானவருண்டு - அங்குத்தைத்திருவேடுவர், அவர்கள் தங்கள் †புனங்களிலுண்டான மரங்களைவெட்டித் திரளவிட்டு நெருப்பையிடுவர்கள்; அதுதானகில் மரமாகையாலே அகிற்புகையானது†போய் ஆகாசாவகாசத்தைஇடமடைக்கும்படி ஓங்கின†சிகரத்தையுடைய திருமலையிலே பொருந்தி வர்த்திக்கிற. (மாண்குறளாயவந்தணற்கு) தன்னுடைமையைப்பெறுகைக்குத் தன்னை இரப்பாளனாக்கினவற்கு. அந்தணற்கென்று - ப்ராஹ்மணற்கென்றபடி. மஹாபலிக்குக்கொடுத்தல்லது நிற்கவொண்ணாதபடி விநீதவேஷத்தோடே சென்றானாயிற்று. (மாண்குறளாயவந்தணற்கு, வானவர்தங்கள் சிந்தைபோல வென்னெஞ்சமே இனிதுவந்தடிமைத்தொழில்பூண்டாயே) நித்யஸூரிகளுடைய ஹ்

ருதயம் பகவத்கைங்கர்யத்திலே ப்ரவணமாயிருக்குமாபோலே நீ அவன் திருவடிகளிலேஉகப்போடே அந்வயித்தாயே.†(மாணித்யாதி) † அவனடிமைகொள்வதாக வந்து இரந்துநிற்கிறபின்பு நீயுமவன் நினைவின்படியே போகப்பெறுவதே. ... ... ... (க)

---

அநு.—முதற்பாட்டு. (வானவ ரித்யாதி). (க) "என்நெஞ்சிலுளானே" என்றும் (உ) "என்மனம் குடிகொண்டிருந்தாயே" என்றும், (ங) "என சிந்தையுள் நின்றமாயன்" என்றும், (ச) "என்மனம் புகுந்தாயே" என்றும் சொல்லுகிறபடியே அவன் தம்திருவுள்ளத்திலமர்ந்து வர்த்திக்கிறமையை அநுஸந்தித்து இப்படி மஹாதபஸ்வி ஹ்ருதய கமல நிலயனாயிருக்கும் "அந்தணற்கு - அடிமை - பூண்டாயே" என்று நெஞ்சைக்குறித் தருளிச்செய்கிறாரென்று அவதாரிகை கண்டு கொள்வது.

(ஹ்ருதயத்திலான) என்றது - எந்தைக்கு விசேஷணம். இப்பக்ஷத்தில் "இனிது உவந்து" என்றதுக்கு இனிதாக உகந்திருக்கிற என்று சப்தார்த்தமாக்கிக்கொள்வது. (புனங்களில்) - நிலங்களில். (போய்) என்ற வநந்தரம், வ்யாபிக்கும்படியான் என்று சேஷம், (சிகரத்தையுடைய) என்றது - அர்த்தஸித்தார்த்தம். யோஜநாபேதம், (மாணித்யாதி). இப்பக்ஷத்தில், "உவந்து" என்று - ல்யபந்தபதம். "மாண்குறள்" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம், (அவனித்யாதி). அதாவது - முன்னிரக்க முன்பு மாண்குறளான வளவன்றிக்கே தம்மையடிமை கொள்ளுகைக்குத் தம்நெஞ்சி லிப்போதொரு வாமநவேஷங்கொண்டா னென்றிருக்கிறா ரென்கை. அன்றிக்கே, இப்போது இவ்வவதாரத்தை அநுஸந்திக்கைக்குத் தாத்பர்ய கதநரூபேண இவ்வாக்யம் ப்ரஸ்துதமான தென்று ஏகதாத்பர்ய மாகவுமாம். ... ... ... (க)

மூ. உறவுசுற்றமென்றொன்றிலாவொருவனுகந்தவர்தம்மைமண்மிசைப்
பிறவியே கெடுப்பா னதுகண்டென்னெஞ்சமென்பாய் [டத்
குறவர்மாதர்களோடு வண்டு குறிஞ்சி மருளிசைபாடும் வேங்க
தறவநாயகற்கின் றடிமைத்தொழில்பூண்டாயே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உறவு | (கர்மநிபந்தநமான) ப | மண்மிசை | பூமியில் |
| சுற்றம் | ஜ்ஞாதிகள் [ந்துக்கள் | பிறவி | ஜந்மத்தை |
| என்று | என்று இங்ஙனேயுள் | கெடுப்பான் | போக்குமவனாய், |
| ஒன்று | ஒரு ஸம்பந்தத்தை [ள | குறவர்மாதர்களோடு | குறப்பெண்களோடே |
| இலா | உடையனல்லாத | | |
| ஒருவன் | ஒப்பற்றவனாய், | வண்டு | வண்டுகள் [ண்ணை |
| உகந்தவர்தம்மை | தானுகந்தவர்களுக்கு | குறிஞ்சிமருள் | குறிஞ்சியென்னும்ப |
| | | இசைபாடும் | இசைத்துப்பாடுகிற |

---

(க) க-கo- (உ) க-கo- (ங) க-கo- (ச)

| | | | |
|---|---|---|---|
| வேங்கடத்து | ஸ்ரீவேங்கடாத்ரியிலே நித்யவாஸம்பண்ணுகிற | அதுகண்டு | அவன்ஸ்வபாவத்தை அநுஸந்தித்து |
| அறவன் | பரமதார்மிகனான | என்னெஞ்சமென | என்னெஞ்சுஎன்கிற நீ ன்பாய் |
| நாயகற்கு | ஸர்வேஸ்வரனுக்கு, | இன்று | இப்போது |
| | | அடிமைத்தொழில்பூண்டாயே. | (உ) |

வ்யா.—இரண்டாம்பாட்டு.—(உறவித்யாதி)†பந்துக்கள் ஜ்ஞாதிகளென்றிங்ஙனே கர்மநிபந்தநமாகச்சொல்லலாவதொரு உறவுடையனல்லாத அத்விதீயன். (உகந்தவரித்யாதி) †தான் சிலரையுகந்து அவர்பக்கலுகப்பாலே அவர்களுக்குப் பாபத்தைப்போக்குதல் †பலத்தைக் கொடுத்துவிடுதல் செய்கையன்றிக்கே ஸம்ஸாரஜந்மத்தைப்போக்கிக்கொடுக்கிற ஸ்வபாவத்தை†யநுஸந்தித்து. (உகந்தவர்) தன்னையுகந்தவர்க்கென்றுமாம். (என்னெஞ்சமென்பாய்) அவனைச்சொல்லுவதோ? உன்னைச்சொல்லுவதோ? உன்னை ஆரென்று சொல்லுவேன். †ஸம்பாவநாப்ரகாரமிருக்கிறபடி. என்னெஞ்சமே! என்றபடி. (குறவரித்யாதி) குறப்பெண்களோடேகூட வண்டுகளானவை குறிஞ்சி இந்தளமென்கிற பண்ணைப்பாடாநிற்கிற. (வேங்கடத்தறவநாயகற்கு) தண்ணீர்ப்பந்தலைவைத்து நம்மடிமை பெறுகைக்குத் தம்மை நமக்குத்தந்துகொடுகிற்கிற பரமதார்மிகன். †நம்மையடிமைகொள்வதாகத் திருமலையிலேவந்துஸந்நிதிபண்ணின பரமதார்மிகனுக்கு. (அடிமைத்தொழில்பூண்டாயே) அவன்திருமலையிலேவந்து ஸந்நிதியை நீயொருபடிஸபலமாக்கினையே. (உ)

---

அரு.—இரண்டாம்பாட்டு. (உறவித்யாதி). நெஞ்சானது, நீர்நம்மைக் கொண்டாடா நின்றீர், அடிமைத்தொழில் நமக்கு நித்யமாகக் கிடைக்குமோ, விரோதி விபூதியிலன்றோ நாமிருப்பதென்ன; அவனுடைய மோக்ஷப்ரதத்வத்தைச் சொல்லிக்கொண்டாடுகிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

*தாயேதந்தையிலே அவனை ஸர்வவிதபந்துவாக அநுஸந்தித்தவர்தாமே உறவும் சுற்றமுமாயிருக்க அத்தை இல்லையென்கிறதென்னென்ன; தாத்பர்யமருளிச்செய்கிறார், (பந்துக்களித்யாதி). ''பிறவியே'' என்கிற ஏவகாரவ்யாவர்த்யம் காட்டாநின்றுகொண்டு பாவ(த்தை)மருளிச்செய்கிறார், (தானித்யாதி). (பலத்தை) - ஐஹிகாமுஷ்மிக பலத்தை. ''அதுகண்டு'' அத்தைக்கண்டு என்றாய், பலிதார்த்தம், (அநுஸந்தித்து) என்றது. (ஸம்பாவனை)-கொண்டாட்டம். ''என்னெஞ்சம்'' - அண்மைவிளி. அதாவது-ஸமீபஸ்த்தத்தையழைக்கை. கீழுக்கு விவரணம், (நம்மையித்யாதி). ... ... (உ)

ரு. -இண்டையாயினகொண்டுதொண்டர்களேத்துவாருறவோடும்வா
கொண்டுபோயிடவுமதுகண்டென்னெஞ்சமென்பாய் [னிடைக்
வண்டுவாழ்வடவேங்கடமலைகோயில்கொண்டதனொடும்மீமிசை
அண்டமாண்டிருப்பாற்கடிமைத்தொழில்பூண்டாயே. (ரு)

| பதம். | உரை. |
|---|---|
| என்நெஞ்சமென்பாய் | எனக்குப்பாங்கான நெஞ்சே! |
| இண்டையாயின | பூமாலைகளென்று பேர்பெற்றவற்றை |
| கொண்டு | ஏந்திக்கொண்டு [ற |
| ஏத்துவார் | ஸ்தோத்ரம்பண்ணுகி |
| தொண்டர்கள் | சேஷபூதரையும் |
| உறவோடும் | அவர்கள்ஸம்பந்தமுடையாரையும் |
| கொண்டுபோய் | இங்குநின்றும்கொடுபோய் |
| வானிடை | பரமபதத்திலே |
| இட | வைக்க, [டு |
| அதுகண்டு | அந்நீர்மையைக்கண் |
| வண்டு | வண்டுகள் |
| வாழ் | வாழாநின்றுள்ள |
| வடவேங்கடமலை | திருமலையை |
| கோயில்கொண்டு | தனக்குவாஸஸ்தானமாகக்கொண்டு |
| அதனொடும் | அந்தத் திருமலையோடுகூடின லீலாவிபூதியோடு |
| மீமிசை அண்டம் | பரமாகாசமானநித்யவிபூதியையும் |
| ஆண்டுஇருப்பாற்கு | ஆண்டுகொண்டிருக்கிறவனுக்கு |
| | அடிமைத்தொழில்பூண்டாயே. (ரு) |

வ்யா.—மூன்றும்பாட்டு.—(இண்டையித்யாதி). "இண்டை" என்று, பூமாலைக்குப்பேர். ஆக, பூமாலையென்றுபேர்பெற்றவற்றைக்கொண்டு, (க) "எண்டிசையுமுள்ள பூக்கொண்டேத்தி" என்கிறபடியே (தொண்டர்களேத்துவார்) பகவத்விஷயத்திலடிமை செய்யுமவர்கள் கையிலே பூமாலைகொண்டு வாயாலே ஏத்தாநின்றுகொண்டு, அடிமைசெய்கிறவர்களுடைய. (உறவோடும்வானிடைக்கொண்டுபோயிடவும்) அவர்களோடு ஸம்பந்திஸம்பந்திகளோடு †ஒருநாள்கார்யம்செய்தவர்களோடு வாசியற எல்லாரையுமாகக்கொண்டுபோய் நித்யவிபூதியிலேவைக்கும் நீர்மையையநுஸந்தித்து, என்நெஞ்சமே! † இங்குத்தையிருப்புத் தன்னையுமிழக்கிறோமோ? என்று†அஞ்சவேண்டியிருக்க அவ்வருகேபோயடிமைசெய்யவாசையையுடையை யாவாயே நீ. (வண்டித்யாதி) வண்டுகளானவை மதுபானத்தைப்பண்ணி மத்தமாய்க்கொண்டுவாழாநின்றுள்ள திருமலையைத் தனக்கு நித்யவாஸத்துக்கு ஸ்தானமாகக்கொண்டு. (அதனொடும் மீமிசை அண்டமாண்டிருப்பாற்கு) † உபயவிபூதியுக்தனான ஸர்வேஶ்வரனுக்கு. "அண்டம்" என்று ஆகாசத்துக்குப்பேர். வெறு

(க) தி - வாய் -

மண்டமென்னில்; ஸ்வர்க்காதிகளிலும்மேறுமென்று "மீமிசையண்டம்" என்று பரமபதத்தைச் சொல்லுகிறது. "மஹாகாசம், பரமாகாசம்" †என்னக்கடவதிறே. உபயவிபூதியுக்தனான ஸர்வேஶ்வரனுக்கு, (அடிமைத்தொழில்பூண்டாயே) அவாப்தஸமஸ்தகாமனானவனுடைய குறையை யொருபடிகிரப்பினாயே. †திருமலையிலேவந்து புகுந்து இவரை யடிமைகொள்வதற்குமுன்பு உபயவிபூதியோகத்தால்வந்த ஐஶ்வர்யத்தை யொன்றாக நினைத்திலன்காணுமவன். தநலுப்தன் ஒருகாசு விழுந்தவிடத்திலே கையெல்லாம் புழுதியாகத் தேடாநிற்குமிறே. ... ... ... ... (௩)

அரு.—மூன்றாம் பாட்டு (இண்டை யித்யாதி). நித்ய விபூதியில் நித்ய கைங்கர்யத்தை யாசைப்படுகிற நெஞ்சை ஆதரத்தாலே மீளவும் கொண்டாடுகிறாரென்று ஸங்கதிகண்டு கொள்வது.

"உறவோடும்" என்கிற சகாரம் அநுக்த ஸமுச்சயமாக்கி அருளிச் செய்கிறார், (ஒருநா ளித்யாதி). "வானிடை - அடிமைத்தொழில்" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து, "என்பாய்" என்று கொண்டாடுகிறவருடைய ஹார்த்தபாவம், (இங்குத்தை யித்யாதி). (அஞ்சவேண்டியிருக்க)என்றது - லௌகிகரஞ்சாநிற்க என்றபடி. இத்தால் - இஹலோகபோகத்தை இழக்கவேணுமே என்று லௌகிகர் மோக்ஷத்துக்கு யத்நம் பண்ணார்களென்கை. "அதன்" என்றது - திருமலையாய், அது உபலக்ஷணமாய், லீலாவிபூதியைச் சொல்லுகிறது; அத்தை யருளிச்செய்கிறார், (உபயேத்யாதி). (என்னக்கடவதிறே)என்றவநந்தரம், ஆகையாலே என்று கூட்டுவது. இவரடிமை செய்யாவிட்டால் அவனுக்குக் குறையோவென்ன; அருளிச்செய்கிறார், (திருமலையிலே யித்யாதி). ... ... ... ... ... ... (௩)

மூ.—பாவியாதுசெய்தாயென்னெஞ்சமேபண்டுதொண்டுசெய்தாரை
மேவியாட்கொண்டுபோய்விசும்பேறவைக்குமெந்தை[மண்மிசை
கோவிநாயகன்கொண்டலுந்துயர்வேங்கடமலையாண்டுவானவற்
காவியாயிருப்பாற்கடிமைத்தொழில்பூண்டாயே. ... (௪)

| பதம். | உரை. |
|---|---|
| என்நெஞ்சமே | என் மநஸ்ஸே! |
| பாவியாது | தடுமாறாமல் |
| செய்தாய் | பண்ணினாய்; |
| பண்டு | முன்பு |
| தொண்டுசெய்தாரை | அடிமைசெய்துபோந்தவர்களை (உஜ்ஜீவிப்பிக்கைக்காக) |
| மண்மிசை | பூமியிலே |
| மேவி | திருவவதரித்து |
| ஆள்கொண்டு | (அவர்களை) அடிமை கொண்டு |
| போய் | (இங்குநின்றும்அர்ச்சிராதிமார்க்கமாகக்) கொண்டுபோய் |
| விசும்பேறவைக்கும் | பரமபதத்திலேவைக்கும் [illegible] |

| | | | |
|---|---|---|---|
| கோவிநாயகன் | ஸ்ரீகோபீஜநவல்லபனாய் | ஆண்டு | இரண்டுவிபூதியையு மரசாண்டு |
| எந்தை | எனக்குஸ்வாமியான | வானவர்க்கு | நித்யஸூரிகளுக்கு |
| கொண்டல் | மேகங்களை [வனாய், | ஆவியாயிருப்பார்க்கு | ப்ராணபூதனாயிருக்குமவனுக்கு, |
| உந்து | தள்ளாநிற்கிற | | அடிமைத்தொழில்பூண்டாயே. (ச) |
| உயர் | உயர்த்தியையுடைத் | | |
| வேங்கடமலை | திருமலையிலே[ தான | | |

வ்யா.—நாலாம்பாட்டு. (பாவியாதித்யாதி). †"அத்தைச்செய்வோமோ? இத்தைச்செய்வோமோ?" என்று இங்ஙனே †அலமாவாக்கிடவாதே †கிளேபியாதே †இப்படியிலே †அத்யவஸிப்பதே! †என்ன அலப்யலாபமோ! ஸம்ஸாரத்திலத்யவஸிப்பதே! †சப்தாதிகளை யநுபவித்திருப்புதோமோ? பகவத்கைங்கர்யம்பண்ணுவோமோ? என்றிங்ஙனே விசாரியாதே நீ இதிலே துணிவதே! உன்னாலேயிறே இப்பேறெல்லாம்பெற்றது. (பண்டித்யாதி) † முன்பு அடிமைசெய்தவர்களைத் தான் ஸம்ஸாரத்திலேவந்தவதரித்து, "இவனென்†தோழன்" "இவனென் † மைத்துனன்" என்று சொல்லலாம்படி அவர்களோடேபொருந்தி அவர்களுக்குக் கைங்கர்யருசியைப்பிறப்பித்து, அடிமையைக்கொண்டு, அதுதானவிச்சிந்நமாய்ச்செல்லவேணுமென்று அதுக்குறுப்பாகப் †பரமபதத்திலே கொடுபோய்வைக்கும் ஸ்வாமி. (கோவிநாயகன்) ஸ்ரீகோபிமாருடன் கலக்குமாபோலே ஆஸ்ரிதரோடே பரிமாறுமவன், (கொண்டலுந்துயர்வேங்கடம்) மேகங்களைச்சென்றுதள்ளும்படி அவ்வளவும் வளர்ந்த சிகரங்களையுடைய திருமலையை வாஸஸ்த்தாநமாகக்கொண்டு. (வானவரித்யாதி) (உ) "ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்-ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்" என்கிறபடியே †ஜ்ஞாநிகளைத் தனக்காத்மபூதராகவுடையனாயிருக்கிறவனுக்கு †நீயுமாவியானாயோ. ... ... ... ... (ச)

---

அரு.—நாலாம்பாட்டு (பாவியாதித்யாதி). (உ) "துணிவினியுனக்குச் சொல்லுவன் மனமே தொழுதெழு தொண்டர்கள் தமக்குப் பிணியொழித்தமரர் பெருவிசும்பருளும் பேரருளாளன்" இத்யாதியாலே பலபடி உபதேசித்தவராயிருந்தீர், அத்தாலே யன்றோ நான் மோக்ஷவிசாரம் பண்ணுகிறேன், என்னை நீர் பலகாலும் கொண்டாடுவதென் னென்னும் சங்கையிலே, நான் எத்தனை உபதேசித்தாலும் வாஸநாபலத்தாலே (ங) "உபதேஶோ நிரர்த்தக: - உபதேசோ நிரர்த்தக:" என்னும்படி பண்ணாதே கடுக இசைந்தாயே என்று நெஞ்சைக் கொண்டாடுகிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

---

(க) கீதை-எ-க அ. (உ) க-ச-ச. (ங)

"பாவியாது" என்றது-பா(ஞு)வியாதே என்றாய், நிரூபியாதே செய்தா யென்றொரு யோஜனை யருளிச்செய்கிறார், (அத்தை யித்யாதி). (அலமாவாக்கிடவாதே) - தடுமாறிக்கிடவாதே. இதுக்கு விவரணம், (நிரூபியாதே) என்றது. (இப்படியிலே) - இந்தப்ரகாரத்திலே. "செய்தாய்" என்றதின் பலிதார்த்தம், (அத்யவஸிப்பதே) என்றது. இத்தால்-அநாதிவாஸநாபல(ம)த்தாலே விஷயங்களை விடமாட்டாதே என்னுபதேச பல(ம)த்தாலே பகவத்விஷயத்தையும் விடமாட்டாதே கிடவாதே கடுக த்வரியாநின்றாயென்றதாயிற்று. "பாவியாது" என்றது - நீட்டிக்கிடக்கிறதாய், ப(ழ)வியாதது - ஸம்பவியாதது, செய்தாய் என்றர்த்தாந்தர மருளிச்செய்கிறார், (என்னவித்யாதி). இத்தால் - (க) "துணிவினியுனக்குச்சொல்லுவன்" என்னவே, நீ அந்த பகவத்விஷயத்திலே தானே துணிவதே! இது இந்த விபூதியில் கிடைப்பதொன்றோ என்றதாயிற்று. மூந்தினவர்த்தத்தை விவரிக்கிறார், (சப்தாதிகளையித்யாதி). அன்றிக்கே, அடிதொடங்கி ஏகார்த்தமேயாய், ஆழ்வாருடைய ஈடுபாட்டைப்பலவகையாக அருளிச்செய்கிறாரென்றுமாம். (முன்பு) - முற்காலத்திலே, க்ருதாதிகளிலேயென்றபடி. (தோழன்) - ஸ்ரீகுஹப்பெருமாள்; மஹாராஜராகவுமாம். (மைத்துனன்) - அர்ஜுநன். இவன் ஸ்வர்க்கஸ்த்தனுனேயாகிலும் மோக்ஷருசிபிறந்தால், அவனோடேதானே (உ) "மோக்ஷயிஷ்யாமி - மோக்ஷயிஷ்யாமி" என்றவன் அவனுக்குக்கொடுக்க மாட்டாதேயிரானிறே; அத்தைப்பற்ற, (பரமபதத்திலேகொடுபோய்வைக்கும்ஸ்வாமி) என்றது. (ங) "தைவீஸம்பத்விமோக்ஷாய - தைவீஸம்பத்விமோக்ஷாய" என்கிறபடியே, வானவர்கள் தேவர்களென்னத்தக்க ஜ்ஞாநிகளை ஆவியாகவுடையவற்கென்றருளிச்செய்கிறார், (ஜ்ஞாநியித்யாதி). வானவர்க்காவியா யென்று அர்த்தம்கொள்ளுமளவில், ப்ரக்ருதத்துக்கு அத்யந்த மநபேக்ஷிதமிறே யென்று திருவுள்ளம். (நீயுமாவியானாய்) என்று - ஆதரவிஷயமானாயென்னுமர்த்தம்கூடாதிறே. ... ... ... ... ... ... (ச)

மூ.—பொங்குபோதியும்பிண்டியுமுடைப்புத்தர்நோன்பியர்பள்ளியுள்ளுறை
தங்கள்தேவரும்தாங்களுமேயாகவென்னெஞ்சமென்பாய்
எங்கும்வானவர்தானவர்நிறைந்தேத்தும்வேங்கடம்மேவிநின்றருள்
அங்கணாயற்கின்றடிமைத்தொழில்பூண்டாயே. (ரு)

---

(க) க-ச-ச. (உ) கீதை-கஅ-சசு. (ங) கீதை-

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| என்னெஞ்சமென்பாய் | என்னுடையமநஸ்ஸென்று அபிமாநிக்கலாம்படியானநீ, | தாங்களுமேயாக | தாங்களுமேயாகவிடாநிற்கச்செய்தே, |
| பொங்கு | கொம்புங்கிளையுமாகப்பருத்துவாராநின்றுள்ள | எங்கும் | நாற்புறத்திலும் |
| போதியும் | அரசமரத்தையும் | வானவர் | தேவர்களும் |
| பிண்டியும் | அசோகவ்ருக்ஷத்தையும் | தானவர் | அஸுரர்களும் |
| உடை | தங்களுக்குத்தஞ்சமாகவுடைத்தான | நிறைந்து | நெருங்கி |
| புத்தர் | பௌத்தரும் | ஏத்தும் | ஸ்தோத்ரம்பண்ணாநின்றுள்ள |
| நோன்பியர் | அமணரும் | வேங்கடம் | திருமலையிலே |
| பள்ளியுள் | தங்கள்தேவாலயங்களிலே | மேவிநின்று | பொருந்தியிருந்து |
| உறை | வர்த்தித்த | அருள் | ஆஶ்ரிதரிஷ்டங்களைச்செய்தருளுமவனாய் |
| தங்கள் | தங்களுடைய | அங்கண் | அழகியதிருக்கண்களையுடையவனாய் |
| தேவரும் | தேவதையும் | நாயகற்கு | ஸர்வஸ்வாமியானவனுக்கு |
| | | இன்றுஅடிமைத் | தொழில்பூண்டாயே. |

அவ.—அஞ்சாம்பாட்டு. † "பாவியாது" என்று நீ இப்படி விசாரியாதே துணிவதே! என்று என்னைக்கொண்டாட வேண்டின ஹேதுவென்னென்ன; † விசாரிக்கவேண்டும்படி † எத்தனைவிஷயம் புறம்பே கிடக்கிறதென்கிறார்.

வ்யா.—(பொங்குபோதியும்) விஸ்த்ருதமாகாநின்றுள்ளவரசும். (பிண்டியும்) அசோகவ்ருக்ஷமும். இவையிரண்டையுமாயிற்றுத் தங்களுக்கு ப்ரதாநமாக நினைத்திருப்பது பௌத்தார்ஹதர்கள். (புத்தர் நோன்பியர்) பௌத்தரையும் அமணரையும் சொன்னபடி. (பள்ளியுள்ளுறை தங்கள் தேவரும் தாங்களுமேயாக) † அவர்கள் தங்களுடைய தேவஸ்தாநங்களிலே வர்த்தித்ததேவதைகளும் தாங்களுமாக.† அல்லாதாரடங்கலும் முக்தராம்படியாகவாயிற்று. (என்னெஞ்சமித்யாதி) † இவருடைய திருவுள்ளம் அவற்றை யநாதரித்து பகவத்விஷயத்திலே ப்ரவணமாயிற்றதென்றால் பின்னை லோகமாக அவற்றை அநாதரித்து இங்கே ப்ரவணமாம்போலேகாணும். (எங்குமித்யாதி) எங்குமொக்க தேவர்களும் அஸுரர்களும் நெருங்கிநின்றேத்தாநின்றுள்ள. அன்றிக்கே, "தானவர்" என்கிறது-ஸ்தாநத்திலுள்ளாராகவுமாம். (அங்கணாயகற்கு) அக்கண்ணிற்குளிர்த்திக்கிலக்காவதே! † அக்கண்ணழகிலே(க) "ஜிதம்-ஜிதம்" என்று எழுதிக்கொடுத்தாயாகாதே! (அடிமை) "ஜிதம்-ஜிதம்" என்று எழுதிக்கொடுத்தாருடைய வ்ருத்தியிலே அந்வயித்தாயோ? ... (ரு)

அரு—அஞ்சாம்பாட்டு (பொங்குபோதியுமித்யாதி). சபதாதிகளுடைய அல்பாஸ்திரத்வாதி தோஷங்கள் ப்ரத்யக்ஷிக்கலாயிருக்க இவற்றை விட்டு

(க) ஜி - ஸ்தா - க.

நித்யமான புருஷார்த்தத்திலே துணிந்ததுக்கே நீராஸ்சர்யப்படுகைக்குஹேது வென்னென்னில் என்கிற ப்ரஸ்நாநுவாதம்பண்ணி ஸங்கதியைக்காட்டுகிருர், (பாவியாதித்யாதி). ப்ரதிவசநம் தோற்றும்படி பா(ஃ)வ மருளிச்செய்கிருர், (விசாரிக்கவித்யாதி). மதிகெட்டுப்போம்படி இத்தனை துர்க்கதிகளுண்டேயென்றுகருத்து. (எத்தனைவிஷயம்) - அஸங்க்யாத விஷயமென்றபடி.

"நோன்பியர்"-அஸத(ஸ)ஸ்யராய், அமணரைச்சொல்லுகிறது. "பள்ளி" அவர்களுடைய தேவதாலய மென்றருளிச்செய்கிருர், (அவர்களித்யாதி). "தாங்களுமேயாக" என்றதுக்கு - லோகமெல்லாமவர்களேயாய்க்கெட்டுப்போக என்று அவதாரிகையிலே அருளிச்செய்த தாத்பர்யம்தவிர, "தாங்களுமேயாக" - தாங்கள்மாத்ரமேயாம்படியென்று தாத்பர்யாந்தரம்விவக்ஷித்து, உட்கருத்தருளிச்செய்கிருர், (அல்லாதாரித்யாதி). இவ்வாக்யார்த்தத்தைத் தெரியவருளிச்செய்கிருர், (இவருடையவித்யாதி). தாத்பர்யாந்தரம், (அக்கண்ணழிகிலேயித்யாதி). (௬)

மூ.—துவரியாடையர்மட்டையர்சமண்தொண்டர்கள்மண்டியுண்டுபி
தமருந்தாங்களுமேதடிக்கவென்னெஞ்சமென்பாய் [ன்னரும்
கவரிமாக்கணஞ்சேரும்வேங்கடங்கோயில்கொண்டகண்ணார்வி
அமரநாயகற்கின்றடிமைத்தொழில்பூண்டாயே. [சும்பிடை

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| துவரி | காவியேறின [ராய் | என்நெஞ்சமென்பாய் | என்நெஞ்சமானநீ, |
| ஆடையர் | வஸ்த்ரத்தையுடைய | கவரிமா | சவரிம்ருகங்களின் |
| மட்டையர் | மொட்டைத்தலையராய் | கணம் | திரள்களானவை |
| சமண்தொண்டர்கள் | க்ஷபணகமதத்தையாஸ்ரயிக்குமவர்கள் | சேரும் | வந்துசேருகிற |
| மண்டி | ஒருவர்க்கொருவர்மேல்விழுந்து | வேங்கடம் | திருமலையை |
| உண்டு | புஜித்து | கோயில்கொண்ட | வாஸஸ்தாநமாகவுடையனாய் |
| பின்னரும் | பின்னையும் | கண் ஆர் | இடமுடைத்தான |
| தமரும் | தங்கள்பந்துக்களும் | விசும்புஇடை | பரமபதத்தில்வர்த்திக்கிற |
| தாங்களுமே | தாங்களுமாக | அமரர் | நித்யஸூரிகளுக்கு |
| தடிக்க | (கைவந்த படி புஜிக்கையாலே) உடம்பு பருத்துவாரா நிற்க, | நாயகற்கு | தலைவனானவனுக்கு |
| | | இன்றுஅடிமைத் | தொழில்பூண்டாயே. |

வ்யா.—ஆறும்பாட்டு. (துவரியித்யாதி) துவரூட்டியிருந்துள்ள சிவந்தவாடையையுடையராய், தலைமயிரைப்பறித்துப் பொகட்டிருக்கிற சமண்தொண்டருண்டு - அமணராகிறவர், அவர்கள் தாங்கள்†கண்டபடி மேல்விழுந்து புஜித்து, †அதுக்குமேலே, தங்க

ளோடொத்துத் தங்கள் தர்சநத்திலே ருசியுடையராய் அந்த வேஷ தாரணத்தையும் பண்ணியிருக்கிறவர்களும் கடவராயிருக்கிற தாங்க ளும் சரீரமானது தடிக்கும்படியாக. (என்னெஞ்சமென்பாய்) அவர் கள்செய்தபடிசெய்ய, வ்யாவ்ருத்தமான படியையுடைய உன்னைத் தானறென்பன்? (கவரியித்யாதி)†கவரிகளையுடைத்தான†ம்ருகங்களு டைய திரள்வந்து சேருகிற திருமலையை வாஸஸ்த்தாநமாகவுடைய வன். (கண்ணுரித்யாதி) இடம்மிக்கிருந்துள்ள விசும்புண்டு-த்ரிபாத் விபூதி, அதிலேயுண்டானஅநந்த வைநதேயாதிகளுக்கு நிர்வாஹகனு னவனுக்கு. (அடிமையித்யாதி) அமணருடைய வ்யாபாரத்தை யநாதரித்து நித்யஸூரிகளுடைய யாத்ரைகளிலே அந்வயித்தாயே.

---

அரு—ஆரும்பாட்டு (துவரியித்யாதி). புத்தர்முதலானோர்மாத்ரமன்றிக் கே வைராக்ய ஸூசகவேஷங்கொண்டு அத்யாயம் படிப்பார்படியைக்களா யென்கிறுரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

(கண்டபடி) என்றது - கண்டவிடமெல்லாமென்றபடி. "பின்னரும்" என்றது - பின்னையும் என்றுய், அதினர்த்தம், (அதுக்குமேலே) என்றது. (கவரிகளை) - சாமரங்களை. "மா" என்றதினர்த்தம், (ம்ருகங்கள்) என்றது.

மூ.—தருக்கினற்சமண்செய்துசோறுதண்டயிரினல்திரளைமிடற்றி
நெருக்குவாரலக்கணதுகண்டென் னெஞ்சமென்பாய் [டை
மருட்கள்வண்டுகள்பாடும்வேங்கடங்கோயில்கொண்டதனேடும்வா
அருக்கன்மேவிநிற்பாற்கடிமைத்தொழில்பூண்டாயே. [னிடை

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தருக்கினல் | வீண்தர்க்கத்தாலே | என்நெஞ்சமென்பாய்! | |
| சமண் | தங்களுடையக்ஷபணகஸித்தாந்தத்தை | வண்டுகள் | வண்டுகளானவை |
| | | மருள்கள் | மருள்முதலான இசை |
| செய்து | நிலைநிறுத்தி, | பாடும் | பாடாநின்றுள்ள[யை |
| தண் | ஶ்லாக்யமான | வேங்கடம் | திருமலையை |
| தயிரினல் | தயிரைச்சேர்த்துக்குழைத்த | கோயில்கொண்டு | வாஸஸ்த்தாநமாகக்கொண்டு |
| சோற்றுத்திரளை | சோற்றின்திரளையை | அதனேடும் | அத்தோடேகூட |
| மிடற்றிடை | தங்கள்மிடற்றிலே | வானிடை | ஆகாசத்திலேஸஞ்சரிக்கிற |
| நெருக்குவார் | (கண்பிதுங்கும்படி) நெருக்குமவர்கள்படுகிற | அருக்கன் | ஆதித்யனுக்கு |
| | | மேவி நிற்பாற்கு | அந்தராத்மாவாயுள்ள ஸர்வேஶ்வரனுக்கு |
| அதுஅலக்கண் | அந்ததுக்கத்தை | | |
| கண்டு | பார்த்து, | அடிமைத்தொழில் | பூண்டாயே. (எ) |

வ்யா—ஏழாம்பாட்டு. (தருக்கினாற்சமண்செய்து) கேவலதர்க்கத்தாலே தங்களுடைய ஸித்தாந்தத்தை ஸ்த்தாபித்து. (க)† "వేదశాస్త్రావిరోధినా । యస్తర్కేణానుసన్ధత్తే సధర్మం వేద నేతరః - வேதசாஸ்த்ராவிரோதிநா। யஸ்தர்க்கேணாநுஸந்தத்தே ஸதர்மம்வேதநேதர:" என்கிறபடியே ப்ரமாணாநுகூலதர்க்கங்கொண்டு அர்த்தத்தைநிர்வஹிக்கையன்றிக்கே, சுஷ்கமான கேவலதர்க்கங்கொண்டு அவைதிகமாக ஸித்தாந்தஸ்த்தாபநம்பண்ணி. (சோறித்யாதி)† வேகுஞ்சோறு என்றொன்றுண்டிறே அவர்கள் ஜீவித்துப்போருவது; தயிருஞ்சோறுமாகக் குழைத்துத்திரட்டி வ்ரதத்துக்குறுப்பாகக் கண்பிதுங்கும்படி மிடற்றிலே நெருக்குவர்கள்; அப்போது படும் அலக்கணுண்டு - துக்கம், அத்தைக்கண்டு. (மருட்களித்யாதி) மருள் இந்தளமென்கிறபண்ணை வண்டுகள் பாடாநின்றதிருமலையை வாஸஸ்த்தாநமாகக்கொண்டு. (அருக்கன்மேவிநிற்பாற்கு) வைதிகராலாச்ரயிக்கும்படியாக ஆதித்யாந்தராத்மாவாய்க்கொண்டு நிற்கிறவனுக்கு. (அடிமைத்தொழில் பூண்டாயே) ஆதித்யாந்தராத்மாவாயிருக்குமென்று அநுஸந்தித்துப்போகையன்றிக்கே கண்ணாலே கண்டு அடிமைசெய்து அநுபவிக்கப்பெற்றாயே நீ. ... ... ... ... ... (எ)

---

அரு—ஏழாம்பாட்டு (தருக்கினாலித்யாதி). "தமரும்தாங்களுமே" என்கைக்கு - தர்சநஸ்த்தாபகர்சிலரும் அதுக்குட்பட்டார் சிலருமாயிருக்கைக்கு நிமித்தந்தன்னை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

"சமண்" க்ஷபணகஸித்தாந்தம். விவரணம், (வேதேத்யாதி). (வேகுசோறு) - அவர்களுடைய ஸங்கேதம். (வெஞ்சோறு) என்றும் சில ஸ்ரீகோசங்களிலே யுண்டு. தயிரின்சோற்றை ரஸக்ரஹணம்பண்ணவொண்ணாமையாலே விழுங்குவர்கள். இத்தால் - அவர்களுடைய துராசாரம்சொல்லிற்றாயிற்று. ... ... ... ... ... ... ... ... (எ)

மூ—சேயனணியன்சிறியன்பெரியனென்பதுஞ்சிலர்பேசக்கேட்டிரு
தேயென்னெஞ்சமென்பாயெனக்கொன்றுசொல்லாதே [ந்
வேய்கள்நின்றுவெண்முத்தமேசொரிவேங்கடமலைகோயில்மே
ஆயர்நாயகற்கின்றடிமைத்தொழில்பூண்டாயே. [விய

---

(க) மநுஸ்ம்ரு.

| பதம். | உரை. |
|---|---|
| சேயன்என்பதும் | (பரமபதநாதனை ஆஸ்ரயியுங்கள் என்றால்) தூரஸ்ததன் என்றுகுற்றஞ்சொல்லியும், (அர்ச்சாவதாரத்தைபஜியுங்கள் என்றால்) |
| அணியன்என்பதும் | ஆஸந்நன்என்றுஅநாதரித்தும், (கண்ணை நண்ணுங்களென்றுவிபவத்தைக் காட்டினால்) |
| சிறியன்என்பதும் | எளிமையைச்சொல்லிக்கைவாங்கியும், (வ்யூஹத்தையும்அந்தர்யாமியையும்பற்றச்சொன்னால்) |
| பெரியன்என்பதும் | எட்டான்என்றுபெருமையைச்சொல்லிக்கைவாங்கியும், (இப்படி) |

| பதம். | உரை. |
|---|---|
| சிலர் | சிலபுத்திஹீநர் |
| பேச | சொல்லுவதை |
| கேட்டிருந்தே | கேட்டிருக்கச்செய்தேயும் |
| என்னெஞ்சமென்பாய்! | |
| எனக்கு | உன்னைக்கரணமாகவுடையஎனக்கு |
| ஒன்றுசொல்லாதே | ஒருவார்த்தைசொல்லாமலே |
| வேய்கள்நின்று | மூங்கில்களினின்றும் |
| வெள் | வெளுத்த |
| முத்தம் | முத்துக்கள் |
| சொரி | சொரிகிற |
| வேங்கடமலை | திருமலையை |
| கோயில் | வாஸஸ்தாநமாக |
| மேவிய | பொருந்ியிருக்குமவனாய் |
| ஆயர் | இடையர்க்கு |
| நாயகற்கு | தலைவனானவனுக்கு |
| இன்றுஅடிமைத்தொழில்பூண்டாயே. | |

வ்யா—எட்டாம்பாட்டு. (சேயனித்யாதி) சிறியனென்பார் பெரியனென்பாராய்க்கொண்டு நாட்டார் ஸம்சயாத்மாவாய்க்கொண்டு அநர்த்தப்பட்டுப்போகாநின்றார். நீ அவர்களோடேகூடாதே †உன்னையுடையவனோடுங்கூடாதே அவன் திருவடிகளிலே அடிமையிலங்வயிப்பதே! (சேயன்) † தூரஸ்த்தனென்பர்கள் சிலர். (அணியன்) ஆஸந்நனென்பர்கள்சிலர். சிறியன் என்று அவனெளிமையைச் சொல்லிக்கைவாங்காநிற்பர்கள்சிலர். பெரியன் என்று - எட்டானென்று, அருமையைச் சொல்லிக்கைவாங்குவர்கள்சிலர். இப்படி தோற்றினார் தோற்றினபடிசொல்லுகிறவற்றைக் கேட்டுவைத்தேயும். என்னெஞ்சமென்பாய் அடிமைத்தொழில்பூண்டாயே! (எனக்கொன்றுசொல்லாதே) அவர்களோடுங்கூடாதே, உன்னையுடையேனுக்கு மொன்றும்சொல்லாதே. (வேயித்யாதி) வேய்களில்நின்றும் வெண்முத்தமேசொரிய, அவ்வொளி வழிகாட்ட வந்துபுகுந்தவித்தனையாயிற்று. (ஆயர்நாயகற்கு) (க) * தன்னே ராயிரம்பிள்ளைகளுக்குத் தலைவனானவனுக்கு. (உ) "இனவாயர்தலைவன்" என்னக்கடவதிறே. (அடிமை) வரையாதே ரக்ஷகனானவனுக்கு அடிமைசெய்கையிலே யொருப்பட்டாயே ... ... ... ... (அ)

(க) பெரி-திரு-ந-க-க. (உ) தி-வாய்-ரு-சு-

அரு—எட்டாம்பாட்டு (சேயனித்யாதி). கீழ்மூன்றுபாட்டாலே பாஹ்ய ருடைய படியைச்சொல்லிநின்றார்; அவ்வளவன்றிக்கே, ஈஶ்வர ஸத்பாவ மங்கீகரித்து குத்ருஷ்டிகளாய்க்கிடக்கு மவர்கள் படியைச்சொல்லிக்கொண்டு நெஞ்சைக்கொண்டாடுகிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது. குத்ருஷ்டிக ளென்று - துர்மதிகளைச்சொல்லுகிறது.

(உன்னையுடையவனோடும்) - காரணதயா உன்னையுடைய வென்னோடு மென்றபடி. "எனக்கொன்று சொல்லாதே" என்றாரிறே. இத்தால், (க) "பிரிதிசென்றடைநெஞ்சே" என்றும், (உ) "வதரிவணங்குதும்" என்றும், (ந) "சாளக்கிராம மடைநெஞ்சே" என்றும், பலகாலும் நான் சொன்னதுக்கொரு மறுமாற்றம் சொல்லாதே என்றதாயிற்று, பரமபதநாதனை ஆஶ்ரயிக்கச் சொன்னால், "சேயன்" என்று குற்றம் சொல்லுவர்கள்; அதுதீர அர்ச்சாவதா ரத்தை பஜியுங்கோளென்றால், "அணியன்" என்று ஆதரியார்கள்; கண் ணனை நண்ணுங்கோளென்று விபவத்தைக்காட்டினால், "சிறியன்" என்பர் கள்; வ்யூஹங்களையும் அந்தர்யாமியையும் பற்றச்சொன்னால், "பெரியன்" என் பர்கள்; எல்லாவற்றுக்கு மொருகுறைசொல்லிக்கொண்டிருக்கும்படியைக் கேட்டிருந்தும் இதிலே யொன்றாகிலு மெனக்கு ப்ரத்யுத்தரம் சொல்லாதே "அடிமை பூண்டாயே" என்று கொண்டாடுகிறார் என்று விவக்ஷித்துப்பதார்த் தங்கள் தன்னைக்காட்டுகிறார், (தூரஸ்த்தனித்யாதி). வேங்கடத்தில்நின்ற விபவத்திலீடுபட்டாயே நீ யென்று கருத்து. ... ... ... (அ)

மூ.—கூடியாடியுரைத்ததேயுரைத்தாயென்னெஞ்சமென்பாய்துணிந் [துகேள்
பாடியாடிப்பலரும்பணிந்தேத்திக்காண்கிலார்
ஆடுதாமரையோனுமீசனுமமரர்கோனும்நின்றேத்தும்வேங்கட
தாடுகூத்தனுக்கின்றடிமைத்தொழில்பூண்டாயே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | என்நெஞ்சமென்பாய்! | பணிந்து | வணங்கி |
| கூடி | நாட்டாரோடுசேர்ந்து | ஏத்தி | ஸ்தோத்ரம்பண்ணி |
| ஆடி | (அவர்கள்புஜித்ததை) புஜித்து | காண்கிலார் | (பின்னையும் அவன் வைபவத்தை, உள்ளபடிகண்டறியமாட்டார்கள்; |
| உரைத்ததே | அவர்கள்சொல்லும் வார்த்தைகளையே | ஆடு | பெருமைபொருந்திய (அலர்ந்த) |
| உரைத்தாய் | சொல்லிப்போந்தாய், | | |
| துணிந்துகேள் | (என்சொல்லை) அத்யவஸித்துக்கேள்; | தாமரையோனும் | திருநாபீகமலத்திற்பிறந்தப்ராஹ்மாவும் |
| பலரும் | அநேகரும் [கொண்டு | ஈசனும் | ருத்ரனும் |
| பாடிஆடி | பாடுவதுஆடுவதாய்க் | அமரர்கோனும் | இந்த்ரனும் |

(க) க-உ-க. (உ) க-ந-க. (ந) க-ரு-க.

| | |
|---|---|
| நின்று (தங்கள் தங்கள் அதிகாரத்துக்கு அநுகுணமாக) இருந்து | வேங்கடத்து திருமலையிலே நித்யவாஸம்பண்ணுமவனாய், |
| ஏத்தும் ஸ்தோத்ரம்பண்ணுநின்றுள்ளவனாய், | ஆடுகூத்தனுக்கு (ஆச்சர்யரோடே கூட) கூத்தாடுமவஸர வேஸ்வரனுக்கு, |
| | இன்றுஅடிமைத்தொழில்பூண்டாயே. |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (கூடியாடியித்யாதி). சப்தாதிவிஷயங்களிலே ப்ரவணராயிருப்பாரோடேகூடி, அவர்கள்புஜிக்கும் விஷயங்களிலே அவகாஹித்து, அவர்கள் விஷயங்களைபுஜித்துச் சொல்லும்வார்த்தைகளையே சொல்லிப்போந்தாய். (துணிந்துகேள்) இப்போதவற்றைவிட்டு இவ்விஷயத்தில் ப்ராவண்யத்தை யுடையையாயிருக்கிறவுனக்கு † இன்னுமொரு நல்வார்த்தைசொல்லுகிறேன், அத்தையத்யவஸித்துக்கேள். (பாடிஇத்யாதி) பாடுவதாடுவதாய்க்கொண்டு பலரு மாஶ்ரயித்துப் பின்னையுங்காணப்பெறுூர்கள். அதுக்குமேலே ப்ரஹ்மாதிகளுந் தந்தாமுடைய அதிகாரார்த்தமாக வந்தாஶ்ரயியாநிற்பர்கள். (காண்கிலா) என்றுமாம். † இப்படி ஆஶ்ரயித்தவர்களுங்கூடக் காணப்பெறாதபடியான வேற்றத்தையுடைய ப்ரஹ்மாதிகளும் வந்தாஶ்ரயியாநின்றுள்ளவென்னுதல். (ஆடுதாமரையோன்) “ஆடு” என்று - பெருமையாய், அலர்ந்த தாமரையென்னுதல்; அன்றிக்கே, ஆடுகை - நடையாடுகையாய், அதிலே வர்த்திக்கிறவென்னுதல்; அன்றிக்கே, ஆடுகை - உண்டாகையாய், திருநாபிகமலத்தை உத்பத்திஸ்த்தாநமாகவுடையவனென்னுதல்; அன்றிக்கே, ஆடு - வெற்றியாய், வெற்றியையுடையவென்றுமாம். (ஆடுகூத்தனுக்கு) கூத்தாடிவிட்டசுவடெல்லாம் தோற்றுமாயிற்றுவடிவிலே. (க) “மன்றமரக்கூத்தாடிமகிழ்ந்தாயென்றும் வடதிருவேங்கடம்மேயமைந்தா வென்றும்” என்று சொல்லுகிறபடியே. (அடிமைத்தொழில்பூண்டாயே) பலருமவனையாஶ்ரயித்துப் பின்னையுங் காணப்பெறுூர்கள்; ப்ரஹ்மாதிகள் அநந்தரம் தந்தாமதிகாரார்த்தமாக வாஶ்ரயியாநிற்பர்கள், நீ இவ்விரண்டுகோடியிலுமன்றிக்கே அவன்பக்கலிலே அடிமை † புக்காயே. ... ... (கூ)

அரு—ஒன்பதாம்பாட்டு (கூடியித்யாதி). குற்றங்களைச்சொல்லி ஆஶ்ரயியாதவர்களன்றிக்கே ஸாதநாந்தர நிஷ்டராயாஶ்ரயிப்பாரும் ப்ரயோஜநாந்தரபரராயாஶ்ரயிப்பாருமாகப் பலருண்டு; அவர்களில் வ்யாவ்ருத்தையானுயேயென்று உகக்கிறூரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

(க) தி - ௌ - கக.

(இன்னமுமொரு நல்வார்த்தை) என்றதுக்கு, (க) "துணிவினியுனக்குச் சொல்லுவன்" என்கிறபாட்டிலே அவனைத்தொழச்சொல்லினதுக் கிசைந்து அப்படியேசெய்தாய், தொழுமவர்களுக்குள்ளே இரண்டு கள்ளவழி யுண்டு, அவற்றில் போகாதே தொழுகையே ப்ரயோஜநமாகத்தொழவேணுமென்னும் வார்த்தையைக்கேளென்றுகருத்து. இப்பாட்டிலே, "அடிமைத் தொழில் பூண்டாயே" என்றதுக்கு ஸித்தவத்கரித்து ஸ்துதிபண்ணினமையால் இவ் வர்த்தத்தை நன்றாக புத்திபண்ணென்று உபதேசிக்கையிலே தாத்பர்ய மென்று கொள்ளவேணும். (காண்கிலா) என்றது - பாடாந்தரம். இப் போது, தாமரையோனுக்கும் ஈசனுக்கும் இந்த்ரனுக்கும் விசேஷணமென்று தாத்பர்ய மருளிச்செய்கிறார், (இப்படியித்யாதி). (புக்காயே) என்றவநந்தரம் இவ்வர்த்தத்தை நன்றாகக்கேள்என்று கூட்டுவது. ... ... (௯)

மூ. — மின்னுமாமுகில்மேவுதண் திருவேங்கடமலைகோயில்மேவிய
அன்னமாய் நிகழ்ந்த வமரர் பெருமானைக்
கன்னிமாமதிள்மங்கையர்கலிகன்றியின்றமிழாலுரைத்தவிம்
மன்னுபாடல்வல்லார்க்கிடமாகும்வானுலகே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மின்னும் | மின்னுநிற்கிற | மதிள் | மதிளையுடைத்தான |
| மாமுகில் | பெரியமேகங்கள் | மங்கையர் | திருமங்கையிலுள்ளாருடைய |
| மேவு | வந்துசேருகிற | கலி | பாபத்தை |
| தண் | குளிர்ந்த | கன்றி | போக்கினஆழ்வார் |
| திருவேங்கடமலை | திருமலையை | இன் | செவிக்கினிதான |
| கோயில் | கோயிலாகக்கொண்டு | தமிழால் | தமிழாலே |
| மேவிய | நித்யவாஸம்பண்ணுமவனாய் | உரைத்த | அருளிச்செய்ததாய் |
| அன்னமாய் | ஹம்ஸரூபியாய் | மன்னு | (எம்பெருமான்திருவுள்ளத்தில்) நிலைநிற்குமதான |
| நிகழ்ந்த | திருவவதரித்தவனாய் | இப்பாடல் | இத்திருமொழியை |
| அமரர் | நித்யஸூரிகளுக்கு | வல்லார்க்கு | அப்யஸிக்குமவர்களுக்கு |
| பெருமானை | நிர்வாஹகனானவன் விஷயமாக, | வானுலகு | பரமபதம் |
| கன்னி | கல்லாலேசெய்யப்பட்டதாய் | இடமாகும் | இருப்பிடமாகும்(கo) |
| மா | பெரிய | | |

வ்யா — (மின்னுமாமுகிலித்யாதி) † கழுத்தேகட்டளையாகநீரைப்பருகித், தன்வடிவி லிருட்சிக்குத்தானே விளக்குப்பிடித்துக்காட்டினாற்போலே மின்னோடே வருகிற மஹாமேகங்கள் வந்து சேருகிற

(க) க - ௪ - ௪.

ஶ்ரமஹரமான திருமலையை வாஸஸ்தாநமாகக்கொண்டு நித்யவா ஸம்பண்ணுகிற, ப்ரஹ்மாதிகள் வேதசக்ஷுஸ்ஸை மீட்டுக்கொடுக் கைக்காக அன்னமாய்வந்தவதரித்துப் பின்னையவர்களுக்கத்தை மீட் டுக்கொடுத்த அவ்வழியாலே அவர்களாஶ்ரயிக்கும்படி ஸுலபனு யிருக்கிற ஸர்வேஶ்வரனை. (கன்னியித்யாதி) † அரணாகப்போரும் படியாய் ஒருவராலழிக்கவொண்ணாதபடி பெரியமதிளையுடைத் தான திருமங்கையிலுள்ளார்க்கு ப்ரதாநரான ஆழ்வார் இன்தமி ழாலே அருளிச்செய்த இப்பத்தும் பாடவல்லார்க்கு; † பாவகர்ப்ப மான அர்த்தமாகையாலே வேதத்தோபாதி என்றுமொக்க நிற்கு மாயிற்று. † வேதப்ரபாவம்போலேயாயிற்று. (இடமாகும்வானுல கே) பூண்டவடிமை நித்யமாய்ச்செல்லும் தேசத்தை இருப்பிடமாக வுடையராவர். ... ... ... ... ... ... (கO)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



அரு.—பத்தாம்பாட்டு (மின்னு மாமுகிலித்யாதி). தன் வடிவிலிருட் சிக்குத்தானே கைவிளக்குப்பிடித்துக்கொண்டு திரியும் மேகங்களைப்போலே தன்னையறிகைக்கு ஸாதநமான வேதசக்ஷுஸ்ஸைக் கொடுத்தவனென்று ப்ரக்ருதோபயோகம் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டு வாக்யார்த்த மரு ளிச்செய்கிறார், (கழுத்தேயித்யாதி). கன்னி-கல்லாலே செய்யப்பட்டவென்று சப்தார்த்தமாய்த்தாத்பர்யமருளிச்செய்கிறார், (அரணித்யாதி). "மன்னு" என்று விசேஷித்ததுக்கு பாவம், (பாவகர்ப்பேத்யாதி). அதாவது - நெஞ்சும் தாமுமொத்துச்சொன்னதாகையாலே எம்பெருமான் திருவுள்ளத்தில் நிலை நின்றதென்றுகருத்து. (பாவகர்ப்பமான) சாடு. எம்பெருமான்பக்கலிலே பாவபந்தத்தோடே சொன்னதென்று ப்ரக்ருதார்த்தம். பா (பூ) வத்தை - நெஞ்சை, கர்ப்பமான - தன்னுள்ளேயுடைத்தானவென்று ரஸம். வேதந் தானும் பரமபுருஷஹ்ருதயாந்தர்வர்த்தியா யிருக்குமிறே. கீழ்வாக்யத்தால் பலித்தவர்த்தம், (வேதேத்யாதி). ... ... ... ... (கO)

ஜீயர் திருவடிகளே சரணம்.

இரண்டாம்பத்தில் முதல் திருமொழி முடிந்தது.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி - உ - பத்து - உ - திருமொழி - காசையாடை ப்ரவேசம்.

அவ — † ஆஶ்ரிதவிஷயத்தில், பிராட்டி திறத்திற்பண்ணுமோரத்தைப்பண்ணும் ஸ்வபாவனுமாய், † அவர்கள் காலாலே காட்டுமத்தைத்தலையாலே செய்வானுமாய், † அகடிதங்களை கடிப்பிக்க வல்லனுமாய், ப்ரஹ்மாதிகளுக்கு அவிஷயமாம்படி பெரியவனுமாய், ஸர்வபூதஸுஹ்ருத்துமாய், ஸர்வவிஸஜாதீயனுமான ஸர்வேஶ்வரன், தனக்கு ஆஶ்ரிதர் பக்கலுண்டான இனிமையாலே, அவர்கள் சரீர ஸம்பந்தமற்றுப் பரமபதத்திலே போனால் செய்யுமடிமையை (க) * இண்டையாயினகொண்டு தமக்கேத்தலாம்படியாகத் திருவெவ்வுளிலே வந்து சாய்ந்தருளினபடியை யநுஸந்தித்து † இனியராகிறார்.

அநு—காசை யாடை ப்ரவேசம்.—கீழ் நாலு திருமொழிகளாலே, திருவேங்கடமுடையானைத்தாமும் நெஞ்சுமாய் யதாமநோரத மநுபவித்துத்தேக்கிட்டு நிற்கிறவளவிலே, (உ) * நிலையாரநின்ற வழகுக்கு மேலே கிடையழகு கண்டநுபவிக்கவேணுமென்னு மாசைபிறந்து, ஸந்நிஹிதமான திருவெவ்வுளூரிலெம்பெருமானை யநுபவிக்கிறாரென்று ஸங்கதி கண்டு கொள்வது.

பாட்டுக்களில் ப்ரமேயத்தை ஸங்க்ரஹேணவருளிச்செய்கிறார்; (ஆஶ்ரிதேத்யாதி). (ந) "இன்னார்தூதனென நின்றான்" என்றத்தால் பலித்தது, (அவர்கள் காலாலே யித்யாதி). (ச) "பாலனாகி என்கிற பாட்டினர்த்தம், (அகடிதங்களையித்யாதி). (இனியராகிறார்) என்றது (ரு) "கிடந்தானே" என்கிற ஸ்வரஸஸூசிதார்த்தம்.

மூ.—காசையாடை மூடி யோடிக்காதல் செய்தா னவனூர்
நாசமாக நம்பவல்ல நம்பி நம்பெருமான்
வேயினன்ன தோள்மடவார் வெண்ணெ யுண்டானிவனென்
றேசநின்ற வெம்பெருமா னெவ்வுள் கிடந்தானே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| காசை ஆடை | காஷாயவஸ்த்ரத்தை யிட்டு | அவன் | அந்தராவணனுடைய |
| | | ஊர் | ஊரானது |
| மூடி | (உடம்பை) மறைத்து | நாசமாக | நசிக்கும்படிநினைத்து |
| ஓடி | (பர்ணசாலைக்கு) ஓடி வந்து | நம்பவல்ல | அப்படிசெய்துதலைக்கட்டவல்ல [ன |
| காதல்செய்தான் | (பிராட்டிபக்கல்) வ்யாமோஹத்தைப் பண்ணின | நம்பி | வீரஶ்ரீயால்பூர்ணனு |
| | | நம்பெருமான் | நம்முடையஸ்வாமியா |
| | | வேய் அன்ன | மூங்கிலை ஒத்த [ய் |

(க) க-க-ந. (ந) உ-உ-ந. (ரு) உ-உ-க.
(உ) (ச) உ-உ-ரு.

| | | | |
|---|---|---|---|
| தோள் மடவார் | தோள்களையும் மடப்பத்தையுமுடைய கோபி மார்களுடைய | ஏசநின்ற | (கோபி மார்கள்) ஹாஸ்யம்பண்ணும்படி எழுந்தருளியிருக்கிறவன் |
| வெண்ணெய் | நவநீதத்தை | எம்பெருமான் | என் ஸ்வாமி யானவன் |
| இவன் உண்டான் என்று | இவன் (திருடி)பக்ஷித்தானென்று | எவ்வுள் | திருவெவ்வுள்என்கிற திருப்பதியிலே |
| | | கிடந்தான் | கண் வளர்ந்தருளினான். |

வ்யா.—முதற்பாட்டு. (காசையித்யாதி) காஷாயவஸ்த்ரத்தை யிட்டு உடம்பெங்கும் மறையும்படி மூடி, ராமபயத்தாலே பதறி நடந்துபோய், ஜநகி என்று பாராதே†வீதராகவேஷத்தைத்தரித்து வைத்து ராகத்தைப்பண்ணின பையலுடைய ஊரானது ஸ்ம சாநஸத்ருசமாம்படியாகத் திருவுள்ளத்திலேகொண்டருளி அப்படி செய்து தலைக்கட்டுகைக்கீடான வீரஸ்ரீயால் பூர்ணனானவன். (நம் பெருமான்) அப்படி பிராட்டிதிறத்தில்பண்ணின†ஓரத்தை நம்பக்க லிலேபண்ணினவன். (வேயித்யாதி) † வேயோடொத்த தோள்களை யுடையராய் ஆத்ம குணோபேதைகளா யிருக்கிற கோபிகளுடைய ஸ்பர்சமுள்ளதொரு த்ரவ்யத்தாலல்லது செல்லாமையை யுடைய னாய், அவர்களுடைய வெண்ணெயைக்களவுகண்டு அமுதுசெய்து, அவர்கள் அத்தைச்சொல்லி ஏசும்படி நிற்கிற ஸர்வேஶ்வரன். (எவ் வுள்கிடந்தானே) அறிவுடையார் (க) "𑌰𑌾𑌮𑍋 𑌰𑌾𑌮𑍋 𑌰𑌾𑌮𑌃 - ராமோ ராமோ ராமஃ" என்னத், தன்பக்கல் நசையுடையவர்களிப்படியேச, இவை யிரண்டையும் கேட்டுத்திருவெவ்வுளிலே கண்வளர்ந்தானா யிற்று. .... ... ... ... ... ... (க)

---

அநு—முதற்பாட்டு (காசையித்யாதி) கீழ்த்திருமொழியிலே (உ) "துவரி யாடையர்" என்று - வேஷதாரிகள் ப்ரஸ்துதராகையாலே, அப்படிப்பட்ட வேஷதாரிகள் * தலையையறுப்பதே கருமங்கண்டாய் என்னுமர்த்தத்தை யநு ஷ்டாநபர்யந்த மாக்கின சக்ரவர்த்தித்திருமகன்படியை யநுஸந்திக்கிறாரெ ன்று அவதாரிகை கண்டு கொள்வது.

"செய்தானூர்" என்னாதே, "அவன்" என்றதுக்குத்தாத்பர்யம், (வீத ராகரித்யாதி). (ஓரத்தை) - பக்ஷபாதத்தை. "இன்" சாரியையாய், அதினர்த்தம், (வேயோடொத்த) என்றது. ... ... ... ... (க)

---

(க) ரா - யு - கஙக. (உ) உ - க - ச.

மூ.—தையலாள்மேல் காதல் செய்த தானவன் வாளரக்கன்
பொய்யிலாத பொன்முடிக ளொன்பதோ டொன்றுமன்று
செய்த வெம்போர் தன்னிலங்கோர் செஞ்சரத்தாலுருள
எய்தவெந்தை யெம்பெருமா னெவ்வுள் கிடந்தானே. (உ)

| பதம். | உரை. |
|---|---|
| தையலாள்மேல் | நிருபாதிகஸ்த்ரீத்வத்தையுடையளான பிராட்டிபக்கல் |
| காதல்செய்த | அபிநிவேசத்தைப்பண்ணினவனாய் |
| தானவன் | ஆஸுரப்ரக்ருதியாய் |
| வாள் | வாளை (த்தனக்குரக்ஷகமாக)உடையவனான |
| அரக்கன் | ராவணாஸுரனுடைய |
| பொய்யிலாத | வாஸ்தவாகாரமான |
| பொன்முடிகள் | ஸ்வர்ணகிரீடங்கள்தரித்ததலைகள் |
| ஒன்பதோடொன்றும் | பத்தும், |
| அன்று | பிராட்டியைராவணன்சிறைவைத்தஅக்காலத்தில் |
| செய்த | பண்ணின |
| வெம் | க்ரூரமான |
| போர்தன்னில் | செவ்வைப்பூசலிலே |
| ஓர் | ஒப்பற்றதாய் |
| செம் | (நெருப்பை யுமிழ்ந்து கொடுவருகையாலே) சிவந்த |
| சரத்தால் | கொலையம்பாலே |
| உருள | சிதறிவிழும்படியாக |
| எய்த | ப்ரயோகம்பண்ணினவனாய் |
| எந்தை | என்பிதாவாய் |
| எம்பெருமான் | எனக்கு ஸ்வாமியான |
| எவ்வுள் | திருஎவ்வுளிலே [வன் |
| கிடந்தான் | பள்ளி கொண்டருளினான். (உ) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (தையலித்யாதி). † திரியட்டும் ராமாவதாரம்அநுவர்த்தித்தபடி. பட்டரோபாதியும்போருமாயிற்று இவர்க்கு † அவ்வவதாரத்தில்பக்ஷபாதம். † சிறியாத்தான், பட்டர்ராமாவதாரத்திலே பக்ஷபதித்திருப்பரென்றருளிச்செய்யும் வார்த்தை கேட்கைக்காகப்“பெருமாளுக்குளெல்லாவேற்றமுமுண்டாகிலும்ஆஸ்ரிதார்த்தமாகக் கழுத்திலே ஓலைகட்டித்தூதுபோன இவ்வேற்றமில்லையே” என்ன, †“அவர்போகாமையல்ல, பிறப்பில்குற்றங்காணும்” என்றருளிச்செய்தார். இக்ஷ்வாகுவம்ஶ்யர்கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோக விடுவாரைக்கிடையாதே. † அவ்வவதாரத்திலே திருவடி அங்கேபோவது இங்கேவருவதாய்க்கொண்டு வார்த்தைசொல்வித் திரிந்த ஏற்றத்தைக்கண்டு “நாமுமிப்படி ஆஶ்ரிதர்க்காகத்தூது போகப்பெற்றிலோம்” என்று செவிசீபார்ந்தது; அதுக்காகவிறே பின்னை வந்தவதரித்துஆஶ்ரிதர்க்காகத்தூதுபோயிற்றது. † க்ஷத்ரியனென்று நிஶ்சயிக்கில் தூதுபோக விடுவாரில்லையென்று அத்தை மறைத்திறேவளர்ந்தது. † அபிஷித்த க்ஷத்ரியவம்சத்திற் பிறக்கில் தூதுபோகவிடுவாரைக் கிடையாதே.



(தையலித்யாதி) நிருபாதிகஸ்த்ரீத்வத்தையுடையவள் பக்க லிலே ஜநகி என்று பாராதே அப்ராப்தமான ஸங்கத்தைப்பண் ணினனாயிற்று. அதுக்கடி ஆஸுரப்ரக்ருதியாகையாலேயாயிற்று. (வாளரக்கன்) †தேவதைகொடுத்தவாளை விஶ்வஸித்திருந்தானாயிற்று பெருமாள் மிடுக்கைப்பார்க்கவறியாதே. (பொய்யிலாத) ஆஸுர ஸ்வபாவத்துக்குச் சேருமிடத்தில்பொய்யின்றிக்கேயிருக்கிற முடிக ளென்னுதல். †அன்றிக்கே,திக்விஜயம்பண்ணிவீராபிஷேகம்,விஜயா பிஷேகம் என்று சில உண்டிறே பண்ணுவன, அவற்றுக்குறுப் பான அத்புதங்களில் பொய்யின்றிக்கே யிருக்கையென்னுதல். (செய்தவெம்போர்தன்னில்) †ப்ரஹ்மாதிகளைப்போலேஇருந்த விட த்திலேயிருந்து† தபோபலத்தாலே ஸங்கல்பித்தல்,அந்தராவணனைப் போலே களவுபூசல் செய்தல்செய்கையன்றிக்கே நேரே பொருதபோ ரிலே, (ஓர்செஞ்சரத்தால்)(க)"दीप्तपावकसङ्काशैः-தீப்தபாவகஸங்கா சைஃ" என்கிறபடியே நெருப்பெரிந்து கொடுசெல்லுகிறபடியாதல், திண்ணியமார்பிலேபட்ட அம்பால் ரக்தஸ்பர்சத்தாலேவந்த சிவப் பைச்சொல்லுதல். வரபலத்தாலே பூண்கட்டின தலைகள் பனங் காய்போலே உருளும்படியாக எய்த. (எந்தை) எனக்கு ஜநகனான வன், எனக்குஸ்வாமியானவன். (எவ்வுள்கிடந்தானே) எழுப்பிக் கார்யங்கொள்வார் தாழ்வேயுள்ளது, அவன்வந்து சாய்ந்தான். (உ)

அரு.—இரண்டாம்பாட்டு (தையலாளித்யாதி), கீழ்ப்பாட்டிலும் ராம வ்ருத்தாந்தம் ப்ரஸ்துதமாய், இப்பாட்டிலும் அதுவேயானபடியைக் கண்டு வ்யாக்யாதாக்கள்படுகிறார், (திரியட்டுமித்யாதி). (திரியட்டும்) - புநஃ. அநுவர்த் திக்கைக்கடி யென்னென்ன, (அவ்வவதாரத்திலித்யாதி). (பட்டரோபாதி) என்கைக்கு - பட்டர் ராமபக்ஷபாதியாயிருப்பரோவென்ன, (சிறியாத்தானித் யாதி). இல்லையென்னக்கூடுமோ, பண்டு தூதநடவாமைக்கு ஹேதுவேறே யென்று பரிஹரித்தருளுகிறார், (அவரித்யாதி வாக்யத்வயத்தாலே). இவ்வாஶ் ரிதபாரதந்த்ர்ய முண்டென்கைக்கு நியாமகமென்னென்ன; அருளிச்செய்கி றார், (அவ்வவதாரத்திலேயித்யாதி). அவர் இக்ஷ்வாகுவம்ஶ்யரானால், க்ருஷ் ணன் யதுவம்ஶ்யனன்றோவென்ன; அருளிச்செய்கிறார், (க்ஷத்ரியனென்றித் யாதி). தூதுபோகவிட்டுச்செய்தே அறியார்களோவென்ன, (அபிஷிக்தக்ஷத் ரியேத்யாதி). ஆக இப்படி கக்ஷயாக்ரமத்திலேயாகிலும் சக்ரவர்த்தித் திரு மகனிடத்தில் ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தை ஸாதிக்கும் பட்டரைப்போலே இவ ரும் வீரவாசியறியுமவராகையாலே ராவணவதத்தை மாறி மாறி யநுஸிச்செ

(க) ரா - யு.

ய்வரென்ற தாயிற்று. (தேவதை) என்றது - ருத்ரனை. "பொய்யிலாத" என்றதுக்கு "தானவன்" என்றபதத்திலே நோக்காக ஒரு தாத்பர்யமருளிச்செய்து, "வாளரக்கன்" என்றதிலே நோக்காகத்தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார், (அன்றிக்கேயித்யாதி). "செய்தபோர்" என்றுவிசேஷிக்கைக்குச் செய்யாதபோருண்டோ, போரானபோதே வெவ்விதாயிராதோ, விசேஷிக்கவேணுமோ வென்ன, அருளிச்செய்கிறார், (ப்ரஹ்மாதிகளையித்யாதி). (தபோபலத்தாலே) - ஆலோசநா ஸாமர்த்யத்தாலே. ராவணவதார்த்திகளாயிறே போரை ஸங்கல்பித்தார்கள். களவுபூசலாகில் தன்மேல் அம்பு தையாதிறே ந்யாயயுத்தமேயிறேவெம்போரென்று திருவுள்ளம், ... ... (உ)

மூ.—முன்னோர்தூது வானரத்தின் வாயில் மொழிந்துஅரக்கன்
மன்னூர் தன்னைவாளியினால் மாளமுனிந்து அவனே
பின்னோர் தூதாதி மன்னர்க்காகிப் பெருநிலத்தார்
இன்னார்தூதனென நின்றானெவ்வுள் கிடந்தானே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முன் | ராமாவதாரத்திலே | அவனே | அந்தச்சக்ரவர்த்தித்திருமகன்றானே |
| ஓர் | அத்விதீயமான | பின் | க்ருஷ்ணாவதாரத்தில் |
| தூது | தூதவாக்யத்தை | ஆதிமன்னர்க்கு | ப்ரதாநராஜாக்களான பாண்டவர்க்கு |
| வாநரத்தின் | திருவடியினுடைய | ஓர் தூதாகி | ஓர் தூதனாய் |
| வாயில் | வாயாலே | பெருநிலத்தார் | பெரியபூமியிலுள்ளார் |
| மொழிந்து | சொல்லியனுப்பி | இன்னார் தூதன் என | இவன் பாண்டவதூதன் என்னும்படி |
| அரக்கன் | ராக்ஷஸனான ராவணன் | நின்றான் | (அர்ஜுநனுடைய தேர்முன்னே) நின்றவன் |
| மன்னு | பொருந்தி வர்த்திக்கிற | | எவ்வுள்கிடந்தான். (௩) |
| ஊர் தன்னை | லங்கையை | | |
| வாளியினால் | அம்பாலே | | |
| மாள | நசிக்கும்படியாக | | |
| முனிந்து | சீறியருளினவனாய், | | |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (முன்னித்யாதி) †"ஏசநின்ற" என்றது அநுவர்த்திக்கிறது. †உதிதாநுதிதஹோமநிந்தைபோலே யிருப்பதொன்றிறே இது. †புக்கபுக்க துறைதோறும் பகவத்விஷயத்திலே கால்தாழவல்லராயிற்று. (முன்) †த்வாபரத்தினுடைய ஆதியிலே, †பிராட்டியைப்பிரிந்த ஆற்றாமை மீதூர்ந்து கடலிலே புக்கு முடியுமளவானவாறே ஒரு குரங்கின்வாயிலே வார்த்தையைச்சொல்லிவிட்டான். (அரக்கன் மன்னூர்தன்னை) †அரக்கனுடைய வராதிகளாலே பூண்கட்டின ஊரை. (வாளியினால்) ப்ரஹ்மாஸ்த்ராதிகளுக்குக்கேளாத ஊரை மனிச்சுக்கு ஏகாந்தமான அம்பாலே அழியும்படி சீறினானாயிற்று. (அவனே இத்யாதி) கடலில்நீரே நெய்

யாகப்பற்றி எரியவல்ல அம்புடையனாயிருக்கச்செய்தே, ஓர் †இயற்றியில்லாதாரைப்போலே கழுத்திலே ஓலைகட்டித்தூது போனானாயிற்று. (ஆதிமன்னர்க்காகி) †துர்யோதநாதிகள் ராஜ்யம்பண்ணாநிற்கச்செய்தேயும் பாண்டவர்களை "ஆதிமன்னர்" என்கிறாராயிற்று, ராஜ்யப்ராப்தி இவர்களது, அவர்கள் § கிடந்தானை கண்டேறின வித்தனையென்று. †பள்ளிகளும் கள்ளரும் க்ஷேத்ர மாளாநிற்க ப்ராஹ்மணன் ப்ரமாணங்களைக் காட்டிவைக்குமாபோலே, அவர்கள் ஆதிமன்னரென்கிறாராயிற்று இவர் ஈஶ்வராபிப்ராயத்தாலே. சிறியார்பெரியாரென்று வாசியின்றிக்கே எல்லாருமொக்க (இன்னார்தூதனென நின்றான்). "பாண்டவதூதன்" என்றவத்தாலே தரித்துநின்றானாயிற்று. ஒருபிறப்பாதல் வ்ருத்தமாதல் இட்டுச்சொல்லவொண்ணாதாரைப்போலே தனக்கென்ன இட்டுச்சொல்லலாவதொன்றின்றிக்கே, "பாண்டவர்களுக்குத்தூதன்"என்றவத்தாலே தரித்து நின்றானாயிற்று. ஒரு ஜந்மவ்ருத்தாதிகளாலே நிரூபியாதே அதுவே நிரூபகமாயிற்று "இன்னான் சோற்றாலே தரித்தான்" "சுவர்மண்ணாலே நின்றது" என்னுமாபோலே. ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தை யிட்டுச்சொல்லுவாரைப்பெறில் உண்ணாதே தடிக்குமாயிற்று. (எவ்வுள்கிடந்தானை) இவ்விடம்நல்லநீர்வாய்ப்பாயிருந்தது - †பூமியிலே ஏவிக்கார்யங் கொள்வாரைப்பெற்றது, இனிஇவ்விடம்விட்டுப்போவோமல்லோமென்று சாய்ந்தானாயிற்று. ... ... ... ... ... (௩)

---

அரு—மூன்றாம்பாட்டு (முன்னோரித்யாதி). முதற்பாட்டோடு ஸங்கதி ப்ரதர்சநம்,(ஏ சவித்யாதி). §இப்படி ஏசும்விஷயத்தை இவராசைப்பட்டு ஆத

---

§நிந்திதமானது அநிந்திதமாகக்கூடுமோ வென்ன; (உதிதாநுதித) என்றது. உதிதாநுதிதஹோமநிந்தையாவது (க) - "ఉదితే జుహోతి - உதிதேஜுஹோதி" (க) "అనుదితే జుహోతి- அநுதிதேஜுஹோதி" என்று இரண்டையும் விதித்துவைத்து (உ) "ప్రాతరనృతం తే వదన్తి పురోదయాజ్జుహ్వతి యేఽగ్నిహోత్రమ్- ப்ராதரந்ருதந்தே வதந்தி புரோதயாஜ்ஜுஹ்வதி யேக்நிஹோத்ரம்" என்றது அநுதிதஹோமப்ரசம்ஸார்த்தமாகவென்றபடி. அதாவது - "ஏசநின்ற" என்றது - ஏச்சாகையன்றிக்கே குணமாமென்றபடி. இவ்விடத்தில் "உதிதாநுதிதத்ருஷ்டாந்தம் ப்ரசம்ஸாமாத்ரஸ்யத்ருஷ்டாந்தம்" என்றருளிச்செய்வர். இல்லையாகில் நிந்திதமான க்ருஷ்ணாவதார சேஷ்டிதத்துக்கே குணதிக்யத்துக்கு இது உதாஹரண மாகமாட்டாது. அப்போது ராமாவதார ப்ரசம்ஸையிலேயாமென்று கண்டுகொள்ளவேணும்.

---

§ கிடந்தானைகண்டேறுகை-படுத்துக்கொண்டிருக்கிற ஆனையைத்தானேயேறுகை. (க) யஜு-அஷ்-௩-அ-௬க. (உ) யஜு.

ரம்பண்ணுவானென்னென்ன, (உதிதேத்யாதி). உதிதாநுதித ஹோமவிதி ப்ர கரணத்தில், (க) "புரோதயாஜ்ஜுஹ்வதி யோக்நிஹோத்ரம் ப்ராதரந்ருதம் தேவதந்தி -"
"புரோதயாஜ்ஜுஹ்வதியோக்நிஹோத்ரம் ப்ராதரந்ருதம் தேவதந்தி" இத்யாதி நிந்தை ப்ரசம்ஸாதாத்பர்யகமானாற்போலே, கோபிமாருடைய நவநீத சௌர்யத்தில் எச்சுக்கும் ஸௌலப்யகுணப்ரசம்ஸையிலே தாத்பர்யமென்று திருவுள்ளம். கீழ்ப்பாட்டில் ராம பக்ஷபாதம் போய், க்ருஷ்ணபக்ஷபாதமெங்கே வந்ததென்ன; அருளிச்செய்கிறார், (புக்கவித்யாதி). (த்வாபரத்தினுடைய ஆதியிலே) என்றது - த்வாபரத்துக்கு ஆதி த்ரேதாயுகமென்று கொள்ளவேணும், இத்தால் - வ்யவஹிதபௌர்வாபர்யம் தோற்றிற்றாயிற்று. இங்ஙனன்றாகில் "முன்னோர்" என்றும், "பின்னோர்" என்றும் விசேஷிக்கவேண்டாவிறே. "ஓர்" என்றபதத்தாலே ஸூசிதமானதாத்பர்யம், (பிராட்டியையித்யாதி). ஓர் "தூது -" அத்விதீயமான தூதவாக்யத்தை, வானரத்தினுடைய வாயாலே, மொழிந்து - சொல்லியனுப்பியென்று சப்தார்த்தம். "மன்னூர்" ஸ்த்திரமானஊர் என்று ஹேது பூர்வகம் தாத்பர்யமருளிச்செய்கிறார், (அரக்கனுடையவித்யாதி). (இயற்றி) - பரிகரம், "ஆதி" ப்ரதாநரான, மன்னரென்று சப்தார்த்தம் விவக்ஷித்துத்தாத்பர்யம், (துர்யோதநாதிகளித்யாதி). ஸத்ருஷ்டாந்தம் விவரணம், (பள்ளிகளுமித்யாதி,). "இவ்விடம்" இத்யாதிக்கு விவரணம், (பூமியிலேயித்யாதி). ... ... ... (௩)

மூ.—பந்தணைந்த மெல்விரலாள் பாவைதன் காரணத்தால்
வெந்திறலேறேழும் வென்றவேந்தன் விரிபுகழ்சேர்
நந்தன் மைந்தனாகவாகும் நம்பி நம்பெருமான்
எந்தைதந்தை தம்பெருமா னெவ்வுள் கிடந்தானே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பந்து | கந்துகம் | புகழ்சேர் | புகழையுடைய |
| அணைந்த | பொருந்திய | நந்தன் மைந்தனாக | ஸ்ரீநந்தகோபர்திருமகனாக, |
| மெல் | ம்ருதுவான | ஆகும் | தன்னைஅமைத்துக் கொண்டவனாய், |
| விரலாள் | விரல்களையுடையளாய் | நம்பி | ஸமஸ்தகல்யாணகுணபரிபூர்ணனான |
| பாவைதன்காரணத்தால் | நிருபாதிகஸ்த்ரீத்வத்தையுடையளான நப்பின்னைப்பிராட்டியைப்பெறுகைக்காக | நம்பெருமான் | நம்ஸ்வாமியாய் |
| வெம் | க்ரூரமாய் | எந்தை தந்தை தம்பெருமான் | நான் என்தகப்பன் அவன் தகப்பன் முதலான நம்குலத்துக்கு நாதனானவன் |
| திறல் | மிடுக்கையுடைய | | எவ்வுள்கிடந்தானே. (௪) |
| ஏறுஏழும் | ருஷபங்கள்ஏழையும் | | |
| வென்ற | நிரஸித்த | | |
| வேந்தன் | அரசனாய், | | |
| விரி | ப்ரஸித்தமான | | |

(க) யஜு.

வ்யா.—நாலாம்பாட்டு. (பந்தித்யாதி) † திரியவும் க்ருஷ்ணாவதாரமே பின்னாட்டிற்று. † க்ருஷ்ணனுக்கு ஆகர்ஷகமாம்படி கையிலே பந்தைப்பிடித்து அதுதானும்பொருந்த மார்த்தவத்தையுடைய விரலையுடையளாய். நிருபாதிகஸ்த்ரீத்வத்தையுடைய நப்பின்னைப்பிராட்டியை லபிக்கைக்காக, (வெந்திறலித்யாதி) † கணக்காலே, அம்பாலே பூசல்செய்யலாம் ஜந்மமன்றே. அஜ்ஜாதிக்கடைத்த வெற்றியைக்கொண்டானாயிற்று. ருஷபங்களையடர்த்து அஜ்ஜாதிக்கு ராஜாவானவன். (விரிபுகழ்சேர்நந்தன்) † ஆரேனும்பிள்ளைபெறவேணுமென்று நோன்புநோற்க (க) "எடுத்தபேராளன்" என்று பல(ஃல)த்திலே அந்வயித்துநிற்கப் பெற்ற புகழையுடையனாயிற்று. (ஆகும்) ஒருபிதாவின்றிக்கே தான்தோன்றியான எளிமைத்ர ஶ்ரீநந்தகோபர் திருமகனானபின்பாயிற்று (உ) "ஸந்தமேநம் - ஸந்தமேநம்" என்னுமாபோலே உளனாயிற்று. (மைந்தனாகவாகும்) (ங) †[உந்தமடிகள்முனிவர்] † யசோதைப்பிராட்டி அவனை அச்சமுறுத்துகைக்காகச் சொல்லும் வார்த்தையாயிற்று; தான் தாயானவெளிமையாலே பொடியமாட்டாளே; அதுக்காக உங்கள் தமப்பனார் பொடிவர்கிடீர். [உன்னை] † செய்ததெல்லாம் பொறுக்கும்படியன்றே நீட்டிலே கைவளர்ந்து நிற்கிறது. [நானித்யாதி] கையில் கோலைக்காட்டி "இதிருக்கிறபடிகண்டாயே, † இது உன்பேர்" என்னும்; இத்தாலே உன்னை நோம்படி அடிக்கலாமிறே; அதுக்கெனக்குக் கையெழுகிறதில்லை. (நம்பி) ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய் ஶ்ரீவைகுண்டத்திலிருந்த விருப்பிலும் இங்கே வந்தவதரித்துத் தான்தாழநின்றபின்பாயிற்றுப் பூர்ணனாயிற்று. (நம்பெருமான்) நமக்குநாதன். † நம்குலநாதனானவன். (எவ்வுள்கிடந்தானே) ஸர்வவிதபந்துவானவனைக்காணலாவது பரமபதத்திலே என்று அவ்விடத்திற்போகப் பொதிசோறு கட்டவேண்டாதே பந்துக்ருத்யம்பண்ணலாம்படி திருவெவ்வுளிலே வந்து சாய்ந்தானாயிற்று. ... (ச)

அரு—நாலாம்பாட்டு (பந்தித்யாதி) (ச) "எத்திறம்" என்று ஆழங்கால் படுத்தும் விஷயமாகையாலே க்ருஷ்ணனிடத்தில் இளமணல் பாய்ந்து அநுபவிக்கிறாரென்கிறார், (திரியவுமித்யாதி). க்ருஷ்ணன் வந்தணையும்படி பந்தணைந்தாளென்று ப்ரக்ருதோபயோகம் காட்டா நின்றுகொண்டு தாத்பர்யமருளிச்செய்கிறார், (க்ருஷ்ணனுக்கித்யாதி). (கணக்காலே) என்றவநந்தரம்,

(க) திவ்யாய்- (உ) தைத்தி-ஆந- (ங) கO-ச-அ- (ச) தி-வாய்-க-ந-க-

கொள்ளப்போகாதேயென்று சேஷம், கணக்கு - மைத்துனமைமுறை. இத்தால்-நப்பின்னையைக் கைக்கொள்ளப்போகாது எறுகளைக் கந்யாசுல்கமாக வைக்கையாலே, கேவலக்ஷத்ரியஜந்மமாகில் பூசலிலேயென்று கைக்கொள்ளலாம், இரண்டு வழியும் கூடாதே எருதுகளைக் தழுவிக்கொன்றலாயிற்று அவளைத் தழுவிக்கொள்ளுவதென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம். (ஆரேனும்) என்றது-வஸுதேவதேவகிகளை. § எடுத்து வளர்த்த *அசோதை தன் சிங்கத்தை நந்தன் மைந்தனாகச் சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார், (உந்தமடிகளித்யாதி). எடுத்த பாசுரத்தை வ்யாக்யாநம் பண்ணுகிறார், (யசோதையித்யாதி). "உன்னை" என்ற பதப்ரயோகத்துக்குத் தாத்பர்யம், (செய்ததெல்லாமித்யாதி). (இது உன்பேர்) என்று - கோலினபேரைச் சொல்லும். அதாவது-க்ருஷ்ணனெங்கே? க்ருஷ்ணனெங்கெ? என்று உன்னைத் தேடித் திரியுமென்கை, இது, "என்கையில்" என்றவிசேஷணலப்தார்த்தம். "எந்தை தந்தை தம்பெருமான்" என்றதுக்கர்த்தம், (நம்குலேத்யாதி). (பொதிசோறு) பாக்குப்பானையிலே பொதிந்தசோறு, பாதேயமென்றபடி. ... (ச)

மூ.—பாலகுகி ஞாலமேழுமுண்டு பண்டாலிலைமேல்
சாலநாளும் பள்ளிகொள்ளுந் தாமரைக்கண்ணனெண்ணில்
நீலமார் வண்டுண்டுவாழும் நெய்தலந்தண்கழனி
ஏலநாறும் பைம்புறவி லெவ்வுள்கிடந்தானே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பாலகுகி | சிறுபிள்ளையாய் | நெய்தல் | ஆம்பலில் |
| ஞாலமவேழும் | ஏழுலோகங்களையும் | ஆர் | படிந்து |
| உண்டு | அமுதுசெய்து | உண்டு | (அவற்றிலுண்டான |
| பண்டு | ப்ரளயகாலத்திலே | | தேனைப்) பாநம்ப |
| ஆலிலைமேல் | ஓராலந்தளிரிலே | வாழும் | வாழுகிற [ண்ணி |
| சாலநாளும் | அநேககாலம் | அம் | அழகியதாய் |
| பள்ளிகொள்ளும் | கண்வளர்ந்தருளின | தண் | குளிர்ந்த |
| | | கழனி | கழனியையும் |
| எண் இல் | அப்ரமேயனாய் | ஏலம் | பரிமளம் |
| தாமரைக்கண்ணன் | புண்டரீகாக்ஷனான ஸர்வேஶ்வரன், | நாறும் | கமழாநின்ற |
| | | பை | பரந்த [டைய |
| நீலம் | நீலவர்ணங்களான | புறவில் | புறச்சோலையையுமு |
| வண்டு | வண்டுகளானவை | | எவ்வுள்கிடந்தான். (ரு) |

§ இதுக்கு நியாமகமேதென்ன; (உந்தமடிகள்) என்றது. அதாவது - அடிகள்முனிவர் என்னாதே "உந்தமடிகள்" என்றது - அவனிவரைத்தமப்பனாராகப்பெற்றவிது பெறுப்பேறாகநினைத்திருக்கையாலே என்றபடி. வஸுதேவனுக்குமகனாயிருக்க நந்தன்மைந்தனென்பானென்னென்ன, (உந்தமடிகள்) என்றது.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பாலனாகி) அத்யர்தம் † செம்பால் பாய்கிற பருவத்தையுடைய பாலனாய், அப்பருவத்திலே ஸகல லோகங்களையுமெடுத்து வயிற்றிலே வைத்து. (பண்டு) தனக்கொரு பரிவரில்லாத ப்ரளயகாலத்திலே,ஒருபவனான ஆலந்தளிரிலே.(சால) பிள்ளை அகாலத்திலே உறங்காநின்றான், என்செய்தானென்று எழுப்புகைக்கு ஒரு யசோதாதிகளுமில்லையே.(எண்ணில்) † அகடிதங்களை கடிப்பிக்கும்படி. †அது ஆராயப்புக்கால் † இருக்கும்படி. (நீலமித்யாதி) நெய்தற்பூவிலேபடிந்த வண்டுகளானவை மதுபாநம்பண்ணி வாழாநின்றுள்ள நெய்தல் நிலமென்னவுமாம். அன்றிக்கே, (நெய்தல்) என்று ஆம்பலாய்,†நீலப்பூவிலேபடிந்த வண்டுகள்†ஆம்பலிலே மதுபாநம்பண்ணா நின்றுள்ள என்னவுமாம். அன்றிக்கே,நீலநிறத்தையுடைய வண்டுகள் நெய்தற்பூவிலே மதுபாநம்பண்ணுகிற அழகிய குளிர்ந்த கழனியை உடைத்தாயிருக்குமென்னவுமாம். (ஏலமித்யாதி) பரிமளப்ரசுரமான பர்யந்தத்தை யுடைத்தான தேசத்திலே அரியது செய்யவல்லவனாயிற்றுக் கண்வளர்ந்தருளுகிறான்;எழுப்பிக் கார்யங்கொள்வார் குறையே. ... ... ... ... (ரு)

---

அரு—அஞ்சாம்பாட்டு (பாலனாகியித்யாதி). தந்தன்மைதன்னைப்போலே பெற்றாரும் வளர்த்தாருமின்றிக்கே முற்றாக்குழவியானவனை அடியோத்துகிறாரென்று ஸங்கதி கண்டு கொள்வது.

(செம்பால்) - தொட்டால் ரக்தம் பொசிகை. "எண்ணில்" - எண்ணமில்லாதவன். அதாவது - எண்ணமுடியாதவனென்று சப்தார்த்தமாய், பலிதார்த்தம், (அகடிதேத்யாதி). விவரணம், (அதித்யாதி.) - (இருக்கும்படி) என்றவநந்தரம், எண்ணமுடியாது என்று சேஷம். கொண்டது பிள்ளைத்தனம், உண்டது - உலகேழும், உறங்குவது ஆலிலைமேல், எங்ஙனே எண்ணும்படிஎன்று இவ்வாக்யத்துக்குத்தாத்பர்யம், (நீலப்பூ) என்று - கருநெய்தல்; (ஆம்பல்) வெளுத்தது. ... ... ... ... (ரு)

மூ.—சோத்தநம்பி யென்றுதொண்டர்மிண்டித் தொடர்ந்தழைக்கும்
ஆத்தநம்பி செங்கணம்பி யாகிலும் தேவர்க்கெல்லாம்
மூத்தநம்பி முக்கணம்பியென்று முனிவர்தொழு
தேத்தும் நம்பி யெம்பெருமா னெவ்வுள் கிடந்தானே. (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தொண்டர் | அநந்யப்ரயோஜநரான ஸ்ரீவைஷ்ணவர் | தேவர்க்கெல்லாம் | தேவர்களுக்கெல்லாம் |
| மிண்டி | நெருங்கி | மூத்தநம்பி | முன்னேபிறந்தப்ரஹ்மாவுக்கும் |
| நம்பி | ஸமஸ்தகல்யாணகுணபரிபூர்ணனே! [கள் | முக்கண்நம்பி | மூன்றுகண்களையுடைய ருத்ரனுக்கும் அந்தர்யாமியாய்நின்றவனேஎன்று |
| சோத்தம்என்று | உன்னைஸேவிக்கிறோம்என்றுசொல்லி | முனிவர் | ஸநகாதிமுனிவர்கள் |
| தொடர்ந்து | இடைவிடாமல் | தொழுது | ஆஸ்ரயித்து |
| அழைக்கும் | ஸ்தோத்ரம்பண்ணுகிற [ஞனவன், | எத்தும் | ஸ்தோத்ரம்பண்ணும் |
| ஆத்தன்நம்பி | பரமஆப்தனுய் பூர்ண | நம்பி | பூர்ணனுன [படி |
| செங்கண்நம்பி | சிவந்தகண்ணழகால் பூர்ணனுயிராநின்றுன்; | எம்பெருமான் | என்ஸ்வாமி |
| ஆகிலும் | இப்படியிருந்தானேயாகிலும் | எவ்வுள்கிடந்தானே. | (ஙு) |

வ்யா.—ஆறும்பாட்டு. (சோத்தம்) அவன் நெஞ்சிரங்கும்படி சரணவரணம் பண்ணுமாபோலே தாழ்ந்தார் சொல்லுவதொரு பாசுரம். ஸமஸ்தகல்யாணகுணுத்மகனே! சோத்தம்என்றுகொண்டு வைஷ்ணவர்கள் † ஒருவர்க்கொருவர் முற்பட்டு மேல் விழுந்து மாறுதேஅழைக்கும் ஆப்தன். (நம்பி) பரமாப்தியால்குறைவறநிற்குமவன். இப்படி யிருக்கிறவன்தானுரென்னில்; (செங்கணமபி) (க) †"யஜ்ஞோ யஜ்ஞபுருஷ: புண்டரீகாக்ஷஸம்ஜ்ஞித:-யஜ்ஞோயஜ்ஞபுருஷ:புண்டரீகாக்ஷஸம்ஜ்ஞித:" என்று புண்டரீகாக்ஷனுக ப்ரமாணஸித்தனுனவன். (ஆகிலும்) இப்படியிருந்தானேயாகிலும். (தேவரித்யாதி) தேவதைகளுக்கெல்லாம் முன்னே பிறந்தானுயிருக்கிற சதுர்முகனுக்கும் லலாடநேத்ரனுனருத்ரனுக்கும் அந்தர்யாமியாய் ஸ்ருஷ்ட்யாதிகள் நடத்துகிறவனென்றுகொண்டு ஸநகாதிகளேத்தும்படியிருக்கிற பூர்ணனுனஎன்நாதன். † ஆக இப்படி அஸாதாரண திவ்ய விக்ரஹயுக்தனுய் இதரவிஸஜாதீயனு யிருக்கச்செய்தேயும் ப்ரஹ்மாவுக்கந்தராத்மாவாய் நின்று ஸ்ருஷ்ட்யாதிகளை நடத்துகிறுனென்று ஸநகாதிகளேத்தும்படியாயிருக்கிறவன் இங்கே சாய்ந்தானென்றபடி. ... ... ... ... ... (ஙு)

அரு— ஆறும்பாட்டு (சோத்தநம்பியித்யாதி). பரிவரில்லாத பாலனென்று நீர் பரியவேண்டியிருந்ததோ? என்னுடைய ஸர்வாத்மகத்வத்தை மறந்

(க)

திரோவென்ன; அவற்றை மேல் மூன்றுபாட்டாலே அநுஸந்தித்துக்கொண்டு ஸ்துதிக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

"மிண்டி" என்றதினர்த்தம், (ஒருவர்க்கொருவர் முற்பட்டு) என்றது. "ஶ்ரூயதாம் நரவ்யாக்ர வேதவேதாந்தநிஶ்சய:-ஶ்ரூயதாந்நரவ்யாக்ர வேதவேதாந்தநிஶ்சய:" எடுத்த ப்ரமாணத்துக்கு உத்தரார்த்தம். பாட்டுக்கெல்லாம் தொகுத்தபாவம், (ஆகவித்யாதி). ... ... ... (௬)

மூ.—திங்களப்பு வானெரிகாலாகித் திசைமுகனார்
தங்களப்பன் சாமியப்பன் பாகத்திருந்த வண்டுண்
தொங்கலப்பு நீண்முடியான் சூழ்கழல் சூடநின்ற
எங்களப்ப னெம்பெருமா னெவ்வுள்கிடந்தானே. (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திங்கள் | சந்த்ரனையும் | அப்பு | கங்காஜலத்தையும் |
| அப்பு | ஜலம் | நீள் | நீண்ட |
| வான் | ஆகாசம் | முடி | ஜடையிலேயுடையனாய் |
| எரி | அக்நி [ங்களையும் | பாகத்து | திருமேனியினொரு பார்ஶ்வத்திலே |
| கால் | காற்றுஆகிய நாலுபூத | இருந்தான் | இருக்குமவனான ருத்ரனானவன், [ன |
| ஆகி | சரீரமாகக் கொண்டு (தான் சரீரியாய்), | சூழ் | பூமியெங்கும்பரம்பி |
| திசைமுகனார்தங்கள் | நான்கு முகங்களையுடைய ப்ரஹ்மாவுக்கு | கழல் | திருவடிகளை |
| அப்பன் | ஜநகனாய், [னாய் | சூட | (தன் தலையிலே) சூடும்படி |
| சாமி | ஸாமவேதப்ரதிபாத்ய | நின்ற | நின்றவனாய், |
| அப்பன் | காரணபூதனாய், | எங்கள் அப்பன் | எங்கள் ஜநகனாய், |
| வண்டு | வண்டுகள் | எம்பெருமான் | எங்கள் ஸ்வாமியுமானவன் |
| உண் | மதுபானம் பண்ணிநின்றுள்ள [யும் | | |
| தொங்கல் | கொன்றை மாலையை | | எவ்வுள்கிடந்தானே. |

வ்யா.—ஏழாம்பாட்டு.—(திங்களித்யாதி) கார்யவர்க்கத்துக்கு உபலக்ஷணமாக சந்த்ரனையும், காரணமான பூதபஞ்சகத்துக்குமுபலக்ஷணமாக நாலையுஞ்சொல்லி இவற்றுக்கு அந்தராத்மாவாயிருக்கிறவென்றபடி. சதுர்முகனுக்கும் ஜநகனானவன். (சாமியப்பன்) †ஸாமவேதப்ரதிபாத்யனான காரணபூதன். (பாகத்தித்யாதி) வண்டுகள் மதுபானம் பண்ணாநின்றுள்ள † கொன்றைமாலையையும் கங்காஜலத்தையும் ஜடையிலேயுடையனாய் திருமேனியில் ஏகதேசத்திலே யிருக்கிற ருத்ரன், விஸ்த்ருதமான திருவடிகளைத்தலையாலே சுமக்கும்படிநிற்கிறவன். (எங்களித்யாதி) எங்களுக்கு ஜநகனுமாய் ஸ்வாமியுமானவன். ... ... ... ... ... ... (௭)

அரு—ஏழாம்பாட்டு (திங்களித்யாதி).ஸாமத்தையுடையவன் ஸாமியென்றாய், பலிதார்த்தம், (ஸாமவேதேத்யாதி). "தொங்கல்" என்றதினர்த்தம், (கொன்றைமாலையையும்) என்றது. ... ... ... ... ... (எ)

மூ.—முனிவன் மூர்த்தி மூவராகி வேதம் விரித்துரைத்த
புனிதன் பூவைவண்ணனண்ணல் புண்ணியன் விண்ணவர்கோன்
தனியன்சேயன் தானொருவனாகிலும் தன்னடியார்க்கு
இனியனெந்தை யெம்பெருமா னெவ்வுள்கிடந்தானே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முனிவன் | ஸ்ருஷ்டிக்க ஸங்கல்பித்தவனாய், | விண்ணவர் | நித்யஸூரிகளுக்கு |
| மூர்த்திமூவராகி | ப்ரஹ்மவிஷ்ணுருத்ரர்களாகிய மூவராக இருக்குமவனாய் | கோன் | தலைவனாய் |
| வேதம் | வேதார்த்தத்தை | தனியன் | ஒப்பற்றவனாய் |
| விரித்து | எல்லாருமறியும்படி | சேயன் | யோகிகளாலும மறிய வொண்ணாதவனாய் |
| உரைத்த | ஸ்ரீகீதையிலே யருளிச்செய்தவனாய் | தான் ஒருவனாகிலும் | (இப்படி) தான் அத்விதீயனாயிருந்தானேயாகிலும் |
| புனிதன் | சுத்தியையுடையனாய் | தன் அடியார்க்கு | தன்னை ஆஶ்ரயித்தவர்களுக்கு |
| பூவை | காயாம்பூப்போன்ற | இனியன் | நல்லவனாய் |
| வண்ணன் | திருநிறத்தை யுடைய | எந்தை | எனக்கு ஜநகனாய் [ன் |
| அண்ணல் | ஸ்வாமியாய் [னாய் | எம்பெருமான் | என் ஸ்வாமியுமானவ |
| புண்ணியன் | பரமதார்மிகனாய் | எவ்வுள்கிடந்தானே. | (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு (முனிவன்) இதடையக் கரணகளேபரங்களை யிழந்து போகமோக்ஷஶூந்யமாய் கார்யாகாரமழிந்து கிடந்தவன்று (க) "஬ஹு ஸ்யாம்-பஹுஸ்யாம்" என்று மநநம் பண்ணினவன், பின்பு ப்ரஹ்மாதிகளுக்கந்தராத்மாவாயும் ஸ்வேநரூபேணவும் நின்று ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுகிறவன். வேதார்த்தத்தை வ்யக்தமாம்படிவெளியிட்டுச்சொன்னவன். அதாவது-வேதோபப்ருംஹணமான ஶ்ரீகீதையை அருளிச்செய்தபடி. (புனிதன்)(உ) "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்-ஸுஹ்ருதம்ஸர்வபூதாநாம்" என்கிறபடியேஸ்வப்ரயோஜநநிரபேக்ஷமாகப்பரஹிதமே சொல்லுகையால்வந்த சுத்தியைச் சொல்லுகிறது. (பூவைவண்ணன்) உபதேசித்தஹிதங்கிடக்க அஹிதத்தைச்சொல்லிலும் விடவொண்ணாத வடிவை யுடையவன். (அண்ணல்) ஸ்வாமி (புண்ணியன்) பரமதார்மிகன். (விண்ணவர்கோன்) *அயர்வறுமமரர்களதிபதி. (தனியன்) அவர்களில் வ்யாவ்ருத்தனானவன். (சேயன்) அவர்களில் நெடுவாசியையுடையவன். இப்படிதான்அத்விதீயனாயிருந்தானேயாகிலும் தன்னை ஆஶ்ரயித்தவர்களுக்கு இனியவன். எனக்கு ஜநகனுமாய் ஸ்வாமியுமானவன். (அ)

---

(க) சாந்தோ. (உ) கீதை.

அ௩—எட்டாம்பாட்டு (முனிவனித்யாதி). (இது)-இந்த சேதநவஸ்து. "மூவராகி" என்றது-ல்யபந்தமன்று, மூவரானவரென்றபடி. நெய்யுண்ணி யென்றாற்போலே என்றருளிச் செய்கிறார், (பின்பித்யாதி). "விண்ணவர் கோன்" என்றதுக்கர்த்தம், (அயர்வித்யாதி) ... ... ... (அ)

மூ.—பந்திருக்கும் மெல்விரலாள் பாவை பனி மலராள்
வந்திருக்கும் மார்வன் நீலமேனி மணிவண்ணன்
அந்தரத்தில் வாழும் வானோர் நாயகனாயமைந்த
இந்திரற்கும் தம்பெருமானெவ்வுள்கிடந்தானே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பந்து | பந்தானது | மார்வன் | திருமார்வையுடையனாய் |
| இருக்கும் | தங்கிய | நீலம் | கருங்குவளை போன்ற |
| மெல் | ம்ருதுவான | மேனி | வடிவழகையுடையனாய் |
| விரலாள் | விரல்களை யுடையளாய் | மணி | மணிபோலே |
| பனி | குளிர்ந்த | வண்ணன் | ஸௌலப்யஸ்வபாவத்தையுடையனாய் |
| மலராள் | தாமரைப்பூவைப் பிறந்தகமாகவுடையளாய் | அந்தரத்தில் | ஸ்வர்க்கத்தில் |
| பாவை | நாண்மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் ஸ்த்ரீத்வகுணங்கள்நிறைந்த பெரியபிராட்டியார் | வாழும் | வாழுகிற |
| | | வானோர் | தேவர்களுக்கு |
| | | நாயகனாய் | நிர்வாஹகனாக |
| | | அமைந்த | சமைந்த |
| வந்து | அப்பூவில்நின்றும்வந்து | இந்திரற்கும் | இந்த்ரனுக்கும்கூட |
| இருக்கும் | நித்யவாஸம்பண்ணுகிற | பெருமான் | ஸ்வாமியானவன் |
| | | | எவ்வுள்கிடந்தானே. (கூ) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு.†(பந்திருக்கும்)†ஒருநாளும் பிரிவால் வரும்வ்யஸநமின்றிக்கே நித்யஸம்ஶ்லேஷத்தாலே கையும்பந்துமாய், அதுதான்பொறுமைசிவந்த ஸுகுமாரமானவிரலையுடையவள், நிருபாதிகஸ்த்ரீத்வத்தை யுடையவள், குளிர்ந்ததாமரைப்பூவைப் பிறந்தகமாகவுடையவள். (வந்திருக்கும்) அப்பூ நெரிஞ்சி முள்ளாய் அடிக்கொதித்து வந்து (க) "அகலகில்லேன்" என்றிருக்கும்படி மார்வு படைத்தவன். நீலமானநிறத்தையுடையமணிபோன்றவடிவையுடையவன். (அந்தரத்திலித்யாதி) இதுஸர்வேஶ்வரனுக்கு விசேஷணமாதல்; அன்றிக்கே, தேவர்களுக்கு நாதனாய்ச்சமைந்த இந்த்ரனுக்கென்னவுமாம். † அவனுங்கூடத்தன்னைப்பற்றித் தன்னை ஶ்வர்யத்தை நடத்தும்படியிருக்கிறவன். ... ... (கூ)

(க) தி - வாய் - சு - ௧௦ - ௧௦.

அந—ஒன்பதாம்பாட்டு (பந்தித்யாதி). இப்படி ஸர்வாத்மதயாவந்த ஸர்வாதிகத்வத்துக்கு நிரூபகையான லக்ஷ்மீபதித்வத்தை அநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

லீலாபரதையும், ஸௌகுமார்யமும், கர்மக்ருதஸ்த்ரீத்வமன்றிக்கே யிருகையும் பிறந்தகத்திலே சீர்மையுமுடையவள் "வந்திருக்கும் மார்வுடையன்" என்று சொல்லுகையால் ஸர்வாதிகத்வம் ஸூசிதமென்று திருவுள்ளம்பற்றி வாக்யதாத்பர்யார்த்தங்களை யருளிச்செய்கிறுர், (ஒருநாளுமித்யாதிகளாலே). §(அவனுங்கூட) என்றது-(க)"ஸப்ரஹ்மாஸசிவஸ்ஸேந்த்ர:" என்று கூடவெடுக்க முட்டுப்பொறுத்தவனுங்கூட வென்றபடி.(க)

௰.—இண்டை கொண்டு தொண்டரேத்த வெவ்வுள் கிடந்தானை
வண்டுபாடும் பைம்புறவில் மங்கையர்கோன் கலியன்
கொண்டசீரால் தண்டமிழ் செய் மாலை யீரைந்தும்வல்லார்
அண்டமாள்வதாணை யன்றே லாள்வ ரமருலகே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

—oo✽oo—

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இண்டை | பூமாலைகளை [பித்து | கொண்ட | நெஞ்சிலேகொண்ட |
| கொண்டு | திருவடிகளில் ஸமர்ப் | சீர் | (அவன்) கல்யாணகுணங்களை |
| தொண்டர் | ஸ்ரீவைஷ்ணவர்கள் | தண் | ஈரமான |
| ஏத்த | ஸ்தோத்ரம்பண்ணும்படி | தமிழால் | தமிழ்பாஷையாலே |
| வெவ்வுள் | திருவெவ்வுளிலே | செய் | அருளிச்செய்ததாய் |
| கிடந்தானை | கண்வளர்ந்தருளினவன்விஷயமாக, | மாலை | மாலாரூபமான [யும் |
| வண்டு | வண்டுகள் | ஈரைந்தும் | இப்பத்துப்பாட்டை |
| பாடும் | பாடுகிற | வல்லார் | கற்கவல்லவர்கள் |
| பை | பரந்த | அண்டம் | ப்ரஹ்மாண்டத்தை |
| புறவில் | பர்யந்தத்தையுடைய | ஆள்வது | ஆளுமது |
| மங்கையர்கோன் | திருமங்கையிலுள்ளார்க்கு ராஜாவான | ஆணை | நிஸ்சிதம்; |
| கலியன் | ஆழ்வார், | அன்றேல் | அதுவேண்டாமாகில் |
| | | அமருலகு | பரமபதத்தை |
| | | ஆள்வர் | ஆளப்பெறுவர். (கo) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (இண்டையித்யாதி) பூமாலைகளைப் † பணிமாறி ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இங்கே அடிமை செய்து வாழ

§ ஸர்வேஸ்வரனுக்கு விசேஷணமான பக்ஷத்தில் (அந்தரத்தில்வாழும் வானோர் நாயகனாய்) அதாவது - நித்யஸூரிகளுக்கு நாயகனாய், சமைமைவயுடையனான இந்திரற்கும் தம்பெருமானென்றர்த்தம். (க)

லாம்படி திருவெவ்வுளிலே கிடந்தவனைக் கவிபாடிற்று. முக்தர் ஸாமகாநம்பண்ணுமாபோலே மதுபாநமத்தமாய் வண்டுகள் பாடாநின்றுள்ள †பரந்தபர்யந்தத்தையுடைத்தான திருமங்கைக்கு ராஜாவானஆழ்வார். (கொண்டசீரால்)“ சீர்”என்று-கவிக்கு அலங்காரமாயிருப்பதொன்றுண்டு; அத்தைச்சொல்லிற்றாகவுமாம். †அன்றிக்கே, இங்கேவந்துசாய்ந்தபடியாலே பகவத்குணங்கள்நெஞ்சிலே ஊற்றிருந்து சொல்லியல்லது நிற்கவொண்ணாதபடி அவை ப்ரேரிக்கப்பாடினமாலே என்னவுமாம். இதுகற்றார் † அண்டத்தையாளுகை நிஸ்ஸிதம். (அன்றேல்) “அவனைப்பற்றியுமித்தைப் பெறுமத்தனையோ” என்று விரக்தரானார்களாகில், அவர்களாளுமது பரமபதம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.



அரு—பத்தாம்பாட்டு (இண்டைகொண்டித்யாதி). (பணிமாறி)-ஸமர்ப்பித்து. “பைம்புறவில்” என்றதினர்த்தம், (பர்யந்தத்தையுடைத்தான) என்றது. நெஞ்சிலேகொண்டசீரால் என்றர்த்தாந்தரம், (அன்றிக்கேயித்யாதி). (அண்டத்தை) ப்ரஹ்மாண்டத்தை, ஐஸ்வர்யத்தை யென்றபடி. ... (க0)

ஜீயர்திருவடிகளேசரணம்.

இரண்டாம்பத்தில் இரண்டாந்திருமொழி முடிந்தது.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி - உ-ம் பத்து, ௩-ம் திருமொழி விற்பெரு விழவும் ப்ரவேசம்.

வ்யா.—†ஆஶ்ரித விரோதி நிரஸந ஶீலனாய், ஆஶ்ரித ஸம்ஶ்லேஷைக ஸ்வபாவனாய், ஆஶ்ரிதஸுலபனாய், இதர விஸஜாதீயனாயிருக்கிற †ஸர்வேஶ்வரன், † இக்குணங்கள் தான் தர்மியநுவர்த்திக்கிறவோபாதி எங்கு மநுவர்த்திக்கு மவையிறே. †இப்படியிருக்கிறவன், மநுஷ்யராயிருப்பார் புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டாஶ்ரயிக்கலாம்படி வந்து கிடக்குமாத்ர மன்றிக்கே, ஒருதிர்யக்கு இப்பூவிற் செவ்வியழியாதபடி திருவடிகளிலே பணிமாறவேணு மென்றிடர்பட அவ்விடரைத் தீர்க்கைக்காக அதிடர்பட்ட மடுவின்கரையிலே அரைகுலையத் தலைகுலையவந்து விழுந்து அத்தையாற்றி இன்னமுமிப்படி இடர்படுவாருண்டோ! என்று சாய்ந்தருளினான், கண்டேனென்கிறார். ... ... ... ... .... *

---

அந—விற்பெருவிழவின் ப்ரவேசம்— கீழ்த்திருமொழியில் இவரை வஶீகரித்த ராமக்ருஷ்ணாவதாரங்களும், திருவெவ்வுள் கிடையழகுதானும், சிங்கவேழ்குன்றத்தில் பரிபூர்ணமாக அநுபவித்த அழகிய சிங்கரும், திருவேங்கடத்தில், (க) * திண்கைமாதுயர் தீர்த்தபடியுமாக, இவையைந்தையும், (உ) * தேனும் பாலும் நெய்யும் கன்னலு மமுது மொரு கலத்திலே சேர்ந்தால் பருகுமாபோலே இவர்க்குக் கண்ணாலே பருகலாம்படி திருவல்லிக்கேணியில் ஐவகைப்பட்டிருக்கிற இருப்பை எவ்வுள் கிடந்தவன் ஸர்வஸ்வதாநம் பண்ணக் கண்டு அநுபவிக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது. இந்த ஸங்கதி தன்னை ஸூசிப்பிக்கிறார், (ஆஶ்ரிதேத்யாதி) (ஸர்வேஶ்வரன்) என்றவநந்தரம், இக்குணங்களோடே கூடத் திருவல்லிக்கேணியிலிருப்புக்களைக் காட்டிக்கொடுத்தான் என்று பூரிப்பது, இந்த குணங்களைக் கீழ்த்திருமொழியிலநுபவித்தாரே, இங்குமநுபவிக்கவேணுமோ வென்ன : அருளிச்செய்கிறார், (இக்குணங்கள்தானித்யாதி). (௩) "இண்டைகொண்டு" என்கிற பாட்டையும், மேல் (ச) "மீனமர் பொய்கை" என்கிற பாட்டையும் கடாக்ஷித்து ஸங்கத்யந்தர மருளிச்செய்கிறார், (இப்படியித்யாதி). அதாவது - ஐந்து திருப்பதியையும் ப்ராதாந்யேந அநுபவித்தாரென்று கீழ்ஸங்கதியாய், இப்போது திருவெவ்வுளில் கிடையழகையே யநுபவித்தாராகையாலே திருவல்லிக்கேணி

---

(க) க-அ-ு. (உ) தி-வாய்-உ-௩-க. (௩) உ-உ-கo. (ச) உ-௩-௯.

யிலே சாய்ந்தருளின, (க) * என்னையாளுடையப்பனை யநுபவிக்கையை ப்ரதாநப்ரமேயமாக்கி, அதுக்கு உத்தரோத்தரம் குணாதிக்யம் தோற்றும்படி மற்றைத் திருப்பதிகளையு மநுபவித்துக்கொண்டு, (உ) * இன்னடைகொண்டு தொண்டரேத்தினமையையும் காட்ட (௩) * ஆனையின் துயரம் தீர்த்தபடியை யநுபவிக்கிறாரென்றருளிச் செய்கிறாரென்கை.

மூ.—விற்பெருவிழவும் கஞ்சனும்மல்லும் வேழமும்பாகனும் வீழச்
செற்றவன்றன்னைப்புரமெரிசெய்த சிவனுறுதுயர்களைதேவைப்
பற்றலர்வீயக் கோல்கையிற்கொண்டுபார்த்தன்றன்தேர்முன்நின்றானைச்
சிற்றவைபணியால்முடிதுறந்தானைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வில்பெருவிழவும் | தநுர்யாகமஹோத்ஸவமும் | கோல் | முட்கோலை |
| கஞ்சனும் | கம்ஸனும் | கையில் | கையிலே |
| மல்லும் | சாணூரமுஷ்டிகராகிற மல்லவர்க்கமும் | கொண்டு | பிடித்துக்கொண்டு |
| வேழமும் | குவலயாபீடமென்னும் யானையும் | பார்த்தன்றன் | அர்ஜுநனுடைய |
| பாகனும் | யானைக்காரனும் | தேர்முன் | தேர்முன்னே [ளாய், |
| வீழ | விழும்படி | நின்றானை | ஸாரதியாய் நின்றவ |
| செற்றவன்றன்னை | ஸம்ஹரித்தவனாய், | சிற்றவை | மாற்றுத்தாயான கைகேயியுடைய |
| புரம்எரிசெய்த | த்ரிபுரதஹநம்பண்ணின | பணியால் | சொல்லைக்கொண்டு |
| சிவன் | ருத்ரன் [ன | முடி | (பட்டாபிஷேகம்பண்ணிக்கொடுவந்த) கிரீடத்தை |
| உறு | அடைந்த | துறந்தானை | பரித்யஜித்தவனான ஸ்ரீபார்த்தஸாரதியை [லே |
| துயர் | குருபாதகபீடையை | திருவல்லிக்கேணி | திருவல்லிக்கேணியி |
| களை | போக்கின | கண்டேன் | காணப்பெற்றேன். () |
| தேவை | ஸ்வாமியாய், | | |
| பற்றலர் | சத்ருக்கள் | | |
| வீய | நசிக்கும்படி | | |

வ்யா.—முதற்பாட்டு. விற்பெருவிழவாயிற்று-சத்ருநிரஸநம் பண்ண நினைக்கிறானென்கையாலே, பெருக்கக் கோலினதாயிற்று; அத்தைக்கோலின கம்ஸனும், அவனுக்கு பலமாய் மலைதுள்ளினாற்போலே பெரிய கிளர்த்தியோடே கூடின மல்லவர்க்கமும், அவர்கள் பார்க்கிலும் கண்பாராதே இடையற வீசும்படி மதிப்பித்து வழியிலே நிறுத்தின ஆனையும், அத்தைத் தள்ளினாலும் அது தன்னை உயிர்ப்புள்ளதுபோலே நடத்தவல்ல பாகனும். (வீழச்செற்றவன்றன்னை) ஏகோத்யோகத்திலே நிரஸித்தாற்போலே வினை செய்த சடக்கு.

(க) உ-௩-உ. (உ) உ-உ-௧௦. (௩) உ-௩-௯.

(புரமித்யாதி) † த்ரிபுரதஹநாபதாநத்தாலே ஸஞ்ஜாதாபிமாநனை ருத்ரன், பிதாவுமாய் லோககுருவுமாயிருக்கிறவன்தலையையறுத்துப் பாதகியாயிருக்கும்; "மதிப்பனுயிருக்கிறவன் எளிவரவுபடவொண்ணுது" என்று அத்தைப்போக்கி, அத்தாலே, லோகத்துக்கெல்லாம்தானே ஆஶ்ரயணீயனென்னு மிடத்தை வெளியிட்டவன். (க) "తత్ర నారాయణశ్శ్రీమాన్ మయా భిక్షాం ప్రయాచితః । విష్ణుప్రసాదాత్ - தத்ர நாராயணஃ ஶ்ரீமாந் மயாபிக்ஷாம் ப்ரயாசிதஃ। விஷ்ணுப்ரஸாதாத்" - ஸர்வேஶ்வரன்ப்ரஸாதத்தாலே, (க) "సుశ్రోణి-ஸுஶ்ரோணி" - †அவனைக்கிட்டுகையாலே உன்வடிவழகு ஸபலமாகப் பெற்றதிறே என்கிறான். (பற்றலரித்யாதி) பற்றலருண்டு - சத்ருக்கள், அவர்கள் முடிந்துபோம்படி, "ஆயுதமெடுக்கவொட்டோம்" என்றவாறே குதிரைகளைநடத்தும் கோலைக்கையாலே கொண்டு. (பார்த்தன்றன் தேர் முன்னின்றானை) ரதியைச்சிறிளல் ஸாரதியையிறே அழியச்செய்வது. அவனைப்பின்னே இட்டுத் தன்னை அம்புக்கிலக்காக்கி நின்றவனை. (சிற்றவைபணியால்முடி துறந்தானை) (உ) * மாற்றுத்தாய் சொன்னவார்த்தைக்காக, ப்ராப்தமாய்வருகிறமுடியை ஸங்யஸித்தவனை. †(௩) [నను నమ్మమకైకేయి - நநு நம்மமகைகேயி] †"சக்ரவர்த்தி வார்த்தை சொல்லமாட்டாமை யிருக்கிறானத்தனை, உம்முடைய தம்பிக்கு ராஜ்யத்தைக் கொடுத்தான், உம்மைக்காடேறப் போகக்காணுமவன் நினைத்திருப்பது" என்று சக்ரவர்த்தி கருத்தைச்சொல்ல; அத்தைக்கேட்டு "நடுவிலாய்ச்சி! திருவடிகளிலே அழகிதாக சுஶ்ரூஷித்தோமென்றிருந்தோம், நம்பக்க லொரு § குணமுண்டாக நினைத்திராமையிறே தாம்போகச்சொல்லாமே அய்யர் கருத்தாக வருளிச்செய்தது" என்று "ஐயரோபாதியாகவோ உம்மை நினைத்திருப்பது. அவரை ஈஶ்வரராகவும் உம்மை ஈஶ்வரதரையாகவுமிறே நினைத்திருப்பது" என்றாரிறே.

(விற்பெரு விழவித்யாதி) விரோதி வர்க்கத்தைக்கிழங்கெடுக்குமவனாய், ஈஶ்வராபி மாநிகளுக்கு மிடர்வந்தால் போக்குமவனுமாய், தனக்கு ஸ்நேஹிதரானார்க்காகத்தன்னை அழியமாறுமவனாய், போலியான ஸ்நேஹிகளுக்கும் ஏவிற்றுச்செய்யுமவனானவனைத் திருவல்லிக்கேணியிலே காணப்பெற்றேனென்கிறார். ... ... (க)

(க) மத்ஸ்யபுரா.
(௩) ரா-அ-உகூ-உஅ.
(உ) பெரி-திரு-௩-க-அ.
§ குணமுண்டாக - பாரதந்த்ர்ய முண்டாக.

அநு—முதற்பாட்டு (வில்லித்யாதி). ஜந்மசத்ருவை நிரஸித்திட்ட பார்த்தஸாரதியாகப் புகுருகிறதென்று அத்தையநுஸந்திக்கிருரென்று அவதாரிகை கண்டுகொள்வது.

மேலே "பார்த்தன்றன்தேர்முன்நின்ருனை" என்று ஸௌலப்யமநுஸந்திக்கப் புகுகிருராகையாலே, அது மஹாகுணமாகைக்காக த்ரிபுராந்தக ஸம்ரக்ஷணமநுஸந்திக்கிருரென்று திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளிச் செய்கிருர், (த்ரிபுரேத்யாதி). இவ்விடத்திலே (க) "తతః కోప పరీతేన సంరక్త నయనేనచ। వామాఙ్గుష్ఠనఖాగ్రేణ ఛిన్నంతస్య శిరో మయా । యస్మాదనపరాధస్య శిరశ్ఛిన్నంత్వయామమ । తస్మాచ్ఛాపసమావిష్టః కపాలీత్వంభవిష్యసి । బ్రహ్మహా కులితో భూత్వా చరంస్తీర్థానిభూతలే । తతో హంగతవాన్ దేవి హిమవన్తంశిలోచ్చయమ్ । తత్ర నారాయణశ్శ్రీమాన్ మయాభిక్షాంప్రయాచితః । తతస్తేనస్వకంపార్శ్వం నఖాగ్రేణవిదారితమ్ । మహతీస్రవతీధారా తస్య రక్తస్య నిస్సృతా । విష్ణుప్రసాదాత్సుశ్రోణి కపాలం తత్సహస్రధా । స్ఫుటితంబహుధాయాతం స్వప్నలబ్ధంధనంయథా - ததஃகோபபரீதேந·ஸம்ரக்தநயநேநச | வாமாங்குஷ்ட்டநகாக்ரேண சிந்நம்தஸ்ய சிரோ மயா | யஸ்மாதநபராதஸ்ய சிரஶ்சிந்நம் த்வயாமம | தஸ்மாச் சாபஸமாவிஷ்டஃ கபாலீ த்வம் பவிஷ்யஸி | ப்ரஹ்மஹாகுலிதோபூத்வா சரம்ஸ்தீர்த்தாநிபூதலே | ததோஹம் கதவாந்தேவி ஹிமவந்தம் சிலோச்சயம் | தத்ர நாராயணஶ்ஶ்ரீமாந் மயாபிக்ஷாம்ப்ரயாசிதஃ | ததஸ்தேந ஸ்வகம் பார்ஶ்வம் நகாக்ரேண விதாரிதம் | மஹதீ ஸ்ரவதீதாரா தஸ்ய ரக்தஸ்ய நிஸ்ஸ்ருதா | விஷ்ணுப்ரஸாதாத் ஸுஶ்ரோணிகபாலம் தத்ஸஹஸ்ரதா | ஸ்ப்புடிதம் பஹுதாயாதம் ஸ்வப்நலப்தம் தநம்யதா" என்கிற மத்ஸ்ய புராணவசநங்கள் அடைவே அநுஸந்தேயங்கள். கீழ் "தேவி" என்று ஸம்போதித்திருக்கவும், "ஸுஶ்ரோணி" என்றது பாவகர்ப்பமென்று தாத்பர்யமருளிச்செய்கிருர், (அவனை யித்யாதி). இத்தால் விஷயாதுரனென்னுமது ஸூசிதமென்று திருவுள்ளம். (உ) "పితుర్వచననిర్దేశాత్ - பிதுர்வசநநிர்த்தேசாத்" என்றிருக்க, "சிற்றவை பணியால்" என்றுசொல்லக்கூடுமோவென்ன; பெருமாளுடைய அபிப்ராயத்தைக் கண்டருளிச்செய்கிருரென்று விவக்ஷித்து, அதுக்குப்ரமாணம், (நநூநமித்யாதி). "ననూనం మమ కైకేయి కశ్చిదాశంససేగుణమ్। యద్రాజానమవోచస్త్వం మమేశ్వరతరాసతీ - நநூநம் மமகைகேயி கஶ்சிதாசம்ஸஸேகுணம் | யத்ராஜாநமவோசஸ்த்வம் மமேஶ்வரதராஸதீ" என்று. இந்தஶ்லோகத்தை ஸப்ரகாரமாக வ்யாக்யாநம்பண்ணுகிருர், (சக்ரவர்த்தியித்யாதி).

புநஃ ப்ரதிகக்ரஹணபூர்வகம் பாட்டின்தொகுத்த தாத்பர்யமருளிச்செய்கிருர், (வில்லித்யாதி). ... ... ... ... ... (க)

(க) மத்ஸ்யபுரா- (உ) ரா-பா-க-உச.

மூ.—வேதத்தைவேதத்தின்சுவைப்பயனைவிழுமியமுனிவர்விழுங்கும்
கோதிலின்கனியை நந்தனார்களிற்றைக் குவலயத்தோர்தொழுதேத்தும்
ஆதியையமுதையென்னையாளுடை யப்பனையொப்பவரில்லா
மாதர்கள்வாழும் மாடமாமயிலைத் திருவல்லிக்கேணிக்கண்டேனே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வேதத்தை | வேதத்தை விபூதியாகவுடையனாய், | குவலயத்தோர் | பூமியிலுள்ளவர்கள் |
| சுவை | (ஆஶ்ரயித்தவர்களுடைய) ருசிக்குத்தக்கபடியாக | தொழுது | ஆஶ்ரயித்து [ற |
| வேதத்தின் | வேதோக்தகர்மாநுஷ்ட்டானத்தினுடைய | ஏத்தும் | ஸ்தோத்ரம்பண்ணுகி |
| பயனை | பலத்தைக் கொடுக்குமவனாய், | ஆதியை | ஜகத்காரணபூதனாய், |
| விழுமிய | ஶ்லாக்யரான | அமுதை | அம்ருதம் போலே போக்யனாய், |
| முனிவர் | ஸநகாதிமுனிவர்கள் | என்னை ஆளுடை | என்னை அடிமைகொண்ட |
| விழுங்கும் | அநுபவிக்கிற | அப்பனை | உபகாரகனானவனை, |
| கோது இல் | கோது இல்லாத | ஒப்பவர் | (தங்களுக்கு) ஸத்ருசரானவர்கள் |
| இன் | இனிய | இல்லா | இல்லாத |
| கனியை | பலம்போலே நிரதிசயபோக்யனாய், | மாதர்கள் | ஸ்த்ரீகள் |
| நந்தனார் | ஸ்ரீநந்தகோபர்க்கு | வாழும் | வாழுமதாய் [தாய் |
| களிற்றை | ஆனைக்கன்றுபோலே யினியனாயிருக்குமவனாய், | மாடம் | மாடங்களையுடைத் |
| | | மா | செல்வம்நிறைந்த |
| | | மயிலை | மயிலாப்பூரைப்படைவீடாகவுடைய |
| | | திருவல்லிக்கேணிக்கண்டேன். (உ) | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (வேதத்தை) (க) "த்ரைகுண்யவிஷயா வேதா:- த்ரைகுண்யவிஷயாவேதா:" என்கிறபடியே எல்லார்க்கும் ஹிதஞ்சொல்லப்போந்த வேதத்தைத் தனக்கு விபூதியாக வுடையவன். (வேதத்தின் சுவைப்பயனை) வேதோக்தமான கர்மங்களையநுஷ்ட்டித்து ராஜஸராயும் தாமஸராயும் ஸாத்விகராயுமுள்ளார்க்கு அவ்வவருடைய ருச்யநுகூலமாக பல(ஃல)ப்ரதாநம்பண்ணுமவன். †கர்மபாவனையாதல் உபயபாவனையாதலன்றிக்கேகேவலம்ப்ரஹ்மபாவனையேயாயிருக்கும் ஸநகாதிகளுக்கு நிரதிசயபோக்யனாயுள்ளவனை. (நந்தனார்களிற்றை) ஶ்ரீநந்தகோபர்க்குத் தன்னுடைய அதிமாநுஷசேஷ்டிதங்களாலே எப்போதுமொக்க இனியனானவனை. (குவலயத்தோரித்யாதி) பூமியிலுள்ளார் (உ) "காரணந்து த்யேய:- காரணந்துத்யேய:" என்கிறபடியே தன்னையே ஆஶ்ரயிக்கும்படி ஜகத்காரணபூதனாயுள்ள

(க) கீதை-உ-சகூ. (உ) அதர்வசிகை.

வனை. (அமுதை) அவர்களுக்கு ப்ராப்யனுயுள்ளவனை. அவர்களுக்குமெல்லாம் புறம்பாயிருக்கிறவென்னை அடிமைகொண்ட உபகாரகனை. (ஒப்பவரில்லாவித்யாதி) (க) † "ஒருவல்லித்தாமரையாளொன்றிய சீர்மார்பன்" என்று பிராட்டி ப்ராதாந்யமேயான ஊராகையாலே பிராட்டிபரிகரமேயாயிற்று. (உ) † "నానయోర్విద్యతేపరమ్- நாநயோர்வித்யதேபரம்" என்று அவள் விபூதியும் ஈஶ்வரவிபூதியுமாய் இரண்டுகூறுயிறே யிருப்பது. "மயிலாப்பூர்" என்று படைவீட்டுக்குப்பேர். ... ... ... ... ... ... (உ)

அரு.—இரண்டாம்பாட்டு. (வேதத்தையித்யாதி). (ங) * கஞ்சன் குஞ்சி பிடித்தடிப்பதற்கு முன்னம் தன்மைந்தனுயிருந்தமையை யநுஸந்தித்துக் கொண்டு திருத்தேர்த்தட்டில் காட்டின வைஶ்வரூப்யப்ரதர்சநாதிமுகத்தாலே வெளியிட்ட பரத்வத்தையுமநுபவித்துக் கொண்டாடுகிருரென்று ஸங்கதி கண்டுகொள்வது,

"விழுமியமுனிவர்" ஶ்லாக்யரான முனிவரென்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளிச்செய்கிருர், (கர்மேத்யாதி). விழுப்பு - ஶ்லாக்யதை. "மாதர்கள் வாழும்" என்று விசேஷிக்கைக்கு ஹேதுகதநபூர்வகம் தாத்பர்யமருளிச்செய்கிருர், (ஒருவல்லியித்யாதி). §பிராட்டி பரிகரமென்கைக்கு ஜ்ஞாபகம், (நாநயோரித்யாதி). (உ) "దేవతిర్యఙ్మనుష్యేషు పున్నామా భగవాన్ హరిః। స్త్రీనామ్నీ లక్ష్మీర్మైత్రేయ నానయోర్విద్యతేపరమ్ - தேவதிர்யங்மநுஷ்யேஷு புந்நாமாபகவாந்ஹரி꞉ । ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீர் மைத்ரேய நாநயோர் வித்யதேபரம்" என்று ஶ்லோகசேஷம். ... ... ... ... ... (உ)

மூ.—வஞ்சனைசெய்யத் தாயுருவாகி வந்தபேயலறி மண்சேர
நஞ்சமர் முலையூடுயிர் செகவுண்ட நாதனைத்தானவர் கூற்றை
விஞ்சைவானவர்சாரணர்சித்தர்வியந்துதிசெய்யப்பெண்ணுருவாகி
அஞ்சுவையமுதமன்றளித்தானைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே.()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வஞ்சனைசெய்ய | (க்ருஷ்ணனை) வஞ்சிக்கைக்காக | சேர | விழும்படியாக, |
| தாயுருவாகிவந்த | தாய்வடிவுகொண்டு வந்த | நஞ்சு அமர் | விஷம்நிறைந்த |
| பேய் | பூதனையானவள் | முலையூடு | முலைவழியே |
| அலறி | கதறிக்கொண்டு | உயிர் | (அவள்) ப்ராணன் |
| மண் | பூமியிலே | செக | போம்படி |
| | | உண்ட | அமுதுசெய்தருளின |
| | | நாதனை | ஸர்வசேஷியாய், |

(க) ங-திரு-கக. (உ) வி-பு-க-அ-ஙடு. (ங) ங-௧௦-ங.

§ அல்லாதபும்வ்யக்திகளிவள் பரிகரமன்றேவென்ன; (நாநயோ꞉). என்றது.

| | | | |
|---|---|---|---|
| தானவர் | அஸுரர்களுக்கு | அன்று | இந்த்ரன் ப்ரஷ்டை |
| கூற்றை | ம்ருத்யுவாய், | | ஶ்வர்யனான காலத் |
| விஞ்சைவானவர் | வித்யாதரர் | அம் | அழகிய [திலே |
| | | சுவை | ரஸத்தையுடைய |
| சாரணர் | சாரணர் [வர்கள்) | அமுதம் | அம்ருதத்தை |
| சித்தர் | ஸித்தர்(முதலான தே | அளித்தானை | தேவதைகளுக்குக் |
| வியந்து | ஆஶ்சர்யப்பட்டு | | கொடுத்தவனை |
| துதிசெய்ய | ஸ்தோத்ரம்பண்ணும் | திருவல்லிக்கேணிக்கண்டேன். | |
| | படி [ண்டு | விஞ்சை | வித்யை. |
| பெண்உருவுஆகி | பெண்வடிவைக் கொ | வியந்து | கடைக்குறை (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (வஞ்சனையித்யாதி) தாய்வடிவுகொண்டு வஞ்சிக்கவந்த பூதனை கதறிக்கொண்டுபோய் பூமியிலே விழும்படியாக, விஷம்கிரம்பின முலைவழியே அவளுடைய ப்ராணன்கள் போம்படி அமுதுசெய்த. (நாதனை) † தனக்குச்சேராதவடிவுகொண்டு ஜகத்துக்கு ப்ராணனான தன்னை நலியவந்தவளை முடித்துத்தன்னைத்தந்தவன். (க) "స్తన్యన్తత్ - ஸ்தந்யம்தத்" (தானவர்கூற்றை) ஆஸுரவர்க்கத்துக்கு ம்ருத்யுவானவனை. வித்யாதரர் சாரணர் ஸித்தர் உள்ளிட்ட தேவவர்க்கமடைய விஸ்மிதராய் ஸ்தோத்ரம்பண்ணும்படி †புருஷோத்தமனான தனக்குச்சேராதவடிவைக்கொண்டு அம்ருதத்தை அநுகூலரை புஜிக்கும்படி பண்ணினவனை. ... ... (௩)

அரு.—மூன்றாம்பாட்டு (வஞ்சனையித்யாதி). * நந்தனார்களிற்றினுடைய பிள்ளைச்சேவகத்தைச் சொல்லாநின்றுகொண்டு கிட்டியநுபவிக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

பெண்ணுருவாகி யமுதமளித்ததுக்கு ப்ரதிகோடித்வேந, தாயுருவாய் நஞ்சிட்டவளைக்கொன்றதுக்கு ரஸோக்திதோன்றத் தாத்பர்யமருளிச்செய்கிறார், (தனக்கித்யாதி). பேய்க்குச்சேராதவடிவிறே தாயுருவாகை என்று திருவுள்ளம். "తస్యా స్తనంపపౌ కృష్ణః ప్రాణైస్సహానినాయచ । స్తన్యం తద్విషసంమిశ్రం రస్యమాసీజ్జగద్గురోః - தஸ்யாஸ்தநம் பபௌக்ருஷ்ண: ப்ராணைஸ் ஸஹநிநாயச । ஸ்தந்யம்தத்விஷஸம்மிஶ்ரம் ரஸ்யமாஸீத் ஜகத்குரோ:" என்று வசநஶேஷம். (புருஷோத்தமனானதனக்குச்சேராதவடிவைக்கொண்டு)- "பெண்ணுருவாகி" என்றதினர்த்தம். "அம்" ஸௌந்தர்யமான, "சுவை" ரஸ்யமான, அமுதமென்று சப்தார்த்தம். ஆக, தன்னுருவையழித்து வேறுவேஷங்கொண்டாகிலும் விஷமிட்டு (உ) * உலகங்களுக்கெல்லா மோருயிரை நலியவந்தவளை நலிந்து, தன்னையழியமாறியாகிலும் அநுகூலர்க்கு அம்ருதங்கொடுத்தும் உயிர்களைத் தரிப்பித்தவனென்று சொல்லிற்றாயிற்று. ... (௩)

(க) வி-பு-இ- (உ) தி-வாய்-அ-க-இ.

மூ.—இந்திரனுக்கென்றாயர்களெடுத்தவெழில்விழவில்பழநடைசெ
மந்திரவிதியில்பூசனைபெறாது மழைபொழிந்திடத்தளர்ந்தாயர் [ய்
எந்தம்மோடினவாநிரைதளராமலெம்பெருமானருளென்ன
அந்தமில்வரையால்மழைதடுத்தானைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இந்திரனுக்குஎன்று | இந்த்ரனுக்கு விருந்திடக்கடவோமென்று | தளர்ந்து | மிகவும்நொந்து, |
| ஆயர்கள் | இடையர்கள் | எம்பெருமான் | எமக்கு ஸ்வாமியானவனே! |
| எடுத்த | ஸங்கல்பித்த | எந்தம்மோடு | எங்களுடன் |
| எழில் | அழகிய | இனம் | இனமினமான |
| விழவில் | யாகோத்ஸவத்திலே | ஆநிரை | பசுத்திரளும் |
| பழநடைசெய் | முன்பு செய்துபோரும் க்ரமத்தில் | தளராமல் | நோவுபடாதபடி |
| மந்திரவிதியில் | மந்த்ரோக்தமானபடியே | அருள் | ரக்ஷித்தருளவேணும் |
| பூசனைபெறாது | பூஜையை(அவன்)பெறாமையாலே | என்ன | என்றுஅர்த்திக்க, |
| மழை | கல்வர்ஷத்தை | அந்தம்இல் | அளவிடவொண்ணாதபடியான |
| பொழிந்திட | வர்ஷிப்பிக்க, | வரையால் | கோவர்த்தந மலையாலே |
| ஆயர் | இடையர் | மழை | அம்மழையை |
| | | தடுத்தானை | பரிஹரித்தவனை |
| | | திருவல்லிக்கேணிக்கண்டேன். (௪) | |

வ்யா —நாலாம்பாட்டு. (இந்திரனித்யாதி) †திருவாய்ப்பாடியிலுள்ளார், த்ரைலோக்யேஶ்வரனான இந்த்ரனுக்கு வர்ஷார்த்தமாக ஆட்டைக்கொருவிருந்திடக்†கடவர்களாய், "நாம் பிறந்துவளருகிற ஊரிலே புரோடாசத்தை நாய் தின்றாற்போலே ஒரு தேவதைவந்து புஜிக்கையாவதென்" என்று, "நீங்கள் செய்யப்புகுகிறதுதானென்!" என்றுகேட்டான்; "நாங்களிந்த்ரனுக்கு வர்ஷார்த்தமாக விருந்திடப் புகுகிறோம்" என்றார்கள்; "இந்தமலையன்றோ நமக்கும் பசுக்களுக்கும் ஒதுங்கவிடமுந்தந்து புல்லுந்தருகிறது, ஆரேனுக்குமோ ப்ரத்யுபகாரம்பண்ணுவது, இம்மலைக்கிடுங்கோள்" என்றான்; முகத்தைப்பார்த்து ஒன்றைச்சொன்னால் மறுக்கலாம்படியன்றே யிருப்பது; ஒன்றாகக்கொடுவந்து குவித்தார்கள். (இந்திரனித்யாதி) இந்த்ரனுக்கென்று இடையரெடுத்த வெழிலுடைத்தானவிழவில், முன்புசெய்துபோரும்படியிலே மந்த்ரோக்தமானபடியே பண்ணுகிற அநுஷ்டாநரூபமான பூஜையைப்பெறாமையாலே அவன் †பசிக்ராஹத்தாலே கோபித்து மஹாவர்ஷமாக வர்ஷிப்பிக்க; அத்தாலே இடையரானவர்கள் தளர்ந்து, "ரக்ஷகரான வுங்களோடே எங்களுடைய ரக்ஷ்யமான பசுக்களுந்தளராதபடி நோக்கியருளவேணும்"

என்ன. † இத்தால் - புறம்புண்டான ரக்ஷ்யரக்ஷகபாவமும் அப்ர யோஜகமென்றபடி. (அந்தமில்) அந்தமழையினளவல்லாத பெரிய மலையாலே மழையைத்தடுத்து. † அப்படியே (க) "ஸக்ருத்ஸுகவர்ஷிணீ - ஸந்ததது:கவர்ஷிணி" என்கிற என்னுடைய ஸம்ஸாரமாகிற வர் ஷத்தைப்பரிஹரிக்கவந்தவன். ... ... ... (௪)

---

அரு.—நாலாம்பாட்டு (இந்திரனித்யாதி). ஒருபேய்ப் பெண்ணைப் பிண மாக்கிவிட்டவளவேயோ, த்ரிலோகாதிபனென்று இறுமாந்திருக்கும் இந்த்ர னிறுமாப்பை யறுத்தபடியும் கண்டோமிறே! என்று, அத்தையருளிச்செய்கி றாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

புத்திஸௌகர்யார்த்தம் கதாபாகத்தை உபந்யஸிக்கிறார், (திருவாய்ப் பாடியிலித்யாதி). (கடவர்களாய்) என்றவநந்தரம் உத்யோகிக்க என்று பூரிப் பது. (பசிக்ராஹத்தாலே) என்றது- "க்ராஹ ஏவ க்ராஹ: - க்ராஹஏவக்ராஹ:" என்று க்ராஹசப்தத்திலே வந்த ப்ரத்யயம் ஸ்வார்த்தத்திலேயாய் க்ராஹிக்கை யுடலென்கை. இவ்வளவால் பலித்த ஸ்வாபதேசம், (இத்தாலித்யாதி). "அந்த மில்" இத்யாதிக்கு ஸ்வாபதேசம். (அப்படியேயித்யாதி). ... (௪)

[வன்

மூ.—இன்துணைப்பதுமத்தலர்மகள்தனக்குமின்பன்நல்புவிதனக்கிறை
தன்துணையாயர்பாவைநப்பின்னைதனக்கிறைமற்றையோர்க்கெல்லாம்
வன்துணைபஞ்சபாண்டவர்க்காகிவாயுரைதூதுசென்றியங்கு
மென்துணைஎந்தைதந்தைதம்மானைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| இன் | (தன்மநஸ்ஸுக்கு)இ | வல்துணை | வலியதுணையாய் |
| துணை | துணையாய் [னிய | பஞ்சபாண்டவர்க்கு | பஞ்சபாண்டவர்களுக்கு |
| பதுமம் | தாமரைப்பூவைப்பிறப்பிடமாகவுடைய | ஆகி | எல்லாவுறவுமுறையும் தானேயாய்க்கொண்டு |
| அலர்மகள்தனக்கும் | பெரிய பிராட்டியார்க்கும் | வாய்உரை | அவர்கள்சொன்னவார்த்தைகளை |
| இன்பன் | போக்யனாய், | சென்று | துர்யோதநாதிகள்பக்கலிலேபோயறிவித்து [னவனாய், |
| நல் | எல்லாவற்றையும் பொறுக்கும் தன்மையளான | தூதுஇயங்கும் | ஸ்ரீ தூதஎழுந்தருளி |
| புவிதனக்கு | ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு | என்துணை | என்னைப்போல்வார்க்கெல்லாம் ஸஹாயபூதனாய் |
| இறைவன் | வல்லபனாய், | எந்தைதந்தைதம்மானை | என்குலநாதனானவனை |
| தன்துணை | தன்னையே துணையாகவுடையளாய் | திருவல்லிக்கேணிக்கண்டேனே. (௫) | |
| ஆயர்பாவை | இடைப்பெண்ணான | | |
| நப்பின்னைதனக்கு | நப்பின்னைப்பிராட்டிக்கு | | |
| இறை | ஸ்வாமியாய், | | |
| மற்றையோர்க்குஎல்லாம் | அல்லாதாரெல்லார்க்கும் | | |

---

(க) ஸ்தோ - ர - ௪௯.

வ்யா.—அஞ்சாம்பாட்டு (இன்துணையித்யாதி) நெஞ்சுக்கினிய துணையாயிருக்கிற, பதுமத்தலர்மகளுண்டு - தாமரைப்பூவை உத்பத்திஸ்த்தாநமாகவுடைய பெரிய பிராட்டியார், அவளுக்கின்பனுனவன். (தனக்கும்) எல்லார்க்கும் ஸ்ப்ருஹணீயையாயிருக்கிற பெரியபிராட்டியார் தான் "அகலகில்லேன்" என்றுவிரும்பி வர்த்திக்கும்படி அவளுக்கு ஸ்ப்ருஹணீயனுனவன். †ஸர்வேஶ்வரனுன தனக்கும் கூடப் பொறைக்கு உவாத்தாயிருக்கிற பூமிப் பிராட்டியார்க்கு வல்லபனுனவன். (தன்துணையித்யாதி) † தன்னையே துணையாகவுடையளான, ஆயர்பாவையுண்டு-நப்பின்னைப் பிராட்டி, அவளுக்கு ஸ்வாமியானவன். (மற்றையோரித்யாதி) இப்படியிருக்கையாலே அல்லாதாரெல்லார்க்கும் வலிய துணையானவன். (பஞ்ச) ஆஶ்ரிதரான பாண்டவர்களுக்காக, அவர்கள் வாயிற்சொல்லி விட்ட வார்த்தையை அங்கேசென்று சொல்லுவது, ‡ இங்கேவந்தறிவிப்பதாய், இப்படி ஆஶ்ரிதவிஷயத்தில் தாழநின்ற நிலையாலே தானே துணையென்னு மிடத்தை எனக்கறிவித்தவன். (எந்தை) எனக்கு ஸ்வாமியாய் என்குலத்துக்கு நாதனுனவன். ... ... (ரு)

---

அநு.—அஞ்சாம்பாட்டு (இன்துணை இத்யாதி). இப்படி ப்ரஸக்தாநுப்ரஸக்தமான அதிமாநுஷ சேஷ்டிதங்களை யநுபவித்தாராய் * பார்த்தன்றன் தேர்முன் நிற்கைக்கு பூர்வரங்கமான தௌத்யத்தை யநுஸந்தியா, ஸ்ரீபூமிநீளாவல்லபன்செய்த செயலென்னென்றநுஸந்திக்கிருரென்று ஸங்கதிகண்டு கொள்வது.

"பதுமத்து" - பத்மத்திலேயிருக்கிறவென்றபடி. * நல்பதப்ரயோக தாத்பர்யம், (ஸர்வேஸ்வரனித்யாதி). "தனக்கு" என்றதின் கருத்தாகவுமாம். ஸ்ரீபூமிகளை ஒருவன் நீர்வார்த்துக் கொடுக்கவேண்டாமையாலே விசேஷிக்கவேண்டா, நப்பின்னையாகில் ஸாமாக்யோ எருத்தை முறித்தவனுக்குக் கொடுக்கக்கடவோமென்று நினைப்பிட்டவளாகையாலே க்ருஷ்ணனைத் துணையாக விஶ்வஸித்திருந்தாளென்று இவ்வர்த்தம்தோன்ற விசேஷிக்கிருரென்று விவக்ஷித்தருளிச்செய்கிருர், (தன்னையேயித்யாதி). "இயங்கும்" ஸஞ்சரிக்கிறவென்ருய், இதினர்த்தம், (இங்கேவந்தறிவிப்பதாய்) என்றது. ... (கு)

மு.—அந்தகன்சிறுவனரசர்தம்மரசற்கிளையவனணியிழையைச்செ
ன்றெந்தமக்குரிமைசெய்யெனத்தரியாதெம்பெருமானருளென்னச்[ன்று
சாந்தமல்குழலாளலக்கண்ணூற்றுவர் தம்பெண்டிருமெய்திநூலிழப்ப
இந்திரன்சிறுவன்தேர்முன்னின்ருனைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே.

| பதம். | உரை. |
|---|---|
| அந்தகன் | குருடனான த்ருதராஷ்ட்ரனுடைய |
| சிறுவன் | பிள்ளையாய் |
| அரசர்தம்அரசற்கு | ராஜராஜனான துர்யோதனனுக்கு |
| இளையவன் | தம்பியான துஶ்ஶாஸநன், |
| அணி | அலங்கரிக்கப்பட்ட |
| இழையை | ஆபரணங்களையுடையளான த்ரௌபதி பக்கலிலே |
| சென்று | போய், (சூதிலே உன்னையுந் தோற்றார்கள் ஆகையாலே) |
| எந்தமக்கு | எங்களுக்கு |
| உரிமைசெய் | அடிமைசெய் |
| என | என்ன, |
| தரியாது | (அவள் அந்யசேஷத்வத்தைப்)பொறாமல் |
| எம்பெருமான்! | என்ஸ்வாமீ! |
| அருள் | என்பக்கல் க்ருபைபண்ணி ரக்ஷிக்கவேணும் |
| என்ன | என்று அர்த்திக்க; |
| அல் | இருண்ட |
| சந்தம் | நிறத்தையுடைய |
| குழலாள் | குழலையுடையளான த்ரௌபதிபட்ட |
| அலக்கண் | து:கத்தை |
| நூற்றுவர்தம் | துர்யோதனன் ப்ராதாக்களான நூற்றுவருடைய |
| பெண்டிரும் | பார்யைகளும் |
| எய்தி | அடைந்து |
| நூல் | மங்கள ஸூத்ரத்தையும் |
| இழப்ப | இழக்கும்படியாக |
| இந்திரன் சிறுவன் | இந்த்ரபுத்ரனான அர்ஜுநனுடைய |
| தேர்முன் | தேரின் முன்னே |
| நின்றானை | நின்று ஸாரத்யம்பண்ணினவனை |

திருவல்லிக்கேணிக் கண்டேன். (௬)

வ்யா.—ஆறாம்பாட்டு (அந்தகன்சிறுவன்) குருடன் பெற்றபிள்ளையாயிற்று. § இத்தால் - அறிவுகேடு வழி வழி வருகிறதென்கை †பிதாவானவன் † கண்ணஞ்ச வளர்க்க வளருகையன்றிக்கே தான் கண்டபடி மூலையடியே திரிந்தவன். (அரசரித்யாதி) ராஜ ராஜனான துர்யோதநனுக்குப் பின்பிறந்தவன், துஶ்ஶாஸநனென்றபடி. †அவன்கொண்டாடி வளர்க்கச்செருக்காலே வளர்ந்தவனென்று தீம்புக்குறுப்பாகச் சொல்லுகிறது. (அணியிழையை) † மஹோத்ஸவமாகையாலே ஆபரணங்களாலே அலங்க்ருதையாய் நின்றவள் பக்கலிலே கிட்டி. (எந்தமக்குரிமை செய்யென) சூதிலே உன்னையுந் தோற்றார்கள், நீ போந்து எங்களுக்கு இழிதொழில் செய்யென்ன. (தரியாது) அவள் அந்யசேஷத்வத்தைப் பொறுத்திலளாயிற்று. இவ்வளவிலே, ஸ்வாமியான நீ என்பக்கலிலே க்ருபைபண்ணவேணுமென்ன. "ஆண்பிள்ளைகளான பர்த்தாக்கள் ஸந்நிஹிதராயிருக்க தூரஸ்தனான க்ருஷ்ணன் பேரைச் சொல்லுவானென்" என்று எ… ரைக்கேட்க, "அறிந்தோமே! முன்பே சில † ஸூருஸூரு

கேட்டு வைத்தாள் போலேகாணும். (க) "మహాత్యాపది సంప్రాప్తే స్మర్తవ్యో భగవాన్ హరిః - மஹத்யாபதி ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோ பகவாந்ஹரிః" என்று. இதுதன்னை பட்டரைக்கேட்க,"பர்த்தாவின் கையைப்பிடித்துப் போகாநின்றாலும் இடறினால் அம்மே! என்னக் கடவது காண்" என்றருளிச்செய்தார். அர்த்தம்† அதாயிருக்கச்செய்தே †விசைப்புக் கிடந்தபடிகாணும். (சந்தமல்குழலாள்) †"சந்தம்" என்றுநிறம். "அல்" என்கிறவித்தாலே இருளைலக்ஷித்து, நிற மிருண்டகுழலையுடையவளென்னுதல்; அன்றிக்கே, § (சந்தமர்குழலாள்) சந்தநப்பூமாறாத குழலையுடையவளென்னுதல். அவள்பட்ட, அலக்கணுண்டு - து:கம், அத்தை தூர்யோதநாதிகளுடைய ஸ்த்ரீகள்பட்டு. † அதில் தன்னேற்றமாக நாலுமிழந்தார்களாயிற்று. †அவர்களுக்கு து:கம் நிலைநிற்கும்படி பண்ணினானாயிற்று.

(இந்திரனித்யாதி) வலியார்சிலரை அபாஶ்ரயமாகப் பற்றினாலும் தானேதாழநின்று ரக்ஷகனாகவல்லனென்னுமிடத்தைச்சொல்லுகிறது. † த்ரௌபதிக்கு பர்த்தாக்களுதவிற்றிலர், அர்ஜுநனுக்கு இந்த்ரனுதவிற்றிலன். ... ... ... ... (௬)

---

அரு.—ஆறும்பாட்டு (அந்தகனித்யாதி). (உ) "அர்ஜுநனுக்கு தௌத்ய ஸாரத்யங்கள் பண்ணிற்றும் த்ரௌபதியினுடைய மங்களஸூத்ரத்துக்காக" என்கிறபடியே இவன் பார்த்தஸாரதியானமைக்கும், கீழ்ப்பாட்டிற்சொன்ன தூத்யத்துக்கும் ப்ரதாநஹேதுவை யநுஸந்திக்கிறாரென்று அவதாரிகை கண்டுகொள்வது.

§ "அந்தகன்" என்றதுக்குத் தாத்பர்யார்த்தம், (பிதாவானவனித்யாதி). (கண்ணஞ்ச) - கண்ணாலேயஞ்ச. துஶ்ஶாஸநனை இப்படி வர்ணிப்பானேனென்னென்ன ; அருளிச்செய்கிறார், (அவனித்யாதி). (௩) "యౌవనం ధనసంపత్తిః ప్రభుత్వమవివేకితా । ఏకైకమప్యనర్థాయ కిము యత్ర చతుష్టయమ్ - யௌவநம் தந ஸம்பத்தி: ப்ரபுத்வ மவிவேகிதா । ஏகைகமப்யநர்த்தாய கிமு யத்ர சதுஷ்டயம்॥" என்கிறநாலு மிவனுக்கு புஷ்கலமென்று திருவுள்ளம். அணியப்பட்ட - அலங்கரிக்கப்பட்ட, இழையையுடையவளென்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளிச்செய்கிறார், (மஹோத்ஸவமித்யாதி). (ஸூருஸூரு)-காதிலே ஸூருஸூருவென்கை; அதாவது - உபதேசமென்றபடி. "జ్ఞాతం మయా వసిష్ఠేన పురాగీతం మహాత్మనా - ஜ்ஞாதம்மயா வஸிஷ்டேநபுராகீதம் மஹாத்மநா"

---

§ "அந்தகன்" என்றது - ஆந்த்யம் - ஜ்ஞாநதோத்ருஷ்டிதஶ்ச என்று விவக்ஷித்து, இதையிரண்டையுமருளிச்செய்கிறார், (இத்தாலித்யாதி வாக்யத்வயத்தாலே).

(க) பார- (உ) ஸ்ரீவசநபூ- (௩) § குண்டலிதம் க்வாசித்கம்.

என்று பூர்வார்த்தம். "எம்பெருமான்! அருள்" என்று இவள் ஒரு நூற்புடைவையை அர்த்தித்தால், அவ்வளவைக் கொடுத்துவிட்டாலாகாதோ, நூற்றுவர் பெண்டிரையும் தாலிழக்கும்படி பண்ணுவானென்னென்ன; அருளிச்செய்கிறார், (அதாயிருக்கவித்யாதி). §(விசைப்பு) - ஸ்நேஹாதிக்யம். "அல்" என்று ராத்ரியாய், அப்படியிருப்பதானகுழலென்றும்; "சந்தமர்" என்று பாடாந்தரமாய், அப்போது, சந்து-சந்தநகுஸுமமாய், அமருகை - பொருந்துகையாய், அப்படிப்பட்ட குழலையுடையவளென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார், (சந்தமென்றித்யாதி வாக்யத்ரயத்தாலே). (அதில் தன்னேற்றமாக) என்றதுக்கு- "கோவிந்தா" என்ற நாக்கு வேறொன்றின கழுத்துக்கொரு குணஹாநியின்றிக்கே, ப்ரதிஜ்ஞையாலே குழல்விரித்திருந்த விவளைக் குழல் முடிப்பித்தவாறே, அவர்கள் குழல்விரித்தார்கள்; தால்வாசி இவளுக்குண்டாயிற்று. அவர்களுக்கு அதின்றிக்கேயொழிந்தது தன்னேற்றமென்று கருத்து. இவளை "சந்தமர்" என்று விசேஷித்து, அவர்களைக் கேவலம், "பெண்டிர" என்றத்தாலே பலித்த உட்கருத்து, (அவர்களுக்கித்யாதி). சரணாகதையானவளைக் கைப்பிடித்த பர்த்தாக்கள் போக்யஸுகங்களைப்பெற்றார்கள்; அவர்களுக்கு விரோதிகளைக் கைப்பிடித்த பார்யைகள் த்யாஜ்யதுக்கங்களைப்பெற்றார்கள், இவ்விரண்டுக்கு மிவனேயடியென்று கருத்து. இப்பாட்டில் பலித்த ஸ்வாபதேசம், (த்ரௌபதிக்கித்யாதி). ... ... ... ... ... (௬)

மூ.—பரதனும் தம்பி சத்துருக்கனு மிலக்குமனோடு மைதிலியும்
இரவுநன்பகலும் துதிசெய்ய நின்ற விராவணாந்தகனையெம்மானைக்
குரவமேகமழும்குளிர்பொழிலூடு குயிலொடு மயில்கள்நின்றால[னே
இரவியின்கதிர்கள் நுழைதல்செய்தறியாத்திருவல்லிக் கேணிக்கண்டே

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பரதனும் | ஸ்ரீபரதாழ்வானும்[ன | குரவம் | குராமலர்கள் |
| தம்பி | அவனுக்குத்தம்பியா | கமழும் | பரிமளிக்கிற |
| சத்துருக்கனும் | ஸ்ரீசத்ருக்நாழ்வானும் | குளிர் | குளிர்ந்த |
| இலக்குமனோடு | இளைய பெருமாளோடு (கூட) | பொழிலூடு | சோலைக்குள்ளே |
| மைதிலியும் | பிராட்டியாரும் | குயிலொடு | (பாடுகிற) குயில்களோடு) |
| இரவும் | ராத்ரியிலும் | மயில்கள் | மயில்களானவை |
| நல் | (பபதார்த்த ப்ரகாசகமாய்) விலக்ஷணமான | நின்று | ஒருபடிப்படநின்று |
| | | ஆல | ஆடுமதாய் |
| பகலும் | பகலிலும் [படி | இரவியின்கதிர்கள் | ஸூர்யகிரணங்கள் (சோலைச்செறிவாலே) |
| துதிசெய்ய | ஸ்தோத்ரம்பண்ணும் | நுழைதல்செய்தறியா | ஒருகாலும் நுழைந்தறியாத |
| நின்ற | எழுந்தருளியிருக்குமவனாய், | திருவல்லிக்கேணிக்கண்டேன். (எ) | |
| எம்மான் | எனக்குஸ்வாமியாய், | | |
| இராவணாந்தகனை | ராவணனை ஸம்ஹரித்த சக்ரவர்த்தித் திருமகனை, | | |

§ (விசைப்பு) துடிப்பு.

வ்யா.—ஏழாம்பாட்டு. (பரதனும் தம்பி சத்ருக்கனும்) பரதாழ்வானும் †அவனோடு கையடைப்பான ஸ்ரீசத்ருக் நாழ்வானும். (இலக்குமனோடு மைதிலியும்) இதுவு † மிங்ஙனே யொருசேர்த்தி. (இரவு நன்பகலும்) † ஸமர காலத்திலே கண்டநுபவித்தவர்களோடு † கேட்டார் வாய்கேட்டாரோடு வாசியற ஏத்தா நிற்பர்களாயிற்று. † தேசிக † ரடங்கலும் திரள்திரளாக நின்றாயிற்று ஏத்துவது. (இரவுநன்பகலும்) † நமக்குமோர் காலம் நெஞ்சொழிந்த போது ஏத்துவ தொன்றுண்டன்றோ. அங்ஙனன்றிக்கே திவாராத்ர விபாகமறக் †கிட்டினதனையு மாழங்கால்படுகைக்குடலானவித்தனை. (இராவணாந்தகனை) இப்படி ஏத்துவதுதான் ராவணவதம் பண்ணின அபதான மொன்றுமே யாயிற்று; †அவர்களோபாதி நானும் தோற்று ஏத்தும்படிபண்ணினவனை. (குரவமித்யாதி) குரவம் கமழா நிற்பதாய் ஸ்ரமஹரமான பொழிலினூடே குயில்களோடே கூட மயில்கள் ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ண. (இரவியித்யாதி) ஈஸ்வராஜ்ஞைநடையாடாத தேசமாயிற்று. (க) "பீஷோதேதி - பீஷோதேதி" என்றது அவ்விடத்தை யொழியவாயிற்று. ... ... (எ)

அரு.—ஏழாம்பாட்டு. (பரதனுமித்யாதி). முதற்பாட்டிலே - * பார்த்தன்றன் தேர்முன் நின்றானுடைய குணஜிதராய்ப் போகாநிற்க நடுவே வழிபறிப்பாரைப்போலே, (உ)*பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரியான வடிவைக்கொண்டு நிற்கையாலே அங்கேகண்டோமே, (௩) "சிற்றவைபணியால் முடிதுறந்தானை" என்று ஒரு பாசுரமிட்டுப் போந்தாராயிருந்தார்; அவர்நெஞ்சிலே யுறைத்து நெஞ்சைப்பறிக்கையாலே வந்தேத்துகிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

"தம்பி"என்றது-பரதனுக்குத்தம்பியென்றாய் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனோடித்யாதி). (இங்ஙனேயொருசேர்த்தி) என்றது-(ச) "ஸீதேஸலக்ஷ்மணா ஸீதேஸலக்ஷ்மணும்" என்கிறபடியே தாயும்பிள்ளையுமாயிருக்குமொருசேர்த்தியென்றுமாம்;(ரு) 'நசஸீதா த்வயாஹீநா நசாஹமபி - நசஹீதாத்வயா ஹீநாநசாஹமபி" என்கிறபடியே பெருமாளைப் பிரியில் தரியாமையிலுண்டான சேர்த்தியாகவுமாம்: ராவணவதத்தினன்று ஜ்யாகோஷத்தின் சடக்குக்கேட்டிருக்கையிலுள்ளசேர்த்தியாகவுமாம். (ஸமரம்). யுத்தம். (கேட்டார்வாய்கேட்டார்) பரதசத்ருக்நர்கள். இந்நால்வரையும் சொன்னது - வாநரமுதலிகளுக்கும், ப்ரஹ்மாதிகளுக்கும், ருஷிகளுக்கும், அயோத்யாவாஸிகளுக்கும், ஆழ்வார்களுக்கும், ஆசார்யர்களுக்கு முபலக்ஷணமென்று விவரிக்கிறார்(தேசிகரித்யாதி). (அடங்கலும்) என்றது - கண்டறிவாரும் கேட்டறிவாருமெல்லாமென்றபடி.

(க) தை-ஆ-எ. (௩) உ-௩-க- (ரு) ரா-அயோ-ருக-௩க.
(உ) ரா-அ-௩-உக. (ச) ரா-ஆ-கO-கக.

திலவர்க்கெல்லா மொருகாலேத்திலுல் போராதோ, திவாராத்ர விபாகமற வேத்தவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார், (நமக்குமித்யாதி) கிட்டினதனையும்) - எத்தனைகிட்டினாலத்தனையும் என்றபடி. "எம்மானை" என்றதுக்குத் தாத்பர்யம்,(அவர்களோபாதியித்யாதி). குரவம் - புஷ்பவிசேஷம். பரதாதிகள்(பூ)பட்டரைப்போலேயேத்த, குயில்பாட, மயிலாட, பரிமளிதமாய் ஶ்ரமஹரமான உத்யாநத்திலே ராமதிவாகரன் எதிரியான கதிரவனுஞ் சும்படி யிருக்கக்கண்டேனென்று இப்பாட்டுக்குத் தாத்பர்யம். ராவணனுக் கஞ்சின ஸூர்யன் ராவணாந்தகனுக்கஞ்சச் சொல்லவேண்டாவிறேயென்று திருவுள்ளம். ... ... ... ... ... (எ)

மூ·—பள்ளியிலோதி வந்த தன் சிறுவன் வாயிலோராயிரநாமம்
ஒள்ளியவாகிப் போதவாங்கதனுக் கொன்று மோர்பொறுப்பிலனாகிப்
பிள்ளையைச் சீறி வெகுண்டு தூண்புடைப்பப் பிறையெயிற்றனல் விழிப் பேழ்வாய்த்
தெள்ளிய சிங்கமாகிய தேவைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பள்ளியில் | வித்யாசாலையிலே | பிள்ளையை | தன்புத்ரனை |
| ஓதி | படித்துவிட்டு | சீறிவெகுண்டு | மிகக்கோபித்து |
| வந்த | தன்னருகேவந்த | தூண் | (அவன்நட்ட) தூணை |
| தன்சிறுவன் | தன்பிள்ளையானப்ரஹ்லாதாழ்வானுடைய | புடைப்ப | அடிக்க(அதிலே), |
| | | பிறை | மூன்றாம்பிறைபோன்ற |
| | | எயிறு | பற்களையும் |
| வாயில் | திருப்பவளத்தில் | அனல் | நெருப்புப்பொறிகள் சிந்தாநின்றுள்ள |
| ஓராயிரநாமம் | (ஸர்வேஶ்வரனுடைய) ஒருஆயிரம்திருநாமங்கள் | விழி | கண்களையும் |
| ஒள்ளியவாகி | அழகாக | பேழ்வாய் | பெரியவாயையுமுடைத்தாய், |
| போத | தன்னடையேவர, | | |
| ஆங்கு | அவ்விடத்திலே | தெள்ளிய | தெளிந்திருந்துள்ள |
| அதனுக்கு | அப்படியெம்பெருமான் திருநாமங்களைச் சொல்லியதற்கு | சிங்கமாகிய | ந்ருஸிம்ஹாவதாரஞ் செய்தருளின |
| | | தேவை | தேவனை |
| ஒன்றும்ஓர் | சற்றாயினும் | திருவல்லிக்கேணிக்கண்டேன். (அ) | |
| பொறுப்புஇலனாகி | பொறுமையில்லாதவனாய்க்கொண்டு | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (பள்ளியிலோதி வந்ததன்சிறுவன், பள்ளியோதும் பருவத்தில் சொன்னவை யடங்கலும் சிரஸாவஹிக்கவேண்டும்படி யிருக்கும். இதாயிற்றுப்பருவ மிருந்தபடி. அதுக்கு

மேலே தன்வயிற்றில் பிறந்தப்ரஜை சொன்னவை யடையப் பொறுக்கவேணும். (வாயிலித்யாதி) அவனப்போது சொல்லிற்று † நாலிரண்டாகிலும் பருவத்துக்குத்தக்கவளவல்லாதபடி யிருக்கையாலே குவாலாகச் சொல்லுகிறார். (ஒள்ளியவாகிப் போத) †வயிற்றில் பிறந்தவன் சொல்லுகையாலே இனிதாயிருக்குமிறே. •(ஆங்கு) அவ்விடத்தில். (அதனுக் கொன்றுமோர் பொறுப்பிலனாகி) பள்ளியோதும் பருவத்திற் சொல்லுவதெல்லாம் ப்ரியமாயிருக்கும், தன்வயிற்றிற் பிறந்தவன் சொல்லிற்றெல்லாம் இனிதாயிருக்கும்; சத்ருவே சொல்லிலும் ச்ரவணஹிக்க வேண்டு மத்தைச்சொல்லிற்று † அஸஹ்யாபசாரப்ராசுர்யத்தாலே திருநாமம்கேட்டுப் பொறுக்க மாட்டாமையாலே முனிந்தானாயிற்று. (பிள்ளையை) திருநாமம் சொன்னதுவே ஹேதுவாக வயிற்றில் பிறந்தவனைக் கைவிட்டானவன். †திருநாமம் சொன்னாரோடே தமக்கு ஸம்பந்தமாக நினைத்திருந்த படியாலே "பிள்ளை" என்கிறார். (வெகுண்டு தூண்புடைப்ப) † கோபத்தாலே செய்வதறியாதே தூணைத்தட்ட. (பிறையித்யாதி) பிறைபோலே யிருந்த எயிற்றையும், அக்நிபோலேயிருந்த கண்களையும் †புறப்படவிடா நின்றுள்ள பெரியவாயையு முடைய. (தெள்ளியசிங்கம்) †ஹிரண்யனுடைய முரட்டுவடிவைக்கண்டுபிற்காலியாதே நரஸிம்ஹமாய் அவ்வழியாலே தானே ஆச்ரயணீயனென்னுமிடத்தை வெளியிட்டவன். ... ... ... ... (அ)

---

அரு.—எட்டாம்பாட்டு. (பள்ளியிலித்யாதி). ராவணாந்தகனான புருஷஸிம்ஹத்தைக்கண்டு புகழா நிற்கச் செய்தே, ராவணனுடைய பூர்வஜந்மத்தின் ப்ராதிகூல்யத்தை யநுஸந்தித்து, அவனுக்கும் அந்தகனான புருஷஸிம்ஹத்தைக்கண்டு புகழப் புக்காரென்று ஸங்கதிகண்டு கொள்வது.

(நாலிரண்டேயாகிலும்)என்றது-திருமந்த்ரமெட்டெழுத்தேயாகிலுமென்றுமாம் (க)"నారాయణేతి శబ్దోస్తి-நாராயணேதி சப்தோஸ்தி"என்கிறநாலும்,(உ)* ஹரிரித்யக்ஷரத்வயமும்இரண்டுமேயென்றுமாம்;விஷ்ணுஷடக்ஷரியாகவுமாம். (ங)"ప్రాతర్దేవేతి కృష్ణేతి గోవిన్దేతిచ జల్పతామ్ । మధ్యాహ్నే చాపరాహ్ణే చ యోవసాద స్సఉచ్యతామ్-ப்ராதர்தேவேதிக்ருஷ்ணேதி கோவிந்தேதிச ஜல்பதாம் | மத்யாஹ்னே சாபராஹ்ணேசயோவஸாதஸ்ஸ உச்யதாம்" என்று அவன் சொன்னவெதிருநாமங்களென்றுமாம். தமக் ப்ரசுரனுக்குத் ‡திருநாமங்கள் ஒள்ளியவாயிருக்கு மோவென்ன ;! அருளிச்செய்கிறார், (வயிற்றிலித்யாதி). "ஒன்று-

---

(க) (உ) (ங)

ஓர்" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார், (பள்ளியோது மித்யாதி). ஆனால் பொறுப்பிலனாகைக்கு ஹேதுவென்னென்ன; அருளிச்செய்கிறார், (அஸஹ்யேத்யாதி). பொறுப்பிலனானபின்பு அவனுக்குப்பிள்ளையென்னுமதுவிருத்தமாகையாலே, ஆழ்வார் தமக்குப்பிள்ளையாக அத்யவஸித்தாரென்கிறார், (திருநாமமித்யாதி). (க) "𑌯𑍁𑌵𑌤𑌯𑌸𑍍𑌤𑌨𑌯𑍋𑌃 - யுவதயஸ்தநயா:" என்று ப்ரீதி விஷயதயா அத்யவஸிக்கலாமிறே. சிறுக்கன்வார்த்தை பொறுக்கமாட்டாவிட்டால், தூணைப்புடைக்கத் தூண் செய்தகுற்றமென்னென்ன; அருளிச்செய்கிறார், (கோபத்தாலேயித்யாதி). (புறப்படவிடாநின்றுள்ள) நாக்கைப்புறப்பட விடாநின்றுள்ள வென்றபடி. இது "பேழ்" என்றத்தால் அர்த்தஸித்தம்; சிங்கபதலப்ய மாகவுமாம். "தெள்ளிய" பயலேசமின்றிக்கே தெளிந்தவென்றும், "தேவு" என்றும் சொன்னதுக்குத் தாத்பர்யம், (ஹிரண்யனுடைய வித்யாதி). ... ... ... ... (அ)

மூ.—மீனமர்பொய்கைநாண்மலர்கொய்வான்வேட்கையினோடுசென்றிழிந்த
கானமர்வேழம்கையெடுத்தலறக்கராவதன்காலினைக்கதுவ
ஆனையின்துயரந்தீரப்புள்ளூர்ந்துசென்றுநின்றாழிதொட்டானைத்
தேனமர்சோலைமாடமாமயிலைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே. (கூ)

| பதம். | உரை. |
|---|---|
| மீன் அமர்பொய்கை | மீன்கள்பொருந்திய மடுவிலே |
| நாள் | அப்போதலர்ந்த |
| மலர் | புஷ்பங்களை |
| கொய்வான் | பறிக்கவேணுமென்கிற |
| வேட்கையினோடு | ஆசையோடே |
| சென்றுஇழிந்த | வந்திழிந்ததாய் |
| கான் | காட்டிலே |
| அமர் | ஸ்வைரஸஞ்சாரம்பண்ணக்கடவதான |
| வேழம் | யானையானது |
| கை | தன் தும்பிக்கையை |
| எடுத்து | உயரவெடுத்து |
| அலற | பிளிறும்படி |
| கரா | முதலையானது |
| அதன் | அதினுடைய |
| காலினை | காலை |
| கதுவ | கவ்வ(அந்தஸமயத்திலே), |
| ஆனையின் | ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய |
| துயரம் | துக்கம் |
| தீர | தொலையும்படி |
| புள்ஊர்ந்து | பெரியதிருவடியை மேற்கொண்டு |
| சென்று | விரைந்துவந்து |
| நின்று | அப்பொய்கைக்கரையிலேநின்று |
| ஆழிதொட்டானை | திருவாழியைவிடுத்த ஸ்வாமியை |
| தேன் அமர் | தேன்மாறாத |
| சோலை | சோலைகளாலேசூழப்பட்ட |
| மாடமாமயிலைத் | திருவல்லிக் கேணிக் |
| கண்டேன். | (கூ) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (மீனமரித்யாதி) நெடுநாள் பூத்தேடிப்பெறுமையாலே இடர்பட்டுத் திரிந்தவிது பூத்த தடாகத்தைக்

(ச) ஸ்தோ-ர-

கண்டு,†க்ஷுத்ரமத்ஸ்யத்துக்குமேற்பட துஷ்டஸத்வமுண்டென்று மதியாதேவந்து செவ்விப்பூவைப் பறிக்கைக்காகப்பெரிய அபிநிவேசத்தோடேவந்திழிந்த. (கானமர்வேழம்) காட்டிலே ஸ்வைர ஸஞ்சாரம் பண்ணக்கடவ யானையானது கையெடுத்துக் கூப்பிடும்படியாக †முதலையானது இதின்காலைக்கதுவ. †முதலைக்குத்தன்நிலமாய் இதுக்கு வேற்றுநிலமாயிற்று. ஆனை நெடுநாள்பட்ட இடரெல்லாம் போம்படியாகப்பெரியதிருவடியை மேற்கொண்டு வந்து, ஆனைக்கிடரின்றிக்கே முதலைக்கே இடராம்படி திருவாழியை ஏவினானாயிற்று. வண்டுகளமர்ந்தசோலையையும் மாடங்களையுமுடைத்தான மயிலாப்பூரில் திருவல்லிக்கேணிக்கண்டேனே. ... ... (௯)

அநு—ஒன்பதாம்பாட்டு. (மீனமரித்யாதி). ஆண்பிள்ளைகளான ஐவருக்கும், பெண்பிள்ளைகளான த்ரௌபதி ஸ்ரீஜநகராஜன் திருமகள் இவர்களுக்கும், பள்ளியிற்பிள்ளையான சிறுக்கனுக்கு முதவினவளவன்றிக்கே, ஒரு திர்யக்காலே ஒருதிர்யக்குக்கு வந்தநோவையும் பொறுமே அரைகுலையத் தலைகுலைய வந்து உதவின மஹாகுணத்திலே கட்டுண்டு போயநுபவிக்கிறாரென்று ஸங்கதி கண்டு கொள்வது.

''மீனமர்'' என்று விசேஷித்ததுக்கு பாவம், (க்ஷுத்ரேத்யாதி). ''சுரா'' என்றதினர்த்தம், (முதலை)என்றது. ஆனையாயிருந்து நீர்ப்புழுவுக்ககப்பட்டுக் கையெடுத்தலறுவானென்னென்ன; அருளிச்செய்கிறார், (முதலைக்கித்யாதி)(௯)

டபமும்

மூ.—மன்னு தண்பொழிலும் வாவியும்மதிளும்மாடமாளிகையும்மண்
தென்னன்தொண்டையர்கோன்செய்தநன்மயிலைத்திருவல்லிக்கேணி
கன்னிநன்மாடமங்கையர்தலைவன்காமருசீர்க்கலிகன்றி [நின்றானைக்
சொன்னசொல்மாலைபத்துடன் வல்லார் சுகமினிதாள்வர்வானுலகே.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மன்னு | நித்யமாய் | தொண்டையர் | தொண்டைநாட்டிலுள்ளவர்களுக்கு |
| தண் | குளிர்ந்திருந்துள்ள | கோன் | தலைவனானதொண்டைமான்சக்ரவர்த்தி |
| பொழிலும் | சோலைகளையும் | செய்த | ப்ரதிஷ்டிப்பித்த |
| வாவியும் | நீர்நிலங்களையும் | நல் | அழகாயிருந்துள்ள |
| மதிளும் | ப்ராகாரங்களையும் | மயிலைத்திருவல்லிக்கேணி | மயிலாப்பூரைப்படைவீடாகவுடையதிருவல்லிக்கேணியில் |
| மாடம் | மாடங்களையும் | நின்றானை | நின்றவன்விஷயமாக, |
| மாளிகையும் | மேல்மச்சுள்ளக்ருஹங்களையும் | | |
| மண்டபமும் | மண்டபங்களையுமுடைத்தாம்படி | | |
| தென்னன் | பாண்டிமஹாராஜாவின்வம்சஸ்த்தனாய் | | |

| | |
|---|---|
| கன்னி | அரணுகப்போரும்படியாய் |
| நல் | நன்றாயிருந்துள்ள |
| மாடம் | மாடங்களையுடைத்தான |
| மங்கையர் | திருமங்கையிலுள்ளார்க்கு |
| தலைவன் | ப்ரதாநராய் |
| காமர் | அழகிய |
| சீர் | ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயையுடையரான |
| கலிகன்றி | ஆழ்வார் |
| சொன்ன | அருளிச்செய்ததாய் |
| சொல்மாலை | சப்தஸந்தர்ப்பமான |
| பத்துடன் | பத்துப்பாட்டுக்களையும் |
| வல்லார் | அப்யஸிக்கவல்லவர்கள் |
| இனிதுசுகம் | நித்யாநுபவம்பண்ணும்படியான |
| வானுலகு | பரமபதத்தை |
| ஆள்வர் | கிட்டப்பெறுவர்கள். |

வ்யா.—பத்தாம்பாட்டு. (மன்னுதண் பொழிலுமித்யாதி) நித்யமாய்க்குளிர்ந்திருந்துள்ள பொழிலும், நீர்நிலங்களும், அரணுகப்போரும்படியான மதிள்களும், மாடங்களும், மாளிகைகளும், மண்டபங்களும், இன்னமும் † சொல்லிச்சொல்லாத நன்மைகளுமெல்லாமுண்டாம்படியாயிற்றுத் தொண்டைமான் சக்ரவர்த்தி யேற்றிற்று. (கன்னி) அரணுகப் போரும்படியாய் நன்றாயிருக்கிற மாடங்களையுடைய திருமங்கைக்கு ப்ரதாநர். (காமருசீர்க்கலிகன்றி) ஸ்ப்ருஹணீயமான ஶ்ரீவைஷ்ணவஶ்ரீயையுடைய ஆழ்வாரருளிச் செய்தபத்தையும் அப்யஸிக்கவல்லார்கள். (சுகமினிதாள்வர்வானுலகே) நித்யாநுபவம் பண்ணலாம் படியான நித்யவிபூதியை ப்ராபிக்கப்பெறுவர் ()

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு—பத்தாம்பாட்டு.(மன்னுதண் பொழிலுமித்யாதி). (சொல்லிச்சொல்லாத நன்மைகளுமெல்லாம்)என்றது, "நன்மயிலை" என்றுவிசேஷித்ததின் தாத்பர்யம். அதுவும் இதுவும் என்கிற சகாரத்தாலே பலித்ததென்றுமாம். "கன்னி" என்று-அழியாதபதார்த்தத்தைக் காட்டுகையாலே, (அரணுகப் போரும்படி) என்றது. (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

இரண்டாம்பத்தில் - மூன்றாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார்-திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி - உ - பத்து - ச - திருமொழி - அன்றாயர் ப்ரவேசம்.

வ்யா.—பிராட்டிமாரோடு கூடவந்து விரோதிநிரஸநசீலனாய், ப்ரபலவிரோதி பாபங்களை அநாயாஸேந போக்கவல்லனாய், ஸர்வஸ்வாமியான ஸர்வேஶ்வரன், உகந்தருளின நிலங்களெங்கும் பண்ணும்விருப்பத்தைத் திருநீர்மலையிலே பண்ணிக்கொண்டுவந்து ஸந்நிஹிதனானான்;†அநவஹிதராயிருப்பார்வார்த்தையைக்கேட்டு அநர்த்தப்பட்டுப்போகாதே அவனை ஆஶ்ரயித்து க்ருதார்த்தராய்ப்போங்கோளென்று பரோபதேச ப்ரவ்ருத்தராகிறார்.

---

அநு.—அன்றாயர்ப்ரவேசம்—சிங்கவேழ் குன்றத்திலிருந்தவாறும், திருவேங்கடத்தில் நின்றவாறும், திருவெவ்வுளில்கிடந்தவாறுமானவிவற்றைத்திருவல்லிக்கேணியிலே யொருமுகம் செய்து அநுபவியாநிற்க, கரிமகரங்களுக்குண்டான வைரம்தீரக்கடுநடையிட்டு நடந்தவாறு மநுபவித்தாராயிருந்தார்; இவ்வநுபவப்ரகர்ஷத்தாலே, இன்னுமிப்படி யநுபவிக்கலாமிடங்களுண்டோவென்று திருவுள்ளத்திலே யாராயாநிற்க, திரு நறையூர் முதலானவை தோற்றி, அவையெல்லாவற்றிலுமுண்டான விருப்பத்தைத்திருநீர்மலையிலே பண்ணினபடியை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.§(க)"அவர் செய்கை வெறுத்து" என்றத்தையும், (உ) "பேசுமளவன்றிதுவம்மின்," என்ற பாட்டையும் உட்கொண்டருளிச்செய்கிறார், (அநவஹிதராயித்யாதி).

மூ.—அன்றாயர்குலக்கொடியோடணிமாமலர்மங்கையொடன்பளவியவுணர்க்
கென்றானுமிரக்கமிலாதவனுக்குறையுமிடமாவதிரும்பொழில்சூழ்
நன்றாயபுனல்நறையூர்திருவாலிகுடந்தைதடந்திகழ்கோவல்நகர்
நின்றானிருந்தான்கிடந்தான்நடந்தாற்கிடம்மாமலையாவதுநீர்மலையே.

| பதம். | உரை. |
|---|---|
| அன்று | க்ருஷ்ணாவதாரத்தில் |
| ஆயர்குலக்கொடியோடு | இடைக்குலத்துக்குக் கொடிபோன்ற நப்பின்னைப் பிராட்டியுடனும் |
| அணி | அழகியதாய் |
| மா | ஶ்லாக்யமான |
| மலர் மங்கையொடு | தாமரைப்பூவைப் பிறந்தகமாகவுடைய பெரியபிராட்டியாரம்சமான ருக்மணிப்பிராட்டியுடனும் |
| அன்பு அளவி | ஸ்நேஹந்தோற்றக்கலந்து |

---

§ (பிச்சச்சிறுபீலி) இத்யாதியைப்பற்ற (அநவஹிதராய்) என்றது.

(க) உ-ச-அ. (உ) உ-ச-கூ.

| | |
|---|---|
| என்றானும் | எக்காலத்திலும் |
| அவுணர்க்கு | அஸுரர்கள்பக்கல் |
| இரக்கம் இலாதவனுக்கு | தயையில்லாதவனாய்; |
| இரு | பெரிய |
| பொழில் | சோலைகளாலே |
| சூழ் | சூழப்பட்டு |
| நன்றாயபுனல் | நல்லஜலஸம்ருத்தியையுடைத்தான |
| நறையூர் | திருநறையூரிலே |
| நின்றான் | நின்றவனாய், |
| திருவாலி | திருவாலியிலே |
| இருந்தான் | இருந்தவனாய், |
| குடந்தை | திருக்குடந்தையிலே |
| கிடந்தான் | சாய்ந்தவனாய், |
| தடம் | தடாகங்களாலே |
| திகழ் | ஒளிவிடாநின்றுள்ள |
| கோவல்நகர் | திருக்கோவலூரிலே |
| நடந்தாற்கு | நடந்தவனான ஸர்வேஸ்வரனுக்கு |
| உறையும் | நித்யவாஸம்பண்ணும் |
| இடம் ஆவது | ஸ்தாநமாவது |
| மா | ஶ்லாக்யமான |
| மலை | மலையான |
| நீர்மலை | திருநீர்மலையாம். (க) |

வ்யா.—முதற்பாட்டு. (அன்றாயர்) † முன்பு-பண்டொருநாள், நப்பின்னைப்பிராட்டியோடும், அழகிய தாமரைப்பூவை இருப்பிடமாகவுடைய பெரிய பிராட்டியாரோடும் † விரும்பிக்கலந்து. (அவுணர்க்கித்யாதி) †அவர்களுடன்கூட விருந்தபோதுமகப்பட அஸுரவர்க்கத்துக்கு ஒருகாலு மிரக்கமில்லாதவனுக்கு நித்யவாஸம் பண்ணுகைக்கு ஸ்தாநமாவது;—பரந்தபொழிலாலே சூழப்பட்ட நல்ல ஜலஸம்ருத்தியை யுடைத்தான திருநறையூர், இப்படிப்பட்ட நன்மைகளையுடைய திருவாலி, திருக்குடந்தை, தடாகங்கள் திகழாநின்றுள்ள திருக்கோவலூர்; இவை துடக்கமானவற்றில். (நின்றானித்யாதி) திருநறையூரிலே நின்றான், திருவாலியிலே இருந்தான், திருக்குடந்தையிலே சாய்ந்தான், திருக்கோவலூரிலே நடந்தான். (இடம்மாமலையாவது)†மலையாயிருக்கச்செய்தே அல்லாதவை வாஸஸ்தாநமாகிறதில்லையிறே. உகந்தருளின நிலங்க †ளெங்கும் பண்ணக்கடவ விருப்பத்தைப்பண்ணிக்கொடுவந்து ஸந்நிஹிதனான தேசம் திருநீர்மலை. ... ... ... ... (க)

---

அரு—முதற்பாட்டு. (அன்றாயரித்யாதி) ''அன்பளவி'' என்றதினர்த்தம், (விரும்பிக்கலந்து) என்றது. அளாவி என்றது, ''அளவி'' என்று குறுகிக்கிடக்கிறது, ''என்றானும்''-என்றாகிலுமென்றர்த்தமாய், தாத்பர்யம், (அவர்களுடனித்யாதி). மூலத்திலே, ''கோவல்நகர்'' என்றவநந்தரம், இவற்றிலேயென்று அத்யாஹரித்துக்கொள்வது. வ்யாக்யையிலேயும், (திருக்கோவலூர் இவை) என்று வாக்யத்தைநிறுத்தி, அநந்தரம், திருநறையூர் என்று ஒருபதம் அத்யாஹரிப்பது. இவ்வாக்யத்தை மேலுக்கு சேஷமாக்கிக்கொள்வது. ''இடம் ஆவது மாமலையான நீர்மலை'' என்று அந்வயித்துக்கொள்வது. நீர்மலையை ''மாமலை'' என்று விசேஷிக்கவேணுமோவென்ன, (மலையாயிருக்கவித்யாதி). (எங்கும் பண்ணக்கடவவிருப்பத்தை) என்றது-நின்றதும் இருந்ததும் கிடந்ததும், நடந்ததுமான விவற்றையென்றபடி. ... ... (க)

| | | | |
|---|---|---|---|
| என்றானும் | எக்காலத்திலும் | குடந்தை | திருக்குடந்தையிலே |
| அவுணர்க்கு | அஸுரர்கள்பக்கல் | கிடந்தான் | சாய்ந்தவனாய், |
| இரக்கம் இலாதவனுக்கு | தயையில்லாதவனாய்; | தடம் | தடாகங்களாலே |
| | | திகழ் | ஒளிவிடாநின்றுள்ள |
| இரு | பெரிய | கோவல்நகர் | திருக்கோவலூரிலே |
| பொழில் | சோலைகளாலே | நடந்தாற்கு | நடந்தவனான ஸர்வேஸ்வரனுக்கு |
| சூழ் | சூழப்பட்டு | | |
| நன்றாயபுனல் | நல்லஜலஸம்ருத்தியையுடைத்தான | உறையும் | நித்யவாஸம்பண்ணும் |
| | | இடம் ஆவது | ஸ்த்தாநமாவது |
| நறையூர் | திருநறையூரிலே | மா | ஶ்லாக்யமான |
| நின்றான் | நின்றவனாய், | மலை | மலையான |
| திருவாலி | திருவாலியிலே | நீர்மலை | திருநீர்மலையாம். (க) |
| இருந்தான் | இருந்தவனாய், | | |

வ்யா.—முதற்பாட்டு. (அன்றாயர்) † முன்பு-பண்டொருநாள், நப்பின்னைப்பிராட்டியோடும், அழகிய தாமரைப்பூவை இருப்பிடமாகவுடைய பெரிய பிராட்டியாரோடும் † விரும்பிக்கலந்து. (அவுணர்க்கித்யாதி) †அவர்களுடன்கூட விருந்தபோதுமகப்பட அஸுரவர்க்கத்துக்கு ஒருகாலு மிரக்கமில்லாதவனுக்கு நித்யவாஸம் பண்ணுகைக்கு ஸ்த்தாநமாவது;—பரந்தபொழிலாலே சூழப்பட்ட நல்ல ஜலஸம்ருத்தியை யுடைத்தான திருநறையூர், இப்படிப்பட்ட நன்மைகளையுடைய திருவாலி, திருக்குடந்தை, தடாகங்கள் திகழாநின்றுள்ள திருக்கோவலூர்; இவை துடக்கமானவற்றில். (நின்றானித்யாதி) திருநறையூரிலே நின்றான், திருவாலியிலே இருந்தான், திருக்குடந்தையிலே சாய்ந்தான், திருக்கோவலூரிலே நடந்தான். (இடம்மாமலையாவது)†மலையாயிருக்கச்செய்தே அல்லாதவை வாஸஸ்த்தாநமாகிறதில்லையிறே. உகந்தருளின நிலங்க †ளெங்கும் பண்ணக்கடவ விருப்பத்தைப்பண்ணிக்கொடுவந்து ஸந்நிஹிதனான தேசம் திருநீர்மலை. ... ... ... ... (க)

அரு—முதற்பாட்டு. (அன்றாயரித்யாதி) "அன்பளவி" என்றதினர்த்தம், (விரும்பிக்கலந்து) என்றது. அளாவி என்றது, "அளவி" என்று குறுகிக்கிடக்கிறது, "என்றானும்"-என்றாகிலுமென்றர்த்தமாய், தாத்பர்யம், (அவர்களுடனித்யாதி). மூலத்திலே, "கோவல்நகர்" என்றவநந்தரம், இவற்றிலேயென்று அத்யாஹரித்துக்கொள்வது. வ்யாக்யையிலேயும், (திருக்கோவலூர் இவை) என்று வாக்யத்தைநிறுத்தி, அநந்தரம், திருநறையூர் என்று ஒருபதம் அத்யாஹரிப்பது. இவ்வாக்யத்தை மேலுக்கு சேஷமாக்கிக்கொள்வது. "இடம் ஆவது மாமலையான நீர்மலை" என்று அந்வயித்துக்கொள்வது. நீர்மலையை "மாமலை" என்று விசேஷிக்கவேணுமோவென்ன, (மலையாயிருக்கவித்யாதி). (எங்கும் பண்ணக்கடவவிருப்பத்தை) என்றது-நின்றதும் இருந்ததும் கிடந்ததும், நடந்ததுமான விவற்றையென்றபடி. ... ... (க)

மூ.—காண்டாவனமென்பதோர்காடமரர்க்கரையனது கண்டவனிற்கமுனே
மூண்டாரழலுண்ண முனிந்ததுவுமதுவன்றியுமுன்னுலகம்பொறைதீர்த்
தாண்டானவுணனவன்மார்பகலமுகிரால்வகிராகமுனிந்தரியாய்
நீண்டான்குறளாகிநிமிர்ந்தவனுக்கிடம்மாமலையாவதுநீர்மலையே. (உ)

| பதம். | உரை. |
|---|---|
| அமரர்க்குஅரையனது | தேவர்களுக்குத்தலைவனான இந்த்ரனுடையதாய் |
| ஓர் | ஒருவராலுமழிக்கவொண்ணாத |
| காண்டாவனம் என்பது | காண்டவவநம் என்னும் |
| காடு | காட்டை |
| அவன் | அந்த இந்த்ரன்றானே |
| கண்டுநிற்க | பார்த்துக்கொண்டிருக்க |
| முனே | அவன்முன்பே |
| ஆர் | பூர்ணமான |
| அழல் | அக்நியானது |
| மூண்டு | மேல்விழுந்து |
| உண்ண | புஜிக்கும்படி |
| முனிந்ததுவும் | சீறியருளியும், |
| அதுவன்றியும் | அதுக்குமேலே, |
| முன் | பாரதயுத்தத்தில் |
| உலகம் | பூமியின் |
| பொறை | பாரத்தை |

| பதம். | உரை. |
|---|---|
| தீர்த்து | போக்கி |
| ஆண்டான் | லோகத்தை ரக்ஷித்தவனாய் |
| அவுணனவன் | ராக்ஷஸனான ஹிரண்யனுடைய |
| அகலம் | பரந்த |
| மார்பு | மார்வை |
| உகிரால் | நகங்களாலே |
| வகிராக | இரண்டுகூறும்படி |
| முனிந்து | சீறியருளி |
| அரியாய் | ஸிம்ஹரூபியாய் |
| நீண்டான் | வளர்ந்திட்டவனாய், |
| குறளாகி | வாமநரூபியாய்க்கொண்டு (மஹாபலிபக்கலிலே சென்று நீரேற்றபின்பு) |
| நிமிர்ந்தவனுக்கு | த்ரிவிக்ரமாவதாரம் செய்தருளின ஸர்வேஸ்வரனுக்கு |
| இடம்ஆவது | வாஸஸ்தாநமாவது மாமலையானநீர்மலை. (உ) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (காண்டாவனம்)†காண்டவவநமென்று - இந்த்ரனுடைய காவற்காடாய், அதுதான் ஒருவர்க்கு மழிக்கவொண்ணாதபடியிருக்குமாயிற்று. †அர்ஜுநனும் க்ருஷ்ணனும் பூம்பந்தேறிட்டு விளையாடாநிற்கச்செய்தே அக்நிபகவான் "எனக்கு விருந்திடவேணும்" என்றபேக்ஷிக்க, "நீ இந்த்ரனுடைய காவற்காட்டைபுஜி" என்றுவிட்டானாயிற்று, அங்கே ஆஸுரப்ரக்ருதிகள்புக்கு ஒதுங்கினவாறே அவர்களைநிரஸிக்கவேணுமென்று; அத்தைச்சொல்லுகிறது. அமரர்க்கரையனுண்டு - இந்த்ரன், அவன் கண்டுநிற்க; அவன்†முன்பே.(மூண்டாரழலுண்ண முனிந்ததுவுமதுவன்றியும்)†பேகணித்துப் பிற்காலித்துப் போகக்கடவ அக்நியானது மேல்விழுந்து புஜிக்கும்படியாகச்சீறி, அதுக்குமேலே.†அன்றிக்கே, மூண்டாரென்று - எதிரிட்டவர்களாய், சத்ருக்களைச்சொல்லவுமாம். (முன்னுலகமித்யாதி) முன்பு பூபாரத்தைப்போக்கி நிர்வஹித்துப்

போந்தவன். ஆஸுரப்ரக்ருதியான ஹிரண்யனுடைய பரந்த மார்வைத்திருவுகிராலே இரண்டுகூறும்படி சீறியருளி. (அரியாய் நீண்டான்)† அவனுடையப்ரதிஜ்ஞாகாலத்திலே வந்து உதவிற்றிலனாகில் குணங்கள் ஸாவதியாம்போலே. (குறளித்யாதி) ஸர்வாதிகனான தான் வாமநவேஷத்தைப்பரிக்ரஹித்து நிற்கச்செய்தே மஹாபலி பக்கலிலே சென்றிரந்து, திருக்கையிலே நீர் விழுந்தவாறே ஆகாசாவகாசமிடமடையும்படிவளர்ந்துஅளந்துகொண்டவனுக்கு வாஸஸ்த்தாநம். ... ... ... ... (௨)

---

அரு—இரண்டாம்பாட்டு. (காண்டாவனமித்யாதி).கீழ்த்திருமொழியிலே (க)"இந்திரன் சிறுவன்தேர்முன்னின்றானை" என்று ப்ரஸ்துதனான இந்த்ரனும், அவனுத்யாநத்தையழித்தபிள்ளையும், அவனைக்கொண்டுபூபாரத்தை நீக்கினபடியையும், அத்தோடு தோள்திண்டியான பிதாபுத்ரர்களுடைய பாத்யபாதகபாவ ஸம்பந்தமும் திருவுள்ளத்தில்தோற்றி, அவற்றையநுஸந்தியா, நடந்தானுடைய அபதாநத்திலீடுபடுகிறாரென்று ஸங்கதி.

"காண்டா" என்று நீட்டலாய், வகரம் கடைக்குறைத்தலாய்க்கிடக்கிறதென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார், (காண்டவவநமென்றித்யாதி). இந்த்ரனநுகூலனன்றோ, அவன் காட்டைஅழலுண்ணமுனிந்ததுக்கு ப்ரஸக்தியென்னென்ன; அருளிச்செய்கிறார், (அர்ஜுநனுமித்யாதி). "முனே" என்றதினர்த்தம், (முன்பே) என்றது. மூண்டு-ஆர்-பூர்ணமாக, அழல்-அக்நி, உண்ணவென்றுசப்தார்த்தமாய், தாத்பர்ய மருளிச்செய்கிறார், (பேகணித்தித்யாதி). பேகணிப்பு-வைவர்ண்யம். இத்தால்-இத்க்ருஹேதுவான இந்த்ரனிடத்தில் நின்றும்வந்த லஜ்ஜாபயங்களைச்சொல்லிற்றாயிற்று. அக்காட்டிலிருக்கிற மூண்டாரைமுனிந்ததுவும் என்று த்விதீயையாக்கியருளிச்செய்கிறார், (அன்றிக்கேயித்யாதி). "நீண்டான்" என்றது - உத்க்ருஷ்டனென்றாய் அருளிச்செய்கிறார், (அவனுடையவித்யாதி). ப்ரஹ்லாதனுடையவென்றபடி. ... (௨)

மூ.—அலமன்னுமடல்சுரிசங்கமெடுத்தடலாழியினாலணியாருருவில் [ல்
புலமன்னுவடம்புனைகொங்கையினாள்பொறைதீரமுனாளடுவாளமரி
பலமன்னர்படச்சுடராழியினைப்பகலோன்மறையப்பணிகொண்டணிசேர்
நிலமன்னனுமாயுலகாண்டவனுக்கிடம்மாமலையாவதுநீர்மலையே. (௨)

---

(க) ௨ - ௩ - ௬ -

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆர் அணி | மிகவுமழகிய | கொங்கையினுள் | முலையையுடைத்தான ஸ்ரீபூமிப் பிராட்டியுடைய |
| உருவில் | திருமேனியிலே | பொறை | பாரத்தை |
| அடல் | யுத்தோந்முகமான | தீர | போக்குகைக்காக |
| ஆழியினுல் | திருவாழியோடே | ஆள் அடு | மநுஷ்யரைமுடிக்கவல்ல |
| அலம் | கலப்பையையும் | வாள் | ஒளியையுடைத்தான |
| மன்னும் | பொருந்தியும் | அமரில் | பாரதயுத்தத்திலே |
| அடல் | யுத்தோந்முகமாயும் | பலமன்னர் | அநேகராஜாக்கள் |
| சுரி | சுரியையுடையதுமான | பட | நசிக்கும்படி [டைய |
| சங்கம் | ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் | சுடர் | மிக்கதேஜஸ்ஸையு |
| எடுத்து | தரித்து, | ஆழியினை | திருவாழியை |
| முன் | துர்யோதநாதிகள் பொருந்தாதவனுய், | பகலோன் | ஆதித்யன் |
| புலம் | (ஸர்வேஸ்வரனுடைய) சக்ஷுராதி இந்த்ரியங்கள் | மறைய | மறையும்படியாக |
| | | பணிகொண்டு | கார்யங்கொண்டு |
| | | அணிசேர் | அழகுபொருந்திய |
| மன்னு | ஸர்வகாலமும்ப்ரவணமாய்க்கிடக்கும்படியாய் | நிலமன்னனுமாய் | பூபதியுமாய் |
| வடம் | ஆரம்முதலிய ஆபரணங்களாலே | உலகுஆண்டவனுக்கு | லோகபாலநம்பண்ணினவனுக்கு |
| புனை | அலங்கரிக்கப்பட்ட | | |

இடமாவதுமாமலையானநீர்மலை. (ங)

வ்யா.—மூன்றும்பாட்டு. (அலம்)ஹலம், நித்யமாய் † யுத்தோந்முகமாய் சுரியையுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யம், இவற்றைத்தரித்து, (அடலாழியினுலணியாருருவில்) † யுத்தோந்முகமான திருவாழியோடே, நன்றாயிருக்கிற திருமேனியிலே; கலப்பை, ஸ்ரீபாஞ்சஜந்யமென்கிற இவற்றைத் தரித்தென்னுதல். (அடுத்து) என்று பாடமாகில், † அழகியவடிவோடே, திருவாழியோடே மற்றைதிவ்யாயுதங்களையும் சேர்த்து. அதாவது-(க) "உபஸம்ஹர -உபஸம்ஹர" என்ன மறைத்தபடி. ஆக, வெளியிடிலும் மறைக்கிலும் ஆஸ்ரிதார்த்தமாயிருந்தபடி. (புலமன்னுஇத்யாதி) † ஸர்வேஸ்வரனுடைய ஸர்வகரணங்களும் தன் பக்கலிலே ப்ரவணமாம்படி ஸர்வாபரணங்களாலும் அலங்க்ருதமான திருமுலைத்தடத்தையுடைய ஸ்ரீபூமிப்பிராட்டியாருடைய பாரமானது போம்படியாக முன்பு, ஆள்களைமுடிக்கிற ஒளியையுடைத்தான பூசலிலே யென்னுதல். † ஆண்பிள்ளைகளாயிருப்பாரை முடிக்கக்கடவ மதிப்புடைத்தான பூசலிலே. (பலமன்னர்பட)

(க) வி-பு-இ-ரு-கரு.

நாளொன்றுக்குப் பதினாயிரம் ராஜாக்கள் படும்படியாக, நிரவதிக தேஜோரூபமான திருவாழியை ஆதித்யன் மறையும்படியாகக் கார்யங்கொண்டு. †"அணிசேர் நிலம்" என்னுதல், "அணிசேர்நிலமன்னனுமாய்" என்னுதல். (நிலமன்னனுமாயுலகாண்டவனுக்கு) சக்ரவர்த்தித் திருமகனைச்சொல்லுதல்; அன்றிக்கே; பூபாரநிர்ஹரணம் பண்ணினபடியைச் சொல்லுகையாலே க்ருஷ்ணனைச்சொல்லுதல். ... ... ... ... ... (௩)

---

அரு—மூன்றாம்பாட்டு. (அலமித்யாதி). "மூன்னுலகம் பொறைதீர்த்தாண்டான்" என்னுமது, க்ருஷ்ணாவதாரத்துக்கு ப்ரதாநப்ரயோஜநமாகையாலே அத்தை ஸப்ரகாரமாக வநுபவிக்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

"அடல்" என்றதினர்த்தம், (யுத்தோந்முகமாய்) என்றது. "உருவில்" என்றது - ஸப்தமியாக்கி, "அணியாருருவில் - அடலாழியினால் - அலமன்னுமடல்சுரிசங்கமெடுத்து" என்று அந்வயம் விவக்ஷித்து அருளிச்செய்கிறார், (யுத்தேத்யாதி). "உருவில்" என்றத்தைத்ருதீயையாக்கி பாடாந்தரத்திலந்வயமப்படியேயாய், தாத்பர்யம்,(அழகியவித்யாதி). "வடம்" என்றுஹாரமாய், இது ஸகலாபரணங்களுக்கு முபலக்ஷணம். பூணைகை-பூணுகையாய் அருளிச்செய்கிறார், (ஸர்வேத்யாதி). "வாள்" மதிப்பென்று யோஜநாந்தரம். (ஆண்பிள்ளை யித்யாதி). "அணிசேர்" என்றது - நிலத்துக்கு விசேஷணமாதல், மன்னனுக்கு விசேஷணமாதலென்று யோஜநாத்வய மருளிச்செய்கிறார், (அணிசேரித்யாதி வாக்யத்வயத்தாலே.) ... ... ... (௩)

௴.—தாங்காததோராளரியாயவுணன்றனைவீடமுனிந்தவனாலமரும்
பூங்கோதையர்பொங்கெரிமூழ்கவிளைத்ததுவன்றியும்வென்றிகொள்வாளமரில்
பாங்காகமுனைவரொடன்பளவிப்பதிற்றைந்திரட்டிப்படைவேந்தர்பட
நீங்காச்செருவில்நிறைகாத்தவனுக்கிடம்மாமலையாவதுநீர்மலையே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தாங்காதது | (எதிரிகளால்)தடுக்க வொண்ணாதபடி | கோதையர் | மாலைகளையுடையரான ஸ்த்ரீகள் |
| ஓர் | ஒப்பற்ற | பொங்குஎரி | கிளருகிறஅக்நியிலே |
| ஆளரியாய் | நரஸிம்ஹமாய் | மூழ்க | புகும்படி |
| அவுணன்றனை | ஹிரண்யாஸுரனை | விளைத்து | பண்ணினவனாய், |
| வீட | (ப்ராணன்)விடும்படி | அதுவன்றியும் | அதுவேயன்றிக்கே, |
| முனிந்து | சீறியருளி, [லே | முன் | முன்னே |
| அவனால் | அவன்பரிக்ரஹத்தா | வென்றிகொள். | வெற்றியையுடைத்தாய் |
| அமரும் | தரித்திருக்குமவர்களாய் [பட்ட | வாள் | மதிப்புடைத்தான |
| பூ | பூவால்அலங்கரிக்கப் | அமரில் | யுத்தத்திலே |

| | |
|---|---|
| ஐவரொடு | பஞ்சபாண்டவர்களோடே |
| பாங்காக | (அவர்களுக்குத்)தக்கபடி |
| அன்புஅளவி | ஸ்நேஹம்தோற்றக் கலந்து |
| படை | ஆயுதங்களையுடைய |
| பதிற்றைந்திரட்டிவேந்தர் | இரண்டைம்பதுபேரான துர்யோதநாதிகளும் |
| பட | முடிந்துபோம்படி |
| செருவில் | பாரதயுத்தத்தில் |
| நிறை | த்ரௌபதியினுடைய ஸ்த்ரீத்வத்தை |
| நீங்கா | நீங்காதபடி |
| காத்தவனுக்கு | ரக்ஷித்தவனான ஸர்வேஶ்வரனுக்கு |

இடமாவது மாமலையான நீர்மலை. (ச)

வ்யா—நாலாம்பாட்டு. (தாங்காததித்யாதி) எதிரிகளால் தாங்கவொண்ணாத நரஸிம்ஹமாய், ஹிரண்யன் † முடியும்படியாகச்சீறி, அவனாலே தரிக்கிற, பூங்கோதையருண்டு - ஸ்த்ரீகள், அவர்கள் கிளர்ந்தெரிகிற நெருப்பிலே புக்கு முடிந்துபோம்படிபண்ணி; அதுவே யன்றிக்கே, (வென்றி யித்யாதி) வெற்றிகொண்டல்லது மீளக்கடவதல்லாத மதிப்பையுடைய பூசலிலே. (பாங்காக) தான் ஸ்வாமியானமுறை தோற்ற இருக்குமாகில் †அவர்களோடும் பொருந்தவொண்ணாதிறே. அதுக்காகத்தன்னைத்தாழவிட்டு அவர்களோடே உறவுபண்ணிக் † கலந்து, அற்றைக்கு நூறு ராஜாக்களை வெற்றிகொண்டல்லது மீளாத பூசலிலே, †த்ரௌபதியுடைய ஸ்த்ரீத்வத்தைப்பரிஹரித்தவனுக்கு. ... ... ... ... (ச)

---

அரு—நாலாம்பாட்டு. (தாங்காததித்யாதி). *தெள்ளிய சிங்கத்தையும் *தேவகிசிங்கத்தையும் "பொறைதீர்த்தாண்டான், அரியாய் நீண்டான்" என்றநுபவித்ததன்றியே, தட்டுமாற்றி யநுபவிக்கிறார் ஆராமையாலே யென்று ஸங்கதிகண்டுகொள்வது.

"வீட" என்றது - நீட்டலாய், விட-ப்ராணம்விடும்படியென்று சப்தார்த்தமாய், பலிதம், (முடியும்படி) என்றது. (அவர்களோடும்) - ஐவரோடுமென்றபடி. அன்பளவிபதார்த்தம், (கலந்து) என்றது. "பதிற்றைந்து-" ஐம்பது, "இரட்டி" அதிரட்டி, நூறென்றபடி. "படைவேந்தர்" ஆயுதஸஹிதரான ராஜாக்களென்று கண்டுகொள்வது. "நிறைகாத்தவன்" என்றது - வீரபத்நீத்வ ப்ரயுக்தபூர்த்தியை ரக்ஷித்தவனென்று சப்தார்த்தமாய், பலிதார்த்தமருளிச்செய்கிறார், (த்ரௌபதியித்யாதி). ஸ்த்ரீத்வநிபந்தநமான அச்சத்தையென்றபடி. அச்சம் - ஸ்த்ரீத்வதர்மமிறே. ... ... (ச)

மூ.—மாலுங்கடலாரமலைக்குவடிட்டணைகட்டிவரம்புருவமதிசேர்
கோலமதிளாயவிலங்கைகெடப்படைதொட்டொருகாலமரிலதிரக்
காலமிதுவென்றயன்வாளியினால்கதிர்நீண்முடிபத்துமறுத்தமரும்
நீலமுகில்வண்ணனெமக்கிறைவற்கிடம்மாமலையாவதுநீர்மலையே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஒருகால் | ராவணன் கைவிஞ்சின வன்று | இதுகாலமென்று | இவனை முடிக்கைக்கு இதுநல்லகாலமென்று |
| மாலும் | திரைக் கிளர்த்தியை | | |
| கடல் | கடலானது [யுடைய | அயன்வாளியினால் | ப்ரஹ்மாஸ்த்ரத்தாலே |
| ஆர | நிறையும்படி | | |
| மலைக்குவடிட்டு | மலையின் சிகரங்களைப் பொகட்டு | கதிர் | ஒளியுடைத்தான |
| | | நீள்முடிபத்தும் | பெரிய கிரீடங்கள் தரித்த பத்துத் தலைகளையும் |
| வரம்புருவ | அக்கரையிலே சென்று தட்டும்படி [ணி | | |
| அணைகட்டி | ஸேது பந்தநம் பண் | அறுத்த | சேதித்து |
| மதிசேர் | சந்த்ரனை அளாவும்படி ஓங்கியிருப்பதாய் | அமரும் | திருவயோத்யையிலெ எழுந்தருளியிருந்த வனாய் |
| கோலம் | அழகிதான | | |
| மதிளாய | மதிள்களையுடைய | நீலமுகில் | காளமேகம் போன்ற |
| இலங்கை | லங்கையானது | வண்ணன் | திருநிறத்தை யுடையனான |
| கெட | அழியும்படியாக் | | |
| படை | ஆயுதங்களை | எமக்கு இறைவற்கு | நமக்குஸ்வாமியானவனுக்கு |
| தொட்டு | பிடித்து (ப்ரயோகித் | | |
| அமரில் | யுத்தத்திலே [து) | இடமாவது | மாமலையான நீர்மலை. (௫) |
| அதிர | அதிரும் படி பண்ணி | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (மாலுங்கடல்) ஜலஸம்ருத்தியாலே பிச்சேறினகடலானது;† திரைக்கிளர்த்தியை யுடைத்தான கடலென்றபடி. (ஆர்) நீரிலாழக்கடவ மலையினுடைய சிகரங்களைமுறித்து அணைகட்டி. (வரம்புருவ) அக்கரையிலே சென்று தட்டும்படி. (மதியித்யாதி) சந்த்ர பதத்தளவும் செல்லவோங்கி தர்சநீயமாயிருக்கிற மதிளையுடைத்தான லங்கையானது அழியும்படியாக திவ்யாயுதங்களைப்பிடித்து யுத்தத்திலே அதிரும்படியாக. அதாவது- கடலை அணைசெய்து எடுத்துவிட்டு அடைமதிட் படுத்தி முதல்நாளைப் பூசலிலே கெடும்படியாகப் பண்ணி "பையல் தானே இனி அநுதாபம்பண்ணி இளைத்துவருகிறான்" என்று விட்டிருந்த விடத்தும், பின்னையும் மிகைக்கையாலே, "இனி இவனைவைத்துக் கொண்டு நின்று லீலாரஸமநுபவிக்கையாவது - தேவஜாதியை அச்சமுறுத்துகை, இனியிவனைவைப்போமல்லோம், நல்லகாலம்" என்று ப்ரஹ்

மாஸ்த்ரத்தாலே ஒளியையுடைத்தாயிருக்கிற பெரியமுடிகள் பத்தையுமறுத்து. (அமரும்நீலமுகில்வண்ணன்) ராவணவதம் பண்ணின வநந்தரம் திருமேனியில் பிறந்த பௌஷ்கல்யமிருக்கிறபடி. நீலமானது அமர்ந்திருக்கிற முகில் போலே ஶ்ரமஹரமானவடிவையுடையவன். (எமக்கிறைவற்கு) அவ்வடிவழகாலே என்னை அநந்யார்ஹனாக்கினவனுக்கு ... ... ... ... (ரு)

அ௬—அஞ்சாம்பாட்டு. (மாலுமித்யாதி). ப்ரதோஷாதிதஞன, *பேழ்வாயன் ப்ரபாவத்தையும், பகலையிரவாக்கின பொய்வாயன் பூசலையும், மாறிமாறிப்பேசி யநுபவியாநின்றீர், மஹத்தத்வமான கடலையணைசெய்தும் லங்கையையடைமதிள்படுத்தியும், ராவணனைக்கொன்ற வீரத்தை மறந்தீரோவென்று தான் ஜயஸ்ரீயோடேநின்ற நிலையைக்காட்டக் கண்டநுபவிக்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது.

பலிதம் (திரைக்கிளர்த்தியையித்யாதி). ஆர - நிறையவென்று சப்தார்த்தமாய், "மாலுங்கடலார மலைக்குவடிட்டு-வரம்புருவ-அணைகட்டி" என்றந்வயமாக்கிக்கொள்வது. அமர்ந்திருக்கிற - த்ருஷ்டாந்தமாகப்பொருந்தியிருக்கிற வென்று திருமேனிக்கு விசேஷணம். ... ... (ரு)

மூ.—பாராருலகும்பனிமால்வரையுங்கடலும்சுடருமிவையுண்டுமெனக்
காராதெனநின்றவனெம்பெருமானலைநீருலகுக்கரசாகியவப்
பேரானைமுனிந்தமுனிக்கரையன்பிறரில்லைநுனக்கெனுமெல்லையினான்
நீரார்பேரான்நெடுமாலவனுக்கிடம்மாமலையாவதுநீர்மலையே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | (ப்ரளயகாலத்திலே) | அரசு ஆகிய | ராஜாக்கள்என்கிற |
| ஆர் | பரந்த | அப்பேரானை | அந்தப்பேரையுடையக்ஷத்ரியகுலத்தை |
| பாருலகும் | பூலோகமும் | முனிந்த | சீறியருளின |
| பனி | குளிர்ந்து | முனிக்கு அரையன் | முநிஶ்ரேஷ்டனான ஸ்ரீபரசுராமாழ்வானாய் |
| மால் | பெரிதான | நுனக்கு | உனக்கு |
| வரையும் | பர்வதங்களும் | பிறர் இல்லை | புறம்பானொருவருமில்லை |
| கடலும் | ஸமுத்ரங்களும் | எனும் | என்னும்படி |
| சுடரும் | சந்த்ரஸூர்யர்களும் ஆகிய | எல்லையினான் | ப்ரகாரியான எல்லையிலேநிற்குமவனாய் |
| இவை | இவற்றை | நீரார்பேரான் | நீர்வண்ணனென்னும் திருநாமத்தையுடையவனாய் |
| உண்டும் | அமுதுசெய்தும் | நெடுமாலவனுக்கு | மிக்கவ்யாமோஹத்தையுடையனான ஸர்வேஶ்வரனுக்கு |
| எனக்கு | எனக்கு | | இடமாவதுமாமலையான நீர்மலை. (௬) |
| ஆராதுஎன | போராதுஎன்று | | |
| நின்றவன் | எழுந்தருளியிருக்குமவனாய் | | |
| எம்பெருமான் | எனக்குஸ்வாமியாய் | | |
| அலைநீர் | அலைமோதுகிற கடலாலே சூழப்பட்ட | | |
| உலகுக்கு | பூமிக்கு | | |

வ்யா —ஆறும்பாட்டு. (பாராருலகும்) மண்மிக்க பூமியும். (பனி யால்வரையும்) † அந்த பூமிக்கு ஆணியடித்தாற்போலே யிருப்பதா மாய், மேகங்கள்படிந்து வர்த்திக்கிற குலபர்வதங்களும், ஸமுத்ரங் களும், தேஜ:பதார்த்தங்களும், இவற்றையடங்க வயிற்றிலே யெடு த்துவைத்துப், பின்னையும், இவை எனக்குப் போராதென்று தான் கொண்ட † கோட்பாடு மாறுதே ரக்ஷ்யமளவுபட்டு ரக்ஷகத்வமே விஞ்சி யிருக்கிறவன். அதாவது - ப்ரஜைகள் விஷயமாக எல்லாம் செய்து பின்னையுமொன்றும் செய்யாதானாயிருக்கிறபடி. †பின்பு ப்ர ளயத்தில் நின்று மெடுத்து வயிற்றிலே வைத்து நோக்கினதை நினை யாதே, முன்பு ப்ரளயத்தில் நோவுபடவிட்டத்தையே நினைக்கை. (எம்பெருமான்) † இப்படிதான் ஸர்வரக்ஷகனாயிருக்கிற விருப்பைக் காட்டி என்னை யெழுதிக்கொண்டவன். (அலேயித்யாதி) † இவ்விட த்துக்குப் பொருள் அழகப்பெருமாளரையர் பலரையுங் கேட்டுக் கொடுதிரிந்தாராய், நம்முடையவர்களிலே சிலர் "ஸர்வேஶ்வர னைச் சொல்லுகிறது காணும்" என்று விட்டார்கள். † கடல் சூழ்ந்த பூமிக்கு ராஜாக்களாய்ப் போருகிறவர்களை அப்பேருங்கூடநடையா டாதபடியாக அழியச்செய்த (முனிகரையன்) ஶ்ரீபரசுராமாழ்வான் இருபத்தொருபடிகால் க்ஷத்ரியவம்சங்களைப் பேரும்நடையாடாத படி அறுத்துப் பொகட்டானிறே. (பிறரில்லை நுனக்கெனுமெல்லை யினான்) † உனக்குப் புறம்பாயுன்னோடொக்கச் சொல்லலாவதொரு ப்ரபுவில்லை யென்னும்படி, தன்னையொழிந்ததடைய ப்ரகாரமாய்த் தான்ப்ரகாரியாய்க்கொண்டு எல்லையிலே நிற்கிறவன். (நீரார்பே ரான்) (க) "ஆபோ நாரா இதி ப்ரோக்தா:" - ஆபோநாரா இதிப்ரோக்தா:" என்கிறபடியே ஜலத்திலே கண்வளர்ந்தருளுகையாலே நாராயண னென்னும் திருநாமத்தை யுடையவனென்னுதல்; அன்றிக்கே, "நீர்" என்று - நீர்மையாய், அத்தால் ஸ்வபாவமாய், அதாகிறது - சேஷித் வமாய், ஆக ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துவும் தனக்கு ப்ரகாரமாகத் தான்ப்ரகாரியாயிருக்கையாலே நாராயணனென்னும் திருநாமத்தை யுடையவனென்னுதல். ஆக, † ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரனுக்கு † நீர்வண்ணனென்று திருநாமம். ... ... ... (௬)

---

ரு(க) மநுஸ்ம்ருதி.

அரு.—ஆரும்பாட்டு. (பாராரித்யாதி). (க) * குரக்கினப்படைகொடு குரைகடலடைத்ததும், ராவணன்தலை யறுத்தது மொருதன்னேற்றமோ, (உ) "எல்லாவுலகுமோர் துற்ருற்ரு" என்கிறபடியே மஹத்தத்வத்தை விளாக்கொலை கொண்டதையும், ராவணனைப் பத்துத்தலைப்பூச்சியாக்கின ஸஹஸ்ர பாஹுதுடக்கமானவரையும் வென்று (ங) * இருபத்தொருகால் அரசு களை கட்டின வீரசரிதத்தையும் காணீரோவென்ன; அத்தைப்பேசுகிறுரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

"மால்" பெருமையாய், ஸமபிவ்யாஹார தாத்பர்யம், (அந்தவித்யாதி). (கோட்பாடு) - உத்யோகம். "ஆராத" என்றதுக்குத் தாத்பர்யம், (பின்பித்யாதி). "காணீர்" என்று ஸர்வேஸ்வரன் காட்டிக்கொடுத்தானென்கைக்கு ஸூசகம் இப்பதமென்னுமத்தை யருளிச்செய்கிருர், (இப்படியித்யாதி). § தாமருளிச்செய்யப்போகிற அர்த்தத்தின் சீர்மைதோற்றும்படி ஒரைதிஹ்யமருளிச்செய்கிருர், (இவ்விடத்துக்கித்யாதி). "அப்பேரானை" அந்தப் பேரிட்டுக்கொண்டவனையென்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளிச்செய்கிருர், (கடலித்யாதி). "நுனக்குப் பிறரில்லையெனுமெல்லையினுன்" என்று அந்வயமாக்கி அருளிச்செய்கிருர், (உனக்கித்யாதி). எல்லையினுன் - எல்லைநிலத்திலே வர்த்திப்பானென்றதாலே, ப்ரபுவென்றது பலிதம். இரண்டாமர்த்தத்தைப்பற்ற, "நெடுமால்" என்றதுக்கர்த்தம், (ஸர்வாதிகனித்யாதி). ஸர்வாதிகத்வம் சொல்லுகைக்கு "நீரார்பேரான்" என்று விசேஷிக்கவேணுமோவென்ன, (நீரித்யாதி). ஸ்வாபாவிகசேஷித்வத்துக்குத் தகுதியானபேருடையவனென்று சப்தார்த்தம். நீர்வண்ணன் - ஸ்வாபாவிக சேஷித்வ ஸூசக விக்ரஹவானென்று இதுக்கு சப்தார்த்தம். ... ... ... (௬)

மூ—புகராருருவாகிமுனிந்தவனைப்புகழ்விடமுனிந்துயிருண்டசுரன்
நகராயினபாழ்படநாமமெறிந்தவன்றியும்வென்றிகொள்வாளவுண
பகராதவனுயிரநாமமடிப்பணியாதவனைப்பணியாலமரில் [ன்
நிகராயவன்நெஞ்சிடந்தானவனுக்கிடம்மாமலைபாவதுநீர்மலையே. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆர் | மிக்க [தான | உண்டு | முடித்து [டைய |
| புகர் | தேஜஸ்ஸையுடைத் | அசுரன் | அஸுரனை அவனு |
| உருவாகி | வடிவை யுடையனுய்க்கொண்டு | நகராயின | படைவீடுகளானவை |
| | | பாழ்பட | பாழடைந்து போம்படியாகவும் |
| முனிந்தவனை | (என்னைக் காட்டிலும் மேலானவன் யார் என்று) கோபித்த ஹிரண்யாக்ஷனை | நாமமெறிந்து | அவன்பேருங்கூடத் தெரியாதேபோம்படியாகவும் (அழியச்செய்து); |
| புகழ்வீட | (அவன்) புகழ்நசிக்கு | | |
| முனிந்து | சீறியருளி [ம்படி | அதுவன்றியும் | அதுக்குமேலே |
| உயிர் | (அவன்) ப்ராணனை | வென்றிகொள் | ஜயத்தை யுடையனுய் |

§ (இவ்விடத்துக்கு) என்றது - "முனிக்கரையன்" என்ற விடத்துக்கு என்றபடி. (முனிக்கரையன்) முனிராஜா. (௬)

(க) தி-ச-வி-௩௨. (உ) தி-வாய். (௩) தி-வாய்-௯-௨-௧௦.

| | |
|---|---|
| வான் | வானையே தனக்குத் துணையாகவுடையனாய் |
| ஆயிரம்நாமம் பகராதவன் | (எம்பெருமானுடைய) ஸஹஸ்ரநாமங்களில் ஒன்றையும் சொல்லப்பெறாதவனாய் |
| அடி | திருவடிகளிலே |
| பணியாதவன் | வணங்காதவனாய் |
| அமரில் | யுத்தத்தில் |
| நிகராயவன் | எதிரான |
| அவுணனை | ஹிரண்யாஸுரனு[டைய |
| நெஞ்சு | மார்வை |
| பணியால் | ப்ரஹ்லாதன்சொல்லாலே (அவனுக்கு ஹிதத்தைச் செய்யவேணுமென்று) |
| இடந்தானவனுக்கு | பிளந்துபொகட்டவனுக்கு |
| இடமாவது மாமலையானநீர்மலை. (எ) | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (புகரித்யாதி) பௌண்ட்ரகன் தன்னைச் சொல்லிற்றுதல்; ஹிரண்யாக்ஷனைச்சொல்லிற்றுதல். † சுத்தஸத்வமயமாய் நிரவதிகதேஜோரூபமான திவ்யவிக்ரஹத்தோடு போலியாகத்தன் வடிவைப்பண்ணிக் கொடுதிரிந்தானென்று சொல்லக்கடவது. ஹிரண்யாக்ஷனைபோது ‡ தானே சொல்லலாமிறே. † புகர்த்தவடிவையுடையனாயிருக்கிறவனை, இன்னானென்று சொல்லுகிற ப்ரமம் போம்படியாகச்சீறி. பலநகரங்களையும் பண்ணிவைத்தானாயிற்று; § அந்நகரங்களுந்தானும் பாழ்பட்டுப் போம்படியாக,, இன்னானென்கிறவார்த்தைப்பாடும் போம்படியாக அழியச்செய்து. அதுக்குமேலே, (வென்றியித்யாதி) வெற்றியுண்டானாலல்லது மீளாதானாய், தைவங்கள் கொடுத்த § வரங்களையே தனக்குபலமாகநினைத்திருப்பானாய். பகருகை - சொல்லுகையாய்; ஆயிரந் திருநாமங்களிலொன்றையும் சொல்லாதவன்; † என்றதென் - சொல்லப்பெறாதவனென்றபடி. அதுக்குமேலே திருவடிகளிலே விழுந்தாஶ்ரயியாதே யிருக்கிறவனை. (பணியால்) ஶ்ரீப்ரஹ்லாதாழ்வானுடைய வார்த்தையாலே. (க) 𑌸𑍁𑌗𑍍𑌰𑍀𑌵𑌵𑌚𑌨𑌾𑌤𑍍 -ஸுக்ரீவவசநாத்"என்னுமாபோலே பணிந்து பகர்ந்தவனுடைய வார்த்தையாலே. †(உ)†[𑌮𑌤𑍍𑌪𑌿𑌤𑍍𑌰𑌾 𑌸𑍍𑌵𑌕𑍃𑌤𑌂 𑌪𑌾𑌪𑌂 𑌦𑍇𑌵 𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌤𑍁 - மத்பித்ரா ஸ்வக்ருதம் பாபம் தேவ தஸ்ய ப்ரணஶ்யது]முன்பு அவன் பண்ணினப்ராதிகூல்யத்தையெல்லாம் பொறுக்கவேணுமென்னப் பொறுத்துப் போந்தான். இனி இவனிருக்கில் † இவனுக்குஅநர்த்தமென்னுமளவில்பின்னையழியச்செய்துவிட்டானாயிற்று. அமரிலே - யுத்தத்திலே, நானெதிரி என்று தோற்றினவனுடைய மார்வை இரண்டு கூறும்படி பிளந்து பொகட்டவனுக்கு. ... ... ... ... ... (எ)

§(பா) அவனதானநகரங்களானவை. §(பா) வானையே. (க) ரா-பா-க. (உ) வி-பு-க.

அரு.—ஏழாம்பாட்டு. (புகராரித்யாதி). பகலை யிரவாக்கினதும் ப்ரதோஷ காலத்திலே * பேழ்வாயனாய்ப் பிறந்ததும் ஆஸ்ரிதார்த்தமாகையாலே, அது தானே நெஞ்சிலூற்றிருந்து அசோதையிளஞ்சிங்கத்தையும் சிங்கப்பிரானையும் மீளஅநுபவிக்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

ஹிரண்யாக்ஷனென்றபக்ஷத்திலே, ஹிரண்யனுக்கு ப்ராதாவாகையாலே அவனுடைய நிரஸநமும் ப்ரஸ்துதமாயிற்றென்று கொள்வது. "ஆகி" என்கிற அபூததத்பாவனுக்கு ஸ்வாரஸ்யமுண்டென்று விவக்ஷித்து, பௌண்ட்ரகனை பக்ஷத்திலே சப்தார்த்தம், (சுத்தேத்யாதி). போலியுமாகாதவன் போலியானென்று கருத்து. (தானேசொல்லலாமிறே) என்றது - ஹிரண்யாக்ஷனும் ஹிரண்யனைப்போலே தேஜோரூபவானாயிருக்கையாலே, புகரார்ந்த வுருவென்று சொல்லலாமென்றபடி. புகராலே ஆர்ந்த வடிவையுடையனைக் கொண்டு (க) "ைகோயம் விஷ்ணுঃ -கோயம் விஷ்ணு:" என்றுமுனிந்தவனை, அவன் புகழ்போம்படிசீறி, ப்ராணன்களைக்கொண்டென்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (புகர்த்தவித்யாதி). "அசுரன்" இத்யாதிக்குத்தாத்பர்யம், (பலவித்யாதி).) (என்றதென்) என்றது - அதாவதென்றபடி. பலிதார்த்தம், (பணிந்தித்யாதி). ஸமுத்ரத்திலே தன்னைக்கட்டிப்பொகட்டபோது ஸர்வேஶ்வரன் ப்ரஸந்நனாய், "வரங்கொள்" என்ன, என்னுடைய தமப்பனுடைய அபராதத்தைப் பொறுத்தருளவேணுமென்றவன் இப்போது கொல்லச்சொல்லுவனோவென்ன; அருளிச்செய்கிறார், (மத்பிதுரித்யாதி). (இவன்) ஹிரண்யன் - (இவனுக்கு) - இந்தஹிரண்யனுக்கு. அதிப்ராதிகூல்யத்தாலே யென்றபடி. "நிகராயவன்" என்றதுக்கர்த்தம், (நானெதிரியித்யாதி). ... (எ)

மூ.—பிச்சச்சிறுபீலிபிடித்துலகில்பிணந்தின்மடவாரவர்போலங்ஙனே அச்சமிலர்நாணிலராதன்மையாலவர்செய்கைவெறுத்தணிமாமலர்தூய் நச்சிநமனாரடையாமைநமக்கருள்செய்யெனவுள்குழைந்தார்வமொடு நிச்சம்நினைவார்க்கருள்செய்யுமவற்கிடம்மாமலையாவதுநீர்மலையே.()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பிச்சம் | பிச்சங்களையுடைத்தாய் | அங்ஙனே | அப்படியே |
| சிறு | சிறிதான | அச்சம் இலர் | பயமில்லாதவர்களாய் |
| பீலி | மயிலிறகை | நாண் இலர் | லஜ்ஜை யில்லாதவர்களாய் |
| பிடித்து | கையில்பிடித்துக் கொண்டு | ஆதன்மையால் | இப்படியிருக்கையாலே |
| உலகில் | லோகத்தில் | அவர்செய்கை | அந்தவௌகிகர் செய்துபோரு மவற்றைக்கண்டு |
| பிணம் | பிணங்களை | | |
| தின் | தின்கிற | | |
| மடவாரவர்போல் | பிசாசஸ்த்ரீகளைப்போலே, | வெறுத்து | ஜுகுப்ஸித்து |
| | | அணி | அழகியதாய் |

(க)

| | |
|---|---|
| மா | ஶ்லாக்யமான |
| மலர் | புஷ்பங்களை |
| தூய் | பணிமாறி |
| நச்சி | (ஸர்வேஶ்வரனை) ஆசைப்பட்டு, |
| நமனுர் | யமாதிகள் |
| அடையாமை | கிட்டாதபடி |
| நமக்கருள்செய் என | எங்களுக்குக் க்ருபை செய்தருளவேணு மென்று |
| உள்குழைந்து | நெஞ்சுநெகிழ்ந்து |
| ஆர்வமொடு | ப்ரீதியுடனே |
| நிச்சம் | நித்யமாக |
| நினைவார்க்கு | அநுஸந்திக்குமவர்களுக்கு |
| அருள்செய்யுமவற்கு | க்ருபைசெய்தருளுமவனுக்கு |
| இடமாவதுமாமலையானநீர்மலை. (அ) | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (பிச்சச்சிறுபீலிபிடித்து) † பிச்சமாயிருக்கிற சிறுபீலித்தழையைக்கையிலே பிடித்து, லோகத்திலே பிணந்தின்னிகளைப்போலே வஸ்த்ரத்தைப் பொகட்டுத் திரியாநிற்பர்களாயிற்று; † அவர்களைப்போலே, அப்படியேபிறர்முன்னே நாமிங்ஙனே நிற்கும்படி யெங்ஙனே யென்னுமச்சமாதல், இத்தைப் பிறர் காணில் செய்வதென்னென்கிறலஜ்ஜையாதலின்றிக்கே திரியாநிற்பர்கள்; இப்படி யிருக்கையாலே, (அவர் செய்கை வெறுத்து) வைதிக மர்யாதையும் பகவதுபாஸநமும் வேதோக்தமான அநுஷ்டாநமுமின்றிக்கே தாங்கள் நினைத்தபடி செய்து திரியுமவற்றை யநுஸந்தித்துவெறுத்து; † அழகிய புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு அவனை நச்சி - ஆசைப்பட்டு, யமாதிகள் கிட்டாதபடி நிச்சம்நினைவார் என்னுதல்; நச்சிநமனுர் என்னுதல்; - இவர்கள் பாபகர்மாக்களாயிருந்தார்கள், நாம் நினைத்தபடி கார்யம் கொள்ளலாமென்று யமாதிகள் கிட்டாதபடியாக வென்னுதல். (நமக்கு) எங்கள் பக்கலிலே அருளைப்பண்ணவேணுமென்று நெஞ்சு நெகிழ்ந்து ப்ரேமயுக்தராய்க் கொண்டு நாள்தோறு மநுஸந்திக்குமவர்களென்னுதல், நிச்சமருள் செய்யுமவற் கென்னுதல். ... ... ... ... ... (அ)

அரு.—எட்டாம்பாட்டு.(பிச்சச்சிறுபீலியித்யாதி)(க) "என்னெஞ்சமென்பாய் துணிந்துகேள்" என்று தந்திருவுள்ளத்துக்குச்சொன்ன உபதேசம் பலித்து விட்டபடி கைகண்டவராகையாலே, இப்படி ஆஶ்ரிதன் சொல்வழி பரதந்த்ரனானபின்பு நீங்கள் தார்மதங்களைக் காற்கடைகொண்டு ஆஶ்ரயியுங்கோளென்று பரோபதேசப்ரவ்ருத்தராகிறாரென்று மேலிரண்டு பாட்டுக்கும் ஸங்கதிகண்டுகொள்வது.

நிர்வாணிகளாய் பிணந்தின்கிற பிசாசஸ்த்ரீகளைப்போலே லஜ்ஜாபயமின்றிக்கே நிர்வாணிகளாய், ஜந்துஹிம்ஸையுமாகாதென்று கையிலே வழி

§ "பிச்சம்" நமனுருக்கு விசேஷணமானபக்ஷத்தில். நச்சுதல் - வ்யவஸாயம்.
(க) உ-க-கூ.

சேர்க்கைக்காகப் பிடித்தத்தைப்பிடித்துக்கொண்டு திரிகிற க்ஷமணரென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார், (பிச்சமாயித்யாதி). பிச்சாய் - சிறிதாயிருக்கிற மயிலிறகைப் பிடித்துக்கொண்டென்று சப்தார்த்தம். கீழ்வாக்யவிவரணம் (அவர்களைப்போலேயித்யாதி). "நச்சி" என்றத்தை "தாய்" என்றத்தோடேகூட்டி ஆஸ்ரிதர்க்கு விசேஷணமாகவும், "நச்சிநமனார்" என்று மேல்பதத்துக்கு விசேஷணமாகவும், இரண்டுயோஜனை யருளிச்செய்கிறார், (அழகியவித்யாதி வாக்யத்வயத்தாலே.) "நிச்சம்" என்றது - "நினைவார்க்கு" என்றதுக்காதல். "அருள்செய்யுமவர்க்கு" என்றதுக்காதல் சேஷம். (அ)

மூ.—பேசுமளவன்றிதுவம்மின்நமர்பிறர்கேட்பதன்முன்பணிவார்வினைகள்
நாசமதுசெய்திடுமாதன்மையாலதுவேநமதுய்விடம்நாண்மலர்மே [ல்
வாசமணிவண்டறைபைம்புறவில்மனமைந்தொடுநைந்துழல்வார்மதியி
னீசரவர்சென்றடையாதவனுக்கிடம்மாமலையாவதுநீர்மலையே. (கூ)

| பதம். | உரை. |
|---|---|
| இது | இந்தபகவத்விஷயத்தின் சீர்மை |
| பேசுமளவுஅன்று | நம்மால்சொல்லிமுடிக்கப்போகாது |
| நமர் | நம்முடையவர்களே! (இந்தச்சீரிய அர்த்தத்தை) |
| பிறர் | நாஸ்திகரானவர்கள் |
| கேட்பதன்முன் | கேட்கிறதற்குமுன் |
| வம்மின் | வாருங்கள்; [பே |
| அது | அந்தபகவத்விஷயம் |
| பணிவார் | தன்னைவணங்கினவர் |
| வினைகள் | பாபங்களை[களுடைய |
| நாசம்செய்திடும் | நசிப்பிக்கும்; |
| ஆதன்மையால் | ஆகையாலே |
| அதுவே | அந்தபகவத்விஷயமே |
| நமது | நமக்கு [தாநம்; |
| உய்வுஇடம் | உஜ்ஜீவிக்கைக்குஸ்த் |

| பதம். | உரை. |
|---|---|
| மனம் | நெஞ்சு |
| ஐந்தொடு | சப்தஸ்பர்சரூபரஸகந்தங்களிலே சென் |
| நைந்து | சிதிலராய், [று |
| உழல்வார் | க்லேசப்படுமவர்களா |
| மதியில் | அறிவுகேடரான [ய் |
| நீசரவர் | தண்ணியர்க்கு |
| சென்றுஅடையாதவனுக்கு | கிட்டஅரியஞனவனுக்கு |
| இடமாவது | வாஸஸ்தாநமாவது, |
| நாள் | அப்போதுஅலர்ந்த |
| மலர்மேல் | பூவிலேபடிகையாலே |
| வாசம் | பரிமளத்தையுடைத் |
| அணி | அழகியதான [தாய் |
| வண்டு | வண்டுகள் |
| அறை | சப்தியாநின்றுள்ள |
| பை | பரந்த |
| புறவில் | பர்யந்தங்களையுடைய |

மாமலையானநீர்மலை. (கூ)

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பேசுமளவன்றிது) †பகவத்வ்யதிரிக்தவிஷயங்களிற் சொல்லலாவதொன்றில்லாமையாலே சொல்லப்போகாது; பகவத்விஷயத்தில் இயத்தாராஹித்யத்தாலே பேசப்போகாது. (வம்மின்நமர்) நம்மோடொரு குடல்துடக்குடையாரடங்கலும் வாருங்கோள். (பிறர்கேட்பதன்முன்) இதுக்குப் புறம்பானார் செவிப்படுவதற்கு முன்பே. (க) † "ஙஇதம்பரமகுஹ்யம் -

(க) கீதை - கஅ - சுஎ.

யஇதம்பரமம் குஹ்யம்" என்றும், (௧) "இதந்தே நாதபஸ்காய - இதந்தேநாதபஸ்காய" என்றும்அநதிகாரிகள் கேட்கவுமாகாது, அதிகாரிகளுக்குச் சொல்லாதொழியவுமாகாது என்றிரண்டு முண்டிறே. (பணிவார்) திருவடிகளிலே விழுந்து ஆஶ்ரயிப்பாருடைய பாபங்களை வாஸனையோடே நசிப்பிக்கும். (அது)† அவ்வரியத்தையும் செய்யும்; (௨) "துர்வ்யாதிரிவநஶ்யதி - துர்வ்யாதிரிவநஶ்யதி" என்கிறபடியே. இப்படியிருக்கையால் அதுவே நமக்கு உஜ்ஜீவிக்கைக்கு ஸ்தாநம். (நாண்மலர்தூய்) என்று பாடமாகில் செவ்விப் பூக்களைத்தூவிப் பணிவார் என்கிறது. (நாண்மலர்மேல்) என்றதாகில், செவ்விப்பூக்களின்மேலேபடிந்து பரிமளிதமானவண்டுகள் த்வநியாநின்றுள்ள பர்யந்தத்தை யுடைத்தான மாமலையாவது. (மனமித்யாதி) (ஐந்தொடு - மனம் - நைந்துழல்வார்) சப்தாதிகளிலே நெஞ்சு ப்ரவணமாய் நைந்து க்லேசப்படுமவர்கள் அறிவுகேடரான நீசர் சென்றடையாதவனுக்கு. ... ... ... ... (௯)

அந.—ஒன்பதாம்பாட்டு. (பேசுமளவித்யாதி) "இது" என்றது-மேல் சொல்லப்புகுகிற பகவத்ப்ரபாவமென்று விவக்ஷித்து அத்தை ஸத்ருஷ்டாந்தமுபபாதிக்கிறார், (பகவத்வ்யதிரிக்தேத்யாதி). "வம்மின்" என்று சிலரை அழைத்த, "பிறர்" என்று சிலரைக்கழிக்கிற தெப்படியிருக்கிறதென்ன; (யஇமமித்யாதி). "நாசம்" என்னுதே, "அது" என்றத்தால் பலிதம், (அவ்வரியத்தையித்யாதி). அப்படிப்பட்ட அநர்த்தத்தையென்று சப்தார்த்தம். "புறவில்" என்றதுக்கு, "மாமலை" என்றத்தோடு விசேஷண விசேஷ்ய பாவஜ்ஞாபநார்த்தம், (பர்யந்தத்தை யுடைத்தான மாமலையாவது) என்றது. "இடம் ஆவது மாமலையான நீர்மலையே, இது பேசுமளவன்று, பிறர்கேட்பதன்முன் - வம்மின்" என்றந்வயம். ... ... ... (௯)

மூ.—நெடுமாலவன்மேவியநீர்மலைமேல்நிலவும்புகழ்மங்கையர்கோனமரில் கடமாகளியானைவல்லான்கலியனொலிசெய்தமிழ்மாலைவல்லார்க்குடனே விடுமால்வினைவேண்டிடில்மேலுலகுமெளிதாயிடுமென்றியலங்கொலிசேர் கொடுமாகடல்வையகமாண்டுமதிக்குடைமன்னவராயடிகூடுவரே. ()

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நீர்மலை | திருநீர்மலையிலே | நிலவும் | நித்யமான |
| மேவிய | பொருந்திய | புகழ் | புகழையுடையராய் |
| நெடுமாலவன் | ஸர்வேஶ்வரன் விஷ | மங்கையர் | திருமங்கையிலுள்ளா |
| மேல் | யமாக, | கோன் | தலைவராய் [ர்க்கு |

(௧) கீதை-௧அ-௬அ. (௨)

| | | | |
|---|---|---|---|
| அமரில் | யுத்தத்திலே | மேல்உலகும் | ஸ்வர்க்கம்தொடக்கமான மேல்லோகங்களும் |
| கடம் | மதத்தாலே | எளிதாயிடும் | ஸுலபமாம்; |
| மா | மிகவும் | அன்றி | அன்றிக்கே |
| களி | களித்த | இலங்கு | விளங்காநிற்பதாய் |
| யானை | யானையை | ஒலிசேர் | த்வநியையுடைத்தாய் |
| வல்லான் | நடத்தவல்லாரான | கொடு | வளைந்திருந்துள்ள |
| கலியன் | ஆழ்வார் | மா | பெரிய |
| ஒலிசெய் | ஒலியுடைத்தாம்படி அருளிச்செய்த | கடல் | கடலால்சூழப்பட்ட |
| தமிழ்மாலை | இத்தமிழ்த்தொடையை | வையகம் | பூமியை |
| வல்லார்க்கு | அப்யஸிக்கவல்லவர்களுக்கு | மதிக்குடை | சந்த்ரனையொத்தவெண்கொற்றக்குடை நிழலின்கீழே |
| மால் | மஹத்தான | | |
| வினை | கர்மங்கள் | மன்னவராய் | ராஜாக்களாய் |
| உடனே | அப்போதே | ஆண்டு | அரசாண்டு (பின்பு) |
| விடும் | விட்டுஓடிப்போம்; | அடி | அவன்திருவடிகளை |
| வேண்டிடில் | வேணுமாகில் | கூடுவர் | கிட்டப்பெறுவர்கள். |

வ்யா.—பத்தாம்பாட்டு. (நெடுமாலித்யாதி) ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரன்வந்து நித்யவாஸம்பண்ணுகிற திருநீர்மலைமேலே, நித்யமான புகழையுடையருமாய், திருமங்கையிலுள்ளார்க்கு ப்ரதாநராயிருப்பாருமாய், யுத்தத்திலே மத்தகஜத்தை நடத்தவல்லருமான ஆழ்வார், ஒலியுடைத்தாம்படி செய்த தமிழ்த்தொடைவல்லார்க்கு. (உடனே) ஆஶ்ரயணகாலத்திலே † கர்மங்களடைய விட்டோடிப்போம். அதுக்குமேலே † ப்ராப்தியும் வேண்டியிருக்கில் அதுவுமவர்க்கு ஸுலபமாம். †அன்றிக்கே, ஐஹிகமான ஸம்பத்து வேண்டியிருப்பர்களாகில், விளங்கா நிற்பதாய் த்வநியை யுடைத்தாய், வளைந்திருந்துள்ள கடல் சூழ்ந்த பூமிக்கெல்லாம் தாங்களே நிர்வாஹகராய், சந்த்ரனைப்போலே யிருக்கிற வெண்கொற்றக்குடைக்கீழே யிருந்து ஐஶ்வர்யத்தை அநுபவித்துப் பின்னையும் திருவடிகளிலே கூடப்பெறுவர். ... ... ... ... (௰)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

அரு.—பத்தாம்பாட்டு. (நெடுமாலவனித்யாதி). "மால்வினை" மாலென்று-பெருமையாய், அதினர்த்தம், (கர்மங்களடைய) என்றது. (ப்ராப்தியும்) தேசவிசேஷப்ராப்தியும். "அன்றி" என்றவநந்தரம், "வேண்டிடில்" என்றத்தை அநுஷங்கித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிறார், (அன்றிக்கேயித்யாதி). அதிகார்யாநுகுணமாக ஸகல பலப்ரதமென்று கருத்து. ... (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்

இரண்டாம்பத்தில் நாலாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி - உ - பத்து - ரு - திருமொழி - பாராயது ப்ரவேசம்.

வ்யா.—ஆச்ரித விரோதி நிரஸநசீலனாய், †ஆச்ரிதவத்ஸலனாய், § ஆச்ரித ஸுலபனாய், ஸ்வப்ராப்திக்கு† உபாயமும் தானேயா யிருக்கிற ஸர்வேச்வரனைத் திருக்கடல் மல்லையிலே நானகப்படக் காணப் பெற்றேன், † அவனரியனென்று கைவாங்காதே அவனையொழிந்த தடங்கலும் படுகுழி, அவற்றில்புக்கு அநர்த்தப்பட்டுப் போகாதே அவனை ஆச்ரயித்து உஜ்ஜீவித்துப் போகப்பாருங்கோளென்கிறார்.

---

அரு.—பாராயது ப்ரவேசம் - திருநீர்மலையிலே திருவுள்ளமானபடி பேசியநுபவித்துக்கொண்டு, "பேசுமளவன்றிது" என்று ப்ரஸ்துதமான பரோப தேசத்திலே, "அணிமாமலர் நச்சி - தூய் - ஆர்வமொடு - நினைவார்க்கருள் செய்யுமவன்" என்று உபதேசித்தாராயிருந்தார்; இப்படி பூவிட்டுக்கோலினாடத்தில் அருள்செய்த விடமெங்கேயென்று விசாரியா, ஸ்ரீபுண்டரீகர்கையில் பூவிடுவித்துக்கொண்டு திருக்கடல் மல்லையிலே, இன்னுமிங்ஙன்போல்வார் கிடைக்குமோவென்னும் நோயாசையாலே தரைக்கிடைகிடக்கிற கிடையழகை நான் கண்டுகொண்டேன், நீங்களும் காணவாருங்கோ ளென்றழைக்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது. இத்திருமொழியில் பலித்த ப்ரமேயோபந்யாஸம், (ஆச்ரிதேத்யாதி). (க) "தவநெறிக்கோர் பெருநெறியை" என்றத்தைப்பற்ற, (உபாயமும் தானேயாய்) என்றது. (உ) "பூண்டவத்தம்" என்கிறபாட்டைக்கடாக்ஷித் தருளிச்செய்கிறார், (அவனரியனித்யாதி). (உ) "எந்தையென் வணங்கப்படுவானை" என்றத்தாலே - ஸௌசீல்யம்தோற்றுகிறதிறே.

மூ.—பாராயதுண்டுமிழ்ந்தபவளத் தூணைப்
படிகடலிலமுதத்தைப் பரிவாய்கீண்ட
சீரானையெம்மானைத் தொண்டர்தங்கள்
சிந்தையுள்ளேமுளைத்தெழுந்த தீங்கரும்பினைப்
போரானைக்கொம்பொசித்த போரேற்றினைப்
புணர்மருதமிற நடந்த பொற்குன்றினைக்
காரானையிடர்கடிந்த கற்பகத்தைக்
கண்டதுநான்கடல்மல்லைத் தலசயனத்தே. (க)

---

§ (கன்று மேய்த்து விளையாட வல்லானை, கருமுகிலை,) என்றத்தைப் பற்ற (ஆச்ரித ஸுலபனாய்) என்றது. (க) உ-ரு-ரு. (உ) உ-ரு-உ.

| பதம். | உரை. |
|---|---|
| பார்ஆயது | பூமியையெல்லாம் (ப்ரளயகாலத்தில்) |
| உண்டு | அமுதுசெய்து [ன |
| உமிழ்ந்த | புறப்படவிட்டருளி |
| பவளம் | பவளம்போலேஎல்லார்க்கும்ஸ்ப்ருஹணீ |
| தூணை | தாரகனுமாய், [யனும் |
| படு | முத்துமுதலியனஉண் |
| கடலில் | கடலிலே [டாகிற |
| அமுதத்தை | அம்ருதம்போலேபோக்யனாய்க்கொண்டு கண்வளர்ந்தருளுமவனாய், |
| பரி | கேசியென்னும் குதி |
| வாய் | வாயை [ரையின் |
| கீண்ட | கிழித்த |
| சீரான் | வீரஸ்ரீயையுடையனாய்,(அச்செயலாலே) |
| எம்மானை | எனக்குஸ்வாமியாய், |
| தொண்டர்தங்கள் | தன்னையாஶ்ரயித்தவர்களுடைய |
| சிந்தையுள்ளே | ஹ்ருதயங்களிலே |
| முளைத்து | உண்டாய் |
| எழுந்த | வளருகிற |
| தீம் | போக்யமான [யனாய், |
| கரும்பினை | கரும்புபோலேயினி |
| போர் | யுத்தோந்முகமான |

| பதம். | உரை. |
|---|---|
| ஆனை | குவலயாபீடமென்னும்யானையின் |
| கொம்புஒசித்த | கொம்பை முறித்த |
| போர்ஏற்றினை | யுத்தத்தில்ஸிம்ஹம்போலேயிருக்குமவனாய் [ன்ற |
| புணர் | ஒன்றாய்ப்பொருந்தி |
| மருதம் | இரண்டுமருதமரங்க |
| இற | முறிந்துவிழும்படி [ள் |
| நடந்த | நடந்துபோன |
| பொன்குன்றினை | பொன்மலை போலே அழகியானாய் |
| கார் | பெரிய |
| ஆனை | ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய |
| இடர் | ஆபத்தை |
| கடிந்த | போக்கின |
| கற்பகத்தை | கற்பகம்போலே வேண்டிற்றுத் தரக்கடவ பரமோதாரனானவனை |
| தலசயனம் | ஸ்தலசயநமான |
| கடல்மல்லை | திருக்கடல்மல்லையிலே [ன். |
| நான்கண்டது | நான் காணப்பெற்றே |

வ்யா.—முதற்பாட்டு. (பாராயது) பாரென்று பேர்பெற்றதெல்லாம். பூமி யென்று பேர்பெற்றதெல்லாவற்றையும் ப்ரளயத்திலே எடுத்து வயிற்றிலே வைத்துப், பின்னை உள்ளேகிடந்து தளராதபடி வெளிநாடுகாணவுமிழ்ந்து. இப்படி ஸர்வவிதரக்ஷணம் பண்ணுமவன் றானென்னில்; (பவளத்தூணை) ஸர்வர்க்கும் ஸ்ப்ருஹணீயமாய் தானே †தாரகனுமா யிருக்குமாயிற்று. (படுகடலி லமுதத்தை) ரத்நாதிகள் படுகிற கடலென்னுதல்; ஆழத்தையுடைத்தான கடலென்னுதல்; "மடுப்பட்டது" என்றாற்போலே ஆழத்தைச்சொல்லக்கடவதிறே. இவ்விசேஷணத்தின் கருத்தென்னென்னில்; நல்லதெல்லாம் படுகிறவிடத்திலே போக்யனானவனு மென்கை, ஆழமான போது † பெறுதற்கரிய வஸ்துவென்கை. (பரிவாய்கீண்ட) ப்ரபல ப்ரதிபந்தகங்களைக் கேசிவாயைக் கிழித்தாற்போலே அநாயாஸேந

போக்கவல்லவனை. பரியுண்டு - குதிரை, அதின் வாயைக் கிழித்த வீரஸ்ரீயையுடையவனை. (எம்மானை) †ஸப்ரமாதமான செயலையிறே செய்தது. அதின்கையிலே யகப்பட்டுத் தன்னைத் தப்புவித்த செயலாலே என்னை அநந்யார்ஹனாக்கினவனை. (தொண்டரித்யாதி) † பரிணாமாதிகளில்லை யென்ன வொண்ணாது இவ்வஸ்துவுக்கு; † நித்யவஸ்துவென்னவொண்ணாது; (க)†"ஸந்தமேநம்-ஸந்தமேநம்" என்னுமா போலே யாயிற்று. † வஸ்து நித்யமாயிருக்கச் செய்தேயிறே, (க) "அஸந்நேவ - அஸந்நேவ" என்கிறதும், (க) "ஸந்தமேநம்-ஸந்தமேநம்" என்கிறதும் - அவனை யறியாதவன்று தானிலனாய் அறிந்தவன்று உளனாயிருக்குமாபோலே, அவனும், தன்னை இவனறிந்தவன்று தானுளனாய், அறியாதவன்று இலனாயிருக்குமாயிற்று. †இவனவனுக்கு இத்தனை ஸ்ப்ருஹணீயனுமாயிற்றிலனாகில், இவன் சேஷபூதனாய் அவன் சேஷியாய், இவனைத்தலைக்கு அதிசயத்தைப்பண்ண அவனுக்கக்கடவனாய், இது பின்னை இவனுக்குப் புருஷார்த்தமாகிற இந்த ப்ராப்திகளெல்லாம் குலையுமிறே. †உத்பத்தி (வ்ருத்தி) வ்ருத்திகளெல்லா §மங்கே யாயிற்று. †அதுக்கடி யென்னென்னில்; (கரும்பினை) †கட்டிஸ்த்தாநத்திலே "கரும்பு" என்னில் மிகுமிறே. †பெருக்க வினிதாயிருக்கை. (தொண்டர்) †நிலமிதியாலேயு மொருநன்மையுண்டிறே. (போரானை) யுத்தோந்முகமா யிருந்துள்ள குவலயாபீடத்தினுடைய கொம்பை அநாயாஸேந முறித்துப்பொகட்டு யுத்தத்திலே ஸிம்ஹம்போலேயிருக்கிறவனை. "ஏறு" என்றால் - ஸிம்ஹத்தையும் ருஷபத்தையும்காட்டுமிறே. இங்கு கீழே ஆனையைச் சொல்லுகையாலே ஸிம்ஹத்தைச் சொல்லிற்றாகவமையுமிறே. யுத்தத்தில் சௌர்ய மிருக்கிறபடி. (புணரித்யாதி) பருவம் நிரம்பின பின்பு செய்தத்தையோ சொல்லுவது; இரண்டு மொன்றே யென்னலாம்படி தன்னிலே பொருந்தி நின்ற மருது முறிந்து விழும்படிக் கீடாக நடைகற்றானாயிற்று. நலிவதாகக் கோலிவந்த அபிஸந்தியும் குலையாதேயிருக்கச்செய்தே நடுவே போனானாயிற்று. (பொற்குன்றினை) †அந்த ஸிம்ஹம் வர்த்திக்கும்மேரு வென்று சொல்லலாம்படி யிருக்கை. †தன்னிலேபொருந்தி நிற்கும் மருதுகள் விழுகிறபோதை த்வநியைக் கேட்டுப்புரிந்து பார்த்தபோதிருந்தபடி சொல்லுகிறது. (க) "ததகடகடாசப்தஸமாகர்ணந தத் - ததகடகடாசப்தஸமாகர்ணந தத்

§ (அங்கேயாயிற்று) என்றது - சிந்தையுள்ளே என்றபடி.

(க) தை - ஆந - சு. (உ) வி - பு - ரு - சு - கஅ.

பரமே". (காரித்யாதி) ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ஆபந்நிவாரணத்தைப்பண்ணி அவனுக்குத் தன்னை முற்றூட்டாக்கிக்கொண்டு நின்றவனை. "கார்" என்று பெருமை. (கண்டதித்யாதி) † இடர் பட்டு †வரவும், பிற்பாடாகை யன்றிக்கே இவனிடர்பட்ட மடுவின் கரையிலே வந்து உதவினாற்போலே, நான் நோவுபடுகிற ஸம்ஸாரத்திலே ஸமகாலத்தில் காணப்பெற்றேனென்கிறார். ... ... (க)

அநு — முதற்பாட்டு. (பாராயதித்யாதி) தலசயனத்துறைவாருடைய போக்யதையை யநுஸந்திக்கவே, வடதளசாயி, க்ஷீராப்திசாயி, இவர்களின் போக்யதையும் நெஞ்சிற்பட்டு, அங்குநின்றும் விரோதிகள் மண்ணுண்ணும்படி க்ருஷ்ணனாய் வந்து நடமாடி ஆனையின்கையில் பூவிடுவித்துக்கொண்டாற்போலே, இங்கேவந்து ஸ்ரீபுண்டரீகர் பூவிட நெஞ்சுக்கினியனாய்க் கண்வளர்ந்தவனை நான் காணப்பெற்றேனென்கிறாரென்று அவதாரிகை.

"தூண்" என்ற பதவாஸனை, (தாரகனுமாய்) என்றது. (பெறுதற்கரிய) என்றத்தாலே, க்ஷீராப்திநாதனைக் காண்கைக்காகக் கடலை யிறைக்கத்துடங்கின ஸ்ரீபுண்டரீகர்க்கு அபேக்ஷித்தபோதே போகக்கூடாமை ஸூசிதமாயிற்று; அப்படி பெறுதற்கரியவஸ்து கிடீர் இங்கேகண்காணச் சாய்ந்தருளிற்றென்று கருத்து. "பரிவாய்கீண்டசீரானை" என்றதுக்குத் தாத்பர்யாந்தரத்தைக்காட்டாநின்றுகொண்டு, "எம்மானை" என்றதுக்கு உட்கருத்தருளிச்செய்கிறார், (ஸப்ரமாதேத்யாதி). "எழுந்த" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார், (பரிணமேத்யாதி). "மூளைத்து" என்றபதத்திலே நோக்காக வருளிச்செய்கிறார், (நித்யேத்யாதி). (க) "ஔஷதாய ... - அவிகாராயசுத்தாய நித்யாய" என்னப்படுகிற வஸ்துவுக்கு இங்ஙன் சொல்லப்போமோவென்ன; அருளிச்செய்கிறார், (ஸந்தமித்யாதி). விவரிக்கிறார், (வஸ்துவித்யாதி). ஸர்வேஶ்வரன் சேஷியாகையாலே தத்ஜ்ஞாநாஜ்ஞாநங்கள் சேதநனுடைய ஸத்பாவாஸத்பாவங்களுக்குறுப்பாம்படி அவன் ஸ்ப்ருஹணீயனாகிறான், சேஷபூதனுக்கு ஸ்ப்ருஹாவிஷயத்வமித்தனை சொல்லக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (இவனவனுக்கித்யாதி). "முளைத்தெழுந்த" என்றதுக்கு சப்தார்த்தம் (உத்பத்தியித்யாதி). (அங்கே) தொண்டர்ஹ்ருதயத்திலே. (அதுக்கு) உத்பத்திவ்ருத்திகளுண்டாகைக்கு. (கரும்பினை) என்றவநந்தரம், கரும்பென்கிற ஸமாதியென்றுசேஷம். கட்டியை, தேனை, என்றாற்போலே சொல்லாதே "கரும்பு" என்றத்தாலே போக்யதாதிசயம் தோற்றுமோவென்ன வருளிச்செய்கிறார் (கட்டியித்யாதி). "திங்கரும்பு" என்று விசேஷிக்கையாலே, கட்டி ஸ்த்தாநாபிஷிக்தமானதென்றுகருத்து. மிகும்

(க) வி - பு - க - உ - க.

படி யென்னென்ன (பெருக்கவித்யாதி). இத்தால்கட்டியேயாயிருக்கும் கரும்புண்டாகில் அதுஉத்தரோத்தரம் ரஸாதிக்யத்தோடே யிருக்குமென்றதாயிற்று. (நிலம்) தொண்டர்சிந்தை. "போரேற்றினை" என்றதாலே ஆத்மகுணமான சௌர்யகுணயோகம் சொல்லுகையாலே, அந்த குணவிசிஷ்டன் திருமேனியைப் பொற்குன்றின் ஸ்தாநத்திலேயாக்கி யருளிச்செய்கிறார் (அந்த ஸிம்ஹமித்யாதி). "குன்று" என்கையாலே - நிஶ்சலதையும் தோற்றுகிறதென்றதுக்கு ப்ரஸக்தி பூர்வகம் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னிலேயித்யாதி). (க) "వ్యగ్రాయామథ తస్యాంస కర్షమాణ ఉలూఖలమ్। యమళార్జునయోర్మధ్యే తిర్యగ్గత ముఖలూఖలమ్ । భగ్నావుత్తుఙ్గశాఖాగ్రౌ తేన తౌ యమళార్జునౌ । తతః కట కటాశబ్ద సమాకర్ణనతత్పరః । ఆజగామ వ్రజజనో దదర్శ చ మహాద్రుమౌ । భగ్న స్కన్ధౌ నిపతితౌ భగ్నశాఖౌ మహీతలే । నవోద్గతస్వల్పదన్తాంశుస్మితహాసం చ బాలకమ్। வ்யக்ராயாமததஸ்யாம்ஸ கர்ஷமாண உலூகலம் । யமளார்ஜுநயோர்மத்யே திர்யக்கதமுலூகலம் । பக்நாவுத்துங்கசாகாக்ரௌ தேநதௌயமளார்ஜுநௌ ! ததஃகடகடாசப்த ஸமாகர்ணநதத்பரஃ! ஆஜகாம வ்ரஜஜநோ ததர்சச மஹாத்ருமௌ । பக்நஸ்கந்தௌ நிபதிதௌ பக்நசாகௌமஹீதலே । நவோத்கத ஸ்வதந்தாம்சு ஸ்மிதஹாஸஞ்ச பாலகம்" என்று சொல்லுகிற இவ்வசநங்களில் "కటకటాశబ్దసమాకర్ణనతత్పరః - கடகடாசப்த ஸமாகர்ணநதத்பரஃ" என்றது வ்ரஜஜநத்துக்கு விசேஷணமாயிருந்ததேயாகிலும் கிட்டவிருந்த க்ருஷ்ணனுக்கு மிதொக்குமென்று திருவுள்ளம். அன்றிக்கே, "ஸஃ" உலூகலம் - கர்ஷமாணஃ - ததஃகடகடாசப்தஸமாகர்ணந தத்பரஸ்ஸந் - மஹாத்ருமௌ - ததர்ச - வ்ரஜஜநப்ரசதாத்ருமஃ ஆஜகாமததர்சச." இத்யந்வயோவிவக்ஷிதஃ. (இடர்பட்டு) ஆஶ்ரிதரிடர்பட்டென்றபடி. (வரவும்) தானிருக்குமிடத்திலே வரவு மென்றபடி. (வரவும்) என்றவநந்தரம், ரக்ஷணம் என்றுசேஷம். (இவன்) ஸ்ரீகஜேந்த்ராழ்வான் ... ... ... ... (க)

மூ.—பூண்டவத்தம் பிறர்க்கடைந்து தொண்டுபட்டுப்
பொய்ந்நூலைமெய்ந் நூலென்றென்றுமோதி
மாண்டவத்தம் போகாதே வம்மினெந்தை
யென்வணங்கப் படுவானைக் கணங்களேத்தும்
நீண்டவத்தைக் கருமுகிலை யெம்மான்றன்னை
நின்றவூர் நித்திலத்தொத் தொத்தார்சோலைக்
காண்டவத்தைக் கனலெரிவாய் பெய்வித்தானைக்
கண்டதுநான் கடல்மல்லைத் தலசயனத்தே. (உ)

(க) வி - பு - ரு - சு - கஅ.

| பதம். | உரை. |
|---|---|
| அவத்தம் | வ்யர்த்தமானசிலகார்யங்களை |
| பூண்டு | ஏறிட்டுக்கொண்டு |
| பிறர்க்கு | தண்ணியர்க்கு |
| அடைந்து | (அவர்களைப்)பற்றி |
| தொண்டுபட்டு | அடிமைகள்செய்தும் |
| பொய் | மித்யையான |
| நூலை | பாஹ்யசாஸ்த்ரங்களை |
| ஓதி | கற்று (அவற்றை) |
| மெய்நூலென்றும் | மெய்யான அர்த்தங்களென்றும்கம்பி |
| மாண்டு | முடிந்து |
| அவத்தம் | வ்யர்த்தமே |
| போகாதே | போகாமல் |
| வம்மின் | (உஜ்ஜீவிக்கும்படி) வாருங்கள்; |
| எந்தை | எனக்கு ஜநகனாய், |
| என் | என்போல்வார்க்கு |
| வணங்கப்படுவானை | ஆஸ்ரயிக்கலாம்படி யெளியனாய், |
| கணங்கள் | அறிவுடையாரின் திரள்களாலே |
| ஏத்தும் | ஏத்தப்படுமவனாய், |
| நீண்டஅத்தை | அபரிச்சேத்யனான அவ்வஸ்துவாய் |
| கருமுகிலை | காளமேகம்போன்ற திருநிறத்தையுடையனாய், |
| நின்றவூர் | திருநின்றவூரில் |
| நித்திலத்தை | முத்துத்திரள்போலே குளிர்ந்தவடிவையுடையனாய், |
| தொத்து | பூங்கொத்துக்கள் |
| ஆர் | மிக்கிருந்துள்ள [ஏ |
| சோலை | சோலையையுடைத்தா |
| காண்டவத்தை | காண்டவவநத்தை |
| கனல் | ஜ்வலிக்கிற |
| எரி | அக்நியினுடைய |
| வாய் | வாயிலே |
| பெய்வித்தானை | ப்ரவேசிப்பித்த |
| எம்மான்றன்னை | ஸர்வேஶ்வரனை |

கடல்மல்லைத்தலசயநத்து நான்கண்டது. (உ)

வ்யா.—இரண்டாம்பாட்டு. (பூண்டவத்தம்) (அவத்தம் பூண்டு) வ்யர்த்தமான கார்யங்களை ஏறிட்டுக்கொண்டு. † ஸாத்விகரோட்டை ஸஹவாஸமும் வைதிக புருஷார்த்தங்களைப் பெறவேணு மென்னு மதுவும் தவிர்ந்து வ்யர்த்தமானவற்றை யேறிட்டுக்கொண்டு. (பிறர்க்கடைந்துதொண்டுபட்டு) †அப்ராப்த விஷயங்களிலே ப்ராப்த விஷயத்திற்போலே யிருக்கத்தாழ்வு செய்து. அஸேவ்யரை ஸேவித்து. (பொய்ந் நூலையித்யாதி) விப்ரலம்பகரராயும் ப்ராந்தராயு முள்ளவர்கள் தந்தாமுடைய புத்தியாலே வரைந்த சாஸ்த்ரங்களை வைதிக சாஸ்த்ரம்போலே யிருக்க †ஆதரித்தப்யஸித்து, பின்னை அவற்றினுடைய ஸ்வரூபமிருந்தபடியை ஆராய்ந்து மீளுகைக்கு அவகாசமில்லாதபடி முடிந்து. (அவத்தம் போகாதே) இஹலோக பரலோகங்களிரண்டிலும் வ்யர்த்தமே போகாதே (வம்மின்) கெடுவீர்காள்! கடுக வந்து கில்லுங்கோள். (எந்தையென் வணங்கப் படுவானை) எனக்கு ஜநகனாய் எனக்குச் சென்று ஆஶ்ரயிக்கலாம்படி சிலவனாயுள்ளவனை. (கணங்களித்யாதி) அறிவுடையார் திரள் நின்றேத்த

கிற அபரிச்சேத்யமான அந்தவஸ்துவை. †அன்றிக்கே, (நீண்டவத்தக் கருமுகிலை) என்ருய், நீண்ட ஹஸ்தத்தையுடைய வென்னுதல். (எம்மான்றன்னை) திருவடிதோற்ற துறையிலே யாயிற்று இவரும் தோற்றது. (க) "ஸமஸ்தம் ஸமப்யூஹிதா:-கிமர்த்தம் நவிபூஷிதா:". (நின்றவூரித்யாதி) திருநின்றவூரிலே நிற்கிற ஸ்ரமஹரமான † முத்துத்திரள் போலே யிருக்கிறவனை. (தொத்தாரித்யாதி) † தொத்தார்ந்திருந்துள்ள சோலையை யுடைத்தான காண்டவவநத்தைக் † கனன்று கொண்டுவருகிற அக்கியின்வாயிலே ப்ரவேசிப்பித்தவனை. அர்ஜுநனும் க்ருஷ்ணனுமாய்ப் பூம்பந்தேறிட்டு விளையாடாநிற்க, அக்கிபகவான் "பசித்தேன்" என்ன, பின்னை அக்காட்டை அவனுக்கு விருந்தாக விட்டுக் கூடநின்றுபுஜிப்பித்தானிறே. இந்த்ரன் கோபத்தாலே வர்ஷிப்பிக்க, அர்ஜுநன் சரக்கூடமாகக்கட்ட மேலே வழிந்து போயிற்றிறே.(கண்டது) †காட்டுத்தீயிலே வர்ஷித்தாற்போலே, நோவுபடுகிற ஸம்ஸாரத்திலே காணப்பெற்றேன். ... ... (௨)

---

அ௩.—இரண்டாம்பாட்டு. (பூண்டவத்த மித்யாதி). கீழ்ப்பாட்டில், எம்பெருமானுடைய நிரதிசயபோக்யதையையும் விரோதி நிரஸநசீலதையையும் சொல்லாநிற்கச்செய்தே, ஸம்ஸாரிகள் அப்ராப்த விஷயங்களிலே தொண்டுபட்டுப் போகாநின்ருர்கள், ஆகிலும் விடமாட்டாதகாருண்யத்தாலே யழைக்கிருர் முக்தகண்டமாகவென்று ஸங்கதிகண்டுகொள்வது.

(விவரணம்). (ஸாத்விகரோடித்யாதி). "பிறர்க்குத்தொண்டுபட்டு, பிறரை அடைந்து" என்றந்வயித்துத்தாத்பர்ய மருளிச்செய்கிருர் (அப்ராப்தேத்யாதி). "என்றென்று" என்கிற வீப்ஸையாலே பலிதம் (ஆதரித்து) என்றது. பாடாந்தரத்தை த்யோதநம்பண்ணுகிருர் (அன்றிக்கேயித்யாதி). "நித்திலம்" நிஸ்தலமாய், (முத்து) என்றது. (கொத்து) - பூங்கொத்து. (கனன்று) ஜ்வலித்துக்கொண்டு. முன்புகாட்டுத்தீயை விளைத்தவன்ருனே இப்போது காட்டுத்தீயை யணைக்கைக்குக் கருமுகிலாய்க்கிடக்கிருன், நான் கண்டேன் என்னும் ப்ரக்ருதோபயோகத்தை ஸூசிப்பிக்கிருர் (காட்டுத்தீயித்யாதி). ()

மூ.—உடம்புருவில் மூன்ருென்ருய் மூர்த்திவேருய்
யுலகுய்ய நின்ருனை யன்றுபேய்ச்சி
விடம்பருகுவித்தகனைக் கன்றுமேய்த்து
விளையாட வல்லானை வரைமீகானில்

---

(க) ரா - கி - ௩ - கரு.

தடம்பருகு கருமுகிலைத் தஞ்சைக்கோயில்
தவநெறிக்கோர் பெருநெறியை வையங்காக்கும்
கடும்பரிமேல் கற்கியைநான் கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே. (௩)

| பதம் | உரை. |
|---|---|
| உடம்பு | சரீரத்தினுடைய |
| உருவில் | ப்ரகாரத்திலே |
| மூன்று | மூன்றும் [க |
| உலகுஉய்ய | லோகரக்ஷணார்த்தமா |
| ஒன்றாய் | ஒருபடியாய் |
| மூர்த்தி | ஸ்வரூபம் |
| வேறாய் | வேறுபட்டு |
| நின்றானை | நிற்குமவனாய், |
| அன்று | க்ருஷ்ணாவதாரத்தில் |
| பேய்ச்சி | பூதனையுடைய |
| விடம் | விஷங்கலந்தபாலை |
| பருகு | குடித்த |
| வித்தகனை | விஸ்மயநீயனாய், |
| கன்று | கன்றுகளை |
| மேய்த்து | மேய்த்து |
| விளையாட வல்லானை | விளையாடுகைக்காகவந்தவதரித்தவனாய், |
| வரைமீ | மலைமேலுள்ள |
| கானில் | காடுகளிலே |
| தடம் | தடாகங்களில் |
| | கன்றுகள் இறங்கிநீர் குடிக்கும்படி தான்முன்னே யிறங்கி கையை முதுகிலேகட்டிக்கொண்டு) |

| பதம். | உரை. |
|---|---|
| பருகு | தண்ணீர் அமுதுசெய்யுமவனாய், |
| கருமுகிலை | காளமேகஸத்ருசனாய், |
| தஞ்சைக்கோயில் | தஞ்சைமாமணிக்கோயிலில் எழுந்தருளிநிற்குமவனாய், |
| தவநெறிக்கு | (தன்னைக் கிட்டுகைக்குச்செய்யும்) உபாயங்களுக்குள் |
| ஓர்பெருநெறியை | ஒருபெரிதான நெறியாயிருப்பவனுமாய், |
| வையம் | ஸகலலோகங்களையும் |
| காக்கும் | ரக்ஷிக்கைக்காக |
| கடு | மிக்கவேகத்தையுடைய |
| பரிமேல் | குதிரையின்மேலே |
| கற்கியை | கல்க்யவதாரம் செய்தருளினவனை, |
| கடி | காவலையுடைய |
| பொழில் | பொழிலாலே |
| சூழ் | சூழப்பட்ட |
| கடல்மல்லைத்தலசயனத்து நான் கண்டுகொண்டேன். (௩) | |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (உடம்புருவில் மூன்றொன்றாய்) உடம்பினுடைய படியில் - உடம்பினுடைய ப்ரகாரத்தில், மூன்று மொன்றாம்படியை யுடைத்தாய். †ஸ்வேந ரூபேண நின்றும் ப்ரஹ்மாதிகளுக்கு அந்தராத்மாவாய்நின்றும் இப்படிகளால் இதுவே சரீரமாமிடத்தில் †ஒருபடிப்பட்டிருக்கும்.†(மூர்த்திவேறாய்)†ஆனால் மூன்று மொக்குமிறே; (க)[యేషాం సామ్యే స్థితం మనః - யேஷாம் ஸாம்யே ஸ்த்தி

(க)

தம்மநஃ] முன்பே ஐக்யம் சொல்லிவைத்துப் பின்னை ஸாம்யம் சொன்னனிறே. † இப்படி நிற்கிறதுதா னெதுக்காக வென்னில்; ஸ்ருஷ்டி ஸ்த்திதி ஸம்ஹாரங்களாலே ஜகத்ரக்ஷணத்துக்காக வாயிற்று இப்படி நிற்கிறது. (அன்றுபேய்ச்சிவிடம் பருகுவித்தகனை) ஸ்ருஷ்டமான ஜகத்திலே க்ருஷ்ணனாய் வந்தவதரித்துப் பூதனையுடைய விஷத்தைப் பருகின விஸ்மயநீயனானவனை. இங்கு விஸ்மய மென்னென்றால்; முலைவழியே ப்ராணனும் மாளும்படியாக விஷத்தைப் பருகினபடியைச் சொல்லுதல்; அன்றிக்கே, அவள் தாய்வடிவுகொண்டு வரச்செய்தேயும் முலைப்பால் விசேஷத்தாலே வேற்று முலை யென்றறிந்து புஜித்தபடியைச் சொல்லுதல். (கன்றித்யாதி) (க) †“ ஸர்வஸ்ய ஜகத: பாலௌ வத்ஸபாலௌ பபூவது:” ஸர்வஸ்யஜகதஃபாலௌ வத்ஸபாலௌ பபூவதுஃ”. (வரையித்யாதி) இவ்விடத்துக்கு பட்டரருளிச்செய்தா ரென்று ப்ரஸித்தமிறே. †இவ்விடத்துக்கு ஜீயரருளிச் செய்யாநிற்க, பிள்ளை அழகிய மணவாளப்பெருமாளரையர் ஸ்மரிப்பித்தருளின வார்த்தையாயிற்று;-†“மலைமேல் †காட்டிலே யுண்டான தடாகங்களிலே கன்றுகள் பின்னேபோயினைத்துவந்து தண்ணீர் குடிக்கப் புக்கால் இளங்கன்றுகளாகையாலே நீரிலே முன்னே யிறங்கிக்குடிக்க பயப்படுமே, அத்தை நீரூட்டுகைக்குத், தான் பின்னே கையைக்கட்டிக் கவிழ்ந்து நின்று தண்ணீரமுதுசெய்யுமாயிற்று”. †ஜாதிப்ரயுக்தமான ஸ்வபாவத்தைச் சொன்னபடி. (தஞ்சையித்யாதி) ஜகத்தை யடைய நோக்குகைக்காகப் பெரிய ஏற்றத்தை யுடைய தஞ்சைமாமணிக் கோயிலிலே நிற்கிற. (தவநெறிக்கோர் பெருநெறியை) ஸ்வப்ராப்த்யுபாயங்களில் பெருநெறியா யுள்ளவனை. † வழிதப்பி (உ) * சிறுகானெறியே போனாலும்தன்பக்கலிலே கூட ப்ரவேசிக்கும்படி யிருக்கை.†வ்யபிசரியாத ஸாதநமென்றபடி.(வையமித்யாதி)†ஜகத்தை யடைய நோக்குகைக்காகப்,பெரிய வேகத்தை யுடைய குதிரையின் மேலேயேறி அக்குதிரைக்காலிலே ப்ரதிபக்ஷத்தைத் துகைத்துப் பொகடும் வடிவையுடையவனை. பரி - செலவு; கடிதான செலவை யுடைத்தாய் மேலானபரியை. (கடியித்யாதி) † ஜகத்தையடைய ரக்ஷிக்கக்கடவனா யிருக்கிறவனுடைய ரக்ஷணத்துக்கு நானிப்போது விஷயபூதனானே னென்கிறார். ... (ந)

(க) வி - பு - ரு - கூ - நகூ. (உ) பெரி - திரு - ௪ - உ - அ.

அரு.—மூன்றாம்பாட்டு. (உடம்பித்யாதி). கீழ்ப்பாட்டிலே "வம்மின என்று ஸாமாந்யேந அழையாநிற்கச்செய்தேயும், அவர்கள் பரதத்வ நிர்ணயம் பிறவாதார் சிலரும், விரோதிக்கஞ்சிக்கிடப்பாரும், பசுப்ராயரான எங்களை ரக்ஷிப்பனோ! என்றிருப்பாரும், உபாயநிர்ணயம் பிறவாதாரும், கலிகால தூஷிதருமா யிருப்பாருமாகையாலே பேசாதிருந்தார்களென்று, அவனுடைய படிகளை அவர்களறிய வருளிச்செய்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

விவரணம் (ஸ்வேச்சேத்யாதி). (ஒருபடிப்பட்டிருக்கும்) என்றது - தன்னுடைய திருமேனி தனக்கு விதேயமானாற்போலே, ப்ரஹ்மருத்ரர்களும் தனக்கு விதேயராயிருப்பார்களென்கை. இத்தால், (க) "ప్రహ్మవిష్ణుశివాత్మికాం సంజ్ఞాం జనార్దనః ఏక ఏవ యాతి - ப்ரஹ்மவிஷ்ணுசிவாத்மிகாம் ஸம்ஜ்ஞாம் ஜநார்த்தந: ஏகஏவ யாதி" என்னும்படியே மூன்றுவடிவுமவனுக்கே சரீரமாகையாலே, ஐக்யம்சொல்லிற்றாயிற்று. ஆனால் த்ரிமூர்த்யைக்யவாதம் ப்ரஸங்கியாதோவென்ன; (மூர்த்திவேறாய்) என்று மூலத்துக்கவதாரிகை யிட்டுக்கொள்வது. மூர்த்திசப்தம், ஸ்வரூபபரம், ஆக ப்ரஹ்மருத்ரர்களுடைய ஜீவஸ்வரூபங்களும், எம்பெருமானுடைய திவ்யாத்மஸ்வரூபமும் வெவ்வேறாயிருக்கச்செய்தேயும் அவனுக்கிவர்கள் சரீரபூதரென்றதாயிற்று. ஸ்வரூபங்கள் வெவ்வேறாகில் சரீராத்மபாவம் சொல்லுவானென், ஸாம்யம்சொல்லலாமிறேயென்று த்ரிமூர்த்தி ஸாம்யவாதியினுடைய வார்த்தையைக் கிளப்புகிறார் (ஆனாலித்யாதி). த்ருஷ்டாந்த கதநமுகேந பரிஹரிக்கிறார் (யேஷாமித்யாதி). ஐக்யத்தையும் ஸாம்யத்தையும் ருஷிசொன்னால், இரண்டும் முக்யமாகக்கிடைக்கும்படி ஸ்வரூபபேதமும் சரீரசரீரிபாவத்தால் ஐக்யமும்கொள்ளவேணுமென்று கருத்து. ஆக, ஸாம்யம்சொன்னத்தாலே ஸ்வரூபைக்யவாதமும், ஐக்யம்சொல்லுகையாலே கேவலஸாம்யவாதமும், அர்த்தாத் அதிக்ராந்தவாதமும் நிரஸ்தமாயிற்று. ஆனால் ஸாம்யந்தோன்ற நிற்கைக்கு ப்ரயோஜநமேது? என்று ஜிஜ்ஞாஸு ப்ரஶ்நாநுவாத பூர்வகம் ப்ரயோஜநந்தன்னையருளிச்செய்கிறார் (இப்படியித்யாதி). கார்யத்வாரா வந்த ஸாம்யமித்தனை போக்கி ஸ்வரூபஸாம்யமில்லையென்று கருத்து. இத்தால் - "உலகுய்யநின்றானை" என்றதுக்குத் தாத்பர்யம்சொல்லிற்றாயிற்று. "உலகுய்யநின்றானை" என்றதைக் கடாக்ஷித்து "கன்று" இத்யாதிக்குத் தாத்பர்யம் (ஸர்வஸ்யேத்யாதி). இத்தால், அகிலஜகத்ரக்ஷணார்த்தம் ப்ரஹ்மாதிகள்நடுவே ஸஜாதீயனானவன் கன்றுமேய்க்க இடையனாய் வந்தானென்றதாயிற்று. கன்றுமேய்க்கையோடு ஸ்ருஷ்ட்யாதிகளோடு வாசியற இவனுக்கு விளையாட்டென்று திருவுள்ளம். ப்ரஸித்திதா னெங்ஙனேயென்ன; (இவ்விடத்துக்கு ஜீயரித்யாதி). பட்டர் ஸ்ரீஸூக்தியை நஞ்சீயருக்கு அரையர் ஸ்மரிப்பிக்கையாலே, அநேகம் முதலிகளும் கேட்டிருப்பர்களென்று கருத்து. அந்த ஸ்ரீஸூக்திதன்னை

(க) வி - பு - க - உ - ௬௮.

யருளிச்செய்கிறார், (மலைமேலித்யாதி). "கானில்" என்றதினர்த்தம் (காட்டிலே) என்றது. "பருகு" என்றால் கையாலே தானேபருகலாமே, "பின்னே கையைக்கட்டிக்கொண்டு" என்னுமது தோற்றும்படி யென்னென்னில்; "கருமுகிலை" என்றத்தால் - படிந்து வருகைதோற்றும், அத்தாலே இவ்வர்த்தம் ஸூசிதமென்று திருவுள்ளம். இவ்வர்த்தத்தாலே பலித்ததென்னென்ன, (ஜாதியித்யாதி). "பெரு" என்றதுக்கு வாஸநை (வழிதப்பியித்யாதி). (கானெறி) - காட்டுவழி. உபாயாந்தரம். "ஓர்" என்றதுக்கு பாவம் (வ்யபிசரியாதவித்யாதி). (கடுமையை) - வேகத்தையுடைத்தான, பரி-குதிரைமேலேயிருக்கிற, கல்கியென்றும்; கடுமையானநடையையுடைய, மேலான, பரி-குதிரையாயிருக்கிற கல்கியென்றும்; த்விவிதமர்த்த மருளிச்செய்கிறார் (ஜகத்தையித்யாதி வாக்யத்ரயத்தாலே). இனிமேல் செய்தருளுகிற வவதாரமன்றோவது, "கற்கியைநான் கண்டுகொண்டேன்" என்னும்படி யெங்ஙனேயென்ன; (ஜகத்தையடையவித்யாதி). ... ... ... ... (ரு)

மூ.—பேய்த்தாயை முலையுண்ட பிள்ளை தன்னைப்
பிணைமருப்பில் கருங்களிற்றைப் பிணைமானோக்கில்
ஆய்த்தாயர் தயிர்வெண்ணெயமர்ந்த கோவை
யந்தணர்தமமுதத்தைக் குரவைமுன்னே
கோத்தானைக் குடமாடு கூத்தன் தன்னைக்
கோகுலங்கள் தளராமல் குன்றமேந்திக்
காத்தானை யெம்மானைக் கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே. (சு)

| பதம். | உரை. |
|---|---|
| தாய் | தாய்வடிவு கொண்டு |
| பேயை | பூதனையுடைய [வந்த |
| முலை | ஸ்தநத்தை |
| உண்ட | அமுது செய்தருளின |
| பிள்ளை தன்னை | பாலனாய், [ணைந்த |
| பிணை | ஒன்றோடொன்று பி |
| மருப்பில் | கொம்புகளையுடைய |
| கரு | கறுத்த |
| களிற்றை | யானையோடொத்தவனாய் |
| மான்பிணை | மான்பேடைபோன்ற |
| நோக்கில் | விழியையுடைய |
| ஆய்த்தாயர் | இடைத்தாயாரான யசோதையுடைய |
| தயிர் | தயிரையும் |
| வெண்ணெய் | வெண்ணெயையும் அமுதுசெய்து |

| பதம். | உரை. |
|---|---|
| அமர்ந்த | தரித்திருந்த |
| கோவை | நிர்வாஹகனாய், |
| அந்தணர்தம் | ப்ராஹ்மணர்களுக்கு |
| அமுதத்தை | அம்ருதம்போலே போக்யனாய், |
| முன்னே | முன்பொருகால் |
| குரவைகோத்தானை | பெண்களோடு கை கோத்துகுரவையாடினவனாய், (பின்பு) |
| குடம் ஆடு | குடக்கூத்தாடின |
| கூத்தன் தன்னை | விலக்ஷண சேஷ்டிதங்களையுடையனாய், (இந்த்ரன் ப்ரகோபத்தாலே வர்ஷிப்பித்தவன்று) |
| கோகுலங்கள் | பசுத்திரள்கள் |
| தளராமல் | நோவுபடாதபடி |

| | | | |
|---|---|---|---|
| குன்றம் | கோவர்த்தநமென்னும்மலையை | கடி | பரிமளம்மிக்க |
| ஏந்தி | தரித்து | பொழில் | சோலையாலே |
| காத்தானை | ரக்ஷித்தவனாய், | சூழ் | சூழப்பட்ட |
| எம்மானை | என்னை அடிமைகொண்டவனான ஸர்வேச்வரனை | கடல்மல்லைத் தலசயனத்துக் கண்டு கொண்டேன். (ச) | |

வ்யா.—நாலாம்பாட்டு. (பேய்த்தாயைமுலையுண்ட பிள்ளைதனை) †பேயானவள் தாய்வடிவுகொண்டுவரத் தாய்பக்கல் பண்ணக்கடவ விருப்பத்தை அவள் பக்கலிலேபண்ணி, அவள் முலையையுண்ட மௌக்த்யத்தை யுடையவனை. (பிணையித்யாதி) பிணைந்த மருப்பையுடைய கருங்களிறுபோலே இனியசேஷ்டிதங்களை யுடையனை. "பிணைமருப்பு" என்கிறவித்தால் - செருக்காலே மிகைத்துத் திரியும்படியைச்சொல்லுகிறது. (பிணையித்யாதி) மான்பேடைபோலேயிருக்கிற நோக்கையுடைய, ஆய்த்தாயருண்டு - இடைத்தாயர் யசோதைப்பிராட்டி, அவள் ஸ்பர்சித்த வெண்ணெயையும் தயிரையும் அமுதுசெய்து ஆச்ரிதஸ்பர்சமுடைய த்ரவ்யமே தனக்கு தாரகமாயிருந்தசெயலாலே †லோகத்தையடைய எழுதிக்கொண்டவனை. (அந்தணர்தமமுதத்தை) அச்செயலாலே ப்ராஹ்மணஜாதிக்குத் தாரகனானவனை. (குரவையித்யாதி) †சிலர்காணக்கடவ நன்றிக்கேயிருக்கிறவித்தை எல்லார்கண்முகப்பே திருக்குரவை கோத்தவனை. (குடமாடியித்யாதி) † இப்படி சிலர்கண்டு போகையன்றிக்கே கண்டுகொளாதாரும் காணும்படியாகக் காட்டினவனை. பசுத்திரள்களானவை வர்ஷத்திலே நோவுபடாதபடி தோற்றிற்றொரு மலையைப் பிடுங்கி நோக்கினவனை. (எம்மானை) தன்னுடைய ரக்ஷணத்தைக்காட்டி என்னை அநந்யார்ஹனாக எழுதிக்கொண்டவனை.†(கண்டித்யாதி) அவன் ரக்ஷகனென்றறியப்பெற்றேன், எனக்கொருகுறை யுண்டோவென்கிறார். ... ... ... (ச)

---

அரு.—நாலாம்பாட்டு. (பேயித்யாதி). உலகுய்ய ப்ரஹ்மருத்ரர்கள் நடுவே விஷ்ணுவாயிருந்தவனே இடையர்நடுவேயும் கன்றுமேய்க்க க்ருஷ்ணனாய்வந்தான் என்னுகின்றீர், அதுக்கடையாளமென்னென்ன; அவனுடைய அதிமாநுஷசேஷ்டிதங்களைக் கேளீர் என்று அவற்றை அநுஸந்திக்கிறாரென்று மங்களத்தில் கண்டுகொள்வது. பேய்த்தாய்முலையில் விஷத்தோடு ஆய்த்தாய்கையில் வெண்ணெயோடு வாசியில்லாமல் உண்டபடியும் ப்ராஹ்மவித்துக்க.

ளோடும் இடைப்பெண்களோடும் ஒருநீராக வாசியின்றிக்கே கலந்து பே க்யனுகையும், குடமெடுத்தத்தோடு குன்றமெடுத்தத்தோடு வைஷம்யமில்லா தேசெய்த செயல்கள் அதிமாநுஷங்களிறேயென்று திருவுள்ளம்.

பிள்ளையென்னுதே, "தன்னை" என்று பிள்ளைத்தனத்தில் தானுனதன்மை யைத்திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளிச்செய்கிறார், (பேயாணவளித்யாதி). "கோணை" என்றதின் தாத்பர்யம் (லோகத்தையடையவெழுதிக்கொண்ட வனை) என்றது. முன்னேயென்ற பதப்ரயோகதாத்பர்யம் (சிலரித்யாதி). "தன் னை" என்றபதத்தாலே குடக்கூத்தில் அத்விதீயத்வம் தோற்றுகையாலே, ஊராகக் காணவருகை நிஸ்சிதமென்றருளிச்செய்கிறார் (இப்படியித்யாதி). கண்டேன் என்னுதே "கண்டுகொண்டேன்" என்றதுக்கு வாஸனை (அவ னித்யாதி). ... ... ... ... ... ... (ச)

மூ.—பாய்ந்தானைத்திரிசகடம்பாறிவீழப்
பாலகனுயாலிலையில்பள்ளியின்ப
மேய்ந்தானையிலங்கொளிசேர்மணிக்குன்றன்ன
வீரிரண்டுமால்வரைத்தோளம்மான்றன்னை
தோய்ந்தானைநிலமகள்தோள்தூதில்சென்றப்
பொய்யறைவாய்புகப்பெய்தமல்லர்மங்கக்
காய்ந்தானையெம்மானைக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனத்தே. (ரு)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| திரி | உருளுகிற | நிலமகள்தோள் | ஸ்ரீபூமிப்பிராட்டியின் திருத்தோளோ |
| சகடம் | சகடாஸுரன் | தோய்ந்தானை | கலந்தவனுய், [டே |
| பாறி | சிந்நம் பிந்நமாய் | தூதில்சென்று | பாண்டவர்களுக்குத் தூதனுய்ச்சென்று |
| வீழ | விழும்படி (திருவடிகளாலே) | பொய் | துர்யோதநன்பொய் யாஸநமிட்ட |
| பாய்ந்தானை | உதைத்தவனுய், | அவ்வறைவாய் | அந்தநிலவறையிலே |
| பாலகனுய் | சிறுபிள்ளையாய் | புக | க்ருஷ்ணனைப்ரவேசிப்பித்து நலியவேணுமென்று[வைத்த |
| ஆலிலையில் | வடதளத்திலே | பெய்த | க்ருதஸங்கேதராக்கி |
| பள்ளியின்பம் | நித்ராஸுகத்தை | மல்லர் | மல்லவர்க்கத்தை |
| ஏய்ந்தானை | அநுபவித்தவனுய், | மங்க | முடியும்படி |
| இலங்கு ஒளி | மிக்கஒளியை | காய்ந்தானை | சீறியருளினவனுய், |
| சேர் | உடைத்தான | எம்மானை | எனக்குஸ்வாமியானவனை |
| மணிக்குன்று அன்ன | ரத்நபர்வதம்போன்ற வடிவழகையும் | | |
| மால் | பெரிதாய் [ன | | |
| வரை | மலைபோலே த்ருடமா | | |
| ஈரிரண்டுதோள் | நான்குதிருத்தோள்களையுமுடைய | | |
| அம்மான்றன்னை | ஸர்வசேஷியாய்; | | |

கடிபொழில்சூழ்கடல்மல்லைத் தலசயனத்துக் கண்டுகொண்டேன். (ரு)

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பாய்ந்தானையித்யாதி) பிள்ளையைத் தொட்டிலிலே வளர்த்திச் சகடத்தை வரவிழுத்துவைத்துப் போனார்கள். அதிலே அஸுரர்களாவேசித்து வந்து நலியப்புக, (க) "స్తన్యార్థీప్రరురోదహ - ஸ்தந்யார்த்தீப்ரருரோதஹ" என்கிற படியே முலைவரவு தாழ்த்துச்சீறித் திருவடிகளாலே பாய்ந்தான். அதுக் கிலக்காய் முடிந்துபோனார்கள். † ஊருகிற சகடமானது பாறிப் போம்படியாகப் பாய்ந்தவனை. (பாலகனித்யாதி) அத்யந்த முக்த்தனாய் ஒருபவனுன வாலிலையிலே விழுக்காடுபாராதே க்ராஸகமநுபவித்தவனை. (இலங்கொளியித்யாதி) மிக்க வொளியை யுடைய நீலகிரிபோலே யிருக்கிற திருத்தோள்கள் நாலையு முடையவனை. (அம்மான்தன்னை) அந்தசதுர்ப்புஜனிறே ஸர்வேஶ்வரனாவான். (தோய்ந்தானை நிலமகள்தோள்) ஶ்ரீபூமிப்பிராட்டி திருத்தோள்களிலே அவகாஹித்தவனை. (தூதித்யாதி) பாண்டவர்களுக்குத் தூதனாய்ச்சென்று, "நிலவறையிலே ப்ரவேசிப்பித்து நலியவேணும்" என்று †பதிபடை கிடந்தமல்லர் முடிந்துபோம்படிச் சீறினவனை. (எம்மானையித்யாதி) அந்தக்ருத்ரிமத்தைத்தப்பி என்னை யெழுதிக்கொண்டவனை. (ரு)

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (பாய்ந்தானையித்யாதி). தாயைப்போலே வந்த பேயைப்போலன்றிக்கே, தாய்தானே காவலாக வைத்த சகடத்தைக் காலாலே தள்ளின பிள்ளைகிடீர்! உலகை யெல்லாம் வயிற்றடக்கிப் பள்ளி கொள்ளும் பிள்ளை, அவன் ஆஶ்ரிதர்க்குக் கையாளாய் விரோதிகளைக் காணில் சீறும் ஸ்வபாவன், அவனை நான் கண்டேன், நீங்களும் கண்டு ஆஶ்ரயியுங்கோளென்கிறுரென்று அவதாரிகை கண்டு கொள்வது.

(க) "కదాచిచ్ఛకటస్యాధశ్శయానో మధుసూదనః । చిక్షేపచరణావూర్ధ్వమ్ స్తన్యార్థీప్రరురోదహ । తస్యపాదప్రహారేణశకటం పరివర్తితమ్ । విధ్వస్తకుంభభాండం తద్విపరీతం పపాతవై - கதாசிச்சகடஸ்யாதஶ்ஶயாநோ மதுஸூதந: । சிக்ஷேபசரணாவூர்த்த்வம்ஸ்தந்யார்த்தீப்ரருரோதஹ । தஸ்யபாதப்ரஹாரேண சகடம் பரிவர்த்திதம் । வித்வஸ்தகும்பபாண்டம் தத்விபரீதம் பபாதவை" என்று ப்ரமாணசேஷம். தாத்பர்யமருளிச்செய்து, ஸப்தார்த்தமருளிச்செய்கிறார். (ஊருகிறவித்யாதி). (பதிபடை) அந்த ஸ்தாநத்திலே கிடந்த ஸேனை. துர்யோதநன் பொய்யாஸநமிட்டு க்ருஷ்ணனைப்பிடிப்பதாக அநேகம் மல்லவர்க்கத்தை க்ருதஸங்கேதராக்கி வைத்தானென்று கருத்து. ... ... (ரு)

---

(*) ... நி. ஸ. க.

மூ.—கிடந்தானைத்தடங்கடலுள்பணங்கள்மேவிக்
கிளர்பொறியமறிதிரியவதனின்பின்னே
படர்ந்தானைப்படுமதத்தகளிற்றின்கொம்பு
பறித்தானைப்பாரிடத்தையெயிறுகீற
விடந்தானைவளைமருப்பினேனமாகி
யிருநிலனும்பெருவிசும்புமெய்தாவண்ணம்
கடந்தானையெம்மானைக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனத்தே. (கூ)

| பதம் | உரை. |
|---|---|
| தடம் | பரந்த |
| கடலுள் | திருப்பாற்கடலிலே |
| பணங்கள் | திருவனந்தாழ்வான் படத்தின் கீழே |
| மேவி | பொருந்தி |
| கிடந்தானை | கண்வளர்ந்தருளின [வனாய், |
| கிளர் | கிளர்ந்து |
| பொறிய | நாநாவர்ணமான புள்ளிகளையுடைய |
| மறி | மான்குட்டியானது |
| திரிய | அங்கேயிங்கேஸஞ்சரிக்க |
| அதனின்பின்னே | அதின்பின்னே |
| படர்ந்தானை | தொடர்ந்துபோனவனாய், |
| படு | ஒழுகாநின்றுள்ள [ய், |
| மதத்த | மதஜலத்தையுடைய |
| களிற்றின் | குவலயாபீடத்தின் |
| கொம்பு | கொம்பை [னாய், |
| பறித்தானை | பிடுங்கிப்பொகட்டவ |

| பதம். | உரை. |
|---|---|
| வளை | வளைந்த |
| மருப்பின் | கொம்பையுடைத்தா [ன |
| ஏனமாகி | வராஹமாய் |
| இடம்பாரை | பரந்தபூமியை |
| எயிறு | திருவெயிற்றாலே |
| கீற | கிழியும்படி [னாய், |
| இடந்தானை | ஒட்டுவிடுவித்தவ |
| இருநிலனும் | மஹத்தானபூமியும் |
| பெருவிசும்பும் | பெரியஆகாசமும் |
| எய்தாவண்ணம் | போராதபடியாக வளர்ந்து |
| கடந்தானை | லோகத்தைத்திருவடிகளாலே அளந்து கொண்டவனாய், |
| எம்மானை | என்னையடிமைகொண்டவனானஸர்வேஶ்வரனை |

கடிபொழில்சூழ கடல்மல்லைத்தல சயனத்துக் கண்டுகொண்டேன். (கூ)

வ்யா.—ஆறும்பாட்டு. (கிடந்தானை) † கண்வளர்ந்தருளுகைக்கீடான பரப்பையுடைத்தான கடலிலே திருவனந்தாழ்வான் மேலே (மேவி) பிராட்டிமார் திருமுலைத்தடத்தாலும் கிளப்பவொண்ணாதபடி கண்வளர்ந்தருளினவனை. (கிளரித்யாதி) கிளர்ந்து நாநாவர்ணமான பொறியையுடைத்தான மான்குட்டியைப், பிராட்டி "பிடித்துத்தரவேணும்" என்ன; துஷ்டம்ருகமாகையாலே அது அங்கேயிங்கே ஸஞ்சரிக்க, அதின்பின்னே † அடிநீயப்போனவனை. †பிராட்டிபிரிவு விளையும்படியாகவிறே கைகழியப்போனபடி. பெரிய மத்தகஜத்தினுடைய கொம்பைக் ‡ குப்பைக்கீரைபோலே அநாயாஸே

பிடுங்கினவனை (பாரிடத்தையித்யாதி)† வளைந்த கொம்பையுடைய மஹாவராஹமாய், பரப்பையுடைத்தான பூமியைத்திருவெயிற்றாலே கிழியும்படி யிடந்தவனை. உடம்புநோவ வ்யாபரித்தபடி சொல்லுகிறது. (இருநிலனித்யாதி) பூம்யந்தரிக்ஷாதிகள் போராதபடியாக வளர்ந்து லோகத்தை யளந்துகொண்டவனை. (எம்மானை) எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்த சீர்மையாலே என்னை யெழுதிக் கொண்டவனை. (கண்டுகொண்டேன்) அவன்றானே திருவடிகளைக் கொண்டுவந்து வைத்தவன்று தப்பினநான் இன்று இங்கே காணப் பெற்றேனென்கிறார். ... ... ... (சா)

அரு. ஆறாம்பாட்டு. (கிடந்தானையித்யாதி). * பாலகனுயாலிலையிற் பள்ளிகொண்டவனே யன்றிக்கே, *(க) பாற்கடலுள் பாம்பணைமேல் பள்ளியமர்ந்து பல அவதாரங்கள் செய்துவந்து பள்ளிகொண்டருளக் கண்டேனென்று ஸங்கதி கண்டு கொள்வது.

"பணங்கள்" என்றது - லக்ஷணயா திருவனந்தாழ்வானைச் சொல்லுகிற தென்றதாய், "தடங்கடலுள் பணங்கள் மேவிக்கிடந்தானை" என்று அந்வயித்துத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (கண்வளர்ந்தித்யாதி). பொறி - புள்ளிகள். மறி - மான்குட்டி. (அடித்ய) அடிதெரியாதபடியென்கை. அதனின் பின் படர்ந்தானையென்னுதே, "பின்னே" என்றதுக்குத்தாத்பர்யம் (பிராட்டியித்யாதி). (குப்பைக்கீரைபோலே) என்றது-"பறித்தானை" என்றபத வாஸனை. "வளைமருப்பினேனமாகி - பாரிடத்தையெயிறு கீறவிடந்தானை." என்று அந்வயாநுகுண மர்த்தமருளிச் செய்கிறார் (வளைந்தவித்யாதி). ஆக இப்பாட்டில் திருவனந்தாழ்வானோடு பிராட்டியாரோடு மதுரையிற் பெண்களோடு, ஸ்ரீ பூமிப்பிராட்டியாரோடு, பூமியிலுள்ளாரோடு வாசியற வெல்லார்க்கும் தன்னைக்கையடைப்பாக்கினவனை நான் கண்டேனென்று, அவனுடைய பரார்த்ததையைச் சொல்லுகிறாரென்றதாயிற்று. ... ... ... ... (சு)

மூ.—பேணுதவலியரக்கர்மெலியவன்று
பெருவரைத்தோளிறநெரித்தன்றவுணர்கோனைப்
பூணுகம்பிளவெடுத்தபோர்வல்லோனைப்
பொருகடலுளுயிலமர்ந்தபுள்ளூர்தியை
ஊணுகப் பேய்முலை நஞ்சுண்டான்றன்னை
யுள்ளுவாருள்ளத்தேயுறைகின்றானைக்
காணுதிரிதருவேன்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனத்தே. (எ)

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்று | ராவணன் கைவிஞ்சி னவன்று | வல்லோனை | ஸமர்த்தனானவனாய், |
| பேணாத | ஸர்வேஶ்வரனென்று ஆதரியாத | பொரு | திரைக்கிளப்பத்தை யுடைய |
| வலி | பலத்தையுடைய | கடலுள் | திருப்பாற்கடலிலே |
| அரக்கர் | ராக்ஷஸர் | துயிலமர்ந்த | கண்வளர்ந்தருளின |
| மெலிய | இளைக்கும்படியாக | புள்ளூர்தியை | கருடவாஹநனாய், |
| பெரு | பெரிய | பேய்முலை | பூதனையின் முலையிலு |
| வரை | மலைபோன்ற | நஞ்சு | விஷத்தை [ண்டான |
| தோள் | தோள்கள் | ஊணாக | தாரகமாக |
| இற | முறியும்படி | உண்டான்றன்னை | அமுதுசெய்தருளினவனாய் |
| நெரித்து | கட்டிக்கொண்டு | உள்ளுவார் | பூதநாநிரஸநத்தை நினைத்தீடுபடுமவர்களுடைய |
| அன்று | ஆஶ்ரிதனனப்ரஹ்லாதனை நலிந்தவன்று | உள்ளத்து | நெஞ்சில் [னை |
| அவுணர்கோனை | அஸுரர்கள்தலைவனான ஹிரண்யனுடைய | உறைகின்றானை | பொருந்தமுடையவ |
| பூண் | ஆபரணங்களணிந்த | காணாது | நெடுநாள்காணாமல் |
| ஆகம் | மார்பை | திரிதருவேன் | தேடித்திரிகிற |
| போர் | யுத்தத்தில் | | |
| பிளவெடுத்த | பிளந்துபொகட்ட | | |

நான், கடிபொழில்சூழ் கடல்மல்லைத் தலசயனத்துக் கண்டு கொண்டேன். (எ)

வ்யா.—ஏழாம்பாட்டு. (பேணாதவித்யாதி) † ஸர்வேஶ்வரனென்று கொண்டு பேணவறியாதே முன்கைமிடுக்காலே தோற்றின படி நடந்துதிரிகிற ராக்ஷஸ ஜாதியானது மெலியும்படியாக. (க)“எங்ஙனேயுய்வர் தானவர் நினைந்தால்” என்கிறபடியே அச்சிறுக்கனைப் போலே சீற்றமின்றிக்கேயிருப்பார் பிழைக்குமித்தனையல்லது ஆஸுர ப்ரக்ருதிகள் எங்ஙனே உஜ்ஜீவிக்கும்படி என்னக்கடவதிறே; அப்படியேராக்ஷஸஜாதியானது மெலியும்படியாகப்பண்ணி; அன்று பெரியவரைபோலேயிருக்கிறதோள்களானவை † இறும்படியாகக் †கட்டிக்கொண்டு;† ஆஸுரவர்க்கத்துக்கு நிர்வாஹகனானவனை, ஆபரணங்களாலே அலங்க்ருதமான சரீரமிருபிளவாம்படி கிழித்துப்பொகட்டு யுத்தத்திலே ஸமர்த்தனானவனை, (பொரு) † அதுக்குறுப்பாகத் திருப்பாற்கடலிலே வந்து கண்வளர்ந்தவனை. (புள்ளூர்தியை) ப்ரஹ்மாதிகள்கூக்குரல்கேட்டு அங்குநின்றும் பெரியதிருவடிதோளிலேயேறி அவர்களுக்குக் காட்சிகொடுக்கும்படி சொல்லுகிறது. (ஊணாகவித்யாதி) பூதனை தாய்வடிவு கொண்டுவந்து முலைகொடுக்க,

(க) ௫-எ-௩,

அவள் முலைகொடாவிடில் தரியாதாளாய்க் கொடுத்தாற்போலே, தானும் முலை யுண்ணுவிடில் தரியாதானாய் முலையுண்டபடி சொல்லு கிறது. (உள்ளுவாரித்யாதி) செவ்வியார்க்குத்தான் செவ்வியனாய்ப் பரிமாறும்படியும் துஷ்டர்க்குத்தானும் அப்படியிருக்கும்படியும் சொல்லுகிறது. † பருவம் நிரம்பாதிருக்கச் செய்தேயும் பூதனை கை யிலேயகப்பட்டு அத்தைத்தப்பிப்போகப்பெற்ற அதொன்றுமே யா யிற்று இவர்கள் நெஞ்சில் கிடப்பது. (காணுதளித்யாதி) † யாதநா சரீரம்போலே காணவேணுமென்று ஆசைப்பட்டுத் தட்டித் திரிகிற நான், பசித்தவன் ஜீவிக்கப்பெற்ருற் போலே காணப் பெற்றேன். (கடியித்யாதி) சாஸ்த்ரங்களிலே கேட்டு ஒரு தேசவிசேஷத்திலே சென்ருல் காணவிருக்கையன்றிக்கே விடாய்த்த இங்நிலத்திலே காணப்பெற்றேனென்கிருர். ... ... ... (எ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (பேணுதவித்யாதி) இப்படி ஆஶ்ரிதார்த்தமாக இவன் அநேகாவதாரங்களைப் பண்ணினுனென்னச் செய்தேயும், வாஸநாபலத் தாலே நெஞ்சுநெகிழாதேயிருக்கு மவர்களைக்குறித்து அச்சமுறுத்துகைக்காக, நீங்களவனைப்பேணுவிடில் கேவலம் ஆஸுரப்ரக்ருதிகளாய்ப் பேயராய்ப்போ கிறீர்களென்னுமதுதோற்ற, ராவண ஹிரண்ய பூதநாநிரஸநங்களை யநுஸந்திக் கிருரென்று ஸங்கதி கண்டு கொள்வது.

பேணுகை ஆதரிக்கையாய் தாத்பர்யம் (ஸர்வேஶ்வரனித்யாதி). (இறும் படியாக) முறியும்படியாக. "நெரித்து" என்றதினர்த்தம் (கட்டிக்கொண்டு) என்றது; ஶ்லேஷையாலே நெருக்கியென்றபடி. இவ்வளவும் ராவணவிஜயம்பண் ணின ராமாவதாரவ்ருத்தாந்தம்; "அன்றவுணர்" இத்யாதிக்கு-ஹிரண்யநிரஸ நம் பண்ணினபடியாக விவக்ஷித்தருளிச் செய்கிருர், (ஆஸுரேத்யாதி). இங்ங னன்ருகில் பாட்டிலே இரண்டு "அன்று" என்றபதம் வேண்டாவிறே, ராம நரஸிம்ஹர்களுடையவும் ராவணஹிரண்யர்களுடையவும் தர்மைக்யத்தா லே ஏகமாக உபந்யஸித்தருளினுரென்று கொள்வது. (அதுக்கு) என்றது-ரா வணநிரஸநத்துக் கென்றபடி. யத்வா - "மெலிய வன்று" என்று கீழேகூட்டி, ராமாவதார பரமாகவும், "பெருவரை" இத்யாதியையெல்லாம் அழகிய சிங்கர் விஷயமாகவும் யோஜிக்கவுமாம். இப்போது (கட்டிக்கொண்டு) என்றது, (ద్వంద్వయుద్ధ) த்வந்த்வயுத்தபரம். (அதுக்கு) ஸாமாந்யேந விரோதிநிரஸநத்துக் கென்றபடி. இத்திருமொழியில், "பேய்ச்சிவிடம்பருகுவித்தகனை" என்றும் "பேய்த்தாயை முலையுண்டபிள்ளைதன்னை" என்றும், "ஊனுகப் பேய்முலை நஞ்சுண்டான்றன்னை" என்றும் முக்காலும் அநுஸந்திக்கும்படியிருக்கும தொன்ருகையாலே, "உள்ளுவார்" என்றதுக்கும் இத்தை யநுஸந்திப்பாராக வே தாத்பர்யம்விவக்ஷித்து, அதுக்கு ஹேதுமுகேநவருளிச் செய்கிருர் (பருவ

மித்யாதி). தட்டித்திரிகைக்கு த்ருஷ்டாந்தம். (யாதநாசரீரம்போலே) என்றது. அதாவது - து:கா நுபவம் பண்ணுகைக்கு எடுத்த சரீரமாகையாலே இஷ்டஸாதங்கள் கிடையாதிறேயென்கை. ... ... ... ... (எ)

மூ.—பெண்ணாகி யின்னமுதம் வஞ்சித்தானைப்
பிறையெயிற்றன் றடலரியாய்ப் பெருகினானைத்
தண்ணார்ந்த வார்புனல் சூழ் மெய்ய மென்னும்
தடவரைமேல் கிடந்தானைப் பணங்கள்மேவி
எண்ணானை யெண்ணிறந்த புகழினானை
யிலங்கொளிசேரரவிந்தம் போன்றுநீண்ட
கண்ணானைக் கண்ணாரக் கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ் கடல்மல்லைத்தலசயனத்தே. (அ

| பதம். | உரை. |
|---|---|
| இன் | இனிதான |
| அமுதம் | அம்ருதத்தை (அஸுரர்கள் புஜியாதபடி) |
| பெண் ஆகி | ஸ்த்ரீவடிவைக் கொண்டு |
| வஞ்சித்தானை | அவர்களைவஞ்சித்தவனாய், |
| அன்று | ஹிரண்யனாலே ப்ரஹ்லாதன் நோவுபட்டவன்று |
| பிறை | சந்த்ரனையொத்த |
| எயிறு | பற்களையும் |
| அடல் | மிடுக்கையுமுடைய |
| அரியாய் | நரஸிம்ஹமாய் |
| பெருகினானை | வளர்ந்தவனாய், |
| தண் ஆர்ந்த | குளிர்த்தியையுடைத்தாய் |
| வார் | ஒழுகாநின்றுள்ள |
| புனல் | ஜலத்தாலே |
| சூழ் | சூழப்பட்ட |
| மெய்யம்என்னும் | திருமெய்யமென்கிற |

| பதம். | உரை. |
|---|---|
| தடவரைமேல் | பெரியமலையிலே |
| பணங்கள் | திருவனந்தாழ்வான் மேலே |
| மேவி | பொருந்தி |
| கிடந்தானை | சாய்ந்தருளுமவனாய், |
| எண்ணானை | எல்லாராலும் எண்ணப்படுமவனாய், |
| எண் இறந்த | அளவில்லாத |
| புகழினானை | கல்யாணகுணங்களையுடையனாய், |
| இலங்கு ஒளிசேர் | மிக்கஒளியையுடைய |
| அரவிந்தம் போன்று | தாமரையிதழ்போலேபரந்து |
| நீண்ட | நீண்டிருக்கிற |
| கண்ணானை | திருக்கண்களையுடையவனானவனை |
| கண் ஆர | கண்களின்விடாய் தீரும்படி |
| கடிபொழில்சூழ் கடல் மல்லைத் தலசயனத்துக்கண்டுகொண்டேன். (அ) | |

வ்யா.—எட்டாம்பாட்டு. † "ஸர்வேஶ்வரனாகிறான்-தன்னை ஆஶ்ரயித்தார்க்குத் தன்னோடொத்த வரிசையைக் கொடுப்பானொருவனென்று கொண்டு அவனுடைய நீர்மையைச் சொல்லுகைக்காக, † அல்லாதார்க்கு உத்கர்ஷத்தைச் சொல்லாநின்றும் ப்ரமாணங்கள், அவர்கள் தாங்களும் புழுக்குற்றெழுத்தாமாபோலே † சில வற்றைத் தோற்றச்செய்யும்; அவற்றைக்கண்டு † இவர்கள் பக்கலிலே

யும்†குவாலுண்டு, என்றுநாட்டார் ப்ரமிக்கைக்கு†உடலாயிருக்கும், ஆக, ப்ரமாணகதி யிருந்தபடியாலும், சேதநர் மந்தமதிகளாயிருந்த படியாலும், இவற்றின் தாத்பர்யமறியாதே (க) 'ஸம்ஸார ஸாகரம்' என்று சொல்லுகிற கடலிலே புக்குப் போமித்தனையிறே. அவற்றை யநுஸந்தித்துச்சொன்ன இவ்வாழ்வார்க† ளீரச் சொல்லின்றாகில்'' என்று பட்டரருளிச்செய்தார்.

(பெண்ணாகியித்யாதி) † தனக்குச் சேராத செயலைச் செய்தும் ஆஶ்ரிதகார்யம் செய்யுமவனை. புருஷசப்தத்தாலும் புருஷோத்தம சப்தத்தாலும் சொல்லப்படுகிறவனிறே தன்படிக்குச்சேராத ஸ்த்ரீ வேஷத்தைக்கொண்டு ''இனியவஸ்து ஆஸுரப்ரக்ருதிகள் பக்கல் சேரவொண்ணாது'' என்றுவஞ்சித்தவனை. (பிறையித்யாதி)†முரட்டு ஹிரண்யனாலே சிறுக்கன் நோவுபடுகிறவன்று, பிறைபோலே யிருக்கிற எயிற்றையுடைய; (அடலரியாய்) யுத்தமென்றால் பணைக்கும்படியான நரஸிம்ஹமாய்க்கொண்டு. (பெருகினானை) அவனுடைய ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே அவ்வடிவைக்கொண்டு தோற்றிலனாகில்†சுருங்கிக்†கையற்றானாயிற்று† தன்னுடைய ரக்ஷகத்வமிழந்து†கையிலான். (தண்ணார்ந்தவித்யாதி)† பித்ராதிகள் ரக்ஷகரானைதவிர்ந்துபாதகராகப்புக்க பின்பு ''இனி அவர்கள் கையில் காட்டிக்கொடுப்போமல்லோம்'' என்று ரக்ஷகன்தான்வந்து சாய்ந்தானாயிற்று. †''வத்ஸலராய் உபகாரகராய் நோக்குகைக்குப் பித்ராதிகளென்று சிலரைச் சொல்லிவிட்டோம், அவர்கள் பாதகராய்த் தாங்களேயாய்நின்ற பின்பு நாம் அஸந்நிஹிதராவோமல்லோம்'' என்றுநேரேபிதாவானவன்வந்துசாய்ந்தருளினானாயிற்று. †ஶ்ரமஹரதைமிக்கு ஒழுகாநின்றுள்ளபுனலையுடைத்தான திருமெய்யத்திலேதிருவனந்தாழ்வான்மேலேவந்துசாய்ந்தருளினவனை. (எண்ணானை)†அப்படுக்கையில்சாய்ந்தருளினால் பண்ணும்† ஜகத்ரக்ஷணசிந்தையைச் சொல்லுதல்; அன்றிக்கே ஶ்ரீவைகுண்டத்திலே நித்யஸூரிகள் பரியவிருக்கிறவன் இங்கேவந்து சாய்ந்தருளுவதே! இதென்னசீர்மை! என்று எப்போதும் எண்ணப்படுமவனென்னுதல். (எண்ணிறந்தபுகழினானை) † ஜகத்ரக்ஷணசிந்தைபண்ணுகையால் வந்த புகழுக்கெல்லையில்லையென்னுதல்; குணாநுஸந்தானம்பண்ணுவார்க்கு அநுஸந்தித்துத்தலைக்கட்டவொண்ணாத குணப்ராசுர்யத்தைச் சொல்லுதல். (இலங்கித்யாதி)

(க) ஹ்ரி - ஸ்தோ - ௬.

அக்குலங்களை யொழியவே விடவொண்ணாதபடியாயிருக்குமா யிற்று வடிவழகு; மிக்கவொளியையுடைத்தாய் விகாஸாதிகளுக்குத் தாமரையை ஒப்பாகச்சொல்லலாயிற்று. அது† வட்டணித்திருக்கு மிறே. அங்ஙனன்றிக்கே, ஒழுகுநீண்டிருக்கு மாயிற்று. †அன்றிக்கே, போக்யதை அளவிறந்திருக்குமென்னுதல். (கண்ணார்) †படபாமுகாக்நி †நிறைந்தாற்போலே "காணவேணும்" என்று உருவிப் †பட்டினிவிட்ட கண்களினுடைய உருவுதல்தீரக்காணப்பெற்றேன். விலக்ஷண சரீரத்தைப் பரிக்ரஹித்து ஒருதேச விசேஷத்தேபோய்க் காண்கையாகிறது, ஆரேனும் பசிக்க ஆரேனும் ஜீவித்தாற்போலே யிருப்பதொன்றிறே; காணவேணுமென்று உருவினகண்களோடே காணப்பெற்றேன். (க) "𑌕𑌾𑌨𑍍𑌤𑌾𑌂 𑌶𑍋𑌕𑌾𑌭𑌿𑌕𑌰𑍍𑌶𑌿𑌤𑌾𑌂 - காந்தைச் சோகாபிகர்சிதை". (அ)

அரு.—எட்டாம்பாட்டு (பெண்ணாகியித்யாதி) ராவணாதி நிரஸநத்தில் அவனுடைய ஆண்பிள்ளைத்தனத்தைத்திரளச் சொல்லாநின்றீர், இவன்றானே பெண்ணுடையுடுத்ததில்லையோ? என்னுமதைக்கொண்டு சைவஸமயத்திலே சொல்லாநின்றீர் என்று ஸம்ஸாரிகளுக்குக் கருத்தாக, அப்படிபெண்ணானதும் லோக விஸஜாதீயமான நரஸிம்ஹத்தோபாதி ஆஸ்ரிதார்த்த மென்றருளிச் செய்கிறாரென்று ஸங்கதி கண்டு கொள்வது.

§ "பெண்ணாகி" என்றத்தாலே - அம்ருதமதநவ்ருத்தாந்தம் ப்ரஸ்துதமாகையால், தேவதாந்தரத்தினுடைய விஷபக்ஷண ப்ரயுக்தஸாமர்த்யமும் ஸர்வேஸ்வரனுக்கு ஸ்த்ரீத்வமும் தோன்ற ப்ரமாணங்களிருக்கைக்கு ப்ரயோஜந கதநபூர்வகம், பெண்ணாகைக்கு ப்ரயோஜநத்தையும் ஒரு ஸம்வாதமுகேந வருளிச்செய்கிறார், (ஸர்வேஸ்வரனித்யாதி). (அல்லாதார்க்கு) ருத்ராதிகளுக்கு. (சிலவற்றை) விஷதாரண வர ப்ரதாநாதிகளை. (குவால்) ஆதிக்யம். (உடலாயிருக்கும்) ப்ரமாணகதியென்றுகருத்து. (ஈரச்சொல்லின்றாகில்) என்றதுக்கு (போமித்தனையிறே) என்று கீழ்வாக்யத்தோடு அந்வயம்.

(தனக்கு) என்றது - புருஷோத்தமனான தனக்கென்றபடி. விவரணம், (புருஷேத்யாதி). "அன்று பிறையெயிற்று - அடலரியாய்ப் பெருகினானை" என்று அந்வயித்து அர்த்தமருளிச் செய்கிறார், (முரட்டித்யாதி). (சுருங்கி) பெருகுகையில்லாதவளவன்றிக்கே குறைந்து. (கையற்றான்) அசக்தனானான். இத்தை உபபாதிக்கிறார், (தன்னுடையவித்யாதி). (கையிலான்) கைம்முதலில்

(க) ரா-ஸு-.

§ ஸர்வேஸ்வரனுடைய குணாதிக்யத்தையும் மேன்மையையும் சொல்லுகிற ப்ரகரணத்திலே "பெண்ணாகி யின்னமுதம் வஞ்சித்தானை" என்கையாலே இதுவுமவற்றுக் கூடலென்று விவக்ஷித்து இதுக் காசார்யஸம்வாதம் (ஸர்வேஸ்வரனாகிறான்) என்று.

லாதான், அசக்தனென்றபடி. நரஸிம்ஹத்தை யநுஸந்தித்த உடனே நி மெய்யத்தில் கிடையை யநுஸந்திக்கைக்கு ப்ரயோஜநத்தையருளிச்செய்கி ரூர்(பித்ராதிகளித்யாதி). விவரணம் (வத்ஸலராயித்யாதி). சப்தார்த்தப்ர ஹரதையித்யாதி). என்னுக்கு ஆஸ்ரயபூதனென்றும், விஷயபூதனென்றும் இரண்டர்த்தமருளிச்செய்கிரூர் (அப்படுக்கையிலித்யாதி). "புகழ்" என் றது - யஸஸ்ஸாதல், ஸகல கல்யாணகுணங்களாதல் என்று விவக்ஷித்த, நீ பதத்துக்குச் சொன்ன அர்த்த த்வயாநுகுணம் அர்த்தத்வயமருளிச்செய்கி ரூர் (ஜகத்ரக்ஷண சிந்தையித்யாதி). (வட்டணித்திருக்கும்) என்றது . அமிச் தம் வட்டணித்திருக்குமென்கை.| "நீண்ட" என்றதுக்கு அர்த்தாந்தரம் (அன் றிக்கேயித்யாதி). "கண்டுகொண்டேன்" என்றதே அமைந்திருக்க, "கண் ணார" என்று விசேஷித்ததுக்கு "பிள்ளைகள் வயிறு நிறையப்பெற்றேன்" என்னுமாபோலே, கண்கள்வயிறு நிறையப்பெற்றேன் என்று சப்தார்த்தம் விவக்ஷித்துத்தாத்பர்யமருளிச் செய்கிரூர் (படபேத்யாதி) (நிறைந்தாற்போ லே - பட்டினிவிட) என்று அந்வயம், (பட்டினிவிடுகை) ஜாடராக்நிமிகை. கண்ணாரக்காண்கை (க) "ஸதாபஸ்யந்தி - ஸதாபஸ்யந்தி" என்று பரமபத் திலேயன்ரூவென்ன, அருளிச்செய்கிரூர் (காத்ரைரித்யாதி). "இவ்வர்ப் ந்வயமும், ஒன்பதாம்பாட்டிலே சில ஸ்ரீகோசங்களிலேயுண்டாகில், அப் போது இப்பாட்டோடே கூட்டுவது" என்று சொல்லுவர்கள். "தாம் புరుషవ్యాఘ్రం గాత్రైశ్శోకాభికర్శితైః । సంస్పృశేయం సకామాహం కదానుఖలు తం దయితం మయి - யதாதம் புருஷவ்யாக்ரம் காத்ரைச் சோகாபிகர்சிதைஃ | ஸம்ஸ் ப்ருசேயம் ஸகாமாஹம் ததாகுருதயாம் மயி." ... ... (அ)

மூ—தொண்டாயார்தாம்பரவு மடியிணைப்
படிகடந்த தாளாளற் காளாயுய்தல்
விண்டானைத் தென்னிலங்கை யரக்கர்வேந்தை
விலங்குண்ண வலங்கைவாய்ச் சரங்களாண்டு
பண்டாய வேதங்கள் நான்குமைந்து
வேள்விகளுங் கேள்வியோ டங்கமாறும்
கண்டானைத் தொண்டனேன் கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தொண்டு ஆயார் | சேஷபூதரானவிசே ஷஜ்ஞர் | அடியிணை | திருவடிகளையுடைய |
| தாம் | | படி | பூமியை [க்கு |
| பரவும் | ஸ்தோத்ரம்பண்ணும் படியான | கடந்த | அளந்த [ஞய், |
| | | தாள் ஆளர்க்கு | திருவடிகளையுடைய |

| | | | |
|---|---|---|---|
| ஆளாய் | அடிமைசெய்து | நான்குவேதங்க | நாலுவேதங்களையும் |
| உய்தல் | உஜ்ஜீவிப்போமென்னுமர்த்தத்தில்நின்றும் | ஐந்துவேள்வி | கபஞ்சமஹாயஜ்ஞங்களையும் |
| விண்டானை | வேறுபட்டவனாய் | கேள்வியோடு | [தோடு ஆசார்யோபதேசத் |
| தென் | தெற்குத்திக்கிலுள்ள | ஆறுஅங்கமும் | ஆறுஅங்கங்களையும் |
| இலங்கை | லங்கையில் | கண்டானை | (சாஸ்த்ரீயஜ்ஞாநத்தாலேதன்னைக்கிட்டும்வழியாகக்)கண்டுவைத்தவனை |
| அரக்கர் | ராக்ஷஸர்களுக்கு | தொண்டனேன் | சேஷபூதனானநான் |
| வேந்தை | ராஜாவானராவண | | |
| விலங்கு | ம்ருகங்கள் [னை | | |
| உண்ண | தின்னும்படி | | |
| வலங்கைவாய் | வலத்திருக்கையாலே | | |
| சரங்கள் | அம்பை [ளாய், | | |
| ஆண்டு | ப்ரயோகித்தருளினவ | | |
| பண்டுஆய | நித்யமான | | |

கடிபொழில்சூழ்கடல்மல்லைத் தலசயனத்துக்கண்டுகொண்டேன். (கூ)

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (தொண்டரயார்) (க) "வழுவிலாவடிமைசெய்யவேண்டும்" என்றிருப்பாரைச் சொன்னபடி. ஆயாரென்றது-ஆனரென்றபடி. † அவர்கள்(உ)"ஜாமதக்ந்யஸ்யஜல்பதஃ-ஜாமதக்ந்யஸ்யஜல்பதஃ" என்கிறபடியே அடைவுகெட்டு ஏத்தும்படியான திருவடிகளையுடையவனை. (படியித்யாதி) † நம்முடைமை ஒன்றுந் தவறவொண்ணாதென்று தான் கொடுவந்து திருவடிகளைத்தலையிலே வைத்தஸ்வபாவத்தையுடையவனுடைய நீர்மையிலேதோற்று "இனி நாமும்அவனுகந்த வடிமைசெய்து உளோமாவோம்" என்கிற இவ்வர்த்தத்திலே விண்டவனுண்டு - (ங) "ந நமேயம் - நநமேயம்" என்றிருக்குமவனை. † ஆளாயுய்தல்விண்டார்க்கெல்லாம்ப்ரபுவாயிருக்கிறவனை. (விலங்குண்ண) அவனை நாயும் நரியும் கழுகும் பருந்தும் பற்றிப்பிசிக்கும்படியாக. (வலங்கைவாய்ச்சரங்களாண்டு)†ப்ரதிகூலநிரஸநத்துக்கும் அநுகூலர்க்கு தர்சநீயமாயிருக்கைக்கும் கையும் வில்லுமான விருப்பேயமையும். (பண்டித்யாதி) அபௌருஷேயமாகையாலே நித்யமாய், நிர்தோஷமாய், பூர்வபூர்வோச்சாரணக்ரமத்தைப்பற்ற உத்தரோத்தரோச்சார்யமாணமான வேதாக்ஷரராசியும் தன்னுடைய ஸமாராதநரூபமான வைதிக கர்மங்களுக்கு உபலக்ஷணங்களான பஞ்சமஹாயஜ்ஞங்களும், இந்த வைதிகக்ரியைகள் தன்னை ஸமாராதநரூபமென்னுமிடத்தைச்சொல்லுகிற அங்கங்களாறும்,†கேள்வியாலேஅநுஸந்திக்கப்†படுவதான. (கண்டானை)†சா

(க)தி-வாய்-ங-ங-க. (உ) (ங) ரா-யு-ங-கூ-கக.

ஸ்த்ரீயஜ்ஞாநத்தாலே தன்னை ப்ராபிக்கைக்கிடான வழியைக்கண்டு வைத்தவனை. (தொண்டனேனித்யாதி) அப்பெருவழியான சாஸ்த்ரீயஜ்ஞாநத்தாலே யன்றிக்கே இக்கண்ணாலே காணப் பெற்றேன்.

---

அநு.—ஒன்பதாம்பாட்டு(தொண்டாயாரித்யாதி)பெண்ணும் புருஷஸிம்ஹமாயும் ஆஶ்ரிதரை ரக்ஷிக்கும் புண்டரீகாக்ஷனையே மிகவும் புகழாநின்றீர், அவனுடைய ஸர்வாதிசாயித்வத்திலே ப்ரமாணங்களென் என்னும் ஜிஜ்ஞாஸாப்ரஶ்நத்திலே, திருவாய்மொழியென்ன, ஸ்ரீராமாயணமென்ன, வேதவேதாந்தங்களென்ன, இவையெல்லாமவனையே ப்ரதிபாதிக்கிறதென்னும் கருத்தாலே உத்தரமருளிச் செய்கிறாரென்று ஸங்கதிகண்டு கொள்வது.

"பரவும்" என்கையாலே பக்திபலாத்காரத்தாலே பிறந்தஸூக்திக ளென்று விவக்ஷித்து, ஸத்ருஷ்டாந்தம் தாத்பர்யமருளிச் செய்கிறார் (அவர்களித்யாதி) "ஶ்ருதிர்யமர்த்த: ராமஸ்யஜாமதக்ந்யஸ்யஜல்பத: । நாரதஸ்யசதேவர்ஷே: க்ருஷ்ணத்வைபாயநஸ்யச-ஶ்ருதோயமர்த்தோ ராமஸ்ய ஜாம தக்ந்யஸ்ய ஜல்பத: । நாரதஸ்யசதேவர்ஷே: க்ருஷ்ணத்வைபாயநஸ்யச" என்று வசநசேஷ:. ஆக, "தொண்டாயார்" இத்யாதியாலே(க) "ப்ரஹ்மவாதிநோவதந்தி-ப்ரஹ்மவாதிநோவதந்தி" என்கிறபடியே ஆழ்வார்கள் திவ்யஸூக்திகள் ப்ரமாணங்களென்று தர்ஶிப்பித்தாராயிற்று. படியை - பூமியை, கடந்த - அளந்த, தாள்களை ஆண்டவற்கு, ஆளாய்உய்தலைத் தன்னிடத்தில் நின்று விண்டு பொகட்டவனாய், அரக்கர்க்கு ராஜாவான ராவணனைத் திர்யக்குக்களுண்ண, வலங்கையில் சரங்களை ஆண்டவனென்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளிச் செய்கிறார், (நம்முடைமையித்யாதி). "உய்தல் விண்டானை" என்று ராவணனுக்கு விசேஷணமிடுகையாலே(உ) "யதாராஜாததாப்ரஜா: - யதாராஜாததாப்ரஜா:" என்கிறந்யாயத்தாலே பலிதார்த்தமருளிச் செய்கிறார், (ஆளாயித்யாதி) "சரங்களாண்டு" என்றால்போராதோ, "வலங்கைவாய்" என்றதுக்குக்கருத்தென்னென்ன, அருளிச்செய்கிறார், (ப்ரதிகூலேத்யாதி வாக்யத்தாலே). "வாய்" என்று இடமாய் ஸப்தம்யர்த்தம். ஆக - இவ்வளவால் இதிஹாஸபுராணங்களை ப்ரமாணீகரித்தாராயிற்று. ஸமாராதநரூபமென்னு மிடத்தைச் சொல்லுகிற, "அங்கங்களறம்" என்றது-வேதம் இவ்வர்த்தத்தையறிவிக்கும்போது அங்கங்கள் ஸஹகாரிகளாகையாலே இவையும் சொல்லுகிறனவென்கை. (கேள்வியாலே) என்றது - ஆசார்யோபதேசத்தாலேயென்கை. (படுவதான) என்றவநந்தரம், வேதாதிகளுண்டு என்று சேஷம். "கண்டானை" என்றதுக்கு பாவம் (சாஸ்த்ரீயேத்யாதி). இத்தால் - சேதநலாபத்துக்கு ஈஶ்வரன் வழியாகக்கண்டானென்று அவனுடைய உபகாரத்வம் தோற்றிற்றாயிற்று. ... ... (கூ)

---

(க) (உ) யஜு—

மூ.—படநாகத் தணைக்கிடந்தன் றவுணர் கோனைப்
படவெகுண்டு மருதிடைபோய்ப்பழனவேலித்
தடமார்ந்த கடல்மல்லைத் தலசயனத்துத்
தாமரைக்கண் துயிலமர்ந்த தலைவர் தம்மைக்
கடமாருங் கருங்களிறு வல்லான் வெல்போர்க்
கலிகன்றி யொலிசெய்த வின்பப்பாடல்
திடமாக விவையைந்து மைந்தும் வல்லார்
தீவினையை முதலரிய வல்லார்தாமே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. |
|---|---|
| படம் | படங்களையுடைய |
| நாகம் | திருவனந்தாழ்வானை |
| அணை | படுக்கையாகக்கொண்டு |
| கிடந்து | சாய்ந்தருளினவனாய், |
| அன்று | ப்ரஹ்லாதன்ப்ரதிஜ்ஞாஸமயத்திலே |
| அவுணர்கோனை | அஸுரர்கள்தலைவனான ஹிரண்யனை |
| பட | முடியும்படி |
| வெகுண்டு | சீறியருளினவனாய், |
| மருது இடை | இரண்டுமருதமரங்களின்நடுவே |
| போய் | தவழ்ந்தேபோனவனாய், |
| பழனம் | நீர்நிலங்களை |
| வேலி | சுற்றிலுமுடைத்தாய் |
| தடம் | தடாகங்களாலே |
| ஆர்ந்த | நிறைந்த |
| கடல்மல்லை | திருக்கடல்மல்லையிலே |
| தலசயனத்து | நிலத்தைப்படுக்கையாகக்கொண்டு |
| தாமரைக்கண் துயிலமர்ந்த | புண்டரீகாக்ஷனென்னுமதுதோற்றக்கண்வளர்ந்தருளின |

| பதம். | உரை. |
|---|---|
| தலைவர்தம்மை | ஸர்வேஶ்வரன்விஷயமாக |
| கடம்ஆரும் | மதம்மிக்க |
| கருங்களிறு | பெரியயானையை |
| வல்லான் | நடத்தவல்லராய் |
| போர் | யுத்தத்தில் |
| வெல் | சத்ருக்களைவெல்லவல்லராய் |
| கலிகன்றி | கலிதோஷத்தைப்போக்கின ஆழ்வார் |
| ஒலிசெய்த | சப்தஸந்தர்ப்பங்களையுடைத்தாம்படி யருளிச்செய்ததாய் |
| இன்பம் | இனிமையைவிளைவிப்பதான |
| இவை யைந்து மைந்து பாடலும் | இப்பத்துப்பாட்டையும் |
| வல்லார் | அர்த்தத்துடன்கற்கவல்லவர்கள் |
| தீவினையை | பாபங்களை |
| தாமே | தாங்களே |
| திடமாக | நிஸ்சயமாக |
| முதல் அரிய | வாஸனையோடேபோக்க |
| வல்லார் | வல்லராவர்கள். (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு.(படமித்யாதி) தன்னோட்டைச் சேர்த்தியாலே விகஸிதமான பணங்களையுடைய திருவனந்தாழ்வான்மேலே சாய்ந்தருளி, அப்படுக்கையும் விட்டுப்போயழியச்செய்யும் ஆஶ்ரித விரோதிக †ளுண்டானால். (மருதிடைபோய்) †ஒன்றென்னலாம் படி

பொருந்திநின்ற மருதமுறிந்து விழும்படி நடைகற்று; நீர் நிலங்க ளாலே சூழப்பட்டு † அழகிய நாடகங்களை யுடைத்தான திருக்கடல் மல்லை ஸ்தலசயநத்திலே (க)† "யஜ்ஞோ யஜ்ஞபுருஷ:-யஜ்ஞேசோயஜ்ஞ புருஷ:" என்கிறபடியே ஸர்வாதிகனை புண்டரீகாக்ஷனென்று தோற்றும்படி கண்வளர்ந்தருளினவனையாயிற்றுக் கவிபாடிற்று. (கடமித்யாதி)† மத்தகஜத்தைத் தம்கினைவிலே நடத்தவல்லவராயும், யுத்தத்திலே வெற்றிகொண்டல்லது மீளாத ஆழ்வார் ஒலியுடைத் தாக அருளிச்செய்த விப்பத்தையும் அப்யஸிக்கவல்லவர்கள். (தீவி னைகள் முதலரியவல்லார்தாமே) ப்ராக்தநமான கர்மங்களைத் தாங் களே வாஸனையோடே போக்கவல்லராவர்கள். † பாபங்களைக் கூடு பூரித்துக்கொள்ளு மித்தனைபோக்கி † எளிபெலும்பனான ஓர் வ்ணி நு போக்கிக்கொள்ளலாமென்றால் இதுகூடுமோ வென்னில், அதிலொ ருதட்டில்லை; இது க்ருடம். ... ... ... (கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு. (படமித்யாதி) (உண்டானல்) என்றதுக்கு (அழி யச்செய்யும்) என்று கீழே அந்வயம். "அவுணர்கோன்" என்று - ஹிரண்ய னைப், அவன் உபலக்ஷண மென்று திருவுள்ளம். 'வெகுண்டு" கோபித்து. ப்ரச் சந்ந விரோதிநிரஸநத்துக்கு உபலக்ஷணம் மருதிடைபோனதென்று திருவுள் ளம்பற்றி, "மருது" என்ற ஏகவசநதாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஒன்றித்யாதி). * ஆர்தலாவேபவிதம் (அழகிய) என்றது. "யஜ்ஞோ யஜ்ஞபுருஷ: புண்டரீகாக்ஷ ஸம்ஜ்ஞக: - யஜ்ஞேசோயஜ்ஞபுருஷ: புண்டரீகாக்ஷ ஸம்ஜ்ஞித:" என்று இவ் வளவும் விவக்ஷிதம். (மத்தகஜம்) இத்யாதிக்கு அபிஜ்ஞவித்யாவ்ருத்தங்களா லே மத்தகஜங்கள் போன்ற ஸம்ஸாரிகளைத் திருத்தவல்லருமாய், புத்தர் நோன்பியர் முதலானரை வெல்லவும் வல்லரானவ ரென்று வ்யங்க்யார்த் தம் கண்டுகொள்வது. இப்படி க்ருதார்த்தாநுஸந்தாநம் பண்ணுகை யன் றாகில், ஐஶ்வர்யத்தைக் காற்கடை கொண்டபடி சொல்லிக்கொள்ள வொண் ணாதிறே. "திடமாக" என்றதுக்கு - "அறியவல்லார்" என்றத்தோடு அந்வ யமாக்கி, தாத்பர்யத்தையருளிச்செய்கிறார் (பாபங்களையித்யாதி). (எளிபெ லும்பன்)- அசக்தனென்றபடி ... ... ... (கo)

ஜீயர்திருவடிகளே சரணம்.

முதற்பத்தில் ஐந்தாந்திருமொழி முடிந்தது.

---

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி - உ - பத்து - கூ - திருமொழி - நண்ணாத ப்ரவேசம்.

---

வ்யா.—(க) † "[illegible] - அஹமஸ்ம்யபராதாநாம்" இத்யாதி "[illegible] - ஸாதேவேஸ்மிந் ப்ரயுஜ்யதாம்" என்று சரணாகதிக்கு லக்ஷணம் சொல்லிற்று. அதுதன்னை (உ)*வாரணிலாமுறுவலிலும் (ங)*தாயே தந்தையிலுமாக அநுஸந்தித்தார். அதுதன்னை (ச)"காணாதுதிரிதருவேன் கண்டுகொண்டேன்" என்றும், (ரு) "தொண்டனேன் கண்டுகொண்டேன்" என்றும் அதுதன்னை யநுபாஷித்தார். (கூ) "[illegible] - ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்" என்று அவனுக்கு § ஸம்பாவிதமாய் அநந்தரம் வரும் ஸ்வபாவங்களைச் ‡ சொல்லுகிறது. அவை தமக்குப் பிறந்தபடி சொல்லிற்றாயிற்றிதில். †அவைதானிரண்டும் லக்ஷணமாக வேண்டிற்றில்லை, பரஸ்பர விரோதத்தாலே, (எ) † "[illegible] - த்வமேவ" என்று உபாயநைரபேக்ஷ்யத்தைச் சொல்லுகையாலும், இதில் அங்கங்களோடே கூடியிருப்பதாகச் சொல்லுகையாலும். † ஆகையால் அது லக்ஷணமாய் இது அவனுக்கு ஸம்பாவித ஸ்வபாவமாமித்தனை. (அ)† "[illegible] - பசுர்மநுஷ்ய: பக்ஷீவா யேசவைஷ்ணவஸம்ஶ்ரயா: । தேநைவதேப்ரயாஸ்யந்தி தத்விஷ்ணோ: பரமம்பதம்" என்று பாகவத ஸமாஶ்ரயணத்தை, ஜ்ஞாநமும் ஜ்ஞாநாநுரூபமான வ்ருத்தமு மொழியவேயும் பகவத்ப்ராப்திக்கு ஸாதநமாகச் சொல்லாநின்றதிறே. ம்ருகபக்ஷ்யாதிகளையுங்கூட வெடுக்கிறதிறே. † இவைதான் பின்னை † இரண்டோ? பாகவத ஸமாஶ்ரயணமாவது, பகவத்ஸமாஶ்ரயணத்தினுடைய காஷ்டையன்றோ வென்னில்; அவ்யவதாநேந பகவத் ஸமாஶ்ரயணம் பண்ணுகிறோமென்றிருப்பதொன்றுண்டு, பாகவத ஸமாஶ்ரயணத்தாலே பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணுவது மொன்றுண்டு, இந்த

---

§ ஸம்பாவிதமான அநந்தரஸ்வபாவங்களை. ‡ சொல்லுகிறதாயிற்று.

| | | |
|---|---|---|
| (க) பாஞ்ச- | (ச) உ-ரு-எ | (எ) பாஞ்ச- |
| (உ) க-கூ- | (ரு) உ-ரு-கூ | (அ) |
| (ங) க-கூ- | (கூ) பாஞ்ச- | |

†முகபேதத்தைப்பற்றச்சொல்லுகிறது. பாகவத †ஸமாஶ்ரயணமொழிய பகவத்விஷயத்திலிழியுந் துறையில்லை. (க) † [மாறுயவித்யாதி] வேறாகவேத்தி யிருப்பாராகிலுரார்? மற்றவரைச் சாத்தியிருப்பாராகிறார்? இத்தை ஒருதாஹரணநிஷ்டமாகக் காட்டலாமோ வென்னில்; வேறாக வேத்தியிருப்பாராகிறார் - ஸர்வேஶ்வரனைக்கண்டவநந்தரம் தம்மைப்பேணாதே பகவத்ஸம்ருத்திக்கு மங்களாசாஸநம் பண்ணும் பெரியாழ்வார்போல்வார்; மற்றவரைச் சாத்தியிருப்பாராகிறார், (உ) "வல்லபரிசுவருவிப்பரேலது காண்டுமே" என்றிருக்குமாண்டாள்போல்வார். †இனி இவர்தாம் பாகவதராக நினைத்திருப்பது - உகந்தருளின நிலங்களில் நீர்மையிலே ஈடுபட்டிருக்குமவர்களை. அபாகவதராக நினைத்திருப்பது - அங்குத்தை வாசியறியாதவர்களை. (ந) †"ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப:- ஆநுகூல்யஸ்யஸங்கல்ப:" என்கிறது - ஒன்று செய்து தலைக்கட்டிற்றாய் ஓரளவில் மீளுமதல்லாமையாலே ப்ராப்திதசையிலும் அநுவர்த்திக்குமது இங்கோரளவில் மீளாதிறே. "ப்ராதிகூல்யஸ்யவர்ஜநம்- ப்ராதிகூல்யஸ்யவர்ஜநம்" ப்ராப்தியளவுமிறேநிற்பது. ப்ராதிகூல்ய நிவ்ருத்தி பிறந்தாலுண்டாமதாகையாலே ஆநுகூல்யம்பிற்பட்டதிறே. அந்த ப்ராதிகூல்ய நிவ்ருத்தி தமக்குண்டானபடியைச் சொல்லுகிறார் முதற்பாட்டில். †இது தானுண்டாக வமையுமிறே; ஸம்பந்தமின்றாக வுண்டாக்க வேண்டாவே. தானே றிட்டுக்கொண்டத்தைத் தவிருமித்தனைவேண்டுவது.

அந.—நண்ணாதப்ரவேசம் - ஆழ்வார் தம்முடைய பூர்வவ்ருத்தாநுஸந்தாநபூர்வகம் திருமந்த்ரலாபத்தை யநுஸந்தித்துத் தம்திருவுள்ளத்துக்குப் பல திருமொழிகளிலேயு முபதேசித்து, நெஞ்சு இசைந்தவாறே ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே சரணம்புக்கு இஷ்டமான கைங்கர்யத்தைப்ப்ரார்த்தித்து அநிஷ்ட நிவ்ருத்தியையு மர்த்தித்துக் கைங்கர்யவர்த்தகமான புத்தியையு முபதேசித்துத் தம் நெஞ்சைக்கொண்டாடி அநந்தரம் அவன் நின்றுமிருந்தும் கிடந்தும் நடந்தும், ஆஶ்ரிதார்த்தமாக விருக்கும்படியைப் பலதிருப்பதிகளிலே யநுபவித்துக்கொண்டுவந்து, கீழ்த்திருமொழியிலே, ஸம்ஸாரிகளை வந்தாஶ்ரயிக்கச்சொல்லி நின்றார்; இத்திருமொழியிலே, (ச) "நின் திருவெட்டெழுத்தும்கற்று, நானுற்றது முன்னடியார்க்கடிமை" என்கிறபடியே உட்பொருளான பாகவத சேஷத்வத்தை யநுஸந்தித்து, அத்தைத் தம்திருவுள்ளத்துக்குப் பலபடி உபதேசிக்கிறாரென்று மஹாவாக்ய ஸங்கதியை யுட்கொண்டு, "எண்ணாதேயிருப்பாரை யிறைப்பொழுது மெண்ணோமே" என்

(க) ச-திரு- (உ) நா-திரு-கo-கo- (ந) பாஞ்சரா-
(ச) அ - கo - ந -

றும், "ஆறெண்ணும் நெஞ்சுடையா ரவரெம்மையாள்வாரே," என்றும், ப்ராதிகூல்யவர்ஜநாநுகூல்ய ஸங்கல்பங்களை யநுஸந்திக்கைக்கு ஸங்கதி யருளிச் செய்கிறார் (அஹமஸ்மீத்யாதி வாக்யபஞ்சகத்தாலே). "நான் கண்டுகொண்டேன்" என்னுமதுதன்னை அநுபாஷித்தார் என்றதுக்கு - ஸித்தோபாயத்தைக் கண்டேனென்றாய், அத்தை ஆஶ்ரயித்தேன் நான், நீங்களுமாஶ்ரயியுங்கோளென்றுபரார்த்த மநுபாஷித்தா ரென்னுகருத்து. ஆக, தன்னுடைய அபராதங்களை யநுஸந்தித்துக்கொண்டு, ரக்ஷகாந்தரோபாயாந்தரஶூந்யனாய் அவன்றன்னையே உபாயமாக அநுஸந்திக்கை ப்ரபத்திக்குலக்ஷணம், இப்படி ப்ரபந்நனானவனுக்கு அவர்ஜநீய ஸ்வேதம்போலே ஸம்பாவித ஸ்வபாவங்கள் ஆநுகூல்ய ஸங்கல்பாதிகளென்றதாயிற்று. § "అహమస్మ్యపరాధానామాలయో కిఞ్చనో౽గతిః। త్వమేవోపాయభూతో మే భవేతి ప్రార్థనామతిః। శరణాగతిరిత్యుక్తా సా దేవే౽స్మిన్ ప్రయుజ్యతామ్ - அஹமஸ்ம்யபராதாநா மாலயோகிஞ்சநோகதிः। த்வமேவோபாயபூதோமே பவேதி ப்ரார்த்தநாமதிः। சரணாகதிரித்யுக்தா ஸாதேவேஸ்மிந் ப்ரயுஜ்யதாம்" என்றும் - "ఆనుకూల్యస్య సఙ్కల్పః ప్రాతికూల్యస్య వర్జనమ్ - రక్షిష్యతీతి విశ్వాసో గోప్తృత్వవరణం తథా। ఆత్మనిక్షేపకార్పణ్యే షడ్విధా శరణాగతిః - ஆநுகூல்யஸ்யஸங்கல்பः ப்ராதிகூல்யஸ்யவர்ஜநம்। ரக்ஷிஷ்யதீதி விஶ்வாஸோ கோப்த்ருத்வவரணம்ததா। ஆத்ம நிக்ஷேபகார்பண்யே ஷட்விதா சரணாகதிः" என்றும் சொல்லுகிற விவையிரண்டும் லக்ஷணமென்னவொண்ணாதோவென்ன, அருளிச்செய்கிறார் (அவைதா னிரண்டுமித்யாதி). பரஸ்பரவிரோதந் தன்னைக்காட்டுகிறார் (த்வமேவேத்யாதி). அதாவது - "త్వమేవోపాయభూతో మేభవ - த்வமேவோபாய பூதோமேபவ" என்கிற ப்ரார்த்தனையானது சைதந்யகார்யமான உபாய பரிக்ரஹரூபமாகையால் உபாய மல்லாமையாலே, யாகாதி பலஸாதநங்களுக்குப்போல ஆநுகூல்ய ஸங்கல்பாதிகளை அங்கமாக வசநம் விதிக்கமாட்டாதாகையால், (ஷ) பலோபாயமான அவன்றனக்கே யிவற்றை அங்கமாகச்சொல்லுகிறதென்னு

---

§ சரணாகதி லக்ஷணமாவது - ஸ்வாபராதத்தையும் ஆகிஞ்சந்யாநந்யகதித்வங்களையும் முன்னிட்டுக்கொண்டு சரணம்புகுருகை. "கண்டுகொண்டேன்" என்று ஜ்ஞாநஸாக்ஷாத்காரமாகையாலே ப்ரபத்தியைச்சொல்லுகிறது. "సుసుఖం కర్తుమ్ - ஸுஸுகம்கர்தும்" என்று ப்ரபத்தியினுடைய ஸுகரூபத்வம் ஸம்புநர்ந்யாயஸித்தமாகையாலே "கண்டுகொண்டேன்" என்ற ஸாக்ஷாத்காரரூபஜ்ஞாநத்தை ப்ரபத்தியாகச் சொல்லுகிறதென்றருளிச்செய்வர். "అహమస్మ్యపరాధానామాలయః - அஹமஸ்ம்யபராதாநாமாலயः" என்கிற ஶ்லோகத்திற் சொன்னது ப்ரபத்தி லக்ஷணமாகவேணுமோ? "ఆనుకూల్యస్య - ஆநுகூல்யஸ்ய" என்று சொன்னது ப்ரபத்திலக்ஷணமானாலோவென்ன; (அவைதானிரண்டும்) என்றது.

மளவில்; ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாயிருக்குமவனுக்கு அங்காபேக்ஷையில்லாமையாலும், அவன் நிரபேக்ஷோபாயமாகையாலும், அவை அங்கமென்னு மதுக்கும் ஸர்வஜ்ஞத்வாதிகுணகரன் நிரபேக்ஷோபாய மென்கைக்கும் சேராதென்கை. "ஆநுகூல்யஸ்ய" இத்யாதியே லக்ஷணமாய், "அஹமஸ்மி" இத்யாதி ஸம்பாவித ஸ்வபாவபரமென்ன வொண்ணாது; ஸாங்கப்ரபத்யநுஷ்டாதாவுக்கு தத்தேகோபாயத்வ புத்திபிறவாமையாலும், உபாயாந்தர சூந்யதை யில்லாமையாலும், ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயம் ப்ரஸங்கிக்கையாலே; ரக்ஷகாந்தர ப்ரஸங்கமுண்டாகையாலும் ஶ்லோகார்த்தம் தட்டுகையாலே; இனி அதிகாரிபேதத்தாலே லக்ஷண மென்னவொண்ணாதோவென்னில், ஓரதிகாரிக்கே அவையெல்லாம் ஸம்பாவிதங்களாயிருக்க கல்பநாகௌரவம் ப்ரஸங்கிக்குமென்று இவ்வர்த்தங்களையெல்லாம் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டு, உக்தார்த்தத்தை ஸ்த்திரீகரிக்கிறார், (ஆகையாலித்யாதி). இவ்வாக்யத்துக்குக்கீழே விரோதம் ஸ்பஷ்டமிறேயென்று கூட்டிக்கொள்வது. §பகவத்ப்ரபந்நனுடைய ஸம்பாவித ஸ்வபாவங்களையருளிச்செய்கிறாராகில், "நினைவாரென்னாயகரே" "எங்கள்குலதெய்வமே" என்று பாகவதர்களை சேஷிகளாகவும், அவர்களை, "நச்சென்றன் நன்னெஞ்சே" இத்யாதிகளாலே ஆஶ்ரயிக்கச்சொல்லி விதிக்கிறதென்னென்ன வருளிச்செய்கிறார் (பசுரித்யாதி வாக்யத்வயத்தாலே). பகவத்ப்ரபந்நனுக்கு பாகவதர்களே உபாயமென்கிறவதுவும் ஸம்பாவிதமென்று திருவுள்ளம். ஆனால் அவனே உபாயமென்றதோடு ததீயரே உபாயமென்கை விரோதியாதோவென்னும் சங்காநுவாதம் பண்ணி, பரிஹரிக்கிறார், (இவைதானித்யாதி). (இரண்டோ) என்றதுக்கு - இரண்டானால் விரோதியாதோவென்று கருத்து. (முகபேதத்தைப்பற்ற) என்றதுக்கு-ப்ரகாரபேதமொழிய ஸ்வரூபபேதமில்லை யாகையாலே விரோதியாதென்றுகருத்து. ஆக, பாகவதர்களைப் புருஷகாரமாக்கி பகவானே உபாயமென்றிருக்கையும், பாகவதரை உபாய மென்றுகொண்டு பகவானை உபாயமென்றிருக்கையுமே முகபேதமென்றதாயிற்று. ஸ்வரூபபேத மின்றிக்கே இரண்டிலும் உபாயத்வம் பகவானுக்கேயானால், இந்த முகபேதத்துக்கு ப்ரயோஜநமென்னென்ன வருளிச்

§ ஸங்கத்யந்தரம் (பசுர்மநுஷ்ய:) என்றது. அதாவது - கீழெல்லாவற்றாலும் ப்ரபத்திபண்ணினபடியாய், ப்ரபந்நனானவனுக்கு ஸம்பாவிதமான ஆநுகூல்யாதிகளைக் சொல்லுகிறது இத்திருமொழி என்று ப்ரதமஸங்கதி. அன்றிக்கே, கீழெல்லாம் பகவத்விஷயத்திலே ப்ரபத்திபண்ணி இத்திருமொழியிலே பாகவதர்களே உத்தேஶ்யரென்று அவர்களைப்பற்றுகிறாரென்று த்விதீயஸங்கதி. அவ்யவதாநேந பாகவதஸமாஶ்ரயணம் பண்ணுவதுமுண்டென்றால் ஸங்கதமாயிருக்குமென்றருளிச்செய்வர்.

செய்கிறார் (பாகவதேத்யாதி). (துறையில்லை) என்றதுக்கு - பாகவதர்களைப் புருஷகாரமாக்கிக்கொண்டு பகவானே உபாயமென்றிருக்கும் அதிகாரிக்கு பகவந்நிரங்குசஸ்வாதந்த்ர்யத்தைக்கண்டு அஞ்ச ப்ரஸக்தியுண்டாகையாலே, பாகவதர்களை உபாயமென்று கொண்டிருக்கை யொழிய வேறு வழியில்லை யென்றுகருத்து. § இப்படி யிருந்தவர்க்குத்தான் ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்துக்கு அஞ்சவேண்டாவோவென்ன ; வேண்டா, இதுகார்யகரமென்று விவக்ஷித்து ப்ரமாணம் காட்டுகிறார் (மாறுயவித்யாதி). தங்களைப்பேணாதே, பகவத் ஸம்ருத்திக்கே மங்களாசாஸநம் பண்ணுமவர்களையே தன்பேற்றுக்கு உபாயம் என்றிருக்குமவனிடத்திலே ஈஶ்வரஸ்வாதந்த்ர்யம் ஜீவியாதே, இவர்களிடத்திலே ப்ரேமாதிசயத்தாலே இவர்களபேக்ஷிதம், (க) * "கையிலங்கு நெல்லிக்கனியாமென்று திருவுள்ளம். "கடல்மல்லைத் தலசயனம் நச்சித்தொழுவாரை" என்று விசேஷிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (இனியித்யாதி). ஸம்பாவிதஸ்வபாவங்களைச் சொல்லுகிற ஶ்லோகத்திற்சொன்ன க்ரமம்தவிர, ப்ராதிகூல்யவர்ஜநத்தை முந்துற அநுஸந்திப்பானென்னென்ன ; இரண்டு விதமாகப் பரிஹார மருளிச்செய்கிறார் (ஆநுகூல்யஸ்யேத்யாதி, வேண்டுவது) என்னுமளவும். அதிலிரண்டாம் பரிஹாரம் (இதுதானித்யாதி).

மூ.—நண்ணாத வாளவுண ரிடைப்புக்கு வானவரைப்
பெண்ணாகி யமுதூட்டும் பெருமானார் மருவினிய
தண்ணார்ந்த கடல்மல்லைத் தலசயனத் துறைவாரை
எண்ணாதே யிருப்பாரை யிறைப்பொழுது மெண்ணோமே.

---

§ பாகவத ஸமாஶ்ரயணம் பகவல்லாப ஸாதநமென்றதுக்கு "பசுர் மநுஷ்ய:" என்கிற ஶ்லோகத்தை ப்ரமாணமாக அருளிச்செய்து, ஆழ்வாருடைய ஸூக்தியையுங் காட்டுகிறார் (மாறுயஇத்யாதி) என்று. ப்ரதமஸங்கதியில், ஸம்பாவிதஸ்வபாவமான ஆநுகூல்யஸங்கல்பமும் ப்ராதிகூல்யவர்ஜநமும் பாகவதப்ராவண்யமும் அபாகவதபரித்யாகமும் என்றுவிவக்ஷித்து, ஆனால் கேவலம் பாகவதாபாகவதர்கள் உபாதேயரும் த்யாஜ்யருமென்று ஸாமாந்யேந சொல்லாமல் "தலசயநத்துறைவாரை எண்ணாதே யிருப்பாரை" என்றும் "தலசயநமாரெண்ணும் நெஞ்சுடையார்" என்றும் விவக்ஷிக்கவேணுமோ என்ன ; அருளிச்செய்கிறார் (இனி இவர்தாம்) என்று தொடங்கி. ஆனால் ப்ராதிகூல்ய நிவ்ருத்தியை முற்படச்சொல்லுவானென்னென்ன ; (ஆநுகூல்யஸ்ய) என்று. ஹேத்வந்தரம் (ப்ராதிகூல்யநிவ்ருத்தி) என்றது.

---

(க) உபதேசர -

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நண்ணாத | தன்னைக்கிட்டாதவர்களாய் | கடல் | கடற்கரையிலேயுள்ள |
| வாள் | வாளையுடையரான | மல்லை | ஸ்ரீமல்லாபுரியிலே |
| அவுணரிடை | அஸுரர்கள்நடுவே | தலசயனத்து | பூமியாகிறதிருப்பள்ளியிலே |
| பெண்ணாக்கிப்புக்கு | ஸ்த்ரீவேஷங்கொண்டுபுக்கு | உறைவாரை | பள்ளிகொண்டருளுமவரை |
| வானவரை | தேவர்களை | | |
| அமுது ஊட்டும் | அம்ருதத்தைபுஜிப்பிக்கும் | எண்ணாது | நினையாமல் |
| பெருமானார் | பெருமையையுடையவனாய், | இருப்பாரை | அந்தக்ஷேத்ரத்திலே நித்யவாஸம்பண்ணுமவர்களை |
| மருவ | பொருந்திவர்த்திப்பதற்கு | | |
| இனிய | இனியதேசமாய் | இறைப்பொழுதும் | க்ஷணகாலமும் |
| தண் ஆர்ந்த | குளிர்த்திமாருததாய் | | |
| | | எண்ணோம் | நினையோம். (௧) |

வ்யா.—முதற்பாட்டு (நண்ணாத வித்யாதி) † ப்ரயோஜநாந்தரபரராய்த் தன்னை உகவாதே யிருப்பார்க்குங்கூட அபேக்ஷித ஸம்விதாநம் பண்ணுமவன்; நம்மை யுகப்பாரையும் கிடைக்கவற்றோவென்று அவஸர ப்ரதீக்ஷையாய் இங்கேவந்து கிடக்கிற இந்நீர்மையை யநுஸந்தியாதே புறம்பே உண்டுநித்துப் போதுபோக்குவாரை ஒரு வஸ்துவாக நினைத்திரோமென்கிறார்.

(நண்ணாத)† ஸ்ரீவிதுரர்பட்டது படுகிறாராயிற்று † நடுவே இவர்; (௪) "సంస్పృశన్నాసనం శౌరే ర్మహామతిరుపావిశత్ - ஸம்ஸ்ப்ருசந்நாஸநம்சௌரேர்மஹாமதிருபாவிசத்" என்றதிறே - † கடல் கலங்கினாற்போலே கலங்கும்போலே காணும் மஹாமதிக †ளென்று. துர்யோதநக்ருஹத்திலே எழுந்தருளினபோது பொய்யாஸநமும் வஞ்சநமுமாய்ப் புகுந்த ப்ரமாதத்தை நினைத்தஞ்சினபடியாலே, "நாமுமொரு குலையில் காயன்றோ, நாமும் ஸம்ஸாரிகளிலேயொருவரானபின்பு நம்மைத்தான் விஶ்வஸிக்க வேணுமோ" என்று †தம்மை யதிசங்கை பண்ணினபடியாலே தாம்படுத்த படுக்கையையும் தடவிப்பார்த்தாரிறே. பிள்ளையுறங்கா வில்லிதாஸர் பெருமாளெழுந்தருளப் புக்கால் சொட்டை†முட்டியிலே கையைவைத்துக்கொடு ஸேவிப்பராம், † ஒருவரிடறுதல் பேர்தல்செய்ததாகில் தம்மை முடித்துக்கொள்வாராக. † அத்தை யநுஸந்தித்து நம்முதலிகளிவரை மஹாமதிகளென்றும் அழைப்பது. † கலங்குகைபோலேல்காணும் மஹாமதிகளாவது.

(௧) வி - பு - ரு -

அஸ்த்தானே பயசங்கை பண்ணுவார்க்கெல்லாம் பேராய்க்கொள்ளீர் மஹாமதிகளென்று. (நண்ணாத) பகவத்விஷயத்திலே த்வேஷம் ப்ரக்ருதியாயாயிற்றிருப்பது. †மநுஷ்ய ஜந்மமா யிருக்கச்செய்தே அஸுராவேசத்தாலே பொருந்தாதேயிருப்பாருண்டு, அங்ஙனன்றிக்கே பிறப்பே ஆஸுர ப்ரக்ருதிகளா யிருக்குமவர்கள். அதுக்கு மேலே ஸாயுதருமா யிருக்குமவர்கள் நடுவே போய்ப்புக்கு. †இப்படிபோய்ப் புகுவது ஒருப்ரஹ்லாதன்போல்வார்க்கோவென்னில், (வானவரை) அம்ருதங்கொண்டவநந்தரம் "உன்னைபாதி நாங்களும் நித்யர்" என்று ஒக்கவபிமாநித்திருக்கும்படியான தேவர்களுக்காக வாயிற்று. (பெண்ணுகி)†புருஷோத்தமனை தன்படிக்குச் சேராத ஸ்த்ரீவேஷத்தை யேறிட்டுக்கொண்டு. (அமுதூட்டும்).† அவன்றன்னை யுகந்து "நீ யெங்களுக்கு வேணும்" என்கை யன்றிக்கே, "உப்புச்சாறலமயும்" என்றிருப்பார்க்கு மத்தைக் கொடுக்கு மவனுயிற்று. † அம்ருதபாநத்திலே யாயிற்று அவர்களுக்கந்வயம். கடல்கடைகை தொடக்கமான வ்யாபாரங்களையடையத் தன்தலையிலே யேறிட்டுக்கொண்டு. (பெருமானுர்) † உறங்குகிற ப்ரஜையை எழுப்பியூட்டும் தாயைப்போலே. இதென்ன நிருபாதிக ஸம்பந்தந்தான்.

(மருவினிய) † ரஸவஸ்துவை ஆதரிப்பாரைப் பெற்றது. (க) "ஃர்வரஸஃ - ஸர்வரஸஃ" என்கிற நம்மையு மாதரிப்பாரைக்கிடைக்குமோ என்று படுகாடுகிடந்தானுயிற்று. (மருவினிய வித்யாதி) † மருவினிய தேசமாய் ஶ்ரமஹரதை விஞ்சி யிருப்பதாய்ச் சிறுதிவலை திருமேனியிலேவந்து ஸ்பர்சிக்கும்படியாயிருக்கிற திருக்கடல் மல்லையிலே † ஆஶ்ரிதனை யுகந்து ஸ்த்தலசயநத்திலே நித்யவாஸம்பண்ணுகிறவனை. (எண்ணுதே) † "நித்யஸூரிகள் நடுவேயிருக்கக்கடவ வஸ்து இப்படி ஸம்ஸாரத்திலே புகுந்து தரைக்கிடை கிடப்பதே! இதென்ன நீர்மையிருக்கும்படியே" என்று அநவரதம் பாவித்தல் † சொல்லுதல் செய்கையாயிற்றுச் சேதநர்க்குச்செய்யவடுப்பது; இதுசெய்யாதே யிருப்பாரை. † அவனிடையாட்டங்கொண்டு கார்யமற்று கேவல தேஹபோஷண பரராயிருப்பாரை. (இறைப்பொழுதுமெண்ணோமே) † "எண்ணப்பெற்றிலோம்" என்ற அநுதாபமுமின்றிக்கே யிருப்பாரை. அவஸ்துக்களை எண்ணும்போது ஒருகால விசேஷமுண்டிறே, † வஸ்து ப்ரதியோகியாக வெண்ணுமதுண்டிறே அவ்வளவிலு மெண்ணோமென்கிறார். ... ... ... (க)

(க) சாந்தோ -

அரு.—முதற்பாட்டு. (நண்ணாதவாளித்யாதி) "பெண்ணாகி யின்னமுதம் வஞ்சித்தானை" என்று அவ்வபதாநத்திலே நெஞ்சு மூண்டிருக்கையாலே அத்தை ஸப்ரகாரமாக அநுஸந்திக்கிறாரென்று விவக்ஷித்து இப்பாட்டுக்குத் தொகுத்த தாத்பர்யமருளிச்செய்கிறார், (ப்ரயோஜநேத்யாதி).

"அவுணரிடைப்புக்கு" என்று சொல்லுகையாலே தோற்றின பயத்தை யருளிச்செய்கிறார் (ஸ்ரீவிதுராரித்யாதி). (நடுவேயிவர்) என்றதுக்கு - மோஹநாஸ்த்ரத்தை அவுணர்மேலே ப்ரயோகித்து விட்டான், வானவர் அமுதுண்டு களித்தார்கள், இவ்வாழ்வார் அஸ்தாநே பயசங்கிகளாகையாலே அஞ்சுகிறாரென்று கருத்து. மஹாமதிகளானால் கலங்கக் கூடுமோவென்ன, (கடலித்யாதி). "ஆனைக்கும் தனக்குத்தக்கவாதம்" என்னுமாபோலே மதியுள்ளதனையும் கலக்கத்துக்குடலென்றபடி. (என்று) என்றவநந்தரம், கருத்து என்று சேஷம். (தம்மை அதிசங்கைபண்ணி) என்றதுக்கும்-"மருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்" என்று தன்னிழலையும் தானதிசங்கை பண்ணுமாபோலே பண்ணினாரென்று கருத்து. (முட்டி) - ஆசு-பிடியென்றபடி. சொட்டை முட்டியில் கையிட்டாராகில் பகவத்பரிகரங்களிலாரை யென்செய்யப்போமென்ன வருளிச்செய்கிறார் (ஒருவரித்யாதி). ஆனால் ப்ரக்ருதத்திலே யென்னென்ன, (அத்தையித்யாதி). இவ்வைதிஷயத்தாலே பகவத்விஷயத்தில் கலங்கும்படி ப்ரேமம்வருகையே மஹாமதித்வமென்று பெரியோர்களுக்குத் திருவுள்ளமென்றதாயிற்று, எத்தனை சொன்னாலும் மதிபதம் கலக்கத்தைச்சொல்லுமோ, விபரீத லக்ஷணையாலே சொன்னால் சொல்லலாமென்ன வருளிச்செய்கிறார் (கலங்குகையித்யாதி வாக்யத்வயத்தாலே). இத்தால் ஜ்ஞாநவிபாக கார்யமான கலக்கமாகையாலே சொல்லலாமென்கை-"அவுணர்" என்றபோதே நண்ணாதது ஸித்தமன்றோ, விசேஷணமிடவேணுமோவென்ன, அருளிச்செய்கிறார் (மநுஷ்யேத்யாதி). கர்மாநுகுணமாக வானிலிருப்பு ஸாவதியாயிருக்கச்செய்தேயும் அத்தை ஸ்த்திரமென்றே நினைத்திருக்குமவர்கள் கருத்தை அநுஸரித்து "வானவர்" என்று நிரூபகமாக வருளிச்செய்ததுக்கு ப்ரஸ்நப்ரதிவசந முகத்தாலே யருளிச்செய்கிறார் (இப்படியித்யாதி வாக்யத்ரயத்தாலே). "ஆகி" என்கிற அபூததத்பாவனுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (புருஷோத்தமனித்யாதி). "தலசயனத்துறைவாரை யெண்ணாதேயிருப்பாரை - எண்ணோம்" என்னுமவர், "அமுதூட்டும்" என்று இத்தை ஒருபுருஷார்த்தமாக வெண்ணாதே என்று விவக்ஷித்து, ததநுகுணமாக, அமுதபதத்துக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அவனித்யாதி). கொடுக்கும் என்னாதே, "ஊட்டும்" என்கையாலே பலித்தவர்த்தம் (அம்ருதேத்யாதி). "ஊட்டும்" என்கிற பதத்துக்குத் தாத்பர்யாநுகுணமாக "பெருமான்" என்ற ஸ்வாமித்வ ஸம்பந்தாநுஸந்தாநத்துக்கு உட்கருத்து (உறங்குகிறவித்யாதி),

தீழிர் தங்களிலே நோக்காக, "தலசயனத்துறைவாரை" என்னுமளவுக்கும் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ரஸோத்யாதி). மருவ என்ற வகரம் கடைக்குறைத்தலாயிருக்கிறதென்று விவக்ஷித்து, சப்தார்த்தம் (மருவவித்யாதி). (ஆஶ்ரிதனை) - புண்டரீகனை. "பெருமானார் தலசயனத்துறைவார்" என்ற பதங்களிலே நோக்காகத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நித்யேத்யாதி). (சொல்லுதல்) என்றது - அர்த்தஸித்தார்த்தம். ஏவகாரதாத்பர்யம் (அவனித்யாதி) § "இருப்பார்" என்றபதத்துக்குத் தாத்பர்யகதநமுகேந "இறைப்பொழுதும்" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (எண்ணவித்யாதி). அவன் தரைக்கிடையை யெண்ணாதேபோனால் தரைக்கிடை கிடக்கவிருப்பது அநுதாபமில்லாமையிறே யென்று திருவுள்ளம். இத்தால் - எண்ணாதேயிருக்கை இறைப்பொழுது மெண்ணுமைக்கு ஹேது வென்றதாயிற்று. §(வஸ்துப்ரதியோகியாக வெண்ணுமதண்டிறே) என்றதுக்கு "ఉద్వేజనార్థతయా చ పరిహార్యతయా చ స్మర్తవ్యః - உத்வேஜநார்த்ததயாசபரிஹார்யதயாசஸ்மர்த்தவ்யঃ" என்கிறந்யாயத்தாலே அவர்களைக்கண்டு நடுங்குகைக்கும் பரிஹரிக்கைக்குமாக அஸத்துக்களை நினைக்கவேண்டிவருமே, அப்படியும் நினைக்கைக்கு க்ஷமனாகிறிலேனென்றருளிச்செய்கிறாரென்று கருத்து. ... ... ... (க)

மூ.—பார்வண்ணமடமங்கை பனிநன்மாமலர்க்கிழத்தி
நீர்வண்ணன் மார்வகத்தி லிருக்கையை முன்நினைந்தவனூர்
கார்வண்ண முதுமுந்நீர் கடல்மல்லைத்தலசயனம்
ஆரெண்ணும் நெஞ்சுடையா ரவரெம்மை யாள்வாரே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பார்வண்ணம் | பூமியைத்தனக்குப் ப்ரகாரமாகவுடையளாய். | மலர்க்கிழத்தி | செந்தாமரைமலரைப் பிறந்தகமாகவுடையபெரியபிராட்டி |
| மடம் | ஆத்மகுணங்களை யுடையளான | மார்வகத்திலிருக்கையை | வலத்திருமார்விலிருக்கையையும் |
| மங்கை | ஸ்ரீ பூமிப்பிராட்டி | முன் | முதலிலே |
| நீர்வண்ணன் | நீர்வண்ணனுடைய | நினைந்து | நினைத்து |
| இருக்கையை | (இடவருகில்) இருக்கையையும், | அவன் | புருஷகாரமும்மிகையான அவனுடைய |
| பனி | குளிர்ந்து | ஊர் | ஊராய் |
| நல் | அழகியதாய் | கார்வண்ணம் | கறுத்தநிறத்தையுடைத்தாய் |
| மா | ஶ்லாக்யமான | | |

§ "இருப்பாரை" என்றதுக்கர்த்தாந்தரம் (எண்ணப்பெற்றிலோம்) என்றது. § "இறைப்பொழுதும்" என்றதுக்கு அர்த்தாந்தரம் (வஸ்துப்ரதியோகியாக) என்றது. விவரணமாதல்.

| | | | |
|---|---|---|---|
| மூது | பழையதாயிருந்துள்ள | எண்ணும் நெஞ் சுடையார் ஆர் | அநுஸந்திக்கும்மாஸ ஸுடையார் எவர்களோ, |
| முந்நீர் | கடலினருகேயுள்ள | அவர் | அவர்கள் |
| கடல்மல்லை | திருக்கடல்மல்லையில் | எம்மை | எங்களை |
| தலசயனம் | ஸ்த்தலசயநத்தில் பள்ளிகொண்டிருக்கையை | ஆள்வார் | அடிமைகொள்ளத்தக்கவர்கள். (உ) |

வ்யா.—இரண்டாம்பாட்டு (பாரித்யாதி) †முதல்தன்னிலே நம் † குற்றம் அவன் திருவுள்ளத்தில் படாதபடிபண்ணும் ஸ்ரீபூமிப் பிராட்டியும், அவன் தன் ஸர்வஜ்ஞத்வத்தாலே நம்குற்றத்தைக் †கண்டானேயாகிலும் அவன்றன்னை (க) "ந கஶ்சிந்நாபராத்யதி-நகஶ்சி ந்நாபராத்யதி" என்று † பொறுப்பிக்கும் பெரியபிராட்டியாரும், அவன் பக்கலிலே கிட்டவிருக்கையாலே நமக்கினி இழக்கவேண் டாதபடி ஸுலபனென்று அவன் நித்யவாஸம் பண்ணுகிற தேசத் தை ஹ்ருதயத்தாலே அநுஸந்திக்கு மவர்கள் என்னை † அடிமை கொள்ளுமவர்களென்கிறார்.

பாரையூருமாக வுடையளாய் - பூமியைத்தனக்கு ப்ரகார மாக வுடையளாய், ஆத்மகுணத்தை யுடையளா யிருக்கிற ஸ்ரீபூமி ப்பிராட்டி. பூமிக்கபிமாநிநியாயிருக்குமவளிறே; † அவன்றனக்குங் கூடப் பொறைக்கு உவாத்தாயிறே இவளிருப்பது. தன்பக்கலிலே எல்லாப்ராதிகூல்யத்தையும் பண்ணிக்காலிட்டுத்துகையாநின்ரு லும் "துகையாநின்றோம்" என்று கூசவேண்டாதேயிறே யிருப் பது; க்ஷமை என்றேயிறே பேர். (பனிநன்மாமலர்க்கிழத்தி) † பிறர் குற்றம்நெஞ்சில் படாதபடியான † மார்த்தவத்தை யுடையதலைவி. (உ) "ஸர்வகந்தஃ - ஸர்வகந்தஃ" என்கிற வஸ்துவையும் தன்னுடைய போக்யதையாலே துவக்கி ஆஶ்ரிதர் குற்றம் நெஞ்சில் படாதபடி பண்ணுமவள்; † அழகிய தாமரைப்பூவில் பரிமள முபாதாநமாகப் பிறந்தவள். இத்தால், ஸர்வேஶ்வரனுக்குத் தன்னோடே பணிபோ ரும்படியான போக்யதையை யுடையவளென்கை. இவர்கள் (நீர்வ ண்ணன் மார்வகத்திலிருக்கையை முன்நினைந்து)†கடல்போலே யிரு க்கிற குளிர்ந்த வடிவில் இடவருகிலும் திருமார்விலுமெழுந்தருளி யிருக்கிறவிருப்பை யநுஸந்தித்து, †"நமக்குப் புருஷகாரபூதைக

(க) ரா - யு - கககூ - சச. (உ) சாந்தோ - ௩ - கச.

ளான நாய்ச்சிமார்களங்கேசேர விருந்தார்கள்" என்று அநுஸந்தித்தால் பின்னை நமக்குக்கிட்டுகைக் கொரு குறை யில்லையிறே, ஸ்ரீமாதாபிதாக்கள் சேரவிருந்தவிடத்தில் ப்ரஜைகளுக்குச் சென்று கிட்டுகையில் ஒரு அருமை யில்லை, (க) [యత్రకృష్ణౌచకృష్ణాచ సత్యభామాచభామినీ - யத்ரக்ருஷ்ணௌச க்ருஷ்ணாச ஸத்யபாமாச பாமிநீ] க்ருஷ்ணனும் ஸ்ரீஸத்யபாமைப் பிராட்டியும் அர்ஜுநனும் த்ரௌபதியுமாகக் கால்மேல் காலேறிட்டு ஒருவர்க்கும் சென்று கிட்டவொண்ணுதபடி ஏகாந்தமாக விருக்கிறவிடத்திலே, "ஸஞ்ஜயன்வந்தான்" என்றறிவிக்க, "இவ்விருப்புக்காண உகப்பானொருத்தன், இது தன்னையு முகவாதார் மண்ணுண்ணும்படி சொல்லவல்லா னொருவன், புகுரவிடு" என்றானிறே. (உ) [నచాభిమన్యుర్నయమౌ తం దేశమభిజగ్మతుః - நசாபிமந்யுர்நயமௌ தம்தேச மபிஜக்மது:" மாதாபிதாக்க ளிருந்தவிடத்தில் ப்ரஜைகள் சென்று கிட்டுகையி லொரு அருமையில்லையிறே, ஆயிருக்கச்செய்தே அந்த ப்ரஜைகளுங் கிட்டவொண்ணுதபடி யிருக்கிற ஸமயத்திலே யாயிற்று இவனை யழைத்துக் காட்சி கொடுத்தது. ... ... ... ... ... *

---

அரு.—இரண்டாம்பாட்டு. (பார்வண்ணமித்யாதி) பூமிப்பிராட்டியையும் பெரியபிராட்டியையும் பாகவதரிப்போது அநுஸந்திப்பது, பூர்வகண்டத்திற்போலே புருஷகாரத்வேநவும், அவனை ப்ராபகத்வேநவும் என்று விவக்ஷித்துப் பாட்டுக்குத் தொகுத்த பாவத்தையருளிச்செய்கிறார் (முதலித்யாதி). ஆக, இத்தால் பிராட்டிமாரைப் புருஷகாரமாகவும், எம்பெருமானை ப்ராபகனுகவும் அத்யவஸித்திருக்குமவர்களே தமக்கும் ப்ராபகர்களென்று அநுஸந்திக்கிறாரென்று கருத்து. (குற்றம்) என்றது - குற்றத்தின் கார்யமான தண்டநமென்றபடி. இங்ஙனன்றாகில், "குற்றம் திருவுள்ளத்திற்படாமை" என்றத்தோடும் "பூமிப்பிராட்டியைப் பொறைக்கு உவாத்தாய்" என்று மேல் சொன்னத்தோடும் விரோதிக்குமிறே. (கண்டானேயாகிலும்) என்றது - கண்டு தண்டிக்க நினைத்தானேயாகிலுமென்றபடி. (பொறுப்பிக்கும்) என்றது - பொறுக்குமதுக்கு ஹேதுவான க்ருபையையுண்டாக்குமென்றபடி. (அடிமைகொள்ளுமவர்கள்) என்றது - (ஃபல) பலஸாதந சிஶ்ருஷையைக் கொள்வர்களென்கை.

அவனுக்கு ஸ்வதக்ஷமையுண்டாயிருக்குமே, இவளுண்டாக்குகையென்னென்ன வருளிச்செய்கிறார், (அவனித்யாதி வாக்யத்ரயத்தாலே). இத்தால் ஸ்வாதந்த்ர்யத்தில் அவன்பொறை தலைமடங்கினால் இவளுண்டாக்

---

(க) பார - (உ) பார -

குவனென்று கருத்து. "பனி" என்றத்தாலே குளிர்த்தியைச்சொல்லி, அத்தால் பலிதார்த்தம் (பிறரித்யாதி). (மார்த்தவத்தை)-நெஞ்சில்மார்த்தவத்தை. ‡ "மாமலர்" என்றத்தால் பலிதார்த்தம் (ஸர்வேத்யாதி). நல்பதத்துக்கு அர்த்தமருளிச்செய்துகொண்டு அவனைத் துவக்கும்படியான போக்யதை தானும் ஸ்வாபாவிக பரிமளவத்வத்தைப்பற்ற என்றருளிச்செய்கிறார் (அழகியவித்யாதி). "நீர்வண்ணன்" என்றவநந்தரம், இடவருகும் என்று அத்யாஹரித்தருளிச்செய்கிறார் (கடலித்யாதி). "நினைந்து எண்ணும் நெஞ்சுடையார்" என்னும்போது பௌர்வாபர்யம் தோற்றியிருக்க, "முன்" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நமக்கித்யாதி). (க) "த்வயத்தில் பெரியபிராட்டியாராலே பேறு" என்கிறபடியே இதுவே ப்ரதாநமென்று கருத்து. (கிட்டுகை) என்றவநந்தரம், இல்லையென்றுசேஷம். § "அருமையில்லை" என்றதக்கு உதாஹரணம் (யத்ரேத்யாதி). " అర్జునాఙ్కగతౌ పాదౌ కేశవస్యోపలక్షయే । అర్జునస్యచక్రుష్ణాయాః కృష్ణాయాశ్చాఙ్గకావుభౌ - அர்ஜுநாங்ககதௌபாதௌ கேசவஸ்யோபலக்ஷயே|அர்ஜுநஸ்யச க்ருஷ்ணயாம் ஸாபாயாம்சாங்ககாவுபௌ" என்கிற வசநத்தையு முட்கொண்டருளிச்செய்கிறார் (க்ருஷ்ணனுமித்யாதி). ... ... ... ... ... ... *

---

வ்யா-† அவ.-அநாதிகாலம் ஸம்ஸரித்துப் போருகிற இச்சேதநர்விஷயமாக ஸர்வேஶ்வரன் திருவுள்ளத்தாலே,(உ)"సుహృదం సర్వభూతానాం-ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" என்கிறபடியே பண்ணுவித்ததொரு ஸௌஹார்த்தமுண்டிறே. இவனுடைய † ஸத்க்ரியைக்கு (ஃல) பலவ்யாப்தி யுண்டாகாநின்றால்அவனுடையஅநுக்ரஹத்துக்கு (ஃல) பலவ்யாப்தி யின்றிக்கேயிராதிறே; ஆகையாலே, அதுதானொருநாள் வரையிலே ஓரவகாசத்திலே பலிக்கவுங்கடவதா யிருக்குமிறே. அத்தாலே இவனுக்கீஶ்வரன் பக்கலிலே ஆபிமுக்யம்பிறந்து அதடியாக அவன் † விசேஷகடாக்ஷம்பண்ண, அநந்தரமிவனுக்கு அவன்பக்கலிலே ருசிவிஶ்வாஸங்கள் பிறந்து ப்ராபகனும் ப்ராப்யனு மவனேயென்று அத்யவஸித்தால் பின்பிவ † னிருக்கக் கடவபடியைச் சொல்லுகிறது.

† இனி உபாயத்திலேவந்தால்,ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியாய் உபயவிபூதியுக்தனாய் அவாப்தஸமஸ்தகாமனாயிருக்கிற ஸர்வேஶ்வரனை

---

‡ கீழ்வாக்ய விவரணம் (ஸர்வகந்தநீ) என்று பங்க்யந்தரேண விவரணம், (மாதாபிதாக்கள்) என்று. இப்படி இவருமவருமான சேர்த்தியிலே கிட்டின பேருண்டோ? என்ன; (யத்ரக்ருஷ்ணௌச) என்றது.

---

(க) முமுக்ஷுப்படி - உ -          (உ) கீதை -

இஸ்ஸம்ஸாரிசேதநன் உபாயமாக வரித்தால், பின்னை அவனிவனு டைய ஸர்வபரங்களையும் தானே ஏறிட்டுக்கொண்டு நிர்வஹிப்பானு ஞல், அவன் செய்யுமதுக்கிவன்ருனு மொருதலைப்பற்றவேண்டும் படியா யிராமையாலே பின்னை ஹிதசேஷத்தில் தனக்குச் செய்ய வேண்டுவ தொன்றில்லை, உபேயமாகிறது, கர்மநிபந்தநமாகப்பரிக்ர ஹித்த இத்தேஹ ஸம்பந்தமற்று ஒருகதிவிசேஷத்தாலே போய் ஒருதேச விசேஷத்திலே புக்கால் பண்ணுவதொரு வ்ருத்தி விசேஷ மாகையாலே, அது இதுவாகக்கூடாது; ப்ராபகாம்சத்தில் கர்தவ் யாம்ச மில்லையாகில் ப்ராப்யாம்சத்திலிது அந்வயியாதாகில்; பின்னை இதுவாவது பழைய விஷயப்ராவண்யமே ஸித்தித்துவிடுகிறதோ வென்னில்; கூடாதிறே, ப்ராப்யம் இன்னதென்றுநிஷ்கர்ஷித்து ப்ராபக ஸ்வீகாரம் பண்ணுகையாலே. அதாவது - ப்ராப்யாபாஸங் களில் ருசி நிவ்ருத்தி பூர்வகமாகவிறே ப்ராப்ய ப்ரதிபத்தி, ஆகை யாலே தூரதோ நிரஸ்தமிறே அது. (க) †“ సర్వధర్మాన్ పరిత్యజ్య-ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய” என்கிற விடத்தில் விஹிதகர்மங்களும் நிஷித்த பரிஹாரார்த்தமாகச் செய்யுமவையு மெல்லாம், தர்மசப்தவாச்ய மாகையாலே, இவையும் த்யாகவிஷயமாய் அந்வயிக்குமென்று, அர் த்த ப்ராப்தமாய் பழைய பாபங்களையே சொல்லிற்ருய் வாராதோ? வென்னில்; வாராதிறே.†உபாயஸ்வரூபத்தாலும் அதிகாரி ஸ்வரூபத் தாலும்; அப்படியே யிருக்கிறதிதுவும், †சரீர ஸமநந்தரத்திலே ப்ரா ப்ய ஸித்தியா யிருக்கையாலும். இனி, ஸமஸ்த கல்யாண குணாத் மகனை உபாயமாக வரிக்கையாலும், இவன்தான் விதிபரதந்த்ரனுய் ஸாதநபுத்யா இங்கே அநுஷ்டிப்ப தொன்றில்லாமையாலும், ஜ்ஞாநம் பிறந்த பின்பு செய்யுமவை யெல்லாம் தான் ஸ்வீகரித்த ப்ராப்யத்தோடும் ப்ராபகத்தோடும் சேர்ந்தல்லதிராது. †நினைத்தார் நினைத்தபடி மூலையடியே திரிகிற அஜ்ஞரிற் காட்டில் இவனுக்கொரு வ்யாவ்ருத்தி வேணுமிறே.

†இன்று நாளை நீர்வருமாறு அங்கே யிங்கே §சினையாறுபட்டுக் காட்டுமாபோலே; மேல்தான் (உ) “ యత్ర పూర్వే సాధ్యాస్సన్తి దేవాః-யத்ர பூர்வேஸாத்யாஸ் ஸந்திதேவா:” என்றும், (௩) அந்தமில் பேரின்பத் தடியரோடிருந்தமை” என்றும் அவர்களோடுகூடி அநுபவிக்கு

(க) கீதை - ௧௮ - ௬௬ - (உ) பு - ஸூ - (௩) தி - வாய் - ௧0 - ௧0 - ௧௧-
§ சினை - கர்ப்பம். வெள்ளம் வருவதற்குமுன் கீழே நீர்பொசிந்து காட்டு மென்றபடி

மத்தைப் பேறாகச் சொல்லுகையாலே இவனுக்கிது சரமசரீரமான பின்பு இவை இங்கேபிறக்கக் காணவேணுமிறே. அவையாகிற வைதானவை யென்னில்; அபாகவதர்களோடு பொருந்தாமையும் பாகவதர்களை யொழியச்செல்லாமையுமிறே. அவையிரண்டும் தமக்குண்டானபடியை யருளிச்செய்கிறார். † பார்யைக்கறிவு பிறக்கப் பிறக்க பர்த்தாவின்பக்கல் பாவபந்தமுண்டாம்,பர்த்ரந்தரபரிக்ரஹம் பண்ணுமதிறே இவளவனுக்காகா தொழிகையாகிறது. (க)"திருவடி தன்நாமம் மறந்தும் புறந்தொழாமாந்தர்" என்னா நின்றதிறே; †ப்ரபந்நருடைய லக்ஷணம் சொல்லுகிறபோது †இப்படி ஸர்வேஶ்வரன் உத்தேஶ்யனென்னும் ஜ்ஞாநம் பிறக்கப்பிறக்க பாகவதர் பக்கல் பாவபந்தமுண்டாகலாம். இந்த ஜ்ஞாநார்த்தமாக விடவேணு மிறே அபாகவதஸம்பந்தம். † இனி, பாகவதராகிறார் - ப்ரதமதசையி லீஶ்வரனுடைய உபாயபாவத்தை யறிவித்து, அவ்வழியாலே புருஷகாரபூதராமவர்கள். இவன்றான் சேதநனாய் உபகாரங்கொண்டவனாகையாலே க்ருதஜ்ஞனாயிருக்கக்கடவன். இனி, சரமதசையில் வந்தால் ப்ராப்யத்திலெல்லை இவர்களாகையாலே, அவன் றன்னோபாதியும் உத்தேஶ்யராயிருக்கக்கடவர். இனி நடுவுபட்டநாள் இவனுக்கு, (உ) "போதயந்தஃ பரஸ்பரம் பண்ணுகைக்குடலாயிருப் பார்களாகையாலே, ஸர்வாவஸ்த்தைகளிலும் இவர்களுத்தேஶ்யரென்னுமிடம் சொல்லிற்று.

(ங) †"ఆనుకూల్యస్య సంకల్పః-ஆநுகூல்யஸ்யஸங்கல்பஃ" இத்யாதிகளாலே ஆறுவகையாயிருக்கும் சரணாகதி யென்று சொல்லாநின்றது, (ச)"అహమస్మ్యపరాధానామాలయోఽకించనోఽగతిః। త్వమేవోపాయభూతో మేభవ- அஹமஸ்ம்யபராதாநாமாலயோகிஞ்சநோகதிஃ। த்வமேவோபாயபூதோமேபவ" என்று தன்னாகிஞ்சந்யத்தை முன்னிட்டு நீயே உபாயமாகவேணுமென்று அபேக்ஷிக்குமத்தைச் சரணாகதியாகச் சொல்லாநின்றது,†இதிலொன்றைவிட்டு ஒன்றை ஸ்வீகரிக்கு மன்று மற்றையதுக்கு அப்ராமாண்யம் ஸித்திக்குமாயிருந்தது, ஆனால் இவையிரண்டும் அவிருத்தமாக நயிக்கும்படி யெங்ஙனேயென்னில்; "త్వమేవ - த்வமேவ" என்கிற விடத்திலே § உபாயாந்தர நைரபேக்ஷ்யந்தோற்றி யிருக்கையாலே சரணாகதியினுடைய ஸ்வரூபம்

(க) ச - தி - கூஅ. (உ) கீதை - ச. (ங) பாஞ்ச. (ச) பாஞ்ச.
§ (பா) ஸாதநாந்தர.

சொல்லுகிறது அந்த ஶ்லோகத்தாலே; அஶரணாகதி புக்கவிடத்தே புகக்கடவதாய், சரணாகதனானவனுக்கு ஸம்பாவிதஸ்வபாவங்களைச்சொல்லுகிற திந்தஶ்லோகத்தாலே. †சரணாகதியினுடைய ஸ்வரூபத்தைப்பார்த்தால் வேறொன்றைப் பொறுதபடியா யிருக்கும்; இனி ஒதுங்கின ஆஶ்ரயத்தைப்பார்த்தால் இஸ்ஸ்வபாவங்களோடு கூடியல்லதிராது. † "ஷட்விதா சரணாகதி:-ஷட்விதாசரணாகதி:" என்று கொண்டு இக்குணங்களைச் சரணாகதிக்கங்கமாகச்சொல்லாநிற்க இவனுக்கு ஸம்பாவித ஸ்வபாவமென்னும்படி யெங்ஙனேயென்னில்; †"ப்ரார்த்தநாமதி: சரணாகதி:-ப்ரார்த்தநாமதி: சரணாகதி:" என்கிறவிடத்திலே ப்ரார்த்தநாபுத்தி இச்சேதநன்கையிலே கிடக்கச்செய்தே எங்ஙனே சரணாகதிலக்ஷணவிஷயமாய்க்கிடக்கிறபடி.†"ஆநுகூல்யஸ்ய-ஆநுகூல்யஸ்ய" என்கிற ஶ்லோகம் விதிபரதந்த்ரமாய்ச் செய்யு மன்று (ஃ) பலாபேக்ஷை யில்லாதபோது தவிரலுமாயிருக்கும், ஸ்வரூபநிவேசியாமன்று செய்யாதபோது ஸ்வரூபஹாநியே விளைக்குமிறே. †ஸ்வர்க்ககாமனை யில்லாதபோது ஜ்யோதிஷ்டோமம் தவிரலாயிருக்கும், அங்ஙனே செய்யவொண்ணாதபடியாயிருக்குமிறே இத்தலையாலொரு(ஃ)பலம் சொல்லாத நித்யாநுஷ்டாநம் விதிக்கும். ... *

அரு — §பிராட்டிமார்களைப் புருஷகாரமாகவும், எம்பெருமானை ப்ராபகமாகவுமெண்ணியிருக்கும் பாகவதர்களே தமக்கு ப்ராபகமென்றநுஸந்திக்கிறாரென்று இத்திருமொழிக்கு பூர்வகண்டாநுகுணமாக மஹாவாக்யதாத்பர்யத்தைத் திருவுள்ளம்பற்றி இப்ப்ரவேசம் துடங்கி இவ்வளவும் வ்யாக்யாநம்செய்தருளி, இனி "பிராட்டிமார்களும் அவனுமாகவிருக்கிற விருப்பே ப்ராப்யம்" என்று உத்தரகண்டார்த்தத்தை யெண்ணியிருக்குமவர்களே தமக்கு ப்ராப்யபூதரென்று இத்திருமொழிக்கு மஹாதாத்பர்யபேதத்தை யருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி, ப்ரவேசமுமருளிச்செய்து, மீளவும் இப்பாட்டுக்களை வ்யாக்யாநம்செய்தருளுகிறார் (அநாதிகாலமித்யாதியாலே). இரண்டாம்பாட்டிலே நடுவே நிறுத்தினதுக்குக்கருத்து - இப்பாட்டில் உத்தரார்த்தம் துடங்கி மேலிற்பாட்டுகளெல்லாம் இந்த மஹாதாத்பர்யத்துக்கு அவாந்தரதாத்பர்யம் ஸாதாரணமாயிருக்குமென்னுமது. ஆக, "முன்னினைந்து" என்றதுக்கு - புருஷகாரமாக நினைந்தென்றும், ப்ராப்யத்வேந நினைந்தென்றும் நிர்கர்ஷித்தால்,

§ புநஃப்ரவேசே. அத்யவஸாயரூபப்ரபத்தியு மீஶ்வர ஸௌஹார்த்த பலமென்ன, ஆநுகூல்யாதீநாம் ஸம்பாவிதஸ்வபாவத்வம் ப்ரஸித்தமாமென்று விவக்ஷித்து இவ்வத்யவஸாய ரூபப்ரபத்தி அவன் ஸௌஹார்த்தகார்யமென்று அருளிச்செய்கிறார் (அநாதிகாலம்) என்று. (விசேஷகடாக்ஷம்) * மயர்வற மதிநல மருளுகை.

"எண்ணும்" "நினைவார்" இத்யாதிபதங்களுக்கு - உபயாநுகுணமாக யோஜித்துக்கொள்ளலாமிறேயென்று திருவுள்ளம். (க) "[illegible] நாஸௌபுருஷகாரேண நசாப்யந்யேந ஹேதுநா ! கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷயே கஞ்சித்கதாசந" என்கிற வசநத்தை யுட்கொண்டு, இவ்வாழ்வார்தாம் கேவலேஶ்வர ஸௌஹார்த்த (ப) பலாயத்தமான ஆபிமுக்யாதிகளைப் பெற்றவராகையாலே, (உ) * வாடினேன் வாடி துடங்கி தமக்குப்பிறந்த தசாவிசேஷங்களை யநுஸந்தித்துக்கொண்டு அவனை ப்ராய ப்ராபகத்வேந அநுஸந்தித்து, அநந்தரம் தமக்குப் பிறந்ததான "பாகவதர்களே ப்ராப்யம்" என்கிற தசையை யநுஸந்திக்கிறாரித்திருமொழியிலென்றருளிச்செய்கிறார் (அநாதிகாலம்) என்று துடங்கி, (படியைச்சொல்லுகிறது) என்னுமளவும். இத்தால் அஜ்ஞாத ஸுக்ருதம் மூலமாக ஆபிமுக்யாதிகள் பிறந்து புருஷகாரத்தை முன்னிட்டுக்கொண்டு ஈஶ்வரனே ப்ராபகமென்னும் அதிகாரிக்கு ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்துக்கு அஞ்ச ஸம்பாவனையுண்டாகையாலே தச்சாந்த்யர்த்தம் பாகவதர்களே ப்ராபகமென்கிற ஜ்ஞாநம் அஸம்பாவிதமாம்; அங்ஙனன்றி, கேவலம் ஸௌஹார்த்தத்தாலே தனக்குத்தானே உபாயமானானென்று அநுஸந்திக்குமதிகாரிக்கு அஞ்ச ப்ரஸக்தியில்லாமையாலே, அநந்தரம் இருக்கும்நாள் பாகவதரை ப்ராப்யத்வேந அநுஸந்திக்கை ஸம்பாவிதமென்றும் சொல்லிற்றாயிற்று. (ஸத்க்ரியைக்கு) யாத்ருச்சிகாதிகளுக்கு. §(இருக்கக்கடவபடியை) என்றது - அபாகவதஸஹவாஸம் அப்ராப்யமென்றும் பாகவதஸம்ஶ்லேஷமே ப்ராப்யமென்றுமிருக்கையென்றபடி.

§ பாகவதஸம்ஶ்லேஷத்தைப்ராப்யமென்னவொண்ணாது என்னும் சங்கையைப் பரக்கவநுவதிக்கிறார் (இனியித்யாதி வாக்யத்ரயத்தாலே). தூரதோநிரஸ்தமானபடிக்கு த்ருஷ்டாந்தமருளிச்செய்கிறார் (ஸர்வதர்மாநித்யாதி). (உபாயஸ்வரூபத்தாலும்) என்றவநந்தரம், உபேயஸ்வரூபத்தாலும் என்றுகூட்டுவது. பழையவிஷய ப்ராவண்யமாய்த் தலைக்கட்டாது என்னுமர்த்தத்தைப் பல ஹேதுக்களாலே நிகமிக்கிறார் (சரீரேத்யாதி). ஜ்ஞாநிக்கு அஜ்ஞவ்யாவ்ருத்தியுண்டாகையாலும், விஷயப்ராவண்யம் வாராதென்றும் ஹேத்வந்தரமருளிச்செய்கிறார் (நினைத்தாரித்யாதி). இத்தால் அதிகாரிஸ்வரூபத்தாலும் ஸம்பவியாதென்கை.

---

§ (இருக்கக்கடவபடி) ஆநுகூல்யாதிவிசிஷ்டனாயிருக்கக்கடவபடி.
§ இந்த ஆநுகூல்யாதிகள் ஸம்பாவிதஸ்வபாவங்களென்னுமதுக்குப் பின்னையுமொரு த்ருஷ்டாந்தமும் சிலஉபபத்திகளுமருளிச்செய்கிறார்; அதில் முற்பட இந்த ஆநுகூல்யாதிகளுபாயோபயோகிகளுமன்று, உபேயகோடிகடிதமுமன்றென்கிறார் (இனி உபாயத்திலே) என்று. ப்ராப்யாபாஸங்களில் ருசிநிவ்ருத்திபூர்வமாகவிறே என்றவளவே போருமென்றருளிச்செய்வர்.

---

(க) பாஞ்ச. (உ) க - க - க.

சரீரஸமநந்தரத்தில்வரும் ப்ராப்யத்தோடு இதுசேரும்படிதானெங்ஙனேயென்ன வருளிச்செய்கிறார் (இன்றுநானேயித்யாதி). (ஸாத்யாநி) ப்ராப்யாநி. § அபாகவதரோடு பொருந்தாமையை முந்துறவருளிச்செய்வானேனென்னென்ன வருளிச்செய்கிறார் (பார்யைக்கித்யாதி வாக்யத்ரயத்தாலே). எடுத்த பாசுரத்துக்கு பாவம் (ப்ரபந்நரித்யாதி). ப்ரதாநமாகையாலே முந்துறவருளிச்செய்தார் என்றொரு பரிஹாரமருளிச்செய்து, பாகவத ப்ராவண்யவர்த்தகமாகையாலும் ஆவஶ்யகமென்று பரிஹாராந்தரமருளிச்செய்கிறார் (இப்படியித்யாதி). (ஜ்ஞாநார்த்தமாக) பாவபந்தம் நிலைநிற்கைக்காக. இந்த பாகவதர்கள் ப்ராப்யராமிடத்தில், பிராட்டிமாரும் எம்பெருமானும் நித்யமாயிருக்குமிவர்களோபாதியன்றியே ப்ராப்யதமத்வமுண்டென்னுமர்த்தத்தை உபபாதிக்கிறார் (இனிபாகவதராகிறாரித்யாதி வாக்யபஞ்சகத்தாலே). உசாத்துணையாகிற அதிகாரம் அதிகமாகவிருக்கையாலே ப்ராப்யதமரென்று இவனுக்குப் பிறந்ததசையைச்சொல்லுகிறது.

விஹிதாம்சத்திலிவனுக்குச் செய்யவேண்டிற்றில்லாமையாலே என்னுநின்றீர், ஸர்வமுக்தி ப்ரஸங்க பரிஹாரார்த்தமாக ஸாங்கப்ரபத்தியை விதித்திருக்கிறதே, அவற்றைச்செய்யவேண்டாவோவென்னில்; அருளிச்செய்கிறார் (ஆநுகூல்யஸ்யேத்யாதி). ஆக. இத்தால்-“த்வமேவ” இத்யாதியோடு விரோதிக்கையால், அங்கு அங்கமென்றுசொல்லாமையாலே செய்யவேண்டும் ஹிதசேஷமில்லையென்று கருத்து. அங்கு சாஸ்த்ரத்துக்கு அப்ராமாண்யம் வாராதோ வென்னும் சங்கையை யநுவதிக்கிறார் (இதிலித்யாதி வாக்யத்வயத்தாலே). § அங்கமென்று சொல்லுகையெங்ஙனே யென்ன வருளிச்செய்கிறார் (சரணாகதீத்யாதி). அவர்ஜநீயமாய்வருகையைப் பற்ற அங்கமென்றதென்று கருத்து. சாஸ்த்ரங்களங்கங்களென்று சொல்லச்செய்தே அத்தை ஸம்பாவித ஸ்வபாவங்களென்று கல்பிக்கும்படி சாஸ்த்ரம் சொன்னத்தை அங்யதாகல்பித்தது கண்டதுண்டோ வென்னும் சங்கையை

---

§ பாகவதரை யொழியப்பொருந்தாமையைச்சொன்னால் போராதோ? அபாகவதர்களோடு பொருந்தாமையும் சொல்லவேணுமோ வென்ன, (பார்யைக்கு) என்றது. அதாவது - இதில்லாவிட்டாலும் அதுவே அத்யந்தாபேக்ஷிதமென்றபடி. இத்தால் - பாகவதர்களுடைய த்யாகம் ஸ்வரூபநாசகரமான ஆகாரத்தாலும், பாகவதோத்தேஶ்யதாஜ்ஞாநஸித்யர்த்தமாகவும் அவஶ்யம் வேணுமென்றதாயிற்று.

§கீழ்வாக்யவிவரணம் (சரணாகதியினுடைய) என்றது. “ப்ரார்த்தநாமதிஶ்ஶரணாகதி:” - ப்ரார்த்தநாமதிஶ்ஶரணாகதி:” என்கிற பரிஹாரவாக்யத்துக்கு அர்த்தம் - ப்ரார்த்தநாபுத்திரூப சரணாகதி அதிகாரிவிசேஷணமாய்க்கிடக்கிற வழியாலே இதனுபாயமாயிருக்க இதெங்ஙனே சரணாகதி லக்ஷணவிஷயமாகிறதென்றபடி.

யநுவதிக்கிருர் (ஷட்விதேத்யாதி). ப்ரார்த்தகாமதியை "ப்ரயுஞ்யதாம்" என்று விதிக்கச்செய்தே, அத்தை உபாயமன்றென்று ஸித்தோபாய நைரபேக்ஷ்யபலாத் தள்ளினது கண்டிருக்க, அதுக்கு அங்கங்களைச்சொல்லுகிற அங்க விதியைத் தள்ளுகையில் அருமையில்லையென்று விவக்ஷித்துப் பரிஹரிக்கிருர் (ப்ரார்த்தநேத்யாதி). உபாயநைரபேக்ஷ்யபலத்தாலே இவற்றை அங்கங்களென்ன வொண்ணுதென்று கீழே யருளிச்செய்து, (ஃஃ) பலஸித்யநந்தரம் (ஃஃ) பலாபேக்ஷையில்லாமையாலே அப்போது தவிரலாயிருக்குமது அங்கங்களாமித்தனையாகையால் (ஃஃ) பலதசையிலும் அநுவர்த்திக்கும் ஆநுகூல்யாதிகள் அங்கங்களென்னக்கூடாதென்கிருர் (ஆநுகூல்யஸ்யேத்யாதி). இவ்வாக்யத்துக்கும் அடைவே த்ருஷ்டாந்தமருளிச்செய்கிருர் (ஸ்வர்க்கேத்யாதி). இத்தால், ஸ்வர்க்ககாமனையில்லாதபோது தத்ஸாதந ததங்கங்கள் தவிரலாயிருக்கக்கண்டோமிறே, ஆநுகூல்யஸங்கல்பாதிகளும் அங்கங்களாகில் பலாபேக்ஷையில்லாத தசையில் தவிரலாயிருக்கவேணும் அப்படியிராமையால் அங்கங்களன்றென்று கருத்து. ... ... *

வ்யா.—இதில், முதற்பாட்டில்-அபாகவதரோடு பொருந்தாமை †சொல்லுகிறது. †இவையிரண்டுமுத்தேஶ்யமாறல் க்ரமவிவக்ஷைக்குக்கருத்தென்னென்னில்; †ஆநுகூல்யத்துக்கு அவதியில்லாமையாலே ஸங்கல்பமேயமைந்தது; இதில் முதலடியிட்டானவதும் இஸ்ஸ்வபாவமுண்டானலாகையாலே இத்தை முந்துறச்சொல்லுகிறது. †விரோதித்யாகபூர்வகமாகவிறே உபாயஸ்வீகாரத்தை விதிக்கிறது. (க) "[Telugu script] - பரித்யக்தாமயாலங்கா" என்றும் (உ) "[Telugu script] - த்யக்த்வாபுத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச" என்றுமிறே (உ) "[Telugu script] - ராகவம் சரணம்கதஃ" என்கிறது. †தன்னைப்பேணுதே ப்ரயோஜநாந்தரபரருக்காக உடம்புநோவக்கடல் கடைந்து அமுதத்தைக்கொடுத்த ஸர்வேஶ்வரன், "அந்த அம்ருதத்தோபாதியாகிலும் நம்மைவிரும்புவார் சிலரைக்கிடைக்கவற்றே?" என்று அவஸர ப்ரதீக்ஷணய்க்கொண்டு சாய்ந்தருள, அவனைவிட்டுப் புறம்பே போதுபோக்குகிறவர்களை நானொருவராக புத்திபண்ணியிரேனென்கிருர்.

(நண்ணாத வாளவுணரிடைப்புக்கு) ஆஸுரப்ரக்ருதிகள் நடுவே ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களுக்காகப்போய்ப்புக்கு. †ஸர்வேஶ்வரன் தேவாஸுர விபாகம் பண்ணுகிறவிடத்தில் இவ்விரண்டாகா

(விதிக்கிறது) சரமஶ்லோகத்திலே யென்றபடி. இப்படிக்கநுஷ்டானமும் காட்டுகிருர் (பரித்யக்தா) என்று.

(க) ரா-யு-கக-கூ.          (உ) ரா-யு-கஎ-கச.

ரமுமெங்குமொக்க உண்டாம்படிபண்ணினுயிற்று. அப்போது அர்ஜுநன் "நானெக்கோடியிலே யாகிறேனோ'' என்று சோகிக்க (க) "மாஶுச: ஸம்பதம் தைவீமபிஜாதோஸி பாண்டவ - மாஶுசஸ்ஸம்பதம் தைவீமபிஜாதோஸிபாண்டவ" என்று-உனக்கென், நீஸத்ப்ரக்ருதி யல்லையோ? என்றானிறே. மநுஷ்யராயிருந்தவைத்து ஆஸுரப்ரக்ருதிகளாயிருப்பார் கோடியிலன்றிக்கே இவர்களுடைய ஆஸுரத்வம் ஜந்மப்ரப்ருதியுண்டாயிருக்கை. க்ஷத்ரிய ஜந்மத்திலே பிறந்தவைத்து உக்ரஸேநன் நிலையல்லவாம்படியிறே, கம்ஸனுக்குண்டான ஆஸுரத்வம். †ஈஶ்வரனோடு பொருந்தாமை ஸ்வபாவமாகவுடையராய்த், தாங்கள தக்குமேலே ஸாயுதருமாயிருப்பர்கள். (வாளவுணரிடைப்புக்கு) (உ)*தொடைபொத்த துளபமும் கூடையும் பொலிந்து தோன்றிய தோள் கண்டுபுகுகிறதோ? பரஹிம்ஸை பண்ணுகைக்காகப்பரிகரங்கொண்டிருக்கிறவர்கள் நடுவேயிறே போய்ப் புக்கது.

†இப்படிபோய்ப் புக்காலுமாமிறே தன்வாசியறிவார் சிலர்க்குச் செய்யப்பெற்றதாகில்; (வானவரை) †கார்யகாலத்தில் பற்காட்டி அநந்தரமவனைத்தள்ளி (ரு) "ஈஶ்வரோஹம் - ஈஶ்வரோஹம்'' என்றிருப்பார்க்காகவாயிற்று. †இவனைத் தங்களோடு ஸஜாதீயனாக புத்திபண்ணுதல், அன்றிக்கே, இவனொரு §மூங்கில்வளைத்த போதாக நம்மில் அதிகனென்றிருத்தல் செய்யுமவர்களிறே. †இதில்இன்னும் அந்த ஸஜாதீயபுத்திதானே நன்றிறே. †அவ்வவுணரிலிவர்களுக்கு வ்யாவ்ருத்தி பெரிதல்லவாயிற்று. அவர்கள் இவனுடைய ரக்ஷ்யவர்க்கத்தை அழியச்செய்து கொடுதிரியப் புக்கார்கள், இவர்கள் அவன் பக்கலிலே அபேக்ஷித்தார்களித்தனையாயிற்றுவாசி. † இவர்களுக்குக்கார்யம் செய்தாலுமாமிறே தன்ஸ்வரூபமழியாதபடி கார்யம் செய்யப்பெற்றோமாகில், (பெண்ணாகி) †தன்னை அழியமாறி நிற்கச்செய்தேயும் தூதுபோவது ஸாரத்யம் பண்ணுவதானானிறே. அவ்வளவல்லவாயிற்றிது. (ச) "அஹமஸ்மி மஹாபாஹோ - அஹமஸ்மி மஹாபாஹோ'' என்றும் (ரு) "இமௌ ஸ்ம முநிஶார்தூல கிங்கரௌ ஸமுபஸ்திதௌ - இமௌஸ்ம முநிசார்த்தூல கிங்கரௌஸமுபஸ்திதௌ"என்றும் ருஷிகளேவிற்றுச் செய்வானாகத் தன்னைத்தாழவிட்டுத் திரிந்தவனாயிற்று. புருஷோத்தமனான தன்னையிறே தன்ஸ்வரூபத்துக்குப் போராதபடி அழியமாறிற்று.

(க) கீதை - கசு - ரு. (ரு) கீதை-கசு-கச. (ரு) ரா - அ -
(உ) திருப்பள்ளியெழுச்சி-க0- (ச)
§ மூங்கில் - தநுஸ்ஸு.

†"கிழக்கே ஐயாற்றிலே யாதவராயர் வந்திருக்க, ஜீயர் என்னை † இறையிலிக்காரியத்துக்காக அநேகம் ஶ்ரீவைஷ்ணவர்களோடே கூடப்போகவிட்டார், நானவன் கூடத்திலேவந்து அவஸரம் பார்த்திருக்கச்செய்தே பலரும் வந்தென்னை யநுவர்த்திக்கக்கண்டவாறே, அங்கே மஹாமஹேஶ்வரனுயிருப்பானொருபையல், 'பிள்ளாய் ! நீர் பொருளுக்குக் கடவீர்' என்று கேட்டோம், 'எங்களுடையவற்றிலே அரியல்லால் தேவியில்லை' என்றுண்டாயிருந்தது, அதுக்குப் பொருள் சொல்லவேணும்' என்ன; 'நானிதுக்கு அதிகரித்தேனொருவனல்லேன்' என்ன; 'ஆகிலும் எல்லாந் தெரிந்திராதோ? உமக்கு' என்ன, 'நீ தான் தேவர்க்கொரு உத்கர்ஷத்தையும் ஈஶ்வரனுக்கொரு அபகர்ஷத்தையும் நினைத்துக்கேட்கிறுயாகில் புருஷோத்தமனென்று புராணங்களிற் சொல்லாநிற்க, ஆஶ்ரிதார்த்தமாக அவன்தன்னை அழிய மாறினுனென்ருல் இது அவனுக்கு குணயவா மித்தனை யல்லது தோஷாய வாகாது. இனி ஆண்பிள்ளைச்†சோருள்வியை ஸ்த்ரீ என்று துடர்ந்து திரிவாரைப்போலே துடர்ந்து திரியாநின்ருர் என்று தேவரை அஜ்ஞராக்குவதிற் காட்டில் இது சொன்னவன் அநாப்தன் அஜ்ஞன் என்றிருக்க வமையாதோ?' என்று சொன்னேன்" என்றருளிச் செய்தார். (அமுதூட்டும்) இப்படி யழியமாறினுமாமிறே தன்னையேவிரும்பப்பெற்றதாகில், சரீரத்தைப் பூண்கட்டிக் கொடுப்பதானத்தையிறே விரும்புகிறது. (ஊட்டும்) †கடல் கடைகையும் யத்நிக்கையுமெல்லாம் தனக்குப் பணியாய் இவர்களுக்கவயம் புஜிக்கையிலேயாய், இவர்கள் மிடற்றுக்குக் கீழிழிச்சுமது தனக்கு உபகரித்தார்களாயிருக்கும். "எங்களுக்குஅம்ருதம்வேணும்" என்ருல் அத்தை உத்பாதித்துக் கொடுத்து விடுமத்தனையிறே; அதுக்கீடாயிருப்பதொருவடிவைக்கொண்டு நின்று புஜிப்பிக்கிறதுதான் நீர்மையிறே. உறங்குகிற ப்ரஜையை எழுப்பி யூட்டும் தாயைப்போலே இது தான் தன் பேருக வாயிற்றுச்செய்தது. இப்படி செய்கைக்கு நிபந்தநமென்னென்னில், (பெருமானுர்) சேஷித்வப்ரயுக்தமான ஸம்பந்தமாயிற்று.

(மருவினியவித்யாதி) மருவவினியதேசமாயிற்று. (தண்ணுர்ந்த) ஶ்ரமஹரதை விஞ்சியிருக்கை. அதாகிறது-ஶ்ரீவைகுண்டத்திற் போலே ரக்ஷ்யம்பெற்றிலோமென்னும் குறை தீரும்படியாயிருக்கை. (கடல்மல்லைத்தலசயனம்) ஆஶ்ரிதன் ஒக்கப்பணிசெய்தானென்று

அவனுக்காகவந்து காற்கடைதலைமாடாகவந்து தரையிலே சாய்ந்தருளினவிடமிறே. (உறைவாரை) ஆஶ்ரிதர் விரும்பினவிடமென்று விட்டுப்போகமாட்டாதே நித்யவாஸம்பண்ணுகிறவிடம். அவ்வாஸுர ப்ரக்ருதிகளில் குறையாதார் நடுவேயிறே வந்துகிடக்கிறது. (எண்ணாதேயிருப்பாரை)†திருப்பாற்கடலிலேவந்து சாய்ந்தருளினவன் ஶ்ரீவைகுண்டத்திலே குறைவறவிருக்கக்கடவவவன்,ஸம்ஸாரிகள்நடுவே தன்னைப்பேணாதே சாய்ந்தருளினவிது நமக்காகச்செய்தான். (க)"நின்றிருந்துவெஃகணைக்கிடந்ததென்னநீர்மையே"என்று இத்தை அநுஸந்திக்கவேண்டியிருக்க, இதில் நினைவின்றிக்கே புறம்பே யுண்டுடுத்து காலக்ஷேபம்பண்ணித்திரியுமவர்களை. (இருப்பாரை) †எண்ணாதேயிருக்கையாவதும் ஒழியலாவதும் அதுக்கடியான கர்மக்ஷயம் பிறவாமையாலே; சைதந்யகார்யமிறே †"இப்படிசெய்திலோம்" என்னு மநுதாபம்பிறக்குமது; அதுவுமின்றிக்கே யிருக்குமவர்களை. (இறைப்பொழுதுமெண்ணோமே) †சேதநராயிருந்துவைத்து அஜ்ஞராயிருப்பாரை எண்ணுவதொரு†போதுண்டிறே, அப்போது மெண்ணக்கடவோமல்லோம். †அவஸ்துக்களைப் பரிகணிப்பதொரு†போதுண்டிறே,அப்போதுமெண்ணோம்.அவர்கள் தாங்கள் தங்களைக் கனக்க நினைத்திருந்தார்களாகிலும் அவர்களை ஒன்றாக நினைத்திரோம். †இவர்தாம் நினைக்கிறபோலே அவர்களுக்கு வஸ்துத்வமுண்டாவது. (உ) "மானிடவரல்லரென்றென் மனத்தேவைத்தேன்" என்னக்கடவதிறே. "கல்லிலும்†செம்பிலும் வெட்டிற்று" என்னுமாம்போலே. (ங) †"அடிகளடியேநினையுமடியவர்கள்தம்மடியான்" என்றிறே தம்மைச்சொல்லுகிறது. †ஜ்ஞாநாநந்தங்களன்றுகாணுமிவர்க்கு நிரூபகம்; பாகவதசேஷத்வமாயிற்று. ... (க)

---

அரு.—முதற்பாட்டு (சொல்லுகிறது) என்றவநந்தரம், என்று கொள்வது என்றும்பக்ஷம். (பார்வைக்கு) இத்யாதி வாக்யங்களாலே கீழே க்ரமவிவக்ஷைக்கு ஹேதுக்களருளிச்செய்தாரேயாகிலும், ஹேத்வந்தரங்களருளிச்செய்கைக்கு ப்ரஸ்தத்தைக் கிளப்புகிறார் (இவையித்யாதி). ப்ராதிகூல்யப்ரஸக்தியுள்ளவளவும்ப்ராதிகூல்யவர்ஜநமாகையாலே சரீராவதிகமென்று அல்பகாலஸாத்யத்வத்தைப்பற்ற முற்பட்டதென்றொரு ஹேதுவருளிச்செய்கிறார் (ஆநுகூல்யத்துக்கித்யாதி). ஹேத்வந்தரம் (இதிலித்யாதி). ப்ராதிகூல்யவர்ஜநம் பிறந்தாலிறே ஆநுகூல்ய ஸங்கல்பந்தானுண்டாவதென்று கருத்து. இந்த இரண்டாம் ஹேதுவுக்கு த்ருஷ்டாந்தம் (விரோதித்யாதி வாக்யத்வய

---

(க) தி - ச - வி - ருங. (உ) கக - எ - ௯. (ங) உ - ரு - கo.

மும்). இந்த ப்ராப்யபர ப்ரயோஜநாநுகுணம் பாட்டுக்குத்தொகுத்த பாவம் (தன்னையித்யாதி).

§ அவுணரை "நண்ணாத" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (ஸர்வேஶ்வரனித்யாதி ஆஸுரத்வமென்னுமளவும்). வாக்யார்த்தம் (ஈஶ்வரனோடித்யாதி).

மேலுக்கவதாரிகை (இப்படியித்யாதி). வானோர் எனாதே, "வானவர்" என்றத்தாலே - வானிலிருக்குமவர் அப்படிப்பட்டவரென்று சப்தார்த்தம் விவக்ஷித்து, தாத்பர்யமருளிச்செய்கிறார் (கார்யேத்யாதி). "அவர்" என்றால்-அப்படி "ஈஶ்வரோஹம்" என்றிருப்பாரென்னுமத்தைக்காட்டும்படி ப்ரஸித்தியுண்டோவென்ன; (க) "జృమ్భితం తు ధను ర్దృష్ట్వా శైవం విష్ణుపరాక్రమైః । అధికం మేనిరే విష్ణుం దేవాస్సర్షిగణా స్తదా - ஜ்ரும்பிதந்து தநுர்த்ருஷ்ட்வா ஶைவம் விஷ்ணுபராக்ரமைஃ ! அதிகம் மேநிரே விஷ்ணும் தேவாஸ்ஸர்ஷிகணாஸ்ததா" என்கிற வசநத்தையுட்கொண்டு அருளிச்செய்கிறார் (இவனையித்யாதி வாக்யத்ரயத்தாலே). நம்மிலதிகன் என்னும் ஜ்ஞாநம்பிறந்தபோது ஸஜாதீயபுத்தியுண்டோவென்ன வருளிச்செய்கிறார் (இல்லித்யாதி). விபரீத ஜ்ஞாந நிவர்த்தகமல்லாமையால் ஆதிக்யஜ்ஞாநம் நல்லதன்றென்று கருத்து. இப்படி விபரீத ஜ்ஞாநபூயிஷ்டாரானால் அஸுரர்களிலிவர்க்கு வ்யாவ்ருத்தியில்லாமையாலே இவர்களுக்குக் கார்யம்செய்வானேனென்னென்ன வருளிச்செய்கிறார் (அவ்வவுணரிலித்யாதிவாக்யத்ரயத்தாலே). மேலிதற்கு ஈடுபாடாகத் தாத்பர்யம் (இவர்களுக்கித்யாதி). ஆஶ்ரிதர்க்காகத் தன்னை யழியமாறுகை அவனுக்கு ஸ்வபாவமாயிருக்க இதுக்கு ஈடுபடவேணுமோவென்ன வருளிச்செய்கிறார் (தன்னையித்யாதி).

§ (இறையிலி) மாந்யம். (சோறுள்வி) சோறுக்குமவள். ஸ்த்ரீவேஷங்கொண்டிருக்கும் புருஷனென்றபடி. கொடுக்குமென்னாதே, "ஊட்டும்" என்றதுக்கு உட்கருத்தருளிச்செய்கிறார் (கடலென்றுதுடங்கி, ஸம்பந்தமாயிற்று என்னுமளவும்).

"பெருமானார் தலசயனத்துறைவாரை" என்றபதங்களில் பலிதார்த்தங்களையுமுட்கொண்டு, எண்ணாது என்னாதே "எண்ணாதே" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருப்பாற்கடலிலேயித்யாதி). "எண்ணாதே" என்ற ஏவகாரத்துக்கு ஸஹேதுகமாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எண்ணாதேயித்யாதி). "இருப்பார்" என்ற அம்சத்துக்கு (இப்படியித்யாதி). "இறைப்பொழுதும்" என்றதுக்கு உட்கருத்து (சேதநரித்யாதி). (போதுண்டிறே). என்று ஸஹவாஸ வர்ஜநார்த்தமாகவெண்ணும்போதுண்டென்றபடி. "எண்ணேமே"

---

§ (நண்ணாத) "நண்ணாத" என்றபோதே இவ்வர்த்தம் ஸித்தமாயிருக்க "அவுணர்" என்னவேண்டுவானேனென்னில்; (ஸர்வேஶ்வரன்) என்று. § இப்படி யழியமாறினால் புருஷோத்தமத்வத்துக்கு அழிவுவாராதோ வென்ன; (கிழக்கே) என்று. அநுதாபம்பிறக்கிறது சைதந்யகார்யமிறே என்றபடி.

---

(க)

என்ற ஏவகாரத்துக்கு வ்யாவர்த்யம் காட்டுகிறார் (அவஸ்துக்களையித்யாதி). "எண்ணேம்" என்று உத்தமனுக்குபாவம். (அவர்களித்யாதி). எண்ணேனேயென்னுதே பூஜ்யதை தோற்ற பஹுவசந ப்ரயோகம் பண்ணினதுக்கு ஹ்ருதயமருளிச்செய்கிறார் (இவர்தாமித்யாதி). (செம்பிலும்) தாம்ரசாஸநத்திலும். §இனி யெண்ணுகைக்கு விஷயந்தானென்னென்ன, அருளிச்செய்கிறார் (அடிகளித்யாதி). பாசுரார்த்தம் (ஜ்ஞாநேத்யாதி). ... ... (க)

---

வ்யா.—இரண்டாம்பாட்டு. (பார்வண்ணமித்யாதி) †நீர்பொருந்தாதாரை †இன்னாரென்றறிந்தோம், நீர் பொருந்துவாரும் † § சிலருண்டோவென்ன; அவர்கள் ஜந்மவ்ருத்தாதிகளைக்கொண்டு கார்யமில்லை, அவர்கள் தாங்களாரேனுமாகவமையும், † இதுண்டாமித்தனையே அவர்கள் நம்மை நிர்வஹிக்கைக்கென்கிறார். †நீர் ப்ரதிகூலர் விஷயத்தி†லிருக்கும்படி யறிந்தோம், அநுகூலர்விஷயத்திலிருக்கும்படி யென்னென்ன; †அங்கு †நமக்கெண்ணுகைக்கும் எண்ணுமைக்கும் ப்ராப்தியில்லை, †இதுக்கெல்லாம் †கடவாரவர்களென்கிறார்.

(பார்வண்ணமடமங்கை) பூமியைத் தனக்கு ப்ரகாரமாகவுடையளாய், க்ஷமாதிகுணங்களாலே குறைவற்றிருந்துள்ள ஸ்ரீபூமிப்பிராட்டி. (பனிநன்மாமலர்க்கிழத்தி) ஸ்ரமஹரமாய் விகஸிதமாய் அழகிதாயிருந்துள்ள தாமரைப்பூவை ஜந்மமாகவுடையவள். இவர்கள் (நீர்வண்ணன்மார்வகத்திலிருக்கையைமுன்நினைந்து) ஸ்ரமஹரமான திருமேனியில் இடவருகைப்பற்றவும் அத்திருமார்வைப்பற்றவுமிருக்கிறவிருப்பையுமநுஸந்தித்து. [நீர்வண்ணன் மார்வகத்தில் பனிநன்மாமலர்க்கிழத்தி] என்றந்வயமாகவுமாம். மாதாபிதாக்கள் சேரவிருந்தால் ப்ரஜைகளுக்குக் கடுகச்சென்று கிட்டலாயிருக்குமிறே. (அவனூரித்யாதி) †அவன் பரமபதத்தைவிட்டு நித்யவாஸம் பண்ணுகிற ஸ்ரமஹரமான திருக்கடல்மல்லையை. கறுத்தநிறத்தையுடைத்தாய்ப் †பழையதாயிருந்துள்ள †மூத்துமுதிர்ந்துள்ள †முந்நீருண்டு - கடல், அதினருகேயிறே. (ஆரெண்ணும்நெஞ்சுடையார்) ஏதேனும் ஜந்மமாகவுமாம், ஏதேனும் வ்ருத்தமாகவுமாம், ஏதேனும் ஜ்ஞாநமாகவுமாம், இவ்விடத்தை எண்ணும் நெஞ்சுடையாராமித்தனையே வேண்டுவது. (அவரித்யாதி) அவர்கள் நின்றநிலைகளிலே, †ப்ரமாணங்காட்டாதே. நம்மைக் கார்யங்கொள்ளவுரியார். ...(உ)

---

§ ஆனால் என்று மவர்களை ஆதரிப்பர்களோ வென்ன; (அடிகள்) என்று.
§ (பா) சிலருண்டே.

அரு.—இரண்டாம்பாட்டு. "கடல்மல்லைத்தலசயனம் எண்ணும் நெஞ்சுடையார்" என்னவமைந்திருக்க, "ஆரெண்ணும்" என்கையாலே-ஜந்மவ்ருத்தங்களில் எவ்வகைப்பட்டாரேயாகிலும் அவர்கள் என்று சப்தார்த்தமாய் அத்தைப்பற்ற ப்ரஶ்நப்ரதிவசநமுகத்தாலே தாத்பர்யமருளிச்செய்கிருர் (நீர் பொருந்தாதாரை யித்யாதி). (இன்றுரென்றறிந்தோம்) என்றதுக்கு-எத்தனை தேஹாநுபந்திகளாகிலும் எண்ணுதாராகில் அவர்களையெண்ணேம் என்று நின்றீர் என்றறிந்தோமென்று கருத்து. §(சிலருண்டோ) என்றதுக்கு - எண்ணுமவர்களான திருமேனிஸம்பந்திகளுண்டோவென்று கருத்து. (இது) என்றது-இச்சேர்த்தியே உத்தேஶ்யமென்றபடி. §"எண்ணுதாரையெண்ணோமே" என்றவோபாதி எண்ணும்நெஞ்சுடையாரையெண்ணுவோமே என்னவேண்டாவோ, "ஆள்வாரே" என்றதேதென்ன; அதுக்கு ப்ரஶ்நப்ரதிவசநமுகேந பாவமருளிச்செய்கிருர் (நீர் ப்ரதிகூலர்விஷயத்திலித்யாதி). (இருக்கும்படியென்னென்ன) என்றது - எண்ணும்படியென்றபடி. அவர்களை ஸத்துக்களாக எண்ணியிருப்பீரோவென்றுகருத்து. (அங்கு) அந்த பாகவதவிஷயத்திலென்றபடி. (நமக்கெண்ணுகைக்கும் எண்ணுமைக்கும் ப்ராப்தியில்லை) என்றதுக்கு - அவர்களை ஸத்துக்களென்று எண்ணுகையும் எண்ணுமையும் நமக்குக்கூடுமோ, அவர்களுடைய வெண்ணுகையாலும், எண்ணுமையாலும் நம்முடைய ஸத்வாஸத்வங்களென்று கருத்து. (இதுக்கெல்லாம்) எண்ணுகைக்கும் எண்ணுமைக்குமென்கை. (கடவர்கள்) என்றது - நம்மை ஆட்கொண்டு ஸத்தையை நடத்துமவர்கள் என்கை.

அவன்" என்றதுக்கு - வேதாந்தப்ரஸித்தனே பரமவ்யோமநிலயனென்று தாத்பர்யம்விவக்ஷித்து, "அவனூர்" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிருர் (அவனித்யாதி). (பழையதாயிருந்துள்ள) என்றது-"முது" என்றதின்பலிதார்த்தம். (மூத்துமுதிர்ந்த) என்றது - சப்தார்த்தகதநம். (மூந்நீருண்டு) என்றது - ஆற்றுநீர், ஊற்றுநீர், வர்ஷஜலம், ஆக மூன்று வகைப்பட்ட நீரென்றபடி. (ப்ரமாணம் காட்டாதே) கைங்கர்யத்திலிவ்வளவு இவ்வளவு என்னும்படிதானேயென்கை. ... ... ... ... (உ)

மூ.—ஏனத்தினுருவாகி நிலமங்கை யெழில்கொண்டான்
வானத்திலவர் முறைமையால் மகிழ்ந்தேத்திவலங்கொள்ளக்
கானத்தின் கடல்மல்லைத் தலசயனத்துறைகின்ற
ஞானத்தினொளியுருவை நினைவாரென்நாயகரே (௩)

---

§ (சிலருண்டோ) அவர்கள் உத்க்ருஷ்ட ஜந்மவ்ருத்தவான்களாகவேணுமோவென்ன என்று பூரித்துக்கொள்வது. ஸங்கத்யந்தரம் (நீர்ப்ரதிகூலர்) என்றது. (இருக்கும்படி யென்னென்ன) என்றதுக்குத்தாத்பர்யம் - நீரவர்களை எண்ணுவீரோவென்றபடி. இதுக்கெல்லாங்கடவர்கள் என்று ஸத்தைக்கெல்லாங்கடவர்களவர்களென்றபடி. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஏனத்துருவாகி | வராஹரூபியாய் | கானத்தின் | (மேற்புறத்திலே) காட்டையும் |
| நிலமங்கை | ஸ்ரீபூமிப்பிராட்டியுடைய | கடல் | (கீழ்ப்புறத்திலே) கடலையுமுடைத்தான |
| எழில் | அழகு (அழியாதபடி) | மல்லை | மல்லாபுரியிலே |
| கொண்டான் | (அண்டத்தில் நின்றும்) ஒட்டுவிடுவித்து எடுத்துக் கொண்டவனாய், | தலசயனத்து | ஸ்தலசயநத்திலே |
| | | உறைகின்ற | கண்வளர்ந்தருளுமவனாய், |
| வானத்திலவர் | ப்ரஹ்மாதிதேவர்கள் | ஞானத்தின் ஒளியுருவை | ஜ்ஞாநப்ரகாசகமான விக்ரஹத்தையுடையவனை |
| முறையால் | தங்கள் தங்களுடைய அதிகாராநுகுணமாக | நினைவார் | நினைப்பவர்கள் |
| மகிழ்ந்து | ஸந்துஷ்டசித்தராய்க்கொண்டு | என் | எனக்கு |
| ஏத்தி | ஸ்தோத்ரம்பண்ணி | நாயகர் | ஸ்வாமிகளாவர். (௩) |
| வலம்கொள்ள | அநுகூலவ்ருத்திகளைப் பண்ணும்படிக்கீடாக | | |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (ஏனமித்யாதி) †அப்போதேறிட்டுக் கொண்ட வடிவைக் காட்டிப் பழைய வடிவை யழித்தான், அபிமதவிஷயத்தோடே கலக்கைக்காக அவர்களுகக்கும் படியே ஒப்பிப் பாரைப்போலே. †படுக்கைப் பற்றை நோக்கி ப்ரதாநமஹிஷிகள் பக்கல் முகம்பெறுவாரைப் போலே, மஹாவராஹமான வடிவிலெழிலைக்காட்டி இவளெழிலைக் கொண்டான். †பூமிப்பிராட்டி யுடைய விபூதியை ப்ரளயங் கொள்ள, அத்தை எடுக்கைக்காக நீருக்கும் சேற்றுக்கு மிறாயாத வடிவைக் கொண்டு வந்து எடுத்து †நோக்கி, "நித்யஸூரிகள் நடுவே ஓலக்க மிருக்கக் கடவவன் இவ்வடிவைக் கொண்டது நமக்காகவிறே" என்று அந்நீர்மையிலே தோற்று எழிலிழந்தாளாயிற்று. (வானத்திலவர்) பரமபதத்தில் நித்யஸூரிகள். (முறையால் மகிழ்ந்தேத்தி) "இது நன்று" என்னும் புத்தியாலேயிறே இங்குள்ளாரேத்துவது, ப்ரீதிபூர்வகமாக ஏத்துவாரவர்களிறே. (முறையால்) எங்கேனும் புகுரிலும் முறைதப்பாமலேத்துமவர்களிறே அவர்கள். பரமபதத்திலடிமைசெய்யும் க்ரமத்திலே ஏத்தி †அநுகூலவ்ருத்தி பண்ண. (கானத்து இத்யாதி) ஸ்ரீபூமிப்பிராட்டி எழிலிழக்க, நித்யஸூரிகளேத்தாநிற்க, இவற்றையடையக் காற்கடைகொண்டு தன் ஜாதிக்கநுரூபமாகக் காட்டை விரும்பினானாயிற்று. ஏனமானதுக்கநுரூபமாகக் காட்டைவிரும்பினான். (கடல்மல்லைத்தல



சயனத்து) †"ப்ரளயம்வந்தால் உதவப்பார்த்திருக்கிறவனென்றுதி... என்று ஏற்கவே இவற்றை ரக்ஷிக்கும்படியை யநுஸந்தித்துக் கொ ண்டிருக்கிறவனை. (ஞானத்திளொளியுருவை) †ஜ்ஞான†ஸ்வரூபனாயுள் ளவனை. (நினைவாரென்நாயகரே) ஒருதலைக் காமமாய்ப் போகாமே "இவன்வந்து கிடக்கிறது நமக்காக" என்று தாங்களும் நினைக்கு மவர்கள் எனக்கு ஸ்வாமிகள். †அவர்களாளாதபோது வேறு சிலர் க்கு சேஷபூதரல்லோம். ... ... ... (ங)

அங.—மூன்றாம்பாட்டு. (எனத்தினித்யாதி) (க) * அல்லிமலர்மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமவன் என்று சொல்லுகையாலே - பெரிய பிராட்டியார்க்குப் புருஷகாரத்வமும் கைங்கர்யவர்த்தகத்வமும் கூடிற்றேயா கிலும், (உ) * பார்வண்ண மடமங்கைக்கு அவையுண்டென்கைக்கு பதிவால லப்யம்கண்டதுண்டோவென்ன வருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

§ "ஆகி" என்ற அபூததத்பாவனுக்கு பாவம் (அப்போதித்யாதி). (படுக் கைப்பற்று) ஸ்த்ரீகளுடைய மஞ்சள்காணி. கீழ்வாக்யவிவரணம். (பூமியித் யாதி). (நோக்கி) என்றவநந்தரம், இருக்க என்றுசேஷம். §"வலங்கொள்ள" என்றதினர்த்தம் (அநுகூலவ்ருத்திபண்ண) என்றது. இப்போது "ஞானத்தி னொளியுருவை" என்றதுக்குத்தாத்பர்ய கதநமுகேநவருளிச்செய்கிறார் (ப்ர ளயமித்யாதி). சப்தார்த்தம் (ஜ்ஞாநேத்யாதி). (ஸ்வரூபன்) என்றது - ஸ்வம் மான அஸாதாரணதர்மமாகவுடையவனென்கை. §"நாயகரே" என்ற எவ காரதாத்பர்யம் (அவர்களித்யாதி) ... ... ... ... (ங.)

மூ—விண்டாரை வென்றாவி விலங்குண்ண மெல்லியலார்
கொண்டாடு மல்லகல மழ லேற வெஞ்சமத்துக்
கண்டாரைக் கடல்மல்லைத் தலசயனத் துறைவாரைக்
கொண்டாடும் நெஞ்சுடையா ரவரெங்கள் குலதெய்வமே. (ச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| விண்டாரை | சத்ருக்களை | உண்ண | உண்ணும்படியாகவு [ம் |
| வென்று | நிரஸித்து, (அவர்களுடைய) | மெல்இயலார் | ம்ருதுஸ்வபாவைகளா ன ஸ்த்ரீகள் |
| ஆவி | சரீரத்தை [ங்கள் | கொண்டு | விரும்பி |
| விலங்கு | நாய்நரிமுதலிய ம்ருக | | |

§ (பழையவடிவை யழித்தான்) என்றது - "நிலமங்கையெழில் கொண் டான்" என்றத்தைப்பற்ற. § ஆகையாலே பரமபதத்திலடிமை என்று கூட்டு வது. §கீழ்ப்பாட்டில் வ்யாவ்ருத்தி (அவர்களாளாதபோது) என்றது. ...(ங)

(க) தி - வாய் - ங - கo - கஅ. (உ) தி - நெ - கஅ.

| | | | |
|---|---|---|---|
| ஆழ்ம | அணைக்கத்தக்க | கடல்மல்லைத்த | திருக்கடல்மல்லையில் |
| மல் | மிடுக்கையுடைய | லசயனத்து | ஸ்த்தலசயநத்தி |
| அகலம் | (ராவணனுடைய) மார்வத்தை | றைவாரை | லே பள்ளிகொண்டருளுமவரை |
| அழல் | அக்நியானது | சொண்டாடும் | நெஞ்சுடனேகொண் |
| ஏற | ஏறி (புஜிக்கும்படியாகவும்) [லே | நெஞ்சுடையார் | டாடுமவர்கள்யாவர்சிலர் |
| வெஞ்சமத்து | க்ரூரமானயுத்தத்தி | அவர் | அவர்கள் |
| கண்டாரை | பார்த்தவராய், (அந்தஸ்ரமமாறும்படி. | எங்கள்குலதெய்வம் | எங்கள்குலத்துக்குத்தெய்வங்களாவர். |

வ்யா.—நாலாம்பாட்டு. (விண்டாரைவென்று) †அவன் ப்ரதிபக்ஷநிரஸந ஸமர்த்தனாயிருக்கச்செய்தே ஆநுகூல்யத்தாலே கார்யங்கொள்வானாக நினைத்துவந்து கிடக்கிறபடியை அநுஸந்தித்து ஈடுபடுமவர்கள் என்னொருவனளவன்றிக்கே என்குலத்துக்காக நாதராவர்களென்கிறார்.

(விண்டாரைவென்று) †நல்லவார்த்தை சொல்லச்செய்தேயும் (க) "ந நமேயம், நநமேயம்" என்றிருப்பானாயிற்று வெல்லுவது. †வாலியை நிரஸித்து, கடலை யணைசெய்து, ஊரைச்சூழப் போந்து, லங்கையை அடைமதிட்படுத்தி, "இனித்தான் அநுகூலிக்குமோ?" என்று அங்கதப்பெருமாளைப் போகவிட்டு, நல்வார்த்தை சொல்லுவித்து, அதுவுங்கேளாதொழிய, பையல் கண்முகப்பே பரிகரத்தையடைய நிரஸித்து, அதுக்குப் பொருந்தாதே வந்தெதிரிட, நிராயுதனாக மிடுக்கறுத்துப் பண்ணிவிடச் செய்தேயும் பிற்றைநாளும்வந்து "என்னைக்கொல்லவமையும்" என்னப்பின்னையிறேகொன்றது. †விண்டாரையாயிற்று வெல்லவல்லது. ஆநுகூலசங்கை யுள்ளவிடங்களில் (உ) "ஸுக்³ரீவம் ஶரணம் க³த:, ஸுக்ரீவம்சரணங்கத:" (ங) "ஸுக்³ரீவம் நாத²மிச்ச²தி - ஸுக்ரீவம்நாதமிச்சதி" என்றுதான் சரணம்புகாநிற்கும். †"பெருமாள் (ச) 'ந த்யஜேயம் கத²ஞ்சந - நத்யஜேயம் கதஞ்சந' (ரு) 'ஏதத் வ்ரதம் மம - ஏதத்வ்ரதம்மம" என்று நின்றார்; மஹாராஜர் (சு) 'வத்⁴யதாம் - வத்யதாம்' என்றேநின்றார் என்று இவ்விடத்துக்கு பட்டருளிச் செய்யும்படி. இருவரும் சரணாகத ரக்ஷணத்துக்குப் †பிணங்குகிறார்கள். (ஆவிவிலங்குண்ண) †அவர்கள்பேணிப் போந்த ப்ராணன்களைக் கழுகும் பருந்தும் பற்றிமுடிக்க, †அதாவதென்னெ

(க) ரா-யு-ங௬-கக (ங) ரா-கி-ச-கரு. (ரு) ரா-யு-க அ-ஙங-
(உ) ரா-கி-ச-க அ. (ச) ரா-யு-க அ-ங- (சு) ரா-யு-கஎ-உ௬.

னில்; †குற்றுயிராகக்கிடக்கிற ஸமயத்திலே இவை வந்து மேலிட்ட படியாலே சேஷித்த ப்ராணங்களவற்றோடே போகையைச் சொல்லுகிறது. (மெல்லியலாரித்யாதி)†ஸ்த்ரீகளாதரிக்க அத்தாலேபேணி வளர்ந்து போந்தமார்விலே, † துஷ்டஸத்வங்களைக்கண்ட நாய்கள் மேல்விழப் பிற்காலிக்குமாபோலே பிற்காலித்துப்போந்த அக்நிதத்வமானது வந்து ப்ரவேசிக்க. (வெஞ்சமத்து மல்லகல மழலேறக் கண்டவாரை) தனியிடத்திலே அநுகூலவேஷத்தோடேவந்து தோற்றி வஞ்சகரான பையல்களைக் கூட்டிக்கொடுவந்து ராஜபுத்ரர்களை யகற்றிக் களவிலே பிடித்துக்கொண்டுபோன பையல்களைப் போலன்றிக்கே நேரே செவ்வைப்பூசலிலே. பிராட்டிதானும் "†உடோ! வாராய்! வீரர்கள் வர்த்திக்கும் வழியல்லகாண் நீ செய்தது" என்றாள். (அழலேறக்கண்டாரை) (௧) † [அத்யவைரப்யாலங்காம் ப்ரவிஷ்டாஸ்ஸூர்யரஶ்மய: - அத்யவைகிர்ப்பயாலங்காம் ப்ரவிஷ்டாஸ்ஸூர்யரஶ்மய:] என்கிறபடியே - அவன் படுக்கிடக்கத் "துணுக்கென்றெழுந் திருக்கும்" என்றுபார்த்து "உன்னெல்லைக்குள்ளே ஆதித்ய கிரணங்கள் வந்து புகுராநின்றனகிடாய்" என்றாளிறே. அப்படி மதிப்பனாயிருக்கிற அவனுடைய மார்விலே அக்நியை ப்ரவேசிப்பித்து. (கடல் மல்லைத் தலசயனத்துறைவாரை) "ஸாமத்துக்குச் செல்லாதாகி லன்றோ தண்டத்துக் கிழியவேண்டுவது" என்று வளைப்புக்கிடக்கிறவரை. (கொண்டாடும் நெஞ்சுடையார்) "இவரென்ன அபேக்ஷையாலே வந்துகிடக்கிறார், நமக்காகவிறே" என்று (உ) "நின்றிருந்து வெஃகணைக்கிடந்த தென்னநீர்மையே" என்று இதிலே ஈடுபடுவர்கள். (எங்கள் குலதெய்வம்) (௬) †"குலதைவதம் பாதாரவிந்தம் - குலைதைவதம்தத்பாதாரவிந்தம்" என்னுமளவிலல்ல எங்களது. ... ... ... ... ... ... ... (ச)

அரு.—நாலாம்பாட்டு. (விண்டாரையித்யாதி) நிலமங்கைக்காகச்செய்த செயல்மாத்ரமன்றிக்கே, நிலமகளான மலர்மங்கைக்காகச்செய்த ராவண நிரஸநத்தை யநுஸந்திக்கைக்கு ப்ரசுரதோபயோகம் காட்டாநின்றுகொண்டு, தொகுத்ததாத்பர்யத்தை யருளிச்செய்கிறார் (அவன் ப்ரதிபக்ஷேத்யாதி).

விள்ளுகை - ஒட்டற்றுப்போகையாய், அதுவே நிரூபகமாகச்சொல்லுகையாலே, எத்தனைஸமாதாநம்பண்ணினாலும் நெஞ்சில்கலவாதேவிண்டே

(௧) ரா-யு-௧௧௪-அரு. (உ) தி-ச-வி-௬௩. (௩) ஸ்தோ-௩-௬.

போகை தோற்றுகையாலே, அத்தையருளிச்செய்கிறார் (நல்லவித்யாதி). இவர்தாம் நல்லவார்த்தைசொன்னதுண்டோ, ராவணன் நல்வார்த்தைதக்கிசைவனோவென்ன,(வாலியையித்யாதி). "விண்டாரைவென்று"என்றதினாலே தானே விள்ளாதார்க்குத் தோற்பன் என்று தோற்றுகையால், அத்தையருளிச்செய்கிறார் (விண்டாரையாயிற்றித்யாதி). பெருமாளும் சரணம்புகுந்தார் என்கைக்கு ஐதிஹ்யம் (பெருமாளித்யாதி). (பிணங்குகை) விவாதம் பண்ணுகை. (பிணங்குகிறார்கள்) என்றவநந்தரம், என்று - என்றுசேஷம். "விலங்கு" - திர்யக்காய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவர்களித்யாதி). சரீரத்தையுண்ணுமதொழிய ப்ராணனையுண்ணுமோ வென்னும் சங்கையை அநுவதிக்கிறார் (அதாவதித்யாதி). (குற்றுயிர்) குறுகினவுயிர். "மெல்லியலார்" ம்ருதுவாயிருக்கிறவார்த்தையுடையாரென்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்த்ரீகளித்யாதி). (துஷ்டஸத்வம்) வ்யாக்ராதிகள். "வெஞ்சமம்"யுத்தமாய்,இப்படி விசேஷணத்துக்கு வ்யாவ்ருத்திபூர்வகம் பாவமருளிச்செய்கிறார் (தனியிடத்திலேயித்யாதி). (உடோ) ஸம்போதநம், "கண்டாரை" என்கையாலே - காணுதநுகண்டாரென்று தோற்றுகையாலே, ஸத்ருஷ்ட்டாந்தமுபபாதிக்கிறார் (அத்யேத்யாதி). "எங்கள்" என்றபதவாஸனை (குலதைவதமித்யாதி). ... ... ... ... (ச)

ரு—பிச்சச்சிறுபீலிச்சமண்குண்டர் முதலாயோர்
விச்சைக்கிறையென்னு மவ்விறையைப் பணியாதே
கச்சிக்கிடந்தவனூர் கடல்மல்லைத் தலசயனம்
நச்சித் தொழுவாரை நச்சென்றன் நன்னெஞ்சே. (ரு)

| பதம். | உரை. |
|---|---|
| பிச்சம் | திரளானமயிலிறகை |
| சிறு | சிறிய [யும் |
| பீலி | மயில்தோகையையுமுடைய |
| சமண்குண்டர் | அமணரானநீசர் |
| முதலாயோர் | முதலானவர்கள் [ம் |
| விச்சைக்கு | ஸகலவித்யைகளுக்கு |
| இறையென்னும் | நிர்வாஹகனென்றொருவனைக்கைக்கொள்ளுமவர்கள்; |
| அவ்விறையை | அவர்களால் ஏற்படுத்தப்பட்டவனை |
| பணியாது | ஆஸ்ரயியாமல், (ஆஸ்ரிதர்க்காக) |
| கச்சி | திருவெஃகாவிலே |
| கிடந்தவன் | கண்வளர்ந்தருளுமவ |
| ஊர் | (ஆஸ்ரிதனைபுண்டரீகருஷிக்காக எழுந்தருளின) ஊரான |
| கடல்மல்லைத்தலசயனம் | திருக்கடல்மல்லையில் ஸ்தலசயநத்திலே (பள்ளிகொண்டருளுகையை) |
| நச்சி | ஆசைப்பட்டு |
| தொழுவாரை | தொழுமவர்களை |
| என்றன் | என்னுடைய |
| நல் | விலக்ஷணமான |
| நெஞ்சே | மநஸ்ஸே! |
| நச்சு | (நீயும்) ஆசைப்பட்டுத்தொழு. (ரு) |

வ்யா — அஞ்சாம்பாட்டு. (பிச்சச்சிறுபீலிச்சமண்குண்டா) கீழுலக்கிடாகக் கையிலேபிச்சத்தைப்பிடித்து ஒருகையிலே †பீலித்தழையைப்பிடித்துக், கண்டார்க்கு "இவர்களும் சில†தார்மிகரோ" என்று தோற்றுப்படி அநுகூலவேஷத்தைப்பரிக்ரஹித்து. (சமண் குண்டர்) அமணதர்சநத்தைத் தரித்துக்கொண்டுநிற்கிறநீசர். குண்டு என்று-ஆழமாய், அத்தால் தாழ்ச்சியைச்சொல்லிற்றாய், நீசரென்றபடி. வேதபாஹ்யரான நீசர். (முதலாயோர்) முதலானோரென்றபடி. அவர்கள் தொடக்கமான பௌத்தரையும், லோகாயதிகரையும் நினைக்கிறது. (விச்சைக்கிறையென்னும்) †வைதிகஸமதிகம்யனை ஈஶ்வரனை இல்லையென்று ஸர்வஜ்ஞனென்றொருவனைக்கல்பிப்பர்கள்; பின்னை அவனுடைய ஸர்வஜ்ஞத்வத்துக்கு ப்ரமாணம்தேடவேண்டிவரும்; அது தன்னைத்தந்தாமுடைய உக்திகளாலே ஸாதிக்கப்பார்ப்பர்கள், அதுபின்னை அப்ரமாணமாய் அது இல்லையாய்க்காட்டும்; வித்யைக்கு நிர்வாஹகனென்றொருவனைக்கொள்வர்கள். (அவ்விறையைப் பணியாதே) அவ்விறையென்று முகத்தைத் திரியவைத்துச்சொல்லுகிறார். (பணியாதே) ஆப்தனென்றுகொண்டு அவர்கள் சொல்லுகிறவற்றை ஆஶ்ரயித்துவர்த்தியாதே. (கச்சியித்யாதி) †ஆஶ்ரிதர்க்காகத் திருவெஃகாவிலே படுக்கைமாறிக் கைமாறிக்கிடந்தவனை. †ஓராஶ்ரிதனுக்காகத்தரைக்கிடைகிடக்கிறதேசம். அவன் தனக்குப் பரமப்ராப்யமாகக்கொண்டுவந்துநிற்கிறதேசத்தை. (நச்சித்தொழுவாரை) கர்த்தவ்யமென்றுதொழாநிற்கச்செய்தே புறம்பே நெஞ்சு அந்யபரமாயிருக்கையன்றிக்கே, ஆசையின்கார்யம்தொழுகை என்று தோற்றும்படியிருக்கை. திருக்கடல்மல்லையைத் தொழுகிறவர்களுடைய †அவ்வேற்றமெல்லாம் நமக்குடலாக அவர்களை ஸ்நேஹி.(என்றன்நன்னெஞ்சே) †இதுசொல்லுகிறது என்சாபலமிறே. என்னுடைய உபதேசநிரபேக்ஷமாக முன்னே ப்ராவண்யத்தையுடையையாயிருக்கிற உனக்குச்சொல்லவேண்டாவிறே. எனக்குங்கூடவழிகாட்டுகிற உனக்கு நான் வழிகாட்டுகிறேனோ. (க) "மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்த மோக்ஷயோ:. மநஏவமநுஷ்யாணாம்காரணம்பந்தமோக்ஷயோ:" என்னக்கடவதிறே. (௫)

அ௫.—அஞ்சாம்பாட்டு (பிச்சச்சிறுபீலியித்யாதி) "கொண்டாடும் நெஞ்சுடையார் எங்கள்குலதெய்வம்" என்று தம்முடைய ஸித்தாந்தத்தைத் தா

(க) வி - பு - ௬

மநுஸந்திக்கவே; (க) "சஞ்சலம்ஹிமந:-சஞ்சலமஹிமந:" (உ) * நின்றவாநில்லா நெஞ்சன்றே, நமக்கு இவ்விபூதியிலே இது நிலைநிற்கவற்றே, அவைநிகஸம யங்கள் பல நடமாடாநிற்கிறதே" என்று தம்நெஞ்சைச் சேரப்பிடித்துக்கொ ண்டு உபதேசிக்கிறரென்று ஸங்கதி

பிச்சத்தை - திரளானமயிலிறகை. அல்பமான மயிலிறகு - (பீலித்தழை) என்றது. (தார்மிகரோ) என்றது, ஜந்துக்களைமிதிக்கவொண்ணுது என்று வழிபொறுக்கிக்கொண்டு போருகையைப்பற்ற. "விச்சைக்கு" வித்யைக்கு. "இறையென்னும்" என்றத்தாலே - அவர்களிலொருவனைச்சொல்லுமத்தனை போக்கி வேறில்லையென்றுதோற்றுகையாலே, அதுக்கு ப்ரஸக்திபூர்வகம் தாத் பர்யமருளிச்செய்கிறர் (வேதைகேத்யாதி). (ஆஸ்ரிதர்க்கு) என்றது - திருமழி சைப்பிரான், கணிகண்ணனென்பான் இவர்களுக்கென்றபடி. (ஓராஸ்ரித னுக்காக) ஸ்ரீபுண்டரீகனுக்காக. (அவ்வேற்றமெல்லாம் நமக்குடலாக) என் றது - அவர்கள் பகவத்விஷயத்திலே பண்ணுமவையெல்லாம் நமக்காகப் பண்ணுகிறர்களென்று ஸ்நேஹியென்னுதல், அவையெல்லாம் நமக்கு அவர் கள்விஷயத்திலே யுண்டாம்படி ஸ்நேஹியென்னுதல். முந்துற்றநெஞ்சான தம்முடையநெஞ்சை அதிசங்கைபண்ணி "அவ்விறையைப்பணியாதே" என் றும் "நச்சு" என்றும் சொல்லுகை யெங்ஙனே சேருமது? ஒருபடிசேர்ந்தா லும் இப்போது, "நெஞ்சே" என்றது சேருமோவென்ன; அத்தைப்பரிஹ ரிக்கிறர் (இதுவித்யாதி). இத்தால் - நன்னெஞ்சாகையாலேதானே த்ருடீ கரணத்துக்காகச்சொன்னதும் சாபல்யப்ரயுக்தமென்றதாயிற்று. ... (கு)

மூ.—புலன்கொள்நிதிக்குவையோடுபுழைக்கைமாகளிற்றினமும்
நலங்கொள்நவமணிக்குவையுஞ்சுமந்தெங்குநான்றுசிந்து
நலங்களியங்கும்மல்லைக்கடல்மல்லைத்தலசயனம்
வலங்கொள்மனத்தாரவரைவலங்கொள்ளென்மடநெஞ்சே. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| புலன் | இந்த்ரியங்களை [ளுகிற | நலங்கொள் | நன்றான |
| கொள் | தன்வசமாக்கிக்கொள் | நவமணிக்கு வையும் | நவரத்நத்திரளையும் |
| நிதிக்குவையோடு | பொற்குவியலோடு | சுமந்து | தாங்கி |
| | | எங்கும் | பார்த்தவிடமெங்கும் (எறினசரக்கின் கனத்தாலே) |
| புழை | துளையையுடைத்தான | | |
| கை | கையையுடைத்தாய் | நான்று | தாழ்ந்து |
| மா | பெரிதாயிருந்துள்ள | சிந்து | அலையாநின்றுள்ள |
| களிற்றினமும் | யானைத்திரளையும் | [redacted]கள் | ஓடங்கள் |

(க) கீதை - சு - ருச. (உ) க - க - ச -

| | | | |
|---|---|---|---|
| இயங்கும் | ஸஞ்சரிக்கிற | வலங்கொள்மன த்தாரவரை | ப்ரதக்ஷிணம்பண்ணு கைஸ்வரூபப்ராப்த மென்றுநினைத்திரு க்குமவர்களை |
| மல்லை | பெருமையையுடைத் தான | | |
| கடல்மல்லைத்த லசயனம் | கடல்மல்லையில்ஸ்த்த லசயநத்திலே பள் ளிகொண்டிருக்கு மவனை | என்மடநெஞ் சே | எனக்குக்கீழ்ப்பட்டி ருக்கும்மநஸ்ஸே! |
| | | வலஞ்தொள் | வலம்வந்துஉஜ்ஜீவிக் கப்பாராய். (கூ) |

வ்யா.—ஆறும்பாட்டு. (புலன்கொள் நிதிக்குவையோடு) †கண்டார்க்கு "ஸமேதஸ் - மமேதம்" என்னவேண்டும்படி யிருக்கிற பொற்†குவையோடே.(புழைக்கைமாகளிற்றினம்) துளையையுடைத்தான கையையுடைய பெரிய மத்தகஜங்களுடையதிரளும். (நலமிக்யாதி) நவரத்நத்திரளும். (நலங்கொள்) என்கிறது - இக்கரையிலே கொடுவந்து ஒருவர்கையிலே யிட்டு நன்மை பார்க்கவேண்டாதபடியாயிருக்கை. (சுமந்து) † நற்சரக்காகையாலே "பொறுக்கும், பொறுது" என்றுபாராமல் ஏறிடுவர்களாயிற்று. (சுமந்தெங்கும் நான்றுசிந்து) † ஏறின சரக்கின்பெருமையாலே எங்கும் தாழ்ந்தொசிந்து,"அங்கே இற்றது, இங்கே முறிந்தது"என்னும்படி பயத்தோடே மரக்கலங்களானவை ஸஞ்சரியாநின்றுள்ள † பெருமையையுடைத்தான கடல்மல்லைத் தலசயனம். †இதுகொண்டுதாம் விநியோகங்கொள்ளுகைக்காகச்சொல்லுகிறாரன்றிறே. அச்சோலையோபாதி அங்குத்தைக்கலங்காரமென்றிவரா தரிக்கிறது. (வலங்கொள் மனத்தாரவரை) திருக்கடல்மல்லையிலே சுழிக்கும் நெஞ்சுடையவர்களை. †"பிள்ளைதிருநறையூரரையரும் பட்டருமாக ப்ரதக்ஷிணம் பண்ணும்போது நான்பின்னேபோவேன்,நம்மைப்போலே†தேவைக்குப்பரகு பரகென்று வருகையன்றிக்கே திருமாளிகைகளையும் திருக்கோபுரங்களையும் கண்ணாலே பருகுவாரைப்போலே பார்த்துக்கொடுபோகும்படிகாண்" என்று நஞ்சீயரருளிச்செய்வர். (அவரைவலங்கொள்) நமக்கு†அவர்கள் நின்றநிலை போராது, அவர்கள்பக்கல் அநுவர்த்தநத்திலே அந்வயிக்கவேணும். (என்மடநெஞ்சே) என்னோடொருமிடறாய் எனக்கு பவ்யமான நெஞ்சென்கிறார். ... ... (கூ)

---

அரு. — ஆறும்பாட்டு (புலன்கொளித்யாதி) நன்னெஞ்சாகையாலே இவர்சொன்ன உபதேசம்பலித்தது, ஆகையாலே, பொன்னும்மணியும் கொழிக்கும்படியும் கஜாந்தைஸ்வர்யம் குறைவறும்படியுமாகக் கலங்கள்நடமாடு

கிற திருக்கடல்மல்லையில் போக்யதையையநுஸந்தியாநின்றுகொண்டு, பாகவதவிஷயத்திலநுகூலவ்ருத்தியைச் செய்யச்சொல்லிவிடுகிறாரென்றுஸங்கதி.

"புலன்-" இந்த்ரியங்களை, "கொள்ளுகை-" க்ரஹிக்கையாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (கண்டார்க்கித்யாதி). (குவை) குவியல், ராசியென்கை. (நற்சரக்கு) ஏலவஸ்துக்கள். "நான்று" தாழ்ந்து என்றாய், அதினர்த்தம் (எறினவித்யாதி). "ஓசிந்து" என்றதுக்குத்தாத்பர்யகதநமுகேந மேலுக்கர்த்தம் (அங்கேயித்யாதி). "மல்லை" என்றதுக்கர்த்தம் (பெருமை) என்றது. திருக்கடல்மல்லையை யிப்படிவர்ணித்தவர்க்கு உட்கருத்தையருளிச்செய்கிறார் (இதித்யாதி). நெஞ்சு சுழிக்கும்படிக்கு ஒருஸம்வாதமருளிச்செய்கிறார் (பிள்ளையித்யாதி). (தேவைக்கு) கர்த்தவ்யத்துக்கு. (அவர்கள்நின்றநிலை) நெஞ்சு சுழிக்குமளவு. இத்தால் - நான் காயிகபர்யந்தமாக அநுகூலவ்ருத்தியைப் பண்ணும்படி ஆசைப்படவேணுமென்றதாயிற்று. ... ... ... (சு)

மூ.—பஞ்சிச்சிறு கூழை யுருவாகி மருவாத
வஞ்சப்பெண் நஞ்சுண்டவண்ணல் முன்நண்ணாத
கஞ்சைக்கடந்தவனூர் கடல்மல்லைத் தலசயனம்
நெஞ்சில்தொழுவாரைத் தொழுவாயென்தூய் நெஞ்சே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பஞ்சி | பஞ்சுபோலேம்ருதுவாய் | கஞ்சை | கம்ஸனுடையகருத்தை |
| சிறு | சிறிதாயிருந்துள்ள | கடந்தவன் | கடந்தக்ருஷ்ணனுடைய |
| கூழை | மயிர்முடியையுடைத்தான | ஊர் | ஊரான |
| உருவாகி | வடிவையுடையனாய், | கடல்மல்லைத்தலசயனம் | கடல்மல்லையில்ஸ்தலசயநத்தில்பள்ளிகொண்டிருக்கையை |
| மருவாத | பொருந்தாத | | |
| வஞ்சம் | வஞ்சனையையுடையளான | நெஞ்சில் | நெஞ்சோடேகூட |
| பெண் | பூதனையுடைய | தொழுவாரை | தொழுமவர்களை |
| நஞ்சு | முலையில்விஷத்தை | என் | எனக்குபவ்யமாய் |
| உண்ட | அமுதுசெய்த | தூய் | பரிசுத்தமான |
| அண்ணல் | ஸர்வஸ்வாமியாய், | | |
| முன் | முன்னே | நெஞ்சே | மநஸ்ஸே! |
| நண்ணாத | தன்னைக்கிட்டியாஸ்ரயியாத | தொழுவாய் | தொழப்பாராய். (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (பஞ்சிச்சிறுகூழையுருவாகி) பஞ்சுபோலே ம்ருதுவாய்க்†குழன்று பிடித்துக்கட்டவொண்ணாதபடியான † மயிர்முடியையுடைய பாலருடைய வடிவையுடையனாய். (க)"பெய்யும் பூங்குழல்-பிள்ளை" என்னக்கடவதிறே. அன்றிக்கே, கூழை

(க) தி - வாய் - இ - ௪௦ -

என்றால் ஸ்த்ரீகளுடைய குழலுக்குப் பேராகையாலே ம்ருதுவாய்க் குழன்றுபிடித்துக் கட்டவொண்ணாதபடியான மயிர்முடியையுடைய பூதனையுடைய மயிர்முடியைச் சொல்லிற்றாகவுமாம். யசோதைப் பிராட்டி வடிவழகைக் கொடுவருகிறாளாகையாலே தன்னைப்பேணிக்கொண்டுவருமிறே. †(சிறுகூழை) என்றதுக்குச் செய்வதென்னென்றால், †எல்லாம் செய்தாலும் பின்னையும் பாறிப்பாறந்து கிடக்குமிறே. (மருவாதவஞ்சப்பெண்) ஹ்ருதயத்தில் ப்ராதிகூல்யத்தையுடையளாய், அதுதன்னை ஆநுகூல்யபாவத்தாலே பேணிக்கொடு வருமிறே. சமைந்துவந்த பூதனையுடைய. (நஞ்சுண்டவண்ணல்) அவளுடைய விஷத்தை அமுதுசெய்த ஸ்வாமி. (உ) "[Grantha] - ஸ்தந்யந்தத்விஷஸம்மிஶ்ரம் ரஸ்யமாஸீஜ்ஜகத்குரோः" என்னக்கடவதிறே.†ஜகச்சேஷியான தன்னையிறே நோக்கித்தந்தது. (முன்நண்ணாத வித்யாதி) † முன்பு கம்ஸன்விட்ட விரோதிகளை நிரஸித்தபடியைச் சொல்லிற்று; விரோதிவர்க்கத்துக்கு வேர்ப்பற்றான இப்பையல் தன்னைக் கிழங்கெடுத்தபடியைச் சொல்லுகிறது. "ஒருபடியாலும் கிட்டோம்" என்றிருந்தகம்ஸனை நிரஸித்து அநுகூலர்க்குத் துணையாகவேணுமென்று வந்துகிடக்கிறவனுடைய திருக்கடல் மல்லையை. (நெஞ்சில் தொழுவாரை) †வாய்விட க்ஷமரன்றிக்கே யிருக்குமவர்களை. (தொழுவாய்) அந்தத் திருக்கடல்மல்லையையும் அங்குக்கிடக்கிற நாயனாரையும் தேடியிராதே தொழுவார்கள் உத்தேஶ்யராய்த்தொழு. (என் தூய்நெஞ்சே) † ததீயசேஷத்வத்தளவிலே நிற்கும்படியான சுத்தியை யுடையையிறே நீ. ... (எ)

அநு.—ஏழாம்பாட்டு (பஞ்சியித்யாதி) நீர் "மடநெஞ்சே!" என்று மிகவும்கொண்டாடி, பகவத்விஷயத்தில் காயிகபர்யந்தமாக அநுகூலவ்ருத்திகளைப்பண்ணச்சொல்லாநின்றீர், சொல்லும்போது மெய்யென்றுதோற்றுகையும், அநந்தரம் அந்தருசி நிலைநில்லாதேபோகையுமாய் வருகைக்கு ஹேதுவான விரோதிவர்க்கம் கழியக்காணேனென்ன; அதுக்குக் கம்ஸாரியிருக்கிறான், நீ அவர்களைத்தொழாயென்கிறாரென்றுஸங்கதி.

(குழன்று) கூட்டி. இது - சிறுமையின்தாத்பர்யம். கூழை, ஐம்பால், ஓதி, கூந்தல், கோதை என்று - மயிர்முடிக்குப்பேராகையாலே, அருளிச்செய்கிறார் (மயிர்முடியை) என்று. யசோதையைப்போலே பேணிவருகிறாளாகில் "சிறுகூழை" என்னப்போமோ வென்னும்சங்கையை /அநுவதித்துப் பரிஹரி

(உ) வி - பு - இ -

க்கிறார் (சிறுகூழையித்யாதி). (எல்லாம்செய்தாலும்) எத்தனையெண்ணெய் தடவிக்கோதிமுடித்தாளேயாகிலும். "அண்ணல்" என்று விசேஷித்தவருடைய ஹ்ருதயத்தையருளிச்செய்கிறார் (ஜகதித்யாதி). முன் - முந்துற முன்னம், நண்ணாத, கஞ்சை - கம்ஸனை என்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (முன்பித்யாதி). "நெஞ்சில்" என்று விசேஷித்ததுக்குக்கருத்து (வாயித்யாதி). தூய்மையாவது - ப்ரக்ருதாநுகுணமாக பாகவதவைபவமறிகையென்றருளிச்செய்கிறார் (தநீயேத்யாதி) ... ... ... (௭)

மூ.—செழுநீர் மலர்க்கமலம் திரையுந்து வன் பகட்டால்
உழுநீர்வய லுழவருழப் பின்முன் பிழைத்தெழுந்த
கழுநீர் கடி கமழும் கடல்மல்லைத் தலசயனம்
தொழுநீர் மனத்தவரைத் தொழுவாயென் தூய்நெஞ்சே. (௮)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உழுநீர் | உழுகையேஸ்வபாவமாகவுடையரான | பிழைத்தெழுந்த | தப்பியெழுந்த |
| உழவர் | உழவரானவர்கள், | கழுநீர் | செங்கழுநீரும்தாமரையும் |
| செழு | அழகிய | கடிகமழும் | நறுநாற்றம்கமழாநின்றுள்ள |
| நீர்திரை | நீரின் அலைகளையும் | கடல்மல்லைத்தலசயனம் | கடல்மல்லைஸ்தலசயனத்தை |
| மலர் | அலர்ந்த | தொழு | தொழுகிற |
| கமலம் | தாமரைகளையும் | நீர் | நீர்மையையுடைத்தான |
| உந்து | தள்ளுகிற | மனத்தவரை | மநஸ்ஸையுடையவர்களை |
| வன் | வலிய | என்தூய் | நெஞ்சே! |
| பகட்டால் | எருதுகளைப்பூட்டி | தொழுவாய் | தொழப்பாராய். (௮) |
| வயல்உழ | வயலைஉழ | | |
| பின்முன் | பின்னும்முன்னும் | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (செழுநீரித்யாதி) † மலர்ந்ததாமரைகளையும் ஜலஸம்ருத்திகளையுமுடைத்தாயாயிற்று வயலிருக்கும்படி. இவ்வயலைத்தரைகண்டு உழுகைக்காக அத்திரைகளையும் தாமரைகளையும் காலாலே தள்ளுவர்கள். (வன்பகட்டால்) † ப்ரளயத்திலேயும் உழவற்றாயாயிற்று அவ்வெருதுகளிருப்பது. (உழுநீர்வயலுழவருழ) எப்போதும் நடுவது உழுவதாய்ப் போருகையாலே உழுவதே ஸ்வபாவமாக வுடைத்தானவயலைக் கர்ஷகரானவர்களுழ. (பின்முன் பிழைத்தெழுந்த கழுநீர்கடிகமழும்) இவர்களுழாநிற்கப் பின்னும் முன்னும் தப்பிநின்ற செங்கழுநீரானது இவர்கள் ஶ்ரமத்தையாற்றுகைக்குறுப்பாகப் பரிமளத்தை ப்ரவஹியாநிற்கும். † அன்றிக்கே, இவர்கள் முன்னே உழுதுகொடுபோகாநிற்கப் பின்னே தப்பிநின்ற கழுநீர் கடிகமழுமென்றுமாம். அங்ஙனன்றிக்கே

(வயலுழவருழப் பின்முன் பிழைத்தெழுந்த) முன்பே ஒருகால் உழுதுவைப்பர்களிறே, அப்போது தப்பிகின்ற செங்கழுநீர் அலருகைக்கொரு †ஸஞ்சாரம்பண்ணினாற்போலேயிருக்கும். (கடல் மல்லையித்யாதி) திருக்கடல் மல்லையைத்தொழுகை காதாசித்கமாகை தவிர்ந்து ஸ்வபாவமாம்படியான நெஞ்சையுடையாரை. (தொழுவா யென்தூய்நெஞ்சே) அவர்களுக்கு ஊரைத்தொழுகை யாத்ரையான வோபாதி அவர்கள்தங்களைத்தொழுகைகிடாய் உனக்கு யாத்ரை. பாகவதசேஷத்வம் நன்றென்று உபதேசிக்கலாம்படியிறே உன் சுத்தியிருக்கிறது. ... ... ... ... ... (அ)

---

அரு.—எட்டாம்பாட்டு (செழுநீரித்யாதி) பூதநாகம்ஸநிரஸநமாத்ரமன் றிக்கே புண்டரீகருடைய அபேக்ஷிதம்செய்து பூவிடுவித்துக்கொண்டவன் வர்த்திக்கிற வூரில் ஸமாராதநோபகரணங்களான புஷ்பஸம்ருத்திதன்னை அநுஸந்தியாநின்றுகொண்டு, அவ்வூரைத்தொழுமவர்களைத் தொழச்சொல்லி விடுகிறாரென்றுஸங்கதி.

"மலர்க்கமலம்-செழுநீர்-திரையுந்து" என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (மலர்ந்தவித்யாதி). "பகடு" என்று - வ்ருஷபங்களாய், அதின்வன்மையையருளிச்செய்கிறார் (ப்ரளயத்திலேயுமித்யாதி). உழவர்களு டைய முன்ப்ரதேசமும் பின்ப்ரதேசமும் பிழைத்தென்று தாத்பர்யமருளிச் செய்து, முன் - உழ, பின் - பிழைத்து, என்று அந்வயம் விவக்ஷித்து, ஸ்தல பரமாகவும் காலபரமாகவும் இரண்டுதாத்பர்யமருளிச்செய்கிறார் (அன்றிக்கே யித்யாதி வாக்யத்வயத்தாலே). (ஸஞ்சாரம்பண்ணினாற்போலே) களை கொத்தினாற்போலேயென்கை. செங்கழுநீர் ஸம்ருத்தமாய்வருகைக்காக உழ வாநிற ஸஞ்சாரம்பண்ணினாற்போலே என்று வாக்யார்த்தம். ... (அ)

மூ.—பிணங்களிடு காடதனுள்நடமாடு பிஞ்ஞகனோடு
இணங்குதிருச்சக்கரத் தெம்பெருமானார்க் கிடம் விசும்பில்
கணங்களியங்கும் மல்லைக்கடல்மல்லைத் தலசயனம்
வணங்குமனத்தாரவரை வணங்கென்றன் மடநெஞ்சே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பிணங்கள் | பிணங்களைச்சுடுகிற | இணங்கு | பொருந்திய |
| இடுகாடதனுள் | சுடுகாட்டிலே [னாய் | திருச்சக்கரத்து | திருவாழியாழ்வானை |
| நடமாடு | நர்த்தநம்பண்ணுமவ | | யுடைய [கு |
| பிஞ்ஞகனோடு | ஸம்ஹாரகர்த்தாவா ன ருத்ரனோடே கூட | எம்பெருமானார்க்கு | என்னுடையநாதனுக் |
| | | இடம் | இடமாய், |

| | | | |
|---|---|---|---|
| விசும்பில் | ஸ்வர்க்காதிலோகங்களிலுள்ள | கடல்மல்லைத்தலசயனம் | கடல்மல்லைத்தலசயனத்தை |
| கணங்கள் | தேவகணங்கள் | வணங்குமனத்தாரவரை | வணங்கும்நெஞ்சையாரவரை |
| இயங்கும் | வந்துஆஶ்ரயியாநின்றுள்ள | | என்றன்மடநெஞ்சே! வணங்கு.(கூ) |
| மல்லை | பெருமையையுடைய | | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பிணங்களித்யாதி) † மனிச்சுக்கலவாத நெஞ்சையுடைய ருத்ரனோடேகூட;-†ஶ்மசாநபூமியிலே ஆடாநின்றுள்ள ருத்ரனோடேகூட. † அபிமாநோபஹதரானவர்களுக்கும் நித்யஸூரிகளுக்கு மொக்கத் திருமேனியிலே இடங்கொடுத்து நிற்கும் நீர்மையைச் சொல்லுகிறது. திருவாழியாழ்வானைச் சொல்லுகிறவிடம் நித்யஸூரிகளுக்கு முபலக்ஷணம். (விசும்பில்கணங்களியங்கும்மல்லை) இங்கேவந்து சாய்ந்தருளின நீர்மையை யநுஸந்தித்து நித்யஸூரிகள் ஸஞ்சரிக்கிறபடியைச் சொல்லிற்றாகவுமாம். அன்றிக்கே, ஆகாசத்தில் போகப்ரதாநரான யக்ஷகந்தர்வர்கள் சஞ்சரியாநின்றுள்ள †பெருமையையுடைய திருக்கடல்மல்லையை. (வணங்கும்மனத்தாரவரை) தொழும் நெஞ்சுடையாரை. (வணங்கு - மடநெஞ்சே) அவர்கள் தொழும்விஷயத்தைத்தேடி யிராதே உனக்குத் தொழுகைக்கு விஷயம் அவர்கள் தாங்கள் கிடாய். ... (கூ)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு (பிணங்களித்யாதி) கீழ்ப்பாட்டில் சொல்லப்பட்ட புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு ஆஶ்ரயிப்பார்க்கு உறுப்பானவன் ஸௌசீல்யத்தையநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

சுடுகாட்டில் பேயாய் மநுஷ்யருடைய வ்யாபாரமில்லாமையால்(மனிச்சுக்கலவாதநெஞ்சையுடைய) என்கிறது. வாக்யார்த்தம் (ஶ்மசாநேத்யாதி). பிஞ்ஞகன் - பிநாகியென்றாய், அவன் உபலக்ஷணமாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அபிமாநேத்யாதி). "மல்லை" என்றதினர்த்தம் (பெருமை) என்றது. ... ... ... ... ... ... ... ... (கூ

மூ.—கடிகமழுநெடுமறுகில் கடல்மல்லைத் தலசயனத்
தடிகளடியேநினையு மடியவர்கள்தம் மடியான்
வடிகொள் நெடு வேல்வலவன் கலிகன்றியொலிவல்லார்
முடிகொள்நெடு மன்னவர்தம்முதல்வர் முதலாவாரே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கடி | நறுநாற்றம் | வடிகொள் | கூர்மையையுடைத் |
| கமழும் | கமழாநின்றுள்ள | நெடு | பெரிய [தாய் |
| நெடு | பெரிய [ன | வேல்வலவன் | வேலால்பொரவல்ல |
| மறுகில் | வீதிகளையுடைத்தா | | ரான |
| கடல்மல்லை | திருக்கடல்மல்லையி லே | கலிகன்றி | ஆழ்வார் |
| | | ஒலி | அருளிச்செய்த திரு மொழியை |
| தலசயனத்து | ஸ்த்தலசயநத்திலேப ள்ளிகொண்ட | | |
| | | வல்லார் | கற்கவல்லவர்கள் |
| அடிகள் | ஸ்வாமியுடைய | முடிகொள் | கிரீடதாரிகளான |
| அடி | திருவடிகளை | நெடுமன்னவர் | ராஜாதிராஜர்களுக் |
| நினையும் அடிய வர்கள்தம் | நினைக்கும் சேஷபூத ருடைய | தம்முதல்வர் | கும் |
| | | முதலாவார் | ப்ரதாநராவர்கள்(கO) |
| அடியான் | அடியாராய் | | |

வ்யா.—பத்தாம்பாட்டு. (கடிகமழுமித்யாதி) பரிமளம் ப்ரவஹி யாநின்றுள்ள †பெரிய வீதிகளையுடைத்தான திருக்கடல் மல்லையிலே வந்து கண்வளர்ந்தருளுகிற ஸர்வஸ்வாமியுடைய திருவடிகளையே அநுஸந்திக்கும் சேஷபூதர் சேஷத்வத்திலே நின்றவன். ஜ்ஞாநாநந் தங்களல்ல நிரூபகம், பாகவதசேஷத்வமென்கிறார். (வடிகொள்நெடு வேல்வலவன்)†காக்கைக்குக் கையிலே வேல்பிடித்தாற்போலே யாயி ற்று சேஷத்வத்திலும் † பாகவதசேஷத்வத்திலே நின்றபடி. கூர் மையையும் ஒழுகுநீட்சியையுமுடைத்தான வேலையுடையராய் ப்ரதி பக்ஷநிரஸந ஸமர்த்தராயிருந்துள்ள ஆழ்வாருடைய இத்திருமொழி யை அப்யஸிக்கவல்லார். (முடிகொளித்யாதி) முடியை யுடைய ராய் நாட்டுக்கு அநந்யப்ரதாநராயிருந்துள்ள † க்ஷத்ரியர்க்கு ப்ரதாந ரான ப்ரஹ்மாதிகளுக்கும் நிர்வாஹகரான நித்யஸூரிகளோடு ஸத் ருசராகப்பெறுவர். ... ... ... ... (கO)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு (கடியித்யாதி) "மறுகில்" என்றதினர்த்தம் (வீதி களையுடைத்தான) என்றது. (காக்கைக்கு) ரக்ஷிக்கைக்கு. (பாகவதசேஷத் த்திலேநின்றபடி) என்றதுக்கு - பிற்காலியாதேநின்றபடி என்று கருத்து. (க்ஷத்ரியர்க்கு) மநு மாந்தாதாபோல்வார்க்கென்றபடி. ... ... (கO)

ஜீயர் திருவடிகளே சரணம்.

இரண்டாம்பத்தில் ஆறும்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.



# பெரியதிருமொழி - உ - ம் பத்து - எ - ம் திருமொழி திவளும் ப்ரவேசம்.



வ்யா.—†ததீயசேஷத்வபர்யந்தமாக பகவதநுபவம் பண்ணுகையாலே தம்முடைய அநர்ஹசேஷத்வத்தை அநுஸந்தித்தாராய் நின்றார்; † அநர்ஹ சேஷத்வத்துக்கு லக்ஷணம் சொல்லுகிறவிடத்திலே (க) "நின்திருவெட்டெழுத்துங் கற்று நான் உற்றது முன்னடியார்க்கடிமை" என்றாரிறே. †தம்முடைய சேஷத்வத்துக்கு எதிர்த்தலையான அவனுடைய சேஷித்வத்தை அநுஸந்தித்த விடத்திலே, அது தமக்கு †ரஸித்திருக்கும்படியாலே, அவனை அநுஸந்திப்பதாகப்பாரித்தார்; அப்போதே நினைத்தபடி அநுபவிக்கப்பெற்றிலர்; அவ்விழவாலே தாமானதன்மைபோய் பிரிவாற்றாமையாலே நோவுபடுகிறாளொருபிராட்டி தசையை ப்ராப்தராய் அந்நிலைதானும் போய்க்குலைந்தது அதாவது - தன்னாற்றாமையைத் தானே வாய் விட்டாற்றுகை யன்றிக்கே, பிறர்வாயாலே சொல்லுகையிறே ஆக நாயகனோடு நினைத்தபடிகளைப் பரிமாறாமையாலே † நம்முடைய கோயில்திருவாய் மொழிப்படியாலே ஸ்த்திதி கமந சயநாதிகளிலே ஒருநிலையின்றிக்கே அரதியாய் நோவுபடுகிற பெண்பிள்ளையுடைய தசையை அநுஸந்தித்த திருத்தாயார், இவளுக்குண்டான † செல்லாமையையும் அவனிவ்வளவில்வந்து முகங்காட்டாதேயிருக்கிற விருப்பையும், இவளுடைய தசைக்குத் †தன்னாலொரு பரிஹாரமின்றிக்கே யிருக்கிறபடியையும், அவனையிட்டே பரிஹரித்துக்கொள்ள வேண்டும்படியாயிருக்கிற விருப்பையு மநுஸந்தித்து, "இதுக்குநேரே நிதாநபூதராயிருக்கிற வரிருக்க வழியேபோவாரோபாதியான. †நமக்கு இதுதெரியுமோ? ஆனபின்பு அவர்தம்மையே இதுக்கொரு போக்கடிகேட்போம்" என்றத்யவஸித்துத் திருவிடவெந்தை நாயனார் † திருவடிகளிலே இவளைக்கொடுபோய்ப்பொகட்டு, †எங்களைக்காற்கடைகொண்டு உம்முடைய ஸௌந்தர்ய சீலாதிகளிலே துவக்குண்ட இவள் உம்மை நினைத்தபடி யநுபவிக்கப் பெறாமையாலே † மிகவும்

(க) அ - கO - ந

நோவுபடா நின்றாள்; நீரிவளுடைய திறத்துச் செய்ய நினைத்திருக்கிறதென்? என்று கேட்கிற திருத்தாயார் பாசுரத்தாலே தமக்குப் பிறந்ததசையைப் பேசுகிறாராயிற்று. ... ... ... *

அரு.—திவளும்வெண்மதிப்ரவேசம்.—கீழ்த்திருமொழியிலே - பாகவதர்களே ப்ராபகரென்று அநுஸந்தித்த ஆழ்வார்தமக்கு நிரூபகத்வேந திருவடிகள் ப்ரஸ்துதமாயிற்று; தாய்முலையைநினைத்த ப்ரஜையோபாதி ப்ரவணமாய் இவர் திருவுள்ளம் அவர்களுக்கு உத்தேஸ்யமான திருவடிகளில் பிணியுண்டது; நினைத்தபோதே ஸாக்ஷாத்கரிக்கப்பெற்றிலர்; அத்தால் கடற்கரையெல்லாம் ஆராயத்துடங்கினர்; அங்ஙனேயொருபெண்பித்தனுயிருக்கக்கண்டு திருவிடவெந்தையெம்பெருமான்றான்நயந்தாராயிற்று; அதுதானும் நினைத்தபோதேபெறாமை பெண்ணுடையுடுத்து ஆர்த்தியோடிருக்க, கீழ்த்திருமொழியில் ததீயர் இவ்வர்த்தத்தை அவனுக்கு விண்ணப்பஞ்செய்யும்படியை அந்யாபதேசத்தாலே அநுஸந்திக்கிறரென்று ஸங்கதி ஸ்பஷ்டமாகக் கண்டுகொள்வது.

(ததியசேஷத்வபர்யந்தமாக பகவதநுபவம்பண்ணுகையாலே). என்றது - (க) "அடிகளடியே நினையுமடியவர்கள் தம்மடியான்" என்றத்தைப் பற்ற. ததீயசேஷத்வம் பகவதநந்யார்ஹசேஷத்வமாகிறபடி யெங்ஙனேயென்ன வருளிச்செய்கிறர் (அநந்யேத்யாதி). (தம்முடைய சேஷத்வத்துக்கு எதிர்த்தலையான அவனுடைய சேஷித்வத்தை யநுஸந்தித்தவிடத்தில்) என்றதுக்கு - தமக்கு சேஷிகளான ததீயர்க்குமவனே சேஷியென்று அநுஸந்தித்தவிடத்திலென்றபடி. (ரஸித்திருக்கும்படியாலே) என்றதுக்கு - தமக்கு உத்தேஸ்யரான பாகவதர்க்கு உத்தேஸ்யதமமாகையாலே பகவதநுபவம் தமக்கு மிகவும் ரஸித்ததென்றுகருத்து. (நம்முடையகோயில் திருவாய்மொழி) (உ) "கங்குலும் பகலும்" என்கிற திருவாய்மொழி, (செல்லாமை) என்கிறது - (ங) "ஆசைவிடாளால்" இத்யாதியைப்பற்ற. "பேதையேன்" என்றத்தைப் பற்ற (தன்னுலொருவித்யாதி). (ச) "இவ்வணங்கினுக்குற்ற நோயறியேன்" என்றத்தைநினைத்து (நமக்கிதுதெரியுமோ) என்றது. (ரு) "தாள்நயந்திருந்த" என்றத்தாலே (திருவடிகளிலே - பொகட்டு) என்றது. (சு) "எனக்கன் பொன்றிலள்" என்றத்தைக் கடாக்ஷித்து (எங்களைக் காற்கடைகொண்டு) என்றது, (சு) "ஊழியில்பெரிதால்" இத்யாதியைத் திருவுள்ளம்பற்றி (மிகவும் நோவுபடாநின்றாள்) என்றது. ... ... ... *

மூ.—திவளும்வெண்மதிபோல் திருமுகத்தரிவை
செழுங்கடலமுதினில் பிறந்த
வவளும் நின்னாகத் திருப்பதுமறிந்து
மாகிலுமாசை விடாளால்

(க) உ-ரு-கo. (ச) உ-எ-ரு.
(உ) தி-வாய்-எ-உ. (ரு) உ-எ-எ.
(ங) உ-எ-க. (சு) உ-எ-ச.

குவளையங்கண்ணி கொல்லியம்பாவை
  சொல்லு நின் றாள்நயந்திருந்த
விவளை யுன்மனத்தா லென்னினைந்திருந்தா
  யிடவெந்தையெந்தைபிரானே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திவளும் | ஒளிவிடாநின்றுள்ள | குவளை | குவளைப்பூப்போன்ற |
| வெள் | வெளுத்த | கண்ணி | கண்ணழகையுடையளாய் |
| மதிபோல் | சந்த்ரனைப்போன்ற | | |
| திரு | அழகிய [ளாய், | கொல்லி | கொல்லிமலையிலெழு |
| முகத்து | திருமுகத்தையுடைய | அம் | அழகிய [தப்பட்ட |
| அரிவை | அரிவைப்பருவத்த | பாவை | ப்ரதிமைபோன்ற வடிவழகையுடைய |
| செழு | பெரிய [ளாய், | | |
| கடல் | கடலில்பிறந்த | நின் | தேவரீருடைய[ளாய் |
| அமுதினில் | அம்ருதத்திலே | தாள் | திருவடிகளை |
| பிறந்த | அவதரித்தவளான | நயந்து இருந்த | ஆசைப்பட்டிருக்கிற |
| அவளும் | அந்தபெரியபிராட்டியாரும் | இவளை | இவள்திறத்தில் |
| நின் | தேவரீருடைய | உன் மனத்தால் | தேவரீர் திருவுள்ளத்தாலே |
| ஆகத்து | திருமார்பிலே | என்னினைந்திருந்தாய் | நினைத்திருந்ததென்? (பரமபதத்தைவிட்டு) |
| இருப்பதும் | எழுந்தருளியிருக்குமதையும் [தேயும் | | |
| அறிந்தும் | அறிந்திருக்கச்செய் | இடவெந்தை | திருவிடவெந்தையில் வந்துநிற்கிற |
| ஆகிலும் | ஆகிலும் | | |
| ஆசை | தேவரீர்பக்கல் ஆசையை, (என்பெண்பிள்ளை) | எந்தைபிரானே! | என்குலநாதனே! |
| விடாள் | விடுகிறிலள்; | சொல்லு | ஒருவார்த்தை யருளிச்செய்யவேணும். |
| அம் | அழகிய | | |

வ்யா.—முதற்பாட்டு.(திவளுமித்யாதி)† இவளுடைய ஆசைக்கு அளவில்லாமைசொல்லுகிறது. †தன்னில் அளவுடையார் ஆழங்கால் படக்கண்டால் கரையிலே நின்றார்க்குத்தப்பவிடேறயிடப்பது. (திவளும் வெண்மதிபோல்) † ஆழங்காலேயாகிலும் முழுகி†மண்கொள்ளுகைக்கீடான அளவுடைமையைச் சொல்லுகிறது. (திவளும்) ஒளிவிடுகையாதல், ஒளியின் மிகுதியாலே பளபளத்திருக்கிறபடியைச் சொல்லுதல். (வெண்மதிபோல்)வெள்ளவத்தாலேபாண்டமாயிருக்கை. †நித்யாநுபவம் பண்ணுகிறக்கச்செய்தேயும் அத்ருப்தி மாறாதே யிருக்கையைச்சொன்னபடி. (திருமுகத்து) முககாந்திக்கு நேர்கொடு நேர் சந்த்ரன் ஒப்பாகப் போராமையாலே (திருமுகம்) என்று அது

தன்னையேசொல்லுகிறது. (க) †"చన్ద్రకాన్తాననం రామమతీవ ప్రియదర్శనమ్- சந்த்ரகாந்தாநநம் ராம மதீவ ப்ரியதர்சநம்" என்னக் கடவதிறே. †மறுவும் குறைகையுமின்றிக்கேயிருக்கை. †எப்போது மேகரூபனாய், தன்பக்கலுள்ளதெல்லாம் ஆஹ்லாதமா யிருப்பானொரு சந்த்ரன் போலேயிருக்கை. (அரிவை) முகத்தில் காந்தியொழியவேயும் துவக்கவற்றாயாயிற்றுப் பருவமிருப்பது. இது பருவமிருந்தபடி. மேல் பிறப்பிருக்கிறபடி சொல்லுகிறது. (செழுங்கட லமுதினில் பிறந்த) முதலிலே பாற்கடலாய், அதுதன்னைக்கோதாக்கி அம்ருதமாய், அவ்வம்ருதந்தானே கோதாம்படி பிறந்தவளாயிற்று. (உ) "விண்ணவரமுதுண வமுதில்வரும் பெண்ணமுது" என்னக் கடவதிறே. †பரார்த்தமாகக் கடல்கடைந்தானென்று †ஸௌதார்யங்கொண்டாடினதடையப்போய், தனக்கு நல்லதுபெற வ்யாபரித்தானித்தனை. (அவளும்) வடிவழகாலும் பருவத்தாலும் பிறப்பாலும் வந்த ஏற்றத்தையுடையளானவளும்.

(நின்னுகந்து) †அவளுக்குங்கூட ஸ்பருஹணீயமான மார்பாயிற்று. (உ) †"அகலகில்லேனிறையும்" என்கிறபடியே †இம்மார்பிலிருப்புக்கு ஏதேனும் இழவுவரில் செய்வதென்னென்று. துணுக்குத்துணுக்கென்றாயிற்று வர்த்திப்பது. (இருப்பதும்) †இருந்தால் கலந்தாளாய், பின்னைபிரிவும் பொறுக்கமாட்டாள். (அறிந்தும்) அவள் மார்விலே யிருக்கிறதறியாமை பற்றினானென்ன வொண்ணாதே. அவளிருக்கிற விருப்பு தனக்குப் பற்றுகைக்குப் பற்றாசென்று பற்றினவளை; (ஆகிலுமாசைவிடாளால்) †"அவளு மங்கேயிருக்கச் செய்தே *லாக்கிழக்கவேண்டுகிறதென்" என்று அதுதானே இவளுக்கு ஆசைக்குடலாயிற்று; அதுவாயிற்று இவளுக்கு ஆசைப்படுகைக்கு ஆலம்பநம்.

(குவளையங்கண்ணி) †அவளில் இவளுக்குண்டான ஏற்றஞ்சொல்லுகிறது. திருமுகமென்று ஸமுதாயசோபையிறே அவளுக்குச் சொல்லுகிறது. "குவளையங்கண்ணி" என்று அவயவசோபையிலுண்டான ஏற்றஞ்சொல்லுகிற திவளுக்கு. †அவன்றன்னிற்காட்டில் (ச) * அஸிதேக்ஷணை யென்று அவள்கண்ணுக்குண்டான ஏற்றத்தோபாதியும் போருமாயிற்று அவளிற்காட்டில் இவள்கண்ணுக்

(க) ரா-அ-௩-௨௮. (உ) கா-ர-௨.. (௩) திவாய்-௬-௧௦-௧௦. (ச) ரா.

குண்டான ஏற்றமும். (கொல்லியம்பாவை) கொல்லிமலையிலே ஒரு †பாவையுண்டு - எல்லாரும் உருவகுப்புக்குத் தமிழர் சொல்லுவ தொன்று. †பிறப்பாலொப்புச் சொல்லவொண்ணாது, ஒன்றிலே யெழு திக்காணில் காணுமித்தனை. (சொல்லு) † இதுக்கொரு போக்கடி நீர் நினைத்திராமை யில்லையிறே, அவ்வளவும்போராது, எங்களுக்கு பய ந்தீரும்படி (க) "மாசுச:-மாசுச:" என்கிறப்போலே ஒருவார்த்தை யருளிச் செய்யவேணும்.

(நின்தாள்நயந்திருந்த) இதுவுமவளிற்காட்டிலிவளுக்குண்டான ஏற்றம்; அவள் மார்வை ஆசைப்பட்டாள், இவள் திருவடிகளை யாசைப்பட்டாள். அவன்வாசி யறிந்தார் அவன் மார்வை யாசை ப்படுவர்கள்; அவளோடேகூடினவன் வாசியறிந்தார் அவன் திருவடி களைப்பற்று மித்தனையிறே. (இவளை) சொன்ன ஏற்ற மெல்லாம் போராதபடி யிருக்கையாலே கையாலேகாட்டி "இவளை" என் கிறார். (உன்மனத்தால்)†கைகழிந்தவற்றுக்கு மொருபோக்கடி பார்த் திருக்கக்கடவ உன்திருவுள்ளத்தாலே நினைத்திருந்ததென்? †(உன் மனத்தால்) என்நெஞ்சால் இதுக்கொரு போக்கடி தேடுமதுண்டு என்கைவிட்டேன். இனி உன்நெஞ்சால் நினைத்திருந்ததென்? (இட வெந்தையெந்தைபிரானே)*கலங்காப் பெருநகரத்தில் புகப்பெறாதே கைகழியப்போனாரும் பிழைக்கைக்காகத் திருவிடவெந்தையிலே வந்து நிற்கிற என்குலநாதனானவனே! (உ) "பின்னானார்வணங்கும்" என்கிறபடியே. (சொல்லு) என்று †க்ரியை. ... ... *

அரு.—முதற்பாட்டு. (திவளுமித்யாதி) "ஆகிலும் ஆசைவிடாளால்" என்றதைக் கடாக்ஷித்துத் தொகுத்த பாவத்தை யருளிச்செய்கிறார் (இவளு டையவித்யாதி). இத்தை உபபாதிக்கிறார் (தன்னிலித்யாதி). அவன் ஸௌ ந்தர்யத்திலாழங்காற்பட்ட பிராட்டியை வர்ணிப்பானென்னென்ன வருளிச் செய்கிறார் (ஆழங்காலேயித்யாதி). (மண்கொள்ளுகையாவது) - கரைகாண் கையாய், அத்தால் தன்னுடைய ஸௌந்தர்யாதிகளாலே அவனுடைய ஸௌந்தர்யத்தையும் அல்பமாக்கி யநுபவிக்க வல்லவளென்றபடி. யௌவந த்திலே வெளுக்கைக்கு ஹேதுவென்னென்ன வருளிச்செய்கிறார் (கித்யாநு பவமித்யாதி). உபமாந்தரத்தைச்சொல்லிக்கொண்டு வர்ணித்து, அதுபோ ராமை, "திரு" என்று விசேஷித்தாற்போலே விசேஷித்து விடமுண்டோ வென்ன வருளிச்செய்கிறார் (சந்த்ரேத்யாதி). ஆஹ்லாதகத்வே "சந்த்ரகாந்தம்" என்று சொல்லிவைத்து, போராமை, அதில் "ப்ரியதர்சநம்"

(க) கீ-௧௮-௬௬. (உ) தி-மொ-௪௦.

என்றுனிறே என்று கருத்து. உபமாநம் நேர்நில்லாமைக்கு உபமாநத்துக்குக் குற்றந்தானென்னென்ன வருளிச்செய்கிறூர் (மறுவுமித்யாதி). நேர்நிற்க மாட்டாமத்தை முந்துறச்சொல்லுவானென்? கழிப்பானென்னென்ன; இவ் விரண்டாலும் பலித்தது - அபூதோபமையென்கிறூர் (எப்போதும் ஏகரூபனு மித்யாதி). பாசுரத்துக்குத் தாத்பர்யம் (பரார்த்தம கவித்யாதி). (ஔதார்யம் கொண்டாடினது) என்றது, (க) "வானவரைப் பெண்ணாக்கியமுதூட்டும்" என்றத்தைப்பற்ற-

பிராட்டியினுடைய ஸௌந்தர்யாதிகளைச்சொல்லி, கேவலம், "நின் என்றத்தால் - இவளுடைய ஸௌந்தர்யாதிகள் வாசாமகோசரங்களென்று தோற்றுகையாலே, பலிதத்தை யருளிச்செய்கிறூர்(அவளுக்குங்கூடவித்யாதி). இதுக்கு ப்ரமாணம் (அகலவித்யாதி). ப்ரமாணத்துக்குத் தாத்பர்யம் (இம் மார்பிலித்யாதி). "இருப்பதும் என்கிற சகாரம் - விரோதியாய், இருப்புக்கு ப்ரத்யநீகாகாரமான பிரிவால்வந்த வ்யஸநத்தைக் காட்டுகிறதென்று விவக்ஷித்து அதுக்கு ஹேதுவை யருளிச்செய்கிறூர் (இருந்தாலித்யாதி). இருந்தத் தாலே கலவிவந்ததாய், அதுதானும் விஶ்லேஷாந்தமாயல்லதிராதென்று விஶ்லேஷித்துளளாகவெண்ணி, அவ்வழியாலே அவள் படுகிறபாடுதான் வா சாமகோசரமென்று கருத்து. "அறிந்தும்" என்கிற சகாரம், பிராட்டியு டைய விஶ்லேஷ பீருத்வத்தை யறியாதிருந்தாளாகில் ஆசைப்படக்கூடும், ஸைக்கலாமென்கிற நினைவாலே யறிந்தாளாகில், கலவியிலும் பிரிந்திருக்கை யென்றென்று ஆசைவிடவேண்டியிருக்கும். அதிசங்கையே விஷயமாகையா லேயென்று இவ்வர்த்தத்துக்கு ஸூசகமென்று திருவுள்ளம்பற்றி, இப்பெண் பிள்ளை யறிந்ததுக்கு ஹேதுவையருளிச்செய்கிறூர் (அவளுமித்யாதி). நித் யாநபாயிநியும், நித்யாதிசங்கையோடே நித்யாதிசங்கைபண்ணுகிற்க அவ ளோட்டை ஸாம்யாபந்நையான நானிழந்திருக்கையாவதேதென்று தாத்பர்ய மாகவுமாம்; அன்றிக்கே, பிராட்டிக்கு வேறொரு கடகரில்லாமையாலே அதிசங்கைபண்ணுகிறுளத்தனை, எனக்கு அவளே கடகையாயிருக்கையால் அதிசங்கையும் பண்ணவேண்டுவதில்லையென்று ஆசைப்படுகிறுளென்று தாத்பர்யமாகவுமாம்.

குவளைக்கண்ணியென்னுதே, "அம்" என்றதுக்குத் தாத்பர்யம் (அவளி வித்யாதி). இப்பாட்டினடியிலே, (தன்னிலளவுடையார்)என்று பிராட்டியை இப்பெண்பிள்ளையேற்றமாகச் சொன்னளாயிருக்கிறது, இங்கே இப்பெண் பிள்ளைக் கேற்றம்சொல்லுகிறுன், இது சேரும்படியென்னென்னில்; அப் போது அவள்முகத்தைப்பார்த்தவாறே விலக்ஷணவிஷயங்களிப்படி பேசு விக்கும், ஆகையால் விரோதமில்லையென்றதாயிற்று. அவள்தானும் (உ) மையார்கருங்கண்ணி யன்றோவென்ன வருளிச்செய்கிறூர் (அவன்றன்னி வித்யாதி). அவனொருவனை உத்தேஶ்யமாகக்கொண்டு உகக்கும் ஸௌபாக்ய

(க) உ-கூ-க. (உ திவாய்-

மவளது, இருவரையும் உத்தேஶ்யமாகக்கொண்டு உகக்கும் ஸௌபாக்ய மிவளது; ஸௌபாக்யாதிசய ஸூசகமான நேத்ரலக்ஷணம் விஞ்சியிருக்கு மென்று கருத்து. (பாவையுண்டு) என்றது - ஸ்த்ரீ ப்ரதிமை யெழுதியிருக்கு மென்றபடி. அப்ஸரஸ்ஸுக்களோபாதி அமுதிற்பிறந்தாளென்னலாயிற்று அவளை, என்வயிற்றிற்பிறந்தாளென்னவொண்ணாது, "ஒரு சித்ரத்தோபாதி யிவள்வடிவு" என்னுமத்தனை என்னுமபிப்ராயத்தை யருளிச்செய்கிறார் (பிற ப்பாலித்யாதி). "என்நினைந்திருந்தாய்?" என்று கேட்குமதுக்குமுன்னே "சொல்லு" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இதுக்கித்யாதி).

(கைகழிந்தவற்றுக்கும்) துர்வ்ருத்தத்தாலே ஸ்வரூபம்குலைந்த சேதந வஸ்துவுக்குமென்றபடி. அப்ரபுத்தர்க்குமாகவிறே அர்ச்சாவதாரமென்று திருவுள்ளம். தாத்பர்யாந்தரம் (உன்மனத்தாலித்யாதி). (க்ரியை) என்றது - இத்திருமொழிக்கெல்லாம் பொதுவான க்ரியையென்றபடி. ... ... (க)

மூ.—துளம்படு முறுவல் தோழியர்க் கருளாள்
துணைமுலை சாந்துகொண்டணியாள்
குளம்படு குவளைக்கண்ணிணை யெழுதாள்
கோலநன்மலர் குழற் கணியாள்
வளம்படு முந்நீர் வைய முன்னளந்த
மாலென்னும் மாலின மொழியாள்
இளம்படி யிவளுக்கென்நினைந் திருந்தாய்
இடவெந்தை யெந்தை பிரானே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| துளம்படு | மாதுளவிரைதோற்கும்படியான | குழற்கு | குழலில் |
| முறுவல் | தந்தபங்க்தியைக் கொண்டு | அணியாள் | அணிகிறிலள்; |
| தோழியர்க்கு | தன்தோழிமார் முன்பே | வளம் | (ரத்நம்தொடக்கமான) நல்லவஸ்துக்கள் |
| அருளாள் | ஸ்மிதம்பண்ணுகிறிலள்; | படு | உண்டாகிற |
| துணை | சேர்த்தியழகையுடைய | முந்நீர் | கடல் (சூழ்ந்த) |
| முலை | முலைகளை | வையம் | பூமியை |
| சாந்துகொண்டு | சந்தநத்தாலே | முன் | மஹாபலிபக்கல் நீரேற்றவன்று |
| அணியாள் | அலங்கரிக்கிறிலள்; | அளந்த | அளந்துகொண்ட |
| குளம் | தடாகத்தில் | மால்என்னும் | பெரியோன் என்னுநின்றாள்; |
| படு | உண்டான | மால் | தன்வ்யாமோஹத்துக்குச் |
| குவளை | குவளைமலர்போன்ற | இனம் | சேர்ந்த |
| கண்இணை | இரண்டு கண்களிலும் | மொழியாள் | பேச்சையுடையாள்; |
| எழுதாள் | அஞ்சநமெழுதுகிறிலள்; | இளம்படி | மருஸ்வபாவையான |
| கோலம் | அழகியதாய் | இவளுக்கு | இவள்திறத்தில் |
| நல் | விலக்ஷணமான | | |
| மலர் | புஷ்பங்களை | | |

என்நினைந்திருந்தாய் இடவெந்தையெந்தைபிரானே! சொல்லு. (உ

வ்யா.—இரண்டாம்பாட்டு. (தளம்படுமுறுவல்) தளமென்று †மாதளமாய், அத்தைதந்தபங்க்திக்குஓப்பாகச்சொல்லக்கடவதிறே' அத்தைச்சொல்லிற்றாதல்; "'தளமென்று பீலிக்காம்பைச் சொல்லு கிறது' என்று ஒருதமிழன் சொன்னாகை ஜீயரருளிச் செய்வர்" என்றருளிச்செய்வர். வெண்மையைப்பற்றச்சொல்லலாமிறே. படுகை யாவது- † உண்டாகையாய், தளம்தோற்றும் முறுவல்; - †இத்தைக் கண்டவாறே அது ஸம்ருதிவிஷயமாகை. அன்றிக்கே, படுகையாவது- அழிகையாய், இம்முறுவலுக்குத் தோற்கும்படியைச் சொல்லிற்று தல். இரண்டுவகையாலும் உபமாநம் சொல்லுவர்களிறே. (தோழியர்க்கருளாள்) †தாய்மார்முன்பு தன்வெறுப்பாலே ஸ்மிதம்பண்ணாளே. †இனிநாயகனுக்கு ஸர்வஸ்வமாயிருப்பதும் இதுதானேயிறே. (க) †"ஸ்மித்த, காந்தஸ்மிதா" என்று அவனீடுபடுமதிறே. †அதுவே யிறே தோழிமார்க்கு ஜீவநம். ஆக, தன்னைபார்த்திருக்கிற தோழி மாரைப் பட்டினிகொள்ளாநின்றாள். †§இவள் நாயகனோட்டை ஸம்ஶ்லேஷத்தால் வந்த ஹர்ஷந்தோற்ற ஸ்மிதம்பண்ணினால் அதுவே தாரகமாக வாயிற்று அவர்களிருப்பது.

(துணைமுலையித்யாதி)†நாயகனையும் பட்டினிகொள்ளாநின்றாள். (துணைமுலை) புறம்பு உபமாநமின்றிக்கே தன்னில்தானொப்பாகச் சொல்லவேண்டும்படியிருக்கிறமுலைகள். (சாந்துகொண்டணியாள்) † இவள் அவன்வரவையுத்தேசித்து முலைகளைச் சாந்துகொண்டு அலங்கரிக்கப்புக்காலிறே "இவளுக்கு இது அபேக்ஷிதமாகாதே" என்று அவனுக்குக் கிஞ்சித்கரிக்கைக்கு அவகாசமுள்ளது. ஆகை யாலே அவனுக்கு அவகாச ப்ரதாநம்பண்ணுகிறிலள்.

(குளமித்யாதி)†அருக்கயத்திலே நின்று அலர்ந்த குவளைபோன்ற கண்களை மங்களார்த்தமாக அஞ்ஜநங்கொண்டு அலங்கரிக்கிறிலள். †ரத்நாகரம்போலே குணாகரமான வஸ்துவை அநுபவிக்கிற கண்ணா கையாலே ஒன்றுகொண்டலங்கரிக்கவேண்டாவிறே. இனி அஞ்ஜநங்கொண்டலங்கரிப்பது மங்களார்த்தமாகவிறே. இவள் அஞ்ஜநத்தாலே அலங்கரிக்கப்புகுமன்றிறே அவனுக்கு கிஞ்சித்கரித்தாநாக அவகாசமுள்ளது, அது செய்கிறிலள்.

---

(க) ரா-ஆர-கஙு-கஉ.

(கோலமித்யாதி) கலம்பகனல்லது தனிப்பூச்சூட்டப் பொருத குழலைப் புஷ்பங்கொண் டலங்கரிக்கிறிலள். (க) *வாசஞ் செய் பூங் குழலாளாகையாலே புஷ்பங்கொண்டு அலங்கரிக்கவேண்டாவிறே. மங்களார்த்தமாகப் புஷ்பங்கொண்டு அலங்கரிக்கிறிலள். நாயகன் விரும்பி யிருக்குமிடங்களை இவள் அலங்கரியா தொழிகையாவது - அவனுடைய தாரகத்ரவ்யத்தை விலக்குகையிறே.

(வளமித்யாதி) †ஸர்வஸாதாரணமான ரக்ஷணத்தைப் பண்ணு மவன் என்னளவிலே நெகிழ இராநின்றான். (வளம்படுமுந்நீர்) ரத்நாகரமென்னுதல். (வளம்படுவையம்) என்று வஸுமதி யென்னுதல். (மாலென்னும்) தன்னுடைய ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்தில் பிச்சேறி யிருக்குமவன். இவ்வ்யக்தி யொன்றையு முபேக்ஷித்திராநின்றான். (மாலினமொழியாள்) தன்னுடைய வ்யாமோஹத்துக்குச்†சேர்ந்த பேச்சையுடையவள். வ்யாமோஹம் வழிந்து புறப்பட்டு அது சொல்லானாற்போலே யிருக்கை.

(இளம்படியிவளுக்கு) இளைதானபடியையுடைய இவளுக்கு. †ம்ருதுஸ்வபாவையான இவளுக்கு; † உம்முடையபக்கல்நின்றும்பிரித்துப்பத்துமாஸம் அசோகவநிகையிலேவைத்தவிடத்திலும் பின்னை (உ) "ஜீவிதஸ்ய, தத்தஸ்ய" என்றிருந்த அவள்படியல்லாத மார்த்தவத்தையுடைய இவளுக்கு. † பட்டருளிச்செய்தாராக ப்ரஸித்தமிறே. "உண்ணவும் பொறாதே பட்டினிவிடவும் பொறாதேயிருக்கும் ஸுகுமாரரைப்போலே, அதிகமான ஸம்ஶ்லேஷ விஶ்லேஷம் பொறுக்க மாட்டாதபடியான திருமங்கையாழ்வார் மார்த்தவ மிருக்கும்படி" என்று. (இவளுக்கித்யாதி) †இவளுடையப்ரக்ருதி யறிந்து கலக்கைக்காகத் திருவிடவெந்தையிலே வந்து எழுந்தருளியிருக்கிற நீ உன்னுடைய திருவுள்ளத்தாலே நினைத்திருக்கிறதென்? (உ)

---

அரு.—இரண்டாம்பாட்டு. (துளம்படுமித்யாதி). அளவில்லாத ஆசையுடைய பெண்பிள்ளைக்கு ஆசைப்பட்டபோதே கிடையாமையால் பிறந்த வெறுப்பின்கார்யத்தைச் சொல்லுகிறாரென்று ஸங்கதி.

(மாதுளம்) மாதுளவிரை. (உண்டாகையாய்) என்றவிடத்திலே - கடலில் முத்துப்பட்டது என்னுமது கண்டுகொள்வது. விவரணம் - (இத்தையித்யாதி). செய்திலள் என்னுதே "அருளாள்" என்று விசேஷித்ததுக்குக் கருத்து (தாய்மாரித்யாதி). "படிகடந்து புறப்படுகை குலமர்யாதைக்குப்போ

---

(க) திரு - வாய் - கo - கo - உ.
(உ) [illegible] - கo.

ராதுகாண்" என்று ஹிதஞ்சொல்லுமவர்களாகையாலே வெறுத்து ஸ்மிதம் பண்ணுளென்று கருத்து. மூந்துற இத்தையருளிச்செய்ததுக்கு ஹார்த்த பாயம் (இனியித்யாதி). "ஸர்வஸ்வம்" என்னுமதுக்கு ஸூசகப்ரமாணம் (காந்தேத்யாதி). "అస్మిన్ మయా సార్ధముదారశీలా శిలాతలే పూర్వముపోపవిష్టా । కాన్తస్మితా లక్ష్మణజాతహాసా త్వామాహ సీతా బహువాక్యజాతమ్-அஸ்மிந்மயாஸார்த்தமு தார சீலா சிலாதலே பூர்வமுபோபவிஷ்டா காந்தஸ்மிதா லக்ஷ்மண ஜாதஹாஸா த்வாமாஹ ஸீதா பஹு வாக்யஜாதம்". "அருளாள்" என்ற பதவாஸனை (அதுவேயித்யாதி). ஜீவநமானபடியை உபபாதிக்கிறூர் (இவளித்யாதி).

"தோழியர்க்கருளாள்" என்று தோழிமாருடைய தாரகத்தையழித்தா ளென்னும் ப்ரகரணத்துக்குச்சேர, "குழற்கணியாள்" என்னுமளவுக்கும் தொகுத்தபாவம் (நாயகனித்யாதி). விஶ்லேஷதசையிலே சாந்துகொண்டு அலங்கரிக்க ப்ரஸக்தியுண்டோ? அதவனுக்கு தாரகமாய் அத்தை யழிக்கைக் கென்ன வருளிச்செய்கிறூர் (இவளவன் வரவையித்யாதி). (க) "கொங்கை மேல் குங்குமத்தின் குழம்பழியப்புகுந்தொருநாள் தங்குமேலென்னாவிதங் கும்" என்றூளிறே. சூடிக்கொடுத்தாள் என்று திருவுள்ளம். இத்தால் இவ ளலங்கரித்திருந்தால் அவனுதரித்திருப்பனென்றதாயிற்று.

(அருக்கயம்) - ஜலஸம்ருத்திமாறூத ஹ்ரதம். "குளம்படுகுவளை"என்று த்ருஷ்டாந்த(ஈஸ)கத விசேஷணத்தாலே பலித்த அர்த்தத்தை விவரியாநின்று கொண்டு, "மங்களார்த்தமாக" என்றத்தை ஸ்த்திரீகரிக்கிறூர்(ரத்நேத்யாதி).

நாயகனிடத்தில் அவள் "அளந்தமால்" என்னக்கூடுமோவென்ன வரு ளிச்செய்கிறூர் (ஸர்வேத்யாதி). "இனம்" என்றது - ஒப்பாய், அதினர்த்தம் (சேர்ந்த) என்றது.

"படி" என்று-சரீரமென்று கீழருளிச்செய்து, அர்த்தாந்தரம்(ம்ருதுஸ்வ பாவையானவித்யாதி). இத்தை விவரிக்கிறூர் (உம்முடையவித்யாதி). மார்த் தவம் இவளுக்கு ஸ்வாபாவிகமென்னுமத்தை ஆப்தஸம்வாதத்தாலே ஸ்த்திரீ கரிக்கிறூர் (பட்டரித்யாதி). இத்தால் - ஸ்ரீஜநகராஜன்திருமகள், விஶ்லே ஷத்திலாறியிருக்கவும் ஸம்ஶ்லேஷத்திலநுபவிக்கவும் வல்லள், ஸ்ரீபராங்குச நாயகியார், விஶ்லேஷத்தில், (உ) "கடியன்கொடியன்" என்னவும், ஸம்ஶ் லேஷத்தில் க்ரமப்ராப்தி பொறுக்கமாட்டாதே பதறவும் வல்லராயிருப்பர், ஸ்ரீகுலசேகரர்பிராட்டியார், தன் ராஜகுலத்தாலே அடைவுவிஷயத்தில் விஶ் லேஷத்தில் துணிவின்றிக்கேயிருக்கவும் வல்லார், பெரியாழ்வார் பெண்பிள்ளை யாகில், விஶ்லேஷத்தில் தன்னை அலங்கரித்துக்கொண்டிருந்தும், ஸம்ஶ் லேஷத்தில் அவனைக் கண்டகாட்சியிலே தணியுமவளாயிருப்பள் திருமங்கை நங்கை, கலக்கவும்பொறூது பிரியவும்பொறூது, மார்த்தவமே ப்ரக்ருதியா யிருக்குமென்றதாயிற்று. "பிரான்" என்றதுக்கு ப்ரயோகோபயோகம் காட் டாநின்றுகொண்டு, தாத்பர்யமருளிச்செய்கிறூர் (இவளுடையவித்யாதி). (உ)

---

(க) நா - தி - அ - ஏ. (உ) தி - வாய் - ரு - ந - ச.

மூ.—சாந்தமும் பூணும் சந்தனக் குழம்பும்
தடமுலைக் கணியிலும் தழலாம்
போந்தவெண் டிங்கள் கதிர்சுட மெலியும்
பொருகடல் புலம்பிலும் புலம்பும்
மாந்தளிர் மேனி வண்ணமும் பொன்னும்
வளைகளு மிறைநில்லா வென்ற
னேந்திழை யிவளுக்கென் னினைந்திருந்தா
யிடவெந்தை யெந்தை பிரானே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சாந்தமும் | கலப்புசேர்ந்த சந்தந | புலம்பில் | கோஷிக்கப்புக்கால் |
| பூணும் | முத்துமாலையும் [மும் | புலம்பும் | (இவளும்) கூப்பிடாநின்றாள்; |
| சந்தனக்குழம்பும் | சந்தனபங்கமும் | | |
| | | மாந்தளிர் | மாந்தளிர்போன்ற |
| தடம்முலைக்கு | பெரியமுலையிலே | மேனி | திருமேனியின் |
| அணியிலும் | அணிந்தாலும் | வண்ணமும் | நிறமும் [து; |
| தழலாம் | நெருப்பாகாநின்றது; | பொன்னும் | விவர்ணமாகாநின்ற |
| போந்த | தோற்றின | வளைகளும் | கங்கணங்களும் |
| வெள் | வெளுத்த | இறை | சற்றேனும் [லை; |
| திங்கள் | சந்த்ரனுடைய | நில்லா | நிலைதொங்குகிறனவி |
| கதிர்சுட | கிரணங்கள் தஹிக்க | என்றன் | என்னுடைய |
| மெலியும் | (அத்தாலே) நோவுபடாநின்றாள்; | ஏந்து | தரிக்கப்பட்ட |
| | | இழை | ஆபரணத்தையுடைய |
| பொரு | அலையெறிகிற | இவளுக்கு என் நினைந்திருந்தாய் இடவெந்தை யெந்தைபிரானே! (௬) | |
| கடல் | ஸமுத்ரமானது | | |

வ்யா.—மூன்றாம்பாட்டு.(சாந்தமுமித்யாதி)† எங்களால் நோக்கலாமெல்லைகழிந்தது. பழகப்புதைத்து ஆறிக்குளிர்ந்த சாந்தும், முத்தாரமும், சந்தனக்குழம்பும். (தடமுலைக்கணியிலும்) † "நிதானமறியாதே நாமிருந்து பரிஹாரம்பண்ணுகையாவதென்" என்று முன்பெல்லாரும் கைவாங்கியிருப்பர்கள்; பின்னையும், இவள்பக்கலொருவாசியின்றிக்கே நோவுபடக்காண்கையாலே "இனிநாட்டார் செய்யுமவற்றையாகிலும் செய்துபார்ப்போம்" என்று இவற்றைக்கொண்டு சிசிரோபசாரம்பண்ணப் புகுவர்கள்; புக்கால், அவைதானே இந்தந(ஊர்ந)மாக வேவாநிற்கும். (பூண்) என்ன - முத்தாரமென்று தோற்றுமோவென்னில்; ஆஶ்வாஸகரமாகப்பண்ணுகிறதாகையாலே முத்தாரமாயிருக்குமிறே. சாந்து†வெவ்வேயபதார்த்தமன்றோவென்னில்; அதுக்காகவிறே ஆறிக்குளிர்ந்த வென்றது. சாந்தென்னும்

காட்டில் †இஸ் §†ஸம்ஸாரங்களோடே கூடினதென்று தோற்றுமோ
வென்னில்; சிசிரோபசாரத்துக்குச் சொல்லுகிறதாகையாலே வரும்,
பூணென்றவிடத்தில் முத்தாரமென்றாப்போலே.†(சாந்தமுமித்யாதி)
வயிரமும் வயிரத்தோலும் ஒன்றாக வேமாபோலேயாயிற்று இவை
யெல்லாமொன்றாக வேகிறபடி. †உலர்ந்தவிறகிலே நெருப்பைக்
கொளுத்தினாற்போலே விரஹக்ருஶமான சரீரத்திலே இவை பட்ட
வாறே பற்றி யெரியாநின்றதாயிற்று.

(போந்தவித்யாதி)†அப்போது தோற்றின சந்த்ரனுடைய இள
நிலாவானதுபட, அத்தாலே மெலியாநின்றாள்.†நிலாச்சுடப்புக்கால்
விலக்கலாவதொன்றில்லையே. இனித்தான் கூடியிருந்தபோது (க)
"முன்னம்முகிழ்த்தமுகிழ்நிலா" என்று அநுகூலமாமிறே. (பொரு
கடல்) † திரையோடு திரை பொராநின்றுள்ள கடல் கோஷிக்க
ப்புக்கவாறே எதிரே ஒருகடல் † ஸ்பர்த்தித்துக் கூப்பிடுமாபோலே
தானுமொக்கக் கூப்பிடாநிற்கும். (மாந்தளிரித்யாதி) மாந்தளிரி
னுடைய நிறம்போலேயிருக்கிற நிறமும் விவர்ணமாகாநின்றது.
(வளைகளுமிறைநில்லா) ஆகாசத்திலே நிற்பது ஒருவளையில்லையே.
(உ)† [శైథిల్యముపయాన్త్యాశు కరేషు వలయాన్యపి - சைதில்யமுபயாந்த்யாசு
கரேஷு வலயாந்யபி]† க்ருஷ்ணனே யன்றிக்கே, இன்னமிவற்றில்
அவனுக்குவாசியுண்டு-அவன் "பிரிவேன்" என்று பிரிவையுணர்த்
தியாகிலும் போமிறே; இவை சடக்கெனப்பாய்க் கொடுநின்றது.

(என்றனேந்திழை) என்னுடைய, தரிக்கப்பட்ட ஆபரணத்தை
யுடையவள்.†இவளாபரணங்களாலே அலங்க்ருதையாயிருக்குமிருப்
பைக் கண்டுகொண்டிருக்குமிதுவே தாரகமாகக் காணுமிவள்தான்
நினைத்திருப்பது. †இவளாபரணம் பூண்டிருக்கு மிருப்பைக்கண்டு
அநுபவிக்கை, எனக்கிவ்வளவோடே பர்யவஸிக்குமாபோலே யிருந்
தது. (இடவெந்தை) (௩) "నైవార్థైర్న చ భూషణైః-நைவார்த்தைர்நச
பூஷணை:" என்னும்படி பண்ணுகைக்கோ நீ இங்கேவந்திருக்கி
றது; † ராமாவதாரத்திலிழவு தீர்க்கைக்காகவன்றோ இங்குவந்திருக்
கிறது. ... ... ... ... ... (௩)

§ (பா) ஸம்ஸ்காரங்களோடே

(க) பெரியதிருமடல் (உ) (௩)

அரு.—மூன்றாம்பாட்டு. (சாந்தமுமித்யாதி) கடகனிடத்திலும் வெறுப் போடிருந்தவளவன்றிக்கே, விரஹஜ்வரம் கிளர்ந்து கார்ஶ்யமடையாநின்றா ளென்கிறாளென்று ஸங்கதி.

"அணியிலும்தழலாம்" என்கைக்கு ஹார்த்தபாவம் (எங்களாலித்யாதி). சாந்து - குங்குமம், கஸ்தூரிமுதலான பரிமளவஸ்துவோடே மர்த்தித்ததென்றும், சந்தனக்குழம்பு - கேவலசந்தநபங்கமென்றும் பேதம்கொள்ளுவது. தோழிமார்களித்தனைபோதும் சாந்துகொண்டணியாதிருக்கத் தாங்களாறியிருந்தவநந்தரம் அணியவந்ததுக்குக்கருத்தென்னென்னவருளிச்செய்கிறார் (கிதாநமித்யாதி). (வெவ்வியபதார்த்தமன்றோ) என்றதுக்கு - குங்குமகஸ்தூரிகளின் ஔஷ்ண்யம் கலந்திராதோவென்றபடி. (ஸம்ஸாரங்கள்) என்றதுக்கு - நஞ்சும் குட்டியுமாயிருக்கும் ஸம்ஸாரத்தைப்போலே அநேக விசேஷங்களென்றபடி. ப்ரதீக க்ரஹணபூர்வகம் ஒரு த்ருஷ்டாந்தமருளிச்செய்கிறார் (சாந்தமுமித்யாதி). அஜ்ஞாதமானத்தை யுருவாதே தானேயுதறினால் அதிலேபிறந்த நெருப்புப்பொறியாலே எல்லாம் வெந்துபோமாபோலே, இவளுடம்பில் பிறந்த விரஹாக்நிதானே இவளுடைய சாந்துமுதலானவற்றையும் எரிக்கிறதென்று தாத்பர்யம். அன்றிக்கே, வயிரமும் அதினோடுங்கூடப் பச்சையாயிருக்கச்செய்தேயும் மரத்திலேயுலர்ந்த கொம்பினுழந்து பிறந்த அக்நியாலே எல்லாம் வேகுமாபோலேயென்று யோஜிக்கவுமாம் இத்தை விவரிக்கிறார் (உலர்ந்தவித்யாதி).

இப்பெண்பிள்ளை தாபமாற்றுகைக்காக அம்ருதஹஸ்தனான ஔஷதீசன் வந்து கையாலே குளிரத்தடவப்புக்கான், அதுதானும் ஒருநெருப்பாய் அதுக்கு மெலியாநின்றாளென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (அப்போதித்யாதி). "அப்போதுதோற்றின" என்கிற விசேஷணத்துக்கு - இப்படி தாத்பர்யம் கொள்ளவேணுமிறே. அநுகூலமே ப்ரதிகூலமானால் செய்யத்தக்கதுண்டோ என்னுமிடுபாட்டை யருளிச்செய்கிறார் (நிலாவித்யாதி). சந்த்ரனைக்கண்டவாறே கடல் முழங்கத்தொடங்கிற்று, அதுதானும் நெருப்பையுருக்கிவார்த்தாற்போலேயிருக்கையாலே புலம்பப் புக்காளென்னும் பாவத்தை ஸூசிப்பிக்கிறார் (திரையோடித்யாதி). (ஸ்பர்த்தித்து) என்றத்தால் இவ்வர்த்தம் ஸூசிதமிறே. (க) "கடலுமாலுமாலோ" என்று பாதககோடிகடிதமிறே. "வளைகளுமிறைநில்லா" என்றதுக்கு ஸம்வாதம் (சைதில்யமித்யாதி). "ஆசு" என்றத்துக்கு உட்கருத்தருளிச்செய்கிறார் (க்ருஷ்ணனேயித்யாதி).

இப்போது ஆபரணங்களுண்டோவென்ன (இவளித்யாதி). "என்நினைந்திருந்தாய்" என்றத்துக்கு உட்கருத்தருளிச்செய்கிறார் (இவளாபரணம் பூண்டித்யாதி). "பிரானே" என்றதுக்குக் கருத்து (ராமாவதாரத்திலித்யாதி). ... ... (ந)

(க) தி - வாய் - சு - சு -

மூ.—ஊழியில்பெரிதால் நாழிகையென்னு
மொண்சுடர் துயின்றதாலென்னும்
ஆழியும் புலம்பு மன்றிலு முறங்கா
தென்றலும்தீயினில் கொடிதாம்
தோழியோவென்னும் துணைமுலையரக்கும்
சொல்லுமி னென்செய்கேனென்னும்
ஏழையென்பொன்னுக் கென்னினைந்திருந்தா
யிடவெந்தை யெந்தைபிரானே. (ச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நாழிகை | ஒருநாழிகைப்பொழுது | தோழீ | பாங்கி! |
| ஊழியில் | ஒருகல்பத்தைக்காட்டிலும் | ஓ! என்னும் | ஓ! என்றுகூப்பிடாநிற்கும்; |
| பெரிது | மிகநெடிதாகின்றது | துணைமுலை | இரண்டுமுலைக்கண்களையும் |
| என்னும் | என்றுசொல்லாநின்றாள்; | அரக்கும் | அரக்காநின்றாள்; |
| ஒண் | மிக்கதேஜஸ்ஸையுடையனான | என்செய்கேன் | என்னசெய்வேன் |
| சுடர் | ஆதித்யன் | சொல்லுமின் என்னும் | சொல்லுங்கோள் என்னும் |
| துயின்றதுஎன்னும் | அஸ்தமித்தானென்பாள்; | ஏழை | அதிசபலையான |
| ஆழியும் | ஸமுத்ரமும் | என் | என்னுடையவயிற்றில்பிறந்தவளாய் |
| புலம்பும் | கோஷியாநின்றது; | பொன்னுக்கு | ஶ்லாக்யையானஇப்பெண்விஷயத்தில், |
| அன்றிலும் | அன்றில்பறவையும் | | |
| உறங்கா | உறங்குகிறதில்லை; | | |
| தென்றலும் | தென்றல்காற்றும் | | |
| தீயினில் | நெருப்பைக்காட்டிலும் | | |
| கொடிதாம் | கொடிதாகவீசாநின்றது; | | |

இடவெந்தை யெந்தைபிரானே! என்னினைந்திருந்தாய் சொல்லு. (ச)

வ்யா.—நாலாம்பாட்டு. (ஊழியில்பெரிதால் நாழிகையென்னும்) †ஒருகல்பமாகிலும் ஸம்ஹ்ருதமாய்க் கிடக்கிறதுபாடாற்றலாம், அந்நாழிகைகளைக் காணலாயிருக்கிறதில்லை. (க)† "நேதி நேதி - நேதிநேதி" என்கையொழிய இன்னத்தோடொக்குமென்று சொல்லவொண்ணாது.†ஊழி பெருத்தது நாழிகை சிறுத்திருக்கக்கடவதான மர்யாதை குலைந்தது. (ஒண்சுடர் துயின்றதாலென்னும்)†நாழிகையை அளந்துதருகிற ஆதித்யனும்போய் †முடிந்தானென்றாள். †கல்பத்திலும் உபஸம்ஹ்ருதமாம் பதார்த்தங்களோடே ஸம்ஹார்யனுமவனிறே ஆதித்யன்; இப்போது அங்ஙனன்றிக்கே, உளனாய் ஸஞ்சரியா

(க) ப்ருஹதா

நிற்கச்செய்தேயும் கார்யம்பிறக்கக்காண்கிறிலோம். † தன்னுடைய ஸந்நிதியாலே ராத்ரிவ்யஸநத்தை யடையப் போக்கிக்கொடுவந்து தோற்றக்கடவஆதித்யனும்வந்துதோற்றுகிறிலன். (க) † "பீஷோதேதி ஸூர்ய:" என்கிற ஈஸ்வராஜ்ஞை குலைந்தது போலே. நித்ரையை நினைத்தல், † தீர்க்கநித்ரையை நினைத்தல்.

(ஆழியும் புலம்பும்) "நம்மில் † சிறியவன் பாதக மாகாநிற்க நாம் தான் பேசாதிருக்கிறதென்" என்று கடலானது பாதகமாகப்புக்கது. † பேரளவுடைய கடலானது தைர்யபங்கம் பிறந்து புலம்புகிறபடி, பேரளவுடையவன் தன்னளவிலே தைர்யபங்கம்பிறந்து பேசும் பேச்சுக்கு ஸ்மாரகமாய் நலியாநின்றதாயிற்று. (அன்றிலு முறங்கா) அன்றிலினுடைய உறங்காமை ஸம்ஶ்லேஷ ஸமயத்தில் நாயகனுடைய நித்ராவிரஹத்துக்கு ஸ்மாரக மாகாநின்றதாயிற்று. (தென்றலும் தீயினிற் கொடிதாம்) † தென்றலினுடைய குளிர்த்தியானது, காந்தனுடைய கரஸ்பர்சத்துக்கு ஸ்மாரகமாய் பாதகமாகாநின்றது. தென்றலினுடைய வெம்மை ஆற்றவேண்டில் கேவலாக்நியிலே பொகட்டு ஆற்றவேண்டும்படியிரா நின்றது.

(தோழியோவென்னும்) † தனக்கொன்று பாதகமானால் "அம்மே!" என்கைக்கு நான் பாக்யம் பண்ணிற்றிலேன். † "அவனோடே சேரவே ஸகலபதார்த்தங்களு மநுகூலமாய்க் † குடநீர்வார்க்குங் காண்" என்று சொன்னாயே பாவி! நீ, † ஊர் பகையாம்படி பண்ணினாயே. † இவள் "தோழியோ" என்னப் பார்த்திராதே பருவம். (துணைமுலையரக்கும்) முலைகளானவை "எனக்கடைத்த விஷயத்தை நீ காட்டு" என்று நலியப்புக்கவாறே, க்ஷாமகாலத்தில் ப்ரஜைகள் "சோறு, சோறு" என்றால் † "வாய்வாய்" என்பாரைப்போலே, முலைகளை † அரக்கா நிற்குமாயிற்று. (உ) † [முன்னிருந்து மூக்கின்று] † காணக்காணப் பருவங்கழியா நின்றதாயிற்று. பருவங்கழிவதானால் பின்னை இவை முதுகிலேயானாலாகாதோ? (சொல்லுமினென் செய்கேனென்னும்) † தென்றல் தொடக்கமான பதார்த்தங்கள் போலு மன்றிறே முலைகள் நெருக்கப்புக்காலுண்டான நலிவு. அவை பாதகமாகிறபோது "தோழியோ" என்றாள், இவை பாதகமாகப் புக்கவாறே தோழிமாரோடு தாய்மாரோடு வாசியற எல்லாரையும் சேர்

(க) தை - ஆந -    (உ) பெரியதிருமடல் -

த்துச் சொல்லுங்கோளென்கிறுள். (ஏழை) "கிடையாதுகாண்" என்றால் கிடைக்குமதிற்போலே சாபலத்தைப்பண்ணுமவளாயிற்று.

(என்பொன்னுக்கு) "இவளும் தன் சாபலமும் பட்டதுபடுகிறுள்" என்று கைவாங்கியிருக்க வொண்ணுதபடி ஶ்லாக்யையாயிருக்குமவள். (இடவெந்தை) உக்தியாலே தன் சாபலந்தோற்றவிருக்கிற இவளைப்போலன்றிக்கே †க்ரியையாலே சாபலந்தோற்ற விருக்கிற நீ, நினைத்திருக்கிறதென்?. ... ... ... (௪)

அரு.——நாலாம்பாட்டு. (ஊழியிலித்யாதி) கீழ்ப்பாட்டில் புலம்புதலை முக்தகண்டமாகக் காட்டுகிறுரென்று ஸங்கதி.

"ஊழி" ப்ரளயகாலமாய், அப்போது நாயகனையறிய யோக்யதையில்லாமையாலும், பாதக பதார்த்தங்களில்லாமையாலும் பாடாற்றலாம்; அதிலும் க்ரூரம் இந்த நாழிகையென்னுமபிப்ராயத்தை யருளிச்செய்கிறுர் (ஒருகல்பமித்யாதி). "பெரிது" என்கையாலே, "இப்படியன்று, இப்படியன்று" என்று சொல்லுகையால், ஸத்ருசமாகச் சொல்லப்போகாதென்னுமது தோற்றுகிறதென்கிறுர், (நேதீத்யாதி). "ஆல்!" என்ற ஆஶ்சர்யத்துக்கு பாவம் (ஊழி பெருத்தித்யாதி). விஷாதஸூசகமாய், அத்தாலே ஸூசிதமாகவுமாம். "பெரிதால்நாழிகை" என்றவநந்தரம் சொன்னதுக்குக் கருத்தருளிச்செய்கிறுர் (நாழிகையையித்யாதி). (முடிந்தான்) என்றது - (நீர்க்கநித்ரை) என்னும்பக்ஷத்திலே, "முடிந்தான்" என்கைக்கு ஜ்ஞாபகமென்னென்னவருளிச்செய்கிறுர் (கல்பத்திலுமித்யாதி). கேவலநித்ரையானபக்ஷத்திலே தாத்பர்யமருளிச்செய்கிறுர் (தன்னுடையவித்யாதி). அன்றிக்கே, கீழ்வாக்யம் கேவலநித்ராபக்ஷத்துக்கு உபபா(ட)தகமாய், இவ்வாக்யம் உண்மையைச்சொன்னதுக்குத் தாத்பர்யத்தைச்சொல்லுகிறதாகவுமாம். "ஆல்" என்றதின் கருத்து (ப்ரேக்ஷாதேதித்யாதி).

(சிறியவன்) ஸூர்யன். (ஸூர்ய) பாதகமாம் வழியைக்காட்டுகிறுர் (பேரளவுடையவித்யாதி). "தீயினிற்கொடிதாம்" என்றதுக்குத் தாத்பர்யம் (தென்றலினுடையவித்யாதி).

லோகத்திலே இடறினல் "அம்மே!" என்னக்கண்டோமே, இத்தனை பாதகங்கள் நலிந்தால், இவள் "தோழீ" என்கிறதென்னென்னவருளிச்செய்கிறுர் (தனக்கித்யாதி). அவனைத்தான் ஸந்தோஷிக்கைக்குக் கருதினமுறுவல் தோழியர்க்கருளாதவளவன்றோவென்ன (அவனோடேயித்யாதி). (குடநீர்வார்க்கும்) குளிரப்பண்ணும். "ஓ" என்றதுக்குத் தாத்பர்யம் (ஊர்பகையித்யாதி). மேலுக்கவதாரிகை (இவளித்யாதி). இவள் க்லேசத்தைப்பார்த்து நில்லாதே மூலைகளென்று கருத்து. (வாய்வாய் என்கை) கபோலதாடனம்

பண்ணுகை. (அரக்காநிற்கும்) அடக்காநிற்கும். இவளடக்கும்படி மூலைகள் வளருமோவென்ன (முன்னித்யாதி). "மூக்கின்று, என்றதுக்குத்தாத்பர்யம் (காணவித்யாதி)."முன்னிருந்து" என்றதுக்கு ஹார்த்தபாவம்(பருவமித்யாதி). "தோழி" என்று ஏகவசநமாகச் சொல்லியிருக்க, இங்கே "சொல்லு மின்" என்று பஹுவசநப்ரயோகம்பண்ணுகைக்கு ஹேதுபூர்வகம் பாவமருளிச்செய்கிறார் (தென்றலித்யாதி).

(க்ரியையாலே) என்றது - திருமூலைத்தடத்தில் திருமுகத்தை வைத்துக் கொண்டேயிருக்கையாலேயென்கை. ... ... ... (ச)

மூ.—ஓதிலுமுன்பேரன்றி மற்றோதாள்
உருகும் நின் திருவுரு நினைந்து
காதன்மைபெரிது கையறவுடையள்
கயல் நெடுங் கண் துயில்மறந்தாள்
பேதையேன்பேதை பிள்ளைமைபெரிது
தெள்ளியள் வள்ளி நுண்மருங்குல்
ஏதலர்முன்னா வென் நினைந்திருந்தா
யிடவெந்தை யெந்தைபிரானே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இடவெந்தையெந்தை பிரானே! | | கண் | கண்களில் [யை |
| ஓதிலும் | வார்த்தைசொல்லும் போது | துயில் | நித்ரைகொள்ளுகை |
| உன்பேரன்றி | உன்பேரையொழிய | மறந்தாள் | மறந்துவிட்டாள் |
| மற்று | மற்றொருவர்பேரை | பேதையேன் பேதை | மிகவும்சபலையான என்பெண்ணினுடைய |
| ஓதாள் | சொல்லுகிறிலள்; | பிள்ளைமை | பிள்ளைத்தனம் |
| நின் | உன்னுடைய | பெரிது | பெரிதாயிராநின்றது; (உம்மளவில்வந்தால்) |
| திருவுரு | வடிவழகை | தெள்ளியள் | மிகத்தெளிவுடையளாயிராநின்றாள்; |
| நினைந்து | நினைத்து | வள்ளி | வள்ளிக்கொடிபோன்று [ள |
| உருகும் | உருகாநின்றாள்; | நுண் | நுண்ணிதாயிருந்துள் |
| காதன்மை | (உன்விஷயத்தில்) ஆசையானது | மருங்குல் | இடையையுடையளானவிவளை |
| பெரிது | மேன்மேலெனப்பெருகாநின்றது; (அத்தாலே) | ஏதலர்முன்னா | உகவாதார்முன்னே |
| கையறவுடையள் | கைப்பொருளிழந்தாரைப்போலே வருத்தமுறாநின்றாள்; | என்நினைந்திருந்தாய் | என்செய்ய நினைத்திருக்கிறாய். (இ) |
| கயல் | கயல்போன்று | | |
| நெடு | நீண்டிருந்துள்ள | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு.(ஓதிலும்)† முதல்தன்னிலே வார்த்தை சொல்லாதே யிருக்கும்போதே † பெரியது; சொன்னாலோ (உன்

பேரன்றிமற்றேதாள்) "ஐயர், ஆச்சி" என்னத்தவிர்ந்தாள். (உரு கும் நின்திருவுரு நினைந்து)நாமத்வாரா †தர்மியை அநுஸந்தியா, நீர்ப்பண்டம்போலே மங்கியிருக்கும். (காதன்மைபெரிது)†வடிவழகினளவல்லவாயிற்று ஆசையின்பெருமை. (கையறவுடையள்)†ஆசையினளவல்லவாயிற்று இழவின்கனம். இழவுக்கவதி யென்னென்னில்; (கயலித்யாதி) கயல்போலே முக்த்தமாய்ப் பரப்புடைத்தாயிருக்கிற கண். பெரிய ஊர்கள் குடிவாங்கினாற்போலே, கண்ணிற் பரப்படங்கலும் நித்ராதத்வம் குடிவாங்கிற்று.

(பேதையேன்பேதை) அறிவுகேடியான என்பெண்பிள்ளை. விளைவதறியாதே இவளைப் பெற நோன்புநோற்கும்படியான அறிவுகேட்டையுடைய; (க) "நெடுங்காலமுங் கண்ணன் நீண்மலர்ப்பாதம்" என்கிறபடியே. (பிள்ளைமைபெரிது)†பருவத்தி னளவல்லவாயிற்று மௌக்த்யத்தின் பெருமை. †லோகயாத்ரையில் வந்தால் தன் பருவத்திலுள்ளார்க்குள்ள அறிவு போராது. (தெள்ளியள்) உம்மளவில் வந்தால் ஶ்ருதோபநிஷத்கரளவிலுமல்லள். (வள்ளிநுண் மருங்குல்)†இவள் ஸ்வபாவத்தை †யநுஸந்தித்துக் கைவிடவொண்ணுதபடியாயிற்று வடிவிற்பசை. பிள்ளைத்தனமும் தெள்ளிமையும் அப்ரயோஜகம், வடிவுபோருமாயிற்று உமக்குக் கைவிடவொண்ணுமைக்கு. (ஏதலர்முன்னு) "ஆசைப்பட்டாயிற்றே, அழகிதாகவுண்டாயிற்றே" என்று ஏசுகிற சத்ருக்கள் முன்பே. (என்நினைந்திருந்தாய்) (உ) [ త్వదగ్రే శరణాగతానాం పరాభవః - த்வதக்ரே சரணாகதாநாம் பராபவ:] உகவாதார்முன்பே நம்முடையார் நோவுபடவிட்டுப் பார்த்திருக்குமது நமக்குப்போராது" என்றிருக்கக்கடவ நீர், இவளிடையாட்டத்தில் நினைந்திருந்ததென்? [న తేనురూపః - நதேநுரூப:]†ஶ்ரீவைகுண்டநாதனுக்காகில் போருமென்னவுமாம். இப்படி கைவிட்டிருக்குமது உமக்குப்போராது. ... ... (ரு)

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (ஓதிலுமித்யாதி) "சொல்லுமினென்செய்கேன்" என்று அவள்கேட்டவாறே, நீங்களெல்லாருங்கூடிப் போதுபோக்காகில் க்ரியாவிசேஷங்களைச் சொல்லிக்கொண்டு நெஞ்சை அந்யபரமாக்கியும் தாங்கப்பண்ணினாலாமே! என்னுமாகாங்க்ஷையிலே சொல்லுகிறாளென்கிறாரென்று ஸங்கதி.

---

(க) தி - வி - ருஎ. (உ) ஸ்தோ - ரு - உ௫.

ஓதுகையாவது - சொல்லுகையாய். அதுதானும் பெண்பிள்ளைக்கு சிசுத்வாவஸ்த்தையில் வார்த்தைகற்கையாய், அத்தசையிலும் உன்பேரன்றி மற்றறியாளென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (முதல்தன்னிலேயித்யாதி). பெரியது - தெரியாதது. ஓதும்போதிலுமென்று சப்தார்த்தம். (தர்மியை) விக்ரஹவிசிஷ்டனான நாமாஶ்ரயனை. (வடிவு) என்றது-ஈஶ்வரன்வடிவென்றபடி. "கை" என்று - கையில் பொருளைச்சொல்லிற்றாய், "அறவு" என்று - இழக்கையைச்சொல்லிற்றாய், "உடை" என்கிறது - பூமாவிலேயாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆசையித்யாதி).

"பேதை" என்று சொல்லிவைத்து, "பிள்ளைமை" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (பருவத்தினித்யாதி). இப்படி மௌக்த்யத்தைச்சொன்னால், "தெள்ளியள்" என்று மேலே சொல்லுமத்தோடு விரோதியாதோவென்ன வருளிச்செய்கிறார் (லோகேத்யாதி). வள்ளிக்கொடிபோலே நுண்ணிதான இடையையுடையவளென்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவளித்யாதி). (அநுஸந்தித்து) என்றவநந்தரம், கைவிடநினைத்தாலும் என்று கூட்டுவது. "நாத! ந-அநுரூபஃ" என்னவேயமைந்திருக்கவும், "தே" என்கையாலே - அர்ச்சாவதாரமாகவிருக்கும் தேவர்க்கு என்று தாத்பர்யமாகையாலே அருளிச்செய்கிறார் (ஸ்ரீவைகுண்டேத்யாதி). (என்னவுமாம்) என்றது - சொல்லலாமென்றபடி; பக்ஷாந்தரஸூசகமன்று. ... ... (ரு)

ஶ.—தன்குடிக்கேதும் தக்கவாநினையாள்
  தடங்கடல்நுடங்கெயி லிலங்கை
வன்குடிமடங்க வாளமர் தொலைத்த
  வார்த்தைகேட் டின்புறும் மயங்கும்
மின்கொடிமருங்குல் சுருங்க மேல் நெருங்கி
  மென்முலை பொன்பயந்திருந்த
வென்கொடியிவளுக் கென்னினைந்திருந்தா
  யிடவெந்தை யெந்தைபிரானே. (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தன் | தன்னுடைய | வன் | வலியராக்ஷஸருடைய |
| குடிக்கு | குலத்துக்கு | குடி | குலமானது |
| தக்கவா | தகுந்தமார்க்கம் | மடங்க | அழியும்படி |
| ஏதும் | ஒன்றும் | வாள் அமர் | கொடியயுத்தத்திலே |
| நினையாள் | ஆராய்ந்தறிகிலள்; | தொலைத்த | நிரஸித்த |
| தடம் | பெரிய | வார்த்தை | வ்ருத்தாந்தத்தை |
| கடல் | கடலையும் | கேட்டு | கேட்டு |
| நுடங்கு | வளைந்திருந்துள்ள | இன்புறும் | ஆநந்திக்கும்; (திரியட்டும்) |
| எயில் | மதிளையுமுடைய | | |
| இலங்கை | லங்கையிலுள்ள | மயங்கும் | மயங்காநிற்கும்; |

| | | | |
|---|---|---|---|
| மின் | மின்னலையும் | பொன்பயந்திரு | பொன்நிறமான பசந்த லைபூத்துக்கிடக்கிற |
| கொடி | வஞ்சிக்கொடியையுமொத்த | மெல் | மெல்லிய [ளான |
| மருங்குல் | இடையானது | முலை | ஸ்தநங்களையுடைய |
| சுருங்க | நுடங்கும்படி | என்கொடி இவளுக்கு | என்பெண்ணான இவள்விஷயத்தில் |
| மேல் | மேலே | இடவெந்தைஎந்தைபிரானே! என்னுந்திருந்தாய் சொல்லு. (௬) | |
| நெருங்கி | நெருக்கமாக | | |

வ்யா.—ஆறும்பாட்டு. (தன்குடிக்கேதும்) நம்குடி என்னாதே "தன்குடி" என்கிறாளாயிற்று, "எம்பெருமானார் தர்சநம்" என்னுமாபோலே. †நம்ப்ரதிபத்தியாலே சொன்னோமாகை யன்றிக்கே பெருமாள் "இராமாநுசனுடையார்" என்றே யருளிச்செய்வர். †"பெருவிலையனான ரத்நத்தை நடுவே இட்டுக்கோத்தால் முன்னும் பின்னுமொக்க விலைபோமாபோலேகாண்" என்று பிள்ளான். (தன்குடிக்கேதும் தக்கவா நினையாள்) இவள் நிலையிருந்தபடியிது, நீரினி †உம்முடைய மர்யாதைநோக்கிக்கொள்ளப்பார்த்தீரோ? இல்லையோ? என்கிறாள். †இவளைத்துடங்கிக்காணு மிக்குல மர்யாதை நடத்துவதாக நினைத்திருந்தது. தன்னைத்தொடங்கிக் குலமர்யாதை நடத்துவதாக †நினைத்திருக்கத் தானித்தைக் கடலிலே கவிழ்க்கப்பார்க்கிறாள். †(தன்குடிக்கு) (க) "ஜநகாநாம்குலே - ஜநகாநாம்குலே" என்கிறபடியே - இவள் பிறந்தபின்பாயிற்று இக்குடியில் முன்பில்லாத ஏற்றமெல்லா முண்டாயிற்று. ஒருநாள் பட்டர் இனிதாக வாசித்தபடியைக் கேட்டருளி எம்பாரெழுந்திருந்து நின்று கண்ணநீரை விழவிட்டு சிதிலாந்தஃகரணராய் பட்டரைக்காட்டி, (க) "ஜநகாநாம் குலே கீர்த்திம் ஆஹரிஷ்யதி மே ஸுதா - ஜநகாநாம்குலேகீர்த்தி மாஹரிஷ்யதி மே ஸுதா" என்றருளிச்செய்தாராம். (உ)†"தத்தஸ்ய-தத்தஸ்ய" என்கிறபடியே நம்முடைய பேற்றுக்கு நமக்கு வருந்துகைக்கு ப்ராப்தியில்லை, "அவனாலேபேறு" என்றிருக்கும்படி யாயிற்று. †"பெறுவதவனையாகில் இக்க்ரமங்கொண்டு கார்யமென்" என்கிறாநின்றாள் அவள்; "முகத்திலே விழித்துக்கொண்டு நின்று க்ரமம் பார்க்கவமையாதோ?" என்கிறாநின்றாளிவள். (ஏதும் தக்கவா நினையாள்) †மடலைக்கடைக் கணிப்பது,வேணயுத்க்ரதநத்தி லொருப்படுவதாகா நின்றாள். (நினையாள்) †திருத்தாயார்தான் இவள் நினைவையும் அடியொத்துகிறாள் காணும் இவளை இழக்கமாட்டாமையாலே.

(க) ரா - பா - (உ) ரா - ஸு -

(தடங்கடலித்யாதி) வேண்யுத்க்ரதநத்திலொருப்பட வேண்டாதபடி வந்துஉதவும்படியை யநுஸந்தித்து இனியளாகாநிற்கும்; †அதிலேயொருப்பட்டவளவிலேவந்து உதவினவனிறே. பரப்புடைத்தான கடலை அகழாக வுடைத்தாய், சத்ருக்கள் கேட்டபோதே † நடுங்கும்படியான †மதிளையுடைத்தாய். அன்றிக்கே, †புரிப்புடைத்தான மதிளென்னுதல். (இலங்கை வன்குடிமடங்க) ஊரில் அரணை யன்றிக்கே வரபலத்தாலே பல்கிப்பரந்திருந்துள்ள குடியானது திரியட்டும் முடிந்துபோம்படியாக. †ராக்ஷஸரைப்போலே மாயையாலன் [illegible], திறமுடைத்தான பூசலிலே வன்குடி மடங்கத் துளைத்தவா [illegible] யுண்டி-ஸ்ரீராமாயண வ்ருத்தாந்தம், அத்தைக்கேட்டு. (இன்புறும்) "நம்மவஸ்த்தை யுடையளா யிருப்பாளொருத்திக்கு உதவினபோதே எனக்கு முதவினவனன்றோ" என்று அத்தாலே இனியளாம். (மயங்கும்) "உதவாதவ னுதவாதொழிகை யன்றிக்கே உதவும் ஸ்வபாவனாயிருந்து வைத்து, நம்தசை இதுவாயிருக்க உதவாதொழிவதே!" என்று மோஹிக்கும். †"நம்தசையை யுடையா ளொருத்திக்கு உதவினவனன்றோ" என்று அந்த அண்ணிமையை அநுஸந்தித்து இனியளாய். "அணித்தாக உதவினவன் நமக்கு உதவவாராதொழிவதே" என்று மயங்கும்.

(மின்கொடியித்யாதி) மயங்கின விழக்கலாமவளோ? இவள். மின்கொடிபோலேயிருக்கு மிடையானது சுருங்கும்படியாகமேலே நெருங்காநிற்குமாயிற்று. †மேலே யிருந்து கீழே வெட்டுவாரைப் போலே தன்குடியிருப்பை யழியாநின்றதாயிற்று. (மென்முலை) முலைக்குக் காடிந்யம் ஸ்வபாவமாயிருக்கச்செய்தே "மென்முலை" என்கிறது - விரஹஸஹ மல்லாமையாலே. (பொன்பயந்திருந்த) இதடைய மண்ணீடாய்க் கழிந்ததாயிற்று. (என்கொடி) இவளுடைய வைலக்ஷண்யத்துக்கு உதவாதொழியிலும் தன்வயிற்றில் பிறப்புக்கு உதவாதொழிய வொண்ணாதென்றிருக்கிறாள். (இவளுக்கென்நினைந்திருந்தாய்) இவளுடைய வைவர்ண்யமும், அத்யவஸாயமும், செல்லாமையும், வடிவழகும், பிறப்பிருந்தபடியாலும் உமக்கு உதவாதொழியப்போமோ? (இடவெந்தை யெந்தைபிரானே) இவளைக்காட்டி லுமதகுண்டான வைவர்ண்ய த்யோதகமிறே திருவிடவெந்தையிலிருப்பு. உடம்பு வெளுப்பன்றாகில் ஸ்ரீவைகுண்டத்திலிருக்க வமையுமிறே. உம்முடைய வைவர்ண்யந் தோற்றத் திரு

விடவெந்தையிலேவந்து எழுந்தருளியிருக்கிற நீர் இவளிடையாட்டத்தில் நினைத்திருந்ததென்?... ... ... ...(சு)

அரு.—ஆரும்பாட்டு. (தன்குடிக்கித்யாதி) துரும்புநறுக்கில் ஸாதநமாமென்று துணிந்திருக்குமுங்கள் வயிற்றிலிப்பிறந்த பெண்பிள்ளை யென்பேரையோதுகிறதும், என்னுருவை நினைத்து உருகுகிறதும் செய்தாளென்றால் இது மெய்கொள்ளப்போமோ வென்று அவனுக்குக்கருத்தாக; சொல்லுகிறாளென்கிறாரென்று ஸங்கதி.

திருக்கோட்டியூர்நம்பி, "எம்பெருமானார் தர்சநம்" என்று எல்லார்க்கும் ப்ரதிபத்திபிறக்கும்படி தம்ப்ரதிபத்தியாலே யருளிச்செய்தமாத்ரமன்றோவென்ன (நம்ப்ரதிபத்தியாலேயித்யாதி). முன்புள்ளாரும் பின்புள்ளாருமிருக்க, இவரையிட்டே நிரூபிக்கைக்கு ஹேதுவென்னென்னவருளிச்செய்கிறார் (பெருவிலையனித்யாதி). (உம்முடையமர்யாதை) என்றது - இவள் ஸ்வயத்நத்திலே மூளுவதற்குமுன்னே முகங்காட்டுகையென்கை. தன்குடியின் மர்யாதைகளைச்செய்ய நினையாளென்னாதே, "குடிக்குத்தக்கவா" என்றதுக்கு உட்கருத்தருளிச்செய்கிறார் (இவளையித்யாதி வாக்யத்வயத்தாலே). (நினைத்திருக்க) கருத்தாயார் நினைத்திருக்க. குலமர்யாதைமுன்புதானே நடந்துகொண்டுவாராதோ? இவளைத் துடங்கி நடத்தவேண்டுமோவென்னும் சங்காபரிஹாரார்த்தம் ப்ரதீகக்ரஹணம் (தன்குடிக்கு) என்று. இந்தத்திருத்தாயாரைப்போலே சொன்னார்தானுண்டோவென்னவருளிச்செய்கிறார் (தத்தஸ்யேத்யாதி). ஆனால் த்வரிக்கவேண்டுவானேனென்ன வருளிச்செய்கிறார் (பெறுவதித்யாதி). இது ஸம்சயம். "ஏதும்" என்கைக்குத் தாத்பர்யம் (மடலையித்யாதி). "நினையாள்" என்கைக்கு - அவள்நினைவுதெரியுமோவென்ன வருளிச்செய்கிறார் (திருத்தாயாரித்யாதி).

(அதிலே) வேண்யுத்க்ரதநத்திலே. (நடங்கும்படியான) நடுங்கும்படியானவென்றபடி. "எயில்" என்றதினர்த்தம். (மதிள்) என்றது. (புரிப்புடைத்தான) கோணமாகவளைப்புடைத்தான. "வாள்" என்று-ஒளியாய், அதாவது-செவ்வையானபூசலென்று தாத்பர்யமருளிச்செய்கிறார் (ராக்ஷஸரைப்போலேயித்யாதி). வார்த்தைகேட்கை இரண்டுக்கும் ஹேதுவாமோவென்ன வருளிச்செய்கிறார் (நம்தசையையித்யாதி).

சுருங்கமேல்நெருங்குகை - இடையொடியும்படி முலைமேலே பணைக்கை என்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (மேலேயிருந்தித்யாதி) (சு)

மூ.—உளங்கனிந்திருக்கு முன்னையே பிதற்று
முனக்கன்றி யெனக்கன்பொன்றிலளால்
வளங்கனி பொழில் சூழ் மாலிருஞ்சோலை
மாயனேயென்று வாய் வெருவும்

களங்கனி முறுவல் காரிகை பெரிது
கவலையோடவலம் சேர்ந்திருந்த
இளங்கனி யிவளுக் கென் னினைந்திருத்தா
யிடவெந்தை யெந்தைபிரானே. (எ)

| பதம். | உரை. |
|---|---|
| | (இப்பெண்பிள்ளை உன்னையேயெப்பொழுதும் நினைக்கையாலே) |
| உளங்கனிந்திருக்கும் | ஸந்துஷ்டசித்தையாயிராநின்றாள்; (பேசப்புகில்) |
| உன்னையே | ஸம்ஶ்லேஷத்துக்கு விஷயபூதனான உன்னையே |
| பிதற்றும் | அடைவுகெடப்பேசாநின்றாள்; [லாமல் |
| உனக்கன்றி | உன்விஷயத்திலல் |
| எனக்கு | நெடுங்காலம்நோற்றுப்பெற்ற என்விஷயத்திலே |
| ஒன்று | அல்பமும் |
| அன்பிலள் | ஸ்நேஹமில்லாதவளாயிராநின்றாள்; |
| வளம் | மிக்கஇனிமையான |
| கனி | கனிகளையுடைய |
| பொழில் | சோலைகளாலே |
| சூழ் | சூழப்பட்ட |
| மாலிருஞ்சோலை | திருமாலிருஞ்சோலையிலெழுந்தருளியிருக்கிற |
| மாயனே என்று | ஆஶ்சர்யசக்தியுக்தனேயென்று |
| வாய்வெருவும் | வாய்பிதற்றாநின்றாள்; |
| களங்கனி | களங்கனிபோலே யினிதான |
| முறுவல் | புன்சிரிப்பையும் [ய், |
| காரிகை | அழகையுமுடையளா |
| பெரிது கவலையோடு | மிக்கமனவருத்தத்தோடே |
| அவலம்சேர்ந்திருந்த | வைவர்ண்யம் சேர்ந்திருக்குமவளாய், |
| இளம்கன்னி | சிறுபெண்பிள்ளையா |
| இவளுக்கு | இவள்விஷயத்தில்[ன |
| இடவெந்தையெந்தைபிரானே! என் நினைந்திருந்தாய், சொல்லு. (எ) | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (உளங்கனிந்திருக்கும்) †உள்ளமானது இங்ஙனே பக்வமாய், அகவாயிலோடுகிறது வாய்விடமாட்டாதே யிருக்கும். ஹ்ருதயம் பரிபக்வமாகையாவதென்னென்னில்; புஜிக்கக்கடவவவன் புஜித்ததில்லையாகில் † ஆஶ்ரயமில்லையா யிருக்கை. (உன்னையேபிதற்றும்) † " இதுதான் பா(ஸ)வபந்தத்தாலேயோ?" என்றிருந்தாள் இவள் வாய்விடுமளவுந்திருத்தாயார்; உம்முடையபக்கலிலுமொரு அபிஸந்தியின்றிக்கே, (க) " ஜாமதக்ந்யஸ்ய ஜல்பத:" என்கிறபடியே அடைவு கேடாகச் சொல்லாநின்றாள். ஒரு அபிஸந்தி பூர்வகமாக வந்ததாகில் அடைவுபட்டிருக்குமிறே. (உனக்கித்யாதி) †" நம்மையுமொருகால் சொல்லாளோ?" என்னும் நசையறுத்தாள். †அவனுக்காம்படி இவ்வளவாக்கினார் பக்கலிலே யாதல், அவன் பக்கலிலே யாதலிறே பாவபந்தமிவளுக்கு.

(க)

(வளமித்யாதி) இவ்வளவான ப்ரேமத்துக்கு அவன் க்ருஷி பண்ணினபடியைச் சொல்லி வாய்வெருவும். ஸம்ருத்தமான பலங்களை யுடைத்தான பொழிலாலே சூழப்பட்ட திருமலையிலே, ஆர்யர்களிழந்த ம்லேச்சபூமியிலுள்ளார்க்கு முகங்கொடுத்து நிற்கிற ஆஸ்சர்ய குணசேஷ்டிதங்களை யநுஸந்தித்துப், பின்னை வாஸனையே உபாத்யாயராகச் சொல்லுமதொழிய உணர்த்தியுடன் சொல்லுவதொரு வார்த்தையில்லை. (வாய்வெருவும்), (க) [ஸமஹ்யவாசா ப்ருவதீதமேவ - விசிந்த்ய வாசா ப்ருவதீதமேவ] † முற்பட வநுஸந்தியா, பின்னை அது தானும் மாட்டாதே வாஸனையாலே சில சொல்லுமத்தனை.

(ளங்கனி முறுவல்)† பிள்ளாய்! ஆர்வாய்வெருவக்கடவத்தை ஆர்வாய் வெருவுகிறார். (உ) ''ஸீதேதி சாருதகீம் - ஸீதேதி சாருததீம்'' என்று அவனிறே வாய்வெருவுவான்† ''எதிர்த்தலையைத் †தோற்பித்தோமாக வேணும்'' என்றிருக்கிறவர்களாகவாய் இப்படி விலக்ஷணமாய் பக்வமாய்த் தோற்றினதுபோலே யாயிற்று முறுவலிருப்பது.

(ந) †[அஸ்மிந் - அஸ்மிந்] முன்பு தாமும் பிராட்டியுமாய் ஜலக்ரீடாதிகள் பண்ணி ஸரஸமாகப் பரிமாறிற்றோரிடத்திலே, பிராட்டியைப்பிரிந்து தாமுமிளைய பெருமாளுமாய்த் தேடிக்கொடுவாராகிற்கச்செய்தே அவ்விடத்தைக்கண்டு இளையபெருமாளைப் பார்த்தருளிச்செய்கிறார். [அஸ்மிந் - அஸ்மிந்] இப்படி வெறுந்தரையாயிருக்கிற விடத்திலே காண் அன்று நா†மெடுப்பெடுத்தது. [மயாஸார்த்தம் - மயாஸார்த்தம்] ப்ரணயதாரையில் தம்மைத்தாம் சால மதித்திறேயிருப்பது. †நாமுங்கூடக் †காணவந்த சோழரோபாதியாகக் கடக்கநிற்கும்படி அவளுடைய அளவுடைமையும் விதக்த்தமாகப்பரிமாறினபடியுங்காண். [உதாரசீலா - உதாரசீலா] படைவீட்டி லிருந்தநாள் மாமனார் மாமியார்க்குக்கூசி §(ச்சிறிது)படி விடுவாரோபாதி அளவுபட வாயிற்று போகம் செல்லுவது; இப்போது அவ்வளவன்றிக்கே ஏகாந்தஸ்த்தலமாகையாலே தன்னை முற்றாட்டாக ஸர்வஸ்வதாநம் பண்ணிக்கொண்டிருந்தாளாயிற்று. [சிலாதலேபூர்வம் - சிலாதலே பூர்வம்]†ஜலக்ரீடை பண்ணுகிற தோரிடத்திலே சிலாதலமாய், இளை

(க) ரா - ஸு - (உ) (ந) ரா - ஆ - கந - கஉ.

§ குண்டலிதம் க்வாசித்தம்.

த்தவிடத்திலே அதிலே யேறுவதாகப் பெருமாள் முற்கோலிக்கணி சிக்க, (க) "ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்துகோஸலா:- ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்துகோஸலா:" என்கிற அதிலேயு மொருஸம்பந்த முண்டிறே இவளுக்கு; †அத்தை இவருடைய இங்கிதாதிகளைக் கொண்டறிந்து இவரை இளைப்பிக்கவேணுமென்று பார்த்து, பெருமாளேறுவதாகக் கணிசித்த துறையை யடைத்துக்கொண்டிருந்தாள். [உபோபவிஷ்டா - உபோபவிஷ்டா] அப்படியா யிருக்குமிறே எங்கும். [காந்தஸ்மிதா - காந்தஸ்மிதா] † வெறும்புறத்திலே தானே துவக்கவல்லவள்; முறுவலைச் சேர்த்தாற்போலேயாயிற்று முகந்தானிருப்பது. அதுக்குமேலே அப்போது பிறந்த வெற்றியாலே ஜாதஹாஸை யானளாயிற்று. [த்வாமாஹ-த்வாமாஹ] †இதுக்கு முன்பு துடங்கின கார்யத்தில் தலைக்கட்டாதே மீளுமதில்லையிறே பெருமாள்; இதொன்றுந்தலைக்கட்டப் பெற்றதில்லை; அத்தாலே லஜ்ஜித்துக் கவிழ்தலையிட்டார் பெருமாள்; அவரைவிடா, இவரைப்போரப் பொலியக் கொண்டாடுகிற இளையபெருமாள் முகத்தைப் பார்த்தாள்; "பாரீரோ தம்பியார்! நீங்கள் நினைத்ததெல்லாந் தலைக்கட்டினிகோளிறே, நீங்கள் வல்லவலிய ஆண்பிள்ளைகள், நாங்கள் பெண்பெண்டுகள், நீங்கள் வேட்டைக்கும் வினைக்கும் போய் வ்யாபரிக்குமவர்கள்; நாங்கள் வீடுவிட்டுப் புறப்பட்டறியோம், உங்களுக்கு நினைத்த வகைகளெல்லாம் தலைக்கட்டலாமிறே, உங்கள் தமயனார் வென்றாரிறே" என்று பஹுமுகமாகக்கொண்டு வார்த்தை அருளிச்செய்தாளாயிற்று.

(காரிகை) நிருபாதிகஸ்த்ரீத்வத்தை யுடையவள். (பெரிதித்யாதி) கவலையும் அவலமுமாகிறது-மாநஸமாயும் சாரீரமாயும் வரும் வ்யதை. கவலையாகிறது-நெஞ்சில் தடுமாற்றம், அவலமாகிறது-வடிவைப்பேணாமை. (இளங்கனி) நீர் வில்லை முறித்துச்சென்று கைப்பிடித்த ஶ்ரீஜநகராஜன் திருமகளிலு மிளையவளிவள்; உம்மைப்பிரிந்தால் அவளைப்போலே (உ) "ஸமாத்வாதஶ - ஸமாத்வாதஶ தத்ராஹம்" என்று ஆசையிட்டுத் தரிக்க வல்லவளன்று. இப்படி பருவமிளையளாகில் முன்பே ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாகிலன்றோ இப்படி படக்கடவதென்னில்;†இயற்கையிலே அவள்கலந்து வைக்குமே, அத்தைத் §தாயாரறியாளே. (என்னித்யாதி) ஶ்ரீஜநகராஜன்

(க)ரா - ஆ - (உ) ரா - ஸு - § (பா) தானறியாளே.

திருமகளைக் கைப்பிடிக்கைக்காக ஸ்ரீமிதிலையில் புறச்சோலையிலே விட்டுக்கொண்டிருந்தாற் போலே, இவளைப் பெறுகைக்காகத் திருவிடவெந்தையிலே விட்டுக்கொண்டிருக்கிற நீர் இவளிடையாட்டத்திலென்ன நினைத்திருந்தீர். ... ... ... (எ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (உளங்கனிந்தித்யாதி) உங்கள்குல மர்யாதைகளைப் பேணச்சொல்லி நீங்கள் பெண்பிள்ளையை மிரட்டி நிறுத்தினீர்களாகில், அவள்தானே அறியிராளோ, என்னைக்கேட்கிறதென்னென்ன; அங்ஙன் செய்ய வொண்ணாதபடியிறே அவள்தசையென்கிறாளென்கிறாரென்று ஸங்கதி.

பெண்பிள்ளையை "என்நினைந்திருந்தாய்" என்று நாங்கள் கனக்கமறுமாற்றம்சொல்ல, நினைந்து உன்னையேத்துமென்ன வமைந்திருக்கவும், "இருக்கும்" என்கையாலே - வாய்விடமாட்டாதே திருவுள்ளம் கனிந்திருக்குமென்று தாத்பர்யம் விவக்ஷித்தருளிச்செய்கிறார் (உள்ளமானதித்யாதி).(ஆம்ரயமில்லையாயிருக்கை) என்றது - பழமானது புழியாதபோது அழுந்தபோமாபோலே ஈஸ்வரன் அநுபவியாதபோது அழியும்படியிருக்கையென்கை. (இதுதான்) என்றது - உளங்கனிந்திருக்கைதானென்னபடி. தான் "என்நினைந்திருந்தாய்" என்றதுக்கு வாய்விடாதேயிருந்தது, அவனிடத்தில் ஸ்நேஹத்தாலே என்றிருந்தாள் திருத்தாயார், நெஞ்சழிந்து வாய்புலத்தப்புக்காள் பெண்பிள்ளை, அத்தைவிட்டு, "உன்னையேபிதற்றும்" என்கிறாளென்னும் பாவத்தையருளிச்செய்கிறார் (இதுதானித்யாதி). உட்கருத்தையருளிச்செய்கிறார் (நம்மையுமித்யாதி). பின்னையுமொருகால் சொல்லாளோவென்னுமாசை. "எனக்கன்பொன்றிலள்" என்ன ப்ரஸக்தியெங்ஙனேயென்ன (அவனுக்கித்யாதி).

"ராமேதி ராமேதி ஸதைவ புத்த்யா விசிந்த்ய வாசா ப்ருவதீ தமேவ - ராமேதிராமேதி ஸதைவபுத்த்யா விசிந்த்யவாசா ப்ருவதீதமேவ" இதுக்கர்த்தமருளிச்செய்கிறார் (முற்படவித்யாதி).

"வாய்வெருவும் களங்கனிமுறுவல்" என்ற ஸமபிவ்யாஹார தாத்பர்யம் (பிள்ளாயித்யாதி). பிள்ளாயென்னுமது - பூஜ்யவாசகமாகையாலே, இடவெந்தைபிரானை யங்ஙனே ஸம்போதிக்கிறாளென்றுகருத்து. வாய்வெருவும்படியான பாகம்முடுகினவிவளை குலமர்யாதையிலே நிறுத்துகை துஷ்கரமென்று கருத்து. "களங்கனிமுறுவல்" என்றவளவுக்குத்தாத்பர்யம் (எதிர்த்தலையித்யாதி). களாப்பழம்போன்றமுறுவல் என்று போக்யதாமாத்ரத்திலே த்ருஷ்டாந்தமென்று திருவுள்ளம். "களம்" என்று கலமென்றதாய், அவ்பக்தமதுரமென்றபடி; இது வ்யாக்யாநாந்தரத்திலர்த்தம். (சாருதநீம்) என்றது - அழகிய தந்தங்களையுடையவளென்றபடி. (தோற்பித்தோமாகவேணுமென்றிருக்கிறவர்கள்) - பிராட்டிமார்.

அவன் பிராட்டிமுறுவலுக்குத் தோற்றமைக்கு ப்ரமாணாந்தரம் காட்டிக்கொண்டு வ்யாக்யாநம்பண்ணுகிறார் (அஸ்மிந் இத்யாதி). (எடுப்பு) நிக்ஷேபம். அஸ்மச்சப்த தாத்பர்யமருளிச்செய்து, த்ருதீயை அப்ராதாந்யாய், ஜலக்ரீடா ரஸாநுபவத்திலிருக்கும் ப்ராதாந்யத்தையருளிச்செய்கிறார் (நாமுங்கூடவித்யாதி). (காணவந்தசோழரோபாதி) மல்லயுத்தம் பார்க்கவந்தசோழராஜாக்களோபாதி யென்றபடி. "பூர்வம்" என்னுமது - இதுக்குப்பூர்வம் என்னவேண்டுகையாலே, அத்தையருளிச்செய்கிறார் (ஜலக்ரீடையித்யாதி). உப உப - என்கிற த்விருக்தியாலே-ஸமீபத்தில் துறைதுறைதோறுமிருந்தாளென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (அத்தையித்யாதி). "ஜாதஹாஸா" என்று கதாசித்ஹாஸம்போலன்றிக்கே, "காந்தஸ்மிதா" என்று சொன்னதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வெறும்புறத்திலேயித்யாதி வாக்யத்வயத்தாலே). ப்ரணயதாரையில் பெருமாளோடே வார்த்தைசொல்ல ப்ரஸக்தியுண்டாயிருக்க, இளைய பெருமாளோடு வார்த்தையருளிச்செய்கைக்குக் கருத்தருளிச்செய்கிறார் (இதுக்குமுன்பித்யாதி). வாக்யஜாதந்தானென்னென்ன (பாரீரோவித்யாதி).

(இயற்கையிலே) உத்யாநாதிஸ்தலங்களிலே யாத்ருச்சிகஸம்ச்லேஷத்திலே. ... ... ... ... ... ... (எ)

மூ—அலங்கெழு தடக்கை யாயன் வாயாம்பற்
கழியுமா லென்னுள்ள மென்னும்
புலங்கெழு பொருநீர்ப் புட்குழி பாடும்
போதுமோ நீர்மலைக் கென்னும்
குலங்கெழு கொல்லிக் கோமளவல்லி
கொடியிடை நெடுமழைக் கண்ணி
இலங்கெழில் தோளிக் கென்னினைந் திருந்தா
யிடவெந்தை யெந்தை பிரானே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | (என்பெண்ணானவள்) | என்னும் | என்று சொல்லாநின் |
| அலம் | ஹலம் என்னும் | | றாள்; [வற்றையும் |
| | ஆயுதம் | புலம் | இந்த்ரியங்களெல்லா |
| கெழு | விளங்காநின்றுள்ள | கெழு | தன்பக்கல் சேர்த்துக் |
| தடம் | பருத்த [ய | | கொள்ளும்படியா |
| கை | திருக்கைகளையுடை | பொரு | அலைபொருகிற [ன |
| ஆயன் | இடையனான க்ருஷ் | நீர் | நீரையுடைய |
| | ணனுடைய | புட்குழி | திருப்புட்குழி விஜய |
| வாய் | திருப்பவளத்தில் வை | | ராகவன் விஷயமா |
| | த்தூதுகிற [கு | | னகானங்களை |
| ஆம்பற்கு | இலைக்குழலோசைக் | பாடும் | ப்பாடாநின்றாள்; |
| என்னுள்ளம் | என் மநஸ்ஸானது | நீர்மலைக்கு | திருநீர்மலைக்கு |
| அழியும் | அழியாநின்றது | போதுமோ | போவோம் |

| | |
|---|---|
| என்னும் | என்றுசொல்லாநின்றாள்; |
| கொல்லி | கொல்லிமலையிலுண்டான பாவைபோன்று |
| கெழு | ஶ்லாக்யமான [ய் |
| குலம் | குலத்தில்பிறந்தவளா |
| கோமளம் | அழகிதான |
| வல்லி | கொடிபோல் மென்மைத்தன்மையளாய் [யொத்த |
| கொடி | வஞ்சிக்கொடியை |
| இடை | இடையையுடையளாய் |
| நெடுமழை | பெருமழைபோலே நீர்த்தாரைகள் இடைவிடாமல் ப்ரவஹிக்கிற [ய் |
| கண்ணி | கண்களையுடையளா |
| இலங்கு | விளங்காநின்றுள்ள |
| எழில் | அழகிய |
| தோளிக்கு | தோள்களையுடையளான இப்பெண் விஷயத்தில் |

இடவெந்தையெந்தபிரானே! என்கினைந்திருந்தாய், சொல்லு. (அ)

வ்யா.—எட்டாம்பாட்டு. (அலமித்யாதி)†நெஞ்சிலழிவை மறைக்க ப்ராப்தமாயிருக்க, நெஞ்சிலழிவைத்தாயான என்முன்னே சொல்லா நின்றாள். "அலம்" என்று ஹலம். கலப்பை† சேர்ந்திருந்துள்ள சுற்றுடைத்தான் கையையுடைய க்ருஷ்ணனுடைய வாயில் குழலோசையிலே, ஒன்றுக்கழியாத என்னெஞ்சழியாநின்றதென்னாநின்றாள். †வயிரமுமுருக்குங்காணும் வாயில் குழலோசை. †இலைக்குழலென்று நிர்ப்பந்திக்கிறாருமுண்டு. ஹலத்தையுடைய என்கிற இதுக்குக் கருத்தென்னென்னில்; கையிலாயுதத்துக்கெதிரிகளழியுமாபோலே குழலோசைக்கு இவளழியாநின்றாளென்கை.†"தாய் தமப்பனுக்குப் பரதந்த்ரனுகையாலே குறித்தகாலத்திலே வரப்பெற்றிலேன்" என்றாற்போலே சிலவற்றைக் குழலோசையிலே தோற்ற வைத்திறேயூதுவது.(க)†"జగౌకలపదం శౌరిస్తారమన్ద్రపదక్రమమ్ । రమ్యం గీతధ్వనిం శ్రుత్వా సంత్యజ్యావసథం స్తదా - ஜகௌகலபதம் ஶௌரிஸ் ஸ்தாரமந்த்ரபதக்ரமம்| ரம்யம் கீதத்வநிம் ஶ்ருத்வா ஸந்த்யஜ்யாவஸதாம்ஸ்ததா" என்று சொல்லுகிறபடியே. அன்றிக்கே, ஆறு நீர்வர முன்னே சிணையாறு படுமாபோலே க்ருஷ்ணன்வரவுக் குறுப்பாக முன்னேவரும் நம்பி மூத்தபிரான் குழலோசையாகவுமாம்.

†அதிற் காட்டிலுமழிக்கும் போலேகாணும் அதுக்கிவ்வருகிலுகந்தருளின நிலத்தில் நிலை. "புலம்" என்று விளைநிலத்தைச் சொல்லிற்றாகவுமாம். அன்றிக்கே, கண்டாருடைய இந்த்ரியங்கள் † பிணியுண்ணும்படியாய், தன்னில்தான் பொராநின்றுள்ள ஜலஸம்ருத்தி

யையுடைய திருப்புட் குழியிலே நிற்கிறநிலையை யநுஸந்தித்தவாறே நான் தாயென்றுபாராதே வாய்விட்டுப் பாடாநின்றாள். (போதுமோ நீர்மலைக் கென்னும்) "நம்தசை யிருந்தபடியால் திருநீர்மலையிலே போய்ப்புக்கே விடுவோம்போலே யிருந்ததீ" என்று விலக்க நினைக்கிற † தாயாரோடே தோழிமார்க்குச் சொல்லுமாபோலே சொல்லாநின்றாள்.

(குலமித்யாதி)†கொல்லிமலையிலே ஒருபாவையுண்டு‡வகுப்பழகிதாயிருப்பது,அதுபோலே யாயிற்று இவளுக்குண்டான†ஏற்றமும், பிறப்பும்,†அநுகூலரும்அடித்துப்பார்க்கவொண்ணாத ஸௌகுமார்யமும். (க) "என்னுடைக் கோமளக்கொழுந்து" என்னக்கடவதிறே. (கொடியித்யாதி) கொடிபோலே யிருந்துள்ள இடையை யுடையளாய், ஒருகால் கண்ணாலே நோக்கில் ஒருபாட்டம் மழைவிழுந்தாற்போலே இலக்கானார் திமிர்க்கும்படியான நோக்கையுடையளாய், உஜ்ஜ்வலமாகா நிற்பதாய் கீழ்ச்சொன்னதுக் கெல்லாம் மேலே அழகிதான தோள்களையுடையளான இவளுக்கு. (என்னித்யாதி) (உ) "ராகவோர்ஹதி வைதேஹீம் - ராகவோர்ஹதி வைதேஹீம்" என்னும்படியே உமக்குத் தகுதியாம்படி யிருக்கிற இவளிடையாட்டத்தில் நீர் நினைத்திருக்கிறதென் ? ... ... ... (அ)

அரு.—எட்டாம்பாட்டு. (அலமித்யாதி). "உனக்கன்றி எனக்கன்போன்றிலள்" என்று நீசொல்லும்படியாக முதிர்ந்து என்னைவாய் வெருவினளேயாகிலும், தாயானஉன்னைக் கண்டபோதே அஞ்சி உனக்கு மறைக்க அவளுக்கு ப்ராப்தமாகாதோ, ஆகையாலே குலமர்யாதையிலே நிறுத்தலாமேயென்று பகவதபிப்ராயமாக; என்னைத்தாயென்றுமறியாதே தோழியோபாதியாகவெண்ணி என்முன்னேதானே வாய்விட்டாளென்கிறாளென்று ஸங்கதி.

பூர்வார்த்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நெஞ்சிலித்யாதி). "கெழு" என்றதினர்த்தம் (சேர்ந்திருந்துள்ள) என்றது. (வயிரமுருக்கும்) என்றது - வஜ்ரத்தையுமுருக்குமென்றபடி. "ஆம்பல்" என்றதுக்கு மூங்கில் குழலென்றருளிச்செய்து, இலைக்குழலென்றர்த்தாந்தர மருளிச்செய்கிறார் (இலையித்யாதி). குழலோசைக்கு [illegible] வானென்னென்ன வருளிச்செய்கிறார் (தாயித்யாதி). குழலோசைக்கு [illegible]பட்டிருப்பர்களோவென்ன வருளிச்செய்கிறார் (ஜகாவித்யாதி). தாரமென்றும் மந்த்ரமென்றும்சொல்லுகிற ஸ்வர விசேஷங்களையுடைய பதங்கள் [illegible] த்தையுடையதென்றபடி.

(க) தி-வாய் - [illegible] (உ) ரா - [illegible]

மேலுக்கவதாரிகை (அதிலித்யாதி). (அதிற்காட்டிலும்) விபவாவதாரங்களிற்காட்டிலும். கெழுகை-சேருகையாய், அதினர்த்தம் (பிணிப்புண்ணும்படியாய்) என்று. (தாயாரோம்ட) என்றது - தாயாரானவென்னோடேயென்றபடி.

நல்லகுலத்திலே சேர்ந்தவளாய் சொல்லிப்பாவைபோலே யானவளென்று சப்தார்த்தமாய், வ்யுத்க்ரமேண அர்த்தமருளிச்செய்கிறார் (கொல்லியித்யாதி).(வகுப்பு) அவயவஸம்ஸ்த்தாநம்.(எற்றமும்)ஸௌகுமார்யாதிசயமும்.(க) ‘‘[illegible]-சேடீப்ருசாலோகிதைரங்கம்லாநி’’என்னுமத்தையுட்கொண்டு, ‘‘கோமளவல்லி’’ என்றதுக்குத் தாத்பர்யம் (அநுகூலருமித்யாதி). (பிறப்பும் ஸௌகுமார்யமும் அதுபோலேயாயிற்று) என்று அந்வயம். கொல்லிமலைப் பாவைக்கு மலை உத்க்ருஷ்டதேசமாகையால் ஆபிஜாத்யமும் கூடும்; பாவையிலேயும் ஸௌகுமார்யந்தோற்றும்படியிருக்கையால் ஸௌகுமார்யமுண்டென்று திருவுள்ளம். ... ... ... ... (அ)

மூ.—பொன்குலாம்பயலை பூத்தன மென்தோள்
 பொருகயல் கண் துயில்மறந்தாள்
அன்பினலுன்மேலாதரம்பெரிதிவ்
 வணங்கினுக் குற்றநோயறியேன்
மின்குலா மருங்குல் சுருங்க மேல்நெருங்கி
 வீங்கிய வனமுலையாளுக்
கென்கொலாங்குறிப்பி லென்நினைந்திருந்தா
 யிடவெந்தை யெந்தைபிரானே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மெல் | மெல்லிய | அன்பினல் | ஸ்நேஹத்தாலே |
| தோள் | தோள்களானவை | ஆதரம் | அபிநிவேசமானது |
| பொன் | பொன்நிறத்தை | பெரிது | மேன்மேலெனப்பெ |
| குலாவும் | கொண்டாடாநின்று | | ருகாநின்றது; |
| | ள்ள [றன; | இவ்வணங்கினு | அழகையுடையளான |
| பயலைபூத்தன | வைவர்ண்யத்தையுற் | க்கு | இப்பெண்பிள்ளைக் |
| பொரு | தமமில்லன்றோடொ | | கு |
| | ன்றுபோராநின்று | உற்ற | நேர்பட்ட |
| | ள்ள [ன்ற | நோய் | வ்யாதியை |
| கயல் | கயல்மத்ஸ்யம்போ | அறியேன் | அறிகிலேன்; |
| கண் | கண்களில் [யை | மின் | மின்னை |
| துயில் | நித்ரைகொள்ளுகை | குலாம் | கொண்டாடுகிற (வ |
| மறந்தாள் | மறந்துவிட்டாள்; | | ளையாநின்றுள்ள) |
| உன்மேல் | உன்விஷயத்திலுண் | மருங்குல் | இடையானது |
| | டான | சுருங்க | சுருங்கும்படியாக |

(க) ஸ்ரீகுணரத்நகோசம் -

| | | |
|---|---|---|
| மேல் | மேலே [பொருந்தி | என்னும்கொல் யாதாய்முடியும்; |
| நெருங்கி | ஒன்றோடொன்று | இடவெந்தையெந்தைபிரானே! |
| வீங்கிய | வளராநின்றுள்ள | குறிப்பில் திருவுள்ளத்திலே, |
| வனம் | அழகிய [க்கு | என்நினைந்திருந்தாய், சொல்லு. (கூ) |
| முலையாளுக்கு | முலைகளையுடையவளு | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பொன்குலாமித்யாதி) பொன்னை. குலாவாநின்றுள்ள - கொண்டாடாநின்றுள்ள, வைவர்ண்யத்தை பஜித்தன விரஹஸஹமல்லாததோள். (பெர்ருகயலித்யாதி) †பொராநின்றுள்ள கயல்போலேமுக்தமாயிருந்துள்ள கண்ணில்நித்ராதத்வமடியேபிடித்து வ்யுத்பத்திபண்ணவேண்டும்படியாக வாஸனையோடே மறந்தாள். (அன்பினுளித்யாதி) ஸங்கமடியாக உம்முடைய பக்கல் பிறந்த காமமானது அறப்பெரிது. (இவ்வணங்கினுக்கு) †பிறாக்நிப்படி தன்பக்கலிலே ஆதரம்பிறக்கும்படி அழகையுடைய விலக்ஷணையான இவளுக்கு.(உற்றநோயறியேன்) இவளுக்கு †முருடு †கொளுந்தும்படி பிறந்தநோய் இன்னதென்றறிகிறிலேன். பயலை பூத்தாள், கண்டுயில்மறந்தாள், அன்பினுனுன்மேலாதரம்பெரிது, என்று நோவுஞ்சொல்லி நோவுக்கு †நிதாநமும் சொல்லாநிற்க, அறியேன் என்கிறது - இவ்விஷயந்தன்னில் நிதாநவிசேஷத்தைப்பற்ற. அதாகிறது - முறுவலிலேயோ? நோக்கிலேயோ? வடிவிலேயோ? சீலத்திலேயோ? அகப்பட்ட துறைவிசேஷமறிகிறிலேன்.

(மின்குலாமித்யாதி) மின்போலே வளையாநின்றுள்ள இடையானது சுருங்கும்படியாக மேலேநெருங்கி வளராநின்றுள்ள.†முன்பே "இற்றது, முறிந்தது" என்னும்படியாயிற்று இடையிருப்பது; அதுக்குமேலே ஆஶ்ரயத்தைப் பாராதே நெருங்கி வளராநின்றுள்ள †அழகிய முலையையுடைய இவளுக்கு. (என்கொலாம்) தான்கைவிட்டமைதோற்றச் சொல்லுகிற வார்த்தை. இவளுக்கெவ்வளவாய்த் தலைக்கட்டக்கடவதோ?(குறிப்பித்யாதி) தாய்கைவிடுதல், †தான் கைவிடுதல் செய்தால் அதைக்கொண்டு நோக்குகைக்கீடாகத் திருவிடவெந்தையிலே வந்திருக்கிற நீர் உம்முடைய திருவுள்ளத்தால் நினைத்திருக்கிறதென்? வாலிபக்கலிலே கண்டோமிறே ப்ராதாக்களுதவாதபடி; ஶ்ரீப்ரஹ்லாதாழ்வான் பக்கலிலே கண்டோமிறே தமப்பனுதவாதபடி; தான் தன்னை அநுஸந்தித்தஞ்சின அர்ஜுநனுக்கு (க) "மாமேகம்ஶரணம்வ்ரஜ - மாமேகம்சரணம்வ்ரஜ" என்னக்கண்டோமிறே அவனுதவும்படி. ... ... ... (கூ)

(க) கீதை - கஅ - கூகூ -

அநு.—ஒன்பதாம்பாட்டு. (பொன்னித்யாதி) "நான் ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைச்செய்ததும், திருமாலிருஞ்சோலை, திருப்புட்குழி, திருநீர்மலை, திருவிடவெந்தை, இவற்றிலே முகங்கொடுத்துக்கொண்டிருந்தது மிவளுக்காகவன்றோ? இங்ஙனேயிருக்கச்செய்தேயும் இப்படி வாய்வெருவிக்கொண்டு விரஹக்லேசம் தலையெடுக்கைக்கு நிதாநமேது? அத்தைச்சொல்லில் அதுசெய்கிறோம்" என்று எம்பெருமானுக்குக் கருத்தாக; அவளிப்படி விவர்ணையானாள், எதிலே ஈடுபட்டாளோ எனக்குத் தெரிகிறதில்லை, நீரே திருவுள்ளத்தில் விசாரித்துத் தீர்த்தருளவேணுமென்று தான் கைவிட்டுகிற்கிறாள் திருத்தாயாரென்கிறாரென்று ஸங்கதி கண்டுகொள்வது.

(பொரா நின்றுள்ள கயல்போலே) என்றது - யுத்தோந்முகமான இரண்டுமத்ஸ்யங்கள் ஒன்றுக்கொன்று நேரேயிருக்குமாபோலே யிருக்கிற ஸந்நிவேச ஸௌந்தர்யத்தைப்பற்ற. "அணங்கு" தெய்வப்பெண் என்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பிறர்க்கித்யாதி). (பிறர்க்கு) நாயகனுக்கு. "உற்ற" என்றதுக்குத் தாத்பர்யம் (முருடித்யாதி). (முருடு) காடிந்யம். (கொளுந்தும்படி) ப்ராபிக்கும்படி. துஷ்பரிஹரமான நோயென்றபடி. (நிதாநம்) என்றது - அவனிடத்திலன்பை.

முலையானபோதே இடைக்கு மேலேயாயிருக்க, "மேல்நெருங்கி" என்னவேணுமோவென்ன வருளிச்செய்கிறார் (முன்பேயித்யாதி). "வனம்" என்றதினர்த்தம் (அழகிய) என்றது. (தான்கைவிடுதல்) ஸ்வயத்நம்விடுதல். (கூ)

மூ.—அன்னமு மீனு மாமையு மரியு
மாய வெம்மாயனே யருளாய்
என்னுமின் தொண்டர்க் கின்னருள் புரியு
மிடவெந்தை யெந்தைபிரானை
மன்னு மா மாட மங்கையர் தலைவன்
மானவேல் கலியன் வா யொலிகள்
பன்னிய பனுவல் பாடுவார் நாளும்
பழுவினை பற்றறுப்பாரே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

—∞✣∞—

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்னமும் | ஹம்ஸாவதாரமும் | எம்மாயனே | ஆஶ்சர்யசக்தியுக்தனான என்னுடையஸ்வாமீ! |
| மீனும் | மத்ஸ்யாவதாரமும் | | |
| ஆமையும் | கூர்மாவதாரமும் | | |
| அரியுமாய | ந்ருஸிம்ஹாவதாரமுஞ்செய்தருளின | அருளாய் | க்ருபைசெய்தருளவேணும் |

| | |
|---|---|
| என்னும் | என்றுப்ரார்த்திக்கிற |
| இன் | விலக்ஷணரான |
| தொண்டர்க்கு | தாஸபூதருக்கு |
| இன் அருள்புரியும் | பரமக்ருபைசெய்தருளுமவனை |
| இடவெந்தை எந்தைபிரானை | திருவிடவெந்தையில் நித்யவாஸம் பண்ணுகிற நித்யகல்யாணன் விஷயமாக, |
| மன்னும் | (ப்ரளயத்திலுமழியாதபடி) நித்யமாய் |
| மா | பெரிய |
| மாடம் | மாடங்களையுடைத்தான |
| மங்கையர் | திருமங்கையிலுள்ளார்க்கு |
| தலைவன் | நிர்வாஹகராய் |
| மானம் | அகன்றஇலையையுடைத்தான |
| வேல் | வேலைத்தரித்த |
| கலியன் | ஆழ்வாருடைய |
| வாய் | திருப்பவளத்திலுண்டாய் |
| ஒலி | ப்ரஸித்தமாம்படி |
| பன்னிய | விஸ்தரித்தருளிச்செய்த |
| பனுவல் | பாட்டுக்களை |
| பாடுவார் | ப்ரீதிப்ரேரிதராய் அப்யஸிக்கவல்லவர்கள் |
| நாளும் | எந்நாளும் |
| பழவினை | தங்களுடையபூர்வகர்மங்களினுடைய |
| பற்று | ஸம்பந்தத்தை |
| அறுப்பார் | ஸவாஸநமாகப்போக்கப்பெறுவர்கள். |

வ்யா.—பத்தாம்பாட்டு. (அன்னமுமித்யாதி) † அறிவுகுடிபோய் நோவுபட தமக்கறிவு கொடுத்த அவதாரங்களை நினைக்கிறார். (இன் தொண்டர்க் கின்னருள்புரியும்) † இப்படிப்பட்ட ருசியுடையராய், அவதாரங்களுக்குப் பிற்பட்டவர்களுடைய இழவு தீர்க்கைக்காகத் திருவிடவெந்தையிலே வந்து நிற்கிற † உபகாரகனையாயிற்றுக் கவி பாடிற்று. மன்னுமாமாடமங்கையர் தலைவனாயிற்றுக் கவிபாடினார்; ப்ரளயத்துக்குங்கூட அழியாதமாடங்களையுடைய திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வார். (மானவேற்கலியன்) † வேலைப்பிடித்தவர்களுக்குத் தம்மோடொக்க ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயை யுண்டாக்கும் வேலென்னுதல்; † இலை அகலிய வேலென்னுதல். ஆழ்வார் ஒலியையுடைத்தாகச் செய்தவை. (பன்னியபனுவல்) † லக்ஷணங்களிலொன்றும் குறையாதபடி விஸ்த்ருதமாகப்பாடின இப்பத்தையும் அப்யஸிக்கவல்லவர்கள். (நாளும்பழவினை பற்றறுப்பாரே) ப்ராக்தநகர்மங்களை வாஸனையோடே போக்கப் பெறுவர்கள். தாம் மோஹிப்பது உணர்வதாகத் திருத்தாயார் கூப்பிடுவதாக வேண்டாதபடி பகவதநுபவமே யாத்ரையான தேசத்திலே புக்கு அநுபவிக்கப் பெறுவர்கள். ... ... ... ... (க0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

அரு.—பத்தாம்பாட்டு. (அன்னமுமித்யாதி) இப்போது வேறுசில அவதாரங்களை யருளிச்செய்யலாகாதோவென்ன, கருத்தருளிச்செய்கிறார் (அறிவித்யாதி). "அன்னமும் மீனுமாமையுமரியுமாய வெம்மாயனே யருளாய்" என்னும் தம்மைப்போலேயிருக்கிற இனியதொண்டர்க்கினிதான அருளைக்கொடுக்குமென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்படி ரீத்யாதி). (இப்படிப்பட்டருசியுடையராய்) என்றது-தம்மைப்போலே ருசியுடையராயென்றபடி. "எந்தைபிரானை - உள்ளீடாகச்சொன்ன" என்றுகூட்டி ஆழ்வார் விசேஷணமாகத் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (உபகாரகனையாயிற்றுக் கவிபாடிற்று) என்று. "மானம்" என்று "தாஸோஹம்" என்கிற வைஷ்ணவாபிமானமாய் அதைக்கொடுக்குமவராய், வேலையுடைய கலியனென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (வேலையித்யாதி). "மானம்" என்று அளவாய், அர்த்தாந்தரம் (இலையித்யாதி). "பன்னிய" - விஸ்தரிக்கப்பட்ட, "பனுவல்" ஸ்ரீஸூக்தியென்று சப்தார்த்தமாயருளிச்செய்கிறார் (லக்ஷணங்களித்யாதி). ... ... (க0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

இரண்டாம்பத்தில் ஏழாந்திருமொழி முடிந்தது



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி - உ - ம் பத்து - அ - ம் திருமொழி - திரிபுரம் ப்ரவேசம்.

வ்யா.—(க)†"ஹ்ரீரேஷாஹிமமாதுலா" என்னவும் மாட்டாதே நிற்கிற விடமிறே †இவ்விடம்; †அடைப்படி யிராஞகில் ஆஶ்ரயணீயனாக†மாட்டானே.

†தான் †யுக்தாயுக்தங்களறியாதே†நிற்பது இருப்பது விழுவது எழுவதாய்க்கொண்டு மோஹித்துக்கொண்டு கிடந்த தசையை யநுஸந்தித்த திருத்தாயார் அவன்படிகளைச் சொல்லிக்கூப்பிடக் கேட்டும், தான்வாய்வெருவியும், அவ்வழியாலே அல்பம் தெளிவு பிறந்தது; அவன்குணங்கள் நெஞ்சிலே ஊற்றிருந்தது. அறிவு கலங்கு மாபத்திலே வந்து உதவும் ஸ்வபாவனென்று அவன்படிகளை யநுஸந்திந்து ஆஸ்வஸ்தையாய், பின்பு திருவ[illegible]பாகரக்கநாயனை அநுஸந்தித்து அவரையே பாவித்து, அந்த பாவநாப[illegible]த்தாலே, †ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமாய் †உருவுவெளிப்பாடு போலேயாய் அவர்க்குச் சிலவார்த்தைகள் தான் சொல்லுகிறளாகவும், அவர் தக்குச் சிலமறுமாற்றங்கள் சொல்லுகிறராகவும் சிலவற்றைச் சொல்ல; இதைக்கேட்ட பந்துவர்க்கமெல்லாம் "நீ ப்ரமித்தாயோ? சொல்லுகிறதென்னென்பது" என்ன; திருவட்ட புயகரத்து நாயனரை நானிங்ஙனே சிலவார்த்தைகளைக் கேட்டேன், அவரெனக்குச் சில மறுமாற்றங்களருளிச் செய்தாரென்று, அவ்வார்த்தையைத் தாய்மார் தோழிமார்க்குச் சொல்லுகிறளாய்ச் செல்லுகிறது.

---

அரு.—திரிபுரம் ப்ரவேசம்.—(உ) * திவளும் வெண்மதியிலே நாயகி பட்ட அவஸாதாதிசயத்தைக்கண்டு, ஸர்வேஶ்வரன் திருவட்டபுயகரத்தே முந்துறவே தான் ஆஶ்ரிதார்த்தமாகவிருக்[illegible] நிலையைக்காட்டக்கண்டு, தனக்கவனோடேபிறந்த உக்திப்ரத்யுக்திபர்யந்தமான அநுபவத்தை யநுபவிக்கிறளென்று ஸங்க்ரஹஸங்கதி கூட்டிக்கொள்வது.

முந்துறவே ஆஶ்ரிதார்த்தமாக இருக்கவேணுமோ, ஆபத்துக்களிலே தோற்றியுதவி, பிற்பாட்டுக்கு "ஹ்ரீரேஷா" என்னுமாபோலே வினவலாகாதோவென்ன வருளிச்செய்கிறர் (ஹ்ரீரேஷேத்யாதி). பிற்பாடனுகையும்

---

(க) ரா - ஆர -  (உ) உ - ௧ -

வினவுகையும் அவத்யமென்னும்நினைவாலே அதுசெய்யமாட்டாதே முந்துற வந்துநின்றானென்று கருத்து. (இவ்விடம்) என்றது-திருவட்டபுயகரம். இப்படி அவன் முற்பாடனாயிருக்கவேண்டுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (அவனித்யாதி).

கீழ்த்திருமொழியில் மோஹித்துக்கிடந்த பெண்பிள்ளை இத்திருமொழியில் தெளிந்து உத்திப்ரத்யக்ஷரூபேண அநுபவிக்கக்கூடுமோவென்னும் சங்கையைப் பரிஹரியாநின்றுகொண்டு விஸ்தரஸங்கதி யருளிச்செய்கிறார், (தான் யுக்தேத்யாதி). (யுக்தாயுக்தங்கள்) என்றது - ஸ்ரீபூமிப்பிராட்டியிடத்தில் வ்யாமுக்தனாய் இடவெந்தையிலிருக்குமவன் நமக்குமிடங்கொடுப்பனென்றுறியிருக்கை யுக்தம். இப்படி நடிக்கை அயுக்தமென்றபடி. யத்வா - கீழ்த் திருமொழியில் மோஹித்துக்கிடந்த பெண்பிள்ளை இத்திருமொழியில் கிடந்து அநுபவிக்கைக்கு ஸங்கதியருளிச்செய்கிறார் (ஹ்ரீரித்யாதி). "உன்மனத்தால் என்நினைந்திருந்தாய்?" என்று கேட்ட திருத்தாயார்க்கு மறுமாற்றமும் சொல்லமாட்டாதே நாணியிருந்து அத்தாலே ஸர்வஸமாஶ்ரயணீயனாய் இடவெந்தை பிரானிருக்க இவளறியிராதே இப்படிபடுவதே என்று திருத்தாயார் அநுஸந்தித்தாளாய், அவன்படிகள் சொல்லக்கேட்டுத் தெளிவுபிறந்ததென்று கருத்து. (மாட்டானே) என்றவநந்தரம், ஆகையாலே என்று சேஷம். அவன்படியிதுவாகையாலே ஆறியிருக்கையுக்தம், இப்படிபடுகை அயுக்தமென்று ஹேதுவாக்கிக்கொள்வது. "இன்புறும் - மயங்கும்" என்று மோஹம்மாத்ரம்சொல்லிற்றேயாகிலும், (க) * கங்குலும்பகலில், (உ) "எழுந்துலாமயங்கும்" என்று திருத்தாயார்சொன்ன மயக்கமே யிங்குமாகையால், அங்குச்சொன்ன ஸ்த்திதிகநிசயநாதிகள் இங்கும் விவக்ஷிதமென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (நிற்பதிருப்பது விழுவதெழுவதாய்) என்று. (ப்ரத்யக்ஷஸமாநாகாரமாய்) என்றது - மாநஸப்ரத்யக்ஷஸமாநாகாரமாயென்றபடி. (உருவு வெளிப்பாடுபோலேயாய்) என்றது - சாக்ஷாத்ப்ரத்யக்ஷப்ர...லேயுமாயென்றபடி. ... ... ... ... *

மூ.—திரிபுர மூன்றெரித்தானும்
மற்றைமலர்மிசை மேலயனும்வியப்ப
முரிதிரை மா கடல்போல் முழங்கி
மூவுலகும் முறையால் வணங்க
எரியன கேசரிவாளெயிற்றோ
டிரணியனாக மிரண்டுகூறா
அரியுருவா மிவரார்கொலென்ன
வட்டபுயகரத்தே னென்றாரே. (க)

(க) தி-வாய்-எ-உ-. (உ) தி-வாய்-எ-உ-ஏ.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திரி | (ஆகாசத்திலே)ஸஞ்சரிக்கிற [யும் | முறையால் | ப்ராப்தமானபடியே |
| மூன்றுபுரம் | மூன்றுபடைவீட்டை | வணங்க | காலிலேவிழவும் |
| எரித்தானும் | தஹித்தருத்ரனும் | இரணியன் | ஹிரண்யனுடைய |
| மற்றை | இன்னும் | ஆகம் | சரீரமானது [யாக |
| மேல் | விலக்ஷணனாய் | இரண்டுகூறு | இரண்டுகூறும்படி |
| மலர்மிசைஅயனும் | திருநாபிகமலத்திற் பிறந்த ப்ரஹ்மாவும் | எரிஅ(ன்)ன | நெருப்புப்போன்ற |
| வியப்ப | விஸ்மயப்படவும் | கேசரி | உளைமயிரையும் |
| முரி | உலாவாநின்றுள்ள | வாள் | ஒளியையுடைத்தான |
| திரை | அலைகளையுடைய | எயிற்றோடு | எயிற்றையுமுடைய |
| மா | பெரிய | அரியுருவாம் | நரஸிம்ஹமரூபியான |
| கடல்போல் | கடல்போலே | இவர்ஆர் கொல்? என்ன | இவரார்? என்று கேட்க |
| முழங்கி | இரைந்துக்கொண்டு | அட்டபுயகரத்தேன் | நான் திருவட்டபுயகரத்துநாயனார் |
| மூவுலகும் | மூன்றுலோகத்திலுள்ளாரும் | என்றார் | என்றருளிச்செய்தார். |

வ்யா.—முதற்பாட்டு. (திரிபுரமித்யாதி) †அவர்வந்து †தோற்றினபோதிருந்தபடி.

† (திரிபுரமூன்றெரித்தானும்) திரிபுரம் - ஸஞ்சரிக்கிறபுரம்; அதாவது - ஆகாசத்திலே † ஸஞ்சரிப்பனவுமாய், ஒரோவிடங்களிலே போயிருந்தவாறே கீழ்ப்பட்டவிடைய நசிக்கக்கடவதாயிருப்பது மூன்று படைவீடுண்டிறே; அப்படியாகவுமாம். அன்றிக்கே, த்ரிபுரம் என்று (க) † "पञ्चपञ्चजनाः - பஞ்சபஞ்சஜநா:" (உ) † "सप्तसप्तर्षयः - ஸப்தஸப்தர்ஷய:" என்று தனித்தனியே நாமதேயமாகவுமாம். த்ரிபுரதஹநத்தாலே ஸஞ்ஜாத வீரனான ருத்ரனும். (மற்றையித்யாதி)†ஸம்ஹாரத்துக்கு இவன் கடவனானால்தான் †ஸ்ருஷ்டிக்கக் கடவனாய், †இவனுக்கும் ஜநகனாய், திருநாபீகமலத்திலே அவ்யவதாநேநபிறந்து இதர விஸஜாதீயமான ஜந்மத்தையுடையனாகையாலே அஜனென்று சொல்லப்படுகிற ப்ரஹ்மாவும். (வியப்ப) †தாந்தாம் சில அத்புதகர்மங்களைப் பண்ணிப் பிறர் விஸ்மயப்படவிருக்கிற தாங்கள், கொக்குக்கடலைக் கண்டாற்போலே விஸ்மயப்பட.

(முரியித்யாதி) ப்ரஹ்மாதிகளை யொழிந்தாரடைய, - உலாவாநின்றுள்ள திரைகளையுடைய பெருங்கடல்போலே கோஷித்துக்கொண்டு. (மூவுலகும் - வணங்க) "मञ्चाः क्रोशन्ति - மஞ்சா:க்ரோ

சந்தி" போலே. (முறையால்) ஹிரண்யனுடைய அநீதியாலே முறை கெட்டு அவன்காலிலே விழுந்து திரிந்தவர்கள், அவன் பட்டுப் போகையாலே †அவன் சேஷியான ஸ்வபாவத்திலே வணங்கவென்னுதல்; பர்யாயேண வென்னுதல்.

(எரியித்யாதி) அக்நிகல்பமான உளைமயிரையும், ஒளியையுடைத்தான எயிற்றையு முடையனாய், †சிலபதார்த்தங்களினுடைய தோற்றரவிலே ஸஹஜசாத்ரவத்தாலே முடிந்துபோம் பதார்த்தங்கள்போலே, ஹிரண்யனுடைய சரீரமானது இரண்டு கூறும்படியான நரஸிம்ஹமான. (இவரார்கொலென்ன) ஒரு சிறுக்கனுக்குத் தமப்பன்பகையாக, அவனிலும் அண்ணியனாய் உதவி நோக்கினவனைப்போலே யிராநின்றார்; இவரார்தானென்கிறாள். †அடையாளம் சொல்லாநிற்கச்செய்தே நிஶ்சயிக்கவொண்ணாதபடியிறே விஷயஸ்வபாவம். (அட்டபுயகரத்தேனென்றாரே) † ஒரு சிறுக்கனுக்காகவந்துதவின அவ்வளவோ? உனக்கு உதவுகைக்காக இங்கேவந்து அவஸரப்ரதீக்ஷனாய் வந்து நிற்கிறவனன்றோ? நானென்கிறார். ... (க)

அரு.—முதற்பாட்டு. (திரிபுரமித்யாதி) இவளுக்கு அரியுருவாயவன் தோற்றினதுவும், அப்போது ப்ரஹ்மாதிகள் கொண்டாடினதுவுமோ இங்குச்சொல்லுகிறதென்ன வருளிச்செய்கிறார் (அவர்வந்தித்யாதி). (தோற்றின போது) என்றது - தூணிலேவந்துதோன்றினபோதென்றபடி.

மேலே த்ரிபுரதஹநத்தாலே என்று வாக்யார்த்தமருளிச்செய்வதாக ப்ரதிகம் (திரிபுரமூன்றெரித்தானும்) என்றது. "திரிபுரம்" என்றும் "மூன்று" என்றும் புநருக்தமன்றோவென்னும் சங்கையிலே, இரண்டுவிதமாக வருளிச்செய்கிறார் (ஸஞ்சரிக்கிறவித்யாதி). த்ரிபுரமென்று - திரிபுரமென்றுசொன்னது. (பஞ்சபஞ்சஜநாः) என்றது, "யஸ்மிந் பஞ்ச பஞ்சஜநா ஆகாஶஶ்ச ப்ரதிஷ்டிதः - யஸ்மிங்பஞ்ச பஞ்சஜநா ஆகாசஶ்சப்ரதிஷ்டிதः" என்ற வாஜஸநேயிசாகா வாக்யத்திலோதப்பட்டது. பஞ்சஜநசப்தம், (க)"ப்ராணஸ்ய ப்ராணः உத சக்ஷுஷஶ்சக்ஷுः ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரமந்நஸ்யாந்நம் மநஸோ மநோ விதுः - ப்ராணஸ்யப்ராண உதசக்ஷுஷஶ்சக்ஷுः | ஶ்ரோத்ரஸ்யஶ்ரோத்ரம் அந்நஸ்யாந்நம் மநஸோ மநோவிதுः" என்ற வாக்யசேஷத்திற்சொல்லப்பட்ட ப்ராணசக்ஷுஶ்ஶ்ரோத்ராந்நமநஸ்ஸுக்கள் அஞ்சுக்கும்பேராக ஸ்ரீபாஷ்யத்தில் நிர்வஹிக்கப்பட்டது. (ஸப்தர்ஷயः என்று) "ஸப்தர்ஷயः" என்றாற்போலே. "மற்றை - மேல் மலர்மிசை அயனும்" என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி வாக்யார்த்தமருளிச்செய்கிறார் (ஸம்ஹாரத்துக்கித்யாதி). "மற்றை" விலக்ஷணனென்று

(க) ப்ருஹதார.

சப்தார்த்தமாய், அதுதானும் ருத்ரனுக்கில்லாத வைலக்ஷண்யமென்கிறார் ஸ்ருஷ்டிக்கக்கடவனாய்) என்று. "மேல்" என்று - மேலான அஜனென்றாய், அத்தையருளிச்செய்கிறார் (இவனுக்கும் ஜநகனாய்) என்று. சிவனும் பிரமனும் வியப்ப என்னாதே, அவர்களுக்கு விசேஷணமிட்டுக்கொண்டு "வியப்ப" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (தாந்தாமித்யாதி).

"மூரி" என்றதினர்த்தம் (உலாவாநின்றுள்ள) என்றது. (அவன்சேஷியான) என்றது - ஸர்வேஶ்வரன் சேஷியானவென்றபடி.

ஸிம்ஹத்தைக்கனவிலேகண்ட ஆனை முடியுமாபோலேயென்று திருவுளம்பற்றி யருளிச்செய்கிறார் (சிலபதார்த்தங்களித்யாதி). "ஆர்கொல்" என்று ஸம்சயிக்கிறாளாகையன்றிக்கே, ஈடுபடுகிறாளாக வ்யாக்யாநம்செய்ததுக்கு நியாமகமருளிச்செய்கிறார் (அடையாளமித்யாதி). இயத்தயா நிஶ்சயிக்கவொண்ணாதபடியான ஸ்வபாவத்தை யநுஸந்தித்து ஈடுபட்டு, "ஆர்கொல்?" என்கிறாளென்று கருத்து. சிறுக்கனுக்குதவினமையிலே ஈடுபட்டிருக்குமிவள் தனக்குச் சடக்கென உதவினமைசொல்லாதே, "இவர்" என்று படர்க்கையாகச்சொன்னதுக்கு ப்ரத்யுத்தரமாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒரு சிறுக்கனுக்கித்யாதி). ... ... ... ... ... (க)

மூ—வெந்திறல் வீரரில் வீரரொப்பார்
வேதமுரைத் திமையோர் வணங்கும்
செந்தமிழ் பாடுவார்தாம் வணங்கும்
தேவரிவர் கொல் தெரிக்க மாட்டேன்
வந்து குறளுருவாய் நிமிர்ந்து
மாவலி வேள்வியில் மண்ணளந்த
அந்தணர்போன் றிவரார்கொ லென்ன
வட்டபுயகரத்தே னென்றாரே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இமையோர் | ப்ரஹ்மாதிகள் | வீரர் ஒப்பார் | ஆண்பிள்ளைத்தனத்தையுடைய சக்ரவர்த்தித் திருமகனைப்போலே மேன்மையையுடையராய் |
| வேதம் உரைத்து | வேதாத்யயநம்பண்ணிக்கொண்டுவந்து | | |
| வணங்கும் | ஆஶ்ரயிக்குமவராய் | | |
| வெம்திறல் | வெவ்விய மிடுக்கையுடைய | செம்தமிழ் | அழகியதமிழை [ள் |
| வீரரில் | சூரர்கள் ஈடுபடும்படியான | பாடுவார்தாம் வணங்கும் | பாடும்முதலாழ்வார் ஆஶ்ரயிக்கிற |

| | | | |
|---|---|---|---|
| தேவர் | திருவேங்கடமுடையானைப்போலே சீலத்தையுடையராயிராநின்றார்; | குறளுருவாய் வந்து | வாமநவேஷத்தைக் கொண்டுவந்து (திருக்கையில்நீர்வீழ்ந்தவாறே) |
| இவர்கொல் | இவர் இன்னாரென்று | நிமிர்ந்து | வளர்ந்து |
| தெரிக்கமாட்டேன் | அறிகிலேன்; | மண் | பூமியை |
| | | அளந்த | அளந்துகொண்ட |
| மாவலி | மஹாபலியின் | அந்தணர்போன்ற | ப்ரஹ்மசாரியைப்போலேயுமிராநிற்கிற |
| வேள்வியில் | யஜ்ஞவாடத்திலே | இவர் ஆர்கொல்? என்ன அட்டபுயகரத்தேன் என்றார். (௨) | |

வ்யா—இரண்டாம்பாட்டு. (வெந்திறலித்யாதி) வெவ்வியதிறலுண்டு- பராபிபவநஸாமர்த்யம்; அத்தையுடையரானவீரர்கள் தாங்கள் †மடலெடுக்கும்படியான ஆண்பிள்ளைத்தனமுடையவர் - சக்ரவர்த்தித்திருமகனார். (க) [शत्रोः-சத்ரோ:] †கெடுவாய்! என்னுடைய சத்ருவை ஆரென்று நினைத்துத் தேரை மீட்டுக்கொடு போந்தாய். [प्रख्यातवीर्यस्य - ப்ரக்யாதவீர்யஸ்ய]†எதிரிகளான நம் படைவீட்டிலும் ப்ரஸித்தமாயன்றோ அவருடைய ஆண்பிள்ளைத்தன மிருப்பது, நீ கேட்டறியாயோ? அது எதிர்ப்பாயாத மேடில்லைகாண். [रञ्जनीयस्य विक्रमैः- ரஞ்ஜநீயஸ்யவிக்ரமை:] கண்டுபராக்ரமிக்க வொண்ணாதபடி அளவற எதிரி†முடுகினால் அது நிலமாக்கிக்கொண்டு பராக்ரமிக்கும்படியைப் பார்த்தால், காந்தனைவிரும்புமாபோலே எதிரிகளுக்கு விரும்பவேண்டும் படிகாண் அவராண்பிள்ளைத் தனமிருப்பது. (தேவதமித்யாதி) †ராவணவதஸமநந்தரம்ப்ரஹ்மாதிகள் நாராயணனுவாக ஸித்தமான பதங்களைக்கொண்டு ஸ்தோத்ரம் பண்ணும். (வெந்திறல் வீரரில் வீரரொப்பார்) இது மேன்மை யிருக்கும்படி.

(செந்தமிழித்யாதி) சீலத்தைப்பார்த்தால் அநுகூலரா யிருப்பாரெல்லாரும் ஏத்தும்படியிருப்பர். (௨) † "பெருகுமதவேழம்" என்கிறபடியே கலப்பற்ற பசுந்தமிழ்பாடும் முதலாழ்வார்கள். அவர்களுக் காஶ்ரயணீயனான திருவேங்கடமுடையானைப் போலேயுமிராநின்றார். (தெரிக்கமாட்டேன்) வீரத்தைப் பார்த்தவாறே சத்ருக்களுமேத்தும்படியா யிருந்தது, மேன்மையைப் பார்த்தவாறே ப்ரஹ்மாதிகளுமேத்தும்படியா யிருந்தது, சீலத்தைப் பார்த்தவாறே அநுகூலருடைய ஏத்துப்படியாயிருந்தது. இவரை இன்னாரென்று நிஶ்ச

(க) ரா-யு-௪0௬-௬. (௧) ௨-திரு-௭௫.

யிக்கப்போகிறதில்லையீ. ஆக, மேன்மையும் தரைகாண வொண்ணாதாயிருந்தது. சீலமும் தரைகாணலாயிருந்ததில்லை.

(வந்தித்யாதி) மஹாபலி யஜ்ஞ வாடத்திலே வாமநவேஷத்தைக்கொண்டுவந்து திருக்கையிலே நீர்விழுந்தவாறே வளர்ந்து பூமியை அளந்துகொண்ட இந்த வேஷத்தையுடைய †ஸ்ரீவாமநனைப்போலேயுமிராநின்றார். † சுக்ராதிகள், "ஈஶ்வரன்கிடாய், உன்னைவஞ்சிக்க வருகிறான்" என்னச்செய்தேயும் "வித்தவேஷத்தைக்கண்டுவைத்து எங்ஙனே கொடாதொழியும்படி" என்றானிறே. (இவரார்கொலென்ன வட்டபுயகரத்தேனென்றாரே) கழஞ்சுமண்ணிரந்துவந்தவனல்லேன், உன்னையிரந்து வந்தவன்நானென்கிறார். பிறர்க்காக இரந்தவனல்லேன், எனக்காக இரந்தவனென்கிறார். ... (உ)

அரு.—இரண்டாமபாட்டு. (வெந்திறலித்யாதி) கீழ்ப்பாட்டிலே, ஒரு சிறுக்கனுக்காக வந்தீரென்றதுக்கு ப்ரத்யுத்தரமாக, "உனக்குதவவேணும் என்றவஸரப்ரதீக்ஷனாயிருக்கிறேன்" என்னச்செய்தேயும், மெய்க்கொள்ளாதே அவருடைய மேன்மையையும் ஸௌசீல்யத்தையுங்கண்டு ஈடுபடாநின்றுகொண்டு, "நீர் பிறர்க்காக மண்ணாசையாலே வந்தீரித்தனை"? என்ன, நான் எனக்காகப் பெண்ணாசையாலே வந்தேனென்கிறாரென்று ஸங்கதி.

(மடலெடுக்கும்படியான) ஈடுபடும்படியான. ஶ்லோகத்துக்குத் தொகுத்த தாத்பர்யம் (கெடுவாயித்யாதி). நம்மாலே ஜயிக்கத்தக்கவனென்றோ, நாலுபேர்க்கும், "ஜயித்துவந்தான்" என்று தோற்றும்படியோ நீமீட்டுக்கொண்டுவந்தாயென்று தாத்பர்யம். ப்ரோபஸர்க்கார்த்தம் (எதிரிகளித்யாதி). (முடுகினால்) மேலிட்டால், (க) "భవాన్నారాయణో దేవః - பவாந்நாராயணோ தேவஃ" என்றத்தையுட்கொண்டு தாத்பர்யமருளிச்செய்கிறார் (ராவணனைத்யாதி). "வேதம்" இத்யாதி - தேவர்க்கு விசேஷணமாக ஸ்வரஸமாக அந்வயிக்கச்செய்தேயும், வீரர்க்கு விசேஷணமாக இங்ஙனந்வயித்தது, (உ) "ஈசன் வானவர்க்கென்பனென்றால் அதுதேசமோ திருவேங்கடத்தானுக்கு" என்று தேஜஸ்கரமாகாமையாலேயென்று கண்டுகொள்வது.

(ங) "இருந்தமிழ்நன்மாலையிணையடிக்கே சொன்னேன் பெருந்தமிழனல்லேன் பெரிது" என்று சொன்னபாசுரத்தை "செந்தமிழ்பாடுவார்" என்றதுக்கு ப்ரமாணமாக எடுக்கவேண்டியிருக்க, "பெருகுமதவேழம்" என்று மேல்பாட்டையெடுத்தது-எம்பெருமான், "ஆழ்வீர், நீர்பெருந்தமிழனல்லேன் என்றீர், வல்லீராகில் ஒருகவிசொல்லிக்காணும்" என்ன; அவனு

(க) ரா - யு - ககக-கரு. (ங) உ - திரு - எச.
(உ) தி-வாய் - ரு - ரு - ச.

கக்கும்படி இப்பாட்டைப்பாடி, மேல் நெஞ்சைப்பார்த்து, ஸ்வாநுபவம் பண்ணினாராகையாலே அவனுகந்தபாட்டே ப்ரமாணமாகவேணுமென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (பெருகித்யாதி).

(ஸ்ரீவாமநனைப்போலேயும்) என்கையாலே-மேன்மையும் சீலமும் தரைகாணவிருந்தாலும் அர்யார்த்தமாய் வந்தவரைப்போலேயிருக்கிறதென்கை ஸூசிதம். "போன்று" என்றது - போன்றவரென்று விவக்ஷித்து, அத்தால் பலித்தவிநீதவேஷத்தை யருளிச்செய்ததக்கு ப்ரக்ருதோபயோகம்காட்டுகிறார் (சுக்ராதிகளித்யாதி). வேதாத்யயநாதிவிநீத வேஷத்தைக்காட்டி மாவலியை வாய்மாளப்பண்ணினானென்று கருத்து. ... ... ... (உ)

மூ.—செம்பொனிலங்கு வலங்கை வாளி
திண்சிலை தண்டொடு சங்கமொள்வாள்
உம்பரிருசுட ராழியோடு
கேடகமொண்மலர் பற்றியெற்றே
வெம்பு சினத்தடல் வேழம்வீழ
வெண்மருப்பொன்று பறித்திருண்ட
அம்புதம்போன்றிவரார்கொலென்ன
வட்டபுயகரத்தேனென்றாரே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை |
|---|---|---|---|
| வலங்கை | வலத்திருக்கையில் | ஒள் | அழகிய |
| இலங்கு | ப்ரகாசியாநின்றுள்ள | மலர் | புஷ்பத்தையும் |
| செம்பொன் | பசும்பொன்னால் செய்யப்பட்ட | பற்றி | தரித்துக்கொண்டு |
| | | எற்றே! | என்னே! |
| வாளி | பாணங்களையும் | வெம்புசினம் | மிக்ககோபத்தையும் |
| திண் | த்ருடமான | அடல் | மிடுக்கையுமுடைய |
| சிலை | வில்லையும் | வேழம் | குவலயாபீடமென்னும்யானை |
| தண்டொடு | கதையையும் [யும் | | |
| சங்கம் | ஸ்ரீபாஞ்சஜந்யத்தை | வீழ | முடியும்படி |
| ஒள் | விளங்காநின்றுள்ள | வெண்மருப்பு ஒன்று | வெளுத்ததந்தமொன்றினை |
| வாள் | திருக்குற்றுடைவாளையும் | பறித்து | முறித்து |
| உம்பர் | (ஆயுதங்களுக்கெல்லாம்) மேலாய் [ய | இருண்ட | ஜலஸம்ருத்தியாலே கறுத்திருந்துள்ள |
| இருசுடர் | மிக்ககாந்தியையுடை | அம்புதம்போன்ற | மேகம்போலேயிருக்கிற |
| ஆழியொடு | திருவாழியாழ்வானையும் | இவர் ஆர்கொல்என்ன; அட்டபுயகரத்தேனென்றார். (௩) | |
| கேடகம் | கடகையும் | | |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (செம்பொனித்யாதி)† எதிரிகள்பேரிலே சினத்தெழும்போதைக்கும் அபலைகளை வசீகரிக்கைக்கும் இலங்

யிரண்டுக்கும் பரிகரமாயிற்று திவ்யாயுதங்கள். (செம்பொனிலங்கு வலங்கைவாளி) (க) †[தீப்தபாவகஸங்காசை: - தீப்தபாவகஸங்காசை:] கையிலிருக்கும்போது இருக்குமாபோலன்றுகிடாய் விட்டாலிருக்கும்படி; எரித்துக்கொண்டாயிற்று வருவது. [சிதை: - சிதை:] அல்லாத அம்புகளோபாதியாக நினைத்திராதே, பட்டால் எரித்தல் பொறுக்கவொண்ணாதபடியாய்க்கிடாயிருப்பது. [காஞ்சநபூஷணை: - காஞ்சநபூஷணை:] அநுகூலரான என்போல்வாரையும் தோற்பிக்குந் துறையுண்டுகிடாய். [நத்வாமிச்சாம்யஹம் த்ரஷ்டும் - நத்வாமிச்சாம்யஹம் த்ரஷ்டும்] † ஸௌப்ராத்ரம் பின்னாட்டுகையாலே சொல்லுகிறேன். [ராமேண நிஹதம் சரை: - ராமேணநிஹதம்சரை:] † புக்குமுடிகைக்கும் விடாய் தீருகைக்குமுடலாயிருக்குமிறே மடு; அதுபோலேயிருக்கிற அவ்வழகை அநுபவிக்குமதொழிய அவ்வம்புக்கிலக்காய் நீமுடிந்துபோக † நானிச்சிக்கிறிலேன்.

(செம்பொனித்யாதி) †வெறும்புறத்திலே ஆகர்ஷகமாயாயிற்று திருக்கை; ானிருப்பது; அதுக்குமேலே பொற்பகழியையுடைய அம்புகளையுமுடைத்தாயாயிற்றிருப்பது. †ஸ்வத:ஸ்ப்ருஹணீயமுமாய்ப் † பிடியாலு மாகர்ஷகமாயாயிற்று அம்புகள்தானிருப்பது. (திண்சிலை) எதிரிகள்மேலே †நாலிரண்டுபண்ணவலித்தாலும் §மெல்காத வில். (தண்டு) அப்படியிருக்கிறதண்டு. (சங்கம்) (ஒள் வாள்) பிடித்த பிடியாலே அழகிதாயிருக்கிறவாள். (உம்பரித்யாதி) ஆயுதங்களுக்கெல்லாம் ப்ரதாநமாயிருக்கையாலே மிக்கபுகரையுடைத்தாயிருக்கிற திருவாழியோடே. (கேடகம்) ‡கடகு. (ஒண்மலர்) காமனைப்போலே அபலைகளையழிக்கைக்கு உபகரணமானமலர். (எற்றே) என்னே!

(வெம்பித்யாதி) மிக்கசினத்தையுடைத்தாய் யுத்தோந்முகமாயிருக்கிற குவலயாபீடத்தை முடியும்படியாக, நிறத்துக்குப் பரபாகமான வெண்மையையுடைய கொம்பைப்பறித்து, இருண்டமேகம் போலே யிருக்கிற இவரார்தானென்ன; மேல்வார்த்தை (அட்ட புயகரத்தேன்) கம்ஸப்ரேரிதமான குவலயாபீடத்தை நிரஸித்து கம்ஸன்படைவீட்டில் பெண்கள் பயத்தைப்போக்கின அவ்வளவேயல்ல, உன்பயம் தீர்க்கைக்காகவந்து நிற்கிறவன்நானென்கிறார். (ங)

(க) ரா-யு-கக-உஉ. § மெல்காத-இளகாத. ‡ கடகு-ரக்ஷகம்.

அரு.—மூன்றாம்பாட்டு. (செம்பொனித்யாதி). கீழ்ப்பாட்டில், எனக்காக நான்பெண்பித்தனாய்வந்தேன், பிறர்க்காக மண்ணாசையால் வந்தேனல்லேன் என்றானிறே; அத்தை அங்கீகரித்து, "நீர் உமக்காகப் பெண்ணாசையாலேவந்தீராகிலும், ஸ்ரீமதுரையில் பெண்களிடத்தில் பித்தனாய் அவர்களுக்கு அச்சம் தீர்க்கவும் வசீகரிக்கைக்கும் பரிகரமான திவ்யாயுதச்சேர்த்தியோடு வந்தீராகவேணும்'' என்ன, அங்ஙனன்று, உன்பயம் தீர்க்கவந்தேனென்கிறானென்று ஸங்கதி.

இப்போது திவ்யாயுதங்களைச் சொன்னதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எதிரிகளித்யாதி). திருச்சரங்கள் ப்ரதிகூலரை வெல்லுகைக்கும் அநுகூலரை வசீகரிக்கைக்கு மூடலாயிருக்குமோவென்ன (தீப்தபாவகேத்யாதி). "ஸௌமித்ரி - த்வாம் - ப்ராதாவானவுன்னை'' என்றதின்கருத்தருளிச்செய்கிறார் (ஸௌப்ராத்ரமித்யாதி). இவன் துர்வ்ருத்தனானையாலே ஸௌப்ராத்ரம் தமக்கற்றதென்று கருத்து. ராகவேண என்னாதே, "ராமேண" என்று அவர் ஸௌந்தர்யம்சொன்னதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (புக்கித்யாதி). (நான்) என்றது - ஸ்ரீவிபீஷணாழ்வானை. திருச்சரங்கள்போலே மற்றை ஆயுதங்களும் இங்ஙனிருக்குமென்று திருவுள்ளம்.

இலங்கு வலங்கையில் செம்பொனுடைத்தான வாளியென்று சப்தார்த்தமாயருளிச்செய்கிறார் (வெறும்புறத்திலேயித்யாதி வாக்யத்வயத்தாலே). செம்பொன்போலேயுமாய், இலங்காநின்றுள்ள வாளியென்று அர்த்தாந்தரமருளிச்செய்கிறார் (ஸ்வதஇத்யாதி). (பிடி) கைப்பிடி, (நாலிரண்டு பண்ணை) நாலிரண்டு ப்ரகாரம். இது உபலக்ஷணம். எத்தனைவட்டமிழுத்தாலுமென்றபடி. ... ... ... ... ... ... (௩)

மூ.—மஞ்சுயர் மாமணிக் குன்றமேந்தி
மாமழை காத்தொரு மாயவானை
அஞ்ச வதன் மருப்பொன்றுவாங்கு
மாயர்கொல் மாயமறியமாட்டேன்
வெஞ்சுடராழியும் சங்குமேந்தி
வேதமுனோதுவர் நீதிவானத்
தஞ்சுடர்போன்றிவரார்கொலென்ன
வட்டபுய கரத்தேனென்றாரே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மஞ்சு | மேகமண்டலத்தள | ஏந்தி | தூக்கி |
| உயர் | உயர்ந்த [வும் | மாமழை | பெருமழையை |
| மாமணி | ஶ்லாக்யமான ரத்நங்களையுடைத்தான | காத்து | தடுத்து, |
| | | ஒரு | ஒப்பற்ற |
| குன்றம் | கோவர்த்தநகிரியை | மாயம் | ஆஶ்சர்யமான |

| | | | |
|---|---|---|---|
| ஆனை | குவலயாபீடம் | சங்கும் | ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் |
| அஞ்ச | நடுங்க | ஏந்தி | தரித்து; |
| அதன்மருப்பு ஒன்று | அதின் தந்தமொன்றினை | வேதம்முன் | வேதம்போலே |
| வாங்கும் | பறிக்கும் | ஓதுவர் | வார்த்தைசொல்லாநின்றார்; |
| ஆயர்கொல் | க்ருஷ்ணனோ! | நீதி | முறைதப்பாத |
| மாயம் | ஆஸ்சர்யமானசெயல்களை | வானத்து | பரமபதத்திலே நித்யவாஸம்பண்ணுகிற |
| அறியமாட்டேன் | அறிகிலேன்; | அஞ்சுடர்போன்ற | பரஞ்சோதிபோலே யிராநின்றுள்ள |
| வெம்சுடர் | உக்ரதேஜஸ்ஸையுடைய | | |
| ஆழியும் | திருவாழியாழ்வானையும் | | |

இவர் ஆர்கொல்என்ன; அட்டபுயகரத்தேனென்றாரே. (ச)

வ்யா.—நாலாம்பாட்டு. (மஞ்சுயரித்யாதி) † க்ருஷ்ணாவதாரம் பின்னாட்டுகிறபடி.

† மேகபதத்தளவும் செல்ல ஓங்கி ரத்நங்களையுடைத்தாயிருக்கிற கோவர்த்தநகிரியைத்தரித்து. (க) † [கடுவாய்ச்சின வெங்கண் களிற்றினுக்குக் கவளமெடுத்துக்கொடுப்பானவன்போல்] மத்தகஜங்கள்போலேயாயிற்று மேகங்கள்; அவற்றுக்குக் கவளங்கொடுப்பாரைப்போலேயாயிற்று மலையையெடுத்துக்கொடு நின்றபோதிருந்தபடி. (மாமழைகாத்து) விநாசத்தைப்பண்ணுவதாய், பரிஹரிக்கவரிதான மழையைப்பரிஹரித்து. (ஒருமாயவானை) அகப்படிலுமகப்பட்டுத் தப்பிலும்தப்பலாம்படி யிருக்கும் கேவலமானையன்றிக்கே, புத்திபூர்வகமாக நலியவேணுமென்று நிறுத்தினதாயிற்று. (அஞ்ச) இதுக்குமுன் பயம் வ்யுத்பத்திபண்ணியறியாதது பயப்பட. (அதன் மருப்பொன்றுவாங்கும்) அதினுடைய கொம்பைக் குப்பைக்கீரை பிடுங்குமாபோலே அநாயாஸேந வாங்கும். (ஆயர்கொல்) § ஆனைவாசியறியாமையாலே † பலித்துக்கொண்டுநின்றதித்தனை. (மாயமறியமாட்டேன்) அவனுடைய ஆஸ்சர்யமான செயல்கள் எனக்கொன்றும் தெரிகிறதில்லை.

(வெஞ்சுடராழியும்சங்குமேந்தி) திவ்யாயுதங்களைத்தரித்து. (வேதமுனோதுவர்) அருளிச்செய்கிறவார்த்தை யுடைய வேதம்போலேயிராநின்றது. (நீதிவானத்து) முறைகெடாதபடி பரிமாறக்கடவ பரமபதத்திலே. (அஞ்சுடர்போன்று)(உ) †“அத² யத³த꞉ பரோ தி³வோ ஜ்யோதிர்தீ³ப்யதே - அதயததꞃபரோதிவோஜ்யோதிர்தீப்யதே”: (அட்ட

(க) பெரி-திரு-ங-ரு-ச. (உ) சாந்தோ.
§ இடையனானையாலே ஆனைவாசியறியான்.

புயகரத்தேன்) அத்தனை தூரஸ்த்தனென்று கைவாங்கவேண்டா, உனக்காகக் கிட்டவந்திருக்கிறவன் காணென்றார்.... ... (ச)

அரு.—நாலாம்பாட்டு. (மஞ்சுயரித்யாதி) கீழ்ப்பாட்டில் ஸ்ரீமதுரைப் பெண்களுக்காகவன்று, உனக்காகவந்தேன் என்னச்செய்தேயும், (க) "கரு மலர்க் கூந்தலொருத்திதன்னை" என்கிறபாட்டில் சொல்லுகிறபடியே ஒருவர்க்கும் மெய்யனல்லனென்றெண்ணி அவர்வார்த்தை மெய்கொள்ளாதே, இடைச்சிகளுக்காக மலையெடுத்தும், மதுரைப்பெண்களுக்காக யானைகொன்றும், தன்னுடைச்சோதியில் விருப்பத்துடனிருந்தும், எனக்காகவிருக்கிறேனென்றும், வேதவாக்யம்போலே சொல்லாநின்றார் என்றுகொண்டு ஈடுபட "நானுனக்காகவே ஸந்நிஹிதனாயிருக்கிறேன்" என்றாராக ஸங்கதி ஹ்ருதீகரித்து ஸூசிப்பிக்கிறார் (க்ருஷ்ணேத்யாதி).

"மா" என்றதுக்கு - ஶ்லாக்யமென்று அர்த்தமாய் *மணிக்காதல், பெருமை என்று அர்த்தமாய் * குன்றத்துக்காதல் விசேஷணமாகை ஸ்பஷ்டமென்று வாக்யார்த்தமருளிச்செய்கிறார் (மேகேத்யாதி). "ஏந்தி" என்று - பூவேந்தி என்றாற்போலே சொன்னதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கடுவாயித்யாதி). (பலித்துக்கொண்டு) முன்னே தோற்றிக்கொண்டு.

பரமபதநாதனை தேஜஸ்ஸாகச் சொல்லுவாருண்டோவென்ன வருளிச் செய்கிறார் (அதேத்யாதி). ... ... ... ... (ச)

மூ.—கலைகளும் வேதமும் நீதிநூலும்
கற்பமும் சொல்பொருள் தானும் மற்றை
நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும்
நீர்மையினாலருள் செய்து நீண்ட
மலைகளும் மாமணியும் மலர்மேல்
மங்கையும் சங்கமும் தங்குகின்ற
அலைகடல்போன்றிவ ரார்கொலென்ன
வட்டபுய கரத்தேனென்றாரே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கலைகளும் | வேதத்தில் மேல்பாகத்தையும் வேதாந்த ஸூத்ரங்களையும் | பொருளும் | மீமாம்ஸையையும் |
| | | மற்றை | இன்னமும் |
| | | நிலைகளும் | (இவற்றில் சொன்னபடியநுஷ்டிப்பாரடையும்) பூமிகளையும் தாலே |
| வேதமும் | முன்பாகத்தையும் | | |
| நீதிநூலும் | இதிஹாஸாதிகளையும் [ம் | நீர்மையினால் | சேஷித்வஸ்வபாவத் |
| கற்பமும் | கல்பஸூத்ரங்களையு | வானவர்க்கும் | தேவர்களுக்கும் |
| சொல்லும் | வ்யாகரணத்தையும் | | |

(க) பெரு - திரு - க - கூ.

| | | | |
|---|---|---|---|
| பிறர்க்கும் | மநுஷ்யர்களுக்கும் | சங்கமும் | ஸ்ரீபாஞ்சஜந்யமும் |
| அருள்செய்து | தந்து, | தங்குகின்ற | எப்போதும்நிலைபெற்றுநிற்கிற |
| நீண்டமலைகளும் | உயர்ந்தமேருபர்வதம்போன்றதிருத்தோள்களும் | அலைகடல்போன்ற | அலையெறியும்கடல்போன்ற |
| மாமணியும் | ஸ்ரீகௌஸ்துபமும் | இவரார்கொலென்ன; அட்டபுயகரத்தேனென்றார். | (ரு) |
| மலர்மேல்மங்கையும் | தாமரைப்பூவைப்பிறந்தகமாகவுடைய பெரியபிராட்டியாரும் | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (கலைகளும்) †வேதத்திலுபரிதநபாகத்தையும், வேதாந்த ஸூத்ரங்களையும். (வேதமும்) பூர்வபாகமும். (நீதிநூலும்) அவற்றை உபப்ரும்ஹிக்கக்கடவ இதிஹாஸாதிகளும். (கற்பமும்) கல்பஸூத்ரமும். (சொல்) பதங்களை நிர்வஹித்துக் கொடுக்கக்கடவ வ்யாகரணமும். (பொருளும்) †அர்த்தவிசாரம்பண்ணக்கடவ மீமாம்ஸையும். (நிலைகளும்)இவற்றில்சொல்லுகிற ஸாதநங்களை அநுஷ்டித்தார்க்கு ப்ராப்யமாகச்சொல்லுகிற பூமிகளும். ப்ரஹ்மாதிகளுக்கும் மநுஷ்யர்களுக்கும். (நீர்மையினாலருள்செய்து) சேஷித்வஸ்வபாவத்தாலே கொடுத்து.

(நீண்டவித்யாதி) மேருபோலேயிருக்கிற தோள்களும் †ரத்நங்களுக்குத்†தானே, கௌஸ்துபமுண்டாயிருக்குமே; பெரியபிராட்டியாரும் ஸ்ரீபாஞ்சஜந்யமும். (தங்குகின்ற) †இவை ஒருகாலுண்டாய் ஒருகாலில்லையாம் கடல்போலன்றிக்கே, தங்குகின்றகடல்போலேயிருக்கிற இவரார்தான். (அட்டபுயகரத்தேன்) கடல்போலே இழியவொண்ணாதபடி அபரிச்சிந்நனென்றிருக்கவேண்டா, உனக்கு நெஞ்சால் பரிச்சேதிக்கலாம்படிவந்து நிற்கிறவனென்றார். ... ..(ரு)

---

அரு—அஞ்சாம்பாட்டு. (கலைகளுமித்யாதி) நானுனக்காகவே ஸங்க்ஹிதனாயிருக்கச்செய்தேயும், சேஷித்வமுறையாலே பஹுவிதோபகாரங்களைப் பண்ணிப் பெருமையாலும் கடல்போலிருக்கையால் பரிச்சேதிக்கப்போகாதே யிருக்கிறாரென்று நினைத்து, "உம்மை அவகாஹித்து அநுபவிக்கப் போகிறதில்லை" என்று பிற்காலிக்க; நீ அநுபவிக்கலாம்படியன்றோ இங்கே வந்திருக்கிறேனென்று சொல்லுகிறாரென்று ஸங்கதி.

"கலைகளும்" என்னுமிடத்தில் - வேதம்முதலானவற்றையெல்லாம்சொல்லும்போது, மேல் தனித்தெடுக்கிறவற்றுக்கு வையர்த்யம் ப்ரஸங்கிக்கையால் ஸங்கோசிக்குமளவில், ஆராத்யமான பகவத்ஸ்வரூபபரங்களும், ஆராதகஸ்வரூபப்ரதிபாதகங்களும், அந்த உபயோபப்ரும்ஹணங்களும், ஆராத

ப்ரகாரப்ரோதகங்களும், இவையித்யனைக்கும் சப்தநிர்வாஹகங்களும், அர்த்தநிர்வாஹகங்களுமாக ஒருசேர்த்தி திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (வேதத்திலித்யாதி). ஆராத்யஸ்வரூபமாகையால் கீழ் ப்ரஹ்மஸூத்ரம் சொல்லப்பட்டாலும், இங்கே ததர்த்தவிசாரபரங்களும் விவக்ஷிதங்களென்றருளிச் செய்கிறார் (அர்த்தவிசாரமித்யாதி).

கடலில் மலைகளுக்கு த்ருஷ்டாந்தமாகத் தோள்களைச் சொல்லிற்றே யாகிலும், கடலில் ரத்நங்களுக்கு த்ருஷ்டாந்தமேதென்னும் சங்கையை யநுவதிக்கிறார் (ரத்நங்களுக்கித்யாதி). (தானே) என்றவநந்தரம், த்ருஷ்டாந்தமேதென்ன என்று கூட்டுவது, வர்த்தமாநார்த்தம் (இவையொருகாலித்யாதி).

மூ.—எங்ஙனும் நாமிவர் வண்ணமெண்ணி
 லேதுமறிகில மேந்திழையார்
சங்குமனமும் நிறைவுமெல்லாம்
 தம்மனவாகப் புகுந்து தாமும்
பொங்கு கருங்கடல் பூவை காயா
 போதவிழ் நீலம் புனைந்த மேகம்
அங்ஙனம்போன் றிவரார்கொலென்ன
 வட்டபுய கரத்தேனென்றாரே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நாம் | நாம் | புகுந்து | வந்து ப்ரவேசித்து, |
| இவர்வண்ணம் | இவர்படிகளை | பொங்கு | பெரியகிளர்த்தியையுடைய |
| எங்ஙன் | எந்தப்ரகாரத்தாலே | கரும் | கறுத்த |
| எண்ணிலும் | அறியப்புகிலும் | கடல் | ஸமுத்ரம் |
| ஏதும் | ஒன்றும் | பூவை | பச்சிலைமரம் |
| அறிகிலம் | அறியப்போகிறதில்லை; | காயா | காசாம்பூ |
| ஏந்து | தரிக்கப்பட்ட | போது அவிழ் | காலத்திலேஅலர்ந்த |
| இழையார் | ஆபரணங்களையுடைய் அபலைகளது | நீலம் | கருநெய்தல் |
| | | புனைந்த | இவற்றுடனேசொல்லப்பட்ட |
| சங்கும் | வளையும் | | |
| மனமும் | மநஸ்ஸும் | மேகம் | மேகஸமூஹம் |
| நிறைவும் | அடக்கமும் | அங்ஙனம்போன்ற | அப்படியிருக்கிற |
| எல்லாம் | இவையெல்லாம் | | |
| தம்மனவாக | தம்மதாக அபிமாநித்துக்கொண்டு | இவர்தாமும் ஆர்கொல்என்ன; அட்டபுயகரத்தேன் என்றாரே. (௬) | |

வ்யா.—ஆறும்பாட்டு. (எங்ஙனுமித்யாதி) †ஆபாதப்ரதீதிமாத்ரமன்றிக்கே நம்முடைய †இயற்றியெல்லாங்கொண்டு இவரையுள்ளவளவெல்லா மறியவேணுமென்று பார்த்தால் ஒன்றுமறியப்போகிறதில்லை. (ஏந்திழையித்யாதி) "பிறருடைய பாஹ்யபரிகரங்களோடு

ஆந்தரபரிகரங்களோடு வாசியறத் தம்முடையதாக்கவேணும்" என்று அதுக்காக ஆபரணம்பூண்டிருக்கக்கடவ அபலைகளுண்டு, அவர்களுடைய வளையும், மாஸ்ஸும், அகவாயிலடக்கமும், இவையெல்லாம் (தம்மனவாகப்புருந்து) நம்மதென்றிருந்தவையெல்லாம் கண்டபோதே தம்மதாம்படியாகவாயிற்று வந்தது.

(தாமுமித்யாதி) † தம்மதாக்கின பரிகரத்தைச்சொல்லுகிறது. ஒன்று உபமானமாகப் போராமையாலே அங்குமிங்குமாகக் கதிர் பொறுக்குகிறார். பெரியகிளர்த்தியையுடைத்தாயிருக்கிற கருங்கடல், பூவை, காயா, †செவ்வியிலே யலர்ந்தநீலம், இவற்றோடொக்கத்தொடுத்தமேகம். (அங்ஙனம்போன்று) சொன்ன உபமானந்தான் உபமேயத்துக்குப் போராமையாலே அங்ஙனம்போன்றிவரார்கொலென்ன. (அட்டபுயகரம்) உனக்கறியாமைக்குடலாகச் சொல்லாநின்றாய், நீ அறிகைக்காகவந்து நிற்கிறவனன்றோ நானென்றார். ()

---

அரு.—ஆரும்பாட்டு. (எங்ஙனுமித்யாதி). "பரிச்சேதித்து அநுபவிக்கலாம்படி இங்கேவந்திருக்கிறேன் என்றீர், எனக்குக்கண்டகாட்சிதன்னிலே ஸர்வஸ்வாபஹாரதக்ஷமமானவடிவை அநுபவிக்கப்போகிறதில்லையே" என்ன; எல்லாரும் கண்ணால்கண்டநுபவிக்கலாம்படியன்றோ நான்வந்ததென்றருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

"எங்ஙனும்" எந்தயத்நத்தாலும், நாமிவர்படியெல்லாம் எண்ணப்புகில் என்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார். (ஆபாதேத்யாதி). (இயற்றியெல்லாம்) யத்நமெல்லாம்.

"பொங்கு" இத்யாதி - "அங்ஙனம்போன்றிவர் - தாமும் - ஆர்கொல்" என்று அந்வயித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தம்மதாக்கினவித்யாதி). போதிலே - உசிதகாலத்திலே, விகஸிக்கிற - நீலம் - கருநெய்தலென்று சப்தார்த்தமாய், பலிதார்த்தம் ([illegible]) ... ... (சு)

மூ.—மூழுசி வண்டாடிய தண்டுழாயின்
 மொய்ம்மலர்க் கண்ணியும் மேனியம் சாந்
திழிசிய கோலமிருந்தவா
 றெங்ஙனஞ் சொல்லுகேனோவிநல்லார்
எழுதியதாமரை யன்ன கண்ணு
 மேந்தெழிலாகமும் தோளும் வாயு
மழகியதா மிவரார்கொலென்ன
 வட்டபுய கரத்தேனென்றாரே (எ)

| பதம். | உரை. |
|---|---|
| வண்டு | வண்டுகள் |
| முழுசி | (தேனிலே)முழுகி |
| ஆடிய | ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணாநின்றுள்ள |
| தண் | குளிர்ந்த |
| துழாயின் | திருத்துழாயினுடைய |
| மொய் | செறியத்தொடுத்த |
| மலர்க்கண்ணியும் | பூமாலை (சாத்தியருளின) ப்ரகாரத்தையும் |
| மேனி | திருமேனியிலே |
| அம் | அழகிதான |
| சாந்து இழுசிய | சந்தநத்தாலே யெழுதப்பட்ட |
| கோலமிருந்தவாறும் | அலங்காரமிருந்த ப்ரகாரத்தையும் |
| எங்ஙனம் | எப்படி |
| சொல்லுகேன் | சொல்லித்தலைக்கட்டப்போகிறேன்; |
| ஓவி | சித்ரமெழுதுவதில் |
| நல்லார் | வல்லவர்கள் |
| எழுதிய | எழுதின |
| தாமரையன்ன | தாமரையிதழ்போன்ற |
| கண்ணும் | திருக்கண்களும் |
| ஏந்து எழில் | மிக்ககாந்தியையுடைத்தான |
| ஆகமும் | திருமார்வும் |
| தோளும் | திருத்தோள்களும் |
| வாயும் | திருப்பவளமும் |
| அழகியதாம் | அழகாயிராநின்றது; |
| இவர் | இப்படிப்பட்ட அழகையுடைய இவர் |

ஆர்கொல் என்ன, அட்டபுயகரத்தேன் என்றாரே. (எ)

வ்யா.—ஏழாம்பாட்டு. (முழுசியித்யாதி) கிண்ணகத்தி†லிழிவாரைப்போலே வண்டுகளானவை மதுபாநமத்தமாய்க் களித்தாடாநின்றுள்ள திருத்துழாயினுடைய செறியத்தொடுத்த மாலையும். (மேனியித்யாதி) (க) "𑌆𑌵𑌯𑍋𑌰𑍍𑌗𑌾𑌤𑍍𑌰𑌸𑌦𑍃𑌶𑌂 - ஆவயோர்காத்ரஸத்ருசம்" என்கிறபடியே ஸ்வதஃ நன்றான திருமேனியிலே †பழகப்புதைத்து ஆறின சாந்தை அங்கேயிங்கே †இளிம்பாகப் பூசுகை யன்றிக்கே வேண்டுமிடங்களிலே சாத்தின கோலமிருந்தபடியும். (எங்ஙனம் சொல்லுகேன்) வாசகசப்தமில்லாததுக்கு என்றால் வாசகமிட்டுச் சொல்லப்போமோ?

(ஓவியித்யாதி) சித்ரமெழுதுகையில் குசலராயிருக்குமவர்கள் எழுதின தாமரைப்பூப்போலேயிருக்கிற கண்களும்; அதாகிறது - கண்டபின்பு † இமையாதேயிருந்தபடி. (ஏந்தெழிலித்யாதி) மிக்க வெழிலையுடைத்தாயிருக்கிற திருமார்வும், தோள்களும், வாயுமழகியராயிருந்தார்; இவரார்கொலென்ன; (அட்டபுயகரம்) இவ்வொப்பனை யழகைக்கொண்டு பரமபதத்திலேயிருக்கிறவனென்று கூசவேண்டா, உனக்காக வந்து நிற்கிறவன்நானென்றார். ... (எ)

அரு.—ஏழாம்பாட்டு. (முழுசியித்யாதி) "எல்லாரும் கண்ணாலே யநுபவிக்கலாம்படிவந்து நிற்கிறேன்" என்னாநின்றீர், உம்முடைய கோலமும்,

(க) வி - பு - ரு - உ௦ - ௬.

இமைகொட்டாமல் பார்க்கிறகண்களும், திருமார்வும், தோள்களும், வாயும், ஸூரிபோக்யமாயிருக்கிறதென்று கூசினவளை, கூசவேண்டாவென்கிறாரென்று ஸங்கதி.

(இழிவாரைப்போலே) என்றவநந்தரம், ஒன்றுக்கொன்று துணைதேடி யிழிந்த என்று கூட்டுவது. "அஞ்சாநது" என்கைக்கு, சார்ந்துக்கழகேதென்ன; (பழகவித்யாதி). (இளிம்பாக) அசாதுர்யமாக.

(இமையாதே) இமைகொட்டாதே. ... ... ... (எ)

மூ.—மேவி யெப்பாலும் விண்ணோர் வணங்க
வேதமுரைப்பர் முந்நீர்மடந்தை
தேவி யப்பாலதிர் சங்க மிப்பால்
சக்கரம்மற்றிவர் வண்ணமெண்ணில்
காவியொப்பார் கடலேயுமொப்பார்
கண்ணும் வடிவும் நெடியராயென்
ஆவியொப்பா ரிவரார்கொலென்ன
வட்டபுயகரத்தேனென்றாரே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| விண்ணோர் | நித்யஸூரிகள் [ளும் | மற்று | அதற்குப்பின்பு |
| எப்பாலும் | எல்லாத்திக்குக்களி | இவர் | இவருடைய |
| மேவி | பொருந்திநின்று | வண்ணம் | நிறத்தை |
| வணங்க | வணங்கி | எண்ணில் | ஆராய்ந்துசொல்லப் புக்கால் [தை |
| வேதம் | வேதங்களாலே | காவி | கருநெய்தல்பூநிறத் |
| உரைப்பர் | ஸ்தோத்ரம்பண்ணுநிற்பர்கள்; | ஒப்பார் | ஒப்பவரும் [தை |
| முந்நீர் | திருப்பாற்கடலிலே திருவவதரித்த | கடல் | ஸமுத்ரத்தின்நிறத் |
| | | ஒப்பார் | ஒப்பவரும் [லும் |
| மடந்தை | பெரியபிராட்டியார் | கண்ணும் | திருக்கண்களினழகி |
| தேவி | இவருக்குப்பட்டமஹிஷியாயிராநின்றாள்; | வடிவும் | வடிவழகிலும் |
| | | நெடியராய் | இப்படிப்பட்டவரென்று அளவிடக்கூ |
| அதிர் | முழங்காநின்றுள்ள | | |
| சங்கம் | ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வான் [றான்; | என் | எனக்கு [டாதவரும் |
| | | ஆவியொப்பார் | ப்ராணனையொத்தவருமாயிராநின்றார்; |
| அப்பால் | இடவருகேயிராநின்ற | | |
| சக்கரம் | திருவாழியாழ்வான் | இவர்ஆர்கொலென்ன | அட்டபுயகரத்தேன் என்றாரே. (அ) |
| இப்பால் | வலவருகேயிராநின்றான்; | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (மேவியித்யாதி). § ப்ரஹ்மாதிகள் தரையில் கால்பாவாதேயிறே யிருப்பது. அவர்கள் கந்தத்தையும்

§ (பா) இந்த்ராதிகள்.

அருவருத்திருக்கக்கடவ நித்யஸூரிகள் பார்த்தபார்த்தவிடமெங்கும் †அங்குப்போலேபரிமாற. (வேதமுரைப்பர்) இவர்வாயால் சொல்லுகிறது வேதமாயிராநின்றது. (முந்நீர்மடந்தைதேவி) †முந்நீர்மடந்தையென்று - பெரியபிராட்டியாராகவுமாம், ஸ்ரீபூமிப்பிராட்டியாராகவுமாம். (அப்பாலதிர்சங்கம்) †ஸ்ரீபூமிப்பிராட்டியாரானபோது அவ்விடத்திலே அதிருகிற சங்கமென்னுகிறது; பெரியபிராட்டியாரானபோது, அவரிருக்கிறவிடத்துக்கு மற்றையிடத்திலே யதிருகிற சங்கம். (இப்பால்சக்கரம்) ஓரிடத்திலேநின்றால் மற்றையிடத்தை இப்பால் என்னக்கடவதிறே.

(மற்றித்யாதி) இவருடைய நிறத்தைப்பார்க்கில் காவிபோலேயும் கடல்போலேயுமிராநின்றார். (கண்ணித்யாதி) கண்ணுக்கும் வடிவுக்கும் உபமானமில்லை, கண்ணுக்கெல்லையுண்டாகிலாயிற்று வடிவுக்கெல்லையுள்ளது. (என்னுவியித்யாதி) வ்யதிரேகத்தில் ஜீவிக்கவரிதாம்படியிராநின்றார், இவரார்தானென்ன; (அட்டபுயகரம்) சொன்னபடி †பொல்லாது, (க) "ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்-ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்" கேட்டறியாயோ? என்றார். உன்னை யொழிய ஜீவியாதவன்காண் நானென்கிறார். ... ... ... ... (அ)

---

அரு.—எட்டாம்பாட்டு. (மேவியித்யாதி) நித்யஸூரிபோக்யராயிருந்திரென்றது பொய்யோ, ஸூரிகள் வணங்க நாய்ச்சிமாரும் நீருமாய், (உ) "தமஸ: பரமோ தாதா ஶங்கசக்ர கதாதர: - தமஸ:பரமோதாதா சங்கசக்ரகதாதர:" என்கிறபடி ஆயுதச்சேர்த்தியும் பரமபுருஷலக்ஷணமானகண்ணும் வடிவுமாயிருந்தீரே, கிட்டியநுபவிக்கமாட்டேனென்னுநின்றுகொண்டு, உம்மைப்பிரிந்தால் பிழைக்கவும்மாட்டேனென்ன; நீ இங்ஙன்படுகிறதென், உன்னைவிட்டுப் பிரியக்ஷமனன்றுகாண் நானென்றாரென்று ஸங்கதி.

(அங்குப்போலே) பரமபதத்திற்போலே. மூன்றுவகைப்பட்ட நீரையுடைய இந்தஸமுத்ரம்போலேயிருக்கிற க்ஷீராப்த்தியிற்பிறந்த மடந்தையென்று சப்தார்த்தம் விவக்ஷித்தருளிச்செய்கிறார் (முந்நீரித்யாதி). முந்நீர்சூழ்ந்த மடந்தையென்று அர்த்தாந்தரம் (ஸ்ரீபூமியித்யாதி).

(சொன்னபடிபொல்லாது) என்றது - நீயெனக்கு ஆத்மாவாயிருக்க நம்மை உனக்கு ஆத்மாவாகச்சொன்னபடி பொல்லாதென்றபடி. ... (அ)

---

(க) கீதை - 7.18. (உ) ரா - யு - 114 - 15.

மூ.—தஞ்சமிவர்க்கென் வளையுநில்லா
நெஞ்சமும் தம்மதே சிந்தித்தேற்கு
வஞ்சி மருங்குல் நெருங்க நோக்கி
வாய்திறந்தொன்று பணித்ததுண்டு
நஞ்சமுடைத்திவர் நோக்கும் நோக்கம்
நானிவர் தம்மை யறியமாட்டேன்
அஞ்சுவன் மற்றிவரார்கொலென்ன
அட்டபுயகரத்தேனென்றாரே. (௯)

| பதம். | உரை. |
|---|---|
| என் | என்னுடைய |
| வளையும் | வளைகளும் |
| தஞ்சம் | நிஶ்சிதமாக |
| இவர்க்கு | இவர்க்காக |
| நில்லா | தங்குகிறதில்லை (கழலாநின்றன) |
| சிந்தித்தேற்கு | ஆராய்ந்தவென்னு |
| நெஞ்சமும் | மநஸ்ஸும் [டைய |
| தம்மதே | அவரதாயிருந்தது; |
| வஞ்சி | நீர்வஞ்சிக்கொம்பு போன்ற |
| மருங்குல் | இடையானது |
| நெருங்க | துவளும்படியாக |
| நோக்கி | பார்த்து [றந்து |
| வாய்திறந்து | திருப்பவளத்தைத்தி |
| பணித்தது | அருளிச்செய்தது |
| ஒன்று உண்டு | மிகவும் ரஹஸ்யமான ஓரர்த்தமுண்டு; |
| நோக்கும்நோக்கம் | பார்க்கிறபார்வை |
| நஞ்சம்உடைத்து | விஷத்தோடுகூடியது போலே யிராநின்றது; |
| நான் | நான் |
| இவர்தம்மை | இவரை |
| அறியமாட்டேன் | ஒன்றுமறிகிலேன்; |
| மற்று | அதுக்குமேலே (இவரைப்பார்த்தவாறே |
| அஞ்சுவன் | அஞ்சாநின்றேன்; |

இவரார்கொல்என்ன; அட்டபுயகரத்தேன் என்றாரே. (௯)

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (தஞ்சமித்யாதி) நிஶ்சிதமாக இவர்க்கென்வளைநிற்கிறதில்லை. †இங்கே குடியிருப்பார் அவர்க்காக வர்த்திக்கிறனவாயிருந்தன. (௧) "ஶைதில்ய-சைதில்யம்" இத்யாதி. † அவரைப்போலேவளையும் நிற்கிறனவில்லை. †இவருடைய பூர்வவ்ருத்தத்தோடு ஸாம்யமுண்டாயிற்று இவற்றுக்குமிருப்பது. (என்வளையும்) † "என்னுடையவை" என்று ப்ரமித்தவளவேயாய், கிட்டினவாறே அவரதாயிராநின்றது. பாஹ்யபரிகரங்களிப்படியேயாலும் உள்ளுண்டானவைதானும் நமக்குத்தொங்குமோ? என்றிருந்தேன், (நெஞ்சமும்தம்மதேசிந்தித்தேற்கு) (௨) [உற்றெண்ணில துவுமற்றுங்கவன்றன்னதே] ஆபாதப்ரதீதியில் நம்மதென்றிருந்தவித்தனையாய் ஆராய்ந்தவாறே அகவாயில ஆபரணமும் அவரதாயிருந்தது. (வஞ்சி

(௧)

யித்யாதி) †பண்டே தொட்டார்மேலே தோஷமாய் "இற்றது, முறிந்தது" என்னும்படியாயிற்று இடைதானிருப்பது, இதிலே தயை பண்ணாதே இது துவளும்படி நோக்கினாயிற்று. (வாயித்யாதி) †உருவு வெளிப்பாட்டில்சொன்னவார்த்தை இப்போதென்னால் உங்களுக்குச்சொல்லப்போகாது. † அப்போது சொன்னபாசுரங்கிடக்கச்செய்தேயும் அதரஸ்ப்புரணத்திலே துவக்குண்டமைதோற்ற (வாய்திறந்து) என்கிறாள். (ஒன்று) † இன்னமும் அவன்சொல்லில் சொல்லுமித்தனை; என்னாலது அநுபாஷிக்கப்போகாது.†அதுக்குக் கருத்து.- இடை ஒடிவதுபோலேயிராநின்றது, ஒடியாதபடி என் தோளாலே அணைப்பேனோ? என்றுபோலே

(நஞ்சமித்யாதி) † இவர்பார்க்கிறபார்வை, விபாகத்தில் நம்மை முடிக்கும்போலே யிராநின்றது. † சொன்ன வார்த்தையை க்ரயம் செலுத்துவாரைப்போலே யிராநின்றார். † அதொரு உக்திமாத்ரமாகாமே அத்தை அர்த்த க்ரியாகாரியாக்கி, நினைக்கிறார்போலே யிராநின்றது. (நாணித்யாதி) இவர் ரக்ஷகராயிருக்கிறாரோ? நம்மை முடித்தேவிட விருக்கிறாரோ? அறிகிறிலேன். (அஞ்சுவன்) இவர் சொல்லுகிற வார்த்தைதான் பொல்லாதல்லவிறே; ஆகிலும் அவரையும் நம்மையும் பார்த்தவாறே அஞ்சாநின்றேன். அப்பெரியவனுக்கு இவ்வாற்றாமை யுண்டாகக் கூடுமோ? என்றஞ்சாநின்றேன்; இவரார்தான்? என்ன. (அட்டபுயகரம்) ஒருவசநங்கொண்டு ஈஸ்வரனென்றஞ்சவேண்டா; நீ, அஞ்சாமைக்கு உன்னோடு †ஸஜாதீயனாய்வந்து நிற்கிறவனன்றோ நானென்றார். ... ...(கூ)

---

அநு.—ஒன்பதாம்பாட்டு. (தஞ்சமித்யாதி) "நானுன்னைவிட்டுப்பிரியக்ஷமனன்று என்றுநின்றுகொண்டு தாமிவளோடு கலந்து பரிமாற; இவளந்தசையில் மேல்வரப்புகுகிற விஶ்லேஷத்தையெண்ணி அஞ்ச, இவளச்சம் அவர் தீர்த்தாராக உருவு வெளிப்பாட்டிலநுபவத்தைச் சொல்லுகிறாளென்று ஸங்கதி.

வளைநில்லாவிட்டால், "என்வளை" என்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (இங்கேயித்யாதி). "வளையும்" என்ற சகாரதாத்பர்யம் (அவரைப்போலேயித்யாதி). இப்போது அவர் பிரியமாட்டேனென்றிருக்கிறாரோவென்ன வருளிச்செய்கிறார் (இவருடையவித்யாதி). அதாவது (க) *பேதை நின்னைப் பிரியேன் என்றகன்றவரன்றோவென்கை. அன்றிக்கே, வ்யாக்யாத்ரு வாக்யமாய், ஆழ்வாருடைய பூர்வவ்ருத்தம்போலே வளையும் சுழலுகிறதென்னவு

---

(க) கூ - ங - ந.

மாம்; அதாவது - எம்பெருமான் கிட்டினவாறே பிற்காலிக்கிற ஆழ்வாரைப் போலே யென்கை. (க) * வளவேழுலகுதலையெடுக்கை எல்லார்க்கு மொக்குமிறே. "என்" என்றதுக்கு யோஜநாந்தரம் (என்னுடையவித்யாதி). நீர் வஞ்சிக்கொம்புபோலேயிருக்கிற, மருங்குலுண்டு-இடை, அது நெருங்க-துவளும்படியாக, நோக்கி-ஸம்ஶ்லேஷித்து என்று சப்தார்த்தமாய் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பண்டேயித்யாதி). "ஒன்று" என்ற ஸாமாந்யோக்திக்குத் தாத்பர்யம் (உருவுவெளிப்பாட்டிலித்யாதி). "ஒன்றுபணித்ததுண்டு" என்றளவு அமைந்திருக்க "வாய்திறந்து" என்றதுக்குத் தாத்பர்யம் (அப்போதித்யாத). "ஒன்று" என்றது - அத்விதீயமென்றாய், அதிரஹஸ்யமென்றாய், தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார் (இன்னமுமித்யாதி). "வஞ்சிமருங்குல்நெருங்க" என்றவாக்யத்தையும், மேல் "அட்டபுயகரத்தேன்" என்ற பதத்தில் தோற்றின எட்டுத்தோள்களையும் திருவுள்ளம்பற்றி அந்தபரமரஹஸ்யந் தன்னை வெளியிடுகிறார் (அதுக்கித்யாதி). மத்யமபதமானநமஸ்ஸில் பிறந்த துணிவும் மிகவும் ஸூக்ஷ்மமாயிராநின்றது, ரக்ஷகத்வபாரிப்பாலே நானே ரக்ஷிக்கிறேனென்ற சரமரஹஸ்யமென்று இதுக்கு ஸ்வாபதேசம்.

(இவர் ஸம்ஶ்லேஷிக்கிற ஸம்ஶ்லேஷம் விஷமிஶ்ரமாயிருக்கிறது) என்றதுக்கு உட்கருத்தருளிச்செய்கிறார் (இவரித்யாதி). இப்போது ஆநந்த(து:க)கந்தாவஹமாயிருக்கையால் இத்தனையும் விஶ்லேஷகாலத்தில் பாதகமாய் முடிக்குமென்று கருத்து. கீழே "நெருங்கநோக்கி" என்றாளே, மீளவும் "நோக்கும் நோக்கம்" என்கிறதென்னென்ன வருளிச்செய்கிறார் (சொன்னவித்யாதி). விவரணம் (அதொருவித்யாதி). இடையொடியாமை தோள்களாலே அணைத்த ஸம்ஶ்லேஷத்தைச் சொல்லுகிறதென்றுகருத்து. (சொல்லுகிறவார்த்தை) என்றது - ஸ்வாபதேசத்தில் சரமஶ்லோகம். (ஸஜாதீயனாய்) என்றது - "மாம்" என்றதில் ஸாரதியாய் ஸஜாதீயனானாற்போலே இவளுடன்கலந்து பரிமாறினமையைப்பற்ற. ... ... ... (௯)

மூ.—மன்னவன் தொண்டையர் கோன் வணங்கும்
நீண் முடிமாலை வயிர மேகன்
தன்வலி தன்புகழ் சூழ்ந்த கச்சி
யட்டபுயகரத்தாதி தன்னை
கன்னி நன்மா மதிள் மங்கைவேந்தன்
காமருசீர்க் கலிகன்றி குன்றா
இன்னிசையால் சொன்ன செஞ்சொல் மாலை
யேத்த வல்லார்க்கிடம் வைகுந்தமே. (க௦)

திருமங்கை யாழ்வார் திருவடிகளே சரணம்.

---

(க) தி-வாய் - க - ங -

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வயிரமேகன் | வயிரமேகனென்னும் | மதிள் | மதிளாலே சூழப்பட் |
| மன்னவன் | ராஜாவான | மங்கை | திருமங்கைக்கு [ட |
| தொண்டையர் கோன் | தொண்டைமான் சக்ரவர்த்தியாலே | வேந்தன் | ராஜாவாய் |
| வணங்கும் | ஸேவிக்கப்படுமவராய் (அத்தாலே) [ய | காமரு | எல்லாரும்விரும்பும்படியான [ரான |
| நீள் | நீண்டமுடியையுடை | சீர் | குணங்களையுடைய |
| மால் | ஸர்வேஶ்வரனாய், | கலிகன்றி | ஆழ்வார் |
| தன் | அந்தராஜாவினது | குன்றா | குறைவில்லாத |
| வலி | மிடுக்காலும் | இன் | இனிய |
| தன்புகழ் | அவன்யசஸ்ஸாலும் | இசையால் | இசையுடனே |
| சூழ்ந்த | விஞ்சின | சொன்ன | அருளிச்செய்த |
| கச்சி | கச்சிநகரில் | செம் | அழகிய |
| அட்டபுயகரத்து | திருவட்டபுயகரத்திலே எழுந்தருளியிருக்கிற [டயமாக, | சொல்மாலை | சப்தஸந்தர்ப்பத்தையுடைய இத்திருமொழியைக் கொண்டு |
| ஆதிதன்னை | ஸர்வகாரணபூதன் வி | ஏத்தவல்லார்க்கு | ஸ்தோத்ரம்பண்ணுகிறவர்களுக்கு |
| கன்னி | ஒருவராலும் மழிக்கவொண்ணாத | இடம் | வாஸஸ்தாநம் |
| நல் | நன்றான | வைகுந்தம் | பரமபதமாம் (கo) |
| மா | பெரிய | | |

வ்யா.—பத்தாம்பாட்டு. (மன்னவனித்யாதி) ராஜா தொண்டைமான் சக்ரவர்த்தி; அவன் பக்நாபிமாநியாய் வணங்கின பின்பாயிற்று ஈஶ்வரன் முடி நல்தரித்ததும் ஸர்வேஶ்வரத்வம்நிலைநின்றதும். முன்பெல்லாம் † ஈரரசுபட்டிறே போந்தது. (வயிரமேகன்) வயிரமேகனென்று †அவற்கு§(க்குடி)ப்பேர் (தன்வலி) எதிரிகளை யழியச் செய்கைக்கீடான அவன்மிடுக்கும், ரக்ஷணத்தால் வந்த புகழும் விஞ்சியாயிற்றிருப்பது. திருவட்டபுயகரத்தில் நிற்கிற ஜகத்காரண பூதனைக்கவிபாடிற்று. (கன்னியித்யாதி) அரணாகப் போரும்படியாய், புதிசாயிருக்கிற மதிளையுடைய திருமங்கையிலுள்ளார்க்கு ப்ரதாநராய் எல்லார்க்கும் ஸ்ப்ருஹை பண்ணவேண்டும்படியான ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மியையுடைய ஆழ்வார். (குன்றா) தான்குறையக் கடவதன்றிக்கே, கேட்டார் செவிக்கும் ஆகர்ஷகமாம்படியான இசையையுடைத்தாய், † ஆஶ்ரயந்தான் செவ்விதாயிருக்கிற இவற்றைக் கொண்டு. (ஏத்தவல்லார்க்கிடம் வைகுந்தமே) உருவு வெளிப்பாட்

§ குண்டலிதாக்ஷரம் க்வாசித்கம்; அரும்பதத்துக்கு பாடமில்லை.

டாலே அநுபவித்துப் பிறக்கிருந்து சொல்லவேண்டாதே (க) "तैर्वै स्वसहामादम्मदेम - தேவைஸ்ஸஹ மாதம்மதேம" என்கிறபடியே நித்யாநுபவம் பண்ணிக் களிக்கலாம் தேசத்திலே புகப்பெறுவர். ... ... ... (கo)

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.



அரு.—பத்தாம்பாட்டு. (மன்னவனித்யாதி) (ஈரரசுபட்டிறே) என்று வணங்குகைக்குமுன், (உ) "त्वं मेऽहं मे - த்வம்மேஹம்மே" என்றிறே போந்தது, (ங) "यथा राजा तथा प्रजाः - யதாராஜா ததாப்ரஜா:" என்று எல்லாரும் வணங்கினார்களென்று கருத்து. (அவற்குப்பேர்) சக்ரவர்த்திக்குப் பேர். (ஆஶ்ரயந்தான்) என்றது - (ரா-நா)காராஶ்ரயமானது செஞ்சொல்லாயிருக்குமென்கை. ... ... ... ... ... ... ... (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்.

இரண்டாம்பத்து எட்டாந்திருமொழி முடிந்தது.



(க) (உ) பட்டர்முக்தகம். (ங) முக்தகம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி - உ - ம் பத்து க - ம் திருமொழி - சொல்லு ப்ரவேசம்.

வ்யா—(க)†"மன்னவன் தொண்டையர்கோன் வணங்கும்நீண் முடிமாலை" என்று தொண்டைமான் சக்ரவர்த்தி திருவட்டபுயகரத்திலே அநுகூலித்தபடியை அநுஸந்தித்தார், அந்த ப்ரஸங்கத்தாலே "பல்லவன்" என்பானொருத்தன் பரமேஶ்வர விண்ணகரத்திலே அதிமாத்ரமான ஆநுகூல்யங்களைப்பண்ணி†ஓரோவொன்றை எடுத்தது ஆயிரமாம்படி பண்ணினானாயிற்று.†பின்பு சோழன்கண்டு அது தான் பொறுக்க மாட்டாமையாலே அவைதன்னை †அமைத்தவித்தனை.†இனித்தான் பகவத்விஷயத்தில் ஓரடிவர நின்றார், தமக்கு உத்தேஶ்யமாகவிறே இவர் நினைத்திருப்பது; அத்தாலே அவன்படிகளெல்லாம் தமக்கினிதா யிருக்கையாலே அவற்றை அநுபவித்துப் பேசுகிறார். ... ... ... ... ... ... *

அரு.—சொல்லு ப்ரவேசம். கீழ்த்திருமொழியில், உருவு வெளிப்பாட்டிலே தாய்மாரோடு சொல்லிக்கொண்டிருந்தவிவளுக்கு பரமேச்சுரவிண்ணகரத்திலிருப்பைக் காட்டக்கண்டு தாமானதன்மையாலே அவன்படிகளெல்லாம்பேசி, அங்குத்தைக்குக் கிஞ்சித்கரித்தார்படியில் திருவுள்ளமூன்றி யநுபவிக்கிறாரென்று ஸங்கதி திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (மன்னவனித்யாதி). (ஓரோவொன்றையெடுத்தது) என்றதுக்கு, ஒரொரு ஆபரணங்களாயிரம்பண்ணிவைத்தானென்று கருத்து. இப்போது காணேமேயென்ன (பின்பு சோழனித்யாதி). (அமைத்து) சேமத்திலேயமைத்து. அநுகூலனாகிலித்தனை கொண்டாடவேணுமோவென்ன (இனியித்யாதி). ... ... ... *

மூ.—சொல்லுவன் சொல்பொருள் தானவையாய்ச்
சுவையூறொலி நாற்றமும் தோற்றமுமாய்
நல்லரன் §நாரணன் நான்முகனுக்
கிடந்தான் தடஞ்சூழ்ந் தழகாயகச்சி
பல்லவன் வில்லவனென் றுலகில்
பலராய்ப் பலவேந்தர் வணங்குகழல்
பல்லவன் மல்லையர் கோன் பணிந்த
பரமேச்சுர விண்ணகர மதுவே. (க)

(க) உ - அ - கO -    § (பா) நான்முகன் நாரணனுக்கு.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சொல்லு | சப்தம் | இடந்தான் | வாஸஸ்தாநமாவது, |
| வன்சொல் | (அது தன்னிலும்) அருமையானவேதம் | தடம் | தடாகங்களாலே |
| | | சூழ்ந்து | சூழப்பட்டு |
| பொருள் | வேதார்த்தம் | அழகாய | அழகிதாயிருந்துள்ள |
| அவை | ஆகியஅவற்றுக்கு | கச்சி | கச்சிநகரிலே |
| தான்ஆய் | நிர்வாஹகனாய், | பல்லவன்என்று | பல்லவனென்றும் |
| சுவையும் | ரஸமும் | வில்லவன்என்று | வில்லவன்என்றும் |
| ஊறும் | ஸ்பர்சமும் | | |
| ஒலியும் | சப்தமும் | பலராய் | அநேகராய் [சாண்ட |
| நாற்றமும் | கந்தமும் | உலகில் | இந்தப்பூமியை அர |
| தோற்றமும் | கண்ணால் காண்கிற ரூபமுமாகிற விவற்றுக்கு | பலவேந்தர் | பலராஜாக்கள் |
| | | வணங்கு | வணங்குகிற [ய் |
| | | கழல் | வீரக்கழலையுடையனா |
| ஆய் | நிர்வாஹகனுமாய், | மல்லையர் | மல்லாபுரியென்னும் திருக்கடல் மல்லையிலுள்ளவர்களுக் |
| நல் | உபகாரகனாய் | | |
| அரன் | ஸம்ஹர்த்தாவான ருத்ராந்தர்யாமியாய் | கோன் | அரசனான [கு |
| நாரணன் | (தன்னுடைய நிஜரூபத்தைக்கொண்டு பாலநத்தைப் பண்ணியருளுகிற) நாராயணனாய் | பல்லவன் | பல்லவனென்பவன் |
| | | பணிந்த | ஆஶ்ரயித்த |
| | | பரமேச்சுரவிண்ணகரம் | பரமேஶ்வரவிண்ணகரமாம். (க) |
| நான்முகனுக்கு | ஸ்ரஷ்டாவான ப்ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாய்நின்ற ஸர்வேஶ்வரனுக்கு | | |

வ்யா.—முதற்பாட்டு. (சொல்லு) †ப்ரத்யக்ஷாதிகளுக்கு அவிஷயமான அர்த்தத்தையும் சொல்லக் கடவதான சப்தம். (வன்சொல்) இது தன்னிலும் நித்யமான வேதம். (பொருள்) துரவகாஹமான வேதார்த்தம். (தானவையாய்) அவற்றுக்கு நிர்வாஹகனாய். (சுவையித்யாதி) அதிற்சொல்லுகிற புருஷார்த்தங்களில் ஐஶ்வர்யத்தை அபேக்ஷித்திருப்பார்க்கு உபாதேயமான சப்தாதிகளுக்கும் நிர்வாஹகனாய். (சுவையித்யாதி) ரஸம், ஸ்பர்சம், சப்தம், கந்தம், சக்ஷுர் விஷயமான ரூபம்.

(நல்லரனித்யாதி) † முமுக்ஷுக்களுக்கு உபாஸ்ய வஸ்துவான ஜகஜ்ஜந்மாதிஹேதுவும் தானே யென்கிறது. (நல்லரன்) †தந்தாம் கர்மத்தாலே க்லேசப்படுகிற ப்ராணிகளைத், தீம்பிலே கைவளர்ந்த ப்ரஜையைக் காலிலுங் கழுத்திலும் விலங்கிட்டு வைக்கும் பித்ராதிகளைப்போலே, இவற்றுக்கு ஹிதரூபமாக உபஸம்ஹாரத்தைப் பண்

னும் ருத்ரனுக்கு அந்தர்யாமியாயும்,§ †ஸ்வேநரூபேண நின்று பாலநத்தைப்பண்ணியும், (க) "த்வமாவிஶ்வப்ரஜாபதே - த்வாமாவிஶ்யப்ரஜாபதே" என்கிறபடியே ப்ரஜாபதிக்கு அந்தர்யாமியாய் நின்று ஸ்ருஷ்டித்தும் போருகிற †ஸர்வேஶ்வரனுக்கு வாஸஸ்த்தாநமாகிறது.

(தடமித்யாதி) நல்ல நீர்நிலம் சூழ்ந்து அழகிதாயிருக்கிற கச்சியில். (பல்லவன்) பல்லவனென்றும் வில்லவனென்றும் சிலராஜாக்களுண்டாயிற்று அக்காலத்திலே; அவர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களு மடைய வணங்கும் கழலையுடையனுயிருக்கு மாயிற்று அவன். (மல்லையரித்யாதி) திருக்கடல் மல்லையாயிற்றுப் படைவீடு; அவனும் ரயிக்கிற பரமேஶ்வரவிண்ணகரம். ... ... ... (க)

---

அரு.—முதற்பாட்டு. (சொல்லித்யாதி) ஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களையுட்கொண்டருளிச்செய்கிறார் (ப்ரத்யக்ஷாதிகளுக்கித்யாதி).

புபுக்ஷூபாஸ்யத்வம் சொன்னதாய், மேல்முமுக்ஷூபாஸ்யத்வம் சொல்லுகிறதாக உட்கருத்தருளிச்செய்கிறார் (முமுக்ஷூக்களுக்குமித்யாதி). ஸம்ஹர்த்தாவுக்கு நன்மையேதென்ன வருளிச்செய்கிறார் (தந்தாமித்யாதி). ஸம்ஹர்த்தாவையும் ஸ்ரஷ்டாவையும் சொன்னபோதே நடுவே பாலகர்த்தாவையும் சொல்லவேண்டுமென்றருளிச்செய்கிறார் (ஸ்வேநேத்யாதி). நாராயணபதார்த்தம் (ஸர்வேஶ்வரனுக்கு) என்றது. "இடந்தான் பரமேச்சுரவிண்ணகரமதுவே" என்று அந்வயம். ... ... ... ... ... (க)

மூ.—கார்மன்னு நீள்விசும்பும் கடலும்
சுடரும் நிலனும் மலையும் தன்னுந்தித்
தார்மன்னு தாமரைக் கண்ணனிடம்
தடமாமதிள் சூழ்ந்தழகாயகச்சி
தேர்மன்னு தென்னவனை முனையில்
செருவில் திறல்வாட்டிய திண்சிலையோன்
பார்மன்னு பல்லவர்கோன் பணிந்த
பரமேச்சுர விண்ணகர மதுவே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கார்மன்னு | மேகங்கள் பொருந்தி[ய | தன்உந்தித்தார் | தன்திருநாபியில்தாமரைப்பூவிலே [ற |
| நீள்விசும்பும் | பெரியஆகாசமும் | மன்னு | உண்டாம்படியிருக்கி |
| கடலும் | ஸமுத்ரங்களும் | தாமரைக்கண்ணன் | புண்டரீகாக்ஷனுக்கு |
| சுடரும் | சந்த்ரஸூர்யர்களும் | | |
| நிலனும் | பூமியும் | | |
| மலையும் | குலபர்வதங்களும் | இடம் | வாஸஸ்த்தாநமாவது, |

---

§ (பா) பாசுரத்தில் பாடாந்தராநுகுணமாக இவ்வாக்யம் "ஸ்ருஷ்டித்தும்" என்றவநந்தரம் சில ஸ்ரீகோசங்களில் காண்கிறது.

(க)

| | |
|---|---|
| தடம் | தடாகங்களாலும் |
| மா | உயர்ந்திருந்துள்ள |
| மதிள் | ப்ராகாரங்களாலும் |
| சூழ்ந்து | சூழப்பட்டு |
| அழகாய | அழகிதாயிருந்துள்ள |
| கச்சி | கச்சிநகரிலே, |
| தேர்மன்னு | மஹாரதனை |
| தென்னவனை | பாண்டியனை |
| செருவில்முனையில் | யுத்தமுகத்தில் |
| திறல் | மிடுக்கை |
| வாட்டிய | அழித்த |
| திண் | த்ருடமான |
| சிலையோன் | வில்லையுடையனாய் |
| பார் | (தன்வீரஸ்ரீயை) பூமியில் |
| மன்னு | நிலைநிற்கச்செய்த |
| பல்லவர்கோன் | பல்லவராஜாவானவன் |
| பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. (உ) | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (காரித்யாதி) †சக்ரவர்த்தித் திருமகன் ராவணவதம் பண்ணின்த்தோடு, இவன் சத்ருவதம் பண்ணினத்தோடு வாசியற்றிருக்கிறதாயிற்று இவருடைய ஆதரம். (காரித்யாதி) மேகங்கள் ஸஞ்சரிக்கிற ஆகாசமும், அவ்வாகாசவர்த்திகளான சந்த்ரஸூர்யர்களும், பூமியைச் சூழ்ந்தகடலும், அதுக்குட்பட்டபூமியும், அதுக்கு ஆணியடித்தாற்போலே யிருக்கிற மலையும், இவையடையத் †திருநாபீகமலத்திலே யுண்டாம்படியிருக்கிற புண்டரீகாக்ஷனுக்கு வாஸஸ்த்தாநம்.

தடாகங்களாலும் மதிள்களாலும் சூழ்ந்து தர்சநீயமான கச்சியில். (தேரித்யாதி) மஹாரதனைத்தேரிலே ஏறிப்போகக் கடவனாயிருக்கிற பாண்ட்யனை. (செருவில்) யுத்தத்தில். (முனையில்) தூசித்தலையிலே, மிடுக்கையழித்த திண்ணிய வில்வலியையுடையவன். (பாரித்யாதி) தானில்லையாகிலும் தன்னுடைய வீரஸ்ரீ நிற்கும்படி வாழ்ந்தவன். ... ... ... ... (உ)

---

அரு.—இரண்டாம்பாட்டு. (காரித்யாதி) கீழ்ப்பாட்டில் - "நல்லரன் நாரணன்நான்முகன்" என்று - ஸம்ஹர்த்தாவுக்கும் அந்தர்யாமியாய், பாலநதர்மம் தானேநடத்தி ஸ்ரஷ்டாவுக்கும் அந்தர்யாமியாயிருக்கும்படியை யருளிச்செய்தாரிறே; அதில், நான்முகனுக்குங்கூட ஸ்ரஷ்டாவாகையாலே வந்தவனுடைய ஸ்ரஷ்ட்ருத்வத்தை முந்துற இப்பாட்டிலே யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

உகந்தருளின நிலத்துக்கநுகூலித்தானுகையால் அவனுடையவிஜயமும் உத்தேஶ்யமாயிற்றென்கிறார் (சக்ரவர்த்தித்திருமகனித்யாதி), "உந்தித்தார்" என்றதினர்த்தம் (திருநாபீகமலத்திலே) என்றது. ... ... ... (உ)

மூ.—உரந்தருமெல்லணைப் பள்ளிகொண்டா
னொருகால்முன்னம் மாவுருவாய்க்கடலுள்
வரந்தரு மா மணிவண்ணனிடம்
மணி மாடங்கள் சூழ்ந்தழகாயகச்சி

நிரந்தவர் மண்ணையில் புண்ணுகர்வேல்
நெடுவாயிலுகச் செருவில் முனநாள்
பரந்தவன் பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முன்னம்ஒருகால் | முன்பொருநாளிலே | மணி | ரத்நமயமான |
| மாஉருவாய் | விலக்ஷணமானவடிவோடே | மாடங்கள்சூழ்ந்து | மாடங்களால்சூழப்பட்டு |
| கடலுள் | திருப்பாற்கடலிலே | அழகாயகச்சி | அழகிதான கச்சிநகரில், |
| உரம்தரும் | பலத்தையுடைய | மண்ணையில் | மண்ணையென்னும் படைவீட்டிலுள்ள |
| மெல் | ம்ருதுவான | நிரந்தவர் | சத்ருக்களுடைய |
| அணை | திருவனந்தாழ்வான் மேலே | புண் | மாம்ஸத்தை |
| பள்ளிகொண்டான் | கண்வளர்ந்தருளினவனாய் | நுகர் | புஜிக்கிற |
| வரம்தரும் | (எல்லாருடைய) அபேக்ஷிதங்களையும் தலைக்கட்டிக்கொடுக்கிற | வேல் | வேலின் |
| | | நெடுவாயில் | பெரியவாயிலே |
| | | உக | (அவர்கள்) முடியும்படியாக |
| | | முனநாள் | முன்பு |
| மாமணி | சிந்தாமணிபோன்ற | செருவில் | யுத்தத்தில் |
| வண்ணன் | ஸ்வபாவத்தையுடையவனுக்கு | பரந்தவன் | வ்யாபித்தவனை |
| | | பல்லவர்கோன்பணிந்த | பரமேச்சுரவிண்ணகரமதுவே. (௩) |
| இடம் | வாஸஸ்த்தாநமாவது, | | |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (உரமித்யாதி) (க) †“ప్రకృష్టవిజ్ఞానబలైక ధామని-ப்ரக்ருஷ்ட விஜ்ஞாநபலைகதாமநி” என்கிறபடியே பிராட்டிமாரும் தானுங்கூட ஏறித்துகையாநின்றால் பொறுக்கைக்கீடான தாரணஸாமர்த்யத்தையும், வேண்டின இடங்களிலே திருவுள்ளக்கருத்தறிந்து † குழைந்துகொடுக்கைக்கீடான மென்மையையுமுடைய திருவநந்தாழ்வான் மேலே, முன்பொரு நாளிலே ச்லாக்யமான வடிவையுடையனாய்க்கொண்டு கடலிலே கண்வளர்ந்தருளினான். (வரமித்யாதி) † அருளாளப் பெருமாளாய் நின்று ஸர்வாபேக்ஷிதங்களையும் தருகிறவனுக்கு வாஸஸ்த்தாநம்.

ரத்நமயமான மாடங்கள் சூழ்ந்த தர்சநீயமாயிருக்கிற கச்சியில். (நிரந்தித்யாதி) “மண்ணை” என்று ஆற்றுக்கும், படைவீட்டுக்கும் பேர்; “திருச்சிற்றாறு” என்று ஆற்றுக்கும் திருப்பதிக்கும் பேராகிறாப்போலே. அப்படைவீட்டிலுண்டான, நிரந்தவருண்டு-சத்ருக்கள், அவர்களுடைய, புண்ணுண்டு-மாம்ஸம், அத்தை நுகர

(க) ஸ்தோ - ப - ௩௧.

க்கடவதாய் - புஜிக்கக்கடவதாயிருக்கிற வேலினுடைய பெரிய வாயிலே அந்தசத்ருக்கள், உக - அவர்கள் முடிய. திருமங்கையாழ்வார் மதிக்கும்படியான ஆண்பிள்ளைத்தனமிறே அவரதும். (க) †"கடமாகளியானை வல்லான்" என்றும், (உ) "ஆடல்மாவலவன்" என்றும், (௩) "மருவலர்தமுடல் துணிய வாள்வீசும் பரகாலன்" என்றும் †துறைதோறும் தலையாயிருக்கிற திருமங்கையாழ்வாரிறே மதிக்கிறார். (௪) †*ரஞ்ஜநீயஸ்ய போலேயிருக்கிறதிறே. (செருவிலித்யாதி) இவன் யுத்தத்திலே சத்ருக்களடங்கலும் அழிந்து தானேயாம்படி விஸ்த்ருதனானவன். ... ... ... (௩)

---

அரு.—மூன்ரும்பாட்டு. (உரமித்யாதி)முதற்பாட்டில் ஆர்த்த(ஸ)மான பாலநதர்மத்தை, திருப்பாற்கடலில் கண்வளர்ந்தும், ஹஸ்திகிரியில் அருளாளராயும் நடத்தினபடியை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

உரத்தை - பலத்தை, தரும் - உடையவனென்று லக்ஷணயா சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார், (ப்ரக்ருஷ்டேத்யாதி). (குழைந்து கொடுக்கை) என்றது - திருமுடிபக்க முயர்ந்து கொடுக்கையும், மற்றையிடம் தாழ்ந்து கொடுக்கையும். [கடலிலே திருவநந்தாழ்வான் மேலே - கண் வளர்ந்தருளினான்] என்றந்வயித்து, இதுக்கீடாக மூலத்தையும் அந்வயித்துக் கொள்வது. வரந்தருமவனாய் - (ரு) "వరదస్సర్వభూతానామద్యాపిపరిదృశ్యతే வரதஸ்ஸர்வ பூதாநாமத்யாபி பரித்ருஶ்யதே" என்கிறவரதனாய், மாமணி சிந்தாமணிபோலே ஸர்வாபேக்ஷிதங்களையும் தருகையே ஸ்வபாவமாக வுடையவனென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (அருளாளப் பெருமாளாயித்யாதி). அருளாளப் பெருமாளென்று - தேப்பெருமாளுக்கு ப்ரஸித்தமான திருநாமமிறே. எம்பெருமானார், யஜ்ஞமூர்த்திக்கு, அருளாளப் பெருமாளென்று தேப்பெருமாளுடைய திருநாமம் சாத்திற்றும் ப்ரஸித்தமிறே.

"திருமங்கையாழ்வார் வீரரென்று ப்ரஸித்தர், என்கைக்கு ஸம்வாதம் காட்டுகிறார் (கடமாவித்யாதி). (துறைதோறும்) என்றது - ஆனையாளுகையும், குதிரை நடத்துகையும், வாள்வீசுகையுமாகிற துறைதோறுமென்றபடி. தாம் வீரசிகாமணியாயிருந்து, ஒருவன் வீரத்தைக்கொண்டாடக் கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (ரஞ்ஜநீயஸ்யேத்யாதி). இத்தால் - சத்ருவாய் வீரனாயிருந்த ராவணன் பெருமாளைக் கொண்டாடினால், அநுகூலன் விஷயத்திலே கேட்கவேணுமோ வென்றதாயிற்று. ... ... (௩)

---

(க) உ - ௪ - ௧0.
(உ) ரு - அ - ௧0.
(௩) ௩ - க - ௧0.
(௪) ரா - யு -
(ரு) ஹஸ்திகிரிமாஹாத்ம்யம்.

மூ.—அண்டமு மெண்டிசையும் நிலனு
மலைநீரொடு வானெரிகால் முதலா
உண்டவ னெந்தைபிரானதிட
மொளிமாடங்கள் சூழ்ந்தழகாயகச்சி
விண்டவ ரிண்டைக் குழாமுடனே
விரைந்தாரிரியச் செருவில்முனிந்து
பண்டொருகால் வளைத்தான்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அண்டமும் | அண்டங்களும் | அழகாய | அழகிய |
| எண்திசையும் | எட்டுத்திக்குக்களும் | கச்சி | காஞ்சீநகரத்தில், |
| நிலனும் | பூமியும் [ள | செருவில் | யுத்தத்தில் |
| அலை | அலையெறியாநின்றுள் | விரைந்தாருடனே | விரைந்துவந்தவர்களோடு |
| நீரொடு | ஸமுத்ரங்களும் | விண்டவர் | சத்ருக்களுடைய |
| வான் | ஆகாசமும் | இண்டை | திரண்ட |
| எரி | அக்நியும் | குழாம் | கூட்டமானது [க |
| கால் | காற்றும் | இரிய | சிதறியோடும்படியா |
| முதலா | முதலாக [வனுய் | முனிந்து | சீறி, [லே |
| உண்டவன் | அமுதுசெய்தருளின | பண்டு ஒருகால் | முன்பொருகாலத்தி |
| எந்தைபிரானது | என்குலநாதனானவனுக்கு | வளைத்தான் | வில்லைவளைத்த பல்லவராஜா |
| இடம் | இடமாவது, | பணிந்த பரமேச்சுர விண்ணகரமதுவே. (௪) | |
| ஒளி | விளங்காநின்றுள்ள | | |
| மாடங்கள் | மாடங்களால் | | |
| சூழ்ந்து | சூழப்பட்டு | | |

வ்யா.—நாலாம்பாட்டு. † (அண்டமுமித்யாதி) அண்டமும், அஷ்டதிக்குக்களும், பூமியும், †காரணமாயும் கார்யமாயுமுள்ளவை யடையத்திருவயிற்றிலே வைத்து நோக்கினவன். (எந்தைபிரானதிடம்) எனக்கு ஜநகனானவனுக்கு †ஸ்வாமி. என்குலநாதன் என்றபடி.

(ஒளி) ரத்நங்களினுடைய ஒளியையுடைத்தான மாடங்கள் சூழ்ந்து தர்சநீயமான கச்சியில். (விண்டவரித்யாதி) செருவிலே - யுத்தத்திலே, விரைந்தவருண்டு - பெரிய கிளர்த்தியோடே "காட்டு, காட்டு" என்று தூசி யேறிவருகிறவர்கள்; அவர்களோடே. (விண்டவரிண்டைக்குழாம் - இரிய) சத்ருக்களுடைய செறிந்த குழாமானது சிதறியோட. (முனிந்து) சீறி. (பண்டித்யாதி) முன்பொருநாளிலே கையில் வில்வளைத்தவன்பணிந்த. ... ... (௪)

அரு.—நாலாம்பாட்டு. (அண்டமுமித்யாதி) முதற்பாட்டில், "நல்லரன்" என்று சொன்ன ஸம்ஹர்த்ருத்வத்தை ஸப்ரகாரமாக அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"அண்டமும்" இத்யாதிக்கெல்லாம் தொகுத்தபாவம் (காரணமாயுமித்யாதி) "பிரான்" என்றதுக்கு பலிதார்த்தம் (ஸ்வாமி) என்றது. ... ... (ச)

மூ.—தூம்புடைத் திண்கை வன்தாள்களிற்றின்
துயர்தீர்த்தரவம் வெருவ முனநாள்
பூம்புனல்பொய்கை புக்கானவனுக்
கிடந்தான் தடஞ்சூழ்ந்தழகாயகச்சி
தேம்பொழில் குன்றெயில் தென்னவனைத்
திசைப்பச் செருமேல் வியந்தன்றுசென்ற
பாம்புடைப் பல்லவர்கோன் பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (ரு)

| பதம். | உரை. |
|---|---|
| தூம்புஉடை | துளையையுடைய |
| திண் | டமான |
| கை | துதிக்கையையும் |
| வல் | வலிய |
| தாள் | தாளையுமுடையனான |
| களிற்றின் | ஸ்ரீகஜேந்த்ராழ்வா[னுடைய |
| துயர் | துக்கத்தை |
| தீர்த்து | போக்கி, |
| அரவம் | காளியனானவன் |
| வெருவ | அஞ்சும்படியாக |
| முனநாள் | முன்பு |
| பூம்புனல்பொய்கை | அழகிய நீர்நிறைந்த மடுவிலே |
| புக்கானவனுக்கு | பாய்ந்தவனுக்கு |
| இடம் | இடமாவது, |
| தடம் | தடாகங்களாலே |

| பதம். | உரை. |
|---|---|
| சூழ்ந்து | சூழப்பட்டு |
| அழகாயகச்சி | அழகியகச்சியில், |
| தேன் | தேனையுடைய |
| பொழில் | சோலையையும் |
| குன்று | மலைபோன்ற |
| எயில் | மதிளையுமுடைய |
| தென்னவன் | பாண்டியன் |
| திசைப்ப | அறிவுகெடும்படி |
| அன்று | முன்பு |
| செருமேல் | யுத்தத்தில் [டே |
| வியந்து | பெரிய ஆதரத்தோ |
| சென்ற | வந்துகிட்டினவனும் |
| பாம்புஉடை | ஸர்ப்பத்தைக் கொடியாகவுடைய |

பல்லவர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. (ரு)

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (தூம்புடையித்யாதி) துளையையுடைய திண்ணிய கையையுடைத்தாய், வலிதானதாளையுமுடைய ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு ஜலசரஸத்வத்தால் வந்த துக்கத்தைப் போக்கி. (அரவமித்யாதி) †காளியனானவன் ஒருதடாகத்தை விஷத்தாலே தூஷிக்க, அவனஞ்சி ஓடும்படியாகத் தானதிலே போய்ப் புக்கானாயிற்று.

(தேம்பொழிலித்யாதி) தேனையுடைத்தான சுற்றில் சோலையையும், மலைபோலே யிருக்கிற †மதிளையுமுடைய தென்னவனானவன் அறிவுகெடும்படியாக யுத்தத்திலே பெரிய ஆதரத்தோடே சென்று கிட்டின. (பாம்புடை) நாகலோகத்தை வென்று ஸர்ப்பத்தை த்வஜமாக எடுத்தானைச் சொல்லக்கடவது; அவன்பணிந்த. (௫)

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (தாம்புடையித்யாதி) முதற்பாட்டில்சொன்ன காரணத்வத்தை மூன்றுபாட்டிலும் விஸ்தரித்தநுபவித்து, அத்தால் பலித்த முமுக்ஷுபாஸ்யத்வத்தை, ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு அநிஷ்ட நிவர்த்தநமுகேந அருளிச்செய்துகொண்டு, இதுக்குக்கீழ், "சுவையூறொலிநாற்றமும் தோற்றமுமாய்" என்றபதத்தில் தோற்றின புபுக்ஷுபாஸ்யத்வத்தை மேலெட்டாம் பாட்டளவு மநுஸந்திக்கிறாராய்; அதில் காளியனுக்கும் இடைச்சேரியில் கோபஜநங்களுக்கும் ஜீவநப்ரதாநோபயுக்தமான அபதாநத்தை யநுஸந்திக்கிறாரென்று இங்ஙனே ஸங்கதி கண்டுகொள்வது.

முனநாள் பூம்புனல்பொய்கையானதில் - அரவம் - வெருவ - புக்கானென்றுதல்; பூம்புனல்பொய்கையாம்படி புக்கானென்றுதல் சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (காளியனனவனித்யாதி).

"எயில்" என்றதினர்த்தம் (மதிள்) என்றது.... ... ... (இ)

மூ.—திண்படைக் கோளரியினுருவாய்த்
திறலோனகலம் செருவில் முனநாள்
புண்படப் போழ்ந்தபிரானதிடம்
பொருமாடங்கள் சூழ்ந்தழகாயகச்சி
வெண்குடை நீழல் செங்கோல்நடப்ப
விடைவெல்கொடிவேல் படைமுன்னுயர்த்த
பண்புடைப் பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திண் | திண்ணிய (திருவகிரான) | முனநாள் | முன்காலத்திலே |
| படை | ஆயுதத்தையும் | செருவில் | யுத்தத்திலே |
| கோள் | மிடுக்கையுமுடைய | புண்பட | புண்படும்படி |
| அரியின்உருவாய் | நரஸிம்ஹரூபியாய்க்கொண்டு | போழ்ந்த | பிளந்த |
| திறலோன் | பெருமிடுக்கனான ஹிரண்யனுடைய | பிரானது | உபகாரகனுக்கு |
| அகலம் | மார்வை | இடம் | இடமாவது, |
| | | பொரு | ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற, |
| | | மாடங்கள்சூழ்ந்து அழகாயகச்சி, | |

இவை ..

| | | | |
|---|---|---|---|
| வெண்குடைநீழல் | வெண்கொற்றக்குடைநிழலின் கீழே | படைமுன் | ஸேனைகளின்முன்னே |
| செங்கோல்நடப்ப | தன் ஆஜ்ஞைசெல்லும்படி | உயர்த்த | உயரவெடுத்தவனாய் |
| வெல் | ஜயஸூசகமான | பண்புடை | அழகிய ஸ்வபாவத்தையுடையனான |
| விடைக்கொடி | ஸர்ப்பத்வஜத்தையும் | பல்லவர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. (கூ) | |
| வேல் | வேலாயுதத்தையும் | | |

வ்யா.—ஆறும்பாட்டு. (திண்படையித்யாதி) ஹிரண்யனுடனுக்கு வளையாத திருவுகிரை ஆயுதமாகவுடைய நரஸிம்ஹமாய், பெருமிடுக்கனான ஹிரண்யனுடைய மார்வை யுத்தத்திலே புண்படும்படி, (போழ்ந்த பிரானதிடம்).

"பொரு" என்று ஒப்பு - †ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற. (வெண்குடையித்யாதி) †தன் வெண்கொற்றக்குடை ஒன்றுமேயாகத் தன்னுடைய ஆஜ்ஞையை நாட்டிலே நடத்தும்படி மிடுக்கையுடையவனென்னுதல். †விடையாதல், விடமாதல், விறலென்னுதல். (விடை) - என்றபோது இளம்பாம்பாகிறது. (விடம்) என்றபோது விஷத்தை என்றாய், ஸர்ப்பமென்றபடி. (விறல்) என்றபோது - மிடுக்கையுடைத்தாய் வெற்றிக்குப்பரிகரமான கொடியையும் வேலாகிற ஆயுதத்தையும் முன்பே எடுத்தவன். (பண்புடையித்யாதி) அழகிய ஸ்வபாவத்தையுடைய. பல்லவர்கோன்பணிந்த.

---

அரு.—ஆறும்பாட்டு. (திண்படையித்யாதி) இனி மூன்றுபாட்டால், விரோதிகளைப்போக்கி ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களுக்குக் குடியிருப்புப் பண்ணிக் கொடுத்தமையை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

(ஒப்பு) என்றத்தால் பலிதம் (ஒன்றோடித்யாதி). "விறல்" என்றுபாடமாய், ராஜாவுக்கு விசேஷணமாக ஒருயோஜனை யருளிச்செய்கிறார் (தன் வெண்கொற்றக்குடையித்யாதி). பாடாந்தரங்களையும் காட்டிக்கொண்டு, விறல்பாடத்தில் கொடிக்கு விசேஷணமாக யோஜநாந்தர மருளிச்செய்கிறார் (விடையித்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே). ... ... (கூ)

மூ.—இலகிய நீண்முடி மாவலி தன் பெரு
வேள்வியில் மாணுருவாய் முனநாள்
சலமொடு மாநிலங்கொண்டவனுக்
கிடந்தான் தடம்சூழ்ந்தழகாய கச்சி
உலகுடை மன்னவன் தென்னவனைக்
கன்னி மா மதிள் சூழ் கருவூர் வெருவப்
பல்படைசாய வென்றான் பணிந்த
பரமேச்சுர விண்ணகரமதுவே. (எ)

| பதம். | உரை. |
|---|---|
| இலகிய | ஒளிவிடாநின்றுள்ள |
| நீள் | நீண்ட [டைய |
| முடி | அபிஷேகத்தையு |
| மாவலிதன் | மஹாபலியின் |
| பெருவேள்வி யில் | பெரியயாகத்திலே [ன்று) |
| மாணுருவாய் | வாமநரூபியாய் (ச்செ |
| முனநாள் | முன்பொருகால் |
| மா | பரப்புடைத்தான |
| நிலம் | பூமியை |
| சலமொடு | உதகபூர்வகமாக |
| கொண்டவனுக்கு | கொண்டுஅளந்தவனுக்கு |
| இடந்தான் | இடமாவது, |

| பதம். | உரை. |
|---|---|
| தடம்சூழ்ந்தழகாயகச்சி, | |
| கன்னி | அழிவில்லாத |
| மாமதிள் | பெரியமதிள்களாலே |
| சூழ் | சூழப்பட்ட |
| கருவூர் | கருவூரானது |
| வெருவ | அஞ்சும்படியாகவும் |
| பலபடை | சதுரங்கஸேனையானது |
| சாய | முடியும்படியாகவும் |
| உலகுடை | லோகத்துக்கெல்லா [ம் |
| மன்னவன் | ராஜாவான |
| தென்னவனை | பாண்டியனை |
| வென்றான் | வென்றவன் |
| பணிந்த பரமேச்சுர விண்ணகரமதுவே. (எ) | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (இலகியவித்யாதி) உஜ்ஜ்வலமாய் ஆதிராஜ்ய §ஸூசகமான முடியையுடைய மஹாபலியுடைய யஜ்ஞவாடத்திலே, இரப்பிலே தகணேறினவடிவையுடையனாய், முன்பொருநாளிலே கையிலே நீர்விழுந்தபோதே, பரப்பையுடைத்தான பூமியைக் கைக்கொண்டளந்தவனுக்கு.

(உலகுடை) லோகத்துக்கெல்லாம் தானே நியந்தாவானபாண்டியனை, அரணுடைத்தான பெரியமதிளாலே சூழப்பட்ட ‡ கருவூர் அஞ்சும்படியாக ஸேநாஸமூஹமானது சாய வென்றவன் பணிந்த.

---

அந்.—ஏழாம்பாட்டு. (இலகியவித்யாதி). (பாண்டியனை - வென்றவன்) என்றந்வயம். ... ... ... ... ... (எ)

மூ.—குடைத்திறல் மன்னவனை யொருகால்
குரங்கைப் படையா மலையால்கடலை
அடைத்தவ னெந்தைபிரானதிட
மணிமாடங்கள் சூழ்ந்தழகாய கச்சி
விடைத்திறல் வில்லவனென்மெவியில்
வெருவச்செருவேல் வலங்கைப்பிடித்த
படைத்திறல் பல்லவர்கோன் பணிந்த
பரமேச்சுர விண்ணகரமதுவே. (அ)

---

§ (பா) ப்ரகாசகமான. ‡ கருவூர் - பாண்டியன்பட்டணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| குடை | வெண்கொற்றக்குடையையும் | விடை | ருஷபம்போன்ற |
| திறல் | மிடுக்கையுமுடைய | திறல் | மிடுக்கையுடையனாய் |
| மன்னவனாய் | சக்ரவர்த்தித்திருமகனாய் | நென்மெலியில் | நென்மெலியென்கிற படைவீட்டையுமுடையனை [ஜா |
| ஒருகால் | ராவணன்பிராட்டியைப்பிரித்தவன் | வில்லவன் | வில்லவனென்னும்ரா |
| குரங்கை | வாநரங்களை [று | வெருவ | அஞ்சும்படி [மான |
| படையா | ஸேனையாகக்கொண் | செரு | யுத்தத்துக்குப்பரிகர |
| மலையால் | மலைகளாலே [டு | வேல் | வேலாயுதத்தை |
| கடலை | ஸமுத்ரத்தை | வலங்கைப்பிடித்த | வலக்கையிலேபிடித்தவனாய் |
| அடைத்தவன் | அடைத்தவனாய் | படை | ஆயுதங்களைத்தரிப்ப |
| எந்தைபிரானது | என்குலநாதனானவ | திறல் | மிடுக்கனை [தில் |
| இடம் | இடமாவது, [னுக்கு | | |
| அணி | அழகிய | | |
| மாடங்கள்சூழ்ந்து அழகாயகச்சி, | | பல்லவர்கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகரமதுவே. (அ) | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (குடைத்திறலித்யாதி) வெண்கொற்றக்குடையையும், பெருமிடுக்கையுமுடைய சக்ரவர்த்தித்திருமகனாய். (குரங்கைப்படையா) †பூசலென்றால் அஞ்சக்கடவ குரங்குகளைப் படையாகக்கொண்டு, நீரிலே ஆழக்கடவ மலையாலே கடலையடைத்தவன். (எந்தையித்யாதி) எனக்கு ஜநகனாய், உபகாரகனானவனுக்கு இடம்.

அழகிய மாடங்களாலேசூழப்பட்ட அழகியகச்சி; (விடையித்யாதி) ருஷபம்போலேயிருக்கிற மிடுக்கையுடைய வில்லவன், நென்மெலி என்கிற படைவீட்டிலே அஞ்ச, யுத்தத்துக்குப் பரிகரமான வேலைக் கையிலே பிடித்த. (படைத்திறல்) ஆயுததாரண ஸாமர்த்யத்தையுடைய பல்லவர்கோன் ... ... ... ... (அ)

---

அரு.—எட்டாம்பாட்டு. (குடையித்யாதி) அவதாரப்ரயோஜநமான ராவண நிரஸநத்தைவிட்டு குரங்கால் கடலடைத்தத்தைச்சொன்னதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (பூசலித்யாதி). அதிலுமிது அதிமாநுஷசரித்ரமென்று கருத்து. ... ... ... ... ... ... ... (அ)

மூ.—பிறையுடைவாணுதல் பின்னைதிறத்து
முன்னேயொருகால் செருவிலுருமின்
மறையுடை மால்விடையேழடர்த்தாற்
கிடந்தான் நடம் சூழ்ந்த அழகாய கச்சி

கறையுடை வாள் மற மன்னர்கெடக்
கடல்போல் முழங்கும் குரல் கடுவாய்ப்
பறையுடைப் பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுர விண்ணகரமதுவே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பிறை | பிறைபோலேயாய் | இடம்தான் தடம்பூக்கு அழகாயச்சி | |
| வாள் | ஒளியை | கறை உடை | கறையையுடைய |
| உடை | உடைத்தான | வாள் | வாளையும் |
| நுதல் | நெற்றியையுடைய | மறம் | மிக்ககோபத்தையுமு டையரான |
| பின்னைதிறத்து | நப்பின்னைப்பிராட்டிக்காக | மன்னர் | ராஜாக்கள் |
| முன்னேஒருகால் | முன்பொருநாளிலே | கெட | நசிக்கும்படி |
| | | கடல்போல் | ஸமுத்ரம்போலே |
| செருவில் | யுத்தத்திலே [ம் | முழங்கும் | கோஷிக்கிற |
| உருமின் | இடிபோன்ற குரலையு | குரல் | த்வநியையும் [ய |
| மறை | சாத்ரவத்தையும் | கடுவாய் | கடியவாயையுமுடை |
| உடை | உடைய | பறை | வாத்யத்தை |
| மால் | பெரிய | உடை | உடையனான |
| விடைஏழு | ருஷபங்களேழையும் | பல்லவர்கோன் | பணிந்த பரமேச்சுர விண்ணகரமதுவே. (கூ) |
| அடர்த்தாற்கு | நிரஸித்தவனுக்கு | | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பிறையித்யாதி) † பிறைபோலேயிருப்பதாய் ஒளியையுடைத்தான நுதலையுடைய நப்பின்னைப்பிராட்டிக்காக. முன்பொருநாளிலே, யுத்தத்திலே †உருமுபோலேயாய், உருமு - இடி. நெஞ்சிலே க்ருத்ரிமத்தையுடைத்தான; †மாமுய்வரும் என்னவுமாம். பெரியவ்ருஷபங்களை அடர்த்தவனுக்கு.

(கறையித்யாதி) சத்ருசரீரங்களிலே தைச்சுக் கறைகழுவாதேயிருக்கிறவாளையுடையராய், பெரிய சினத்தையுடைய ராஜாக்கள் கெட, கடல்போலே கோஷியாநின்றுள்ள த்வநியையுடைத்தாய், அந்தத்வநியைக்கேட்டபோதே எதிரிகள் கெட்டோமென்னும்படியான கடிய வாயையுடைய. (க) † "கன்றப்பறைகறங்க" என்று திருவரையிலே கோத்துக்கட்டின பறையோபாதியாய்த் தோற்றுகிறதாயிற்று இவர்க்கிது. ... ... ... ... ... (கூ)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (பிறையித்யாதி) புபுக்ஷுக்களான தேவர்களுக்கும் முமுக்ஷுக்களுக்கும் அநிஷ்டநிவர்த்தநமுகத்தாலே உபாஸ்யனான

---

(க) கக - கி கூ.

தானுபகரித்தபடியை இவ்வளவு மநஸந்தித்து, இவ்வளவன்றிக்கே, நித்ய ஸூரிகளில் தலையான நீளாதேவியினுடைய அவதாரமான நப்பின்னைதிறத்தில்பண்ணின உபகாரத்தை அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

"பிறை"என்றது - பிறைஸாதர்ம்யத்தை லக்ஷணயா சொல்லுகிறதென்றருளிச்செய்கிறார் (பிறைபோலே) என்று.(உருமுபோலேயாய்) என்றது-"உருமின்" என்றவிடத்தில், இன் - சாரியையாய், இடியின் த்வநிபோலேயிருக்கிற குரலையொத்ததாயிருக்குமென்கை. "மாறை" மறையென்று குறைந்து கிடக்கிறதாய், சாத்ரவத்தைச்சொல்லுகிற கென்றர்த்தாந்த்ரம் (மாறாயித்யாதி).

பறையை வர்ணிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (கன்றவித்யாதி). ... ... ... ... ... ... ... (கூ)

மூ.—பார்மன்னு தொல்புகழ் பல்லவர்கோன்
பணிந்த பரமேச்சுரவிண்ணகர்மேல்
கார்மன்னுநீள்வயல் மங்கையர்தம்
தலைவன்கலிகன்றி குன்றாதுரைத்த
சீர்மன்னு செந்தமிழ் மாலைவல்லார்
திருமாமகள்தன் னருளா லுலகில்
தேர்மன்னராயொலி மா கடல் சூழ்
செழுநீ ருலகாண்டு திகழ்வர்களே. (கO)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பார் | பூமியிலே | கலிகன்றி | ஆழ்வார் [யாதப்டி |
| மன்னு | நிலைநின்ற | குன்றாது | லக்ஷணங்கள் குறை |
| தொல் | பழையதான | உரைத்த | அருளிச்செய்ததாய் |
| புகழ் | புகழையுடைய | சீர் | பகவத்குணங்கள் |
| பல்லவர்கோன் | பல்லவராஜா | மன்னு | பொருந்தியிருக்கிற |
| பணிந்த | ஆஶ்ரயித்த | செம் | அழகிய |
| பரமேச்சுரவிண்ணகர்மேல் | பரமேஶ்வரவிண்ணகரம்விஷயமாக | தமிழ்மாலை | தமிழ்த்தொடையை |
| | | வல்லார் | அர்த்தத்துடன் அதிகரிக்கவல்லவர்கள் |
| கார் | கறுப்பு | திருமாமகள்தன் | பெரியபிராட்டியாருடைய |
| மன்னு | பொருந்திய | அருளால் | கடாக்ஷத்தாலே |
| நீள் | பெரிய | உலகில் | லோகத்திலே |
| வயல் | வயலையுடைய | தேர் | மஹாரதரான |
| மங்கையர்தம் | திருமங்கைக்கு | மன்னராய் | ராஜாக்களாய் |
| தலைவன் | ராஜாவான | | |

| | | | |
|---|---|---|---|
| ஒலி | சப்திக்கிற | நீர் | நீரையுடைய |
| மாகடல் | பெரியஸமுத்ரத்தால் | உலகு | பூமியை |
| சூழ் | சூழப்பட்டு | ஆண்டு | பரிபாலநம்பண்ணி |
| செழு | அழகிய | திகழ்வர்கள் | விளங்குவர்கள். (௧0) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (பாரித்யாதி) பூமியிலே நிலைநின்ற பழைதான புகழையுடைய பல்லவர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகர்மேல். (காரித்யாதி) †சிலைகொண்டவயலை யுடைத்தாயிருக்குமாயிற்று. மூக்தர் பஞ்சவிம்சதிவார்ஷிகரா யிருக்குமாபோலே. (க) "கருநெல்சூழ் கண்ணமங்கை" என்னக்கடவதிறே. (குன்றாதித்யாதி) கவிக்குச்சொல்லுகிற லக்ஷணங்கள் ஒன்றுங்குறையாதபடி அருளிச்செய்த, பகவத்குணங்கள் நெருங்கத்தொடுத்த செவ்விய தமிழ்த்தொடை வல்லார்; பெரியபிராட்டியாருடைய கடாக்ஷத்தாலே லோகத்திலே மஹாரதராய்க், கடல்சூழ்ந்த பூமியையடைய ஆண்டு; (திகழ்வர்களே)உஜ்ஜ்வலராவர்கள். †இந்த ஐஶ்வர்யமடைய †மலடாய்ப் போகாமே இவரைப்போலே பாகவதசேஷமாக்கப் பெறுவர்.

ஆக, இத்திருமொழியால், ஸர்வேஶ்வரன் விரும்பும் நிலமாகையாலே இத்தேசம் ஆஶ்ரயணீய மென்றும், அதுதான் ஸர்வஸமாஶ்ரயணீய மென்றும் சொல்லிற்றாயிற்று. அதாகிறது - சமதமாத்யுபேதர்க்கிறே ஆஶ்ரயணத்திலதிகார முள்ளது; அவையில்லாதவனும் (ஶாந்த) தாந்தனுயாஶ்ரயிக்கும் படியான தேசமிறே. (௧0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



அரு.—பத்தாம்பாட்டு. (பாரித்யாதி) "கார்" என்று கறுப்பாய், கறுத்துத் திரண்டேறுகிற தசாவிசேஷத்தைச் சொல்லுகிறதென்றருளிச்செய்கிறார் (சிலைகொண்டவித்யாதி). சிலைகொள்ளுகை-செழித்திருக்கை. "செழுநீர்" என்று ஊற்றுநீரைச் சொல்லுகை ஸ்பஷ்டமென்றருளிச்செய்கிறார் (பூமியை) என்று. ஔஜ்ஜ்வல்யந்தன்னை விவரிக்கிறார் (இந்தவித்யாதி). (மலடாய்) - ஸ்வபோகமாத்ரத்துக்குடலாய். ... ... ... ... (௧0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

இரண்டாம்பத்தில் ஒன்பதாந்திருமொழி முடிந்தது.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி - உ - ம் பத்து - க௦ - ம் திருமொழி
# மஞ்சாடு ப்ரவேசம்.

—(*)—

வ்யா.—(க)†"யுத்³தே⁴சாப்யபலாயநம்-யுத்தேசாப்யபலாயநம்" என்றும், (உ) "ஈச்வரபா⁴வச்ச-ஈஶ்வரபாவஶ்ச" என்றும் சொல்லும்படியான†வனுங்கூட ஆஶ்ரயித்தபடியை யநுஸந்தித்தார்; †ஸ்வவர்ணத்துக்கும் ஸ்வாஶ்ரமத்துக்கும் உசிதமான கர்மங்களை பலா (ஃபல) பிஸந்திரஹிதமாக புகவத்ஸமாராதந புத்யா அநுஷ்டித்து சமதமாத்யுபேதராயிருக்கிற ப்ராஹ்மணர்க்கு ஆஶ்ரயணீயனைக்கொண்டு பிராட்டிமாரும் தானுமாகத் திருக்கோவலூரிலே வந்துநின்றான், அவை ஒன்றுமில்லாத நான் அவனை அங்கேகண்டு அநுபவிக்கப் பெற்றேனென்கிறார். ... ... ... ... *

---

அரு.—மஞ்சாடு ப்ரவேசம் - வ்ருத்தவர்த்திஷ்ய மானுர்த்தகதந பூர்வகம் ஸங்கதியருளிச்செய்கிறார் (யுத்தேசேத்யாதி). "யுத்³தே⁴சாப்யபலாயநம்,-யுத்தேசாப்யபலாயநம்" என்றது க்ஷத்ரியதர்மமேயாகிலும், (ங.)"தென்னன் கொண்டாடும் தென்திருமாலிருஞ்சோலை" என்கிறபடியே உகந்தருளின நிலத்தில் ப்ரவணனை தென்னவனை வெல்லுகையாலே கேவலமபிமாந சார்யமென்று தோற்றுகையால் ஸாத்விகதர்மமன்றென்று கருத்து. "ஈஶ்வரபாவஶ்ச." என்றது-"ஈஶ்வரோஹம்" என்கிற அபிப்ராயமுண்டென்கை. (அவனுங்கூட) என்கையாலே, தாமங்கே கண்டநுபவித்தது ஆஶ்சர்ய மன்றென்று கருத்து. சமதமாத்யுபேதர் ஆஶ்ரயிக்கும் திருக்கோவலூரில் நான்கண்டநுபவிக்கப் பெற்றது ஆஶ்சர்யமென்கிற தென்றருளிச் செய்கிறார் (ஸ்வவர்ணத்துக்கு மித்யாதி). ... ... ... ... ... ... *

மூ.—மஞ்சாடு வரையேழும் கடல்களேழும்
வானகமும் மண்ணகமும் மற்று மெல்லாம்
எஞ்சாமல் வயிற்றடக்கி யாலின்மேலோ
ரிளந்தளிரில் கண்வளர்ந்த வீசன்றன்னைத்
துஞ்சாநீர்வளஞ்சுரக்கும் பெண்ணைத்தென்பால்
தூய நான்மறையாளர் சோமுச்செய்யச்
செஞ்சாலி விளை வயலுள் திகழ்ந்து தோன்றும்
திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே. (க)

---

(க) பா. (உ) (ங) பெரி - திரு - ச - உ - எ.

| பதம். | உரை. |
| --- | --- |
| மஞ்சு | மேகங்கள் |
| ஆடு | ஸஞ்சரிக்கிற |
| வரையேழும் | ஸப்தகுலபர்வதங்களும் |
| கடல்களேழும் | ஸப்தஸமுத்ரங்களும் |
| வானகமும் | ஸ்வர்க்காதிலோகங்களும் |
| மண்ணகமும் | பூமியும் |
| மற்றும் | மற்றுமுண்டான |
| எல்லாம் | எல்லாப்பதார்த்தங்களும் |
| எஞ்சாமல் | நசியாமல் |
| வயிறு | திருவயிற்றிலே |
| அடக்கி | எடுத்துவைத்து |
| ஓர் | ஒப்பற்ற |
| ஆலின் | ஆலிலையின் |
| இளந்தளிரின் மேல் | இளந்தளிரிலே |
| கண்வளர்ந்த | யோகநித்ரை கொண்டருளின |
| ஈசன்றன்னை | ஆபத்ஸகனான ஸர்வேஸ்வரனை, |
| துஞ்சா | மாறாதே |
| வளம்நீர் | ஸம்ருத்தமானஜலம் |
| சுரக்கும் | பெருகாநின்றுள்ள |
| பெண்ணைத்தென்பால் | பெண்ணையாற்றுத் தென்கரையிலே |
| தூய | அநந்யப்ரயோஜநராய் |
| நான்மறையாளர் | நான்குவேதத்துக்கும் நிர்வாஹகரானவர்கள் |
| சோமு | ஸோமயாகங்களை |
| செய்ய | பண்ண (அத்தாலே) |
| செஞ்சாலி | செந்நெல் |
| விளை | விளையாநிற்கிற |
| வயலுள் | வயலிலே |
| திகழ்ந்து | அழகியதாக |
| தோன்றும் | தோன்றுகிற |
| திருக்கோவலூரதனுள் | திருக்கோவலூரிலே |
| நான்கண்டேன் | நான்காணப்பெற்றேன். (க) |

வ்யா.—முதற்பாட்டு. †ஆபத்ஸகன் என்கிறது. (மஞ்சாடித்யாதி) †மேகங்கள் ஸஞ்சரியாநிற்பதாய், பூமிக்கு ஆணியடித்தாற் போலேயிருக்கிற மலைகளேழும், இதுக்கடைய அகழ்போலே சூழ்ந்து கொடுநிற்கிற கடல்களேழும், இவற்றுக்கடைய அவகாச ப்ரதாநம்பண்ணுகிற ஆகாசமும், இவற்றுக்கு ஆதாரமான பூமியும், இவற்றுக்குட்பட்ட அநுக்தமான ஸர்வபதார்த்தங்களும். (எஞ்சாமல்) இவைசுருங்கி அழிந்துபோகாதபடியாகத் திருவயிற்றிலேயெடுத்துவைத்து, †ப்ரளயத்துக்கு அஞ்சவுமறியாதே, ஓராலின்மேலே, அதுதன்னிலும் ஒருபவனான இளந்தளிரிலே யோகநித்ரை கொண்டருளின, †ஆதாராதேயபாவம் தன் புத்த்யதீநமாம்படியிருக்கிற ஸர்வேஸ்வரனை. (க) †“ஆலன்று வேலை நீருள்ளதோ” †என்கிறபடியே.

(துஞ்சாநீரித்யாதி) நீர்வரவு மாறாதே யிருப்பதாய், பொன், முத்து, மாணிக்கங்களை யடையக் கொழித்து §எறடாநின்றுள்ள பெண்ணைத் தென்கரையிலே. (தூயவித்யாதி) அநந்யப்ரயோஜநரானவர் ஸோமயாகங்களைப்பண்ண. (செஞ்சாலியித்யாதி) அவர்கள் (ஃலு) பலாபிஸந்திரஹிதமாகச்செய்தாலும், கிழக்கு நோக்கிப் போ

(க) க - திரு - எo. § (பா) ஒட[illegible]க்கிற.

மவனுக்கங்கொரு தேசப்ராப்தியும், மேற்குநோக்கிப்போமவனுக்கு அங்கேயொரு தேசப்ராப்தியும் தவிராதாப்போலே, செய்தவற்றுக்கு பகவதபிப்ராயத்தாலே ஒருபலம் வரத்தவிராதிறே; ஆகையாலே த்ருஷ்டபலங்கள் ஸம்ருத்தமாய்ச் செல்லாநிற்குமாயிற்று. செஞ்சாலியுண்டு - செந்நெல், அதுவிளைகிற வயலிலே திகழ்ந்து தோன்றாநின்றுள்ள திருக்கோவலூரிலே நான் காணப்பெற்றேனென்கிறார். ... ... ... ... ... (௧)

---

அரு.—முதற்பாட்டு.—(மஞ்சாடித்யாதி) பூர்வார்த்தத்துக்குத் தொகுத்த பாவம் (ஆபத்ஸகனித்யாதி). "வரையேழும்" இத்யாதிகளில் சகாரங்கள் உக்த ஸமுச்சயங்களன்றிக்கே ப்ராதாந்யத்திலேயாக்கி அவ்வவற்றுக்குள்ள ஏற்றங்களை யருளிச்செய்கிறார் (மேகங்களித்யாதி). ஈஶனை என்னுதே "தன்னை" என்றத்தால் தோற்றின தானானதன்மை சைசவம் என்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (ப்ரளயத்துக்கஞ்சவு மறியாதே) என்று. வரைதுடக்கமான குருதர பதார்த்தங்களை அதிகோமளமான தன்வயிற்றில் வைத்ததும், தன்னிலுமிளந்தளிரில் தான்கண் வளர்ந்ததும் உபபந்நமாகைக்கு ஹேது வீரனாகையென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (ஆதாரேத்யாதி). இவற்றுக்குத் தன் திருமேனி ஆதாரமாகையும், தன் திருமேனிக்கு ஆலிலை ஆதாரமாகையும், இவை ஆதேயமாகையும், தன்ஸங்கல்பாதீநமென்றுகருத்து. அப்படி அவன் புத்த்யதீநமாயிருக்குமோவென்னவருளிச்செய்கிறார் (ஆலன்றித்யாதி). (என்றபடியே) இருக்கும் என்று சேஷம். ... ... ... (௧)

மூ.—கொந்தலர்ந்த நறுந்துழாய் சாந்தம் தூபம்
தீபங்கொண்டமரர் தொழப் பணங்கொள் பாம்பில்
சந்தணி மென்முலை மலராள் தரணிமங்கை
தாமிருவரடி வருடும்தன்மையானை
வந்தனைசெய் திசையேழாறங்கமைந்து
வளர்வேள்வி நான்மறைகள் மூன்றுதீயும்
சிந்தனைசெய் திருபொழுது மொன்றுஞ்செல்வத்
திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கொந்துஅலர்ந்த | கொத்துக்கொத்தாக அலராநின்றுள்ள | தூபம் | தூபத்தையும் |
| நறு | பரிமளத்தையுடைய | தீபம் | தீபத்தையும் [டு |
| துழாய் | திருத்துழாய்மாலையையும் | கொண்டு | கையிலேந்திக்கொண் |
| | | அமரர் | பிரமன்முதலானோர் |
| | | தொழ | ஆஶ்ரயிக்கும்படி [ய |
| சாந்தம் | கந்தத்தையும் | பணம்கொள் | பரந்தபடத்தையுடை |

| | |
|---|---|
| பாம்பில் | திருவனந்தாழ்வான் மேலே |
| சந்து | சந்தநத்தாலே |
| அணி | அலங்கரிக்கப்பட்ட |
| மெல் | ம்ருதுவான |
| முலை | முலையையுடையளாய் |
| மலராள் | தாமரைப்பூவில்பிறந்தபெரியபிராட்டியாரும் |
| தரணிமங்கை | ஸ்ரீபூமிப்பிராட்டியுமாகிற |
| இருவர்தாம் | இருவரும் |
| அடி | திருவடிகளை |
| வருடும் | திருக்கையாலேஸ்பர்சிக்கவிருக்கிற |
| தன்மையானை | ஸ்வபாவத்தையுடையஸர்வேச்வரனை, |
| ஏழுஇசை | ஸப்தஸ்வரங்களையும் |
| ஆறுஅங்கம் | ஆறுஅங்கங்களையும் |
| ஐந்துவளர்வேள்வி | பஞ்சமஹாயஜ்ஞங்களையும் |
| மூன்றுதீயும் | மூன்றுஅக்நிகளையும் கொண்டு |
| வந்தனைசெய்து | அவனையாச்ரயித்து |
| நால்மறைகள் | நான்குவேதங்களைக் கொண்டு |
| இருபொழுதும் | இரவும்பகலும் |
| சிந்தனைசெய்து | அநுஸந்தித்து |
| ஒன்றும் | ஆச்ரயிக்கிற |
| செல்வம் | ஸம்பத்தையுடைய |
| திருக்கோவலூரதனுள்நான்கண்டேன். | |

வ்யா—இரண்டாம்பாட்டு. (கொந்தலர்ந்த வித்யாதி) கொந்தலரா நின்றுள்ள செவ்வித்திருத்துழாய் மாலையையும், கந்த தூப தீபங்களையும்கொண்டு ப்ரஹ்மாதிகள் †இக்கரையிலேநின்று ஆச்ரயியாநிற்பர்களாயிற்று. (பணமித்யாதி) தன்னுடைய ஸ்பர்சத்தாலே விகஸிதமாகாநின்றுள்ள திருவநந்தாழ்வான் மேலே, போகயோக்யமாம்படி ஒப்பித்திருக்கிற பெரியபிராட்டியாரும் ஸ்ரீபூமிப்பிராட்டியாருமாகிற இருவரும். ஆச்ரயிக்கிற ப்ரஹ்மாதிகளுடைய குற்றமில்லாமை ஏத்துவாரும், குற்றங்காணாமைக்கு உவாத்தாயிருப்பாருமாயிற்று. (அடிவருடும்) ஸர்வஜ்ஞதையாலே அவனறியப்புக்காலும் தங்களுடைய திருக்கை ஸ்பர்சத்தாலே அவன்மயங்கி உறங்கும்படி பண்ணுவர்களாயிற்று.

(வந்தனையித்யாதி) க்ருதப்ரணாமராய், †ஏழிசையாலும், ஆறங்கங்களாலும், பஞ்ச†மஹாயஜ்ஞங்களாலும், மூன்றக்நிகளாலும், வந்தனைசெய்து-அவனை ஆச்ரயித்து. நான்மறைகளைக்கொண்டு; (சிந்தனைசெய்து) (க) "[Grantha] -ஆத்மேத்யேவது க்ருஹ்ணீயாத்" (உ) "[Grantha] - ஆத்மேதிதூபகச்சந்திக்ராஹயந்திச" என்கிறபடியே அவனை ப்ரகாரியாகவும், தங்களை ப்ரகாரமாகவும், காலங்கள்தோறும் ஒருபடிப்பட அநுஸந்தித்துச் சொல்லுகிற அந்த†ப்ராஹ்மியான லக்ஷ்மி மாறாதே செல்லுமாயிற்று.

(க) டங்கபாஷ்யம் (உ) சா.மீ.ஸூ.

அரு.—இரண்டாம்பாட்டு.—(கொந்தித்யாதி) ப்ரளய காலத்தில் ஆபத்ஸகனாய் ஆலிலையில் கண்வளர்ந்தபடியை யநுஸந்தித்தார் கீழ்ப்பாட்டில்; இதில், ப்ரளயம் கழிந்தபின்பும் ப்ரஹ்மாதிகள் கூக்குரல்கேட்கத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தபடியை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

கொந்தலராநின்றுள்ள - கொத்துக் கொத்தாக அலராநின்றுள்ள. (இக்கரையிலே) - திருப்பாற்கடலுக்கிக்கரையிலே. "அமரர்" என்றது-நித்யஸூரிகளாக நஞ்சீயர்படி. "சந்தணிமென்முலை மலராள்" என்றதுக்கு, "சந்தநமணியப்பட்ட ம்ருதுவான முலையையுடைய அலர்மேல் மங்கை" என்று நஞ்சீயர்படியில் சப்தார்த்தம் கண்டுகொள்வது.

(ஏழிசையாலும்)-ஸப்தஸ்வரத்தாலும். "வளர்" என்றதினர்த்தம் (மஹா) என்றது. (ப்ராஹ்மி) என்றது - ப்ரஹ்மஸம்பந்தியான லக்ஷ்மியென்கை. அதாவது - பகவதுபாஸநரூப ஸம்பத்தென்கை. ... ... ... (௨)

௩.—கொழுந்தலரும்மலர்ச்சோலைக் குழாங்கொள்பொய்கைக்
கோள்முதலைவாளெயிற்றுக் கொண்டற்கெள்கி
அழுந்திய மாகளிற்றினுக் கன்றாழி யேந்தி
யந்தர மேவரத்தோன்றி யருள்செய்தானை
எழுந்த மலர்க்கருநீல மிருந்தில் காட்ட
இரும்புன்னை முத்தரும்பிச் செம்பொன் காட்டச்
செழுந்தடநீர்க்கமலம் தீவிகைபோல்காட்டும்
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கொழுந்து | தளிர்களையும் | அன்று | ஆதிமூலமேயென்று கூப்பிட்ட அக்காலத்தில் |
| அலரும் | விகஸிக்கிற [ய | | |
| மலர் | புஷ்பங்களையுமுடை | | |
| சோலைக்குழாங்கொள் | சோலைசூழ்ந்திருந்துள்ள | ஆழி | திருவாழியை [ண்டு |
| | | ஏந்தி | கையிலேந்திக்கொ |
| பொய்கை | தடாகத்திலே [தலை | அந்தரம் | ஆகாசம் |
| கோள்முதலை | மிடுக்கையுடைய மு | ஏவர | வெளியடையும்படி |
| வாள் | வாள்போன்ற | தோன்றி | தோற்றி |
| எயிறு | பற்களினால் | அருள்செய்தானை | (அவ்வானைக்கு) க்ருபைபண்ணினவனை, |
| கொண்டற்கு | க்ரஹித்ததற்கு | | |
| எள்கி | மெலிந்து | எழுந்த | நீரிலுண்டான |
| அழுந்திய | (மடுவிலே) முழுகின | கருநீலமலர் | கருநெய்தற்பூ |
| மாகளிற்றினுக்கு | மதித்தகஜேந்த்ராழ்வானுக்காக | இருந்தில் | கரியை |
| | | காட்ட | காட்டவும் |

| | | | |
|---|---|---|---|
| இரும்புன்னை | பெரியபுன்னைமரங்கள் (மொட்டாலே) | செழுநீர் | நீர்ச்செழிப்பையுடை |
| முத்துக்காட்ட | முத்துக்களைக்காட்டவும் | தடம் | தடாகங்களிலே [ய |
| அரும்பி | மலர்ந்து | கமலம் | தாமரைகள் |
| செம்பொன்காட்ட | பசும்பொன்னைக்காட்டவும் [ய | தீவிகைபோல் | விளக்குப்போலே |
| | | காட்டும் | தோன்றுகிற |
| | | திருக்கோவலூரதனுள் நான் கண்டேன். (ரு.) | |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (கொழுந்தித்யாதி) கொழுந்தையும் அலருகிற மலரையுமுடைய சோலைசூழ்ந்த பொய்கையிலே. (கோள் முதலை) ம்ருத்யுபோலே †இத்தையடைய முடிக்கவந்த முதலை. வாள்போலேயிருக்கிற எயிற்றாலே இத்தைக்ரஹித்ததாயிற்று. அதுக்கு, (எள்கி) ஈடுபட்டு. (அழுந்தியவித்யாதி) வாயிலே அகப்பட்ட நீர்புகும்படி யழுந்தின மத்தகஜத்துக்காக. (அன்று) தன் பிடிக்கற்ற அன்று. (ஆழியேந்தி) கையில் திருவாழியையும்விடாதே ஆகாசாவகாசத்தை இடமடைத்துக்கொண்டு தோற்றி. (அருள்செய்தானை). ஏவர - வெளியடைய. †அதினுடைய புண்ணுறும்படியாகத் திருக்கையாலே ஸ்பர்சித்துத் திருப்பரியட்டத் தலையாலே ஒற்றிப்பண்ணின சிசிரோபசாரங்களை நினைக்கிறது.

(எழுந்தவித்யாதி) எழுந்தமலரை யுடைத்தான கறுத்த நீலமானது. (இருந்தில்) கரியைக்காட்ட; பெரியபுன்னைகளானவை மொட்டாலும் அலர்ந்த பூவாலுமாகப் பொன்னையும் முத்தையுங் காட்ட. மிக்கஜலத்தை யுடைத்தான தடாகங்களில் தாமரைகளானவை, தீபிகைகளைக்காட்டாநிற்குமாயிற்று; ஆகக், கரியும் முத்தும் நெருப்பும் பொன்னுமாய்ப் † பொற்களரிபோலேயாயிற்று வயலடைய விருப்பது. ... ... ... (ரு)

---

அரு.—மூன்றாம்பாட்டு. (கொழுந்தித்யாதி). ப்ரயோஜநாந்தரபரரான ப்ரஹ்மாதிகளுக்கு உதவவந்தமாத்ரமன்றிக்கே ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைத் தைப்போக்கினானென்று அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

(இத்தையடைய) என்றது - காலைத்தண்டித்துக்கொண்டு போகையன்றிக்கே ஆனையெல்லாமென்றபடி. அருள்செய்த ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் (அதினுடையவித்யாதி).

§(பொற்களரி) - ‡கண்வட்டஸ்த்தலம். ... ... ... (ரு)

---

§ பொற்களரி - பொன்பணிசெய்கிறவிடம்.

‡ கண்வட்டஸ்த்தலம் - டங்கசாலை

மூ.—தாங்கரும்போர் மாலி படப் பறவையூர்ந்து
 தராதலத்தோர் குறைமுடித்த தன்மையானை
ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்தன்புகூரு
 மடியவர்கட் காரமுதமானான் றன்னைக்
கோங்கரும்பு சுரபுன்னைக் குரவார்சோலைக்
 குழாவரிவண் டிசைபாடும் பாடல்கேட்டுத்
தீங்கரும்பு கண்வளருங் கழனிசூழ்ந்த
 திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (௪)

| பதம். | உரை. |
|---|---|
| தாங்கு அரும் | ஒருவராலும் தாங்கவொண்ணாதபடி |
| போர் | யுத்தம்பண்ணும் |
| மாலி | மாலி (துடக்கமான ராக்ஷஸர்கள்) |
| பட | முடியும்படி |
| பறவை | பெரியதிருவடியை |
| ஊர்ந்து | நடத்தி |
| தராதலத்தோர் | பூமியிலுள்ளாருடை |
| குறை | குறைகளை |
| முடித்த | போக்கின |
| தன்மையானை | ஸ்வபாவத்தையுடையனாய், |
| ஆங்கு | விரோதியைப்போக்கின ஸமயத்திலே |
| கண்ணீர் | கண்ணநீர் |
| அரும்பி | உண்டாய் |
| சோர்ந்து | பெருகி |
| அன்புகூரும் | அன்புமிக்க |
| அடியவர்கட்கு | சேஷபூதர்க்கு |
| ஆர் | பரிபூர்ணமான |

| பதம். | உரை. |
|---|---|
| அமுதமானான்றன்னை | அம்ருதம் போலே போக்யனானவனை, |
| கோங்கு அரும்பு | கோங்கம்பூக்களும் |
| சுரபுன்னை | ஸுரபுன்னைகளும் |
| குரவு | குரவுகளும் |
| ஆர் | செறிந்த |
| சோலை | பொழில்களிலே |
| வரி | ரேகைகளையுடைய |
| வண்டு | வண்டுகளின் |
| குழாம் | ஸமூஹமானது (மதுபானமத்தமாய்க்கொண்டு) |
| இசைபாடும் | இசைபாடுகிற |
| பாடல்கேட்டு | பாட்டைக்கேட்டு |
| தீங்கரும்பு | இனியகரும்புகள் |
| கண்வளரும் | ஒருகண்ஏறிவளருகிற |
| கழனி | கழனிகளால் |
| சூழ்ந்த | சூழப்பட்ட |
| திருக்கோவலூரதனுள் நான் கண்டேன். (௪) | |

வ்யா.—நாலாம்பாட்டு. (தாங்கருமித்யாதி) †பழம்புற்று பாம்பறுதாப்போலே ராவணனுக்கு முன்பு மாலி யுள்ளிட்ட துர்வர்க்கம் மாறுதேயாயிற்று லங்கையிருப்பது; அவர்களைநிரஸித்தபடி. †ஒருவரால் தாங்க அரிதாம்படி யுத்தத்தில் வ்யாபாரத்தையுடைய மாலி படும்படியாகப் பெரிய திருவடியை நடத்தி. (தராதலம்) அரைக்ஷணம் பின்னையும் மாலியிருந்தானாகில் ஜகத்தடைய அழியுமாயிற்று. (ஆங்கித்யாதி) †ஸ்வவிஷயத்தில் ப்ரேமத்தாலே கண்ணநீரரும்பி, அதுதான் கண்ணைவிட்டுச்சோர, ப்ரேமபரவசராயிருக்கும் சேஷபூதர்க்கு நிரதிசயபோக்யனானவனை.

(கோங்கித்யாதி) கோங்கம்பூக்களும்,ஸுரபுன்னைகளும்;†குரவுகளும் மிக்கிருந்துள்ள சோலையிலே திரண்ட வண்டுகளானவை மதுபாநமத்தமாய்ப்பாடுகிற பாட்டைக்கேட்டு; அத்தாலே நீர்பாய்ந்தாற்போலே யிருக்கிற இனிய கரும்பானது ஒரு†கண்ணேறி வாராநிற்குமாயிற்று. (௪)

---

அநு.—நாலாம்பாட்டு. (தாங்கருமித்யாதி) ஒருநீர்ப்புழுவைவென்று ஆனைக்கு உதவினவளவன்றிக்கே, புவியிலுள்ளார்க்கெல்லாம் ஆபத்துநீங்கும்படி மாவலியையென்ற ஆபத்ஸகத்வத்தை யருளிச்செய்கிறாரென்று திருவுள்ளம்பற்றி, மாலி அத்தனை விரோதியோவென்ன வருளிச்செய்கிறார் (பழம்புற்றித்யாதி). வாக்யார்த்தமருளிச்செய்கிறார் (ஒருவராலித்யாதி). "ஆங்கு" விரோதி நிரஸநஸமயத்திலேயென்றாய், பலிதார்த்தமருளிச்செய்கிறார் (ஸ்வவிஷயத்திலித்யாதி).

(குரவுகள்) - வ்ருக்ஷவிசேஷங்கள். (கண்ணேறிவருகை) ஒருகணுவானது ஏறிவருமென்கை. ... ... ... ... ... ... (௪)

ரு—கறைவளர்வேல் கரன்முதலாக்கவந்தன்வாலி
கணையொன்றினால் மடிய விலங்கைதன்னுள்
பிறையெயிற்று வாளரக்கர் சேனையெல்லாம்
பெருந்தகையோடுடன்றுணித்த பெம்மான்றன்னை
மறைவளரப் புகழ்வளர மாடந்தோறும்
மண்டபமொண்டொளியனைத்தும் வாரமோதச்
சிறையணைந்த பொழிலணைந்த தென்றல்வீசும்
திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கறைவளர் | மிக்ககறையையுடை | வாள் | வாளை ஆயுதமாகவுடையரான |
| வேல் | வேலையுடையரான[ய | | |
| கரன்முதலா | கரன் துடக்கமான | அரக்கர்சேனையெல்லாம் | ராக்ஷஸஸேனையையெல்லாம் |
| கவந்தன்வாலி | கபந்தன் வாலி என்கிறவிவர்கள் | பெருந்தகையோடுடன் | அவ்வவர்கள் ஸ்வாமியான ராவணனோடேகூட |
| கணை ஒன்றினல் | ஓரம்பாலே | | |
| மடிய | முடியும்படி | துணித்த | அறுத்துப்பொகட்ட |
| இலங்கைதன்னுள் | லங்கையில் | பெம்மான்றன்னை | ஸர்வேஶ்வரனை, |
| பிறை | பிறைபோலேவளைந்த | மாடந்தோறும் | க்ருஹங்கள்தோறும் |
| எயிறு | எயிற்றையுடையராய் | மறை | வேதகோஷமானது |

| | |
|---|---|
| வளர | மிக்குவரவும் |
| புகழ் | கீர்த்தி |
| வளர | வளரவும் |
| மண்டபம் | மண்டபங்களிலும் |
| ஒண்டு | ஊரைக்கிட்டின |
| ஒளியனைத்தும் | சாவடிகளிலும் |
| வாரம்ஓத | ஓதினவிடத்தை உருச்சொல்லவும் |
| சிறை | நீரணை |
| அணைந்த | அணைந்திருக்கிற |
| பொழில் | சோலையிலே |
| அணைந்த | படிந்த |
| தென்றல் | தென்றல்காற்றானது |
| வீசும் | பரிமளத்தைவீசுகிற |

திருக்கோவலூரதனுள் நான் கண்டேன். (௪)

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (கறையித்யாதி) பரஹிம்ஸையில் த்வரையாலும், எப்போதுமொக்க சத்ருநிரஸநம் பண்ணுகையாலும், கறைகழுவுகைக்கு அவகாசமின்றிக்கே யிருக்கையாலே மிக்க கறையை யுடைத்தாயிருக்கிற வேலையுடைய கரன்றொடக்கமாக கபந்தன், வாலி, என்கிற இவர்கள். †கரன் விராதன் இவர்கள்வந்து தோற்றுகிறபோது, ஸிம்ஹங்கள் புலிகள் இவற்றைச் சூலத்திலே கோத்துக்கொண்டுவந்திறே தோற்றுவது. (கணையொன்றினால்மடிய) கைக்கெட்டிற்றோர் அம்பாலே முடித்தானிறே. †தலைக்காவலிருந்தவர்கள் பட்ட†திது. (இலங்கையித்யாதி) இலங்கையில் பிறை போலே யிருக்கிற எயிற்றையுடையருமாய், ஸாயுதருமாயிருக்கிற ராக்ஷஸஸேனையெல்லாம். (பெருந்தகையித்யாதி) "பெருந்தகை" என்றது - பெரியோன் என்றபடி; பெருந்தகை - நிர்வாஹகன், ராஜனிறே. இவர்களுக்கடைய ப்ரபுவாய், அஞ்சினான்புகலிடமாய், அநீதிசெய்த பையல்களுக்குப்புக்கொதுங்குகைக்கு நிழலாயிருக்கிற†ராவணனோடேகூட அழியச்செய்த ஸ்வாமிதன்னை. உடையவனிறே க்ஷேத்ரத்தில் களைபிடுங்குவான்.

ராவணவதாநந்தரத்தில் ஸ்ரீதண்டகாரண்யத்தில் †அத்யயனா†நுவாகங்கள் மாறுதாப்போலேயாயிற்று அவன்பட்டபின்பு திருக்கோவலூரும். (மாடந்தோறும்) க்ருஹங்கள்தோறும், வேதகோஷமானது மிக்குவர, அந்த வேதகோஷத்தினுடைய அவிச்சேதத்தால் வந்த கீர்த்தி மிக்குவர. இதுவாயிற்று க்ருஹங்களிருக்கும்படி. மண்டபங்கள், (ஒண்டொளி) அழகியதோளி. "தோளி" என்கிறத்தைக் குறைத்து தொளியாய், ப்ரதோளி என்றபடி. மண்டபங்களிலும், நாற்சந்திகளிலும், †வட்டக்கிடை ஓதாநிற்பர்கள். (சிறையித்யாதி) †காவல்பட்டிருக்கும்படி. காற்றுப்புகுதல் (௧) †*காற்றில்

(௧) பெரு - திரு - உ - ௧௦ - ௪.

கடியவன்புகுதல் செய்யுமித்தனை. ஊரரணான அகழை அணைந்திருந் துள்ள சோலையிலேபுக்கு அணைந்த தென்றலானது அந்நீர்நிலத்தில் திவலைகளையும் சோலையில் பரிமளத்தையும் கொண்டுவந்து இவ்வோ இடங்களில் அத்யயநம்பண்ணுகிறவர்களுடைய ஶ்ரமமாறும்படி சிசிரோபசாரம்பண்ணுமாயிற்று. †ஒளி - †ஒழுங்கை. †ஊரருகனைந் திருக்கை என்னுதல். †நீர்ச்சிறை. ... ... ... ... ... (ரு)

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (கறையித்யாதி) கீழ்ப்பாட்டில் இலங்கையில் மாலியைவென்றபடி யநுஸந்தித்தார்; இப்பாட்டில் இலங்கையில் துர்வர்க்கத்துக்கெல்லாம் ஒதுங்கநிழலாய், தலைபத்துப் படைத்தானை வென்ற ஆபத்ஸகத்வத்தை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

கறைவளருகைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் (கரனித்யாதி). விராதனை இப்பாட்டிலே விடாவிட்டாலும், பெருமாள் அவனையும் வெல்லுகையால் அவனையும் சொல்லலாமென்று திருவுள்ளம். மேலுக்கவதாரிகை (தலைக்காவலித்யாதி). (இது) என்றவநந்தரம், முதலாளிப்பட்டபடி யருளிச்செய்கிறார் என்று சேஷம். வாக்யார்த்தந்தன்னை யருளிச்செய்கிறார் (இவர்களுக்கித்யாதி). ஸமபிவ்யாஹாரதாத்பர்ய மருளிச்செய்கிறார் (ராவணேத்யாதி). (அத்த்யயநம்) சொல்லுகை. (அநுவாகம்) - அநுவாக்கியாய், உருச்சொல்லுகை. (வட்டக்கிடை) ஓதினவிடத்தைச்சொல்லுகை. "வாரமோத" என்றதுக்கு "பரீக்ஷைசொல்ல" என்று நஞ்சீயர்படி. "சிறை" என்றதினர்த்தம் (காவல்) என்றது. காவல்பட்டிருந்ததாகில், மேல் "தென்றல்வீசும்" என்றபடி யெங்ஙனே? அவ்வூருக்குக் காற்றடிக்கப்போமோவென்ன ரஸோக்திமுகத்தால் பரிஹரிக்கிறார் (காற்றித்யாதி). *காற்றில் கடியனாயோடியகம்புகும் ஆயனார்க்கும் அங்குள்ளார்க்கு சிசிரோபசாரம்பண்ணுகிற காற்றுக்குமொழிய, ப்ரதிகூலர்க்கு துஷ்ப்ரவேசத்வம்ஸித்தமென்று கருத்து. "ஒண்தொளி" என்று பதவிபாகம்செய்து, ப்ரதோளி; அதனால் சந்தியாக்கிக் கீழருளிச்செய்து, "ஒண்டு ஒளி" என்று பதவிபாகம் திருவுள்ளம்பற்றி அர்த்தாந்தரமருளிச்செய்கிறார் (ஒளியித்யாதி). (ஒழுங்கை) சாவடி, ஒண்டுக்கர்த்தம் (ஊரித்யாதி). ஊரைக்கிட்டின சாவடிகளிலும் வாரமோதவென்றபடி. கீழே "சிறை" என்ற பதத்தாலே அகழைச்சொன்னபடி யெங்ஙனேயென்ன வருளிச்செய்கிறார் (நீர்ச்சிறை) என்று. ஜலதுர்க்கமென்று கருத்து. ... ... ... (ரு)

மூ.—உறியார்ந்த நறுவெண்ணெ யொளியால்சென்றங்
குண்டானைக் கண்டாய்ச்சி யுரலோடார்க்கத்
தறியார்ந்த கருங்களிறே போலநின்று
தடங்கண்கள்பனிமல்கும் தன்மையானை

வெறியார்ந்த மலர்மகள்நாமங்கையோடு
  வியன்கலை யெண்டோளினள் விளங்குசெல்வச்
செறியார்ந்தமணிமாடந் திகழ்ந்துதோன்றுந்
  திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (௬)

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உறி | உறியிலே | தன்மையானை | ஸ்வபாவத்தையுடையவனை |
| ஆர்ந்த | சேமித்துவைதத | வெறி ஆர்ந்த | பரிமளத்தை யுடைய |
| நறு | செவ்விமாறாத | மலர்மகள் | தாமரைப்பூவில்பிறந்த பெரியபிராட்டியாரோடும் |
| வெண்ணெய் | வெண்ணெயை | நாமங்கையோடு | ஸரஸ்வதியோடும் |
| ஒளியால் | (ஸ்மிதம் பண்ணும் போது திருமுகத்தில் புறப்படும்) ஒளியாலே | வியன் | விஸ்மயநீயமான |
| அங்குசென்று | அங்கேகிட்டி | கலை | கலையை வாஹநமாக உடையளாய் |
| உண்டானை | அமுதுசெய்தவனை | எண்தோளினள் | எட்டுத்தோள்களையுடைய தூர்க்கையோடும் |
| ஆய்ச்சி | யசோதைப்பிராட்டி | விளங்கு | விளங்குகிற |
| கண்டு | களவோடேகண்டு | செல்வம் | செல்வத்தையும் |
| உரலோடு | உரலோடே | செறிஆர்ந்த | மிகவும்செறிந்த |
| ஆர்க்க | கட்ட | மணிமாடம் | ரத்நமயமானமாடங்கள் |
| தறி ஆர்ந்த | கம்பத்திலே சேர்த்துக்கட்டப்பட்ட | திகழ்ந்து | உஜ்ஜ்வலமாய் |
| கருங்களிறுபோல | கறுத்த ஆனைபோலே | தோன்றும் | தோற்றுகிற ஐஶ்வர்யத்தையுமுடைய |
| நின்று | கட்டுண்டிருந்து | திருக்கோவலூரதனுள் நான் கண்டேன். | |
| தடம்கண்கள் | பெரியதிருக்கண்கள் | | |
| பனிமல்கும் | நீர் அரும்பும்படியான | | |

(௬)

வ்யா.—ஆறும்பாட்டு. (உறியித்யாதி) உறியிலே வைத்துச் சிக்கெனக் கள்ளக்கயிறுமுருவி சேமித்துக் கடைந்தபோதைச் செவ்வி மாறாத வெண்ணெயை, †கடைகிறபோதே துடங்கி இதுகொடுபோய் சேமிக்குமிடம் அடியொத்தாகிற்குமாயிற்று. (ஒளியால்சென்றங்குண்டானை) †களவாலே யன்றியே; (௧) "நாளிளந்திங்கள்" இத்யாதிப்படியே. †"மநுஷ்யரால் அபஹ்ருதமாயிற்றென்றல்ல, இதுதெய்வங்கொண்டது" என்னும்படியாக வாயிற்று அமுது செய்தது. (கண்டு)† அநுகூலஸ்பர்சமுள்ள த்ரவ்யம் தனக்கு தாரகமாய், அது பெறாதபோது அவன்முடியுமளவாயிருக்குமாபோலே, அவன் வ்யா

---

(௧) தி - வாய் - ௩ - ௮ - ௬.

பாரம் தங்களுக்கு ப்ராணகரமாயிருக்கும்படியாலே **அத்தைத்** தேடாநிற்பர்களிறே இவர்கள்; ஆகையாலே கொண்டியோடே பிடித்துக்கொண்டு.(ஆய்ச்சி)†பரிவுடையளாகையாலே §†**விழுக்காடு அறியாமையாலே.** (உரலோடார்க்க) இவனகப்பட்டபோதாக ஒன்றைத்தேடிப்போகில் இவன்தப்புமென்று ஸங்கிஹிதமாய்க்கிடந்ததொரு உரலைக்காலாலேவரஉருட்டி அத்தோடு அநுபந்திக்க. (தறியித்யாதி) மதித்து ஊரிலே மூலையடியே உழற்றிக்கொண்டு திரிகிற ஆனையானது யாத்ருச்சிகமாகப் பிடிபட்டு ஒருகம்பத்திலே சேர்த்துக் கட்டுண்டு நிற்குமாபோலே, தான்கண்டபடி திரிந்தவன் கட்டுண்டு, கண்ணில் பரப்படையப் பரப்புமாறும்படி கண்ணநீர் மல்கி ப்ரதிக்ரியையற்று நின்றவனை.(தன்மையானை) மேன்மை இடுசிவப்பு; இதுவேயாயிற்று இவனுக்கு ஸ்வபாவம். (க) "யஜ்ஞ... - யதிசக் நோக்ஷி"என்றுளிறே.(கருங்களிறேபோல)†தன்னையுணராதே நின்றநிலை. † ப்ரதிகூலரான துர்யோதநாதிகள் கட்டின கட்டாகிலிறே அவிழ்த்துக்கொண்டுபோகவல்லது. அநுகூலர் கட்டினால் அவிழ்த்துக்கொடு போகமாட்டானிறே.

(வெறியார்ந்த மலர்மகள்) இவ்வானைதன்னை † உணரா உழற்றுமை நோக்குவாரைச் சொல்லுகிறது. †தன் ஸந்நிதியாலே பிறர் குற்றம் நெஞ்சில்படாதபடி துவக்குமாயிற்று. ஆஶ்ரயிப்பார்க்குப் புருஷகாரபூதையான பெரியபிராட்டியார்; ப்ராஹ்மணருடைய நாவிலே நிற்கக்கடவளாய் பெரியபிராட்டியார்க்கு சேஷபூதையான ஸரஸ்வதி;அவள்,†வீணைநீராம்படி ஏத்துகைக்குப் பரிகரமாம். (வியன்கலை) விஸ்மயநீயமான கலையை வாஹநமாக உடையளாய் எட்டுத்தோளையுடைய துர்க்கை; †அவளாயிற்று அவ்வூருக்குக்காவல். "பிறந்தவன்று காட்டிக்கொடுத்துப்போனோம்" என்னுமவ் விழவுதீர அவளுணர்ந்து நோக்குகிற தேசமாயிற்று. (செறியித்யாதி) மிகவும் செறிந்திருப்பதாய் ரத்நமயமான மாடங்கள் உஜ்ஜ்வலமாய்த் தோற்றுகிற திருக்கோவலூரிலே காணப்பெற்றேன். (நான்) இதுக்குமுன்பு இங்ஙனே யிருப்பதொரு லாபம் வ்யுத்பத்தி பண்ணியறியாத நான், ஸுரக்ஷிதமான தேசத்திலே காணப்பெற்றேன். ... ... ... ... ... (௬)

---

(க) வி - பு - ஔ.

§ (பா) விழுக்காடு அறியாளிறே.

அரு.—ஆரும்பாட்டு. (உறியித்யாதி) கீழ்ப்பாட்டில் தேவர்களுக்கு சொல்வழி பரதந்த்ரனாய் ராவணவதம்பண்ணினபடியை யநுஸந்தித்தார்; இதில், அவ்வளவன்றிக்கே இடைச்சிகளுக்குக் கட்டவுமடிக்கவுமாம்படி எளியனானமையை யநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

சேமித்தவெண்ணெயை இவன்கண்டபடி யெங்ஙனேயென்ன (கடைகிறவித்யாதி). "ஒளியால்" திருமுகத்தில் முறுவலொளியால், இருளை நீக்கிக்கொண்டு சென்று, அங்குண்டானேயென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி வ்யாவர்த்யபூர்வகம் ஸம்வாதம்காட்டுகிறார் (களவாலேயித்யாதி). ஒளியாலென்றர்த்தம். அன்றிக்கே, (இத்யாதிப்படியே) என்றவநந்தரம, அர்த்தம் கண்டுகொள்வது என்றுசேஷம். "ஒளியால்" என்றதுக்கு உட்கருத்தருளிச்செய்கிறார் (மநுஷ்யராலித்யாதி). இருட்டில்வைத்ததை விளக்கின்றிக்கே மநுஷ்யரால் கொள்ளக்கூடாமையால் ஆய்ச்சியர்க்கு ஆம்சர்யமாயிற்றென்று திருவுள்ளம். உண்ணும்போது இவர்கள் காணாமலுண்ணச்செய்தே அவர்கள் கண்டபடி யெங்ஙனேயென்ன வருளிச்செய்கிறார் (அநுகூலேத்யாதி). (ப்ரீதியுடையாளாகையாலே) என்றது (௧) "வயிறுபிள்ளைபரமன்று" என்று ப்ரீதி தலைக்கொள்ளுகையாலேயென்கை. (விழுக்காடறியாமையாலே) என்றது (௨) "தடங்கண்கள் பனிமல்கும்" என்றறியாமையாலேயென்கை. "களிறே" என்ற ஏவகாரதாத்பர்யம் (தன்னையித்யாதி). "நின்று" என்றதுக்குத் தாத்பர்யம் (ப்ரதிகூலரானவித்யாதி).

(உணராஉழற்றுமை) என்றது - யானை தன்னைத்தானறியாதே மதமேறும்படியும், கண்டவிடமெங்கும் திரியாதபடியும் நோக்கும் ஆனைப்பாகரைப்போலே, தன்னைத்தானறியாதபடியும், ஸ்வைரசாரம்பண்ணுமையும் நோக்குவாரைச்சொல்லுகிறது, "வெறியார்ந்தமலர்மகள்" நாற்றத்தையுடைய மலர்மகளென்று சப்தார்த்தம். அத்தால்தோற்றின போக்யதாதிசயத்துக்கு ப்ரக்ருதோபயோகம்காட்டுகிறார் (தன்னித்யாதி வாக்யத்ரயத்தாலே). நாமங்கையை யிங்குச்சொன்னதுக்கு ப்ரக்ருதோபயோகம் (விளைநீரித்யாதி). விளைநீர்போலே ப்ராஹ்மணர்க்கேத்தப் பரிகரமென்கை. துர்க்கையைச்சொன்னதுக்கு ப்ரக்ருதோபயோகம் (அவளாயிற்றித்யாதி). ... ... ... (௬)

மூ.—இருங்கை மா கரி முனிந்து பரியைக்கீறி
இனவிடைகளேழடர்த்து மருதம் சாய்த்து
வரும்சகடமிற வுதைத்து மல்லையட்டு
வஞ்சம்செய் கஞ்சனுக்கு நஞ்சானானைக்
கருங்கமுகு பசும்பாளை வெண்முத்தீன்று
காயெல்லாம் மரதகமாய்ப் பவளங்காட்டச்
செருந்திமிக மொட்டலர்த்தும் தேன்கொள்சோலைத்
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (எ)

(௧) ௧௦ - எ - ரு. (௨) உ - ௧௦ - ௬.

அரு.—ஆரும்பாட்டு. (உறியித்யாதி) கீழ்ப்பாட்டில் தேவர்களுக்கு சொல்வழி பரதந்த்ரனாய் ராவணவதம்பண்ணினபடியை யநுஸந்தித்தார்; இதில், அவ்வளவன்றிக்கே இடைச்சிகளுக்குக் கட்டவுமடிக்கவுமாம்படி எளியனானமையை யநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

சேமித்தவெண்ணெயை இவன்கண்டபடி யெங்ஙனேயென்ன (கடைகிறவித்யாதி). "ஒளியால்" திருமுகத்தில் முறுவலொளியால், இருளைநீக்கிக் கொண்டு சென்று, அங்குண்டானையென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி வ்யாவர்த்யபூர்வகம் ஸம்வாதம்காட்டுகிறார் (களவாலேயித்யாதி). ஒளியாலென்றர்த்தம். அன்றிக்கே, (இத்யாதிப்படியே) என்றவநந்தரம, அர்த்தம் கண்டுகொள்வது என்றுசேஷம். "ஒளியால்" என்றதுக்கு உட்கருத்தருளிச் செய்கிறார் (மநுஷ்யராலித்யாதி). இருட்டில்வைத்ததை விளக்கின்றிக்கே மநுஷ்யரால் கொள்ளக்கூடாமையால் ஆய்ச்சியர்க்கு ஆச்சர்யமாயிற்றென்று திருவுள்ளம். உண்ணும்போது இவர்கள் காணாமலுண்ணச்செய்தே அவர்கள் கண்டபடி யெங்ஙனேயென்ன வருளிச்செய்கிறார் (அநுகூலேத்யாதி). (பரிவுடையாளாகையாலே) என்றது (க) "வயிறுபிள்ளைபரமன்று" என்று ப்ரீதி தலைக்கொள்ளுகையாலேயென்கை. (விழுக்காடறியாமையாலே) என்றது (உ) "தடங்கண்கள் பனிமல்கும்" என்றறியாமையாலேயென்கை. "களிறே" என்ற ஏவகாரதாத்பர்யம் (தன்னையித்யாதி). "நின்று" என்றதுக்குத் தாத்பர்யம் (ப்ரதிகூலரானவித்யாதி).

(உணராஉழற்றுமை) என்றது - யானை தன்னைத்தானறியாதே மதமேறும்படியும், கண்டவிடமெங்கும் திரியாதபடியும் நோக்கும் ஆனைப்பாகரைப் போலே, தன்னைத்தானறியாதபடியும், ஸ்வைரசாரம்பண்ணாமையும் நோக்குவாரைச்சொல்லுகிறது, "வெறியார்ந்தமலர்மகள்" நாற்றத்தையுடைய மலர்மகளென்று சப்தார்த்தம். அத்தால்தோற்றின போக்யதாதிசயத்துக்கு ப்ரக்ருதோபயோகம்காட்டுகிறார் (தன்னித்யாதி வாக்யத்ரயத்தாலே). நாமங்கையை யிங்குச்சொன்னதுக்கு ப்ரக்ருதோபயோகம் (விளைநீரித்யாதி). விளைநீர்போலே ப்ராஹ்மணர்க்கேத்தப் பரிகரமென்கை. தூர்க்கையைச்சொன்னதுக்கு ப்ரக்ருதோபயோகம் (அவளாயிற்றித்யாதி). ... ... ... (சு)

மூ.—இருங்கை மா கரி முனிந்து பரியைக்கீறி
இனவிடைகளேழடர்த்து மருதம் சாய்த்து
வரும்சகடமிற வுதைத்து மல்லையட்டு
வஞ்சம்செய் கஞ்சனுக்கு நஞ்சானானைக்
கருங்கமுகு பசும்பாளை வெண்முத்தீன்று
காயெல்லாம் மரதகமாய்ப் பவளங்காட்டச்
செருந்திமிக மொட்டலர்த்தும் தேன்கொள்சோலைத்
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (எ)

(க) கo - எ - ரு. (உ) உ - கo - சு.

| பதம். | உரை. |
|---|---|
| இரு | நீண்ட |
| கை | துதிக்கையையுடைய |
| மா | பெரிய |
| கரி | குவலயாபீடத்தை |
| முனிந்து | சீறியருளி, |
| பரியை | கேசியென்னும் குதிரையின் வாயை |
| கீறி | பிளந்து, [பான |
| இனம் | ஒன்றுக்கொன்றுப் |
| ஏழு விடைகள் | ஏழுருஷபங்களையும் |
| அடர்த்து | கொன்று, |
| மருதம் | மருதுகளை |
| சாய்த்து | முறித்து, |
| வரும் | (அஸுராவேசத்தாலே)ஊர்ந்துவருகிற |
| சகடம் | சகடமானது |
| இற | முறியும்படி [ந்து, |
| உதைத்து | திருவடிகளாலேபாய் |
| மல்லை | மல்லவர்க்கத்தை |
| அட்டு | முடித்து, |
| வஞ்சம் செய் | க்ருத்ரிமத்தாலே இவனை நலியநினைத்த |

| பதம். | உரை |
|---|---|
| கஞ்சனுக்கு | கம்ஸனுக்கு |
| நஞ்சானானை | ம்ருத்யுவானவனை;[ய |
| கரு | கறுத்தநிறத்தையுடை |
| கமுகு | பாக்குமரத்தின் |
| பசும்பாளை | பசுமையானபாளையா |
| வெள் | வெளுத்த [னது |
| முத்து | முத்துக்களை |
| ஈன்று | தந்து |
| காயெல்லாம் | அதின்காய்கள் |
| மரதகமாய் | மரதகத்தைக்காட்டவும் (பழங்கள்) |
| பவளம்காட்ட | ப்ரவாளத்தைக்காட்டவும் |
| செருந்தி | ஸுரபுன்னையானது |
| மொட்டு | மொட்டுக்களை |
| மிக | விசேஷமாக |
| அலர்த்தும் | அலரச்செய்யுமதாய் |
| தேன்கொள் | தேனையுடைத்தான |
| சோலை | சோலைகளையுடைய |

திருக்கோவலூரதனுள் நான் கண்டேன். (எ)

வ்யா.—ஏழாம்பாட்டு. (இருங்கையித்யாதி) ஆனையை வழியிலே நிறுத்தினாயிற்று ப்ரமாதம் புகுந்த தெல்கைக்காக ; எங்கேனும் போகிலும் நீட்டிப்பிடிக்கைக்கீடான பெரிய துதிக்கையையுடைத்தான குவலயாபீடத்தை†வேண்டோமென்று.(பரியித்யாதி)(க) "వ్యాదితాస్యో మహారౌద్రః - வ்யாதிதாஸ்யோ மஹாரௌத்ரঃ" என்கிறபடியே, பெரியசினத்தோடே வாயை அங்காந்துகொண்டு வந்ததாயிற்றுக் குதிரை ; அதின்வாயிலே கையையிட்டுப் †புரித்தான்; இரண்டுகூறாய் விழுந்ததாயிற்று. விரோதியாயே தோற்றின கேசி வாயைக்கிழித்து. (இனமித்யாதி) ஒன்றிரண்டன்றிக்கே ஏழாய் ம்ருத்யுபோலேயிருக்கிற வ்ருஷபங்களை முடித்து, வழிபோகாநிற்கச்செய்தே மருது முறிந்துவிழும்படி தவழ்ந்து, காவலாகவைத்த சகடமே அஸுராவேசத்தாலே ஊர, அது துகளாய்ப்போம்படி திருவடிகளாலே பாய்ந்து; (உ)†"பிளந்துவீய" (மல்லையட்டு)குவலயாபீடம் போனபின்பு மலைதுள்ளினாற்போலே துள்ளிக்கொடுவந்த

(க) வி - பு - ரு.　　(உ) தி - வாய் - கூ - க - ச.

மல்லவர்க்கத்தை முடித்து. (வஞ்சமித்யாதி) வில்விழவு என்றொரு வ்யாஜத்தையிட்டழைத்து க்ருத்ரிமத்தாலே நலியநினைத்த கம்ஸனை அவன் நினைவை அவன்றன்னோடே போக்கி அவனுக்கு ம்ருத்யுவானவனை.

(கருங்கமுகித்யாதி) யௌவநத்தாலே கறுத்தநிறத்தை யுடைத்தான கமுகினுடைய பசுமையை யுடைத்தான பாளையானது வெண்முத்தை ஈன்று, அது காய்த்தவாறே மரதகமாய், அது பக்வமானவாறே பவளத்தைக்காட்ட.(செருந்திமிகமொட்டலர்த்தும்)"இதோராஸ்சர்யமிருந்தபடி யென்! ஒன்றே எல்லாவற்றையுங்காட்டுவதே" என்று ஸ்மிதம்பண்ணினாற்போலேயிருக்க. (செருந்திமிகமொட்டலர்த்தும்) "கார்யகாரணங்களினுடைய †ஐகலக்ஷண்யநியமமின்றிக்கேயிருந்தபடியே!" என்று ஸ்மிதம் பண்ணுவாரைப்போலேயிருக்கை. (தேன்கொள்சோலை) வண்டுகளையுடைத்தான சோலையென்னுதல், தேனையுடைத்தான சோலையென்னுதல். ... (எ)

அரு.—ஏழாம்பாட்டு. (இருங்கையித்யாதி) பிள்ளைத்தனத்திலாய்ச்சிக்கெளியனானவனுடைய பிள்ளைச்சேவகத்தையெல்லாம் தோற்றினபடியே யநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

(வேண்டோமென்று) என்றது - "முனிந்து" என்றதினர்த்தம். த்வேஷித்தென்றபடி. (புரித்தான்) - திருப்பினான். சகடநிரஸநத்துக்கு ப்ரமாணம் (பிளந்துவீய) என்று.

(ஐகலக்ஷண்யம்) என்றது - ஐகரூப்யமென்றபடி. ... ... (எ)

மூ.—பாரேறு பெரும்பாரந் தீரப் பண்டு
பாரதத்துத் தூதியங்கிப் பார்த்தன்செல்வத்
தேரேறுசாரதியா யெதிர்ந்தார்சேனை
செருக்களத்துத்திறலழியச் செற்றான்றன்னைப்
போரேறொன்றுடையானு மளகைக்கோனும்
புரந்தரனும் நான்முகனும் பொருந்துமூர்போல்
சீரேறுமறையாளர் நிறைந்தசெல்வத்
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பார் | பூமியிலே | பண்டு | முன்பு [லே |
| ஏறு | ஏறின | பாரதத்து | மஹாபாரதயுத்தத்தி |
| பெரும்பாரம் | பெரியசுமையானது | தூதுஇயங்கி | தூதுபோய் |
| தீர | போம்படி | பார்த்தன் | அர்ஜுநனுடைய |




| | | | |
|---|---|---|---|
| செல்வம் | அழகிய | அளகைக்கோனும் | ஐஶ்வர்யமுள்ளனும் |
| தேர் | ரதத்திலே | புரந்தரனும் | இந்த்ரனும் |
| ஏறு | ஶ்ரேஷ்ட்டமான [டு | நான்முகனும் | ப்ரஹ்மாவும் |
| சாரதியாய் | ஸாரதியாய்க்கொண் | பொருந்தும் | சேர்ந்திருக்கிற |
| எதிர்ந்தார்சேனை | எதிரிட்டசத்ருக்களுடையஸேனையானது | ஊர்போல் | ஊரைப்போல் |
| | | ஏறு | மிக்க |
| செருக்களத்து | யுத்தரங்கத்திலே | சீர் | குணத்தையுடையராய் |
| திறல்அழிய | மிடுக்குஅழியும்படி | | |
| செற்றான்றன்னை | நிரஸித்தவனை, | மறையாளர் | வேதத்துக்குநிர்வாஹகரான ப்ராஹ்மணர் |
| போர் | (செருக்காலே)கரைபொருகிற | நிறைந்த | திரண்ட |
| | | செல்வம் | ஐஶ்வர்யத்தையுடைய |
| ஏறுஒன்று | ருஷபம்ஒன்றை | திருக்கோவலூரதனுள் நான் கண்டேன். (அ) | |
| உடையானும் | வாஹநமாகஉடையருத்ரனும் | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (பாரேறு பெரும்பாரம்தீர) †க்ஷமையென்றும் பொறையென்றும் பேரிறே பூமிக்கு. பொறையென்றுபேரையுடைத்தான பூமியானது பொறுக்கமாட்டாதபடி ஏறின பெரிய பாரமானது போம்படியாக. †பொறுக்கைக்குப் பேர் கொண்டிருக்கிற அதுதான் பொறுக்கமாட்டாதபடியாயிற்று அஸுராவேசத்தாலே கனத்தபடி. (பண்டு) அவன் தூதக்ருத்யம்பண்ணின வன்றுமொருநாளே! என்கிறார். (பாரதத்துத்தூதியங்கி) †எங்கள் பந்துக்களும் ஜீவிக்கவேணுமென்றாரிவர்கள், பந்துக்கள் ஜீவிக்கில் நாங்கள் ஜீவியோமென்றார்கள் துர்யோதநாதிகள். இரண்டுதலையையும் பொருந்த விடுகைக்காக தூதக்ருத்யத்திலே அதிகரித்துப்போவதுவருவதாய்ப், பின்பு அவர்களொருபடியாலும் “நீ சொல்லுகிறவார்த்தைக் கிணங்கோம்” என்ன, பூசலை விளைத்துத், §தன்னை “ஆயுதமெடுக்கவொட்டோம்” என்று அவர்கள் சொல்லத் தேர்க்காலாலே முடித்துப்பொகட்டானாயிற்று. (பார்த்தன் செல்வத்தேர்) †இவனைத் தோழனாகவும், மைத்துனனாகவும், தூதனாகவும், ஸாரதியாகவுமுடைய அர்ஜுநனுடைய தேரிறே. (க) “மஹதிஸ்யந்தநே — மஹதிஸ்யந்தநே” என்னக்கடவதிறே. (சாரதியாய்) ரதியானானாகில் வெற்றி தன்தலையிலேகிடக்குமே; அதுக்காகத் தான் ஸாரதியாய், வெற்றியும் †அவன் தலையிலேகிடக்கும்படி பண்ணினானாயிற்று. (எதிர்ந்தாரித்யாதி) அவன்தலையிலே வெற்றிகிடக்கும்படி தன்னைத்தாழவிட்டாலும், அடியறி

---

(க) கீதை - க - கச, § (பா) உன்னை.

யுமவர் விடாரே. அர்ஜுநனொரு நிமித்த மாத்ரம், அவனை †அப்பராகச் சேமஞ்சாத்திவைத்து வென்றானிவனே கிடீர் என்கிறார். எதிரிட்டவர் ஸேனையானது செருக்களத்திலே. கங்கையிலே கொடுபோய் மடுவிலே தள்ளுதல், அரக்குமாளிகையிலே ஏறவிட்டு நெருப்பிலே தள்ளுதல், சூதிலே தோற்பிப்பதாய், வஞ்சனையாலே நலியவிறே அவர்கள் பார்ப்பது; அங்ஙனன்றிக்கே, நேர்கொடு நேரே யுத்த பூமியிலே மிடுக்கழியும்படி செற்றவனை.

(போரித்யாதி) அஸுரவர்க்கம் முதலற்றபின்பு தேவஜாதியையடைய ஓரிடத்திலே நெருங்கக் குடியேற்றினாற்போலேயாயிற்று அவ்வூரில் ப்ராஹ்மணர். ருஷபவாஹநனான ருத்ரனும், வைஶ்ரவணனும், இந்த்ரனும், சதுர்முகனும், பொருந்து மூர்போலே. †நினைத்தாரை பஸ்மமாக்க வல்லாராகைக்கும், ஸ்வஸ்த்ரீபக்கலிலே ஸங்கத்தை விளைத்தவனையிறே நேத்ராக்நியாலே தஹித்தது; குறைவரக் கொடுக்கைக்கும், கொடுக்கக்கொடுக்க இரட்டிக்கைக்கும்; ஸ்வவிஷயத்திலுள்ளாரை ஸுகப்ரதாநராக்குகைக்கும்.(நான்முகனும்) (ஸூ) சாந்திக்கும் ஸர்வத்தையு முத்பாதிக்கைக்கும். (சீரித்யாதி) இவ்வோகுணங்களால் பூர்ணரான ப்ராஹ்மணர் திரண்ட ஐஶ்வர்யத்தாலே குறைவற்ற. ... ... ... ... (அ)

---

அரு.—எட்டாம்பாட்டு. (பாரித்யாதி) பிள்ளைத்தனத்தில நுகூலரிட்டவமுக்காய் ப்ரதிகூலரை முடித்தானென்றார் கீழிரண்டுபாட்டால்; இதில், பெரியவனானபின்பும், தூத்யஸாரத்யாதிகளை மைத்துனனுக்குச்செய்து தத்விரோதிகளைப் படையறுத்தானென்கிறாரென்று ஸங்கதி.

பெருமையினுடைய எல்லைநிலத்தையருளிச்செய்கிறார் (க்ஷமையித்யாதி). பொறுக்கப்போகாமைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் (பொறுக்கைக்கித்யாதி). தூதியங்கினது அழிக்கைக்கு ஹேதுவானபடி யென்னென்ன வருளிச்செய்கிறார் (எங்களித்யாதி). (தேர்க்காலாலே) - பண்டியாலே. சக்ரத்தாலேயென்று த்வந்யர்த்தம். தேர்க்குச்செல்வமேதென்ன (இவனையித்யாதி). ரதிகனான அர்ஜுநனிருக்க, ஸாரதியென்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (அவன்தலையிலே யித்யாதி). (அப்பராக) - பூஜ்யராக.

அநந்யப்ரயோஜநரான ப்ராஹ்மணர்க்கு ப்ரயோஜநாந்தரபரராய் அஹங்காரக்ரஸ்தரான தேவர்களை த்ருஷ்டாந்தீகரிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (நினைத்தாரையித்யாதி). (அ)

ழு.—தூவடிவில் பார்மகள் பூமங்கையோடு
சுடராழி சங்கிருபால் பொலிந்து தோன்றக்
காவடிவில்கற்பகமே போலநின்று
கலந்தவர்கட் கருள்புரியும் கருத்தினானைச்
சேவடிகை திருவாய் கண் சிவந்தவாடை
செம்பொன்செய் திருவுருவ மானான்றன்னைத்
தீவடிவில் சிவனயனே போல்வார்மன்னு
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தூ | அழகிய | கருத்தினானை | திருவுள்ளத்தையுடையனை, |
| வடிவில் | வடிவையுடைய | சே | சிவந்த |
| பார்மகளோடு | ஸ்ரீபூமிப்பிராட்டியோடும் | அடி | திருவடிகள் |
| பூமங்கையோடு | பெரியபிராட்டியாரோடும் | கை | திருக்கைகள் |
| சுடர் | தேஜோரூபமான | திருவாய் | திருப்பவளம் |
| ஆழி | திருவாழியாழ்வானும் | கண் | திருக்கண்கள் |
| சங்கு | ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானும் | சிவந்தஆடை | திருப்பீதாம்பரம் (இவற்றையுடைத்தாய்) |
| இருபால் | இரண்டருகும் | செம்பொன்செய் | அழகியபொன்போன்ற |
| பொலிந்துதோன்ற | விளங்கித்தோற்றம்படி | திருவுருவமானான்றன்னை | வடிவழகையுடையவனாயிருக்கிறவனை |
| காவடிவில் | சோலைசெய்திருந்து | தீவடிவில் | அக்நிவர்ணனான |
| கற்பகம்போலநின்று | கல்பகம்போலே நின்று | சிவன் | ருத்ரனையும் |
| கலந்தவர்கட்கு | தன்னையேயெல்லாவுறவுமுறையுமாகப்பற்றினவர்களுக்கு | அயன்போல்வார் | ப்ரஹ்மாவையும்போலே ஸ்ருஷ்டி ஸம்ஹாரஸமர்த்தர் |
| | | மன்னு | நித்யவாஸம் பண்ணுகிற |
| அருள்புரியும் | வேண்டிற்றுக்கருட் | திருக்கோவலூரதனுள் நான் கண்டேன் | (கூ) |

வ்யா.—ஒன்பதாம் பாட்டு (தூவடிவித்யாதி) ஹேயப்ரத்யநீகமான விக்ரஹத்தை யுடையளாய், பூமியைத்தனக்கு ப்ரகாரமாக உடையளாய், அதுக்கபிமாநிநியான ஸ்ரீபூமிப்பிராட்டி, தாமரைப்பூவை §இருப்பிடமாக உடைய பெரியபிராட்டியாரோடேகூட; இச்சேர்த்திக்கு ரக்ஷகமாகப் போரும்படியான திவ்யாயுதங்கள், சந்த்ர

§ (பா) பிறப்பாக.

த்யர்கள் சேர உதித்தாற்போலே விளங்கித்தோற்ற. (சுடரித்யாதி) †ஒரு கல்பகதரு பணைத்துப் பூத்தாற்போலே யாயிற்று பிராட்டிமாரோடே திவ்யாயுதத்தைதரித்தாலிருக்கும்படி. (காவடிவில்கற்பகமே போலநின்று) †தனிக்கற்பக மன்றிக்கே †சோலைசெய்திருப்பதொரு கல்பகம்போலேநின்று; அதாகிறது-ஸர்வாபேக்ஷிதப்ரதனாயிருக்கும் படி. (கலந்தவரித்யாதி) †"நாங்கள் எங்களுடைய ரக்ஷணத்துக்குக் கடவோமல்லோம், நீயே கடவாய்" என்று தன்கைபார்த்திருக்குமவர்கள் பக்கலிலே மிக்க ப்ரஸாதத்தைப் பண்ணும்படியை மநோரதிக்குமவனை.

(சேவடியித்யாதி) †அருள்பண்ணுவிட்டால் தான்விடலாமோ? இவ்வடிவைக்கண்டால்; (தீவடிவிஸித்யாதி) அக்நி, கண்ணுக்குத் தோற்ற வடிவு கொண்டாற்போலே யாயிற்று அவர்களிருப்பது. அங்குள்ளார், ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களையும் தாங்களே பண்ணவல்லரென்கை. ... ... ... ... (௯)

அரு.— ஒன்பதாம்பாட்டு. (தூவடிவிலித்யாதி) காலவிப்ரக்ருஷ்டங்களான அபதாநங்களில் ஆபத்ஸகத்வமும் ஆஸ்ரிதரிட்டவழக்காயிருக்குமதுவும் தேடிப்போகவேணுமோ, இப்போது திருக்கோவலூரில் நின்றநிலை தன்னிலாஸ்ரித கல்பகமாயிருக்கிறானென்றநுஸந்தித்து, அவன் வடிவழகில் கலந்தநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

பிராட்டிமாரோட்டை சேர்த்தியைக் கடாக்ஷித்து ஆயுதஸமாதியைத் திருவுள்ளம்பற்றிக் கீழொரு தாத்பர்ய மருளிச்செய்து, ஆபரணஸமாதியால் வந்த போக்யதையைத் திருவுள்ளம்பற்றி மேலேக்கடாக்ஷித்துத் தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (ஒருகல்பகதருவித்யாதி). (தனிக்கற்பகம்) - தனிக்கோப்பாயிருக்கும் கல்பகம். (சோலைசெய்து) - சோலைபோலே தழைத்து- ஈஸ்வரன் தன்னை ஸர்வரக்ஷகனாகக் கருதியிருக்க, இவர்களு மதுக்கிசைந்து நெஞ்சு கலந்தவரென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (நாங்களித்யாதி).

சிவந்த திருவடிகள் முதலானவை யுடைத்தாய் (௧) "ருக்மாபம்" (உ) பொன்னிவர்மேனி" என்கிறபடியே - அழகிலும் பொன்னிற்புகரை வடிவாக வகுத்தாற்போலே யிருக்கிறவனை என்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அருளித்யாதி). ... (௯)

(௧) மநுஸ். (உ) ௯ - உ - ௧.

மூ.—வாரணங்கொளிடர் கடிந்த மாலை நீல
மரதகத்தை மழைமுகிலே போல்வான்றன்னைச்
சீரணங்கு மறையாளர் நிறைந்த செல்வத்
திருக்கோவலூரதனுள் கண்டேனென்று
வாரணங்கு முலைமடவார் மங்கைவேந்தன்
வாள்கலியனொலியைந்து மைந்தும் வல்லார்
காரணங்களாலுலகம் கலந்தங்கேத்தக்
கரந்தெங்கும் பரந்தானைக் காண்பர்தாமே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. |
|---|---|
| வாரணம் | ஸ்ரீகஜேந்த்ராழ்வான் |
| கொள் | கொண்ட |
| இடர் | து:கத்தை |
| கடிந்த | போக்கின |
| மாலை | ஆஸ்ரிதவ்யாமுக்தனாய் |
| நீலம் | கருநெய்தலையும் |
| மரதகம் | மரகதமணியையும் |
| மழை | குளிர்ந்த |
| முகில் | மேகத்தையும் |
| போல்வான்றன்னை | போன்றவடிவழகையுடையனான ஸர்வேஸ்வரனை, |
| அணங்கு | எல்லாரும்விரும்பும்படியான |
| சீர் | ஆத்மகுணங்களையுடைய |
| மறையாளர் | ப்ராஹ்மணர் |
| நிறைந்த | திரண்ட |
| செல்வம் | ஐஸ்வர்யத்தையுடைய |
| திருக்கோவலூரதனுள் | திருக்கோவலூரிலே |
| கண்டேனென்று | காணப்பெற்றேன் என்று |
| வார் | கச்சுஅணிந்த |
| அணங்கு | அழகிய |
| முலை | ஸ்தநங்களையுடைய |
| மடவார் | ஸ்த்ரீகள் நிறைந்த |

| பதம். | உரை. |
|---|---|
| மங்கை | திருமங்கைக்கு |
| வேந்தன் | ராஜாவாய் |
| வாள் | வாளையுடைய |
| கலியன் | ஆழ்வார் அருளிச்செய்த |
| ஒலி | சப்தஸந்தர்ப்பங்களையுடைய |
| ஐந்துமைந்தும் | பத்துப்பாட்டையும் |
| வல்லார் | கற்கவல்லவர்கள், |
| உலகம் | லோகத்திலுள்ளார் |
| காரணங்களால் | ஐஸ்வர்யம் தொடக்கமான புருஷார்த்தங்கள் பெறுகைக்காக |
| கலந்து | திரண்டுவந்து |
| ஏத்த | ஸ்தோத்ரபூர்வகமாக ஆஸ்ரயிக்க (ஸர்வவ்யாபியாயிருக்கச்செய்தேயும்) |
| கரந்து | ஒருவருக்குங்காணவொண்ணாதவனாய் |
| எங்கும்பரந்தானை | எங்கும்புக்குவ்யாபித்துநிற்கிறஸர்வேஸ்வரனை |
| காண்பர் | காணப்பெறுவர்கள். |

வ்யா.—பத்தாம்பாட்டு. (வாரணமித்யாதி) †பிறர்க்கு இடரை விளைக்கக்கடவதான அது கொண்ட இடரைப்போக்கி அதின் பக்கலிலே வ்யாமுக்தனானவனை. (நீலமரதகத்தை) அதினுடைய

§ விடாயடங்கலும் போம்படி குளிரவர்ஷித்துக் கொடுகின்றபடி. (சிரித்யாதி) ஆத்மகுணங்களாலே தங்களை விரும்பும்படியிருக்கிற ப்ராஹ்மணர் திரண்ட ஐஶ்வர்யத்தை யுடைத்தாயிருக்கிற. (திருக்கோவலூரதனுள் கண்டேனென்று) அறுகாதம் பயணம்போயன்றிக்கே. (வாரணங்கித்யாதி) முலைக்கு ஆபரணமான கச்சுத்தான் நிறம்பெறும்படி முலைபடைத்தவர்கள். "அணங்கு" என்று விருப்பத்துக்கும்பேர், அழகுக்கும்பேர். †தன்னழகே யன்றிக்கே முலைக்கச்சால்வந்த அழகையுடைய. (வாள்கலியன்) ப்ரதிபக்ஷ நிரஸநஸ்வபாவமான வாளையுடைய ஆழ்வார் அருளிச்செய்த இப்பத்தையுமப்யஸிக்க வல்லவர்கள். (காரணங்களால்) ஐஶ்வர்யத்துக்காகவும், ஆத்மப்ராப்திக்காகவும், பகவத்ப்ராப்திக்காகவும், லோகத்திலுள்ளார் திரண்டாஶ்ரயிக்க (கரந்தித்யாதி) ஆஶ்ரயித்தபோதே, ஆஶ்ரிதர்க்கபேக்ஷிதத்தைக் கொடுக்கைக்காக எங்கும் புக்கு வ்யாபித்து அந்யைரத்ருஷ்டனாய், "நம்மை ஆஶ்ரயிப்பாராரோ" என்று †அவஸரப்ரதீக்ஷனாய் நிற்கிறவனைக் காணப்பெறுவர். ... ...(௧௦)

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.



அரு.—பத்தாம்பாட்டு (வாரணமித்யாதி) "வாரணம்" என்கையால் பலித்த வர்த்தமருளிச்செய்கிறார் (பிறர்க்கித்யாதி). வாருக்கு அழகுகொடுக்கிற முலையென்று ஒருயோஜனை யருளிச்செய்து, வாராலேவந்த அழகையுடைய முலையென்று யோஜநாந்தர மருளிச்செய்கிறார் (தன்னழகே யன்றிக்கேயித்யாதி). (அவஸரப்ரதீக்ஷனாய்) என்றது - அந்தர்யாமியை. ... (௧௰)

இரண்டாம்பத்து பத்தாந்திருமொழி முடிந்தது

ஜீயர் திருவடிகளே சரணம்.





ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ௯ - ம் பத்து, க - ம் திருமொழி, இருந்தண் ப்ரவேசம்.



வ்யா.—அவ.—†அவ்வோ நிலங்களுக்குச் சிறப்பானவற்றையி ட்டுச் சொல்லக்கடவர்களாயிற்றுக் கவிகளானவர்கள்; அப்படி யன்றிக்கே, யதாபூதவாதிகளான ஆழ்வார்கள் உகந்தருளின நிலங்கள் விஷயமாகச் சொல்லுமவற்றில் நாம் கண்டு காணுதவை கொள்ளும்படி யெங்ஙனேயென்றால்; அவர்களுடைய ப்ரேமத் துக்கு அவதியில்லாமையைக் கொள்ளுமித்தனை; தன்புத்ரன் விரூ பனாயிருக்கச் செய்தேயும் அல்லாதவர்களுடைய புத்ராதிகளிற் காட் டிலும் ரூபவானாய்த் தோற்றுமிறே ப்ரேமத்தாலே; அப்படியே, இவர்களுகப்புக்கு அவதி யில்லாமையாலும், சொன்ன சொன்ன ஏற்றமெல்லாம் பொறுக்கும்படி ஸர்வேஶ்வரன் விஷயமாகச் சொ ல்லுகையாலும், இப்படியாகையிலொருதட்டில்லை. காரணமான ப்ரேமத்துக்கு அவதியில்லாமையாலே, அதின்கார்யமாய் வருமவை யுமெல்லாமுண்டாகைக் கொருகுறையில்லையிறே.

†ரஜோகுண ப்ரசுரனை பல்லவனுங்கூட ஆஶ்ரயிக்கலாம்படி பரமேச்சுர விண்ணகரிலே ஸந்நிஹிதனானபடியை யநுஸந்தித்தார், அங்ஙனன்றிக்கே, ஸத்வநிஷ்ட்டராய் ஸ்வவர்ண ஸ்வாஶ்ரமோசித மானகர்மங்களை பகவத்ஸமாராதந புத்யா மாறாதே அநுஷ்ட்டிக்கும் ப்ராஹ்மணர்க்கு உபாஸ்யனாய்க்கொண்டு திருக்கோவலூரிலே ஸந் நிஹிதனானபடியை யநுஸந்தித்தார்; தேவர்களுக்கு அந்தர்யாமி என்கிற புத்திவிசேஷத்தைப்பண்ணி அவ்வோமுகங்களாலே ஆஶ் ரயிக்கை யன்றிக்கே, அவன்றன்னையே ஆஶ்ரயிக்கும் †அநுகூலர்க் காக, †ஜகத்துக்குக் காதாசித்கமாகவுண்டாம் ப்ரளயத்தைப்போக்கி நோக்குமாபோலேயும், †நித்யஸூரிகளுக்கு ஸதாதர்சநம் பண்ணு கைக்குத் தன்னைக்கொடுத்துக்கொண்டிருக்குமாபோலேயும், அபரிச் சிந்நனை தன்னை, "இவனிவ்வளவிலுள்ளான்" என்று இவர்களுக்குப் பரிச்சேதித்து ப்ரதிபத்தி பண்ணலாம்படி தனக்குள்ளதடைய

இவர்களுக்குக் காட்டிக்கொடுத்துக்கொடு நிற்கிறவிடமாகையாலே, அவ்விடத்தை ப்ராப்யமென்று புத்திபண்ணி, அத்தைப்பேசி யநுபவிக்கிறார். ... ... ... ... ... *

---

அங.—இருந்தண் ப்ரவேசம். கீழ்த்திருமொழிகளிலும் மேல்திருமொழிகளிலும் இத்திருமொழிதன்னிலும் திருப்பதிகளுக்குச் சிறப்பிட்டுச்சொன்னதுக்குக் கருத்தை சங்காபூர்வகமாக வருளிச்செய்கிறார் (அவ்வோநிலங்களுக் கித்யாதி).

கீழிரண்டு திருமொழிகளோடு இத்திருமொழிக்கு ஸங்கதி யருளிச்செய்கிறார்(ரஜோகுணேத்யாதி). ராஜஸராயும் ஸாதநாந்தர நிஷ்டராயுமிருக்கிற இவர்களுக்கு முகங்காட்டிக்கொண்டிருக்கிற ஸ்த்தலங்களிலநுபவத்திற்காட்டிலும் அநுகூலர்க்கு முகங்கொடுக்குமிடத்தில் இவர்களோடு தாமுமநுபவிக்கை பரமப்ராப்யமென்று திருவயிந்திரபுரத்துத் தெய்வநாயகனை யநுபவிக்கிறாரென்று திருவுள்ளம். (அநுகூலர்க்காக) என்றதுக்கு, (நிற்கிறவிடமாகையாலே) என்றத்தோடன்வயம். இங்கு அநுகூலரென்றது - இத்திருமொழியி லநுஸந்திக்கப்படுகிற, வண்டுகள், குரக்கினம், அன்னம், சோலைகள் முதலானவையெல்லாம், ஸ்வாபதேசத்திலே, பாகவதர்களென்று திருவுள்ளம் பற்றி. "இருந்தண்மாநிலம்" இத்யாதியைப்பற்ற வருளிச்செய்கிறார் (ஜகத்துக் கித்யாதி). "மின்னுமாழியங்கையவன்" என்றதைப்பற்ற (நித்யஸூரிகளுக் கித்யாதி). அன்றிக்கே, இத்திருமொழிக்கு உயிர்ப்பாட்டான "வையமேழுமுண்டு" என்கிறபாட்டைக் கடாக்ஷித்தருளிச்செய்தாரென்னவுமாம், "அடியவர்க்கு மெய்யனாகிய" என்றிறே யிருக்கிறது; "தெய்வநாயகன்" என்றிறே அதில்பாசுரம். ... ... ... ... ... *

மூ.—இருந்தண்மாநிலமேனமதாய்வளைமருப்பினிலகத்தொடுக்கிக்
கருந்தண்மாகடல்கண்டுயின்றவனிடம்கமலநன்மலர்த்தேற
லருந்தியின்னிசைமுரன்றெழுமளிகுலம்பொதுளியம்பொழிலூடே
செருந்திநாண்மலர்சென்றணைந்துழிதரு திருவயிந்திரபுரமே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இருந்தண் | மிகக்குளிர்ந்த | கருந்தண்மாகடல் | கறுத்துக்குளிர்ந்தபெருங்கடலில் |
| மாநிலம் | பெரியபூமியை (ப்ரளயங்கொண்டவன்று) | கண்துயின்றவன் | யோகநித்ரைசெய்தருளுமவனுக்கு |
| ஏனமதாய் | வராஹரூபியாய் | இடம் | வாஸஸ்தானமாவது, |
| வளைமருப்பகத்தினில் | வளைந்தகொம்பினிடத்திலே | கமலம் | தாமரையினது |
| ஒடுக்கி | அடக்கி, (பின்பு) | நல் | அழகிய |
| | | மலர் | பூவிலுண்டான |

| | | | |
|---|---|---|---|
| தேறல் | தேனை | செருந்தி | செருந்திமரத்தின் |
| அருந்தி | பாநம்பண்ணி | நாள்மலர் | அப்போதலர்ந்த பூவி |
| இன்இசை | இனியராகத்தை | சென்று அணைந்து | போய்க்கிட்டி [ல் |
| முரன்று | பாடி | | |
| எழும் | கூத்தாடாநின்றுள்ள | உழிதரு | ஸஞ்சரிக்கிற |
| அளிகுலம் | வண்டுக்கூட்டங்கள் | திருவயிந்திரபுரமே | திருவயிந்திரபுரமென்னும் திவ்யதேசமாம். (க) |
| பொதுளி | திரண்டு | | |
| அம் | அழகிய | | |
| பொழிலூடே | சோலைகளிலே | | |

வ்யா.—முதற்பாட்டு. (இருந்தண்மாநிலம்) மாநிலமென்று - பூமிப் பரப்பைச் சொல்லுகையாலே, தட்பத்தாலே-போக்ய போகோபகரண போகஸ்த்தாந ப்ரசுரமாயிருக்கும்படியாய், இருமையால்-அதில் பெருமையாய்க்கிடக்கிறது.†இத்தை ப்ரளயங்கொண்டவிடத்தில் சேதநர்க்குறுப்பாமாகாரமேயாயிற்றுத் திருவுள்ளத்தில் பட்டுக்கிடக்கிறது. (ஏனமதாய்) †கார்யம் தெரிந்தவாறே தன்னையழிய மாறினன். †நீருக்கும் சேற்றுக்குமிறுயாத வராஹ விக்ரஹத்தைப் பரிக்ரஹித்தான். வளைந்த கொம்பிலகவாயில் ஏகதேசத்திலே யடக்கினன். இத்தால் ரக்ஷ்யத்தினளவல்லாத ரக்ஷகனுடைய பாரிப்பைச் சொன்னபடி. †இது ஸுரக்ஷிதமென்று திருவுள்ளத்தே பட்டவாறே. (கருந்தணித்யாதி) †கடல்கள்தோறும் கண்வளர்ந்தருளும் என்றொரு ப்ரஸித்தியுண்டு; அத்தாலே, (க) "உவர்க்கும் கருங்கடல் நீருள்ளான்" என்கிறபடியே சொல்லிற்றாகவுமாம் அன்றிக்கே, திருப்பாற்கடல்தான் மஹாவராஹத்தினுடைய குளம்பிலே துகளாய்க்குழம்பித் தன்னிறம்போயிற்றென்னவுமாம்.

(கமலமித்யாதி) †தாமரையினுடைய செவ்விபெற அலர்ந்த விலக்ஷணமான புஷ்பங்களிலே வண்டுகளானவை புக்கு மதுபாநத்தைப்பண்ணும்; கழுத்தே கட்டளையாக மதுபாநத்தைப் பண்ணுகையாலுண்டான ப்ரீதிப்ரகர்ஷத்தாலே, இனிய இசையை முரலாநிற்கும் - †செவிப்பாடுடைத்தாக ஆளத்தி வையாநிற்கும். உள்ளுப் புக்கத்ரவ்யம் இருந்தவிடத்தி லிருக்கவொட்டாமையாலே, கொண்டுகிளர்ந்தெழுகிற வண்டுகளினுடைய ஸமூஹமானது, தாமரையிலே மதுபாநம் பண்ணச்செய்தே, பின்னையும் சாபலாதிசயத்தாலே செருந்தியிலேபோய் மதுபாநம் பண்ணுவதாக நினைத்து அதின் தேன்

(க) ரு - திரு - நஎ.

வெள்ளத்தை யநுஸந்தித்து; கிண்ணகத்தி லிழிவார் கைகோத்துக் கொண்டிழிய ஆள்திரள் பார்த்திருப்பாரைப்போலே; (பொதுளி) வண்டுகள் வந்து செறியுமளவு மிருந்து, அவை திரண்டவாறே தர்சநீயமாகப்பூத்த, பொழிலூடே - சோலையினுள்ளே, செருந்தியினுடைய செவ்விப்பூவிலே சென்று கிட்டும். †(பொதுளி) திரண்டிருந்து உழிதராநிற்கும், †தாமரைப்பூவிலாசையாலே இழிந்து மதுபாநம்பண்ணின வண்டினம், செருந்தியில் மதுவெள்ளத்தை யநுஸந்தித்துவிசாரியாதேயிழிந்து, "அகப்பட்டுக்கொடுநிற்குமது கார்யமல்ல" என்றுபார்த்து கிண்ணகத்திலிழிய அஞ்சிக்கரையிலே உலாவுவாரைப்போலே, செருந்திப்பூவைச் சென்று கிட்டி அதிலிழிய அஞ்சி கரையிலே நின்று இதஸ்தத: ஸஞ்சரியா நிற்குமாயிற்று. (பொதுளி) செறிவு. பொழிலுக்கு விசேஷண மாகவுமாம். (க)

---

அரு.—முதற்பாட்டு. (இருந்தணித்யாதி). அழிந்ததசையில் போக்யாதிகளுண்டாகக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (இத்தையித்யாதி). ப்ரளயத்துக்கு முன்புள்ள ஆகாரம் ஆழ்வார் திருவுள்ளத்தேகிடந்ததென்று திருவுள்ளம். எம்பெருமான் திருவுள்ளத்தில் கிடந்ததென்னவுமாம். (கார்யம் தெரிகையாவது)-ப்ரளயங்கொண்ட பூமியையெடுக்க விசாரிக்கை. "ஏனமாய்" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்து, "அதாய்" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (நீருக்குமித்யாதி). மேலுக்கவதாரிகை (இதுவித்யாதி). * கருமை பெருமையாக்கி, நஞ்சீயர் வ்யாக்யாநம்பண்ணியிருந்தாலும், ப்ரஸித்தி ப்ராசுர்யத்தைப்பற்ற கறுப்பையே விவக்ஷித்தருளிச்செய்கிறார் (கடல்கள்தோறுமித்யாதி).

கமலம் - தாமரையுடைய, நல் - விலக்ஷணமான, மலரில், தேறலை - தேனை, அருந்தி - பாநம்பண்ணி, இனிதான இசைமுரன்று எழாநின்றுள்ள அளி-வண்டுகளினுடைய, குலம் - ஸமூஹமானது, பொதுளி - திரண்டு, அழகிய பொழில்நடுவே, செருந்தி என்கிற வ்ருக்ஷவிசேஷத்தின் நாட்பூவில் சென்று கிட்டி ஸஞ்சரியாநிற்கிற திருவயிந்திரபுரமென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தாமரையினுடையவித்யாதி). விவரணம் (செவியித்யாதி). செவிப்பாடு - செவிக்கினிதாகப்பாடுகை. அந்வயங்காட்டுகைக்காக மீளவுமருளிச்செய்கிறார் (பொதுளியித்யாதி). உழிதருகைக்குக் கருத்தருளிச்செய்கிறார் (தாமரைப்பூவிலித்யாதி). ஷட்பதநிஷ்டரான ஸ்ரீவைஷ்ணவர்கள் தெய்வநாயகன் திருவடித்தாமரைகளில்தேனைக் குறைவற உண்டு, ஆசையாலே, நித்யஸூரி பரிஷத்கதனான *வாநோதேவதருவின் பாதமலரில் தேனை புஜிக்கக்கோலி ஸஞ்சரித்துக்கொண்டிருப்பார்களென்று ஸ்வாபதேசத்தில் பலிதார்த்தம். ... ... ... (க)

மூ.—மின்னுமாழியங்கையவன்செய்யவளுறைதருதிருமார்வன்
பன்னுநான்மறைப் பல்பொருளாகிய பரனிடம் வரைச்சாரல்
பின்னுமாதவிப் பந்தலில் பெடைவரப் பிணியவிழ் கமலத்துத்
தென்னவென்றுவண்டின்னிசைமுரல்தரு திருவயிந்திரபுரமே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மின்னும் | மின்னுகின்றுள்ள | பரன் | ஸர்வஸ்மாத்பரனுக்கு |
| ஆழி | திருவாழியை | இடம் | ஸ்தாநமாவது, |
| அம் | அழகிய [யனாய், | வரைச்சாரல் | மலைப்பக்கங்களில் |
| கையவன் | திருக்கையிலேயுடை | பின்னும் | நெருங்கியிருந்துள்ள |
| செய்யவள் | பெரியபிராட்டியார் | மாதவிப்பந்தலில் | குருக்கத்திப்பந்தலிலே |
| உறைதரு | நித்யவாஸம்பண்ணுகிற [னாய், | வண்டு | வண்டுகளானவை |
| திருமார்வன் | திருமார்வையுடைய | பெடை | தங்கள்பேடைகள் |
| நான்மறை | நான்குவகைப்பட்ட வேதங்களால் | வர | வருகைக்காக |
| பன்னு | சொல்லப்படும் | பிணி அவிழ் | கட்டு அவிழுகிற |
| பல்பொருள் | பதார்த்தங்களையெல்லாம் | கமலத்து | தாமரையிலே (புக்கு) |
| ஆகிய | தனக்கு ப்ரகாரமாகவுடைய | தென்னஎன்று | தென்னா! தெனா! என்று |
| | | இன்இசைமுரல்தரு | இனியஇசைபாடாநின்றுள்ள |

திருவயிந்திரபுரமே. (௨)

வ்யா.—இரண்டாம்பாட்டு. (மின்னுமித்யாதி) ஸர்வேஶ்வரத்வ லக்ஷணமாகிறது - திருவாழியைக் கையிலே சலியாதே பிடித்தல், லக்ஷ்மீபதியாதல், வேதைக ஸமதிகம்யனாதல், இவையாயிற்று; இவை மூன்று முண்டிங்கு. (மின்னுமாழியங்கையவன்) மேகத்திலே மின்னினாற்போலே யிருக்கிற திருவாழியைக் கையிலே யுடையவன். (செய்யவளித்யாதி) அந்த மின்கொடிதான் ப்ரதேசாந்தரத்திலே தழுவினாற்போலேயாயிற்றுப் பெரிய பிராட்டியாரைத் திருமார்பிலே யுடையனாயிருக்கும்படி. (பன்னித்யாதி) பரந்து நாலுவகைப்பட்ட வேதத்தில் அவ்வோ விடங்கள்தோறும் சொல்லப்பட்ட பதார்த்தங்களடங்கத் தனக்கு சரீரதயா ப்ரகாரமாய், தானொருவனுமே ப்ரகாரியா யிருக்கையாலே ஸர்வஸ்மாத்பரனானவன். (௧) †"𑌵𑍇𑌦𑍈𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑌹𑌮𑍇𑌵 𑌵𑍇𑌦𑍍𑌯𑌃 - வேதைஶ்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:" என்றானிறே. (௨) "𑌹𑍍𑌰𑍀𑌶𑍍𑌚 𑌤𑍇 - ஹ்ரீஶ்சதே" (௩) †"𑌅𑌸𑍍𑌯𑍇𑌶𑌾𑌨𑌾 - அஸ்யேசாநா

---

(௧) கீதை. (௨) ஸ்ரீஸூக்தம். (௩) ஸ்ரீஸூக்தம்.

(வரையித்யாதி) †பிராட்டியும் தானுமான சேர்த்தியில் ப்ரணய கலஹம் மாறுகை செல்லுமாபோலே யாயிற்று அங்குத்தை திர்யக்குக்களுடைய யாத்ரையும். மலையின் பர்யந்தத்தில் நெருங்கப்பட்டிருந்துள்ள மாதவிப் பந்தலிலே மதுபானம்பண்ண விழுந்த வண்டுகளானவை, தன்னில்தான் ப்ரணயரோஷத்தாலே, "நீ, நான்" என்ன, அவ்வளவிலே பேடையானது, "இனி நீ ஜீவிக்கும்படியெல்லாம் நான் காண்கிறேன்" என்று, ப்ரதிஜ்ஞைபண்ணி, மாதவியிலே செறியப்பூத்த பூவிலே புக்கொளித்தது; அத்தையொழிய அரைக்ஷணம் ஜீவிக்கமாட்டாமையாலே, (க) 'నైవదంశా-நைவதம்சாந்" (உ) "నజీవేయం - நஜீவேயம்" என்று படுமிறே சேவல், அப்படி நோவுபட்டு, எல்லா†ஸாதநங்களையு மநுஷ்டித்து, †பல் பன்னிரண்டும் காட்டினவிடத்திலும் அதுக்குக் கேட்டதில்லையாயிற்று; "இனிச்செய்வதென்?" என்று பார்த்து "கைகழியப்போகமாட்டாது, நாம்படுவது காண மறைந்துவித்தனை, ப்மிடற்றோசையாலே முகங்காட்டுவித்துக் கொள்வோம்" என்று பார்த்து, (பின்னுமாதவிப்பந்தல்பெடைவர) அதிலே புக்க பேடையானது, ஊடல் தீர்ந்துவந்து முகங்காட்டும்படி †அப்போதலர்ந்த செவ்வித் தாமரையிலே போய்ப்புக்கு தென்ன! என்று ஆளத்தி வைக்கத்தடங்கிற்றுயிற்று. †நக்குண்டார் ‡நாவெழாரிறே. பாடப்பகை தீருமென்பதிறே; (ரு)†"பேதை நெஞ்சறவறப் பாடும்பாட்டை" என்னக்கடவதிறே. .... ... ... ... .. (உ)

அரு.—இரண்டாம்பாட்டு. (மின்னித்யாதி). கீழ்ப்பாட்டில், ஸ்ரீவராஹமாய், ஜகத்துக்குவந்த ப்ரளயாபத்நிவ்ருத்தியைச்செய்து கண்வளர்ந்தகிடந்தவன் வந்திருக்கிறவிடமாகையாலே, ப்ராப்யமென்றநுஸந்தித்தார்; இதில், ஸர்வஸ்மாத்பரன் வர்த்திக்கிறவிடமாகையால் ப்ராப்யமென்றநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"மின்னுமாழி" இத்யாதிக்கு வ்யுத்க்ரமேண ப்ரமாண ப்ரதர்சனம் (வேதைரித்யாதி). "வேதை:" என்கிற பன்மையால், பேதஶ்ருதி, அபேதஶ்ருதி, கடகஶ்ருதி எல்லாம் சொல்லுகையால், "பொருளாகிய" என்றதுக்கு ப்ரமாணமென்று கருத்து. (அஸ்யேசாநா) என்றவநந்தரம், (ச) "శ్రీవత్సవక్షా నిత్యశ్రీరజయ్య శాశ్వతో ధ్రువః తమసః పరమో ధాతా శఙ్ఖచక్రగదాధరః. ప్రీవత్సా

(க) ரா-ஸு-ருக-சஉ.
(உ) ரா-ஸு-ருக-க0.
(ரு) தி-வாய்-கூ-கூ-கூ.
(ச) ரா-யு-கக௪-கரு.

வக்ஷா நித்ய ஸ்ரீரஜேயஸ் ஶாஶ்வதோ த்ருவ:-தமஸ: பாமோதாதா சங்கசக்ர கதாதர:'' என்ற தநுஸந்தேயம்.

(உறைதிருமார்வன்) என்னவமைந்திருக்கவும், ''தரு'' என்கையாலே, ப்ரணயகலஹம்மாறாதே செல்லுகை ஸித்தமென்று இத்தை த்ருஷ்டாந்தமாக்கி, பெளடருமபடி இன்னிசைமுரலாநிற்கும் என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பிராட்டியுமித்யாதி). (ஸாதநங்களையும்) என்கிறது - தூதப்ரேஷணாதிகளைப் பண்ணியென்றபடி. (பல்பன்னிரண்டும்காட்டி) என்றது - கெஞ்சியும் என்றபடி. கெஞ்சும்போது பதினாறும் என்னாதே பன்னிரண்டும் என்றது - மந்தஸ்மிததசையிலும் நாலுதோற்றுகிறது ஸித்தமாகையால் அதிகமாகத்தோற்றுவது பன்னிரண்டேயென்கை. (அப்போதலர்ந்த தாமரையிலேபுக்கு) என்றதுக்கு - எங்கும் தேடித்திரிந்து காணாமையால் நாக்கொட்டிக்கிடந்தது, பாடும்போது நாக்கு நனைக்கக்கண்டு அத்தாமரையில் போயிற்றென்றுகருத்து. கெஞ்சினால்வாராதது பாடினால்வருமோவென்ன வருளிச்செய்கிறார் (நக்குண்டாரித்யாதி). (நக்குண்டார்) கிஞ்சித்காரம் பெற்றவர்கள். (நாவெழார்) குற்றம்சொல்லமாட்டார். இத்தால் (க) ''[illegible]-தஸ்மாத் காயந்தம் ஸ்த்ரிய: காமயந்தே'' என்கிறபடியே - கானரஸங் கேட்கில் குற்றஞ்சொல்லமாட்டாதே வருமென்றதாயிற்று. பாடப்பகைதீருமோவென்ன (பேதையித்யாதி). ... (௨)

மூ.—வையமேழுமுண்டாலிலை வைகிய மாயவனடியவர்க்கு
மெய்யனாகியதெய்வ நாயகனிடம் மெய்தகு வரைச்சாரல்
மொய்கொள் மாதவி செண்பகம் முயங்கிய முல்லையங்கொடியாடச்
செய்யதாமரைச் செழும்பணை திகழ்தரு திருவயிந்திரபுரமே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வையம்ஏழும் | கீழ் ஏழுலோகங்களை | வரைச்சாரல் | மலைப்பக்கத்தில் |
| உண்டு | அமுதுசெய்து [யும் | மொய்கொள் | நெருங்கியிருந்துள்ள |
| ஆலிலை | வடதளத்திலே | மாதவி | குருக்கத்தியானது |
| வைகிய | போதுபோக்கின | செண்பகம் | செண்பகத்தை |
| மாயவன் | ஆஸ்சர்யசக்தியுக்தனாய் | முயங்கிய | தழுவின |
| | | முல்லை | நிர்த்ஜலப்ரதேசத்தில் |
| அடியவர்க்கு | தனக்கே எல்லாவடிமையும்செய்யுமவர்களுக்கு | அம் | அழகிய |
| | | கொடி | முல்லைக்கொடியானது [றாலே) |
| மெய்யனாகிய | தன்னை யுள்ளபடிகாட்டுமவனான | ஆட | அசைய, (அதின்காற் |
| | | செழு | செழித்த |
| தெய்வநாயகன் | தெய்வநாயகனுக்கு | பணை | நீர்நிலங்களிலுள்ள |
| இடம் | இடமாவது, | செய்யதாமரை | செந்தாமரை (அலர்ந்து) |
| மெய்தரு | எம்பெருமான் திருமேனியில் மார்த்தவத்துக்குத்தக்க | திகழ்தரு | ஒளிசெய்கிற |
| | | | திருவயிந்திரபுரமே. (௩) |

வ்யா.— மூன்றாம்பாட்டு. (வையமித்யாதி) †பூமிப்பரப்படங்கலும் வயிற்றிலே யெடுத்துவைத்து ஒருபவனான ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளின ஆஶ்சர்யசக்தியுக்தன்.†அகடிதங்களைச்செய்தும் ஆஶ்ரிதரக்ஷணம்பண்ணுமவன். (அடியவர்க்கித்யாதி) †காதாசித்கமாக ஜகத்துக்குவந்த ப்ரளயத்தைப் பரிஹரித்தாற்போலன்றிக்கே தன்னை நித்யாநுபவம் பண்ணவேணும் என்றிருப்பார்க்கு, அதுக்கொருக்ஷணம் விச்சேதம் வருகையாவது - நித்ய†ப்ரளயமிறே. தனக்கு அஸாதாரணமாயிருப்பார்க்குத் தன்படிகளையெல்லாம் "இவனுக்குள்ள திவ்வளவு" என்று பரிச்சேதித்தநுபவிக்கலாம்படி வெளியிட்டுக்கொண்டுநிற்கிற. (தெய்வநாயகனிடம்) நித்யஸூரிகளுக்குத் தன்படிகளெல்லாம் அநுபவிக்கலாம்படி கொடுத்துக்கொண்டிருக்குமாபோலே, இங்குள்ள ஆஶ்ரிதர்க்கும் தன்னை அநுபவிக்கலாம்படி கொடுத்துக்கொடு நிற்கிறவிடம். (க)†"அஹமேவம்விதஃ - அஹமேவம்விதஃ" என்றானிறே - †நான் பக்தியைகலப்யன் என்றருளிச்செய்தவாறே, (உ) "பரம்ப்ரஹ்ம பரம்தாம - பரம்ப்ரஹ்மபரம்தாம" என்று கேட்டிருந்தபடியாலே - நீ ஒருவன் பக்திக்கெளியனாவதென்னென்ன, "அஹமேவம்விதஃ - அஹமேவம்விதஃ" நாட்டில் பரிமாறுகிறபடி கண்டு சொல்லவொண்ணாதுகாண், அவ்வோ வ்யக்திகளில்கண்டபடி சொல்லவேணுங்காண், எனக்கிதுவே †ப்ரகாரம் என்றானிறே.

(மெய்தகு)†மெய்க்குத்தக்கிருக்கை - †மென்மையையுடைத்தாயிருக்கை. இதரவிஸஜாதீயமாயிருந்துள்ள மலையில் பர்யந்தத்திலே. (மொய்கொளித்யாதி) †மொய்யென்று - வலிக்கும், செறிவுக்கும் பேர். இங்கு, செறிவாய், நெருங்கியிருந்துள்ள குருக்கத்தியானது, செண்பகத்தைச்சென்று கட்டிக்கொண்டது; முல்லைநிலத்திலே அந்தக் கொடியானது காற்றாலே அசைய, மருதநிலத்திலுண்டான தாமரைகளில் அலருமளவாய்நின்ற பூக்களானவை இக்கொடியசைகிற காற்றுப்பட்டு அலராநிற்குமாயிற்று. †சிவந்த தாமரைகளையுடைத்தான நீர் நிலங்களிலே உஜ்ஜ்வலமாகா நின்றுள்ள. (திருவயிந்திரபுரமே) †அகடிதங்களை கடிப்பித்தும் அவஶ்ரிதரக்ஷணம் பண்ணுமாபோலே, †விருத்தமான தேசத்தில் அவையிரண்டையும் ஏககாலத்திலே கிட்டியநுபவிக்கலாம் தேசமாயிற்று. ... (ங)

(க) கீதை - கக - ருச. (உ) கீதை - கO - கஉ.

அ௩.—மூன்றாம்பாட்டு. (வையமித்யாதி) கீழ்ப்பாட்டில்சொன்ன பரத்வத்தைத் தத்கார்யமான அகடிதகடநாஸாமர்த்யமுகேந அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

வையமேழும் - கீழேழுலோகங்களும், உண்டு - அமுதுசெய்து, வைகிய - போதுபோக்கின, என்று சப்தார்த்தமாயருளிச்செய்கிறார் (பூமியித்யாதி). (பூமிப்பரப்படங்களும்) என்றது-கீழில்லோகங்கள் பூமிவாங்களானமையாலே. மேலுக்கவதாரிகை (அகடிதங்களையித்யாதி). அடியவர்க்குமெய்யனாகிறதும் வையமுண்டதுபோல் அகடிதமோவென்ன வருளிச்செய்கிறார் (காதாசித்கேத்யாதிவாக்யத்தாலே). (ப்ரளயமிறே) என்றவநந்தரம், ஆகையாலே அதுவாராதபடி என்று சேஷபூரணம்பண்ணிக்கொள்வது. அபரிச்சிந்நனான தன்னைப் பரிச்சேதித்தநுபவிக்கும்படி பண்ணுகை அகடிதமிறேயென்று திருவுள்ளம். நித்யஸூரிகள் ஸர்வஜ்ஞராகையாலே தன்படிகளெல்லாமநுபவிக்கலாம்படி பண்ணினானேயாகிலும்,இங்குள்ளார்க்கு அங்ஙனநுபவிக்கை கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (அஹமித்யாதி). விவரணம் (நானித்யாதி). ஸ்வரூபதோ குணதஶ்ச நிரதிசயப்ருஹத்தாய் நிரவதிகதேஜோரூபமானவஸ்து பக்திக்கு ஸுலபமாயநுபவிக்கலாம்படி பண்ணினாயென்றால் இது நாட்டில் கண்டதில்லையேயென்ன (நாட்டிலித்யாதி). (ப்ரகாரம்).ஸ்வபாவம்.

(மெய்க்கு) என்றது. தெய்வநாயகன் திருமேனிக்கென்றபடி. (மென்மையையுடைத்தாயிருக்கை) - எம்பெருமான் திருமேனியில் மார்த்தவம்போலே மார்த்தவத்தையுடைத்தாயிருக்கை. மொய்கொள்-நெருங்கியிருந்துள்ள, மாதவியானது, செண்பகத்தை, முயங்கிய - தழுவிய, முல்லை - முல்லைநிலத்திலே - நிர்ஜலப்ரதேசத்திலே, அம்கொடியானது - அக்கொடியானது-முல்லையென்ற சப்தத்தாலே சொல்லப்பட்ட கொடியானது, ஆட, அத்தாலே, செழும்பணையில்-மருதநிலத்தில், நீர்நிலத்தில்-செய்யதாமரை திகழ்தரு திருவயிந்திரபுரமென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (மெய்யென்றித்யாதிவாக்யத்ரயத்தாலே). முல்லையங்கொடி - அழகியமுல்லைக்கொடி, ஆட, தாமரையுடைய செழும்பணையிலே விளங்குகிற என்று அர்த்தாந்தரமருளிச்செய்கிறார் (சிவந்தவித்யாதி). மூந்தினவர்த்தத்தில், குறிஞ்சி நிலமான மலைச்சார்விலே முல்லைநிலமும் மருதநிலமுமிருக்கக்கூடுமோ வென்னும் சங்கையிலேயருளிச்செய்கிறார் (அகடிதங்களை யித்யாதி). (விருத்தமானதேசத்தில்)-அவையிரண்டுக்கும் விருத்தமான மருதநிலத்திலென்றபடி. ... ... (௩)

மூ.—மாறுகொண்டுடன்றெதிர்ந்தவல்லவுணன்றன்மார்வகமிருபிளவாக்
கூறுகொண்டவன்குலமகற்கின்னருள்கொடுத்தவனிடம்மிடைந்து
சாறுகொண்டமென்கரும்பிளங்கழைதகைவிசும்புறமணிநீழல்
சேறுகொண்ட தண் பழனமெழில்திகழ் திருவயிந்திரபுரமே. (௪)

| பதம். | உரை. |
|---|---|
| மாறுகொண்டு | (நான்) சத்ரு என்று |
| உடன்று | கோபித்து [கொண்டு |
| எதிர்ந்த | எதிரிட்டுவந்தவனாய் |
| வல் | மிக்க பலமுடைய |
| அவுணன்றன் | ராக்ஷஸனான ஹிரண் |
| மார்வகம் | மார்வானது [யனது |
| இருபிளவா | இரண்டுபிளவாம்படி |
| கூறுகொண்டு | கூறுசெய்து |
| அவன்குலமகற்கு | அவனுடையகுலபுத்ரனான ப்ரஹ்லாதாழ்வானுக்கு |
| இன்அருள்கொடுத்தவன் | நல்ல அருள்செய்தவனுக்கு |
| இடம் | இடமாவது, [ருங்கி |
| மிடைந்து | ஒன்றோடொன்றுநெ |
| சாறுகொண்ட | ஸாரமானதுபெருகாநின்றுள்ள |
| மெல் | ம்ருதுவான |

| பதம். | உரை. |
|---|---|
| கரும்பு | கரும்பினுடைய |
| இளங்கழை | குருத்தின் நுனியான |
| விசும்பு | ஆகாசத்தை [அ |
| உற | கிட்ட |
| தகை | (அத்தாலே) தகையப்பட்டிருப்பதாய் (அக்கரும்பினுடைய) |
| மணிநீழல் | அழகியநிழலையுடைத்தாய் |
| சேறுகொண்ட | (கரும்பஞ்சாற்றாலே வெள்ளமிட்ட) சேற்றையுடைத்தாய் |
| தண் | குளிர்ந்த |
| பழனமது | நீர்நிலங்களின் |
| எழில் | அழகு |
| திகழ் | ஒளிவிடுகிற |

திருவயிந்திரபுரமே. (௪)

வ்யா.—நாலாம்பாட்டு. (மாறுகொண்டித்யாதி). (க) †"ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்-ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" என்றிருக்குமவனோடே, † "நான்மாறு" என்று வந்தானாயிற்று; "நான்சத்ரு" என்று கொண்டு. (உடன்று) "நான்சத்ரு" என்று சொல்லாநிற்கச் செய்தேயும், அகவாயிலின்றிக்கே யிருக்கவுமாமிறே; அங்ஙனன்றிக்கே, அகவாயில் த்வேஷத்தோடே எதிரிட்டு முன்னேவந்த. (வல்லவுணன்). †ஹிரண்யனுடைய. சத்ருவென்று வாயாலே சொல்லுகையும், அதுக்கடியான நெஞ்சில் த்வேஷமும், அதின் கார்யமான முன்னேவந்து நிற்கையும், மூன்றையும் சொன்ன†படி. தேவர்களுடைய வரத்தை ஊட்டியாகவிட்டு வளர்த்த மிக்கபலத்தை யுடையனான ஆஸுரப்ரக்ருதியுடைய. (மார்வித்யாதி). பரந்த மார்வானது இரண்டு பிளவாம்படி கூறுசெய்தவன். †சீற்றத்தோடே நரஸிம்ஹம் வந்து தோற்றின தோற்றங்கண்டவாறே மெல்கினான்; பின்னையிரண்டு கூறாக்கிப் பொகட்டானாயிற்று. குலவிரோதியான ஹிரண்யனைப்போக்கி, அவன் குலபுத்ரனுக்குத் தன்பேறான அருளைப்பண்ணினவன். †ஸர்வேச்வரன்றானேயிறே, பிதாவுக்கு ப்ரஜைபக்கலிலே வாத்ஸல்யமுறைத்து அவனை நோக்கும்படி பண்ணுகிறான்;

(க) கீதை - ௫ - ௨௯.

அதில் அந்த வாத்ஸல்யம்போய் தானே தானும்படி தோற்றிநின்ற வாறே தான் தமப்பனி லண்ணிய வுறவாய்வந்து உதவினுனயிற்று.

(மிடைந்தித்யாதி) †பெற்ற தமப்பன் பகையாக அவனிலண்ணிய உறவாயுதவினவன் றனக்குத் தன்னிலண்ணிய உறவில்லையிறே புறம்பு; இப்படியிருக்கிறதானும் (க) "ஆத்மைவ ரிபுராத்மந:" என்கிறபடியே, தனக்குத்தானே பகையாய் தன்னை முடிக்கப்பார்த்தவன்று "உன்னை உன்கையில் காட்டித் தாரேன்" என்று நோக்குகைக்காகவந்து நிற்கிறவிடம்; †பரஸ்பரம் நெருங்கி அந்நெருக்கம் பொறுமையாலே ஸாரமானது ப்ரவஹியா நின்றுள்ள மெல்லிய கரும்பினுடைய, இளங்கமையுண்டு - தனியானது, ஆகாசத்திலே சென்றுவளர, "இனியிவ்வருகு போகவொட்டோம்" என்று தடுக்குமாயிற்று ஆகாசம். இப்படிவளர்ந்த கரும்பினுடைய †அழகிய நிழலையுடைத்தாய், கருப்பஞ்சாற்றாலே வெள்ளமிட்ட சேறுகளையுடைத்தாயிருந்துள்ள நீர் நிலங்களிலழகு உஜ்ஜ்வலமாகா நின்றுள்ள திருவயிந்திரபுரமே - (உ) †[சூழி இக்கொண்டு போரவுணன்றன்னைச் சூழித்தெங்கும் தாழ்விடங்கள்பற்றிப் †புலால் வெள்ளம் தானுகள] வ்யாபரித்தபோது ஹிரண்யனுடைய ருதிர வெள்ளத்தாலே பார்த்தபார்த்த விடமெங்கும் சேறு செய்தாற் போலே, கரும்புகளொன்றோடொன்று நெருங்கி ப்ரவஹித்த சாற்று வெள்ளத்தாலே பூமியெல்லாம் சேறாய்க்கிடக்குமாயிற்று. ... (௪)

---

அரு.—நாலாம்பாட்டு. (மாறுகொண்டித்யாதி). கீழ்ப்பாட்டில், "அடியவர்க்குமெய்யனுகிய" என்றருளிச்செய்தார்; அவர்களையடியராக்கினபடியை யநுஸந்தித்துக்கொண்டு, அவனிடம் ப்ராப்யமென்கிறாரென்று ஸங்கதி.

"மாறாய்" என்னாதே, "கொண்டு" என்றதால், தோற்றின உட்கருத்தை யருளிச்செய்கிறார் (ஸாஹ்ருதமித்யாதி). "உடன்று" சினத்து என்றாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (நானித்யாதி). கீழ்பலித்தவர்த்தத்தையநுவதித்துக் கொண்டு வன்மையை உபபாதிக்கிறார் (ஹிரண்யனுடையவித்யாதி வாக்யத்வயத்தாலே). (படி) என்றவநந்தரம் அதுக்குடலாக என்றுசேஷம். இருபிளவாக்கினவன் என்னவே அமைந்திருக்க, "கூறுகொண்டவன்" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (சேற்றத்தோடேயித்யாதி). "குலமகன்" என்கைக்கு ஈஸ்வரன் பிதாவோவென்னவருளிச்செய்கிறார் (ஸர்வேஸ்வரன்றானேயித்யாதி).

"அவுணன் குலமகற்கு இன்னருள்கொடுத்தவனிடம் - திருவயிந்திரபுரம்" என்றதுக்கு உட்கருத்தருளிச்செய்கிறார் (பெற்றவித்யாதி), வாக்யார்த்தம்

---

(க) கீதை - ௬ - ௫. (உ) பெரியதிருவந்தாதி - ௬௭.

(பரஸ்பரமித்யாதி). "மணி" என்றதினர்த்தம் (அழகிய) என்றது. "மார்வகமிருபிளவாக்கூறுகொண்டவன்" என்றத்தை த்ருஷ்டாந்தமாக்கித் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தழீஇக்கொண்டித்யாதி). (புலால்வெள்ளம்) - ரக்தப்ரவாஹம். ... ... ... ... ... ... (௪)

மூ.—ஆங்குமாவலிவேள்வியிலிரந்து சென்றகலிடமளந்தாயர்
பூங்கொடிக்கினவிடை பொருதவனிடம் பொன்மலர்திகழ்வேங்கை
கோங்குசெண்பகக்கொம்பினில் குதிகொடுகுரக்கினமிரைத்தோடித்
தேன்கலந்த தண்பலங்கனி நுகர்தரு திருவயிந்திரபுரமே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மாவலி | மஹாபலியின் | இடம் | இடமாவது, |
| வேள்வியில் | யஜ்ஞவாடத்திலே | குரக்கினம் | குரங்கின் கூட்டமானது |
| சென்று | கிட்டி | | |
| இரந்து | (மூன்றடிமண்ணை) அர்த்தித்து | பொன்மலர் | பொற்பூப்போலே |
| | | திகழ் | விளங்காநின்றுள்ள |
| ஆங்கு | அவ்விடத்திலேயே | வேங்கைகோங்குசெண்பகம் | வேங்கைகோங்குசெண்பகம் என்கிறவிவற்றின் |
| அகல் இடம் | பரந்தபூமியை | கொம்பினில் | கொம்பிலே |
| அளந்து | அளந்துகொண்டவனாய் | குதிகொடு | குதித்துக்கொண்டு |
| ஆயர் | இடையருடைய | இரைத்து | பெரிய ஆரவாரத்துடனே |
| பூங்கொடிக்கு | பூத்தகொடிபோன்ற நப்பின்னைப் பிராட்டிக்காக | ஓடி | ஓடிவந்து, |
| | | தேன்கலந்த | தேன்மிக்க |
| | | தண் | அழகிய |
| இனவிடை | இனமானவ்ருஷபங்களையும் | பலங்கனி | பலாப்பழத்தை |
| | | நுகர்தரு | புஜியாநின்றுள்ள |
| பொருதவன் | எதிரிட்டு நிரஸித்தவனுக்கு | | திருவயிந்திரபுரமே. (௫) |

வ்யா—அஞ்சாம்பாட்டு. (ஆங்கித்யாதி). †"மஹாபலி தானம் பண்ணாநின்றான்" என்று கேட்டவாறே, அவனுடைய யஜ்ஞவாடத்திலே தன்னை அர்த்தியாக்கிச்சென்று, அவன்கையில் நீர் தன்கையிலே விழுந்த வநந்தரம் அவ்விடந்தன்னிலே நின்றே பூமிப்பரப்பையடைய அளந்துகொண்டு, இடையர் பூத்தகொடிபோலேயிருக்கிற நப்பின்னைப் பிராட்டிக்காக. உபக்ரமம் தேட்டமான பருவமாயிற்று. (க) "పతిసంయోగ సులభం వయః - பதிஸம்யோக ஸுலபம் வய:" என்கிறபடியே ஒரு கொள்கொம்பிலே கூட்டில் கிடைக்குமளவாய். இல்லையாகில் தர்மலோபம் பிறக்குமளவாயிருக்கை. இனமானருஷபங்களோடே பொருதவனுடைய ஸ்தாநம்.

---

(க) [illegible]

(பொன்னித்யாதி) குரக்கினமானது, பொன்போலே யிருக்கிற மலர்விளங்கா நின்றுள்ள, வேங்கை கோங்கு செண்பகக் கொம்பினில் - இவற்றிலே தாவி பெரிய வேகத்தோடேவந்து ; அவ்வருகு போகின்றிக்கே. (தேன் கலந்த) †தேன்மிக்கிருந்துள்ள பலாப்பழத்தை புஜியாநிற்குமாயிற்று. ... ... ... (௫)

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (ஆங்கித்யாதி) தனக்குத்தானே பகையான இச்சேதநனை நோக்கி அநந்யப்ரயோஜநனுக்குடவனென்கிறார் - கீழ்ப்பாட்டில்; அத்தாலே அநந்யப்ரயோஜநரான அடியவர்க்கு மெய்யனாகை கேட்கவேணுமோ, ப்ரயோஜநாந்தரபரனுக்குங்கூடத் தன்னையழியமாறிக் கார்யம்செய்தானிறே என்று வாமநாவதாரவ்ருத்தாந்தத்தை யநுஸந்தித்துக்கொண்டு, அடியவர்க்குமெய்யனாகைக்கு த்ருஷ்டாந்தமாகக்கருதி, நப்பின்னையிடத்தில் வ்யாமோஹத்தால்செய்த செயலையுமநுஸந்தித்து, அவனிருந்தவிடம் ப்ராப்யமென்கிறாரென்று ஸங்கதி.

“மாவலிவேள்வியில்சென்று - இரந்து - ஆங்கு - அகலிடமளந்து” என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி பலிதார்த்தமருளிச்செய்கிறார் (மஹாபலியித்யாதி).

“தெட்டபழம் - மதுச்சொரியும்” என்கிறபடியே - புலங்கனியில் தேன் சொரியுமென்றருளிச்செய்கிறார் (தேனித்யாதி). ... ... ... (௫)

௬.—கூனுலாவிய மடந்தைதன் கொடுஞ்சொலின்திறத்திளங்கொடியோடும்
கானுலாவிய கருமுகில் திருநிறத்தவனிடம் கவினாரும்
வானுலாவிய மதிதவழ் மால்வரை மாமதிள் புடைசூழத்
தேனுலாவிய செழும் பொழில் தழுவிய திருவயிந்திரபுரமே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கூன் உலாவிய மடந்தைதன் | கூனேறின குப்ஜையினுடைய | வான் | ஆகாசத்திலே |
| கொடும்சொலின்திறத்து | கடியபேச்சுக்காக | உலாவிய | ஸஞ்சரிக்கிற |
| இளங்கொடியோடும் | பிராட்டியும் தானுமாய் | மதி | சந்த்ரன் |
| கான் | காட்டிலே | தவழ் | தவழும்படி |
| உலாவிய | எழுந்தருளினவனாய் | மால்வரை | உயர்ந்த மலைகளும் |
| கருமுகில் | கறுத்தமேகம்போன்ற | மாமதிள் | பெரியமதிள்களும் |
| திருநிறத்தவன் | வடிவழகையுடையவனுக்கு | புடைசூழ | பக்கங்களிலேசூழ்ந்துகிடப்பதாய் |
| இடம் | இடமாவது, | தேன் உலாவிய | வண்டுகள்ஸஞ்சரிக்கிற |
| கவின் | அழகு | செழும்பொழில் | அழகிய நீர்நிலங்களால் |
| ஆரும் | மிக்கிருந்துள்ள | தழுவிய | சூழப்பட்ட |
| | | | திருவயிந்திரபுரமே. (௬) |

வ்யா.—ஆறும்பாட்டு. (கூனித்யாதி). (௧) †“ ... - ஸர்வாத்மநாந்த:” என்று, கண்ணில் குருடேயன்றிக்கே நெஞ்சும் குருடுபட்டிருக்கு மென்றாற்போலே, முதுகில் கூனேயன்றிக்கே நெஞ்சும் க்ரூரமாயாயிற்றிருப்பது. கூனியினுடைய கொடுஞ்சொல்லுண்டு - (௨) “ ... - ராமேவாபரதே வாஹம்விசேஷம் நோபலக்ஷயே” என்ற கைகேயி (௩) “ ... - ஏஷமே ஜீவிதஸ்யாந்தோ ராமோயத்யபிஷிச்யதே” என்று சொல்லும்படி பண்ணின கொடிய சொல்லாயிற்று. (இளங்கொடியோடும்) கொள்கொம்பு தேட்டமாயிருப்பது, அதில் தானே சென்று பற்றமாட்டாதே யிருப்பதான பருவமாயிற்று.(கானுலாவிய) †ஒருஸர்க்கமாக, பெருமாள்தாமே, “உனக்குக் காட்டில் வெம்மை பொறுது” என்றருளிச் செய்தாரிறே. (கருமுகில்) மின்கொடிதழுவ ஒருமேகம் ஸஞ்சரிக்குமாபோலே, காட்டிலே யிருவருமா யுலாவினபடி.

கவினென்று அழகு; அழகு மிக்கிருந்துள்ள ஆகாசத்திலே ஸஞ்சரிக்கிற சந்த்ரனுக்கு, குழவிகள் சுரமேறுமாபோலே தவழ்ந்தேறவேண்டும்படியான ஒக்கத்தையுடைய பெரிய மலைகளையும் பெரியமதிள்களையும் சுற்றிலே யுடைத்தாய், வண்டுகள் ஸஞ்சரியாநின்றுள்ள அழகிய பொழிலாலே சூழப்பட்ட திருவயிந்திரபுரமே. †முன்பு வநவாஸம் பண்ணின சக்ரவர்த்தித்திருமகனுக்குத், திருச்சித்ரகூடத்தையும் தண்டகாரண்யத்தையும் விஸ்மரித்து வர்த்திக்கலாம் தேசமாயிற்று. ... ... ... (௬)

அரு.—ஆறும்பாட்டு. (கூனீத்யாதி) ப்ரயோஜநாந்தரபரனுகிலும் தன்னையாஸ்ரயித்த இந்த்ரனுக்காகத் தன்னையழியமாறினது கேட்கவேணுமோ, க்ரூரையான கூனிசொற்கொண்டு காப்புக்கயிற்றோடே ராஜ்யம்விட்டுக் காட்டுக்கெழுந்தருளினானிறே என்று அந்த அபதாநத்தை யநுஸந்தித்து, அவனிடம் ப்ராப்யமென்கிறாரென்று ஸங்கதி.

கூனுல்வந்த அதர்சநீயதையும், “மடந்தைதன்” என்றத்தாலேசொன்ன தானுன தன்மை - நெஞ்சில் க்ரௌர்யமென்னுமத்தையும் திருவுள்ளம்பற்றி ஸத்ருஷ்டாந்தமுபபாதிக்கிறார் (ஸர்வாத்மநேத்யாதி). ஸர்வாத்மநாந்தன் த்ருதராஷ்ட்ரன். இளங்கொடியாகில் இவளோடே கானுலாவுவானென்னெ

(௧) பார- (௨) ரா-அ-எ-௩-௫. (௩) ரா-ஆ-௪௭-௬.

ன்னவருளிச்செய்கிறார் (ஒருஸர்க்கமாகவித்யாதி). ஆயிருக்கச்செய்தேயும் கொடியாகையாலே உடைத்துடர்ந்தாளென்று கருத்து.

திருவயிந்திரபுரந்தக்குத் திருமதிள்களைச்சொல்லுகை புரவர்ணநோபயுக்தமாகிலும், மலைகளையும் மரங்களையும் வர்ணித்ததுக்கு உட்கருத்தருளிச் செய்கிறார் (முன்பித்யாதி). ... ... ... ... ... (௬)

மூ —மின்னில்நுண்ணிடைமடக்கொடிகாரணம்விலங்கலின்மிசையிலங்கை
மன்னன்நீண்முடிபொடிசெய்த மைந்தனதிடம் மணிவரைநீழல்
அன்னமாமலரரவிந்தத் தமளியில் பெடையொடுமினிதமரச்
செங்நெலார் கவரிக்குலை வீசு தண் திருவயிந்திரபுரமே. (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மின்னில் | மின்போன்ற | மணிவரை | ரத்நபர்வதத்தின் |
| நுண் | ஸூக்ஷ்மமான | நீழல் | நிழலிலே |
| இடை | இடையையும்[யளாய் | அன்னம் | ஹம்ஸங்களானவை |
| மடம் | மடப்பத்தையுமுடை | மா | பெரிய |
| கொடிகாரணம் | கொடிபோன்ற பிராட்டிக்காக | அரவிந்தமலர் | தாமரைப்பூவாகிய |
| | | அமளியில் | படுக்கையில் |
| விலங்கலின்மிசை | ஸுவேலமலையின் மேல் கட்டப்பட்ட | பெடையொடும் | தங்கள் பெடையோ |
| | | இனிது | இனிதாக [டே |
| இலங்கை | லங்கைக்கு [டைய | அமர | தங்கியிருக்கும்படி |
| மன்னன் | ராஜாவானராவணனு | செந்நெல்ஆர்க்குலை | செந்நெல்நிறைந்தகுலையானது [கிற |
| நீள்முடி | பெரியமுடிகள்பத்தையும் | கவரிவீசு | சாமரம்போலேவீசு |
| பொடிசெய்த | பொடிபடுத்தின | தண் | குளிர்ந்த |
| மைந்தனது | மிடுக்கனானவனுக்கு | | திருவயிந்திரபுரமே. (௭) |
| இடம் | இடமாவது. | | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (மின்னித்யாதி) †மின்னையொத்த நுண்ணிய இடையையுடையளாய், ஆத்மகுணங்களுக்கெல்லாந்தானே ஆஶ்ரயமாய், ஒரு உபக்ரத்தோடேசேர்க்கவேண்டும்படியான பருவத்தையுடைய ஸ்ரீஜநகராஜன் திருமகள் ஹேதுவாக. †பிரிவில் ரக்ஷகனை இவ்வார்த்தை சொல்லுவிக்கும்படியான அழகிலே. (௧) †[பூர்வமே சாருதந்திம்-புரேவமேசாருததிம்] மாயாம்ருகத்தின்பின்னே போவதுக்குமுன்பு, "இம்மானைப்பிடித்துத்தரவேணும்" என்ற மூறுவலோடே †கொடுவந்து காட்டிற்றிலர்களாகில், [மஹதோ தஸ்-அநிந்திதாம்] "அவளைப்பெருமையாலே ஜகத்துபஸம்ஹாரம்பண்ணினார்" என்றால், "அவளுக்காக இது செய்தவிடம், தப்பச்செய்தார்"

(௧) ரா - ஆ - ௩௪ - ௭௫

என்னவல்லாருண்டோ? (க) "யுக்தமித்யேவ மேமதிঃ" என்னுமித்தனையாகாதே. †பிராட்டியை உள்ளபடியெல்லாமறியாத வெனக்கு மிருந்தபடியிது; இனி இவளையுள்ளபடியறிவார்என் நினைந்திருப்பார்களோ?(உ) [ஸதேவேத்யாதி] †ருத்தை வருக்கைக்கு நெஞ்சால்பட்ட விடர்படவேணுமே அழிக்கக்கு. (விலங்கலித்யாதி) ஸுவேலசைலமாய், அதின்மேலே த்ரிகூடமாய், அதின்மேலே படைவீடாயிறேயிருப்பது; இப்படி ஒருவராலழிக்கவொண்ணா படைவீட்டுக்கு நான் ராஜாவல்லேனே என்று அபிமானித்திருக்கிற பையலுடைய, தேவதைகளுடையவரங்களாலே பூண்கட்டியிருக்கிற முடிகள்பத்தும் துகளாம்படி பண்ணின மிடுக்கனானவன் வர்த்திக்கிற ஸ்தானம்.

(மணிவரைநீழல்)ரத்நபர்வதச்சாயையிலே. (அன்னமித்யாதி) அன்னமானது, பெரியமலரான தாமரைப்படுக்கையிலே, †அதாகிறது - குளித்தல், உண்ணுதல், மதுபானம் †பண்ணுதல், ஊடினால் ஒருவரையொருவரணித்தாகாதபடி க... கிடக்கைக்கு வேண்டுமிடம்போரும்படி பரப்புடைத்தான படுக்கையிலே. † ஜாத்யாசண்டாளரைப் பொறுத்தாலும் ப்ரணயாபராத சண்டாளரைப் பொறுப்பாரில்லையிறே; (ந) †"பள்ளிகமலத்திடைப்பட்ட" என்னுமாபோலே. (செங்நெலாரித்யாதி) அப்படுக்கையிலே பேடையோடே இனிதமரும்படியாக, அவ்வநுபவத்துக்குத் †தண்ணீர்த்துரும்பாகையன்றிக்கே இனிதமரவீசுமாயிற்றுச் செந்நெல்; ஒருசேதநனென்று துணுக்கென்னவேண்டாதே, நிறைந்த கவரிக்கொத்தை வீசாநிற்குமாயிற்று. ... ... ... ... ... ... (எ)

அநு.—ஏழாம்பாட்டு. (மின்னித்யாதி) "இளங்கொடியோடும் கானலாவிய" என்றநுஸந்தித்தவாறே அங்குண்டான அபதானமெல்லாம் திருவுள்ளத்திலோடி அவன் மிடுக்கை அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

"மின்னில்" என்ற பஞ்சமியை உபமானார்த்தத்திலே யாக்கியருளிச்செய்கிறார் (மின்னோடித்யாதி). சீதைகாரணமாகவென்னவமைந்திருக்க, இங்ஙன் வர்ணித்துச்சொன்னது - அழகே காரணமென்கைக்காக வென்றருளிச்செய்கிறார் (பிரிவிலித்யாதி). "இவ்வார்த்தை" என்ற வார்த்தைதானேதென்ன வருளிச்செய்கிறார் (புரேவேத்யாதி). (கொடுவந்து) என்றவநந்தரம், ...கத்திலுள்ளார் என்றுசேஷம். திருவடிபிராட்டியைக்கண்டபின்பு, பெரு

(க) ரா-ஸு-. (உ) ரா-ஆ-கூச-எரு. (ந) கூ-எ-கூ-.

மாள் பிரிவால்படுகிறபாடெல்லாமுசிதம் என்றிருந்தால் நித்யாநுபவம்பண்ணுகிற நித்யஸூரிகள் கொண்டாடுகை கைமுதிகந்யாயஸித்தமென்கிறார் (பிராட்டியையித்யாதி). (இத்தை) - ஜகத்தை.

"மா" என்றதுக்குத்தாத்பர்யம் (அதாகிறதித்யாதி). (பண்ணுதல்) என்றவநந்தரம், என்னையொழியச்செய்தாய் என்று இவ்வளவும் கூட்டுவது. ப்ரணயகலஹம் பிறந்தால் தனியேகிடக்கவேணுமோ, பொறுக்கவொண்ணாதோவென்ன வருளிச்செய்கிறார் (ஜாத்யாசண்டாளரை யித்யாதி). திர்யக்குக்களுக்கு ப்ரணயகலஹப்ரஸக்தியுண்டோவென்ன வருளிச்செய்கிறார் (பள்ளிகமலத்தித்யாதி). (தண்ணீர்த்துரும்பாகையன்றிக்கே) என்றதுக்கு - கேவலம் தண்ணீரில் பிறந்த ஸஸ்யமாயேபோகாமே சேதநக்ருத்யமான கவரிவீசிற்றென்றும், கேவலசேதநமாய் போகப்ரதிபந்தகமாகாமலிருந்ததென்றும் தாத்பர்யம் கண்டுகொள்வது. ... ... ... ... ... ... (எ)

மூ.—விரைகமழ்ந்தமென்கருங்குழல்காரணம்வில்லிறுத்தடல்மழைக்
கிரைகலங்கிடவரைகுடையெடுத்தவனிலவியவிடம்தடமார் [கு
வரை வளந்திகழ் மதகரி மருப்பொடு மலை வள ரகிலுந்தித்
திரைகொணர்ந்தணைசெழுநதிவயல்புகுதிருவயிந்திரபுரமே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| விரை | நறுநாற்றம் | ஆர் | நிறைந்த |
| கமழ்ந்த | கமழாநின்றுள்ள | வரை | மலைகளுக்கு |
| மென் | ம்ருதுவான | வளம் | அழகாய்க்கொண்டு |
| கருங்குழல்காரணம் | கறுத்த திருக்குழலையுடைய பிராட்டிக் [காக | திகழ் | விளங்காநின்றுள்ள |
| வில் | வில்லை | மதகரி | மத்தகஜத்தின் |
| இறுத்து | முறித்தவனாய், | மருப்பொடு | கொம்பையும் |
| அடல் | யுத்தோந்முகமான | மலைவளர் | மலையில்வளருகிற |
| மழைக்கு | வர்ஷத்துக்கு | அகில் | அகில்மரத்தையும் |
| நிரை | பசுக்கூட்டம் | உந்தி | தள்ளிக்கொண்டு |
| கலங்கிட | நோவுபட | திரை | அலையானது |
| வரை | கோவர்த்தநகிரியை | கொணர்ந்து | கொண்டுவந்து |
| குடை | குடையாக | அணை | சேருகிற |
| எடுத்தவன் | எடுத்துக்காத்தவன் | செழுநதி | அழகியஆறு |
| நிலவிய | நித்யவாஸம்பண்ணுகி [ற | வயல் | வயலில் |
| இடம் | இடமாவது, | புகு | பாய்கிற |
| தடம் | தடாசங்கள் | | திருவயிந்திரபுரமே. (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (விரையித்யாதி) நறுநாற்றம் கமழாநிற்பதாய் ம்ருதுவான கருங்குழலையுடைய ஸ்ரீஜநகராஜன் திருமகள்ஹேதுவாக வில்லை முறித்து. †(க) "ஸர்வகந்தঃ-ஸர்வகந்தঃ" என்கிறவஸ்து,

(க) சாந்தோக்யம்- ௩- கச -

முடியும், முடியாது" என்றுபாராதே மேல்விழுந்து வில்லைமுறிக்கும்படியாயிற்றுக் குழலின் பரிமளம். † அதாகிறது-அவ்வருகு பெறவிருக்கிறது இவளையாகில் நடுவுண்டான ப்ரதிபந்தகங்கள் கொடு கார்யமென்! என்றிருந்தார். (அடல்மழைக்கு) † அவளழகிலே துவக்குண்டு செய்த செயலேயன்றிக்கே, ஸ்வரக்ஷணத்தி லந்வயமில்லாத பசுக்களுக்கும் இடையர்க்குமாக மலையையெடுத்து மழையைப் பரிஹரித்தானாயிற்று. † இந்த்ரனாலே யேவப்பட்ட மேகங்கள் வர்ஷிக்க அதிலே பசுக்களும் இடையரும் நோவுபடப்புக, கோவர்த்தநகிரியைதரித்து ரக்ஷித்தானாயிற்று. (அடல் மழைக்கு) (க) † "போர்க்களத்து" என்னுமாபோலே யுத்தோந்முகமான வர்ஷத்துக்கு. (நிரைகலங்கிட) (உ) "ஶீதார்த்தம் - அதீவார்த்தம்" என்கிறபடியே நோவுபட. (நிரைகலங்கிட அடல்மழைக்கு-வரைகுடையெடுத்தவன்). † விஶ்வாமித்ராதிகளோடாதல், ஜநகாதிகளோடாதல் கூட்டிச்செய்யும் ஜந்மமன்றே! தோற்றிற்றொரு மலையையெடுத்துப் பரிஹரித்தானாயிற்று. (நிலவியவிடம்) இந்த்ரன் வர்ஷிப்பிக்கப் பிற்பாடராய் நோவுபடவிட்டாற்போலேயாகவொண்ணாதென்று, ஏற்கவே நோவு படாமே நோக்குகைக்காகவந்து நித்யவாஸம்பண்ணுகிறவிடமாயிற்று.

(தடமித்யாதி) † தடமென்று-தாழ்வரையாய், தாள்வளரா நின்றுள்ளவரைபோலே அழகு விளங்காநின்றுள்ள மத்தகஜத்தினுடைய வெண்ணுதல்; அன்றிக்கே, தடமென்று-தடாகமாய், தடங்கள்மிக்கிருந்துள்ளவரைக் கழகாய்க்கொண்டு விளங்காநின்றுள்ள மத்தகஜத்தினுடைய மருப்போடேகூட வெண்ணுதல். மலைக்குச்சிறப்பாக ஆனைகளைச் சொல்லக்கடவதிறே. (மலைவளரகிலுந்தி) மலையிலே மநுஷ்யாதிகளால்வரும் ஸங்கோசமில்லாமையாலே, ஆகாசாவகாசத்தை இடமடைத்துக்கொண்டு தான்கண்டபடி வளருகிற அகிலை வேரோடேபறித்துத்தள்ளிக்கொண்டு. (திரையித்யாதி) வர்ஷித்தவாறே, மலையருவிகளானவை ஆனைக்கொம்பையும் அகில்மரத்தையும் முறித்துத்தன் திரைகளாகிற கைகளாலேயேந்திக்கொண்டு வயலிலே வந்து புகுருமாயிற்று. அளவுபட்ட வாய்த்தலைகளாலேயாதல், கைவாய்க்காலாலேயாதல் புகுருகையன்றிக்கே, விளைவில்லாக்கடலிலே போய்ப் புகுகையுமன்றிக்கே, ஆறுதானே வயலிலேவந்து புகுருமாயிற்று. ... ... ... ... (அ)

(க) பெரி-திரு-௩-௫-அ. (உ) வி-பு-௧௧-௧௩.

அரு.—எட்டாம்பாட்டு. (விரையித்யாதி) பிராட்டியழகில் துவக்குண்டு ராவணனைவென்ற மைந்தன் என்றார் கீழ்ப்பாட்டில்; அவ்வளவோ, அவளைக் கைப்பிடிக்கப்போனவன்றே பரிமளத்தில் நசையாலே வில்லைமுறித்த மிடுக்கையும், அவ்வளவன்றியே, க்ருஷ்ணனாய் மலையெடுத்தானென்று மநுஸந்தித்து, அந்தமிடுக்கனிருக்குமிடம் ப்ராப்யமென்கிறாரென்றுஸங்கதி.

கமழ்ந்த மென் கருங்குழல் என்றாலமையாதோ, "விரை" என்று விசேஷித்ததுக்குக் கருத்தென்னென்ன வருளிச்செய்கிறார் (ஸர்வகந்த இத்யாதி). (௨௯) வித்தவ்யாக்யாத்ரு வாக்யம் (அதாகிறதித்யாதி). ஒருகாமுகன், வ்யாமோஹத்தாலே கார்முகத்தை முறித்தானென்கிறவிது மிடுக்காகவேணுமோவென்ன வருளிச்செய்கிறார் (அவளித்யாதி). மலையெடுக்கும்படி மழைவர ப்ரஸக்தியைக் காட்டாநின்றுகொண்டு விவரிக்கிறார் (இந்த்ரனித்யாதி). மழையை யுத்தோந்முகமானதாகச் சொன்னாருண்டோவென்ன (போர்க்களத்தென்னுமாபோலே) என்கிறார். "சலமாமுகில் பல்கணப்போர்க்களத்துச் சரமாரிபொழிந்து" என்று பெரியாழ்வாரருளிச்செய்தாற்போலே யென்று கருத்து. அர்ஜுநனைப்போலே சரக்கூடமாகக்கட்டாதே, மலையெடுப்பானென்னென்ன; இடையனகையாலே பெருமாளைப்போலே ஆசாரியாதே செய்தானென்கிறார் (விஶ்வாமித்ரேத்யாதி).

ஆர்தல் - மிகுதியாய், வளர்த்தியைச் சொல்லுகிறதென்றருளிச்செய்கிறார் (தடமென்றித்யாதி). ... ... ... ... ... (அ)

மூ.—வேல்கொள்கைத்தலத்தரசர்வெம்போரினில்விசயனுக்காய்மணித்தேர்க்
கோல்கொள்கைத்தலத்தெந்தைபெம்மானிடம்குலவுதண்வரைச்சாரல்
கால்கொள்கண்கொடிக்கையெழுக்கமுகிளம்பாளைகள்கமழ்சாரல்
சேல்கள் பாய்தரு செழுநதி வயல்புகு திருவயிந்திரபுரமே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கைத்தலத்து | கையில் | கைத்தலத்து | கையில் |
| வேல்கொள் | வேலையுடையரான | கொள் | கொண்டுநின்ற |
| அரசர் | துர்யோதநாதிகளுடைய | எந்தை | என்குலநாதனான |
| வெம் | பயாவஹமான | பெம்மான் | ஸர்வேஶ்வரனுக்கு |
| போரினில் | பாரதயுத்தத்தில் | இடம் | இடமாவது, |
| விசயனுக்குஆய் | அர்ஜுநனுக்கே அநுகூலனாய் (அவனுடைய) | குலவு | எல்லாராலும்கொண்டாடப்படுகிற |
| | | தண் | குளிர்ந்த |
| மணித்தேர் | அழகியதேர்முன்னே | வரைச்சாரல் | பர்வதபார்ஶ்வத்தில் |
| கோல் | உழவுகோலை | கால் | வெற்றிலைக்கால்கள் |

